# முகவுரை.

இம்மகா பாகவதத்தில் கண்ணன் சரிதங் கவின்பெறக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனங் கண்ணன் சரிதங்கூறிய பாகவதங்கள் இதிகாசம், புராணம், சம்மிதை, உபசம்மிதை, விஷ்ணுரகசியம், விஷ்ணுயாமளம், கௌதமசம்மிதை என ஏழுதிறத்தின வென்ப. அவற்றுள் தமிழுலகுரை மொழிபெயர்க்கப்பட்டன இதிகாச பாகவதம் புராணபாகவதம் என்னும் இரண்டுமேயாம். அவற்றுள் சூர்ணிகைகள், விருத்தங்கள், பத்தியங்கள், வாக்கியங்கள், தண்டகங்கள் என்பவற்றுனிறைந்த இருநூறத்தியாயங்களையுடைய 12 கந்தங்களாக வியாச முனிவராற் செய்யப்பட்ட இதிகாச பாகவதம் சற்றேறக்குறைய ஐயாயிரம் செய்யுள்களால் மொழிபெயர்த்தியற்றப்பட்டுள்ளது. அறிஞர்புகழும் ஆரியப்பப்புலவராலியற்றப்பட்ட இது கோமளபுரம் இராஜகோபால பிள்ளையவர்களால் சிலகாலத்தின்முன் பரிசோதித்து அச்சியற்றப்பட்டு வெளியுலாவுகின்றது. அதற்கு நெடுநாள் முன்முதற்கொண்டு இவ்விதிகாச பாகவதத்தின்படி எழுதப்பட்ட தமிழ் நடை அச்சுவாய்த்தோன்றி தமிழ்நாடெங்கும் உலாவுகின்றது.

புராணபாகவதம். 36000 சுலோகமுடைய இதை இயற்றினாரும் வாதராயணமுனிவரேயாம். இதில் 25 கீதைகளடங்கியிருக்கின்றன. எம்பெருமான்றிருவவதாரங்களில் ஆறு திருவவதாரங்களின் சரித்திரம் விரிவாகக்கூறப்பட்டுள்ளது. ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் தலைப்பில் கடவுள் வாழ்த்துண்டு. பெரும்பாலும் அநுட்டுப்பு சுலோகங்களாலும் சிறுபான்மை பிறவற்றாலும் அமைந்த அறுநூறு அத்தியாயங்களையுடையது. கந்தம் என்னும் பகுப்பு இதில் இல்லை. தசாவதாரங்களும் இதிற்கூறப்பட்டிருக்கின்றன. இச்சரித்திரங்களைக்கூறினார் நாரதபகவான். கேட்டார் உருக்குமிணிப் பிராட்டியார். இதற்குத்தான் மகா பாகவதம் என்றுபெயர். பின்னர் இதனைச் சுகமுனிவர் கூறப்பரீக்ஷித்துக் கேட்டனன் என்ப. வியாசர் செய்த புராணம் பதினெட்டனுளொன்றாகிய விம்மகாபாகவத புராணத்தைத் தமிழுலகுணர்

ந்துய்ய மொழிபெயர்த்தியற்றினார் நெல்லிநகர் அருளாளதாசரென்னு
ம் மதுரகவி ஸ்ரீவரதராஜ ஐயங்கார். அவர் இதை சற்றேறக்குறைய
9000 செய்யுள் களாலியற்றி இற்றைக்கு 350 வருஷங்களின் முன்
சுபகிருது வருஷம் சித்திரை மீ குருவாரம் உத்திராட நக்ஷத்திரமுங்
கூடிய சுபதினத்தில் திருவரங்கத்தில் அரங்கேசர் முன்னிலையில் அறி
ஞர்களறிய அரங்கேற்றினார் என்ப. அது இம் மகாபாகவதத்தின் திரு
வரங்கப்படலத்தில் உள்ள

ஆயுமறையோரெண்ணவருஞ்சகாத்தமாயிரத்துநானூற்றேடாறுபத்தஞ்சாந்
தூயசுபகிருதுதனின்முதன்மாசத்திற்றுலங்குகுருவாரத்துத்திராடநாளி
னேயமுடனெல்லிநகர்வரதராசனிசரிலரங்கத்திலரவணையினோங்கு
நாயகன்முன்னறிஞர்மகிழ்ந்திடவேவாசுதேவகதையரங்கேற்றினலனூற்றோனே

என்னும் செய்யுளால் விளங்குகின்றது.

இம்மகாபாகவதத்தை அச்சிடவேண்டுமென்று புங்கத்தூர்க் கந்தசாமி
முதலியார் என்பவர் சற்றேறக் குறைய 25 வருஷங்களுக்கு முன்
முதற் கொண்டு வருந்தி முயற்சித்து இற்றைக்கு நாலைந்து வருஷங்க
ளின் முன் 4664 செய்யுள்களை மாத்திரம் அச்சியற்றி வெளிவிட்டார்.
எஞ்சியதையும் விரைவில் வெளிவிட வேண்டுமென்று எண்ணியிருந்த
அவர் கருத்து முடிவெய்து முன் அவர் ஆயுள் முடிவெய்தினமையின்
அது வெளிவராதொழிந்தது. அதை வெளிப்படுத்துமாறு ம-ா-ா-ஸ்ரீ
இராமசாமி முதலியாரவர்களைப் பலரும் பலமுறையும் தூண்டினமை
பற்றி அவர்களும் அதிற்கருத்தைச் செலுத்தி விரும்பியபடி நாங்களும்
பற்பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு இயன்றவரை பாடுபட்டுப்பரிசோ
தித்துச் சிற்சில பிரதிகளிற் காணப்படுமாறு வயினதேயப் படலத்தை
யும் உடன் சேர்த்து வெளிப்படுத்தினோம். என்றாலும் ஒரு சிறிதும்
பிழையறப் பரிசோதித்தோமென்போமா! இல்லை, இல்லை. இறைவ
னொழித்தொழிந்த ஒருவராலும் அஃதியலாமை ஆருமறிவர். இப்ப
திப்பில் ஏதேனும் குறைகள் காணப்படின் அவற்றை நேரே எங்களு
க்கு அறிவிப்பவர்களிடத்து மிக்க நன்றியுடையர்களாய் வந்தனஞ்செ
லுத்துவதுடன் அவற்றைத் திருத்தி மறுபதிப்புப் பதிப்பிக்கும்போது
பதிப்பிப்போம்.

பா. மு.
ச. தி.
கா. ல. வே. தி.



விஷ்ணுமயம்.

# ஸ்ரீமகா பாகவதம்.

## சருக்கம்.

மலரவன் படைத்த விம்மா நிலத்திலே, எந்நாட்டினுஞ் சிறந்து விளங்கும் விதர்ப்ப நன்னாட்டிலே, குண்டினபுரத்தைத் தனக்கு இராஜதானியாகக் கொண்டு அந் நாட்டை ஆண்டுகொண்டு வீடு என்றோர் மன்னவன் இருந்தான். அவன் அரசர்க்கு வேண்டுங் குணங்களில் அணுவளவுங் குறைதலில்லாதவனாய் அழகுறு செங்கோல் வழுவாதோச்சி வருங்காலத்தில் அச்சுதன்றிருவளால் உருக்குமன் முதலாகவைவர் புத்திரர்களைப் பெற்றிருந்தும் ஓர்பெண்மகவு தனக்கில்லாக்குறையை நினைந்து பெரிதும் வருந்தி, அதுகாலையில் அவன்மனைவியும் அவ்வாறு மனம்வருந்திக் கண்ணீர் வீழ்த்தக்கண்டு "வேண்டிய வேண்டியாங் செய்கலாற் செய்தவமீண்டு முயலப்படும்," என்றபடி பெண் மகவின்று தன் குறை தீர்த்துக் கொள்ளும் பொருட்டு அரசை அமைச்சர் மாட்டு விடுத்து மனைவியுடன் காடு சென்று ஈரடியாலே மூவுலகளந்த வெம்பிரானை நோக்கிப் பல நாளாகப் பகர்தற்கரிய பெருந்தவஞ்செய்தனன். அத்தவத்திற் கிரங்கி அரிமுன்னின்று நீ வேண்டிய வரம் யாதென, எம்பெருமானே மலர்மகளையொத்த வடிவுடன் குணங்களினுங் கற்பினும் வானத்தும் வையத்தும் ஒப்புயர்வில்லாதவளாக ஓர் பெண்மகவை அருளுவதோடு நற்குண நற்செய்கையுடன் எழின் மிகுத்தவனாய் ஒப்புயர்வின்றி விளங்கும் ஒருவனே யவண் மருவும்படியும் அருள்புரியவேண்டும் என இறைஞ்ச அங்ஙனமாகுக என வரந்தந்து விதர்ப்பனூற்பன் முறையும் வணங்கப்பட்டு அவன்முன் மறைந்து மலரவண் மதிமுகநோக்கி நீ முன் சீதையாய்ப் பிறந்தபோது பிரிவுற்றதுபற்றி வருந்தினையாதலின் அது தீர்ப்பது கருதி முன் நான் யாதவர் குலத்திற் பிறக்கின்றேன். பின் நீ விதர்ப்ப மன்னன் மகளாகென்று கூறக்கேட்டு மலரவண் மன மிசைந்தனள். அரியருள்பெற்ற அரசனும் மனைவியோடு குண்டினபுரம் போய் அருமகவினுங்காலம் எப்போது வாய்க்குமென்று ஆவலுடன் எதிர்பார்த்திருக்க நாலாண்டு கழிந்து நாரணன் யாதவ குலத்திற் சனித்தபின் விதர்ப்பன் மனைவி கருவுற அவளது மணி வயிற்றில் மலர்மகள் மன்னினள். பத்துத்திங்களுங்கழிந்து பிறந்து உரிய காலங்களில் சிறப்புகள் செய்யப்பெற்று உருக்குமணி எனப்பெயருடையளாய்க் கின்னரரெனக் கீத வேழிசை கற்றுக்கலை மகளுள நாணுமாறு புராணங்கள் பலவோதி ஒப்பிலையெனும்படி வாழ்ந்து வருங்கால், அரிதாள் பணியும் அன்பு நிறையந்தணனான நாரத முனிவன் வீணையேந்திய கையுடையனாய் உருக்குமணிப்பிராட்டியார் திருமுன்பு வருதலும் பிராட்டியார் எழுந்து அடிபணிந்து ஆதனத்திருத்திப்பின் தாமிருந்து முனிவரை நோக்கி ஸ்வாமி தேவரீரீண்டடைதற்கு அடியேன்முன் செய்த தவத்தை நோக்கின் அளவில்லாததேயாகும் என்று கூறி மூவரென மூவுலகத்தையும் அளித்தழித்தளிக்கும் இறைவன்யாவன்? அவன் யாண்டுளான் என்பது சிறக்க உரைக்குதி எனக்கேட்டனள். உடனே முனிவரும் பெருமகிழ்ச்சியடைந்து அவ்வரியின் இருப்பு முதலியவற்றையும் ஆதி

மூலமென்றழைத்த ஆனையினிடரகற்றி யாதரித்ததையும் கூறினர். அதுகேட்டபிராட்டியார் காதலித்துக்கேட்கப் பின்னும் அரிசெயலையும் அவனடியார் செயலையும் பலவாறுகச்சொல்லிக்கொண்டு வருபவர் தசரதராமசரித்திரஞ்சொல்லக்கேட்டுப்பிராட்டியார் முனிவர் தலைவரை நோக்கி எந்தையே அவ்விராமனை நிகர்ப்பார் இப்போது இவ்வுலகில் யாரேனும் உளரோ எனக்கேட்ப முனிவர் மனமகிழ்ந்து அத்தன்மையார் ஒருவருண்டு. யாரெனில் விற்றொழிலாலும் வடிவினாலும் மிக்க குணத்தாலும் கற்று நின்ற நூலுணர்வினாலும் ஒப்புயர்வின்றி விளங்கும் துவரை மன்னன் என்றுகூறியருளினர். அதுகேட்டுப் பிராட்டியார் அம்மன்னன் யார்? பிறந்தகுலமென்ன? அரசு செய்யும் பாரெது? அவன் பெயரென்ன? அவன் பகைவர்களை வென்ற வரலாறு என்ன? விவரமாக விளம்பவேண்டுமென்று வினவ நாரதமுனிவர் மகிழ்ந்து வடமதுரை மன்னன் போசன் மகனாகிய உக்கிரசேனன் மகள் தேவகி வயிற்றில் கண்ணன்றிருவவதாரம் செய்தது முதலாகிய கிருஷ்ணசரித்திராமிர்தத்தைப் புகட்டப் பிராட்டியார் செவிவாயாகவுண்டுதேக்கி மனமோடாவியக்கண்ணன் கழலிணைபற்றவழகிய சித்திரம்போலசைவறவிருந்தனர். பின் நாரத முனிவர் கண்ணன் குணாதிசயங்களைக் கட்டுரைத்துப்பாவாய் அவ்வண்ணல்முன் மிதிலையிற்சென்று சிலைமுறித்துச் சீதையை மணந்தாற்போல் துவரையம்பதியினின்று இவண்வந்து நின்னை மணப்பனென்று வேதமொழிகளால் வாழ்த்திச்சென்றனர். அத்தவனடி பணிந்து அனுப்பிய பிராட்டியார் கண்ணன்மீது காதல் கொண்டு கலையிழந்து சோர்வுறமேகலை தலமிசை விழமெல்லமளிமீதுள நன்மலர் வெந்து பொடியாக மார்பிலணியாரங்கள் வெடிபடப்பரந்தாமன் வடிவங்களை நினைந்து பலவாறு பிதற்றிச்சோர்வுற்றனர். சேடிகள் அதுகண்டு பனிநீர்தெளித்துயிர்மேவச் செய்யச் சேடியர்களை நோக்கி மங்கைமீர்என்னுயிரிருக்கச்செய்யவேண்டு வீரேல் கண்ணன் வடிவத்தைக் கவினுறவரைந்து தருமின் என்றனர். உடனேயவர்கள் அவ்வாறு செய்து தரக்கண்டு கண்ணனையே நேரிற்கண்டாற்போல அகமிகமகிழ்ந்து அப்படம் முன்னிலையாகப்பேசி வருந்தினர். அதுகாலையில் விதர்ப்ப மன்னன் தன்மகளின் பருவம்நோக்கி மணம்புரிவிக்குங் கருத்துடையனாய்அமைச்சர் முதலாயினாரைக்கூட்டித்தன் மங்கைக்கு மணாளனாவான் யாரென வினவலும், அவர்கள் அரசனை நோக்கி வேந்தே! உலகத்தில் தந்தைதன் மகளுக்குக் கல்வியுடையவனை கணவனாக விரும்புவான். தாயோ தனமுடையானை மருமகனாக வேண்டுவாள். மடந்தையோ மன்மதனை யொத்த வழகுடையானை கணவனாகவேண்டுமென்று விரும்புவாள். இம்முத்திறத்தினரது விருப்பத்திற்கும் இசைந்த நாயகன் துவரை மன்னனாகிய கண்ணன் தானென்று கட்டுரைத்தார்கள். உடனே விதர்ப்ப மன்னன் மகன் உருக்குமின் என்பவனெழுந்து சினந்து அவ்வவைமுன் கண்ணனையிழித்துப்பல சொல்லி "என் தங்கையைச்சேதிபராசன் மகன் சிசுபாலனுக்கேயன்றிக் கண்ணனுக்குக் கொடுக்க லொட்டேன். நாளையதினமே சிசுபாலனுக்குக் கொடுப்பேன்," என்று சொல்லி யுடனே வருமாறு சிசுபாலனுக்குத் தூதேவி மறுநாளில் உருக்குமிணி திருமணமென்று ஊரெங்கும் முரசறையும்படி கட்டளையிட்டான். அதுகேட்டுப் பிராட்டியார் சகிக்கலாற்றாதவராய் மனமிக நொந்து "என் தந்தை வலியில்லான். தமயனோ வறனிலாத வதிபாவி, வேறுதுணையுங்காணேன். நந்தனருண்மைந்த நீ என்னையடைந்தருள்" என்று சொல்லி, "காளமுகில் வண்ணன் வரும் வகை காணேன். நாளையெனது முன்னோன் அதிபாதகமியற்றுவனே. அதன்முன் நானே எனதுயிரைமாய்ப்பேன். இதுவே செயத்தருங்கருமம்" என்று கூறியயர்ந்தார். அதுகண்டு சேடியர்கள் வருந்தி எடுத்தணைத்து ஏற்றிடுமுபசாரங்கள் செய்து உயிர்ப்பித்து அவர்களுள் மன்மதனவிலாசியென்பாள் பிராட்டியை நோக்கிப்பாவாய் நான்முகனையொத்த நம் புரோகிதரை இப்போதே கண்ணனிடம் தூதேவினால் உன் கருத்தீடேறும் என்றுரைக்க, பிராட்டியார் இசைந்து புரோகிதனை யழைப்பித்து தன் கருத்தைக்கண்ணனறியும்படி வரைந்து உடனே துவரைபோய் மீளும்படியனுப்பினர். அவனும் உடனே துவாரகையடைந்து கண்ணபிரானிடம் தான் வந்தவரலாறுகளை வகுத்துரைத்துப் பிராட்டியார் வரைந்துவிடுத்த திருமுகத்தை

யுங்கைச்கொடுத்தனன். கண்ணனதை யன்போடேற்றுப் படிப்பித்து அடங்கியவையறிந்து அகமகிழ்ந்து அந்தணனை நோக்கிப் பிராமணோத்தமா நாளையதினம் யான் அங்குவந்து யாவர் தடுப்பினும் அம்மங்கையை மணம்புரிவேன். இச்சங்கதியை நீ முன்சென்று அவட்கு அறிவி என்று அனுப்பினன். புரோகிதர் சென்றனரோ நமக்கென்னவென்று நடந்துவிட்டனரோ அவர் தான் போய்ச்சொல்லினும் கண்ணன் நம்மை ஓர் பொருட்டாய் எண்ணி வருமோ தவிர்ந்திடுமோ என்று வருந்தியிருந்த பிராட்டியாரிடம் அந்தணன் வந்து கண்ணன் கூறியவற்றைச் சொல்லுதலும், பிராட்டியார் கேட்டுப் பெரு மகிழ்ச்சி யுற்றவ் வேதியர்க்கு வேண்டுவன வெறுப்பநல்கி கண்ணன் எப்போது வருமோவென்று ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். முன் உருக்குமின் அனுப்பிய தூதுவர் விரைந்து சேதிபராசன் மகன் சிசுபாலனிடம்சென்று உருக்குமின்தந்த வோலையினைத்தருதலும் அதைப்படிப்பித்து அறிந்து பெருமகிழ்ச்சியடைந்து உடனே சிசுபாலன் நால் வகைச் சேனையும் புடைசூழக்குண்டினபுரம் அடைந்தனன். தந்தவக்கிரன், சாலுவன், மகதராசன், சராசந்தன், சேதிபன், பவுண்டரன் முதலியவர்களும் உடன்வந்தனர். இவர்களெல்லாரையும் உருக்குமின் என்பவன் எதிர்கொண்டழைத்து மண்டபத்திருத்தி அர்க்கியாசமனாதியுபசாரங்கள் செய்ய மகிழ்ந்திருந்தனர். பின் சிசுபாலன் மணக்கோலங்கொண்டதறிந்து உருக்குமின் உட்சென்று தன்றாயையழைத்துத் தங்கையை மணக்கோலஞ்செய்து அழைத்துவரும்படிசொல்ல அத்தீச்சொல்லில் விருப்பமற்ற வன்னையானவள் தன்மடந்தையிருக்கும் இடத்தையடைந்தனள். அக்காலையிற்பிராட்டியார் கண்ணனின்னும் வரவில்லையேயென்று மனம் வருந்துபவர், சேதிபன்மகன் சிசுபாலன் வந்தானென்பதுகேட்டு விடந்தலைக்கொண்டாற்போலப் பெருவேதனைப்பட்டிருப்பதைக்கண்டு விதர்ப்பன் மனைவி தன்மகளையழைத்துக் கண்ணீர்விட்டுத் தன் மகனைவைது பிராட்டியாரைநோக்கிப் பெண்ணே வருந்தாதே கண்ணன்வந்து மணம்புணரும் என்றுகூறி, அம்பிகையானவள் இந்த மாநகர்தனில் சிந்தையினினைத்த வரங்களை நினைத்தபடி நினைக்குமுன் கொடுப்பவள் அவளைச்சென்று நீ வணங்கி வரம்வேண்டினால் உடனே கண்ணன் றேர்மீதுவரும் என்றுரைத்துத்தேற்றினாள். உடனே பிராட்டியார் அவ்வாறே பகவதியின் கோயிலடைந்து தொழுதுவரங்கேட்க விரும்புதலும் அன்னை மகிழ்ந்து நீராடிக்கலைபுனைந்து கலன்களணிந்து வழிபாட்டிற்கு வேண்டுவனவற்றை எடுப்பித்துக்கொண்டு சிவிகையிடைச் சேயுடனே பகவதி கோயிலடைந்தனள். கோயில் சென்றதாயும் தனயளும் விதிமுறையின்படி பகவதியை வழிபட்டுக்கருதிய வரம் வேண்டி நிற்குங்காலையில் கண்ணன் தேரினின்றும் இழிந்து பாதசாரியாக வருவதுகண்டு பிராட்டியார் பெருமகிழ்ச்சியுற விதர்ப்பன் மனைவி கண்டு கண்ணனென்றறிந்து "யாதவ குமரா, உன்னையல்லாமல் ஒன்றையும் என் மகள் உள்ளத்தில் உயர்வாகவுன்னியறியாள் நீயிவள் நாயகன் நீயிவளை நாயகியாகக் கொண்டு வாழ்த்தி என் உயிரனையாளாகிய விவளைக்காக்குதி," என்றுரைத்துப்பிராட்டியாரைப் பிடித்துக் கண்ணன் கையிலீந்தாள். உடனே பிராட்டியார் தன் காலிடைப் பணியக்கண்ணன் களிப்படைந்து எடுத்தணைத்துப் பிராட்டியாருடன் தேரேறினன். அதுகண்டு தூதுவர் விரைந்தோடி மண்டபத்தினிடத்துச் சிசுபாலனோடு மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் உருக்குமினடி பணிந்து அஞ்சலி செய்து பிராட்டியாரைக் கண்ணன் தேரின்மீது எடுத்துவைத்துச் செல்கின்றானென்று சொல்லக்கேட்டு, எழுந்து நின்று மிகவெகுண்டு, யாவர் காக்கினும் யாதவன்றனை இன்றுவென்று வடிவு மிகுத்தவுருக்குமிணியை மீட்டுவரேனேயாயின் அவ்விடையனாகியவவ்விழி குலத்து யாதவனுக்கு அடிமையாவேன் என்றதிறுதியாகிய சபதங்களைச் சொல்லினான். அதுகேட்டு சராசந்தன் "எனக்குப்பன்முறையுந்தோற்றோடிக்கடனடுவைத் தனக்கிடமாகக்கொண்ட இழிதகையானைக் கடிந்து நான் இன்று சிறைவைப்பேனென்றான். அதுகேட்டுத் தந்தவக்கிரன் முனிந்து நந்தன் மைந்தனை நான் தனியாகவே முந்திவெல்வே"னென்றான். இவ்வாறே சாலுவன் பவுண்டரன், சேதிபன் என்பவர்களும் தனித்தனி நான் தொலைப்பேன், நான்வெல்வேனென்றுரைக்க, உடனே போருக்காயத்தமாய் உருக்குமின் எழுந்தனன்.

எழுந்து தன் முன்னின்ற சேனாவீரர்களை நோக்கி, மதியேதுமிலாத இடையன் எ
ங்கையைக்கொண்டு செல்லுவதன் முன் படையோடு சென்று தடுமின் என்று
ரைக்கக்கேட்டு உடனே நால்வகைச் சேனைகளுங் கூடியார்த்தெழுந்து சென்றனர்.
உருக்குமினும் சேதிபதினாயர் சூழ்ந்துவர ஆரவாரித்துக்கொண்டு வந்தனன். உ
ருக்குமினுடைய சேனாவீரர்கள் கண்ணனையடைந்து உருக்குமிணியை விட்டுச்செ
ல்லென்று கூறி எதிர்த்துப் போருக்குத் தொடங்குதலும், கண்ணன் குறுநகைபு
ரிந்து வில்வளைத்து யாவரும் அஞ்சும்படி நாணொலி யெழுப்பி அம்பெய்தலும்
வீரர்கள் பலருமடிந்து வீழ்வதுகண்டு ஒருவர்பின் ஒருவராக வந்தெதிர்த்த பவு
ண்டரன், சாலுவன், தந்தவக்கிரன், மகதராசன், சிசுபாலன் இவர்களை யுந்தோற்
றோடச்செய்தனர். உடனே உருக்குமின் வெகுண்டு சேனைசூழச்சென்று கண்
ணனை யெதிர்த்துப்பல வம்புகளை யெய்யக் கண்ணனும் வில்வளைத்துச்சிற்சிலவம்
புகள் எய்து உருக்குமினுடையவம்புப் புட்டிலும் வில்லுந்தேரும் குதிரைகளுங்க
வசமும் அழித்து அவன் மார்பினும் ஊடுருவச்செய்ய உடலெங்கும் குருதிபெரு
க்கெடுக்க, உருக்குமின் மெலிந்து தேரின்மீது மூர்ச்சித்து வீழ்ந்தான். அது கண்
டுவருந்திய உருக்குமிணியை நோக்கி பாவாய்இவனுக்குயிர் போயிலது உயிர்பிழை
ப்பான் என்றுகூறித்தன் அணிநெடுந்தேரை யோட்டியவணின்றும் அகன்றுசென்
றனர். அப்போது பலராமர் தேரேறியெதிர் வரக்கண்டு கண்ணன் பிராட்டியோடு
அவனடிபணிந்து தேரேறி மகிழ்ந்துசென்றார். பின் சிறிதுநேரம் சென்று உரு
க்குமின்மூர்ச்சைதெளிந்து மாடுமேய்த்தவன் சமயம்பார்த்து ஓடினான். போ
குமுன் தடுப்பேனென்று சொல்லிவரச் சிசுபாலன் முதலினோர்களும் சூழ்ந்து வ
ந்து எதிர்த்தார்கள். அதுகண்டு பலராமன் எதிர்த்துச்சென்று அவர்களையெல்லாம்
பின்வாங்கியோடச்செய்து அடர்ந்துவந்த உருக்கிமினைப்பற்றி வாயிற்குருதிசோ
ரநெருக்கி மார்பிலடித்துத் தலைதிருகப்போகுந் தருணத்தில் பிராட்டியார் கண்டு
கண்ணினீர் வாரவருந்தி அச்சுதனடிபணிந்து "வசுதேவனருண்மைந்த, என் மு
ன்னோன் மடிவதன்முன் விரைந்துசென்று பலராமரை விலக்கியருள்க," என
வேண்டினாள். உடனே கண்ணனும் விரைந்துசென்று "அரியயனிந்திரன் கடல்
எழுந்த விடமுண்ட சிவன் என்பவர்களும் உன்னோடெதிர்த் தமராற்றார்கள்.
அங்ஙனமாக சீலமொரு சிறிதுமிலாத விப்பாலனையோ நீ முனிதி! சிங்கஞ்சிறு
நரியோடெதிர்க்குமா? இவனையுய்ப்பயவருள்" என்று வேண்டுதலும் பலராமரும்
அத்தீயனை விடுத்தனர். அதுகண்டு தேவர்கள் நகைத்து மலர்மழைபொழிந்தனர்.
உயிர் தப்பியோடிய வுருக்குமினும் தேரேறிக் கண்ணனை நோக்கிச் செல்லாதே
எனவுரைத்துக்கண்ணனது தேரின் பாகன்மீதும், பரிகளின்மீதும் அம்புகளையெ
ய்ய கண்ணனும் குறுநகைசெய்து வில்வளைத்து அம்பு எய்து உருக்குமின் தேரு
ம் வில்லும் சிதைந்து வீழச்செய்தனர். உடனே உருக்குமின் கட்கமெடுத்துக்
கடுகென வருதலும் கண்ணனோரம்பால் அதைப்பொடி படுத்தினன். அது பொ
டிபடவும் உருக்குமின் மற்போர் புரிவேனென்று பரந்தாமன் றேரினிடைத்தாவி
க்கண்ணனைக்கட்டிப் பிடித்தலும் அச்சுதன் கண்டு இவன் வீரம் நன்று என்று அ
வனைப்பிடித்து இருகைகளையும் வாரினாலே தேர்க்காலிற்கட்டி அவன் சிகையை
யுலகோர்கண்டு நகைக்கும்படி ஐந்து பாகமாச்சிறைப்பித்துப் பிராட்டியை நோ
க்கி மின்னுகின்ற வாள்போலும் விளங்குகின்ற விழியாளே, விதர்ப்பமன்னன்
மகளே, உன் முன்னவனது வீரத்தைப்பார் என்று நகைத்தனன். உருக்குமின்
பாரின்மீது பங்கமுற்றுத்தலையிற் சிகையைந்து கொண்டு தங்கை நாணுமாறு நிற்
றலைக்கண்டு பலராமர் விரைந்துவந்து கண்ணனை நோக்கி "தம்பி கயிறு கொண்
டவனைக் கட்டியதன்றி உன்னுயிரன்னாளது உடன் பிறந்தானென்று சிறிதும்நினை
யாமல் தலைமயிரையும் ஐந்து பங்குறச்சிறைப் பித்தனையே! துட்டனாயினும் து
ன்மதியுடையோனாயினும் நமக்குக் கட்டத்தைக் கொடுப்போனாயினும் உனது கற்
புடைய மனைவியாகிய வட்டமாமதிபோல் விளங்கு முகத்தையுடைய உருக்குமி
ணிக்காக அவனைவிட்டு நமது நகர்க்குச்செல்வதே நன்" றென்று சொல்லியவன்
கட்டறுத்து ஐஞ்சிகையை யொருசிகையாக்கி அன்போடு அவனை நோக்கி உன் மை
த்துனன் விளையாட்டாகச் செய்ததை மனங்கொள்ளேலென்று தேற்றி அனுப்புத

னும், நாணமிழந்த உருக்குமினும் கண்டோர் நகைப்பரேயென்று தான் முன்னுரைத்த சபதத்தை நினைந்து குண்டினபுரம் செல்லாமல் காட்டகத்துள் போசகடம் என்னும் நகரத்தில் தன் வீரந்துறைந்து தங்கினன். உருக்குமி னுடைந்தோடலும் உம்பர் மலர் மழை பொழியக் கண்ணன் திருவுடன் தேரேறி வழியகத்துள்ள வளப்பங்களை வாள்விழி மங்கைக்கு வகுத்துரைத்துக்கொண்டே துவாரகையையடைந்து தேரினின்று மிறங்கியந்தணர் அருமறையோத வழகிய திருக்கோவிலடைந்து அரிவையர் திலகமாகிய பிராட்டியாருடன் தந்தையாகிய வசுதேவரை வணங்கினன். அதுகண்ட வசுதேவரும் ஆனந்தக்கண்ணீர் பொழிதர மைந்தனையெடுத்தணைத்து மகிழ்ந்தனர். பின் கண்ணன் திருவொடுந்தேவகி யடியிணைப்பணிய அன்பொடு மைந்தனையும் மருகியையும் மலர்க்கரங்களா லெடுத்து மார்போடணைத்து மகிழ்வுற்றனள். அவ்வாறு ரோகிணி முதலிய தாய்மார்கள் தாள் பணிந்து மகிழ்ச்சியூட்டி மன்னவர் மறையவர் மாதவர் மகிழ்ந்தினிதிருப்ப மண்டபமதனில் வீற்றிருந்தனன். அரசனாகிய உக்கிரசேனனும், அக்குரூரனும், உத்தவனும் அமைச்சர்களும் கண்ணனையும் கமலத்திருவையும் களிகூரக்கண்டனர். அந்தணர் ஆசிவழங்கினர். அரிவையர் கருப்புரதீபமேந்தினர். தேவர்கள் பூமழைபொழிந்தனர். அக்காலையில் வசுதேவன் கர்க்கனை நோக்கி மாயவனும் மலர்மகளும் மணம்புணரக் குற்றமற்ற முகூர்த்தம் விரைந்து செப்புகவென்றலும் கர்க்க மாதவன் மகிழ்ந்து காலையாகிய கண்ணன் கமலமலர் மங்கையை மணத்தலுக்கு நாளையே நன்றெனவுரைத்தனன். அதுகேட்டு வசுதேவர் மனமகிழ்ந்து அத்தினபுரத்திலுள்ள தருமனுக்கு மவன் சுற்றத்தார்க்கும் வியாசமுனிவர்க்கும் நந்தனுக்கும சோதைக்கும் மற்றிடங்களிலுள்ள கொற்றவர்க்குமண வோலைபோக்கினர். மணவோலைகண்ட மன்னவர்களெல்லா மனமிகமகிழ்ந்து துவரையம்பதி யடைதலும் அதன்முன்பே நகரத்தை அணி பெறச்சிங்காரித்துப்பின் குறித்த காலத்திலே கர்க்கனிருந்து ஓமாதிகள் விதி வழிப்படி நடத்த மாதவன் மலர் மங்கையை மணம் புணர்ந்து தந்தை தாயர் தாள்களிலும் மற்றுள பெரியோர் பாதங்களிலும் வணங்கி மற்றவர்களை வாழ்த்தி ஊர்செல்வார்க்கு விடை தந்து உருக்குமிணிப் பிராட்டியாருடன் கூடி உவந்தினிதிருந்தனன்.

இப்படி நிகழு நாளில் ஓர் நாள் கண்ணன் இராஜ சபையில் வீற்றிருக்கும்போது சத்திராசித்து மன்னன் தான் கதிரவனை நோக்கித் தவம் புரிந்து பெற்ற எண் கலப்பொன்னை யீனும் சமந்தக மணியைமார்பிடை யணிந்து வரக்கண்ணன் கண்டு இம்மணியினை உக்கிரசேனனுக்குக் கொடு என்று கூற இசையாது சென்றனன். பின் சிலநாட்சென்று சத்திராசித்து மன்னன் தன்தம்பி பிரசேனனை அச்சமந்தகமணி மார்பி லணிந்து குதிரை யேறிச் செல்லுமாறு வேட்டைக்கு விடுக்கக் காட்டில் அவனை ஓர் சிங்கம் கொன்று மணியைக் கவ்விச்செல்ல அதுகண்டு கரடியரசன் சாம்புவன் அச்சிங்கத்தைக் கொன்று மணியைக் கொண்டு சென்று தன் மகள் சாம்புவதிக்கு மார்பிலணியும் பொருட்டுத் தந்தனன். பின் மற்றவர்களுடன் தன் தம்பி மீளாமை கண்டு சத்திராசித்து மன்னன் வருந்தி மாதவன் கேட்டபோதே மணியைக் கொடாமையால் தம்பியை வதைத்து மணி கவர்ந்தான் என்று அழுவது கேட்டுக் கண்ணன் கடுமெனக் காடு சென்று நடந்தவையறிந்துசாம்புவனுடன்சமர்செய்து அவன் தன்னைமாயவனென்றறிந்துவணங்க அவன் விருப்பத்தின்படி அவனை வைகுண்டத்திற் கேற்றி அவன் மகள் சாம்புவதியை அழைத்துக்கொண்டு துவாரகையடைந்து சத்திராசித்துவுக்கு நடந்த வண்ண முரைத்து மணியையீந்து அரண்மனை யடைந்து சாம்புவதியை விதிப்படி மணந்து மகிழ்ந்திருந்தனன். பின் சத்திராசித்து மன்னன் தன் தம்பி யிறந்த வாறறிந்து வீணே கண்ணன் மீது பழிநினைந்தோமே யென்று வருந்திக் கண்ணனிடம் சென்று உனக்கு என் மகள் சத்தியபாமையைத்தர விரும்புகின்றே னென்னலும் கண்ணன் விரும்ப வசுதேவர் சதகிராசித்துவை நோக்கி உன் மகளை என் மகனுக்குத் தருதலென்றென்ன உடனே நாணிச்சயித்து விதிப்படி விவாகம் நடத்தக் கண்ணன் பார் மடந்தையாகிய சத்தியபாமையை மணந்து மகிழ்ந்தினிருந்தனன். இவ்வாறிருக்கையில் திருதராட்டிரனால் அனுப்பப்பட்டு அத்தினபுரத்திருந்து வந்த தூது

வர், வாரணசியில் ஐவரும் அன்னையுடன் அரக்குமாளிகையில் எரிந்திறந்தொழிந்தார்கள் என்று கூறக்கேட்டுடனே அத்தினபுரியடைந்து அரவக்கொடியோன் முதலியவர்கள் பாண்டவர்கள் இறந்தொழிந்தார்களென்று அகத்துமகிழ்ச்சியுற்றிருப்பினும் புறத்துக்கடல் சொள்ளாக்கவலை யுடலிடைக் கொண்டார் போலத்தழுவியழ ஐவரும் அருரின்றியுயிர்த்திருத்தலை அறிந்துள் ளோனுதலின் தானும் சபடமாகவே தழுவி அழுது இறந்தோர்க்குச் செய்யும் கிரியைகளை ஐவர்க்குச் செய்வித்து வீற்றிருந்தான். அதுசமயத்தில் அக்குரூரன் சததனுவாவைப்பார்த்து அன்பனே நீயும் கிருதவன்மாவும் இருப்பவும் சத்திராசித்து மன்னன் தன் மகளைக்கண்ணனுக்கே தந்துவிட்டானே, அத்தீயோனைக் கொன்று அவனிடத்துள்ள சமந்தகமணியைச்சொண்டு தருவாயாகில் நலமென்றுரைக்கச் சததனுவாவும் இணங்கி இரவிடை சென்று கன்னமிட்டுட்புகுந்து ஆண்டுறங்குகின்ற சத்திராசித்துவைக் கொன்று மணிகவர்ந்து மனையிடைச்சென்றனன். பின் சத்தியபாமை இஃதுணர்ந்து தன்னத்தன் இறந்தமைக்கு இரங்கி என் தந்தையைக் கொன்றானை என்கொழுநனால் கொல்விப்பேனென்று கட்டுரைத்து அத்திப்பதி யடைந்து அன்பனிடம் உரைக்கக்கேட்டு அரிவையைத் தழுவியழுது துவாரகையடைந்தனன்.

உடனே சததனுவா அக்குரூரனைநோக்கிக் கண்ணன் கடுத்து வந்திருக்கின்றனனே, செய்யுமாறு யாதென்ன, அக்குரூரன் சததனுவாவை நோக்கி நீ ஏன் சத்திராசித்துவைக்கொன்றனை உடனே கண்காணுது செல் எனக்கேட்டு அச்சமந்தகத்தை அக்குரூரனிடம் கொடுத்துவிட்டு குதிரையேறி விரைந்துசென்றனன். பின் சத்திராசித்துவைக்கொன்றான் சததனுவா என்றுணர்ந்து கண்ணன் பால்வண்ணனுடன் தேரேறித்தொடர்ந்துசெல்ல மிதிலையை அடுத்த சோலையிடத்தில் ஏறியகுதிரை இறந்துவிழ காலிற்காற்றுகப்பறத்தலும் கண்ணனும் தேரிழிந்து துரத்தி கையாழியாலவன் கழுத்தரிந்து அவனிடத்து மணிகாணது திரும்பி மணிகாணேனென்று அலாயுதனுடன் கூற அவன் அதில் ஐயுற்றுக்கண்ணனை நோக்கி சத்திராசித்துவின் மணிக்குரியான் நீயேயன்றி யானன்று. மணி காணுவிட்டால் மகிழ்வுடனின்னூர்க்குச்செல்லென்று மிதிலையிற்போதலும் கண்ணன்கண்டு வேறுரிடமாவது அம்மணிகண்ட பின்னுயினும் ஊர்வந்துசேர்க என்று துவரையடைந்து சத்திராசித்துவை யெரியிடையிட்டு யிருபுனற்கிரியையும் செய்வித்து ஏந்திழை துன்பம் துடைத்தினிதிருக்கையில் அக்குரூரன் அம்மணிகொண்டு அஞ்சிக்காசியடைந்து வேள்விபுரிந்து தானமீந்திருப்பதறிந்து அச்சமின்றி ஊர்வருமாறு அன்பரிடம் கூறியனுப்ப அவனும் உடன்வந்துபணிந்து மணியையீய அதை அவனிடம் கொடுத்தனன். பின் மிதிலையிற்சென்ற பலராமன் வெகுலாசுவ மன்னவனால் எதிர்கொண்டழைக்கப்பெற்று மகிழ்வுடனிருந்து தான்பயந்த பானுமதிப்பெண்ணைப்பாம்புக்கொடியோனுக்குப் பரிவுடனுதவிக்களித்திருப்பவன், இவற்றையெல்லாங் கேள்வியுற்றுத் துவரையடைய அக்குரூரன் அம்மணியை அலாயுதனிடம் கொடுப்ப அவன் அதை சத்தியபாமைக்குக் கொடுத்தான். பின் கண்ணபிரான், உருக்குமிணி, சாம்புவதி, சத்தியபாமை இவர்கள்தன்னைச்சூழ்ந்திருக்க மகிழ்ந்தினிதிருந்தனன். முன் அரக்குமாளிகையில் இறவாது உயிர்தப்பிய பாண்டவர்கள் துரோபதை சுயம்வரத்தில் வெளிப்படடுப் பார்த்தன் ஒருவராலுமியலாத வில்லைவளைத்துக்கயலையெய்ய அன்னையுரையின்படி துரோபதையை யைவரும்மணந்து அத்தினபுரியடைந்து பெரியதந்தை உத்திரவின்படி இந்திரப்பிரத்தம் சேர்ந்தவுடன் தருமன் தன் வரலாறுகளைச்சொல்லித் தூதேவக் கண்ணனறிந்து சாத்தகியுடன் தேரேறி இத்திரப்பிரத்தமடைந்து பெரியோர்களையும் சிறியோர்களையும் வணங்கியும் வாழ்த்தியும் அளவளாவிப்பின் பார்த்தனுடன் சோலையடைந்து களித்திருக்கையில் அருச்சுனனிடை அனற்கடவுள் அந்தண வடிவங்கொண்டடைந்து விரும்பியபடி அவன் அரும்பசிதணிக்கக்காண்டாவனமுதவி ஈண்டமுகில்தடுத்து நின்று காண்டீபவில்லும் கவனமான்றேரும் கொடியும் கனற்கடவுள்தரவும் அவ்வெரியிடைத்தப்பிய மயனால் நீரெனப்பளிங்கும்பளிங்கென நீருந்தோன்றும் பெருமண்டபம் நிருமிக்கவும்பெற்று மகிழ்ந்தபின் விசயனுடன் தேரேறி காட்டிடை வேட்டைவிரும்பிச்சென்று வேட்டையாடி நீர்குடைந்து இருப்பவன் சோலையுள்

அருச்சுனனால் காளிந்திதவம்புரிவதறிந்து அவள் முன்னின்று அவள் வேண்டுதலுக்கிசைந்து தேரேற்றி இந்திரப்பிரத்தமடைந்து வேதவிதிப்படி சர்க்கனெய்தி ஓமாதிகள்செய்யக்காளிந்தியை மணம்புணர்ந்து சிலநாள் அங்கிருந்து பாண்டவர்களிடம் விடைபெற்றுத்துவரையடைந்து தாய்தந்தையரடி பணிந்து தேவியர்தற்சூழ மகிழ்ந்தினிதிருந்தனன்.

பின் கண்ணபிரான் அவந்திமன்னன் மகள் மித்திரவிந்தை சுயம்வரமென்று அம்மன்னவன் விடுத்த தூதுவரால் அறிந்து அங்குசென்று அவ்வரிவையங்குற்றவர்களைப்பார்த்துவந்து தன்கழுத்தின்மாலையிட அதுகண்டு அரசர்கள் ஆற்றாது போருக்கெழ அவர்களைத்தோற்றோடச்செய்து அம்மித்திர விந்தையை மணந்து அவள் தந்தைகொடுத்த அரும்பொருள்களைப்பெற்றுத் துவாரகையடைந்தான். பின் கவுசலராசன் தான்பெற்ற நாக்கினசித்து என்னும்பெண்ணை தன்னகரத்துள்ள ஏழுவிடைகளையும் ஒரு சேரத்தழுவுவோனுக்கு மணம்புணர்த்துவேனென்று முரசறைவித்ததுகேட்டு ஆண்டடைந்து அக்கவுசலமன்னன் விடுத்த ஏழுவிடைகளும் தம்மிடம் வருவாரைச்சினந்துநோக்கி இடியெனவதிர்த்துக் கோட்டாற்பாய வருவதுகண்டு அரசர்களெல்லாம் ஓடினாராகக்கண்ணன் ஏழுருவங்கொண்டு ஒரு கணத்தில் அவ்வெழுவிடைகளை வாலைப்பற்றிச்சுற்றிக்கொன்று நாக்கினசித்தால் மாலைசூட்டப்பெற்று மண்டபமடைந்து விதிவழி மணம்புணர்ந்து நாக்கினசித்துடன் தேரேறி வழியில் தடுத்த அரசர்களை அருச்சுனன் முறியடிக்கமகிழ்ந்து துவரையடைந்தனன். பின் சுருதகிர்த்திமன் பெற்ற பத்திரை கண்ணன்மீது காதல்கொண்டு அவன் வரலாறுகளை வீணையினிசைத்துப்பாடி அவன்வடிவத்தை அழகுபெற எழுதி அதுமுன்னிலையாக சிற்சிலபேசி அயருங்காலையில் ஆண்டடைந்து அவன் விரும்பியபடி. அவளைத்தேரேற்றித்துவரையடைந்து விதிவழிப்படி மணம்புணர்ந்தனன். பின் பத்திரராசன் மகன் பிரகசேனன் என்பான்பெற்ற இலக்கணையென்பாள் இயல்புறு புராண சாத்திரங்களெல்லாம் எழில்பெறக்கற்று கண்ணன் கழலிணை நினைந்து அவனை மணம்புணரக்கருதி வருந்தியிருந்தாளாக அம்மன்னவன் தூயதனுவளைத்தியலுமச்சம் வீழ்த்தாருக்கென்மகளை மணம்புணர்ப்பேனென்று முறசறைவிப்பது அறிந்து ஆண்டடைந்து வீரரெண் விசயனங்கர்கோன் சேதிபன், முதலினோர் எய்துவீழ்த்தொணாது நின்றகயலைவீழ்த்தி இலக்கணையை மணம்புணர்ந்து அம்மன்னவன் ஈந்தபொருள்களுடன் துவரையையடைந்து தேவியர்தற் சூழ மகிழ்ந்தினிது வீற்றிருந்தனன். பின் நரகாசுரனால் சிறையிடப்பட்ட பார்த்திபர் பதினாறாயிரவரும் தங்களைச் சிறைநீக்கி ஆட்கொள்ளுமாறு வேண்டித்தூதேவுதலும் அவர்கள் துன்பம் நீக்குவதுகருதிச் சத்தியபாமையுடன் கலுழன் மீதிவர்ந்துசென்று நரகாசூரனது எழுவகைமதிலும் பழுதுபடச்செய்து முரன்முதலிய படைத்தலைவரைக்கொன்று எதிர்த்துவந்த நரகனுயிர் தொலைத்து பூதேவி வேண்டுகோளின்படி சேய்க்கு முடிசூட்டி நரகனால் சிறையிடப்பட்ட அரசர்களுடன் அவ்வரசர் மடந்தைகளும் மலர்முகங்கொண்டு வணங்கிச்சூழக்கண்ணன் கலுழன்மீதேறிச்சத்தியபாமையுடன் துவரையடைந்து பதினாறாயிரமண்டபங்களில் ஏகமுகூர்த்தத்தில் பதினாறாயிரம்பெயரையும் நான்மறைப்படி மணந்து மகிழ்ந்திருந்தான். இங்ஙன நிகழு நாள்களுள் ஓர் நாள் கண்ணன் உருக்குமிணிப்பிராட்டியாரை நோக்கி, மாதே, சேதிபன்முதலியபேரரசர்கள் நின்னை விரும்பியிருந்தார்களாக நீஅவர்களை விடுத்து என்னைவிரும்பியடைந்தமை என்ன பேதமை ? இனியாயினும் உன்னெழிற்கொத்த மன்னவனை யடையெனப் பரிகாசமாகக் கூற அதுகேட்டுச் சகிக்கலாற்றாது வருந்திய பிராட்டியாரைத் தழுவித்தேற்றியிருக்கையில் நாரதமுனிவர்வந்து ஆசிவழங்கக் கண்ணன் எழுந்து பிராட்டியுடன் வணங்கிச் செயத்தகு முபசாரமனைத்து மியற்றி இருக்க முனிவர் கண்ணனிடம் ஓர் பாரிசாதமலரைத் தர அதைப் பரந்தாமன் பிராட்டியாரிடம் கொடுத்தலும் அதை அவர் வாங்கி முடியிடைச்சூட்டிக்கொள்ளக்கண்டு முனிவர் பிராட்டியை நோக்கிப் பெண்ணே, இப்புட்பம் நின்முடியேற நெடுந்தவம்செய்ததுபோலும். உனக்கு அஃதோர் பொருட்டோ என்றுகூறிச் சீதரனிடம் விடைகொண்டுசென்று சத்தியவாமையின் மனையிடையடைந்து அவளை நோக்கிப் பெண்ணே கண்ணன்

யாவரினும் நின்னிடையன்புடையோன்போ லடிப்பினும் உருக்குமணி யிடத்தே
தான் அதிகப் பிரியமுடையனு யிருக்கின்றனன் இன்று நான் தந்த அரிய பாரிசா
தமலரையும் அவளளகத்திற்றான் சூட்டினன் என்றுரைத்துச்சென்றனர். பின் ச
த்தியவாமை பெரிதும் வருந்தி யிருந்தசாலையில் கண்ணன் ஆண்டடைந்து அமளி
யின் மிசையடைந்து அரிவையைத்தழுவலும் அவள் சீறிப், பொய்யை மெய்போல
க்கூறி ஆயப்பெண்களை அணையும் ஆழிக்கையா நின் மாயமாங்கலவி விரும்பிலேன்
நீ இவண் நீங்குவாயாக என்னலும் நாரத முனிவனயின்ற கலகச் சொல்லாற் கல
ங்காதே வானுலகத்துள்ள பாரிசாதவிருக்ஷத்தையே நின்முன்றிலிற் பதிப்பேனெ
ன்று தேற்றி யணைந்து மற்றைநாட் கருடன்மீதிவர்ந்து பொன்னுலகத் தெய்தி இ
ந்திரன் சபையிற் கண்ணன் அவனாற் பூசிக்கப் பட்டிருக்கையில் இந்திராணியாற்
பூசிக்கப்பட்டு அவளிடம் இருந்த சத்தியபாமையைச் சசிபார்த்து நாமிருவரும்
சூதாடுவோம். நான் சூதிற்றோற்றால் உனக்குப் பாரிசாத மலரீவ னென்ன சத்தி
யவாமை நான் தோற்கிற் சமந்தகமணியை யீவனென்றாள். பின் இருவரும் சூ
தாட சத்தியவாமை வென்று பாரிசாத மலரைப் பறிக்க விடுத்த மடந்தையரை
அம்மலர் காக்குந் தெய்வப்பெண்கள் வெருட்டியோட்டலும் முனிந்து கண்ணனை
அழைத்து வணங்கி நடந்தவற்றைக் கூறக்கண்ணன் கடிதிற்சென்று பாரிசாத
த்தை வேரோடும் பிடுங்கி கலுழன்மீது வைத்துக் கொண்டு சத்தியவாமையுடன்
பெயர்ந்திடுவது கண்டு தடுத்த தேவர்கள் தோற்றோடச் செய்து துவரையடைந்
து பெரியோர்களை வணங்கி சத்தியவாமையின் முன்றிலிற் பாரிசாதத்தைப் பதி
த்து மகிழ்ந்திருந்தனன்.

இந்திரப்பிரத்தத்தில் தருமனிருந்து அரசாண்டுவரும்நாள்களுள் ஓர்நாள் பி
ராமணர் பசுக்களை வேடர் கவர்ந்தாரென்று பார்த்தன்கேட்டு அதை உரைசெய்யத்
தருமனிடம்சென்று அவனுடன் ஓராசனத்திருக்கும் துரோபதையைக்கண்டு முன்
வியாசரால் ஏற்பட்ட நியமனத்தின்படி தீர்த்தயாத்திரைசெய்து வருபவன் உரக
லோகத்தெய்தியுலூகியை மணந்து மதுரையையடைந்து பாண்டியன் பாவைசித்
திராங்கனையை மணந்து மதுரைநீங்கி முக்கோல்கொண்டு நான்மறையோனுகிப்ப
ன்னிருநாமம் பண்புடன்றரித்து காவியுடுத்து வைணவத்துறவிபோல்வேடம்பூண்
டு துவரைப்பதியுட் புகுதல்கண்டு பலராமன் பங்கயநாபனுடன் சென்றடிவணங்
கி அழைத்து சுபத்திரையிருக்குமிடத்து இருத்தி ஈண்டெங்கை சுயம்பாகஞ்செய்
யன்ன நீயருந்தியருள் என்று கூறி விடைபெற்றுச்செல்லலும் ஆசனத்தின்மீதுபெ
ருந்துறவிபோலிருந்தனன். அக்கபட சன்னியாசியைச் சுபத்திரையடைந்து வண
ங்குதலும் எழில் கண்டாற்றாதவனாய் காமனம்பால் போவது வருவதாயிருந்த ஆ
வியுடன் ஆசிவழங்கி யிருந்தவனுடன் உரையாடிச் சுபத்திரை அவன் பார்த்தனெ
ன்றுணர்ந்து நாணி உட்சென்று மையல் தலைக்கொண்டு வருந்தினள். அதுகாலை
யில் பிரபாசப் பேர்நதியின் மேகஞ்சொரிதலும் புதுநீராட மாயவன், அலாயுதன்
தந்தை தாயினர் முதலினோர் எல்லவரும் அவ்வாற்றின் சலத்திடைச் சென்றனர்.
அற்றை நாண்மாலைகுறுகுதலும் பார்த்தனும் சுபத்திரையும் மையல் தலைக்கொண்
டு வருந்தாநிற்க உடனே கண்ணன் அடைந்து அருச்சுனனைத் தழுவி எங்கையை
நினக்குத் தருவனென்று சொல்லி நினைக்குமுன் அமரர் கணம்புடைசூழ இ
ந்திரன் வருதலும் தவுமியன் அடைந்து விதி வழிப்படி ஓமாதிகள் செய்ய
ச் சுபத்திரையைப் பார்த்தனுக்கு மணமுடிப்பித்துச் சீதனப்பொருள்கள் ப
லவுந்தந்து பார்த்தனை விடுத்தபின் ஊர்போகுமாறு உரைத்து பிரபாசக்கரைக்
குச் சென்றிருந்தனன். பார்த்தன் அற்றையிரவிற் சுபத்திரையுடன் கூடியிருந்தும
ற்றைநாட்காலையில் தேரேறிச் செல்லத்தடுத்த படைவீரர்கள்பின் பின்வாங்கச்
செய்யத் தூதுவரோடி நடந்தது இன்னதென்று அலாயுதனுடன் கூறுதலுமவ
ன் வெகுண்டெழுதலும் கண்ணன் தடுக்கத் தணிவெய்தினன். பின் பார்த்தன்
தேரைச்செலுத்திக்கொண்டு இந்திரைப்பிரத்தமடைந்து சுபத்திரையுடன் பெரி
யோரை வணங்கியினிதிருந்தனன். பின் சூரியகிரணம் சம்பவிக்க அலாயுதனும் க
ண்ணனும் தேவியரும் தம் தந்தையரும் சூழ்ந்து தீர்த்தமாடுவது கருதிச் சமந்த
பஞ்சகம் சென்றார்கள். அரவக்கொடியோன் முதலினோரும் ஐவரும் அவர் அன்

னையும் பாரியரும் நந்தனும் அசோதையும் அனுக ஒருவரோடொருவர் ஆலாவ
ளாவியிருக்கத் துரோபதை கண்ணன் தேவியரை நோக்கி நீவிர் கண்ணனை மணந்
த வரலாறுகூறுமின் என அவர்கள் எண்ணிரண்டாயிரத்து நூற்றெட்டுப்பெயரும்
தாந்தாம் கண்ணனை மணந்த வரலாறு கூறக் கேட்டுத் துரோபதை உவகை கொண்டி
ராங்களையிவர்கள் மகிழ்ந்தினிதுற்றனர்.பின்புலத்தியன் அகத்தியன் முதலாமுனி
வர் வருவது கண்டு கண்ணன் வணங்கி விடுத்தலும் அவர்கள் அவனை நோக்கி நீ
யும் சாதாரணர்போல் நடித்திருக்கின்றாய்போலு மெனக் கூறிச்செல்பவர்களைப்
பணிந்து வசுதேவன் யான் பவமறுத்துயர்பதம் பெறும் வழி கூறுமின் என நார
தனைத்துக் கங்கைக் கரையிலுள்ளான் வேறொரு கலை விரும்புமாறு கண்ண
னைப் பிள்ளையாகப்பெற்ற இவன் வேறுதவம் விரும்புகின்றானென்றனன். அதுகே
ட்டு முனிவர்கள் வசுதேவனை நோக்கி உலகத்திற் பிறந்தோர்கள் கழிக்கவேண்டி
ய கடன்கள் மூன்று. அவைகளாவன முனிவர்கடன், பிதிர்கடன், தேவர்கடன் எ
ன்பனவாம். அவ்வற்றுள் அருநூலின்படிப் பிரமசாரியஞ்செய்து முனிவர்கடனை
யுஞ் சுதர்களைப்பெற்றுப் பிதிர்கடனையும் அகற்றினை. இனி வேள்விசெய்து தேவ
ர்கடனை யகற்றுதியேல் கதியிடைப் புகுதுவை யென்றுரைசெய மகிழ்ந்து பணிந்
து மாமக நடத்துவதுகருதித் தவர்களைவரித்து எழில்பெற்ற சாலையிடை யடைந்
து மகத்தினை விதிவழிச்செய்து முடித்து அவபிரதங்குடைந்தாடி அனைவர்க்கு வே
ண்டுவனதந்து விடுத்து அலாயுதன்முதலியோருடன் துவரையடைந்தனன். பின்
கண்ணன் சபாமண்டபத்தில் பிரசேனன்முதலினோர் சூழ்ந்திட வீற்றிருக்கையில்
நாரதமுனிவனடைந்து நீ யதிகனென்றுரைக்க ஆண்டிருந்த முனிவர்களீதென்ன,
விளக்குதியென்று கண்ணனைக் கேட்டலும் அவன் நாரதனைக்கொண்டு அதன்றன்
மை விளக்கித் தன்பதமடைய விரும்பிய தந்தையைப் பின்னர் என் தாயுடன் அ
டைகுதி என்றுரைத்து தன் தாய் விரும்பியபடி அவடநயர் அறுவரையும் கொ
ணர்ந்து கொடுத்தனன். பின் தேவகி யவர்களுக்கு தன் இருதனப் பாலை யீய அ
வர்கள் சாப நீங்கிக் கண்ணன் கழலிடைப் பணிந்து தாயையும் வணங்கி விமான
த்தேறி மரீசியிடம் அடைந்து பணிந்தனர். அது கண்ணன் செயலென்றறிந்து
துதித்த வன்னையை பின்னர் என்பதமுறு வென்றவண்மனத்தை மாயையான் ம
றைத்தனன்.

பின் தேவியார் புடைசூழ உவந்திருக்குங் கண்ணனை ஓர்நாள் உருக்குமிணி மு
தலாந் தேவிமார் வணங்கி எங்களுக்குப் புத்திரபாக்கியம் அருளெனக் கயிலையி ல
ரனை நோக்கித் தவம்புரிந்து வரம் பெற்றுநும் குறை நீக்குவேனென்று அலாயுத
ன் சாத்தகி முதலினோரைப் பார்த்துப் பவுண்டரனால் தீங்குறுவகை நகரைக் காத்
திருங்கள் என்றுரைத்து வழிக்கொண்டு செல்பவன் யமுனைநதி மந்தாகினி யுடனே
யமர்ந்திடுங் கூலத்திடை வருதலைக்கண்ட கண்டாகருணன் தான்துதித்திருக்கும்
பரந்தாமன் இவனே யென்றுன்னி எதிர்கொண்டு சென்று ஓர் பிராமணப் பிணத்
தை முன் வைத்து நீ இதை அமுது செய்தருள் என்று வேண்ட அவன் தன்மை
யறிந்து கொலை முதலிய தீச்செயல் களிருப்பினும் தன்னிடத்தில் திடபக்தி யுடை
யானென்று நினைத்து அவன் வேண்டியபடி அவனுக்கும் அவன் தம்பிக்கும் அழி
யாப்பதவி யுதவிக் கயிலை யடைந்து தவம் புரிந்து விடையவன் முன்னின்று வரந்
தந்து வணங்கப் பெற்றுத் துவாரகை யடைந்து பெரியோரை வணங்கி இளையோ
ரை வாழ்த்தித் தேவியர் அவாவெலாந் தணிய பதினாறுயிரத்து நூற்றெட்டுருவாகி
க்கூடிக் குலாவி மகிழ்ந்தினி திருந்தனன். பின் சிவ பெருமானை நோக்கி யருந்
தவஞ் செய்து பூசித்து அரியுருவம்பெற்ற பவுண்டரன் கவுத்துவ மாலையும் கனகா
ம்பரமும், நாற்கரமும், பஞ்சாயுதமும், கருடவாகனமும் கொண்டு அழகுடன்திரி
யுநாள்களிலோர் நாள் தனதவைக்கண் வந்த நாரத முனிவனை நோக்கி இவ்வுலகி
லுள்ளாரெல்லாரும் என்னை வாசுதேவ னென்கின்றனர். துவாரகையிலுள்ள இ
டையனும் வாசுதேவனென்று திரிகின்றனன். ஆதலால் நீ உடனே இந்திரன் மு
தலிய இறைவர் உலகங்களிற் சென்று என்னை வாசுதேவனென் றுரைக்குதியென்
ன, முனிவர்பிரான்றீயோனைநோக்கிச் சூரியனை மின்மினி நிகர்க்கில் நீ விந்தைநா
யகனை யொப்பாய் என்று கூறுதலும் பவுண்டரன் முனிந்து நீ முனிவனாயினும் இ

வ்வார்த்தைக் கூறியதற்குக் கொன்றே யிருப்பேன் நீ சாபமிடுவாயென்று விட்டேன், எழுந்துபோதியென்றலும் நாரதன் எழுந்து அவணகன்று துவரை யடைந்து கண்ணனிடம், பவுண்டரன் சபை யிடை நிகழ்ந்த வற்றைக் கட்டுரைத்தனன். நாரதன் நீங்கு முன்னே பவுண்டரன் ஓர் தூதுவனை யழைத்து நீ துவாரகையிற் சென்று, பீதாம்பரம், பஞ்சாயுதம், வாசுதேவப் பெயர்களை விட்டு என்னைச்சரணடைந்துய்தி என்று கண்ணனிடம் சொல் என்று அனுப்பினன் அத்தூதுவனும்விரைந்து சென்று, துவரையடைந்து பவுண்டரன் கூறியவற்றைக் கூறுதலும்மாதவன் நகைத்து, நானிவற்றையெல்லாம் விடுகின்றேன் பவுண்டரனை யிங்கு வரச்சொல்லென்று கூறுதலும், தூதுவன் கடிதிற்சென்று பவுண்டரனிடங் கூறக்கேட்டவன் முனிந்து காசிமன்னனுடன் கலவியன் கடிதுசெல்ல, தான் பஞ்சாயுதங்களையுமேந்திக் கருடன் மீதிவர்ந்து நால்வகைச் சேனையும் புடை சூழ்ந்து வரத்துவாரகையடைந்தது கண்டு கண்ணன் தேரேறிச் சென்று சேனைகளை யழித்து சிலபோது விளையாட்டாகப் போர் புரிந்து ஆழிவிடுத்துப் பவுண்டரன் முடித்தலை துணிக்கக்கண்டு வெகுண்டு வந்த காசிராசன் சிரமறுத்து காசித்தெருவிடை விட்டனன். அவ்விருவரும் மடிந்தது கண்டு கலவியன் தேரேறி வருவது கண்டு பலராமன் சென்று அலத்தான் மோதித் தேரையழிக்கக் கதைகைக்கொண்டு வருதலும் கலப்பையான் மோதியதனையிரு கூறுக்க அவன் அஞ்சியோடிக் கடலுட்புகுந்து ஒளித்துப் போனான். பின்பால் வண்ணனுடன் பங்கய நாபன் மாதவர்களொல்லா மாசிகள் மொழியவானோர் ஆவலங்கொட்டியார்ப்பக் கிளையோர் வாழ்த்தத் துவரை யெய்தி யிருந்தனன்.

காசி வீதியிற் காசி மன்னன் தலையுருண்டிட அவன் மகன் சுதக்கணன் அது கண்டு இது செய்தான் வாசுதேவனென்றறிந்து அதற்குப் பிரதிசெய்ய விரும்பி அரனை நோக்கித் தவம் புரிய அவன் முன்னின்று கூறியபடி அபிசாரயாகம்செய்து அதனுள் பன்னிரண்டு யோசனை நீளமும் பரப்புமுடையதாய் எழுந்த கிருத்தியைத் துவாரகையிற் சென்று கண்ணனைக் கொன்று மீடியென விரும்பத் தேவர் முதலினோர் அஞ்ச வருவதுகண்டு வடவையோ, கடுவோ, அரனெற்றித் தழலோ பாரொடு திசையைச் சுட்டு விசும்பை யளாவித் துவரையினடைந்தது என்றுரைக்கச்சூதுவிளையாடிக் கொண்டிருந்த கண்ணன்கேட்டு கிருத்தியின் வரலாறறிந்து விரலுகிர் தெறித்துப் பின்னும் விளையாடிக் கொண்டிருக்க அவ்வுகிர் ஆழியாய்ச் சென்றுஅக்கிருத்தியையழித்தது. பின்பலராமர் ஆயர்பதிசென்று நந்தனையுமசோதையையும் காண விரும்பினராய்க் கண்ணனிடம் கூறிச்சென்று அவ்விருவரையும்பணிந்து அவர்களால் தழுவப்பெற்று அவர்கள் கண்ணனைநினைந்து வருந்த அவர்களுக்கு கண்ணனது வெற்றிகளைக் கூறிச்சிறிது நாள்களில் கண்ணின் அவர்களைக்காணுமாறு ஆண்டெய்து மென்று கூறித் தேற்றி மகிழ்ந்திருந்து வசந்தகாலம் வந்தெய்தப் பலராமன் ஆயப்பெண்களுடன் பூங்காவடைந்து வாருண மதுவுண்டு அழைத்தவுடன் வராத காளிந்தி யாற்றை அலப்படை யானிழுத்து ஆண்டுற்ற மயிந்தன்றம்பி துவிந்தனைக்கொன்று நந்தனையும் அசோதையையும் அடி பணிந்து விடை பெற்றுத் துவரை யடைந்து அன்னை பிதாக்களை அடிபணியக் கண்ணன் உருக்குமிணிப் பிராட்டியாருடன் அவனடி பணிந்து வாழ்த்தப் பெற்று மகிழ்ந்தினிதுறையும் நாளில் (முன் அரனுதல் விழித்தியாலிறந்த மதனன் அன்று அமரர்களுடன் இரதிசென்று வேண்ட அதற்கிரங்கி அரன் கூறியபடி) உருக்குமிணிப் பிராட்டியாரின் மணிவயிற்றின் மன்னினன். பிராட்டியார் கருவுற்றது கண்டு எல்லாரும் மகிழ்ந்தினிதிருக்க ஆறு மாதமானபின் வேதவிதிப்படி செய்ய வேண்டிய சடங்கைப் பிராட்டியாருடன் ஓராதனத்திருந்து இயற்றி உரிய காலத்தில் குமரன் சனிக்கப்பெற்று மதனன் என்று பேரிட்டு அந்தணர் முதலினோர்க்கு வேண்டுவன வெறுப்ப நல்கினன். உருக்குமிணிப் பிராட்டியார் தனயனுடன் மகிழ்ந்தேழ் தினம் வரையிற் செல்ல முன், மதனன் அரனுதல் விழித்தீயா லெரிந்தவுடனிரதியைப் பற்றிச்சென்ற சம்பரன் துவாரகையிற் பிராட்டியார் மணிவயிற்றில் மதனன் சனித்தமையை நாரத முனிவரால் அறிந்து வந்து மதனனைக் கைக்கொண்டு சென்று கடலிடை வீசினன். பின், அம்மதனன் கடலகத்துள்ள ஓர் மீனா

ல் விழுங்கப்பட்டு அவனை வலைஞர் பிடித்துச் சம்பரனிடம் தர அவன் அதைச்சமைப்பதற்காகப் பரிசாரகரிடத்துக் கொடுக்க அவர்கள் அதைப் பிளந்து கண்டகுழவியை, இரதியானவள் தன் கற்பழியா வண்ணம் படைத்து வைத்திருந்த மாயாவதி யிடைக்கொடுப்ப அக்குழவி மதனனென்று நாரதனால் அறிந்து இரதிதேவி அக்குழவியை வளர்த்து மாயம்பலவும் பயிற்றிப்பதினாறுண்டானவுடன் உண்மையறிவிக்க மதனன் தேவியுடன் தேரேறிச் சம்பரனைக்கொன்று துவாரகையடைந்து பெரியாரடி பணிந்து வாழ்த்தப் பெற்றுக்கர்க்கனெய்தி யோமம்பண்ணநாமகரணாதி சமஸ்காரங்கள் செய்யப்பெற்று ரதியை மணந்து மகிழ்ந்தினிதிருந்தனன். கண்ணன் உருக்குமிணி முதலிய பதினாறாயிரத்தொரு நூற்றெட்டு மாதர்களும் தனித்தனிபப்பத்துக்குமரர்களைப்பெற அவர்கட்கு மிகமகிழ்வூட்டி மகிழ்ந்திருக்கு நாளில் நாரதமுனி கண்ணன் தன்மையறிய ஒவ்வொரு வீட்டினும் சென்று வீடுகள் தோறும் கண்ணன் ஓரோர் செயல் செய்திருந்து தன்னை வணங்கியுபசரித்தது கண்டு வாழ்த்திச் சென்றான். நாரதனைப் பணிந்தனுப்பிச் சிறுவர்களுடன் மகிழ்ந்தினி திருக்குநாளின் மதனனிரதியுடன் கூடி அநிருத்தனைப் பெற அளவிலா நிதியுதவி அகமகிழ்ந்தனன்.

சாலுவதேசத்தையாளும் பிரமதத்தன் மகார்களான அங்கிசடிபிகர்கள் அரனை நோக்கி அருந்தவஞ்செய்து திவ்வியாத்திரங்களையும் பிங்கிருடிகும்போதரனென்னும் பெயருடைய பூதங்களிரண்டையும் அரனுதவப்பெற்று ஒரு நாள் சனார்த்தனமறையோனுடன் கானில் வேட்டைகருதிச் சென்று வேட்டையாடிச் சிறப்புறுகாசிபன் விதிப்படி செய்யும் சத்திரயாகம் நோக்கிச் செல்லுபவர்கள் தவஞ்செய்யும் துருவாசனையும் சூழ்ந்த முனிவர்களையும் சனார்த்தனமறையோன் தடுப்பவுங்கேளாது இகழ்ந்து இடருறுத்த அம்முனிவர் குழாம்புடை சூழத் துருவாசன் துவரையடைந்து கண்ணனிடம் கூறியிழந்த ஆடையாதிகள் உதவப்பெற்றிருந்தனர். அங்கிசன் அரசர்களெல்லாரிடத்தும் திறைவாங்கித் தன் தந்தையை ராஜசூயயாகம் செய்விக்க நினைத்து சனார்த்தனவேதியனை நோக்கி நீ கண்ணனிடம் சென்று உப்புடன் இங்குறுமாறுரையென்று கூறி விடுக்கச் சனார்த்தனன் அக்கொடியோனுக்கஞ்சித் துவரையடைந்து அங்கிசன் கூறியவற்றைக் கூறலும் கண்ணன் கேட்டு புட்கரசரசினனைப் போர்க்கு வரச்சொல் என்று சனார்த்தனனுடனுரைத்து சாத்தகியையும் அவனுடன் அனுப்பி உரைப்பித்து அங்கிசன் போர்விரும்பியதறிந்து அவனைப் புட்கரசரசில் கொல்வதாகக்கூறி முனிவர்களை அடிபணிந்து அனுப்பினான். சாத்தகியும் சனார்த்தனனும் சாற்றியதுகேட்டு அங்கிசன் அனுசனுடன் நால்வகைச்சேனைகளையும் புடைசூழப்புட்கரசரசில் எய்த அதன்முன்பே சாத்தகி கிருதிவன் மாமுதலினோர் சூழப்படையுடன் சென்றிருந்த கண்ணன் சாத்தகி முதலினோரால் அங்கிசன் படைகளை அழித்து கொடும்போர்புரிகும்போதரன் பிங்கிருடியென்னும் பூதங்களையழித்து அங்கிசனுடன் போர்புரிந்து அவன் காளியமடுவிற்குதிக்கத் தானும் அதனுட்குதித்து அவனைக் கொன்று மீண்டனன். அவன் தம்பிடிபிகன் தமயனைக் காணாது கண்ணனைக் கேட்டுக்காளிந்தியிற்றேடிக்காணாது கரையேறிக் கண்ணனை நோக்கி நீயே என் தமயனைக் கொன்றாயென்றழுதரற்றி நாவைப் பிடுங்கிக்கொண்டிறந்தனன். இவ்வாறு அங்கிசடிபிகர்களிறந்தது கண்டு எல்லோருமகிழ்வுறக்கண்ணன் புட்கரசரசில் எய்தியதறிந்து நந்தனுமசோதையும் ஆயர்குழாங்கள் சூழ அடைதலும் கண்ணன் அகமகிழ்ந்து நந்தனையும் அசோதையையும் அடிபணிந்து ஆயர்களைத் தழுவி அளவளாவியிருந்து பழமை பேசி விடைபெற்றுத் துவரை அடைந்தனன். பின் மாதவன் மக்களுக்கு மணமுடித்து மனமகிழ்ந்திருக்கு நாள்களுள் ஒரு நாள் பானுசாம்பன் முதலினோர் வேட்டையாடச் சென்றவர் காட்டகத்துள்ள ஓர் பாழ்ங் கிணற்றில் ஓர் பெரிய ஓந்திகண்டு கயிற்றாற்கட்டி அனைவரும் இழுத்து வராதிருந்தமைகண்டு வீடுசென்றுகண்ணனிடம் கூறக்கேட்டுடனே தேரேறிச்சென்று அதன் வாலினைத்தொடலும் அவ்வுருமாறி அழகுறு பூருவ வடிவமுற்று நின்றானைக்கண்டுன் வரலாறுரையென அவன் கண்ணனை நோக்கி அடிபணிந்து தான் அயோத்தியில் அரசு புரிந்திருந்த சூரியவம்சத்தில் இக்குவாகு மன்னன் மகன் நிருகராசன் என்பதையும் தான் வைதி

சப் பிராமணன் ஒருவனுக்குத் தானஞ்செய்த பசு அவனைத்தப்பி தன்னிரை யடைந்ததறியாது அதை மற்றொரு வேதியனுக்கு கொடுக்க வேதியர் இருவரும் அதன்பொருட்டுக் கலாய்த்து ஒருபசுவையே இருவருக்குந் தானங்கொடுத்ததற்காகத் தன்னை ஓந்தியாமாறு சபித்ததையும் கட்டுரைத்து வணங்கிச் சென்றனன். பின் கண்ணன் அரண்மனை அடைந்திருந்து ஓர்நாள் உத்தவனைப்போசகட நகர்க்கனுப்பி உருக்குமின் பேத்தி உருக்குமி என்பாளைத் தன் பேரன் அநிருத்தனுக்குப் பெண்பேசி அலாயுதன் முதலினோருடன் அங்குசென்று மணமுடித்தனன். அக்காலையில் உருக்குமின் கலிங்க மன்னனோடு கலந்துபேசி பலராமனுடன் சூதாடி இருமுறையும் தோற்றும் தான் வென்றதாகக் கூறியதுமன்றிப் பலராமன் சூதிற்றோற்றிலேனென்று பொய்யும் கூறினனெனப் பறைசாற்றுமாறுரைக்கப் பனைக்கொடியோன் வெகுண்டு அக்கொடியோனைக்கொன்று கலிங்கனையும் அடித்துத் துரத்திவிட அஃதறிந்து வருந்திய பிராட்டியைத் தேற்றி உருக்குமினுக்கு உத்தரகிரியைகள் செய்வித்து அவன் மகனுக்கு முடிசூட்டி ஊரடைந்தனன். பின் துரியோதனன் மகள் இலக்கணை சுயம்வரத்துக்கு மற்ற அரசர்களுடன் சாம்பனும் சென்றிருக்க இலக்கணை அவனை விரும்பி மாலையிடலும் துரியோதனன் கோபித்து அவனையிழுத்துரையாடிச் சிறைப்படுத்த நாரதனால் அஃதறிந்து கண்ணன் வெகுண்டெழுந்தது கண்டு அலாயுதன் தடுத்திருத்தித்தான் அத்திபதியடைந்து அரவக்கொடியோனுடனயந்து பேசி அவனிணங்காமையால் அத்தினபுரத்தைப் பேர்த்துக்கங்கையில் வீழ்த்தப்புகுதலும் அரசர்களுடன் அரவக்கொடியோனஞ்சி விளைந்ததை வீடுமனால் அறிந்து அலாயுதனை அடைந்து பணிந்து அவன்கூறியபடி தன்னரிவையைச் சாம்பனுக்கு மணம்புணர்த்துப் பொருள்கள் பல சீதனமாகத்தர மகிழ்ந்து மைந்தனுடன் துவரை யடைந்தான்.

மாலோனுக்கு மூவடி மண்ணுதவிய மாவலி மைந்தர் நூற்றுவருட் தலைவனாய்ச் சிறந்த வாணாசுரன் கயிலையங்கிரியில் வீற்றிருக்கும் கண்ணுதற் கடவுளை வணங்கிப் பூசித்து யாவர் பொரினும் அரன் வந்து காக்குமாறு வரம்பெற்றுச்சோணிதபுரத்திற்கும் பாண்டமந்திரியுடனிருந் துலகாண்டு வருபவன் கயிலை யடைந்து காளகண்டனை இறைஞ்சித்தன் கைத்தினவுதீருமாறு போர் செய்வாரை யருளவேண்ட அது சோணிதபுரத்தின் சிகரத்திற் கட்டியுள்ள கொடிகீழ் வீழுங்காலத்து வாய்க்குமென்று வகுக்கக்கேட்டு மகிழ்ந்தூர் சென்றிருந்தனன். பின் அவன்மகளாகிய அழகிற் சிறந்த உடாங்கனை யென்பாள் நாடோறும் கயிலையெய்தி உமையவளுள்ள மகிழவீணையிசைத்து வருபவள் உருத்திரன் உமாசமேதனாக உறைவது கண்டு எனக்கோர் கணவன், எப்போதுவாய்க்குமோ என நினைப்ப, அம்பிகை அஃதுணர்ந்து உடாங்கனையை நோக்கி, நீ கனவில் ஓர் நாயகனைக் காண்குவை அவனே உன்னை மணப்பனெனக் கேட்டு மகிழ்ந்துதன திருக்கை சேர்ந்தவள் பொன்மணி மண்டபத்திற் மென்மலரமளி மிசைத்துயில் புரிகையில் ஓர் சோலையில் அரசிளங்குமாரனொருவன்றன் குழலிடை நன்மலர் புனையக்கனவு கண்டு விழித்து அக்குமரனைக் காணாது வருந்த அஃதறிந்த சித்திரரேகை பலர் வடிவங்களையும் வரைந்து காட்டி அவள் விரும்பிய மன்னவன் அநிருத்தனென்றறிந்து இரவிடைத் துவாரகை சென்று உருக்குமியுடனுறங்கு மநிருத்தமனைக்கொண்டுவந்து உடாங்கனையின் மணிமண்டபத்தின் மஞ்சமீது வைத்துடாங்கனையுடன் கூறக்கேட்டுச் சென்று அநிருத்தமனுடனே கூடிக்குலாவி யிருந்தனள். இதைச்சில காரியராலுணர்ந்த வாணாசுரன் தன் மகள் மனையிலிருக்கும் மானிடனைச் சிறைப்படுத்துங்கள் என்று சிற்சில படைவீரர்களை அனுப்ப அவர்கள் அவ்வநிருத்தனுடன் போர்க்காற்று திரிந்ததறிந்து வாணன் தானே சென்று நெடுநேரம் போர் புரிந்து அவனை வெல்ல முடியாமல் கும்பாண்ட மந்திரி கூறியபடி மறைந்து நின்று நாகபாசத்தாற் கட்டிச் சிறைப்படுத்தினன். அங்கே துவாரகையில் சித்திரலேகைஅநிருத்தமனை எடுத்துக்கொண்டு வந்தபின் உருக்குமி விழித்துக் கணவனைக்காணாதரற்றக்கேட்ட உருக்குமிணி முதலிய பலரும் அழுதிடக் கண்ணன் தேற்றி அநிருத்தமனையாவர் கொண்டு சென்றிருப்பினு மீட்டு வருவோமென்று வெகுண்டுரைத்த சாத்தகி முதலினோர் சொற்கிசைந்து நாரத முனிவர் வாணாசுரன் அநிரு

தர்மனைச் சிறைப்படுத்திய இறுதியாகிய செயல்களை யுரைக்கக் கேட்டு, அலாயுத
னும் சாத்தகியும் மைந்தர்களும், சேனைகளும் சூழச்சென்று வாணன் கரங்களைத்
துணித்து அரன் வேண்டியபடி நாற்கரம் விடுக்க வாணன், கண்ணன் கான்மிசை
யிற்பணிய மகிழ்ந்து அவன் கூறியபடி உடாங்கனையை அநிருத்தனுக்கு மணம்
புணர்த்து மகிழ்ந்து துவாரகையடைந்து வப்புடனிருந்தனன். பின் ஓர்நாள் ரா
ஜசபையில் கண்ணன் வீற்றிருக்கையில் மகதனுற் சிறையிடப்பட்ட இருபதினுயிர
மன்னவரும் மகதனைக்கொன்று தங்கள் துன்பம் துடைக்குமாறு வேண்டி அனு
ப்பிய ஓர் தூதுவன் வந்து கண்ணனை வணங்கித்தான் வந்த வரலாறுரைத்துக்
கொண்டிருக்கையில் நாரத முனிவர் வந்து கண்ணனை வாழ்த்தித்தருமன் தந்தை
விரும்பியபடி இராஜசூயயாகஞ்செய்ய நினைத்து அறிவிக்குமாறு அனுப்பினமைகூ
றினர். அதுகேட்டு இந்திரப்பிரத்தமடைந்து தருமனுடன் கூறி வீமனையும், விசய
னையும் அழைத்துக்கொண்டு வேதிய வேடங்கொண்டு மகதனிடம் சென்று அவ
னிடம் போரிரந்து வீமனால் அவனைக்கொல்வித்து அரசர்கள் சிறைநீக்கி அவன்
மகனுக்குமுடிசூட்டித் தருமனது வேள்விக்குவருமாறு வழுத்திவிட்டு வீமனையும்
விசயனையும் அழைத்துக்கொண்டு இந்திரப்பிரத்தம் போய்ச்சேர்ந்தனன்.

பின் தருமன் வடக்கில் வாசவன் மைந்தனையும் கிழக்கில் வீமனையும் தெற்
கில் சகாதேவனையும் மேற்கில் நகுலனையும் விடுத்து நாற்றிக்கிலுள்ள அரசர்களை
வென்று திரைகொடெய்துமாறு செய்யப் பணிக்கவும் அவர்கள் சென்று அவ்வா
று புரிந்து வருதலும் மகிழ்ந்து மண்டலத்தரசர்களும் மாதவரும் வந்தபின் வேத
விதிப்படி வேள்வி தொடங்கித் திக்குபாலகர் முதலினோர் மகிழவேள்வியை முடி
த்தபின் அக்கிரபூசையை யார்க்களிப்பதென வினவ சகாதேவன் அது வாசுதேவ
னுக்கே வழங்கவேண்டு மென்றுரைக்கத் தருமன் மகிழ்ந்தது செய்யத் துணிதலு
ம் சேதிபனுகிய சிசுபாலன் கண்டு வெகுண்டு கண்ணனை இழித்துப்பல பிதற்ற
லும் அவன தாய் வேண்டியவாறு அச்சிசுபாலன் கூறிய இழிமொழிகள் நூறெ
ண்ணிப்பின் அவனைப் போருக் கழைத்து அவனுடன் சிறிது நேரம் போர் புரிந்து
ஆழியாலவன் கழுத்தரிந்து அவனுயிர் சோதியா யெழுந்து தன்னடியடையச்செ
ய்து தருமனால் வேள்வியினக்கிர பூசையேற்றினிதிருந்தனன். பின் தருமன் அந்த
ணர் முதலினோர்க்கு அளவில்லாப் பொருள்தந்து அனுப்பி மகிழ்ந்தினிதிருக்க ஐவ
ருடன் அஞ்சன வண்ணன் மகிழ்ந்தினி திருந்தனன். அக்காலைமுன் பிராட்டியா
ரைத்தேரேற்றிவருகையில்உருக்குமினுடன் கூடிக்கண்ணனுடன் போர்புரியவந்து
தோற்றோடிய சாலுவன் அரனை நோக்கித் தவம் புரிந்து வரம்பெற்றுச்சேனை பு
டை சூழத்துவரையடைதலும் அங்குள்ள மாரவேள் முதலினோரெதிர்த்துப்போ
ர்புரியும் தனிமையை தூதுவர் கூறக்கேட்டுக் கண்ணன் உடனே சத்தியபாமையு
டன் தேரேறித்துவாரகையடைந்து சாலுவனுடன் போர்புரிந்திருந்தபடியே அத்
தினபுரியில் அரவக்கொடியோன் ஆஞ்ஞையின்படி, அவன், அனுசன்செய்த மான
பங்கம் சகிக்கலாற்றாது. தன்னைக்குறித்தோலமிட்ட பாஞ்சாலிக்கு, ஆடையக்ஷய
மாக்கிப்பின், ஆழியேவிச்சாலுவன், முடிதுணித்தனன். பின் எதிர்த்துவந்த தந்
தவக்கிரனையும், அவன் தம்பி வீரேதனையுங்கொன்று, வசுதேவன் முதலினோரை
வணங்கி மகிழ்ந்திருந்தனன். சாலுவன் துவாரகை அடைந்தது கேட்டுக் கண்ண
ன் இந்திரபிரத்தம் விட்டு வந்தபின் அரவக்கொடியோன், ராசசூய யாகத்திற்குத்
தான்வந்து, நீரும் பளிங்குந்தோன்றாது தடுமாறியதுகண்டு துரோபதை நகைத்த
தைப்பற்றிப்பெரு வருத்தத்தை யுடையவனாய் ராசசூயத்தில் தான்கண்ட தருமன்
வாழ்வைப்பற்றிச் சகிக்காதவனாகச் சகுனியோடுகூடி யோசித்துக்கபடமாகப் பா
ண்டவர்களைத்திருதராட்டிரனால் விதுரனையனுப்பித்தருவித்து சகுனியோடுச்சூதா
டுமாறுசெய்து, தருமன் நாடுநகரங்களையும், உடன்பிறந்தாரையும், தன்னையும்,
மனைவியையும் பணயமாகவைத்துத் தோற்றுவிட, அரவக்கொடியோன் ஐவரை
யும் இழிவுபடுத்தி, அவரில்லாளாகிய துரோபதையை அவையிடை இழுத்து, மா
னபங்கப்படுத்த அப்போது உண்டாகிய, கெட்ட உற்பாதங்களையும் துச்சாதனன்
உரிந்தசேலை இடையறாது வளர்ந்ததுங்கண்டு, திருதராட்டிரன் அஞ்சி நாடுமுதலிய
தந்து ஐவரையும் அனுப்ப, அரவக்கொடியோன், பொறுக்காது மீண்டும் அழைத்

துக்காட்டிற் பன்னிரண்டு வருஷமும் நாட்டில் மறைந்து ஓர்வருஷமும் ஆகப்பதின்மூன்று வருஷமும் கழித்துவந்தால் நாட்டையுதவுவேன் என்று கூறிவிடுக்கத் தருமன், அன்னையை அத்திப்பதியி லிருத்தி அந்தணர் புடைசூழ அநுசருடன் துரோபதைவரக்கானகமடைந்தனன்.

அஃதறிந்து கண்ணன் காடுசென்று ஐவரையும் அவரில்லாளையும் தேற்றித் துவரையடைந்தனன். அதன்பின் ஐவரும் அந்தணர் சூழச்சென்று காசிபமுனிவர் ஆச்சிரமத்தையடைந்து வணங்கி, ஆசீர்வதிக்கப்பெற்று, மகிழ்ந்திருக்குநாளில், வியாசமுனிவர் அங்குவந்தனர். ஐவருமவரடியில்விழ, அவர் ஐவரையும் வாழ்த்தியபின் காசிபமுனிவர் அவரைநோக்கி, சந்திரகுலத்துவந்த குருகுலமரபு கூறுக என அவர் அரவக்கொடியோன் சூதாட, ஐவரையும் விதுரனால் அழைத்துவந்து வஞ்சச்சூதாடி வெல்ல ஐவரும் காசிபமுனிவர் ஆச்சிரமமடைந்த திறுதியாகிய குருகுலசரித்திரங்களைக்கூறக் காசிபமுனிவர் மகிழ்ந்துகேட்டார். பின் தருமன் எழுந்து வியாசனடிபணிந்து அரவக்கொடியோனால் எய்தும் இடர் ஒருவும் வழிகூறுக எனலும் வாதராயணர் அன்போடுநோக்கி தக்கன் மகத்தையழித்த சிவபிரானைக்காணி னற்கணையீவனென்றார். பின்; தக்கன் மகங்கெடுத்த வரலாற்றை அம்முனிவர் பிரான் கூறக்கேட்டு மகிழ்ந்து அவர்மொழிப்படி, அரனை நினைந்து தவம்புரியுமாறு அருச்சுனனைக்கயிலைக்குவிடுக்க அவனும் அங்குசென்று விபூதிருத்திராக்கதாரியாய் ஒருமைமனத்துடன் பரமசிவனைநோக்கித் தவம்புரிந்து பாசுபதாத்திரம்பெற்று அமரர்கோன் விரும்பியபடி அமருலகெய்தி இந்திரன் வேண்டியவாறு தேரேறிச்சென்று அசுரரைவதைத்துவந்து அரியாசனத்திலிந்திரனுடன் சரிபெறவிருந்து மவுலிசூட்டப்பெற்று ஊர்வசி நடனங்கண்டு மகிழ்ந்து கோயிலிடையடுத்துச் சென்றுரங்குவானிடை இந்திரன் சொல்லியபடி அவ்விடை வந்த உருப்பசிக்கு இணங்கானாய் அவள் சாபத்தாற்பேடியாகிப்பின் இந்திரன் கூற்றுக்கிணங்கி உருப்பசி அவ்வடிவை அகற்றலும் கரந்துறையும் காலத்தெய்திக்கழியவருளென்ன அவள் அவ்வண்ணமேயருளினாள். பின்பார்த்தன் பாண்டுவைக்கண்டு உரையாடி மகிழ்ந்து தன்பிரிவுபற்றி வருந்தி வியாசரால் தேற்றப்பட்டிருந்த தருமன் முதலினோர் முன்சென்று மகிழ்ந்திருந்தனன். பின் வீமன் பாஞ்சாலியின் பொருட்டு சுகந்திய மலர்கொண்டுவர அளகாபுரி செல்லும்வழியில் மாருதியைக் கண்டு பின்நடக்கும் பாரதயுத்தத்தில் பார்த்தன் தேரின்மீதிருந்து காக்குமாறுவரம்பெற்று அளகாபுரியடைந்து தடுத்தாருடன் போர்புரிந்துவென்று மலர்பறித்து வந்து பாஞ்சாலியின் முடிசூட்டினன். பின்பொருநாள் அவள்விரும்பியபடி பாரிசாத மலருங்கொணர்ந்து தந்தனன். பின்பொருநாள் வீமன் மாதவசியொருவன் அருந்துமாங்கனியைக்கொய்துவிடத் தருமன் முதலினோர் அத்தவசி சபிப்பானேயென்றஞ்சும்போது அஞ்சனவண்ணன் அடைந்து ஐவரையும் அவரில்லாளையும் தத்தமுள்ளத்துள்ளதைக்கூறுமாறுரைக்க அவருமவ்வாறேகூறக் கனிமுன்போல் மரம்பொருந்தியது. அத்தினபுரியிலரவக்கொடியோன் ஆயிரம்வித பதார்த்தங்களுடன் துருவாசமுனியையுண்பித்துக் காட்டிற்சென்று தருமனிவ்விதமுண்பியானேல் சபித்தேகுதி என்று வேண்ட முனிவனிசைந்துவந்து தருமனை நோக்கிப் பொற்கலத்தின் ஆயிரம்வருக்க பதார்த்தங்களுடன் அன்னமளியாயேல் சபிப்பனென்றுரைக்க முனிவனை நீராடி வருமாறு வேண்டவுமவன் நீராடிச் சென்றனன். சென்றவுடன் ஐவரும் வருந்தி யஞ்சனவண்ணனை நினைத்தலும் அவனும் உடனேவந்து காரைச்சாகம் இஞ்சிமேதிநத்தியிலைகளுடன் அன்னத்தை பூனுவிலையில் முனிவனுக்கிடுதலும் ஊனுவிலைபொற் கலநிகர்த்ததென்பதும் காரையிஞ்சி தயிர் இவை யாயிரம் பதார்த்த சமமாமென்பதும் உணர்ந்த துருவாசன் அன்புடனருந்திச் செல்ல மகிழ்ந்தினிதிருந்தனர். பின் துரியோதனன் சித்திரசேனனால் கட்டுண்டு செல்வதை பானுமதியின் அழுகையாலறிந்து தருமன் வீமன் மறுத்தலும் விசயனைப் பணிக்கவவன்சென்று மீட்டுவந்தனன். தருமனால் தலைதப்பிச் செல்கின்ற துரியோதனன் தன்னைநோக்கித் துரோபதை நகைத்ததுபற்றிவருந்திச் செல்பவனைக்கண்டு சயித்திரதன் தான் துரோபதையைப் பற்றித்தருவேன் என்று கூறிக் காட்டில் வந்து சமயம்பார்த்து அவளைப்பற்றித் தேர்மேன்மீடலும் பீ

மன் ஓடிவந்து உதைத்து தலையில் ஐஞ்சிகையாக்கி இழுத்துவந்து தருமன்முன் விடுதலும் அவன்விடச்சொல்ல மார்பினமோதி விடுத்தான். பின் சிந்துபதி சிவனைநோக்கித் தவம்புரிந்து ஒருதினத்தில் மட்டும் ஐவரைச் செயிக்குமாறு வரமும் தண்டும் கொன்றைமாலையும்பெற்று அத்தினபுரியடைந்து நடந்தவற்றை யுரைக்கக்கேட்டுத் துரியோதனன் காளமா முனிவரைக்கூவி அபிசாரயாகஞ்செய்து ஓர் பூதத்தை எழுப்பிவிட, அது காட்டிற் புகுமுன் கண்ணன் திருவருளால் ஐவருமிறந்துவிடக் கண்டு, அப்பூதம் வெகுண்டுசென்று, காளமாமுனியையே கொன்று சென்றது.

பின் ஐவரும், நடுவனால் உயிர்பெற்றார்கள். இவ்வாறு பன்னிரண்டுவருஷ முங்கழிய ஐவரும் விடஜலம் பருகி யிறந்தார்களென்று கூறுமாறு அந்தணரைவிடுத்துவிட்டு, ஐவரும் அவரில்லாளும் மாறுவேடம்பூண்டு விராடநகரில் வதிந்தனர். அங்கிருக்குங்காலையில் துரோபதையின்மீது காதல்கொண்ட கீசகனையும் அவனுடன் பிறந்தாரையும் வீமன் வானுலகத்தேற்றினன். மாடுபிடி சண்டையில் வெற்றிகொண்டபின், மறைந்து கழிக்கவேண்டிய ஒருவருஷமுமுடிய வெளிப்பப்பட்டு, தங்கள் நாடுதருமாறு உலூகனைத் துரியோதனனிடமனுப்பி யவனிசையாமையை யறிந்து வாசுதேவனைப் படைத்துணைபெற்றுத் தருமன் கண்ணனையும் ஒருமுறை தூதனுப்பினன். கண்ணனும் அத்தினபுரியடைந்து விதுரன் மனையிற்றங்கி மற்றைநாள் துரியோதனன் அவையிடைச்சென்று ஐவர்க்காக நாடிறந்து அதற்கவன் சிறிதுமிசையாமையையறிந்து குருக்கேத்திரத்தில் ஐவருடன் போர்க்கு வரக்கையறைந்து தரவேண்ட அவன் வெகுண்டுரைத்த புன்மொழிகளைக்கேட்டு இளநகைபுரிந்து அவை ஒரீஇவிதுரன் மனையடைந்திருந்து அவன் தன்வீட்டில் கண்ணனுக்கிடந்தந்து பசரித்தது பொருளாய்த் துரியோதனன் வெகுண்டுரைத்த பழிமொழிக்காற்றாது விதுரன் வில்முறித்தெய்தியதை, அவனால் உணர்ந்து மகிழ்ந்து அன்றிரவிற் பொய்யாசனம்வகுத்துத் துரியோதனன் மற்றைநாள் தூதுவரால் அழைப்பிக்க அங்குசென்று அவ்வாதனத்தின் மீதிருந்துவீழ்ந்து விசுவரூபமெடுத்து உள்ளிருந்த மல்லர் முதலாயினாரை வதைத்துப் பின்பலரும் வணங்க முனிவுதவிர்ந்து அவ்வவைவிட்டு வெளிப்படும்போது அசுவத்தாமனை அரவக்கொடியோன் நம்பாவண்ணம்செய்து கண்ணன் கவசகுண்டலங்களை இந்திரனந்தணவடிவங்கொண்டுகவரவும், கண்ணன் மைந்தன் என்பதைக் குந்திக்குணர்த்தி அரவப்படை ஒருமுறையன்றி மறுமுறையெய்து அருச்சுனனைக் கொல்லாவண்ணம் வரம்பெறவுமியற்றி விராடபுரியடைந்து வியாளகேதனன் கூறியதை ஐவரிடம் அறைந்து மகிழ்ந்தனன். பின் துரியோதனன் களப்பலியூட்ட நியமித்திருந்த அமாவாசியைக் கண்ணன் முன்னையநாளாக்கி அன்று அரவானை பலியூட்டுவித்து ஏழக்குரோணி சேனையுடன் விராடபுத்திரனாகிய சிவேதனைச் சேனாபதியாக்கி ஐவருடன் குருக்கேத்திரபூமி சென்றனன்.

அன்று குருக்கேத்திரத்தில் கூடியிருந்தவர்களை நோக்கி இவ்வளவுபேரையும் நாம் கொலைபுரியவேண்டுமே யென்றெண்ணி மயங்கிய அருச்சுனனுக்குக் கீதையுபதேசித்துத் தேற்றிப் போர் புரியச் செய்தனன். அற்றைநாளில் அருஞ்சமர்செய்து துரியோதனனுடைய சேனைபதினொலக்குரோணியில் நாலக்குரோணி சேனையையழித்து ஐவருடைய ஏழக்குரோணியுடன் சமமாக்கிய சிவேதனை வீடுமன் வஞ்சித்துக்கொல்ல மற்றை நாள் பாஞ்சாலன் மகன் துஷ்டத்துய்மனைச் சேனாபதியாக்கித் தருமன் போர் புரிந்தனன். பின் மூன்றா நாள் வீடுமன் வலிய போர் தொடுக்கப் பார்த்தன் வாளாவிருக்கக் கண்ணன் அரவக்கொடியோனுடன் அன்றுரைத்த மொழிதவறி ஆழிகை எடுத்துத் தேரினின்றும் இறங்கிச்செல்ல அதுகண்டு தேரிழிந்து வீடுமன் வணங்க மகிழ்ந்து கண்ணன் தேரேறினன். பின் பத்தாநாள் பரியந்தம் இருதிறத்தார்க்கும் போர் நடந்து அத்தினத்தில் அரவக்கொடியோன் சேனாபதியாகிய வீடுமன் வீழ்ந்து விட அடுத்த நாள் முதல் துரோணன் அச்சேனைக்கு அதிபதியாயமர் நடத்திவந்தனன். பதின்மூன்றாநாளில் துரோணன் முதலினோர் சூழ்ந்து சயித்திரதனால் அருச்சுனன் மகன் அபிமன்னுவைக்கொன்றுவிட அருச்சுனன் அஃதறிந்து மற்றை நாள் அத்தமிக்குமுன் அச்சிந்துபதி சிரங்

கொய்யாவிடில் தீவிழ்வனென வஞ்சினம் கூறுதலும் கண்ணன் தன் மைத்துனனாகிய பார்த்தனை கயிலைக்கழைத்துச் சென்று அரனருள் பெறுவித்தழைத்து வந்து பதினான்காநாள் சாயுங்காலத்தே கதிரவனை ஆழிகொடு மறைத்து அருச்சுனனால் செயித்திரதனையும் அவன்றந்தையையும் கொலைபுரிவித்தனன். பின் கண்ணன் பதினைந்தாநாள் துஷ்டத்துய்மனால் துரோணனிறக்க அவன் மைந்தன் அசுவத்தாமன் வெகுண்டெய்த நாராயணாஸ்திரத்திற்கு ஐவரைத் தப்புவித்து பதினாறாநாள் சேனாபதிப்பட்டம்பெற்ற கர்ணன் அன்று பெரும்போர் செய்து மற்றைநாள் சல்லியனைத் தேர்ச்சாரதியாகப் பெற்று மகா உக்கிரத்துடன் போர் புரிந்து நாகாத்திரத்தைப் பார்த்தனுடைய கண்டத்திற்படுமாறு குறியிட்டு எய்கையில் தேரைப் பூமியில் அழுத்தமிழ்வித்தனன். பின் வேதிய வேடம்பூண்டு கர்ணனிடம் சென்று அவன் செய்துள்ள தர்மங்களைத் தானமாகப்பெற்று அவனுயிர்போக்கி பின் ஐவர்க்கும் உண்மை கூறி அவர்களுடன் தானும் அழுதிருந்தனன். பின் பதினெட்டாநாள் சேனாபதியான சல்லியனை அன்று தருமன் கொன்றுவிடத் துரியோதனன் கண்டு அங்குதேரைவிட்டு விட்டுக்காட்டிற்சென்று ஓர் மடுவின் மூழ்கி இறந்தவர்கள் பிழைக்கும்படி தனக்கு இந்திரன் கூறிய மந்திரத்தைச் செபித்திருக்கையில் அசுவத்தாமன் துரியோதனனைத்தேடி வந்து மடுவின் கரையில் நின்று பலவாறு கூவிக்கூவிப்பார்த்து அவனை அங்கில்லையென்று நினைத்து வீடுமனிருக்குமிடம் சென்றான். துரியோதனனொழித்தொழிந்த தம்பியரைவானேற்றிய வீமன்போர்க்களமெங்குந்தேடி அரவத்துவசனைக்காணாது ஒற்றரால் அறிந்து மற்றவர்களுடன் மடுவின் கரையடைந்து பலநிந்தைகூறி அத்தண்ணீரிலிறங்கிக் கலக்கப்புகத் துரியோதனன் மந்திரமறந்து கதையுடன் கரையேறி என்னுடன் போருக்கு வருவாராரெனக்கண்ணன் அவனைநோக்கி உன்னிளைஞரெல்லாரையும் கொன்ற வாயுசேயுடன் போர் செய்யென இசைந்தான். இருதிறத்தாரும் போர்புரியச் சமந்தபஞ்சகத்திடையுற அக்காலைமுன்றீர்த்த யாத்திரை சென்ற பலராமனும், விதுரனும், ஆண்டுற அவர்களடியில் அரவத்துவசன் தருமன் முதலினோர் பணியக் கண்ணன் அண்ணனை வணங்கித்தன்னை வணங்கிய விதுரனை வாழ்த்திமகிழ, விதுரனும், பலராமனும் நாடு தந்து வாழுமாறு துரியோதனனுக்குரைக்க அவனிணங்காது போர்செய்ய அவனை வீமன் அடித்து வென்று வீழ்த்தினான்.

வீமனாலடியுண்டு வீழ்ந்து சாகுந்தறுவாயிலிருந்த துரியோதனனிடம், கண்ணன், தருமன், பால்வண்ணன், விதுரன், இவர் வரத்துரியோதனன் கண்ணனை வணங்கி உன் பெருமையறியாத என்னைக்காரணமாகக்கொண்டு எல்லாரையுமழித்த தேவா? என் பாவமகற்றுவதுன் பாரமென்றோதித் தருமனை நோக்கி என் தாய்தந்தையரை ஆதரி என்று சொல்லிப் பால்வண்ணனை வணங்கி விதுரனைநோக்கி நான் வைத சொல்லைப் பொறுத்தி யென்றுரைத்து விடைகொடுத்தவர்களை யனுப்பினான். பின் அசுவத்தாமன் அமர்க்களத்தில் துரியோதனன் வீழ்ந்து விடக்கண்டமையறிந்து சென்று அவனனுமதி பெற்று அவ்விரவிற் கிருபையுடன் பாசறை சென்று அங்கு காத்திருக்கும் பூதத்தை வெல்லமாட்டாது அரனருள் பெற்று மீண்டு சென்று அதனுள் உரங்குகின்ற துட்டத்துய்மன் முதலினோரைக்கொன்று ஐவர் அங்கில்லாமையறியாது அவர் மைந்தர்களை அவர்களென்றுன்னித்தலையறிந்து கொடுசென்று ஐவர் முடிகொணர்ந்தேனென்று துரியோதனனிடம் புகல அவன்பார்த்து அந்தோ அவர் மைந்தனைக்கொன்று வந்தனையே என்மீது வீண்பழிசுமத்திய முனிவனே, நீ நின்னிருக்கை செல்தி யென்றனுப்பித்தன் குலத்துமைந்தர்கள் மடிந்தார்களேயென்று மனம் வருந்தி உயிர்துறந்தான். அசுவத்தாமனும் அந்தோ அறிவிலாதென் செய்தோமென்று வருந்திப் பாரத்துவாசன் ஆச்சிரமடைந்தான். முனிவராச்சிரமமடைந் துரங்கிய பாண்டவரும் பாஞ்சாலியும் பரந்தாமனுடனெழுந்து இரவிற்பாசறையினடந்தவற்றைத் தூதுவர் உரைக்கக்கேட்டு வருந்தி பாசறை யடையப் பாஞ்சாலி தன் மைந்தரு முன்னோனும் மடிந்ததுகண்டு மனஞ்சகியாது இவரை இரவிடைக்கொன்ற அசுவத்தாமன் முடியை யறுத்து என் தாளால் மிதிக்காவிடிற் றீப்புகுவேனென்றுரைக்கப் பார்த்தனும் பங்கயநாபனும்தேரேறிப் பாரத்துவாசனிருக்கையடைந்து வணங்கி வாழ்த்தப்பெற்று நடந்

தனவற்றைக் கண்ணன்கூற அசுவத்தாமன் உடனே வெருண்டு தேரேறி அபா
ண்டவமென்று அயன் படையைவிட அருச்சுனனும் அஃதெய்ய இருபடையும்
பெரும்போர் செய்யத்தேவர்களஞ்சி அருள்செய்யுமாறு கண்ணனை வேண்ட அவ
ன் இருவரையும் போரொழிக்குமாறுரைத்து அயன்படை அழைத்துக்கொள்ளுமா
றுரைக்க உடனே அருச்சுனன் தன்னதை மீட்டதுகண்டு அசுவத்தாமனை நின்ன
தையகற்றுதியென, யான் அகற்றவறியேனென்று கூறவு முத்தரை வயிற்றுக்க
ருவிதற்கிலக்கென்றேதிக் கண்ணனகைத்தனன். பின்பார்த்தன் பலபசழியேவி
யவன்றோரதி யழித்து நாகாத்திரத்தாற் பிணித்துத்தருமனிடம் கொண்டுவிடமா
யவன் அறன்சுதனை நோக்கி இவ்வசுவத்தாமனைக்கொல் என வாயுபுத்திரன் அது
செய்யப்புகத் துரோபதையது கண்டிறைஞ்சி வீணே இவன்றாயும் என்னைப்போல்
வருந்துவதிற் பயனென்னையென்று தடுப்ப உதிட்டிரனும் அவ்வாறேகூற விசயன்
மார்பில் மோதிப்போதி என்றுவிடுத்தான். பின் அசுவத்தாமனெய்த பிரமாத்தி
ரம் அபிமன்பாரி வயிற்றிற்சென்று கருவைக்கலக்கப் பங்கயநாபன் அங்குட்டவடி
வாய் அவளுதரத்திருந்து காத்தான் பின் அக்கருப்பிண்டம் நிலன்வீழ உத்தரையு
ம் மற்றோரும் மனம்வருந்தக் கண்ணன் அவர்களைத்தேற்றி இப்பிண்டத்தை பெ
ண்மயலில்லார் யாரேனும் மிதித்தால் நற்குமரனுமென்று நவின்று தானினைக்கு
முன்னடந்த மாதவரைநோக்கி மாதரிடத்து மனம் வையார் இதனை மிதியுங்களெ
ன்ன அவரொருவருமிசையாராக மாதர்தோள் புணர்ந்து மைந்தரைப் பெற்றிரு
ப்பினும் அவர் மயலாழாதவன் தானேயென்றுரைத்து அக்கருப்பிண்டத்தைமிதி
க்க அது ஓர் சிறந்த குமரனாய்ப் பிறந்தது. அதுகண்டு, மாதவரும் பாஞ்சாலி
யும் மனமகிழ்ந்திட அம்மைந்தனுக்குக் கண்ணன் பரிட்சித்து எனப் பேரிட்டன
ன். பின் தருமன் வானடைந்த வீட்டுமன் வியாளசேதனன் முதலிய சுற்றத்தா
ர் பலர்க்கும் தவுமியன் செய்வித்தபடி உத்திரக்கிரியை செய்வித்து அத்திப்பதிய
டைந்து கண்ணனால் முடிசூட்டப்பெற்று அரியாசனத்தேற மகிழ்ந்தினிதிருந்த
னன்.

கண்ணன் துவாரகையடைந்து தந்தை தாயரைவணங்கித் தேவியர் புடை
சூழ மகிழ்ந்தினிதிருந்தனன். பின் கண்ணன் மிதிலைமன்னன் வெகுலாசுவ மன்
னனுக்கும் சுருதி தேவனுக்கும் ஏககாலத்தில் தெரிசனந்தந்து கதியுதவிவந்து செ
ல்வம்வேண்டிவந்த குசேலமாதவனை அன்புடனுபசரித்து மகிழ்வுற விருந்தான்.
பின்பொருநாள் கண்ணன் வேள்விசெய்ய நினைத்து முனிவர் பலரைவரித்து பா
ண்டவர் முதலினோர் வருதல்கண்டு மகிழ்ந்து மகத்திற்குக்கடைந்த மாதவரைவண
ங்கி மகத்தினைத்தொடங்கப்போமுன் ஓர் வேதியனடைந்து தன் மனைவிபெற்ற பி
ள்ளைகள் மூவரும் பிறந்தவுடனந்தரமாய் மறைந்ததுகூறி தன்மனையாள் அப்போ
து கொண்டிருக்கும் கருவும் அவ்வாறு ஆகாவண்ணம் பாதுகாக்காவிடி லுயிர்துற
ப்பேனென்று மாயனுடன்கூறப் பார்த்தன் பார்த்துப் பிரசவகாலமென்னுடனுரை
நான் காப்பேனென்றுரைத்தனன். அதுகேட்டுச் சென்றமறையவன் மனைவியின்
பிரசவ காலமறிந்து வந்துரைக்கப் பார்த்தன் பாசுபதாத்திரத்தாற் காக்கவும்
சனித்த பிள்ளையுடலோடுஞ் சேணிடைப்பெயர்ந்தது கண்டு மறையவன் வருந்திப்
பார்த்தனை யிகழ்ந்து மாயவனுடனுரைக்க அவன்கேட்டு அருச்சுனனுடன் தேரே
றி வேதியனையு மழைத்துச்சென்று எல்லாவுலகமுங்கடந்து அங்கேயிருவரையும்
யிருத்தித் தத்துவமூர்த்தியிடையடைந்து வேதியச்சிறுவரைவேண்ட அம்மூர்த்தி
யங்குள்ள மாதர்காணுமாறு கண்ணன் பூமியிற்செய்தவற்றை நடித்துக்காட்டுகவெ
ன அவ்வாறே செய்து வேதியச்சிறுவரையும் பெற்றுவந்து அந்தணனுக்குதவிய
வந்தணனையும் அருச்சுனனையுமழைத்துக்கொண்டு ஏழு நாழிகைக்குமுன் துவரை
யடைந்து வேள்விமுடித்து மகிழ்ந்து வந்தோரையெல்லாம் உபசரித்தனுப்பி மகி
ழ்ந்திருந்தனன்.

பின்பு பாரந்தீர்க்கப்பிறந்தகண்ணன் யாதவகுலத்தாரையழிக்க நினைத்து மு
னிவரைவருமாறுன்னுதலும் அவர்கள் புண்டரீகாச்சிரமத்தெய்துங்காலையில் அரி
திருக்குமரர்கள் சாம்பனை ஓர் கருவுற்ற மாதாகப்புனைந்து அம்மாதவரிடம் அழை
த்துப்போய் இம்மாது பெறும்பிள்ளையாணோபெண்ணோ அறைமின் என்றுவினவ

அவர்கள் வெகுண்டு இவள் பெறுவது உங்கள் குலத்தையழிக்குமிருப்புத்தடியென்றார்கள். உடனே ஓரயத்தடி சாம்பன் வயிற்றினெழக்கண்டு அஞ்சியோடி உக்கிரசேனனிடமுரைப்ப அவன் அதை அராவி அதன்முனையோடு கண்ணன்கூறியபடி கடலிடையிடுவித்தனன். அவ்வயப்பொடியெல்லாம் வாட்கோரையாய் முளைத்தன. அயத்தண்டின் ஓர் நுனியை விழுங்கிய மீனை ஓர்வேடன் பிடித்துப்பிளந்து அதனுட்கண்ட அயத்துண்டை கணைநுதிக்குப்பியாயமைத்து காட்டிற்றிரிந்தனன். பின் நாரதமுனி பலநாளாகத் துவரையிலிருப்பதுகண்டு கேட்ட வசுதேவனிடம் நாரதன் தனக்கு ஒருநாளுக்கதிகமாக ஓரிடத்திலுமிராதவாறு சாபஞ்சேர்ந்தவரலாற்றையுரைத்து அவனுக்குக்கதிபெறுமாறுரைத்து சென்றபின் துவாரகையினுண்டாகிய கெட்ட உற்பாதங்களைக்கண்டு உத்தவன் கண்ணனை வணங்கி அனைவரையும் அழித்து நீ வைகுந்தம் அடைதியோவென்றுகேட்கக் கண்ணன் இத்துவாரகை இன்னும் ஏழுதினத்துட் கடலுண் மூழ்கும் இங்குள்ளாரெல்லாரும் இறப்பர். ஆதலின், நீ இங்கிராதே, வதரிகாச்சிரமஞ் செல்லென்றுரைத்துப்பின் அவன் விரும்பிக்கேட்ட இயமநியமாதிகளை இன்னின்னவென்று விளக்கி வதரிகாச்சிரமமடைந்து பரோபகாரமாகவிருந்து தவம்புரிந்து கதியடையுமாறு கட்டுரைத்து விடுத்தனன். பின் கண்ணன் துவாரகையிலுண்டாகிய உற்பாதங்களைக்கண்டு, பலவித தானங்கொடுப்பது கருதிப் பிரபாசதீர்த்தத்துற்றுப் பலவகைத் தானமீந்து எல்லாருடனும் உபவாசித்திருந்து மற்றைநாள் பாரணைபண்ணியபின் சாத்தகியும் கிருதவன்மாவும் மதுவினைப்பருகி ஒருவரோடொருவர் போர்செய்து மடிய மற்றவர்களும் அயப்பொடியான் முளைத்தவாட்கோரையால் அடித்துக்கொண்டு போர்புரிவதுகண்டு கண்ணனும் அவனண்ணனும் தடுக்க அவர்கள் இவர்களோடெதிர்த்தாராகப் பாலவண்ணன் வாட்கோரையால் அவர்களெல்லாரையும் கொன்றழித்தனன்.

பின்பவன் அறிவுபெற்று யோகியற்றி அனந்தனாகி வைகுந்தமடைந்தனன், பின்கண்ணன் பூபாரந்தீர்ந்த தென்றோரரசமரத்து நிழலிலிருக்க அவன்கால் புருப்போற்றோற்ற முன் அயமுனையை அம்புமுனையாக்கொண்ட வேடன் அதனால் எய்ய அதுகாலின் பெருவிரலிலழுந்தத்தைத்தது. பின்பவ்வேடன் உண்மையறிந்து கண்ணன் கழலிணைபணிந்து எம் எருமானே நினக்கு இடர்புரிந்த என்னைக் கொலைபுரிதி என்றனன். கண்ணனீ அதுகேட்டுமகிழ்ந்து அவ்வேடனைக்கதியிடைச்செலுத்தினன். கண்ணன் அங்கிருப்பதறிந்து தேர்கொண்டுவந்த தாருகனைநோக்கி நீ உடனே என் தாய்தந்தையரிடம்சென்று எதுகுல வீரர்கள் வெகுண்டு ஒருவரோடொருவர் போர்புரிந்திறந்ததும் பால்வண்ணனும் நானும் வைகுண்டமடைந்ததும் சொல்லித்துவாரகை கடலுள்மூழ்குவதன்முன் அங்குள்ளாரை மதுரையிற்கொண்டுபோய்விடுத்து அநிருத்தன் மகனுக்கு முடிசூட்டுமாறு விசயனுடன் கூறு என்றுசொல்லிவிடுத்துத் தான் வைகுண்டமெய்தினன். அவன் கட்டளையிட்டவாறே தாருகன் சென்று வாசுதேவன் முதலினோரிடம் கூற அவர்கள்கேட்டுப்பெருங்கவலையடைந்து அழுதரற்றித் துவரைவிட்டுச்சென்றதும் துவாரகையிற் கடல்பரவியது.

போர்புரிந்திறந்த எதுகுல மன்னவர் பாரிமார்களெல்லவரும் தீவீழ்ந்துதத்தநாயகர்களுடனெரிந்தார்கள். அனந்தனும்பதவி யடைந்த அலாயுதனை அகத்திடையிருத்தி ரேவதி முதலாந்தேவியர் எரியிடை வீழ்ந்து கதிபெற்றார்கள். உருக்குமிணி முதலிய பதினாறாயிரத்தொருநூற்றெட்டு மடந்தையரும் மாதவனை மனத்திடை நினைத்து தீவீழ்ந்து ஓர் வடிவங்கொண்டு வைகுண்டத்தெய்தி மாலுரத்தின் மன்னினர். உக்கிரசேனன் அரியடி நினைந்து யோகத்திலிருந்துயிர் துறந்தவனடியடைந்தான். அவ்வுக்கிரசேனன் மனைவியரும் கனலில் வீழ்ந்து சுரருலகத்தெய்தினர். சூரசேனன் சேயும் சுரர்முனியுரைத்ததியான யோகத்தால் தேவகியுரோகணியெனும் தேவியருடன் யாக்கையை நிலத்திடை வீழ்த்து அரியடியடைந்தனன். நந்தனுமசோதையும் நாரணன் செயலெல்லாம் நினைத்து யோகிலிருந்து கழியப்பின் விசயன் அவரை யெரியிடையிட்டு இறந்தோர்க்கெல்லாம் திலநீரளித்தனன். பின் விசயன் பிப்பிலத்தடி யெய்திக் கண்ணன் வீற்றிருந்திடுங்குறி கண்டு

அளவிலாக்கவலையுடன் கண்ணீராருப்பெருக ஆகியில் அரவக்கொடியோன் வாயுசேயைவதைக்குமாறு மடுவில் நாட்டிய வசியின்மேல் கண்ணன் அளியுடன் அளிவடிவாயிருந்து ஆதரித்தது முதலியசெயல்களையுன்னி யுன்னியழுதரற்றினான். பின் துவாரகையிற்றங்கிய விருத்தநாரியராதியருடன் மதுரை புகச்செல்லுகையில் வேடர்சிலர்வந்து அந்நாரியர்களைப் பற்றிக்கொண்டு வரையிடத்துச் சென்றார்கள். அவர்களை யெய்யுமாறு காண்டீபத்தை வளைக்கும் வலியுமற்றிடச்சண்டு விசயன் மெலிந்து மதுரையடைந்து அநிருத்தன் மகன் வச்சிரனுக்கு முடிசூட்டிக் கண்ணன் கழலிணைகளை கருத்துட் கொண்டனன் என்று இவற்றையெல்லாம் கூறியவந்த சுகமுனிவரை பரிக்ஷித்து ஐயுற்றுக்கேட்க, முனிவர் எல்லாவண்டங்களும் மாதவன் வயிற்றிலிருக்கின்றன வென்பதை மார்க்கண்டன் மாதவன் வயிற்றுட்சென்று கண்டகதையாலும் மாதவனடியார்கள் செல்வராகவுமாதவனடியார்கள் வறியராகவு மிருத்தற்குக் காரணம் மாதவன் அற்பர்களுக்கருளாமை யென்பதைவிருகாசூரன் கதையாலும் மாதவன் சத்துவகுண மூர்த்தியென்பதை பிருகுமுனிவர் மும்மூர்த்தியிடமும் சென்று சத்துவகுண முடையாரைக் கண்டறிந்தவற்றாலும் வகுத்துரைத்தனர். பின் பரிட்சித்து மன்னன் மகிழ்ந்திருந்து அம்முனிவனடி பணிந்து அனுப்பிவிட்டு அவர் உபதேசித்தபடியே இருந்து அரியடியடைந்தான். அது கண்டு அவன் மகன் சனமேசயன் அழுதரற்றி அவன் தேகத்தை வேதவிதிப்படி யெரியிலிட ஈமத்திற்சேர்க்க தக்ஷகன் விரைவிலடைந்து அவன் மேனியை விழியினாலெரித்தான். பின் சனமேசயன் அவனுக்கு எள்ளு நீருதவினான். பின் சனமேசயன் சிங்காதனத்தேறி செங்கோல் செலுத்துங்காலையில் ஓர் நாள் ஓர் வேடன் அரசவையுட்புகுந்து அடிபணிந்து அனுமதிபெற்று வேந்தே நான் வேட்டைநிமித்தம் காட்டிற் சென்று பறவைகள் வீழ்ந்தகப்படும்படி வலைகட்டிவிட்டு ஓர் ஆலமரத்தின் மீதேறியிருக்கையில் ஓர்வேதியன் அதனடியில் நிழலின்பொருட்டு வந்து நின்றானைத் தக்ஷகன் அந்தணவடிவங்கொண்டடைந்து எங்கு செல்கின்றாய் வேதியவென்ன அவன் பரிட்சித்து மன்னவனைப் பாம்புகடிக்க அது தீர்ப்பது கருதிச்செல்கின்றேனென்றானாக அவன்கேட்டு அந்தணனே தக்ஷகன் கடிக்கிற்றீர்க்கற்பாலையோ என ஆதிசேஷன் கடிப்பினும் தீர்ப்பேனெனலும் தக்ஷகன்வெகுண்டு தன் உண்மை வடிவம் எடுத்து இவ்வாலமரத்தைக் கடிக்கின்றனன் விஷத்தை யகற்றுதியென்று கடித்தவுடன் அம்மரமும் அதன் மீதிருந்த யானும் சாம்பராய்ப்போக அந்தணன் மந்திரித்து நீர்தெளித்ததும் அம்மரமும் பண்டுபோற்றுளிர்த்தது. நானும் உயிர் பெற்றேன். அதுகண்டு தக்ஷகன் அந்தணனை நோக்கி, ஓ, பிராமணோத்தமா? உனை வேதனும் நிகர்க்கிலன் வீணாக ஏன் முனிவன் சாபத்தைச்சீற்றுதியென்று அருமணிகள் உதவ அந்தணன் அவற்றைப் பெற்றுத் தான் செல்வுழிச் சென்றனன். பின் தக்ஷகன் வந்து நின் தந்தையைக் கடித்தானென்று காட்டிற் றான் கண்டது கூறக்கேட்டுச் சனமேசெயன் வெகுண்டு சர்ப்பயாக மியற்றக்கருதி முனிவர்களை வரித்து விதிவிழிப்படிய வியுதவிட நடுங்கி அரவினங்கள் யாகசாலையடைந்து குண்டத்திடை வீழ்ந்திறந்தன அட்டமா நாகங்களும் தம்மையும் ஆகுதிகடைந்து வெதுப்புதலும் லருந்தி அபயமிட்டு அமரர்கோன் ஆதனம் சுற்றிக்கிடப்ப முனிவர்களானஃதறிந்த மன்னன் இந்திரனொடு அரவினங்கள் ஈண்டுறுமாறியற்றுமினென்னலு மவர்கள் அவ்வாறியற்ற ஆகுதிகள் சென்று அமரர்கோனாதனம் பேர்த்து அவர்களுடன் அவனை யாகசாலையிடை யிழுத்து வருங்காலையில் அத்திகன் சனமேசெயனிடம் வரங்கிடப்ப இசைந்து அராக்களுடன் அமரர்கோன் உய்யுமாறு விடுத்து வேள்விமுடித்து சென்றனன். பின் ஓர் நாள் வேதவியாசர் சனமேசெயன் சபைக்குவர அவரடிபணிந் தாசனத்திலிருத்தி கண்ணன் பூபாரந்தீர்க்கப்பிறந்துளான் என்பது தெரிந்திருந்தும் குருகுலத்தவரமர்செய்யாவண்ணம் விலக்காதகொடும்வினை உனைச்சூழும் என்றுரைக்க முனிவர் பார்த்து வேந்தேவிதிவலி எவர்க்கும்விலக்கரிது ஆயினமையின் உனக்குவருகிறதற்கிருக்கும்பிரமகத்தியை நீக்கிக்கொள் என்றுரைததகல அரசன் அஞ்சித்தன்னியற்கை விடுத்து வேள்விசெய்திருந்தான். அக்காலை மந்திரஞ்செபித்துக்கொண்டிருந்த பிராமணர்களிலொருவன் கண்சிமிட்டிச்சோர்வதுகண்டு அவன் விழிப்படையுமாறு

தருப்பையாற்றட்டுதலும் அது அவன் மார்பிலேயிலாய்விழ அவன் மரித்தனன். துயினீங்குமாறு எறிந்திடுந்தருப்பை அயிலாயுருவமறை யோனிறந்ததுகண்டு விதிவலிகடத்தல் விரிசடைக்கடவுளுக்கு மியலாதென்பதறியாது முனிவர்பெருமானை இகழ்ந்தேனே என்று அவ்வினைக்குத்தீர்வு யாதென்று வருந்தினன். அக்காலையில் வியாசமுனிவரடைதலும் அவரடி பணிந்து மாதவ அன்று யான் கூறிய இகழ்மொழி பொறுத்து எனக்குற்றிருக்கும் பிரமகத்திக்கு தீர்வுரை என அது நின் குலத்தோர் சரிதையாகிய பாரதங்கேட்கிற்றீருமென மன்னன் அஃதுரையென முனிவர்பிரான் வைசம்பாயனரை நோக்கி நீ இவர்க்குப்பாரத சரித்திரம் பகர்தி என்று பழுவத்துற்றனன். பின் வைசம்பாயனர் ஆதிபருவ முதல் மகாவிந்த மிறுதியாக பாரதசரித்திரம்கூறினர் பின்பது விரும்பிக்கேட்ட மன்னவன் பிரமகத்தி நீங்கப் பெற்றுப்பின் அம்முனிவனால் பரம்பொருளின் தசாவதாரங்களைக்கூறக் கேட்டு மகிழ்ந்தினிதிருந்தான்.

மகாபாகவதச் சுருக்கம் முற்றிற்று.






விஷ்ணுமயம்.

# ஸ்ரீமகா பாகவதம்.

## இரண்டாம் புத்தகம்.

### ௭௯-வது உருக்குமணி தேவியார் திருக்கலியாணப் படலம்.

செருவடர்த்துயர்மீனறவிடையிறவேமணிசவர்ந்தளித்துமுன்சேர்ந்தெண்
ணரியநற்றவங்கண்டசுரனைவதைத்துப்பொறிவிந்தையிலக்கணைசித்தாங்
தெரிவைசாம்புவதிசத்தியவாமைபத்திரைகாளிந்திநேர்நூற்
றரிவையர்பதினாறாயிரத்தவரோடணைந்தமாலடியெமக்கரணே (க)

**வேறு.** மலையினையேந்தியவாசுதேவனார்
சிலையுறுநுதலியைச்சேர்வதின்றென
அலையுறுகடலெனப்பேரியார்த்திட
நலனுறவெழுந்தனர்நகருளாரரோ (உ)

கருமுகிலனையநற்கண்ணன்றோளினின்
மருவமர்குழலினண்மாலைசூட்டிடுந்
திருமணமின்றெனத்தேவரார்த்தனர்
தருமலர்சொரிந்தனர்தரணியெங்குமே (௩)

எதுகுலவிறைவனுக்கெழிலினாலுயர்
மதிமுகமடமயில்வதுவையாகவே
கதுமெனவலரிநீள்கங்குல்பாறநீ
ளுததியின்விளங்கினன்மறைகளோதவே (௪)

அருக்கனூர்குணதிசையிலகவாடக
முருக்கியதாமெனக்கிரணமோங்கவே
மருக்கமழ்குழலினுள்வதுவையின்றெனுந்
தருக்கினனெருக்கினர்தரணிமாந்தரே (ரு)

அறந்தருமுனிவர்களந்தணாளர்கள்
சிறந்தெழுமரசர்கடேர்கண்மாகரி
நிறைந்தெழுங்கடலெனநீளுமாநக
ருறைந்தனருலப்பிலருவகையோங்கவே (சா)

மாரனேபோன்றெளிர்வடிவுமிக்குயர்
வீரமேபொலிந்துளார்விரியுநன்மணித்
தேரின்மேலெழுந்துளார்குமரர்சீறிய
சூரர்வாடிலங்கிடநிறைந்துசூழ்ந்தனர் (எ)

கரியினில்வருபவர்காலவேல்சொடு
பரியினில்வருபவர்படைஞர்சூழ்ந்திட
வரியெனவிரதமேலமர்ந்துதோன்றுவார்
விரிகடலொலியெனமுழக்கம்விஞ்சவே (அ)

குந்தியநடையினர்குடையினர்குண்டிகை
முந்தியகையர்முப்புரிநூலினர்
அந்தணர்பொதுளினர்ஆதனமீதமர்
செந்திருவுறுமணங்காணுஞ்சிந்தையார் (கூ)

மயிலெனவுழையெனவருமினுமெனக்
குயிலெனவிரணியக்கொம்புமாமென
வயில்விழிவயங்கிடவன்னம்போலவே
செயலுறுநடையினர்கூடஞ்சேர்ந்தனர் (க0)

காலணிஞெகிழிகள்புலம்பக்கைவளை
யோலமினிசையுறவொளிகொண்மாமணி
நீலமுந்தரளமுநிறைந்தசொங்கையார்
வேலெனும்விழியினார்வீதிதுன்னினார் (கக)

காரணியுற்றநற்கமுகுநாட்டினர்
தோரணநிறைத்தனர்கதலிசூழ்ந்திடத்
தேரணியுற்றிடத்திகழும்வீதிகள்
பூரணபொற்குடம்பொலியவைத்தனர் (கஉ)

வால்வளைதழங்கிடவயங்குமாளிகை
நீலமுந்தரளமுநிறைந்தஞெள்ளல்வாய்
நாலிருதிசையினுநகைகொணன்மணி
மாலைகணிறைந்தனபரிதிமானவே (கங)

சாபமேபுருவமாய்த்தழைத்தவிந்திர
கோபமேயதரமாங்குமுதவாயினார்
தூபம்வான்முகிலொடுந்தொடர்ந்ததூயதாந்
தீபமாளிகைதொறுந்திகழவைத்தனர் (கச)

நீலவாரிதியெழுந்தவளநித்திலந்
கோலமாமணிகளுங்கோர்வையானநீண்
மாலையாயலர்திடவயங்குமாவண
மேலெலாந்தமனியவிதானமோங்கிய (கரு)

அடிபடுபேரிகைமுரசமியாவையு
மிடிபடமுழங்கினதிசைகளெங்கணும்
வடிவுடைமலர்மகளுறையுமாநகர்
கொடிகுடைதுதைந்தனகுழாங்களாகியே (கசு)

மின்னியகுருமணிவிளங்குகோபுரம்
பொன்னுறுதரளவேதிகைபொருந்தியே
துன்னியதுவரையம்பதிதுலங்கிட
கின்னரரின்னிசைகிளர்ந்ததெங்குமே (கஎ)

குங்குமங்கருப்புரங்குளிர்ந்தசந்தனம்
பங்கயவிதழ்ப்பனிநீர்பரந்திட
வெங்கணுநிறைந்தனரிடைகடள்ளுற
மங்குலைநிகர்த்தெழுமளகமங்கைமார் (கஅ)

பூணணிமுலையினர்பொழிந்தவாசநீர்
சேணிறைமழையெனச்சென்றுதேவர்கள்
காணவாண்டெழுந்துளிகலைநனைக்கவே
நாணினருருப்பசியுடனேநங்கைமார் (கக)

கோபம்விஞ்சிடங்கர்மாமடியவேகொடும்
பாபமிலிபமுய்யப்பண்ணும்பங்கய
நாபியன்னனினநற்றிருவைநண்ணிடச்
சோபனமொழிந்தனர்வீதிதோறுமே (உ0)

களித்தனர்புரவலர்கனகமாரியா
யளித்தனர்வறியவரரசராகவே
துளித்தெழுமழையெனத்தூயமாதரார்
தெளித்தனர்கமழ்பனிநீர்சிறக்கவே (உக)

இந்திரைமுகுந்தனுக்கெய்துமாமணம்
வந்ததுவெனவுளமகிழுமாதரார்
நந்தணிமுன்கையார்நத்தினோர்பெற
சிந்தினர்தரளமுமணியுஞ்செம்பொனும் (உஉ)

ஆடினர்விசும்புறையரம்பைநாணவே
பாடினரமிர்துகும்பண்ணின்வீணையாழ்
சூடினர்நறுமலர்துலங்குபொற்கல
னாடிமெய்யணிந்தனர்நகரின்மங்கைமார் (உங)

மலையெனுமுலையணிமணிகள்மின்னநற்
கலையணிமருங்கினர்காருறுங்குழ
லலைவுறவெழிலுறுமன்னமாமென
நிலமிசைநடந்தனர்நெருங்கியெங்கணும் (உச)

கன்னலுங்கதலியுங்கமுகுங்காருற
மின்னியநவமணிவிளங்குகோபுரந்
துன்னியகொடிமிடைதுவரைமாபதி
பொன்னகரழகினும்பொலிந்துதோன்றிய (உரு)

புளகமெய்யுறமலர்பொருந்தும்வாசநீர்
மிளிறுமொண்விழியினரடர்ந்துவீசவே
துளிகொளுமழையெனத்துலங்குமாபுரி
யளகையம்பதியினுமதிசயித்ததே (உசு)

சதமகனகரினுமளகைதன்னினும்
விதமுறுநவமணிவிளங்குமாநக
ருததியினுரகமேலொளிருமுத்தமன்
பதமெனவயங்கியபரவைசூழவே (உஎ)

ஈசனன்றுலகெலாமிரந்தவெண்டலை
காசினிதனின்விழக்கருணைசெய்தருள்
கேசவனுறுநகர்கிளர்ந்தமண்டபம்
வாசவன்மகிழ்வொடுங்கொணர்ந்துவைத்தனன் (உஅ)

வித்துருமந்துலாமரகதம்மிளி
ருத்திரம்வயிரமொண்பலகைபோதிகை
நித்திலமருகுதாணீலமாமணிப்
பத்திசெய்தூணிறைபசும்பொன்மண்டபம் (உகூ)

அலையுலாமார்கலியமருமச்சுதற்
குலகெலாமகிழவாசவனுற்றீந்ததா
மிலகுமாமணியெலாமிரவியேலவே
பொலியுமாமண்டபம்புகலலாவதோ (௩0)

தெண்டிரையுததியிற்சிறந்தமாநக
ரண்டர்கடுதிசெயுமமலனச்சுதன்
முண்டகன்றனையருண்முதல்வன்மேவிடு
மண்டபம்வயங்கிடும்வாயின்முன்னரோ (௩க)

சாசறுதமனியக்கால்களுட்டியே
மாசறவயங்கியமணிக்குடங்கள்சே
ரூசலினிலங்குசங்கிலியினேடொளி
வீசியமரகதப்பலகைமின்னவே (௩உ)

துவரையம்பதிதனிற்சுரர்களுயக
னவனியினிழிந்துவைத்தமர்ந்தமண்டப
நவமணியினங்கள்சூழசனண்ணிய
புவிமகளணிந்தபொற்கலனும்போன்றது (௩௩)

இனையனபொலிதருமெழில்கொண்மண்டப
மினையவுமரியபொன்னூசனின்றன
வனையவுமறைந்தனந்திருவொடாழியான்
வனைதல்செய்வதுவையின்வண்மைகூறுவாம் (௩ச)

மலருறையயனுநாமகளும்வந்தன
ரிலகியபசுபதியுமையோடெய்தின
னலனுறுபுலோமிசைவலாரிநண்ணின
ரலையுறுகடலெனவமரர்துன்னினர் (௩ரு)

கின்னரர்கருடகாந்தருவர்தங்கிளை
துன்னினர்தும்புருமகிழ்ந்துசூழ்ந்திட
மன்னினரியக்கர்கிம்புருடர்வான்மிசை
யுன்னுமுனடைந்தனருவகையோங்கவே (௩சா)

உருப்பசியரம்பைமேனகையோடும்பர்கள்
விருப்புறுதிலோத்தமைவிண்ணின்மாதரார்
பொருப்பெனுமுலையர்பாசிழைபொருந்திடக்
கருப்புரமலர்மணங்கமழவந்தனர் (௩எ)

புலத்தியனகத்தியன்பொலன்கொணாரதன்
நலத்துறுவசிட்டனல்வியாசனன்றிசேர்
பலத்துறுமத்திரிபராசரன்சுக
னிலத்துறுதவரெலாநிறையத்தோன்றினார் (௩௮)

தருமனீள்கதையினன்றனஞ்செயனய
மருவியநகுலசாதேவன்மாதவத்
தருணிறைகுந்தியோடமர்ந்துதோன்றினா
ரிருளகல்மணியுறுமிரதமீதரோ (௩௯)

மத்திரன்றுரோபதமன்னன்மற்றுள
மித்திரரிரதமாகரிகண்மேலுறு
மத்திரமுதலியபடைஞரார்த்தெழச்
சித்திரமெழில்கொள்வண்டுவரைசேர்ந்தனர் (௪0)

நந்தகோபன்றிகழசோதைநங்கைதன்
மைந்தனுங்கண்ணன்மாமலரின்மங்கையை
யந்தமாம்வதுவைசெய்யழகுகாணவே
முந்தினார்தமரொடுமுடுகுதேரின்மேல் (௪௧)

முல்லையினரும்பெனமுளைத்தபல்லினா
ரெல்லையிலுவகையாரெங்கள்கண்ணனு
நல்லியார்மலர்மினோடமருமாமண
மல்லல்கண்டிடவம்மினென்றுவந்தனர் (௪௨)

நறுநெய்பாறயிருடனயந்தவெண்ணெயோ
டுறிமிசையுண்டவனண்டரூருளோர்
நிறையும்வாரிதியெனநெருங்கிவந்தன
ரிறைவனீள்துவரைமாபதியினெய்தவே (௪௩)

கண்ணிநீள்சுழிகொள்கரமிவறிவேயூதி
யெண்ணிலாதவாவுடனிளங்கன்றுகளோய்த
வெண்ணெய்வாரியேவிழுங்கியவீரனைக்காண
நண்ணினார்துவராபதியாகியநகரின் (௪௪)

வேயினின்னிசைவிரும்பியும்வித்துருமத்தின்
வாயினல்லமுதருந்தியுமார்புறவணைத்துந்
தூயகண்ணனைநினைந்துளமயலினுற்றுவக்குண்
டாயமங்கையரனைவருந்துவரையினடைந்தார் (௪௫)

அந்தணாளர்கண்முனிவர்களரசர்களாயர்
நந்துசேருமுன்கையொளிர்நாரியர்பலரும்
வந்துளார்தமக்கருக்கியமாதனம்வழங்கிச்
சிந்தையார்வமெய்திடவிலங்கினன்வசுதேவன் (௪௬)

மகிழ்வினுலுபசாரங்கள்பலவுரைவழங்கிப்
புகழினுலுயரரசர்மாதவருடன்பொருந்தித்
திகழும்யாதவர்க்கிறைவனுந்தேவகிதானு
மிகழ்விலாதவிந்திரைவயினெய்தினரியல்பால் (௪௭)

அன்னமென்னடையமிர்துகும்பவளவாயழகார்
மின்னெனுமிடைமிளிருமைவிழியினள்விதர்ப்பன்
கன்னிதன்னைநன்மணம்புனைகோலமேகாண்பா
னுன்னுமுன்னம்வந்தரிவையர்திரள்களுமுவந்தார் (௪௮)

குங்குமங்கருப்பூரமுங்குளிர்பனிநீரும்
பொங்குகங்கையின்புனலொடுசந்தனம்பொருந்தச்
சங்குசெங்கையினேந்தினான்றன்னையேவிரும்பு
மங்கைபங்கயமடந்தைநீராடினள்மகிழ்ந்தே (௪௯)

ஏடறுமதுமலர்மிசையிருந்தமின்பனிநீ
ராடியேதகவாடகக்காழகமணிந்தாள்
சூடினார்கடிமலர்குழறுலங்கிடச்சுரும்பு
பாடியாடினஞிமிறுடன்பரிமளமுவந்தே (௫௦)

தண்டைநூபுரம்பரியகந்தாமரைமலரின்
வண்டுகானங்கள்பாடுமாறெனவிசைவழங்க
வண்டர்நாயகன்மனைவியாமமிர்துறுமணங்கின்
புண்டரீகமென்பதங்களினிலங்கினபொலிந்தே (௫௧)

மின்னுநாணுறமெலிந்திடுமிடையினில்விளங்கும்
பொன்னினாலவிர்பரந்தபூந்துகிலணிபொருந்தத்
துன்னுமாமணியினங்கள்செங்கதிரெனத்துலங்க
மன்னுமாழையினழகுறுகாஞ்சியும்வயங்க (௫௨)

விலையிலாதொளிர்வியாளமீன்மணிகளும்விளங்க
வலையுலாவியவாழியினமருநித்திலமுஞ்
சிலையுலாவியபுருவநற்கயல்விழித்திருவின்
முலையுலாவியேமுருகவிழ்மாலையோடிலங்க (௫௩)

அளகமேகமேயெனவிருண்டழகுறுமணங்கு
துளபமாலையான்றோள்புணர்மகிழ்ச்சியினிலங்கும்
புளகமாகியவிருதனப்பயோதரம்பொருந்தக்
களபமோடுகுங்குமமிழைத்தணிந்தனர்களிப்பால் (௫௪)

வாரைவிஞ்சிடும்மதக்கரிமருப்பெனவளர்ந்து
நீரினார்கமலத்தினன்முகையெனநெருங்குஞ்
சீருலாவியமுலையணிதரளமுஞ்சிவந்த
பூரியோர்பெரியோர்தனைச்சேர்வுறும்பொலன்போல் (௫௫)

நீலமாமணியினங்களுந்தரளமுநிறைந்து
கோலமாகியபசும்பொனின்கலன்களுங்குழுமி
யேலுமாண்புறவிலங்கியபூகமுநாண
வேலையோவியகோடெனக்கந்தரம்விளங்க (௫௬)

பணிபணாமகுடங்கொடுவளைந்தபண்பெனவே
மணிகண்மின்னியகங்கணமிருகையின்வயங்கப்
பிணையுநாணநீள்பெருந்தடவிலோசனிதோளி
ணிணையிலாதபொற்றொடியும்வாணிரவிபோலிலங்க (௫௭)

கழைகொடோளினூசலாமிரண்டுகாதிணையில
குழையினார்மணிக்குழுவொடுகன்னப்பூக்குலாவ
வழையின்றாதுராகம்மெனவயங்குசிந்தூர
மிழைகண்மின்னியவிளமுலையாணுதலிலக (௫௮)

அண்டர்நாயகன்றிருவுருவணங்குளநிறைந்து
மிண்டியேசிரமிசையினீள்பொலிந்தெனவிசும்பிற்
கொண்டல்கானகநிறைந்தெனக்குழுமுமெலோதி
வண்டறுமலர்ச்சிகழிகைமுடித்தனர்மடவார் (௫௯)

ஆயனுலிலையமர்ந்தவனச்சுதனனந்தன்
மாயன்மாதவன்வாமனன்வடிவினுன்மிகவும்
நேயமாகியமடந்தைதன்னெற்றியினணிந்த
தூயநாமமூன்ருரும்பிறையாமெனத்துலங்க (சுO)

அயிலைவென்றிருகுழையினையடர்த்துநீண்டகன்று
கயல்விரும்புறமிளிர்ந்துசெவ்வரிகருங்கலந்தே
மயர்வுறுங்களவின்ஞெடுவஞ்சகமொருவிச்
செயிறகன்றகண்ணிணையினிலஞ்சனந்திகழ (சுக)

மைப்புயற்கயல்விற்குமிழாம்பன்மாமதிபொன்
வெற்புநந்துமின்னரம்பைவேயிவையெலாங்கொண்டோர்
கற்பகக்கொம்புகதிர்மலரலர்ந்தெனக்கன்னி
நிற்குமற்புதங்கண்டநாரியர்கணெஞ்சுவந்தார் (சுஉ)

அந்தமாகியமறையவராசிகள்கூறக்
கந்தம்வீசியகருப்புரத்திப்முங்காட்டி
சிந்தையாரவேசோபனந்திகழ்வுறப்பாடி
வந்தமாதரார்மலர்மழைதூவினர்வணங்கி (சுங)

பறு. நித்திலப்பெணிறைமலர்க்காந்தளாங்
கைத்தலப்பெணருந்ததிக்கற்புப்பெண்
வித்தகப்பெண்விதர்ப்பனருட்பெண்ணல்
லுத்தமப்பெண்ணுருக்குமணிப்பெண்ணே (சுச)

மாதவப்பெண்மதிமுகப்பெண்மலர்
மீதினுற்றபெண்வித்துருமப்பெண்ணே
யேதமற்றபெண்ணிந்திரையாகும்பெண்
ணோதிமப்பெண்ணுருக்குமணிப்பெண்ணே (சுரு)

கன்னறெள்ளமுதாமொழிக்கன்னிகை
மின்னுமாபரணங்கள்விளங்கவே
பொன்னினூபுரம்பாதம்புலம்பிட
வன்னநாணவசைந்துநடந்தனள் (சுசா)

பாரிசாதநற்கொம்புபடிமிசை
சீரிதாநடைகற்குஞ்செய்கைபோ
லாரமாமணிநீலமலைந்திட
வாரிமீதெழுமாதடிபோர்த்தனள் (சுஎ)

நீலமாமணியம்பொனிறைந்தெழுங்
கோலமானவிமானங்குறுகியே
சீலமானசெழுங்கொடித்தேன்மலர்
மேலின்மாதெனவீற்றிருந்தாளரோ (சுஅ)

கொடிநிறைந்துகுடைகண்மிடைந்தன
விடிமுழங்கியபோலெழுபேரியோ
டடிபடும்முரசான்றனமாதரார்
படிநிறைந்துபல்லாண்டிசைபாடினுர் (சுகூ)

கவரிவீசினராலவட்டங்கையாற்
றுவரின்வாயினர்பற்றினர்சூழவே
யவனிதானிறையந்தணரும்முனித்
தவரும்வீதிநெருங்கினர்தள்ளியே (எO)

கோவினங்களுயக்குன்றமேந்தினு
ளுவியன்னவள்வந்தனளம்பொனி
னுவியம்முயிர்பெற்றதொத்தேயொளிர்
தேவிவந்தனளென்றபொற்சின்னமே (எக)

சங்கொலித்தனதாரைமுழங்கின
மங்கைநற்றிருவந்தனளாமெனப்
பங்கயத்திறைதேவர்சசிபதி
யெங்குமொய்த்தனரந்தரத்தெய்தியே (எஉ)

இந்திராணியெழிலுறுநாமகள்
வந்துவானிறைமங்கையர்தம்மொடுங்
கந்தநாண்மலர்க்கன்னியைக்கண்டனர்
சிந்தையாரமகிழ்ந்திவைசெப்புவார் (எங)

மலரின்மேலுறைமாமயிலோவரை
யலைகொளாழியமுதத்தெழுமினே
தலைகள்வீழத்தசக்கிரீவன்றனைச்
சிலையினலழித்தான்றிருத்தேவியோ (எச)

மன்னவன்விதர்ப்பன்மகளோமங்கு
லென்னமல்குமிருளாகப்பெண்ணே
கன்னியோகரும்போகமலாசனத்
தன்னமோவணங்கோவமுதோவென்றார் (எரு)

பாழியந்தடந்தோள்கள்பரப்பியே
யாழியன்றுகடைந்தமுதாசனர்
பீழைதள்ளும்பரன்பெருந்தேவியே
வாழியென்றுமலர்மழைதூவினர் (எசு)

மின்னுமாமணிதுன்னும்விமானமேன்
மன்னர்மாதவர்மாதர்கள்சூழவே
யன்னமாமெனவஞ்சுகமாமெனப்
பொன்னினூசலினேறினள்பூந்திரு (எஎ)

ஆரமாடவணிகலமாடப்பூந்
தாருமாடவிண்ணுளுஞ்சதமகப்
பேரினனும்பிதாமகனும்மிமை
யோருமாடப்பொன்னூசலினடினள் (எஅ)

காசினம்பிறழக்கலன்வில்விட
வேசிலாரவடங்களுமெல்லிடத்
தூசுமின்னிடைதன்னிற்றுயல்வர
வூசலிந்திரையாடவுரைசெய்வார் (எக)

**வேறு.** கைவளைகள்கலகலெனவாடிரூசல்காலிலணிசிலம்பார்ப்பவாடிரூசல்
மொய்யளியைம்பாலினெழவாடிரூசல்மூவுலகினிகரின்மின்னேயாடிரூசல்
மெய்யுரைசெய்நாவுடையீராடிரூசல்விதர்ப்பனருண்மெல்லியலீராடிரூசல்
பையரவினடித்திடுவான்றேவியானபங்கயமேற்பசுங்கிளியேயாடிரூசல் (அ0)

காதிணணிகுழையசையவாடிரூசல்கருங்குழலிற்றூரசையவாடிரூசல்
பாதமணிசிலம்பொலிப்பவாடிரூசல்பரியகங்கள்பணமிழற்றவாடிரூசல்
மாதவஞ்செய்மிதிலைநகர்ச்சனகராசன்மனமகிழுமகளெனவேமண்ணின்மீதிற்
சீதையெனவந்தமின்னேயாடிரூசல்தேமலரிற்றெள்ளமுதேயாடிரூசல் (அக)

ஆலினிலைதனிலமருமாறியென்றே
யறிந்துமனமுருகியுயரமலர்க்காங்கே
யோலையுடன்புரோகிதனைத்தூதாயேவு
முருக்குமிணியெனுந்திருவேயாடிரூசல் (௮௨)

மின்னுமணிதரளமெழிலினமெல்லாம்
விளங்குகலனணிமுலையீராடிரூசல்
முன்னவன்றனமாரிலுயிர்முடியாவண்ண
முராரிதன்றால்விலக்கிடுவீராடிரூசல்
அன்னமெனுநடையுடையீராடிரூசல்
ஆனிரைகாத்தவன்றேவியாடிரூசல்
மன்னவரெண்விதர்ப்பனருந்தவத்தின்வந்த
மலர்மகளாடிரூசல்வாழியென்றே. (௮௩)

வேறு.

வாணியிந்திராணிவானவர்கண்மங்கைமார்
சேணுறுமரம்பைமேனகைதிலோத்தமை
பூணுறுமுலையினார்புகழ்ந்துபொன்னவிர்
நாண்மலர்பொழிந்தனர்நளினமின்னின்மேல் (௮௪)

எல்லுறுகொடிகுடைகவரியேந்தியே
வல்லியர்மருங்குறமணிசண்மல்கிட
வில்லுறுமம்பொனினூசல்மேவியே
யல்லியங்கமலமின்றுடும்வேலையின் (௮௫)

மெய்த்தவப்புலத்தியன்வியாசனுமத்திரி
யத்திரிப்பெயரினன்வசிட்டனுதியா
கைத்தலக்கனியெனக்காட்டுநூலினோர்
மொய்த்தனர்சுகனுநாரதனுமுந்தவே (௮௬)

உண்மைசேருக்கிரசேனனுத்தவன்
வண்மைசேர்குருகுலமகீபன்மத்திரன்
திண்மைசேர்புயவசுதேவன்சேயுடன்
வெண்மைசேர்வலம்புரிவீரன்பாற்சென்றார் (௮௭)

வேலைபோலரசர்கள்பலர்மிடைந்தன
ராலினீளிலையின்மேலன்றுறங்கிய
மாலினார்திருவுடன்மகிழ்மணமனைக்
கோலமேகாண்குவார்குறுகினரரோ (௮௮)

கங்கைகாவிரிநீள்யமுனைகண்டகி
துங்ககோதாவிரிவேணிதூயதாய்ப்
பொங்குநீரிமசலம்புதியதண்மலர்
தங்குவாசனைக்குங்குமங்கள்சாரவே (௮௯)

மாதவர்மறையவர்மகிழ்வினாலறை
வேதமுமுழங்கிடப்பேரிவிஞ்சிய
வோதையெண்டிசையுறவுலகநுங்கிய
வாதியாம்பரமன்மஞ்சனமுமாடினான் (௯௦)

கிரியினையெடுத்துமாமழையைக்காத்தவெங்
கரியினன்மருப்பொடித்தருளுங்கண்ணனூ
ரரவினினடித்தகாலழகுமச்செவே
விரிகதிரொளிமணிநெறிழிநெஞ்சினை (௯௧)

காரிணைவளைத்தசெம்மலரின்காட்சிபோ
லாரியன்மருங்கொளிரம்பொற்கச்சிடை
மேருவைவலம்வருமெல்லவன்னெனச்
சீருறவயங்குடைவாளுஞ்சேர்த்தினர் (கூஉ)

ததியுடனெய்கவர்சதுரவென்றயன்
றுதிசெயவயங்கியசோதியுந்திமேற்
கதிருறுமணிநிறைகனகமல்கிய
வுதரபந்தனங்கவினிலங்கியோங்கவே (கூங)

பவுத்தர்தம்பரனெனப்பணிந்தன்றீசனை
யவத்தனென்றிகழ்ந்திடுமவுணர்வாழ்வெலாந்
தவிர்த்திருளகற்றியசதுரன்மார்பினிற்
கவுத்தவந்தயங்கின்கதிரின்காட்சிபோல் (கூ௪)

தற்பரமானமும்மூர்த்திதானுள
வப்புறைமாதவனுகத்தாமெனச்
செப்பியவாரணப்பொருடெரிந்தன
முப்புரிநூலுயர்முராரிமார்புற (கூ௫)

கயிலையணிடார்களைந்தவன்றன்கந்தரம்
நயநவமணியில்வண்ணன்சரமார்ந்திடப்
புயலிணையுடுவினட்வளைந்தபொற்பென
மயர்வறுதரளமாவடம்வயங்கிய (கூ௬)

மற்பொருதரவினைடித்தமாதவ
வெற்பிணையெடுத்தொளிர்சரங்கள்மீதினிற்
சற்பநன்மணிகளுந்தயங்கவெய்தியே
கற்பகம்வளைந்தெனக்கடகமின்னவே (கூ௭)

நந்துறுகடலிணைக்கடையநாட்டிய
மந்தரவரையைவாசுகிவளைந்தெனச்
சுந்தரமுறுமணிவலயந்தோன்றின
விந்திரைகொழுநனெண்புயமிலங்கவே (கூ௮)

வேலைவாயுறுகதிரிரண்டதாகிமின்
னீலமால்வரையினிவர்ந்தமாட்சிபோ
லாலநீளிலையமரமலன்காதினிற்
கோலமாயலைந்தனகுண்டலங்களே (கூகூ)

பொருப்பிணைக்கொடுபொழிபுயலைக்காத்துநீண்
மருபபிறக்கரியிணைவதைத்தமாதவன்
விருப்புறக்கவுத்துவம்விளங்குமார்பினிற்
கருப்புரக்கலவையுங்கமழச்சாத்தினர் (ச00)

அல்லெனவளைந்துநீணிரையத்தாக்குமத்
தொல்வினையவியமாதவங்களசூழ்ந்திடு
நல்வினைநல்கிடுந்தவளநாமமும்
வில்லெனுநுதன்மிசைவிளங்கிக்காட்டவே (ச0க)

விழுமியகருவரைக்குடுமிமீதினிற்
செழுமியகதிரவன்கிளர்ந்தமாட்சிபோற்
குழுமுசெங்கேழ்மணிகுலாவுமாழையின்
னெழிலுறுமகுடமுஞ்சிரமிலங்கவே (ச0உ)

மாவின்வாய்பிளந்துபுட்கிழித்துவண்மைசேர்
கோவிமார்துகிலெலாங்கொள்ளைகொண்டரு
டேவனார்முடிமிசைதிகழ்ந்த்தேனமர்
காவிநற்றாமலர்சமழும்யாகிகை (க0ங)

தேடுறுமலரயற்கரியசேவடி
நாடுறுமடியவர்க்கருளுநாரணன்
கூடுறுபொன்னிலைறுதுலங்கவின்றனள்
கோடிசுந்தர்ப்பார்தம்வடிவுகொண்டென (க0ச)

தேவகியுரோகணியசோதைசீரிய
காவியின்விழியினார்கமலக்கண்ணனை
யாவலின்மைந்தனென்றமையநோக்கியே
நிவம்வந்தெடுத்துமங்களங்கள்செப்பினார் (க0ரு)

திருகல்சுகமுனிசிறந்தநாரதன்
மாதவர்திரள்வசுதேவர்சூழ்ந்தன
ராதரவுடனிமையோர்களந்தரம்
போதுமிந்திரனயனுடனும்போற்றுவார் (க0சா)

ஆதிநற்பொருளதாயவனியண்டமாய்
மாதவர்க்கெளியனுயருள்செய்மாதவப்
பூதலத்தரசனீயாகிப்போர்தமை
யெதெனக்கருதவுமெளிதன்றெங்களால் (க0எ)

உலகினையுதவியுண்டுமிழ்ந்துகாத்தநீ
யலகையினுயிர்தெறுத்தாயர்தங்குலத்
திலகனென்றுரைசெயச்செகதலத்தினி
னிலகிமுன்னின்றனையென்றுமீறிலாய் (க0அ)

அருவமாயுருவுமாயனந்தன்மீதினிற்
திருவொடும்பயோததிசேர்ந்துவாழுநீ
தரணிமீதுருக்குமிணிதனைநன்மண
மருவவேமுயன்றிடுமாயமென்கொலோ (க0கூ)

தின்னுளெவ்வுலகமும்படைத்துநீயவை
தன்னுள்வந்திழிந்துவிற்முங்கிப்பாரையாள்
மன்னவனென்றெமைமயக்குமாய்கைக
ளுன்னவுமறிகிலேமுலப்பிலாதனீ (கக0)

அண்டமுங்கடந்துமேல்விரசையப்புறத்
தெண்டவருறைபதத்தெழில்கொண்மாமணி
மண்டபமிசையமர்நின்னைமண்மிசைக்
கண்டனம்வினைகளேயென்றுங்காண்கிலோம் (ககக)

வேறு. அராவணைதுறந்தேயரசரிற்பிறந்தாயானைமுன்வருநாதா
மராமரமெய்தாய்மருதிறத்தவழ்ந்தாய்வானுறநிமிர்பாதா
விராவணகாலாவெருதிறவடர்த்தாயேனமுநீயானாய்
பராபரமானாய்பரிதியைமறைத்தாய்பானிறவளைகொண்டாய் (கக௨)

வேறு. வேரிமாமலரயன்முதலோரிவைவிளம்ப
வாரவாரஞ்செய்துதுந்துமிமுழக்கினரமரர்
நாரதாதியர்கையெடுத்தாடினார்நலஞ்சேர்
பாரினூன்மறையர்தணராரணம்பகர்ந்தார் (ககங)

மின்றுசெங்கதிரவிரெனக்கருப்புரவிளக்கே
பொன்னினன்மணிக்கலத்திடையெடுத்திசைபொருந்த
வன்னமன்னவரனைவருஞ்சோபனமறைந்தார்
துன்றுநன்மலர்சிதறினர்தேவர்கள்சூழ்ந்தே (௧௧௪)

சுனைகண்மாநதிதுலங்கிடச்சென்னெல்சூழ்விபுலை
நனிகவானிறைநற்றுகிறைகுமிழாரங்
கனகமாமணிகன்னிகாதானமோர்கோடி
யனகநான்மறையந்தணர்க்கருளினனன்பால் (௧௧௫)

மண்டலாதிபர்துதித்திடவதுவைசெய்வித்த
வண்டர்கோன்மகிழ்வுறுஞ்சமாவர்த்தனமகிலா
லெண்டபோதனரந்தணாயாவையுமுடித்தார்
புண்டரீகனுகண்டலன்புலவர்கள்புகழ (௧௧௬)

பொன்னின்மாநகரொப்பனபுட்பகவிமான
மென்னவோங்கியவெழிலுறவிலகுமாமணிக
டுன்னுபேரொளிதருமிரதத்தினிற்றுலங்க
மின்னுநேமியன்மகிழ்வுடன்வீற்றிருந்தனனால் (௧௧௭)

வேறு. சாத்தகிதாளவெண்கவிகைதாங்கநற்
பார்த்தனுநகுலனுங்கவரிபற்றவே
யேத்துசாதேவனுமிரதமூர்ந்திட
நிர்த்தன்வானவரெலாமார்ப்பச்சென்றனன் (௧௧௮)

பேரியங்கறைந்தனபிரளயத்தெழும்
வாரியினமலைபோன்முழங்கவாலுருச்
சீரியவலம்புரிமுழங்கத்தேவர்கள்
வேரிகொண்டருமலர்வீசியாடினர் (௧௧௯)

இடிபடுமுரசம்புவியிரட்டெழ
வடிபடுகாடிகைமுழவமோரன்றெழு
துடியொடுபடலிகைத்துழனிமல்கிடக்
கொடியொளிர்பிச்சமுங்குடையுந்துன்னின (௧௨௦)

தாளமுங்கண்டையுந்தாரைசின்னமுங்
காளமும்பீலியுங்கலந்தவெங்கணும்
வாளொளிர்குந்தம்வேன்மழுச்சண்முட்கராங்
கோளரியெனவெழுங்குமரர்கொண்டனர் (௧௨௧)

வேழமாவிரதமேல்விளங்குவீரர்க
ளாழிபோனிறைந்தனரனிகமார்த்திட
யாழொடுகின்னரமிசைக்குமாதர்கள்
சூழவேதுலங்கினர்சுரர்களெங்கணும் (௧௨௨)

ஆர்த்தனரவனியரிமையவர்பொன்மலர்
தூர்த்தனரரம்பையர்துன்னியாடினு
ரேத்தினர்முனிவர்களியாதவக்குலத்
தீர்த்தனுமிரதமேற்சிறந்துதோன்றவே (௧௨௩)

மாதவன்வந்தனன்மாயன்வந்தன
னியாதவன்வந்தனனிறைவன்வந்தனன்
போதயனுடனெழுபொழில்படைத்திடுஞ்
சீதரன்வந்தனனென்றசின்னமே (௧௨௪)

வாரிமீதிலங்கியமாயன்வந்தனன்
குறளுருக்குமாவலிபாற்சென்றேற்றவன்
பாரின்மேலொடுபட்டசழிதாவிய
சீரியோன்வந்தனனென்றசின்னமே (௪௨௫)

யாதவன்வந்தனனெழில்கொளாய்ச்சியர்
கோதையர்விருப்புறுங்கொண்டல்வந்தனன்
மாதவன்வாமனன்வந்தனனென்ன
ஆகினசின்னமுமுலப்பிலாதன (௪௨௬)

சின்னமுஞ்சங்கமுஞ்சிறந்தகாளமுந்
துன்னிடுமுழவமுந்துலங்குபேரியு
மின்னிசைகெழுமியயாழ்களெண்ணிலாக்
கின்னரரொலியொடுகிளர்ந்தெங்குமே (௪௨௭)

மாதவர்விசும்புறைமடந்தைமார்களும்
போதினிலுறைபவன்புரந்தராதிய
ராதரவுடன்மலர்சொரியவாரியன்
வீதியினிரதமேல்விளங்கத்தோன்றினன் (௪௨௮)

வேறு.

ஆயனாரணிமணித்தேரின்மேலழகுறத்
தூயமாவீதியிற்றோன்றவேதுடியெனத்
தேயுநூலிடைத்திருவனாரனநடைச்
சாயல்போல்வருமினார்தரணிமேன்மிடையவே (௪௨௯)

அயிலெனும்விழியினாரனமெனும்நடையினார்
குயிலெனும்மொழியினார்குங்குமக்கொங்கையார்
புயலெனுங்குழலினார்தரளமேபுனைகுவார்
மயலுறுஞ்சிந்தையார்விரைவினில்வந்தனர் (௪௩0)

குங்குமக்கலவைநற்கொங்கையிற்கெழுமவே
பங்கயத்தடியினிற்பரிபுரம்பரியகஞ்
செங்கையிற்கங்கணமிலகிடத்தெரிவைமார்
மங்குலைக்கடிகுழலலையவேவந்தனர் (௪௩௧)

அரவினிற்றுயில்பிரிந்தருளிவந்தச்சுதன்
விரிகடற்றுவரையின்வீதிமேவினனெனத்
தரணியிற்கலைவிழக்குழல்களுஞ்சரியவே
யரியெழக்கிளிகள்போலனைவருமணுகினார் (௪௩௨)

மானினம்வருவபோன்மயிலினந்திரிவபோற்
றேனினம்முரன்மலர்க்குழலினார்திருவனார்
மீனினம்வெருவுநல்விழியினார்தொறுநிரைக்
கானினன்றுலவியகண்ணனைக்கண்டனர் (௪௩௩)

ஆடுவார்வானமீதரிவைமார்நாணவே
பாடுவார்சுரர்களுமுனிவரும்பரிவுறக்
கோடினோடாழிகைக்கொண்டமால்வடிவினால்
வாடினார்மாரவேளெய்யவேமடநலார் (௪௩௪)

தரளமாமணிகொடாவடமெலாந்தனமிசை
புரளமைக்குழன்மலர்பொலியவேயரிவைமார்
திரளுளோர்மயலெழக்கலைவிழச்சோர்குவா
ருருளுமாவிரதமீதுலகுணேமியன்வர (௪௩௫)

பூவினிற்றிருவெனப்பொலிவினார்வேனில்வே
ளேவவேவருகணைக்கிடையுமெம்முடலிடை
யாவிவிட்டகலுமுன்னணைகிலீரோவிருந்
தாவனத்தெய்திடுஞ்சதுரவென்றுரைசெய்வார் (௧௩௬)

தழலெழச்சிலைமதன்விடவெழுஞ்சரமதா
லுழலுகிற்றிடுமெமையுறவணைத்தருளிநற்
குழலிசைப்பவளவாயமிர்தினைக்கொடுவிடத்
தழலுமிழ்ந்தெழுமராமிசைநடித்தருளுவாய் (௧௩௭)

வேறு. மல்லர்மாளவமர்செய்தருண்மாயா
வொல்லைமேவியெமையுற்றணைத்தாளா
யல்லுநீள்பகலுமன்மதனடர
வெல்லும்வாளியைவிலக்குவமென்றார் (௧௩௮)

ஓதிமாதர்களேக்கலையுற்றே
பேதையாகுமொருபெண்ணமிர்தன்னாள்
காதறானறியாள்கடன்மாலோன்
போதவேபுயலிதாகுமென்றுன்னி (௧௩௯)

அமலன்கண்ணிணைகள்வாய்மலரங்கை
கமலமென்றுமுளத்திற்கருதிக்கண்
ணுமிழுகித்திலமுஞ்சிந்திடவோடித்
தமரையிந்தமலர்தந்திடுமென்றார் (௧௪௦)

பேதையிந்தவுரைபேசிடமாயோன்
மாதவன்விபுலநாயகன்மற்றை
வீதிவந்திடலும்விண்ணவரார்ப்ப
மோதுதுந்துமிகண்முழங்கியதன்றே (௧௪௧)

சதங்கைகொஞ்சியிடவேதண்டையார்ப்பப்
பதங்கொணூபுரமும்பண்கண்மிழற்ற
பெதும்பையாகுமொருபெண்ணமிர்தன்னாள்
விதங்கொடாடியகழங்குடன்மேவி (௧௪௨)

சீதரன்வடிவின்செய்கையைக்கண்டே
மாதுகண்ணிமையாண்மயலுருப்பம்
போதநாணொடுபுகல்கிலணின்றாள்
மாதவன்னகையோடேகினன்வீதி (௧௪௩)

சுரும்புதுன்னியமலர்க்குழற்றுய்யா
ளரும்புநேருமுலையரமங்கையரன்னாள்
கரும்பினின்சுவையைக்கைப்பிக்குஞ்சொல்லாள்
விரும்புகந்துகமண்மோதிடும்வேலை (௧௪௪)

மன்னன்மாதவனிவண்வந்தனனென்று
சின்னமூதியிடவேதிருவன்னா
ளுன்னுபோதின்முனருற்றனன்கண்டாள்
மின்னுநேமிதரிவீரனைக்கண்ணால் (௧௪௫)

கன்னல்வில்லிசணைகாய்ந்துடல்வேவ
மின்னும்வேள்குவளையுந்தரைவீழப்
பொன்னைமன்னுமலர்க்கொம்பதுபோல்வா
ளன்னமன்னவளுநொந்தறைகின்றாள் (௧௪௬)

நந்தகோபன்மகனாகியநல்லீ
ரிந்துசிந்துபகையாக்கினரெனா
வந்தமேமலியுமாயர்கண்மாதர்
வந்துளார்தமையுமார்பினணைத்தீர் (௧௪௭)

மங்கையங்கிவ்வுரைகூறிமயங்க
வெங்குமங்குலெனவேபல்லியங்கள்
பொங்கவெங்கரிகடேர்பரிசூழ
சங்கையங்கையிற்றரித்தவன்சென்றான் (௧௪௮)

கடந்தருங்களிகொளானையின்கோட்டை
யடர்ந்துவிம்முமுலையாளன்னநாண
நடந்தபஞ்சினடியாணாறுங்கொம்பா
மடந்தையிந்துவினைநேர்வதனத்தாள் (௧௪௯)

நீலமாமணியொடாரநிறைந்து
கோலமாகிவளர்கொங்கையின்மின்னச்
சேலும்நாணும்விழியாடெளிதேனும்
பாலுமேலவிசைபாடிடும்வேலை (௧௫0)

சூழுமாமணிகடுன்னிடுசின்ன
மூழியாணிவண்வந்தனனெனவோத
யாழினோடுவருமேனகையென்ன
வாழிபோன்மயலெய்தவலைந்தாள் (௧௫௧)

கற்பகத்தின்வளர்கொம்பிம்பர்காணப்
பொற்பெழப்படியினோடுவபோல
வெற்பினைத்தகொங்கையாள்விமலன்ற
னற்புதத்தெழிலைக்கண்டறைகின்றாள் (௧௫௨)

கஞ்சன்மாளவமர்செய்தருள்கண்ணா
பஞ்சபாணமெய்பரந்தனபாரா
யஞ்சலென்றிவணினாளுநதியென்றே
துஞ்சினாளுமெனவேயுடல்சோர்ந்தாள் (௧௫௩)

[illegible]பலெழுந்தவணின்மாதுமயங்கச்
செயலெழுந்தபல்தாமரைசேரும்
புயலெழுந்தகவின்போலரிசென்றா
னயலெழுந்திடுமணிநணியார்ப்ப (௧௫௪)

கரியின்கோட்டினைமுனிந்துகதித்த
வரையுநாணியிடவிம்மிவளர்ந்து
தரளமாமணிகள்சேருதனத்தா
ளரிவைபாரினாறுமென்னடையன்னம் (௧௫௫)

சிலைநுதற்கயல்கோல்வேல்விழிசெவ்வா
யிலவிதழ்ப்பவளநாணெழில்காட்ட
நலம்வரப்பெயரின்வீணைகொணங்கை
பலருநத்தியிடுபண்ணிசைவேலை (௧௫௬)

நாதனவ்வழியினண்ணினன்சின்ன
மூதமையலுறவேயெழுந்தோடி
வீதிசென்றவணின்வெற்பெடுத்தான்றன்
பாதமீதுபணிந்தேயிவைசொல்வாள் (௧௫௭)

பக்கமேவிவருபாவையர் முன்னே
தொக்கின்வாசமலர் வாளிகொடெய்வா
ணிக்குநாணுமிறவேயெனையாளீர்
குக்குடாசுரனைக்கொன்றிடுகோவே (௧௫௮)

வானினத்தின்வருமங்கையர்முன்னே
யானினைத்துவருகாரியமெய்தக்
கூனிமிர்க்கவருவானைக்கொண்டீரென்
மேனியுற்றுத்தழுவிக்கொளுவீரே (௧௫௯)

என்றுரைத்தவளுமேமுறுபோழ்தின்
குன்றெடுத்தருள்செய்கோவலன்றானும்
வென்றியுற்றசின்னமெங்கணும்விஞ்ச
சென்றனன்விபுதர்தேன்மலர்சிந்த (௧௬௦)

அரவநற்கடலினாரமுதன்னாள்
வரையெனத்திகழவேவ்வளர்கொங்கைத்
தெரிவைமெய்த்தவர்கள்சிந்தைமயங்கி
யுருகிடப்பணிநல்லாளிசையோத (௧௬௧)

மாயனாயனுயர்தேவகிமாதின்
சேயன்வந்தனனென்றோதியசின்ன
மாயசொல்லமிர்தமாயெழவன்ன
மேயெனுமுனரினெய்தினள்வீதி (௧௬௨)

கோலமாமலரினான்மலிகொண்டல்
போலவேயுருவமும்பொலிவெய்து
நீலமேனியனைக்கண்டவணின்று
மாலெழுந்துமெய்மயங்கிமின்சொல்வாள் (௧௬௩)

அண்டர்மாதர்துகிலன்றவண்வாரிக்
கொண்டவாதியென்றுணர்ந்ததுகொல்லோ
வெண்டபோதனர்களைத்தரிநின்னைக்
கண்டபோதினென்கலையுமவிழ்ந்த (௧௬௪)

துணையுநாணுமிலைச்சூழ்ந்துவில்வேளெய்
கணையுமேவுகனலாயெழுங்கண்ட
ரிணையில்யாதவநீரெய்தியேயென்னை
யணையுமார்பினினென்றேயயர்ந்தாண்மின் (௧௬௫)

தெரிவைசோர்ந்திடநற்சீதரமூர்த்தி
கரியமாமுகிலினிற்கமலங்கள்
விரியவேகவின்விளங்கினபோலத்
தரணிமீதினினெய்தினன்றடந்தேரின் (௧௬௬)

வாரணைந்திடவயங்கியகொங்கைப்
பேரிளம்பெணுதலாற்பிறைபோல்வாள்
பாரளந்தருள்பரமன்றிருப்பேர்
சீரணைந்தசுதைதித்திக்குஞ்சொல்லாள் (௧௬௭)

கண்ணன்மாயனெழில்கருமுகிலென்றும்
வெண்ணெயுண்டருளும்வித்தகனென்று
மெண்ணியின்பமுறும்யாழ்பலகீதப்
பண்ணினல்லிசையேதான்பகர்வேலை (௧௬௮)

மாதவன்பரமன்மாலரிமாயோன்
யாதவனெனவியம்பியங்கின்னங்
கோதைநெஞ்சுருகியேகொடிபோல்வாள்
வீதியில்விடவிரைவினிற்சென்றாள் (௧௬௯)

கண்டனள்விரைசொல்சார்முகிறன்னைக்
கெண்டைநாணும்விழியாள்கிளிபோல்வாள்
வண்டுதுன்னியமலர்க்குழன்மாது
கொண்டமையலினிவைகூறும் (௧௭௦)

கோடிமன்மதருருவினைக்கொண்டோர்
சூடிவிர்நறுந்துழாயினைப்பாம்பி
னோடுகிரணையீரிவணணியோ
டேடருத்தசீர்மார்பினினென்றாள் (௧௭௧)

மாரன்வாளிகைவிலக்குவிர்வந்தென்
றாரமாமுலையின்மேலணைகில்லீர்
பாரிலோர்களுநகையேபழிதீர்க்குஞ்
சூரனுமெனச்சொல்லுவதென்றோ (௧௭௨)

குண்டினபுரத்தின்கோதையைக்கண்டால்
சண்டுவித்தனிலெங்களைக்காணு
மண்டர்சாதரிவரெண்ணிலராமா
முண்டகத்தைவிட்டுக்கொட்டியைமுட்டார் (௧௭௩)

ஆழியானிவனென்னெஞ்சினமர்ந்தா
னூழியானிவனைப்போகவுமொட்டேன்
றோழிமீர்கள்புலனைநெறிதுற்றே
யேழையேனுமணைப்பன்புயமென்றாள் (௧௭௪)

பேரிளம்பெண்ணுமின்னிவைபேசி •
காருளம்புளகமெய்நேர்ந்தவள்சோர்ந்தாள்
பாருளும்பர்திரள்பன்மலர்தூவ
தேருளெம்பரமன்வீதியிற்சென்றான் (௧௭௫)

பேதைமாதர்முதற்பேரிளம்பெண்ணோர்
வீதிதோறுமனமிடைந்தனர்வேளுஞ்
சூதவாசமலர்வாளிதுரந்தான்
நீதிலாதவரித்தேர்மிசைச்சென்றான் (௧௭௬)

அரம்பைமேனகையுருப்பசியரிவையர்பலரும்
நிரம்பினார்திலமகளிரோடெங்கணுநிறைந்தே
விரும்பினாரரியுருவினுலையர்நெங்கும்வீழச்
சுரும்புநாணுறவேனிலான்மலர்க்கணைசொரிந்தான் (௧௭௭)

உலகளந்தருள்பாதமுங்கண்களுமுரனு
மலகையின்னுயிர்பாலினோடருந்தும்வாயழகு
மிலகுலகைகளுஞ்சண்டவரியார்கோலோவுருகார்
நிலவனன்னுதலரிவையர்மயல்செப்பவெளிதோ (௧௭௮)

கமலமாகியவிழியிணைவாய்முசங்கரங்க
ளமலனார்திருவுருவினிறென்றென்றேயமைய
விமைப்பிலார்கள்கண்ணுறுத்தனரேழையர்பலருஞ்
சமயமேமாவிடாதிருந்துறுவார்களும்போல (௧௭௯)

கலையினாற்றிகழ்நிதம்பமாந்தேரினைக்கடாவி
முலைகளாமதகரியினைமுடுகிநற்புருவச்
சிலையினால்விழிக்கணைதொடுத்தெய்தனர்சிறந்த
மலையையேந்தரிதன்னையேமாதரார்நெருங்கி (கஅ0)

சூடகங்களும்வளைகளுங்கடகமுந்துலங்கப்
பாடகங்களும்பரிபுரமொடுபதம்பற்ற
வாடகங்கொளுமணியணிமுலையினரடங்க
மாடகங்களினுய்த்திடுவான்றனைவளைத்தார் (கஅக)

மூடினாரரிமுராரியைமாதரார்முடுகி
யேடுறுமலர்வாளிகளெங்கணும்பொழிந்தே
நாடினானறும்போதுதான்காண்கிலானசைத்துச்
சாடினான்மதன்சராசனத்தழைகளுஞ்சிதற (கஅஉ)

வளைகள்சூடகம்வாலொளிராரமேவிடநற்
றளைகொணீலமுந்தரைவிழத்தோகையர்மயலா
லளையும்வீதியினரக்கர்கோன்றலைபத்துமுன்னாட்
களையுமாதவன்றேர்மிசையேகினன்கடந்தே (கஅ௩)

அந்தரத்தினிலெழுந்தனரமரர்கள்பலருஞ்
சந்தரத்தருமகிழ்வுறக்கடிமலர்பொழிந்தார்
சுந்தரத்திருநாரணன்றுலங்குதேர்தன்னின்
வந்தெதிர்த்தெழும்வீதிகளெங்கணும்வயங்க (கஅச)

கோடிநீடியகொடிகுடைதொங்கலுங்குலவ
வேடுறுமலர்க்குழலளியின்னிசையெழுப்பப்
பாடும்யாழொலிபரந்திடப்பங்கயத்தமிர்த
மாடுமூசல்சேராவணமடைந்தனனழகன் (கஅ௫)

அண்டரும்விழைவுறுமணியினங்களுமசைந்தே
மண்டலங்கொளுங்கதிரவனவிரெனவயங்க
விண்டலங்களுமொளியுறவீசுமூசலின்மேற்
கண்டனன்கமலாசனத்தமிர்தினைக்கண்ணன் (கஅ௬

கண்ணினாலுயர்மாதவன்கண்டனன்கமலப்
பெண்ணினுடனையுவகைநீள்கடலெனப்பெருக
விண்ணின்மீதுறும்பதத்தினைப்பிரிந்தவர்மீள
மண்ணின்மீதுதான்கூடிடினுரைக்குமாறுளதோ (கஅ௭)

விதர்ப்பன்றிருமகடனைக்கண்டருள்விமல
னதிர்த்துமும்மதம்பொழிவுறுமருவிகண்ணிறையக்
கதித்தசெம்முகக்கோடுடைக்கரியின்முன்கயத்தி
லுதித்தவும்பன்முன்றோன்றினனாமெனத்துலங்கி (கஅஅ)

அன்றுகுஞ்சரமூலமென்றழைத்திடக்காத்தே
கன்றினின்றிடுகஞ்சனாணையின்வருங்களிற்றைக்
கொன்றகையினான்கனகமால்வரையெனக்குறுகி
நின்றவேழமேலேறினனிலமகள்கொழுநன் (கஅ௯)

நீலமால்வரைநிறைகமலங்கள்தொண்டெழுந்த
கோலமாய்வடவரையின்மேற்றோன்றியகொள்கை
யேலவேபலவாபரணங்களுமிலங்க
மாலினான்மதகரியினமேல்வயங்கினான்மாதோ (க௯0)

சாமரைத்திரளருச்சனைகுலன்சாத்தகியோர்
வீமன்பற்றியேவீசினர்மேருவினிலங்குஞ்
சோமருற்றெனத்தரளவெண்குடைபற்றுதுலங்கக்
காமனைப்பயந்தானிருந்தான்கரியதன்மேல் (ககூக)

வெண்களிற்றினும்விளங்கியமதகரிமீதின்
பண்களிற்குழூஉநற்பரமனுமிலங்கக்
கண்களிற்றவமுனிவருங்கண்டனர்களித்தார்
விண்களிற்றருமலரிமையோர்திரள்விடுத்தார் (ககூஉ)

தேர்நெருங்கினநெருங்கினமதகரித்திரளும்
பார்நெருங்கினபரிகளும்வீரர்கள்பலரும்
வார்நெருங்கியமுலையினர்நெருங்கினர்வானோ
ரூர்நெருங்கினருமைசசியுருப்பசியுடனே (ககூங)

பேரியார்த்தனசங்கமுமார்த்தனபிறங்கும்
வாரியார்த்தெனவரசர்களார்த்தனர்வயங்குந்
தாரையார்த்தனசின்னமுமார்த்தனதண்ணுமையுங்
காரினார்ப்பெனவெங்கணுங்கம்பலைபரந்த (ககூச)

மாவின்வாய்பிளந்தேயருண்மாதவன்வந்தான்
கோவிமார்துகில்கொள்ளைகொண்டருளுமால்வந்தான்
காவிசேர்விழியுருப்பிணியாகியகமலத்
தேவிநாயகன்வந்தனனென்றபொற்சின்னம் (ககூரு)

சின்னமூதிடத்தேவர்கடுதித்திடச்சிறந்த
மின்னுமாமுகிலெனமதப்பூழ்க்கையினிலங்கும்
மன்னன்மாதவன்வரவெதிர்கண்டனள்வயக்கு
மன்னமாகியநடையுடையுருப்பிணியமிர்தம் (ககூசா)

புண்டரீகங்கள்பூத்ததோர்புயலெனும்வடிவைக்
கண்டுநீள்விழிகளிப்புறக்கடலிடையமிர்த
முண்டதாமெனவுரோமமெய்புளகங்களுறவா
னண்டர்சூழ்ந்திடவூசலினாடினனங்கே (ககூஎ)

மூவராகியேமுளைத்தெழுமுராரிமாலரிதன்
றேவியாகியவருந்ததிக்கற்புடையணங்கைக்
காவிசேர்விழிவயங்கியகமலநாயகியாந்
தேவியூசலினாடவேகண்டனன்சிறந்தே (ககூஅ)

சிந்துரத்தினற்கொம்பொசித்தருளியேதிகழுஞ்
சுந்தரத்திருநாரணன்றேட்டியாற்கரியை
யுந்திமெய்த்திருவாடியவூசல்கண்டுவகை
முந்தமைக்கிரியேலவேவந்துமுன்னின்றான் (சகூகூ)

குஞ்சரம்வெரினமுதுறக்கொடிகுடைநிறைய
வஞ்சனந்திகழ்கிரியெனவச்சுதனணுகப்
பஞ்சின்மெல்லடியுருப்பிணிபரமர்திண்டோளின்
விஞ்சுசெண்பகவலங்கலைச்சூட்டினள்விரைந்தே (உ00)

காசுலாவியநகிலினாள்விதர்ப்பர்கோன்கன்னி
யாசிலங்கதமணியொளிரங்கதப்புயத்திற்
பூசல்கேசரம்பொருந்தியவலங்கலைச்சூட்ட
வாசுதேவனுமுகுந்தனுந்திருவுளமகிழ்ந்தான் (உ0க)

பூவினுங்கடலமுதினும்வயங்குபொற்கொடிதன்
னாவியன்னவளையுறுமெய்யிடையணங்காந்
தேவிதன்றிருச்சீர்தருதோளிணைசிறப்பக்
காவிநன்மலரலங்கலைச்சூட்டினன்கண்ணன் (௨௦௨)

மாயவன்றுவராபதிவயங்கியமாறன்
னாயகன்றிருக்கரங்களாற்சூட்டுநற்றெரியல்
வேயிருந்தடந்தோளினும்மார்பினும்வயங்கத்
தூயசெந்திருமகிழ்ந்தனமுனிவெலாமகல (௨௦௩)

வேழமூலமென்றழைத்திடவிரைவினின்வந்தோன்
வேழமன்னவர்மார்பிறவீட்டினோன்புழை
வேழமூதினோன்விதர்ப்பராசன்றிருமகடன்
வேழமாருந்தோள்விரும்பியேமேவினனூசல் (௨௦௪)

சிலையினான்மழையகன்றிடத்தடுத்தருடேவு
மலைகொளாழியினமிர்திடையெழுந்தருளணங்கு
விலையிலாமணியொளிகொள்பொன்னூசலின்மேவி
யிலகவேதருமலர்மழையிமையவர்பொழிந்தார் (௨௦௫)

பஞ்சின்மெல்லடிப்பரிபுரமிலங்குதைபைந்தொடியுங்
குஞ்சரத்தினுக்குயர்பதமளித்தகோவலனு
மஞ்சனந்திகழ்கொழுந்தைவித்தருமச்சொம்பலைந்து
விஞ்சுநல்லெழில்போலவேயூசன்மேவினரால் (௨௦௬)

வண்டுமல்கியமலர்க்குழன்மவுலியோடொளிரக்
குண்டலந்திருக்காதமர்தோடுடன்குலவத்
தண்டைநூபுரஞ்சதங்கைவீரக்கழற்றரித்தே
புண்டரீகமேயனையநற்பதங்களும்பொலிய (௨௦௭)

சதங்கைகொஞ்சிடத்தமணியத்தண்டைகளொளிரப்
பதம்பொருந்தியபரிபுரம்பண்ணிசைபரப்ப
மதங்கொள்கிதச்சிலோதியர்கீதங்கள்வழங்க
விதங்கொளும்மணியூசன்மேல்விளங்கினடிருவே (௨௦௮)

மார்பினுண்மலர்த்தாமமுமாடவேவனசே
ராரமாமணியாடநற்றூசுமங்காட
வாரியேரமிர்தணங்கொடுமரகதவடிவோன்
சீருலாவுபொன்னூசலினாடினன்சிறந்தே (௨௦௯)

தண்டவெண்பிறைச்சடையனும்வலாரியுந்துலங்கும்
விண்டலந்தனில்விரிஞ்சனுமகிழவூசலின்மேல்
முண்டகந்திகழ்திருவுடன்முராரியுமாடக்
கண்டமங்கையரனைவருங்களிப்புடன்சொல்வார் (௨௧௦)

வேறு.

நீலமணியொடுமரவின்மணியுமாட
நித்திலத்தாமமுமாடநிறைந்தபூவின்
மாலைகளுமசைந்தாடவண்டுமாட
மருங்கெழின்மேகலையாடக்குழையுமாட
வேல்களெனும்விழிகுழலோடாடக்காதின்
விளங்குதிருக்குண்டலமுந்தோடுமாட
வாலினமர்பழம்பொருளேயாடிரூசல்
யழகுசெறியுருக்குமிணியாடிரூசல் (௨௧௧)

திசைதோறுமுறுங்களிறோடிறைவரானோர்
திரளோடத்திசைமுகனேடோடவேதா
டனையபாதமிக்கலன்பாவருணைதோ—
யந்தகனும்விரைந்தோடவானோர்வெற்பும்
விசையானைகரமதனைவெருச்சவீரன்
விறல்வழியவுடலுருளச்சரங்கள்விட்ட
வசுதேவன்றிருக்குமராடிரூசல்
வாசமுறும்வனசமினேயாடிரூசல் (௨௰௨)

ஈவதுநன்றலவெனவங்குசனனெய்தி
இயம்பியிடுமுரையதனையிகழ்ந்துநின்று
மாவலியன்றுவந்தருண்மூவடியின்வானோர்
மகிழ்ந்தெழுவெயுயர்ந்தெழுந்தமலர்ப்பாதத்தின்
பூவினயன்விளக்கியநீர்கங்கைநீராய்ப்
பொலிவுறநீள்பூதலமுமளந்தபாதத்
தேவகிதன்றிருக்குமராடிரூசல்
செங்கமலத்திகழ்திருவேயாடிரூசல் (௨௰௩)

அந்தமுறுஞ்சனகன்முன்னராதிமூர்த்தி
அமர்ந்தலகமனைத்துமுளனரியென்றோது
மைந்தனெனுமதிருன்மொழியிகழ்ந்துதாணின்
வன்கைகொடேயறைந்தனனேவென்னும்வாய்மை
பிந்தமுந்திமுடங்குளையாயவன்றன்மார்பைப்
பிளந்துகிளநகருடரணியும்பெருமானாகும்
நந்தன்மகிழ்நற்குமராடிரூசல்
நளினமலர்நாயகியேயாடிரூசல் (௨௰௪)

விசாலமுறுதரணிதனைவெண்சோடேற்றி
விளங்கிவருசூகரமாய்விறலின்மிக்க
பிசாசனெனுந்தனநயனன்மடிந்துவீழ
பெரும்பரவைத்துகின்மகளும்பரிவாலேத்த
நிசாசரர்வேரறுத்தருளுமுகுந்தாமாயா
நெடியவப்பேராயிரமாய்நிறைந்துதோன்றி
யசோதைமகனெனவருவீராடிரூசல்
அருந்ததிக்குக்கற்பளிப்பீராடிரூசல் (௨௰௫)

கருமுகிலின்வடிவுடையீராடிரூசல்
கமலமலர்க்கன்னிகையேயாடிரூசல்
அரவினடித்தருள்கழலீராடிரூசல்
அமிர்தினெழுமனநடையீராடிரூசல்
பரவையினிற்றுயில்கொளுவீராடிரூசல்
பரமபதத்தொளிருமினேயாடிரூசல்
ஒருமுதலாயுலகுடையீராடிரூசல்
உருக்குமிணிநாயகியேயாடிரூசல் (௨௰௬)

ஆனிரைமேய்த்துவந்தருள்வீராடிரூசல்
அணிகலனுக்கழகளிப்பீராடிரூசல்
தேனுகனைமுனிந்தருள்வீராடிரூசல்
செழுங்கமலநாயகியேயாடிரூசல்

கூனிதனைத்தழுவிடுவீராடிரூசல்
குண்டினமாநகர்க்கொடியீராடிரூசல்
மீனுருவாய்விளங்கிடுவீராடிரூசல்
விதர்ப்பனருண்மெல்லியலேயாடிரூசல் (உசஎ)

சந்தனங்குங்குமம்பனிநீர்கமழவேதண்
டருமலரின்வெறிவீசச்சதங்கைகொஞ்ச
வந்தமுறுஞ்சிலம்பரற்றத்தண்டையார்ப்ப
வணிவீரக்கழலினவிரருக்கன்மான
நந்துறுவெண்டரளமொடுமணிகண்மின்ன
நலமுறவேகத்தூரிநாமந்தோன்ற
விந்திரைமெய்புளகமுறவாடிரூசல்
யாதவர்தங்குலக்கொழுந்தேயாடிரென்றார் (உசஅ)

வேறு.

பூமழைசிந்தினர்பொன்னுலகுள்ளோர்
நாமகடன்னொடுநாரியரெல்லாம்
பூமகளாகியபொற்கொடியோடே
வாமனவாழுதிவாழுகியென்றார் (உசகூ)

கீதமிசைத்தனர்கின்னரர்மின்னார்
வேதமிசைத்தனர்வேள்விவிளைப்போர்
போதினலத்துயர்பொற்கொடியாளோ
டாதியுமுற்றெருளிரூசலினூடே (உ௫0)

அண்டர்கள்பாடவரம்பையராட
வெண்டவர்சாமமிசைத்தனராசி
முண்டகமாதுடனேழுலகும்வா
யுண்டவனம்பொனினூசலினூடே (உ௫க)

காருதிமின்னிடையார்கமலத்தேன்
வாரிதிவைகியமாதவனேனுஞ்
சீருதியூசல்சிறந்தினிதாட
நாரதன்வீணைசொடாடினனன்பால் (உ௫உ)

ஒப்பிலவீரர்கடாமுமுயர்ந்தே
மெய்ப்பொலிவார்வனமாலைவயங்க
முப்புரிநூலணிமார்பினர்முக்கோல்
கைப்புகவாடினர்சிந்தைகளித்தே (உ௫௩)

வடிவுடைமாதவன்மாமலர்வைகுந்
துடியிடையாளொடுதோன்றுவகண்டே
குடையொடுதண்டுகைகொண்டவர்கூந்து
நடையவராடினர்வேதநவின்றே (உ௫௪)

சந்தனமோடுறுதண்பனிநீருஞ்
சிந்தியமாதர்களாடினர்சேர
விந்திரைமாதவன்றன்னுடனெய்தி
யந்தமோடூசலமர்ந்தினிதாட (உ௫௫)

ஆரணமீதினமர்ந்துறையையன்
வாரணிமாமுலையாளொடுமன்னித்
தாரணிமீதுறவேதவரெல்லாம்
பூரணமாய்மறையாசிபுகன்றார் (உ௫௬)

மாசகல்குண்டினமாபுரமாது
மேசசலுந்துவரைக்கிறையும்மோ
ரூசறுலங்கிடவும்பர்கள்பொற்பூ
வீசிமகிழ்ந்துதுதித்திடும்வேலை (உஉஎ)

கைத்தலவாமலகக்கனிபோலத்
தத்துவமேயுணர்ந்தவர்மாலாம்
வித்தகமாமணமண்டபமீதி
னித்திருவோடினிதெய்துகவென்றார் (உஉஅ)

மாதவர்சொல்லின்மகிழ்ந்தருண்மாயோன்
போதினுயர்ந்தருள்பொற்கொடிதன்னோ
டேதமிலம்பொனிலங்குவிமான
மீதினுயர்ந்தனன்விண்ணவராட (உஉகூ)

தித்தியென்றொத்தியதாளமுடன்சேர்
மத்தளிசச்சரிபேரிமலாரி
வித்தகமிக்குயர்சங்குகள்வேலை
யொத்தவிரட்டல்களெண்டிசையுற்ற (உ௩0)

மாதவன்வந்தனன்வாமனன்வந்தனன்
யாதவன்வந்தனனிந்திரையென்னுங்
கோதையோடேதிகழ்கோமகன்வந்தான்
சீதரன்வந்தனனென்றனசின்னம் (உ௩க)

சின்னமுழங்கிடவேதிரள்தேவர்
பொன்னவிர்நன்மலர்வீசிடவேபோய்
மின்னியநன்மணிமண்டபமீதி
னன்னமோடெய்தினனுழியமர்ந்தான் (உ௩உ)

சோதியுருந்தரளங்கடிலங்க
வேதமிலொண்மணிய்ம்பொனிழைத்தே
மீதுயர்நல்வயிரங்கள்விளங்கு
மாதனமெய்தினனேயமோடையன் (உ௩௩)

வித்துருமங்களுமேவியகாம
ரொத்ததெனத்திகழ்நீலமொடோங்கி
மொய்பத்துறுநன்மணிபோலமுகுந்தன்
சித்தசனைத்தருதிருவோடிருந்தான் (உ௩௪)

வேதமுஞானமுமிளிருவபோல
வேதமில்பூமகளோடுவிளங்கி
மாதவனுதனம்வைகிடவானோ
ராதரவோடுமடைந்தனரெங்கும் (உ௩௫)

கயிலையனுமையொளிர்கலைமகள்கமல
னயில்விழியினள்சசியமரர்மன்னடைய
மயில்குயிலினமெனவருமெழின்மடவா
ரியல்புறவரசர்களிருநிலமடைய (உ௩௬)

தூபநிறைத்தனர்தூய்நறுநெய்யின்
தீபநிறைத்தனர்சிந்தைமகிழ்ந்தே
சோபனமெங்குமுறைத்தனர்தோலார்
சாபமெனும்புருவத்தினர்தாமே (உ௩எ)

கங்கைதரித்தருள்கண்ணுதலாவோன்
செங்கையின்மீதுயர்மண்டைசிதைத்தோன்
திங்கண்முகத்திருவின்ளெடுசேர்ந்தே
மங்கலவங்கிமுன்னேக்கிமகிழ்ந்தான் (உசகூ)

மைமுகிலொத்துமதத்தெதிர்வந்த
கைமலையைக்கடிவானிருகைதன்
செம்மலரொத்தொளிர்சேவடிபற்ற
வம்மிமிதித்தனளம்புயமாதே (உரு௦)

மற்பொருதோளுடைமாதுலனை
வற்பனையேமுனியாயர்கள்சோமான்
பொற்பெழவில்லிடுபூந்திருவோடே
நெற்பொரியோமம்நிறைத்துமகிழ்ந்தான் (உருக)

நலனுறுமரகதமலையினைநத்துங்
குலனுறுநற்பவளக்கொடிபோலக்
கலனுறுதிருவரிகைவிரல்பற்ற
வலனுறவந்தனர்மங்கலவங்கி (உருஉ)

மற்றுநெய்யாகுதியாவும்வழங்கி
விற்றிறல்மாதுவரைப்பதிவீரன்
நற்றிருவோடுவயங்கிடநண்பாற்
சொற்றனராசிகயேமறையோரே (உருங)

முழங்கினசங்கொலிவேதமுழங்க
முழங்கினபேரிமுன்னீரொலிமான
முழங்கினவந்தரதுந்துமிமுந்தி
முழங்கினமாதர்மொழிந்தபல்லாண்டே (உருச)

நீறணிகடவுளர்நிறைகமலத்தே
வீறினதவமுனிசசிபதிவிண்ணே
ரூறினருவகையரும்பரின்வாச
நாறியதருமலர்சிந்தினர்நண்பால் (உருரு)

கயிலையினுறைபவள்கலைமகள்சசியா
மயிலொடுமுருவசியிமையவர்மடவார்
குயிலெனுமொழியினர்கூறினர்பல்லாண்
டியல்புறவரிதிருமணமுடனிலக (உருசா)

சங்கமொலித்தனதாரைகள்சின்ன
மெங்குமொலித்தனபேரியிரட்டல்
பொங்கினகுரைகடலோடுபொருந்த
வெங்கயமொத்தொளிர்வீரர்களார்த்தார் (உருஎ)

விண்ணவரார்த்தனர்மெய்நெறியார்த்த
மண்ணவரார்த்தனர்மாமறையோரும்
புண்ணியரார்த்தனர்போர்மகளாரும்
பெண்ணினளார்த்தனள்பேரறமார்த்த (உருஅ)

தரளமெறிந்தனசாகரமேகத்
திரள்கள்பொழிந்தனசெம்பொனின்மாரி
யுருளவுதைந்துரலோடுதவழ்ந்தே
யருளரிமாமலரன்னமொடெய்த (உருகூ)

நாரதன்சுகனுன்மறைசெய்தோன்
வாரிதிபருகினர்பிருகுவசிட்டன்
பாருதிதிருவொடுபரமன்வணங்கச்
ஸ்ருதிமறைமொழிசெப்பினர்மகிழ்வால் (௨௬௦)

அன்னமெனுந்திருவோடரிதானு
மன்னவனல்வசுதேவன்மலர்த்தாள்
சொன்னமலர்த்தரைதூவிவணங்கத்
தன்னிருகைகொடுதழுவினன்மகனை (௨௬௧)

சக்கரமோடுயர்சங்கமுமேந்தி
நக்கர்கரப்பலிவீழ்த்திடுநல்லோ
னிக்கிரதச்சொலினுனொடிறைஞ்ச
வுக்கிரசேனனுனாத்தனனுசி (௨௬௨)

இந்திரைசுந்தரியேழுலகீன்ற
கந்தமலர்க்கமலாசனியோடு
மைந்தனெனுந்திருமாலும்வணங்க
நந்தனணைத்தனனன்மகனென்றே (௨௬௩)

கலாரமணிந்தருளிக்கமலத்தே
யுலாவியமாமயிலோடுழையெய்த
விலானும்வணங்கிடவேமகிழ்வெய்தி
யலாயுதமுன்னவனுகமணைத்தான் (௨௬௪)

கோவியர்கூறைகொள்கோவலனுந்தன்
றேவிதன்னோடெதிர்சென்றுவணங்க
வாவலின்மார்பினணைத்தனளன்பாற்
றேவகியாகியவன்னைசிறந்தே (௨௬௫)

கராவைமுனிந்துகரிக்கருள்செய்தே
யராவணைவைகியவச்சுதர்தாமுஞ்
சரோருகமின்னொடுதாளினிறைஞ்ச
வுரோகிணிமார்பினணைத்தனளுற்றே (௨௬௬)

முராரியுமுண்டகமின்னுடனேதா
னிரேவதிதாளினிறைஞ்சிடவன்புற்
றராவணையார்க்குயராசிபகர்ந்து
குராவருகுழல்பிறழ்கொம்பையணைத்தாள் (௨௬௭)

விசாலமுடைக்கமலத்தெழுமின்று
நிசாசரர்மாளவெய்நேமியர்தாமு
மசோதைதன்னடியினிறைஞ்சவணைத்தாள்
பிசாசயிருண்டருளும்பெரியோனை (௨௬௮)

நந்தர்குலத்துள்வளர்ந்தருணல்லோ
னிந்திரைதன்னொடுமெய்திவணங்கச்
சிந்தைமகிழ்ந்துதிருக்கைகளாரக்
குந்தியணைத்தனளாசிகள்கூறி (௨௬௯)

மருவமர்குழலிதன்மணமதுமேவி
யருகுறுமரிதனையன்புடனாரத்
தருமனணைக்கவிறைஞ்சினர்தாளிற்
பெருநலனெய்தியபின்னவர்தாமே (௨௭௦)

அந்தணராசிபகர்ந்திடவாயர்
வந்தனர்மாதர்களோடுமகிழ்ந்தே
இந்திரைதன்னுடனேமணமெய்தும்
சுந்தரனைத்தொழுதேதுதிசெய்தார் (உஎக)

அனமெனமலர்மிசையமர்பவளரியா
மனனொடுதிகழ்வுறுமணமதுமகிழ்வோ
ரினமலியரசர்கள்பெரிதினிதுறவே
தினமெனவருபகல்செலவுறுநாளின் (உஎஉ)

திருந்தவளர்த்தனன்சேடமனோமங்
கருங்கடனேர்விழியார்கலைகொண்டே
குருந்துறுவோன்கமலத்துயர்கொம்போ
டருந்துதிகண்டுமகிழ்ந்தனனன்பால் (உஎங)

மற்றுநெய்யாகுதியால்வருசெய்கை
முற்றமுடித்தருள்கர்க்கனைமுந்தி
விற்றொழின்மாதவன்மெல்லியறன்னோ
டுற்றுவணங்கவுரைத்தனனாசி (உஎச)

ஆடினனாரதனந்தணர்நூலே
பாடினர்வானுறைவோர்கள்பரிந்தே
யேடவிழ்மாமலரெண்டிசைதோறு
மூடினர்துந்துமிபேரிமுழங்க (உஎரு)

வெண்ணெயுண்வித்தகநீதிருமேவி
மண்மகள்பாரமகற்றுதிவாழ்கென
வெண்ணியன்னவிபுதர்க்கிறைமாலாம்
புண்ணியனைத்துதிசெய்தனர்போனார் (உஎசு)

நிகரிலையெனவுயர்சசியொளிர்நிலவை
யிகழ்நகையொளிர்திருமருமகளெனவு
முகமொருகணமெனவுரகணைதுயில்வோன்
மகனெனமகிழ்வுறுமனன்வசுதேவன் (உஎஎ)

அண்டர்கடுதிசெயவேயொளிரப்பொற்
குண்டிகைதண்டமர்குடையொடுகோதி
லெண்டவர்மகிழ்வுறவுதவினனியல்பான்
மண்டலமெணவருபேர்வசுதேவன் (உஎஅ)

நிறைகலனணிதுகில்செநெல்விளைவயலான்
கறவைகள்கரிபரிகனகமோடெவையும்
பொறையுடனறநெறியறிபவர்புகலு
மறையினரினிதுறவருளினன்மகிழ்வால் (உஎகூ)

கரிபரிரதமொடுகவிகைகள்சிவிகை
விரிகதிரொளிநவமணிகலன்விதமு
மரசர்கள்மகிழ்வுறவருளினனறிவாம்
வரிசையினுயர்பவனெதுகுலமகிபன் (உஅ0)

தருமனொடெழிலுறுசமிரணன்மகனு
மருளொளிவிசையனுமிருவருமகிழ
வுருளெழிலிரதமொடுயர்கரிபரியு
மருளினனிருளகல்கலனொடுமறிவான் (உஅக)

துன்னுமாமணித்திரள்களுருந்தரளமுந்துலங்கும்
பொன்னினுதனதத்தலையுநம்பாற்கடல்பொருந்தும்
பன்னகாதிபவணையின்மேற்றிகழ்ந்தபொற்பரமன்
மின்னனுளொடுவீற்றிருந்தனன்றிசைவிளங்க (உகக)

நீலமாகிரிபவளநற்கொடியொடுநிறைந்த
கோலமாமெனக்கமலமாமசனுடன்கூடி
யாலின்மேலமர்ந்துலகெலாநுகருமச்சுதனூர்
சீலமாமணியாதனந்திகழ்வுறவிருந்தார் (உகச)

விடவராமணித்திரள்களும்வயிரமும்விளங்கி
யடையமேதகத்தமனியத்தமர்ந்தொளிரழகே
தொடரவெண்டரளத்திரளொலிகளுந்துலங்கும்
குடைபொதிந்தவெண்மதிகலைகூடியதொப்ப (உகரு)

சோமனைச்சடைசுமந்தவன்றுயரதுவகற்றித்
தாமரைக்குளிற்றிருவொடுமுரகமேற்சார்ந்து
காமரைத்தருமுகுந்தன்மேற்கயல்விழிமடவார்
சாமரைத்திரள்பரப்பினர்நிலவொளிதரவே (உகசு)

சூலம்விட்டெதிரிராவணன்சிரங்களைத்துணித்தே
யோலமிட்டநற்சரியினுக்குதவுவோனுவப்பக்
காலன்விட்டவேலெனும்விலோசனமினார்களித்தே
யாலவட்டங்கள்கரம்பிடித்தசைத்தனரறிவால் (உகஎ)

கோபருக்கெளிதானவனுமையொருகூறன்
சாபமிற்றுகமுறித்தவன்றிருவொடுந்தழைப்பத்
தீபநற்கதிரொளியெனவெடுத்தசேல்விழியார்
சோபனத்துரையமிர்தினற்சுவையெனச்சுரப்ப (உகஅ)

முழவுதண்ணுமைச்சச்சரிதாளங்கண்முழங்க
விழைகொள்கொங்கையினிலங்கிடவிளநகைவயங்கக்
குழையசைந்திடச்சிலம்புகள்புலம்பிடக்குதிகொ
ளுழையிரேக்கியருருப்பசியொதுங்கவேநடிப்ப (உகக)

வில்லுநேர்புருவத்தினைநெரிக்கிலார்விஞ்சு
மெல்லுலாவியதுகிரைநேரிலவிதழ்துடியார்
வெல்லும்வேல்விழியிமைக்கிலார்கந்தரம்விம்மார்
வல்லிநேரிடைமாதரார்மகரயாழ்பகர (௩௦௦)

கோசிகத்தவன்வசிட்டனாரதன்குறுமுனியோ
டாசகல்பதினெண்புராணங்களுமறைய
மாசகல்குணமறையவராசிகள்வழங்கு
மோசைதிக்குறவுக்கிரசேனனுமுவப்ப (௩௦க)

ஆழிமேலரவிற்றிருவுடன்றுயிலமலன்
வேழமுன்வரும்வித்தகன்விதர்ப்பர்கோனருளு
மேழையாமலர்க்கமலமாதவளுடனென்றும்
வாழிவாழியென்றுரைமறைமங்கலமலிய (௩௦உ)

சமனிலாதவிற்புருவமுந்தாமரைக்கண்ணு
மமலனார்திருமுகமும்புன்முறுவலினழகு
மிமைசெயாமலர்க்கண்களாலெழிலுறநோக்குங்
கமலநாயகிரோமமெய்பொடித்துளங்களிப்ப (௩௦௩)

வேயிருந்தடந்தோள்களும்விளங்குபூணகிலுந்
தூயசுந்தரவதனமுந்துலங்குவாணகையும்
பாயுநல்லுழைவிழிகளும்வயங்குபங்கயத்தின்
சேயமங்கையைநோக்கிமாறிருவுளமகிழ (௬௦௪)

சீரினேர்கமலாசனனிமையவர்சேணி
னூருமாமழைபொழிந்தெனவலர்மழைசொரிய
வாரிசூழ்துவராபதிக்கிறைவன்மாமுகுந்தன்
வேரிமாமலர்ப்பாவையோடினிதுவீற்றிருந்தான் (௬௦௫)

காசுலாமுலையுருக்குமிணிச்செழுங்கனியை
வாசுதேவனார்மணம்புணர்ந்தருளுமாக்கதையை
யாசையாலுயர்ந்தறைபவர்கேட்பவராருளோ
வீசுஞானமோடுயர்வர்பேரின்பவெள்ளத்தே. (௬௦௬)

உருக்மிணிதேவியார் திருக்கலியாணப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௦௬

---

## ௮௰-வது சாம்புவதி தேவியார் திருக்கலியாணப்படலம்.

சுத்தனாகியபிரசேனனைவதைத்தமடங்
கலைத்தொலைத்தசாம்புவனை
யொத்தியேமற்போர்பொருதுவென்றிறை
மெய்யொளிகொள்சாம்புவதிதன்றுடனே
யத்திருடுவரையணுகிநல்லவிர்சால்
சமந்தகமணியினையன்பாற்
சத்திராசித்துக்களித்தவன்மகளை
மணஞ்செய்ததலைவனைத்துதிப்பாம். (௧)

**வேறு.**

வீரியவிதர்ப்பன்பெற்றமெல்லியறனைத்தேரேற்றிச்
சூரனையெதிர்ந்துவந்தவுருக்குமன்றலையமோதி
யாரியனமரின்வென்றேயமரர்வான்மலர்கடூவ
வாரிசூடுவரையெய்திமணம்புணர்ந்திருந்தநாளின் (௨)

குந்திதன்மைந்தரோடுங்குருடன்மாபதியையெய்தத்
தந்திமாவுடன்றேர்வந்தநிருபர்தம்பதியிற்சார
நந்தனுமசோதைதானுநலனுறும்பாடிசேர
விந்திரையுடனுமாயனிலங்கியேயிருக்கும்வேலை (௩)

தண்கடிமலர்க்காவெய்திச்சத்திராசித்துமன்னன்
பண்புடையலரியோனைப்பற்றியேதவஞ்செய்காலை
விண்கவினுறவேதோன்றும்வெய்யவனருளானோக்கி
யெண்கலமாழையீனுஞ்சமந்தகமணியையீந்தான் (௪)

திதறத்தவந்தான்செய்யச்சமந்தகமணியையன்பாற்
சோதிசெய்தபனனீயத்துலங்கிடவுரத்திற்பூண்டே
யேதமிறுவரைதன்னிற்சத்திராசித்தாண்டெய்த
வாதவனிலத்தின்வந்தானென்றறிக்கறைந்தார்மாதோ (ரு)

அக்கணஞ்சத்திராசித்தரியின்பாலெய்தலோடுஞ்
சக்கரக்கையனிந்தச்சமந்தசமணியைத்தக்கோ
யுக்கிரசேனற்கியென்றுரைத்திடமறுத்துவேந்தன்
புக்கனன்றமர்களோடும்பொன்னவிர்கோயிறன்னில் (சு)

மானவன்சிறிதுநாட்டான்கழித்தபின்வையமீதிற்
கானிடைமிருகவேட்டைகாண்குவான்களிப்புக்கொண்டே
சேனைகள்சூழப்பேரிமுழங்கிடச்சின்னமார்ப்ப
வூனுகர்கிராதரெல்லாமுற்றிடவேகுங்காலை (எ)

தவந்தினகரன்பாற்செய்தசத்திராசித்துமன்ன
னுவந்துநற்பிரசேனப்பேரனுசனையுற்றுநோக்கி
நிவந்தொளிர்மணியையீந்துநீயெழிற்பரியினேறித்
திவந்தனின்மிருகவேட்டைசேறியேமீடியென்றான் (அ)

அன்னவனுரைத்தலோடுமன்பினுற்பிரசேனன்றான்
மன்னவன்வசுதேவன்றன்மைந்தனைவணங்கித்தூய
மின்னியவயிற்கையோங்கவிரைவினிற்பரியினேறித்
துன்னியவதிரிபாண்டிதுலங்கியகானிற்சென்றான் (கூ)

அரிநெடுந்தேரின்மீதினமர்ந்துறநோக்கலோடு
மிரலைகள்சசங்கள்கட்கமிபநிரையெல்லாம்பற்றி
யுரானுறுமயிடமெண்கோடுழுவைபஞ்சானனங்க
டரைமிசைமடியமோதித்தானைகள்பரவுங்காலை (௧௦)

ஆயமிசையேறியாண்டுமடர்ந்திடும்பிரசேனன்றான்
பயமிலாதெதிருங்கேழல்சரியரிபரந்தவெல்லாங்
கயினுறுமயிலினுலேகண்டதுண்டங்களாக்கி
யுயர்குழைச்சாலமோங்கும்பழுவத்தினுற்றகாலை (௧௧)

முழையினுளெழுந்துவந்தமுடங்குழைசீறிக்கண்க
ளழலுறவிழித்துநோக்கியயத்துடனரசன்றன்னைப்
பழுவமீதுடல்போய்வீழப்பாய்ந்தவனுரத்தின்மீதி
னெழிலுறுமணியைக்கவ்வியிருநிலத்தேகிற்றம்மா (௧௨)

விண்கதிரவனைப்பற்றிப்பாறும்வெள்ளரவுபோலக்
கண்கனலுறத்தான்மின்னுஞ்சமந்தகம்வாயாற்கவ்வி
மண்குழையுறவேயோடுமடங்கலைவதைத்துத்தூய
வெண்கினுக்கிறைவனந்தமணியைக்கொண்டேகினுனல் (௧௩)

வனங்களிற்பரவும்வேடர்வலைகளைவிளம்பியெங்கும்
புனங்களிற்றிரியுங்கோலப்புண்டரீகங்கணவ்வி
யினங்களைத்தடுக்கவேலாலெறிந்தெய்தும்பொதுவர்மாதர்
தனங்களைவிரும்புமாயனுவந்திடத்தந்தார்வீரர் (௧௪)

குடதிசைக்கடலின்வெய்யோன்குளித்தலுமாயரில்லிற்
கடமுறுவெண்ணெய்நெய்பாற்களவுசெய்தருந்துங்கண்ணன்
மிடலுடைவீரரோடுமிருகங்கடன்னைவீழ்த்துத்
துடிகைகாகளங்களார்ப்பத்துவரையினடைந்தான்மாதோ (௧௫)

அனைவருமெய்தவேந்தன்னனுசனைக்காணுறுகித்
துனியுறுமனத்தனானசத்திராசித்துச்சேர்ந்தே
தனமுமிழ்சமந்தகத்தைச்சக்கரன்கேட்டபோதின்
வினையினேன்கொடாதேயெம்பிமாண்டனன்விதியாலென்றான் (௧௬)

கிளைஞரோடழுதுசோர்ந்தேகேசியைவதைத்தோனுலை
யிளைஞன்விண்சேர்ந்தானென்றுசத்திராசித்துங்கேங்க
வனாவில்வெந்துயரமெய்தியரிவையறைந்தசொல்லாங்
சளைகணையுலகங்காக்குஞ்சரியவன்கேட்டான்மன்றே (௧௭)

கினைகரனுசயமாகத்தேவகிகுமாரனை
வனகனக்குரூரனோடுமாதவனருளாலிந்த
கனகமீன்மணியைப்பெற்றகாவலன்கிளைஞரோடுஞ்
சினமுறுமடங்கலெண்குசேர்ந்தமாவனத்திற்சேர்ந்தான் (௧௮)

பரிகுரச்சுவட்டின்பின்னேபார்மிசைக்கடிதிற்சென்றக்
கரையினினயத்தினோடுமடிந்தவன்றன்னைச்செற்ற
வரிசெறுமடியைநோக்கியவனியின்விரைவினெய்திக்
கிரியருகாகமாண்டுகிடந்தகேசரியைக்கண்டான் (௧௯)

மீளியைக்கொன்றுவீழ்த்துவிரைவினிலேகுமெண்கின்
முளினிற்குறியைநோக்கிச்சார்ந்திடப்பிலத்திலுள்ளே
கோளரிதன்னைச்செற்றகொடியவல்லுரகநாடி
வெளினைத்தருவோனெய்தும்வேந்தரைநிறுத்திப்போனான் (௨0)

வரையினிற்பிலத்தினுள்ளின்மாயவன்விரைவினெய்த
வரிமலர்ச்சோலையின்கண்ணம்பொனினூசன்மீதே
தெரிவையர்சூழவாடெண்களித்தமின்சிறந்தமார்பி
னிரவியினவிர்போற்றோன்றுமெழிலுறுமணியைக்கண்டான் (௨௧)

கண்டனன்மணியைமாயன்கவருமுன்சாம்பனெய்தி
யெண்டிசைநடுங்கவார்த்தேயென்முனரெதிருமாற்ற
லுண்டுகொன்மடியாதிங்ஙனேடுதிமனிதாவென்ன
வண்டமுண்டருளுமாயோனகையுடனெதிர்த்தானன்றே (௨௨)

**வேறு.**

முட்டினர்கையைமுறுக்கிநிலத்தே
கிட்டினர்நெஞ்சமுலக்கிரிபோல
வொட்டினர்வாயைமடித்துறமெய்யைக்
கட்டினர்குத்தினர்கண்கனல்பொங்க (௨௩)

உரத்தினடித்தனரோங்கியெழுந்தே
சரத்தொடுகையுறவேகனல்சிந்தச்
சிரித்தனர்வெம்புகைதீயுறவெண்கின்
விருத்தனுநேரிலாமாலும்வெகுண்டே (௨௪)

அதிர்த்தனர்சாரிகைமாறியடர்ந்தே
குதித்தனர்வெம்புகைகொண்டெழுகண்ணார்
மிதித்தனர்மாமரம்வேர்பறியத்தா
னெதிர்த்தனராயிருபத்தெட்டெண்ணாள் (௨௫)

எண்கினின்வேந்தனெதிர்த்திங்ஙனமோதிக்
கண்கனலுற்றிடவேயொருகாலால்
மண்கொளுமாயன்வன்கைமுறுக்கிப்
புண்கொளவன்சிரமீதுபுடைத்தான் (௨௬)

நறுந்துளவன்கையினோடுபுடைப்ப
மறிந்தனனெண்கினின்மன்னவன்மண்மே
லிறந்திலன்மீளவெழுந்தவன்மாலென்
றறிந்திருகைதொழுதாடியுரைப்பான் (௨௭)

வேறு. மழைமுகில்வண்ணவுன்னைமாலெனவறியாதிங்ங
னிழிகுலத்தாயவெண்சாயுழலுவேனெதிர்ந்துசெய்த
பிழைபொறுத்தருடிநாயேனபெருந்தவஞ்செய்தேனாதி
முறையினுள்ளிருந்தேன்முன்னர்முதல்வனீதோன்றினாயால் (௨௮)

விலங்கலால்வேலைகட்டிவிறலுடையிராமனாகி
யிலங்கையினிருதர்கோனைவதைத்துப்பின்னயோத்தியெய்தி
நலங்கிளர்சோதிதன்னினேகுநீநாயினேனைக்
கலங்கலையுன்முனெய்திக்கதியினையருள்வனென்றாய் (௨௯)

ஆதலினடியேனுக்குன்பதத்தினையருள்வாயென்று
பூதலத்திறைஞ்சிப்போற்றிப்பொன்மனைபுகுந்துதானே
மாதவமதனாற்பெற்றமங்கைசாம்புவதிதன்னோ
டேதமின்மணியுங்கோடியென்றெண்கின்வேந்தனீந்தான் (௩௦)

கடலினைக்கலக்கிமுன்னாட்டிருவுடன்கவுத்துவத்தை
மிடலுடன்பற்றிக்கொண்டான்மீளவுமெண்கின்வேந்த
னுடலினைக்கலக்கித்தூயசமந்தகமணிதன்னோடு
மடமகடனையுங்கூடவாங்கியேமகிழ்ந்தான்மாதோ (௩௧)

ஆம்பல்வாய்த்தசனமாரமளகமேகந்தோடுய்ய
காம்புகண்ணிலங்குநல்வேல்காதுநாளிகங்கைகாந்தள்
கூம்பியகுமிழெண்மூக்குக்கொடியிடையிவைசேர்கொம்பாஞ்
சாம்புவன்மகளைக்கண்டமாலுமாலானான்றானே (௩௨)

சாம்புவன்றன்னைநீதான்பரகெதிசார்தியென்றே
பாம்பின்மேனடித்தகோமான்பகர்ந்தவன்பயந்தகொம்போ
டேம்பலொடெய்தும்வேலையிரும்பிலவாயினின்றோ
ராம்பரிசுணரார்கண்ணன்மீள்கிலனந்தோவென்றார் (௩௩)

என்றிட்டிருழன்றுமாயோன்மீள்குவதில்லையென்றே
நின்றிலரொருவினார்போய்நெடுங்கடற்றுவரையெய்தி
மன்றலர்துளவினானீள்வரையினுட்பிலத்தினேகி
யின்றளவுந்தான்மீளானினிவரத்தில்லையென்றார் (௩௪)

மாயவன்வாரானென்றுவந்தவரியம்பலோடுந்
தாயருந்தந்தைதானுந்தாலகேதனனுமிக்க
நேயமாம்விதர்ப்பன்பெற்றநேரிழையாளும்வீழ்ந்தே
மாய்வம்யாமென்னும்வேலைமாதவன்வந்தான்மன்னோ (௩௫)

எழிலுறுமணியையெண்கின்வேந்தன்றானீந்ததெல்லா
மழுதழுதிரங்குகின்றசத்திராசித்துக்கன்பாற்
குழகனாண்டுரைத்துக்கையின்சமந்தகங்கொடுத்தபின்ன
ருழைநிகர்விழியினாளோடொண்மனைபுகுந்தானன்றே (௩௬)

தந்தையைத்தாயர்தம்மைவணங்கினன்சக்கரத்தோன்
சிந்தையிற்றுயரமாறித்திருமகிழ்ந்தடியின்வீழ்ந்தா
ரிந்துசேர்வதனத்தெண்கின்பாவைசென்றிறைஞ்சலோடுஞ்
சந்திரவண்ணனன்னைதேவகிதழுவினாரால் (௩௭)

அந்தநல்வசனங்கேட்டேயச்சுதன்விருப்பமெய்தச்
சிந்தையின்மகிழ்வினோடுந்தேவகிகணவனென்றன்
மைந்தனுமாயனுக்குண்மகளெழில்வடிவுமிக்க
சுந்தரிநன்னையீதனன்றெனச்சொல்லினானல் (ரு)

மன்னவன்வசுதேவன்றானுனாத்தனுமகிழ்ந்துவேந்தன்
நன்மணஞ்செய்யநாணீர்நவிலுமென்றுரைத்தலோடும்
மன்னமென்னடையினாள்கையச்சுதன்பற்றிவாழ
வின்னலின்முகூர்த்தமின்றென்றந்தணரியம்பினரால் (சு)

வேதியர்கூறக்கேட்டுச்சத்திராசித்துவேந்த
னோதநல்லுவரிதன்னிலமுதமுண்டாரையொத்துத்
தீதகல்கோயில்புக்கான்சிறந்திடும்பூகஞ்சன்னல்
வீதிசுணிறையவெங்கும்விளக்கிடநிறைத்தார்மாதோ (எ)

மகரதோரணங்களோடும்வயங்குசம்பலம்வானோங்க
நிகரில்பொற்குடங்களெங்குநிறையச்செந்நீபந்துன்னச்
சிகரநன்மணியெல்வீசச்சிறந்தலர்மாலைநாலப்
புகரியமிவுளிபொற்றேர்பொலிந்தனவீதியெல்லாம் (அ)

நித்திலநகையள்பச்சைநிறத்தினள்நீண்டகண்ணி
தத்தைபோன்மொழியாள்காந்தட்டடக்கையாள்வேய்கொடோளாள்
சித்திரம்பழித்தமெய்யள்சிலையெனும்நுதலாள்சீராஞ்
சத்தியவாமைவண்மைச்சத்திராசித்தன்பாவை (கூ)

இன்னலனெய்தவோங்குமிமையவர்பதியினெய்து
மின்னிடைமடவார்நாணவிளங்கியவமிர்தம்போல்வா
டன்னிகரிலாதவேற்கட்சத்தியவாமையென்னுங்
கன்னியைவனைதல்செய்வான்கவினுறுமடவார்சூழ்ந்தார் (கo)

எண்ணரும்விண்ணின்மீதினெழுந்திடுங்கதிரினோர
மொண்மலர்வாசம்வீசுங்கருப்புரமாரமுத்தந்
தண்பனிநீரின்வண்மைச்சத்தியவாமையோங்கும்
மண்மகளாயமங்கைமஞ்சனமாடினாளால் (கக)

இரணியம்வயங்குநீவித்துகிலுடனிலங்கத்தாளிற்
பரிபுரம்பாதசாலம்பரியகம்வயங்கமாழை
விரசியகலாபம்வஞ்சிநுசுப்பிடைவிளங்கச்சாம
வருணமாரளகந்தன்னின்மருமலர்சூட்டினாரால் (கஉ)

சிந்தூரத்திலதந்தீட்டிச்சிவந்தநன்மணிகளான்ற
சுந்தரத்தோடுங்கொப்புந்துலங்கியகாதிற்றோன்ற
கந்தரத்திலங்குகின்றகலன்சுணற்கவினைக்காட்ட
நந்தொளிர்வயிரமின்னுங்கடையநற்கரத்தினிட்டார் (கங)

நளினமென்முகைபோற்செப்பும்நாணவேயரும்புங்கொங்கை
வளமுறுநதரளநீலமணிகொடாவடங்களோங்க
மிளிரும்வேனயனந்தன்னிலஞ்சனம்விளங்கிக்காட்டத்
தளிரடிமடந்தைநின்றாடமனையாளும்நாண (கச)

பொற்புறவயங்குகின்றபூங்கொம்புபொலிவபோல
விற்புருவத்தினங்கைவிளங்கியசெயலைக்கண்டே
கற்புடைமடந்தைமார்கள்கருப்புரதீபங்காட்டிச்
சொற்பகர்கிளியினாண்முன்சோபனம்பாடினாரால் (கரு)

பொன்னவிர்சால்களோங்கப்புதுமணியினங்களின்ன
மின்னுபொற்குடங்களொங்கும்விளங்கியவூசன்மீதிற்
சின்னநன்மலர்கள்பூத்துத்திசடருங்கொம்பாமென்ன
வன்னமுநாணவெய்தியமர்ந்தனளவனிமின்னே (௧௬)

வாசநாண்மலர்களெங்கும்வானவர்பொழிந்துவாழ்த்த
வீசுசாமரைசண்மல்கவிளங்குதுந்துமிசளார்ப்பக்
காசினியோர்களேத்தக்சாலினில்ஞெகிழிபம்ப
வூசலினாடி ஞண்மின்னெண்மணிவடங்களாட (௧௭)

இன்னலனெய்துமங்கையினியபொன்னூசலாடத்
துன்னியகரிதேர்வீரர்துரகமண்ணிறைந்து சூழப்
பொன்னவிர்சவிகையோங்கப்புகரியவெரினில்மீது
மின்னியமுகிலேயேலவிளங்கியவிமலன்வந்தான் (௧௮)

துடிகைமாமுரசந்தக்கைதுந்துமிகறங்கவோதற்
கொடிகுடைசவரிமல்கக்கொம்புகாகளங்களார்ப்ப
வடவரையுச்சிமீதின்வயங்கியமேசம்போற்றன்
னிடர்களைவான்முனெய்தமகிழ்ந்தனனெழில்கொண்மங்கை (௧௯)

மும்மதவிபத்தின்மீதின்முன்னின்றமுராரிதோளிற்
செம்மைசேர்வனசமாலைசிறந்திடவெறிந்தாளன்னாங்
கைம்மலைதன்னைக்காத்தோன்சமுத்தயர்சமூரித்தொங்கல்
விம்மியமுலையிணுடன்விளங்குகந்தரத்திற்சேர்த்தான் (௨௰)

அன்னலங்கண்டவானோரம்பையர்முதலோராடப்
பொன்னவிரூசன்மீதிற்புயலெனவெய்தியந்தான்
மின்னிடையணங்கினோடும்விளங்கிடவாடச்சூழு
மன்னவர்மடந்தைமார்கண்மகிழ்வுடனோங்கினாரால் (௨௧)

பரிவுடனுண்டுகான்றபகந்தனைத்திடந்தகாட்டி
யிருகரமதனலேந்தியிலங்கியதொடையின்மைந்தற்
புருடவுத்தமன்மாநீராஞ்சிகியேபுவிமான்மீண்டும்
மரசரிலடைந்தாளோடுமூசன்மீதாடினுனல் (௨௨)

அன்னவளோடுமாயனந்தணராசிகூறத்
துன்றுதூணயுதஞ்சூழ்ந்துதுலங்குமாமண்டபத்தின்
மின்னுமொண்மணியினங்கள்விளங்குமாதனத்தின்மீது
பொன்னெடுங்கவரிவீசப்புயலெனவிருந்தான்மாதோ (௨௩)

சுத்தனுங்கர்க்கனேமந்தொடங்கியாகுதிதான்செய்யச்
சத்தியவாமையென்னுந்தத்தைதன்கந்தரத்தின்
சித்தசன்றன்னைத்தந்தோன்சிறந்தமங்கலநாண்சாத்த
வுத்தமியாதத்தம்மிமிதித்தனளுவகையோங்க (௨௪)

மாயவனவனியாயசத்தியவாமையோடுந்
தேயுவைவலமாய்வந்துசிறந்தருந்ததியைநோக்கித்
தூயமாமறையோராசிசொல்லிடவிமையோர்வாழ்த்தத்
தாயரையிறைஞ்சித்தந்தைதாளினின்வணங்கினானல் (௨௫)

மாமியர்தாளின்வீழ்ந்துசத்தியவாமைவண்மைக்
காமனைத்தருவாடாளினிறைஞ்சியேகருணைமல்கும்
சோமனைநிகர்க்கும்வண்ணன்றேவியைவணங்கித்தூய
பூமனைத்தந்தாரோடும்பொற்புறவிருந்தாண்மாதோ (௨௬)

அருணன்றன்னனுசனூர்தியாகவேயருளும்மாயோ
னிரணியகலத்தினன்னமருந்தினனின்பமெய்தி
வருணமாமணிப்பொற்கட்டிலெய்திமன்மதனுநாணத்
தரணிமின்னுனடல்லின்பத்தணைந்தினிதிருந்தானன்றே (உஎ)

சத்தியவாமை தேவியார் திருக்கலியாணப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஎக.

---

# அஉ-வது சத்தனுவா வதைப் படலம்.

---

நவையசல்சிந்தையோடுநற்கனியெல்லாம்வைத்தூச்
சுவையுறநுகர்தியென்னத்தொழுதின்பமெய்திநின்ற
சவுரிக்கன்றுயர்வீடீந்ததசரதராமன்றளிற்
பவமொடுபிறப்பிறப்பும்பற்றறப்பணிவோம்யாமே (க)

அறனுறுமக்குரூரனலாயுதனுத்தவன்று
னெறிவசுதேவன்றன்னோடேளப்பிலாநிருபர்சூழ
மறுவிலாமணிப்பொற்றூண்கள்வயங்கியமண்டபத்தின்
கறையடிதன்னைக்காத்தோன்கவினுறவிருக்குங்காலை (உ)

படவரவுயர்த்தோன்றூதைபணியினுல்வந்ததூதர்
கடமுறுகரியைச்செற்றகண்ணனையிறைஞ்சியேத்திக்
கொடிநிறைவாரணுசிதனிலைவர்குந்தியோடும்
படரனலுறவரக்குமனைதனில்வீந்தாரொன்றூர் (௩)

இறந்தனர்குந்தியோடுமைவர்களென்றலோடும்
மறைந்தவருய்ந்துபோனாரென்பதுமாயவன்று
னறிந்திருந்தறியான்போலவருள்செறிதாதைதன்னை
யுறுந்துயரதினுல்வாடியுற்றணைத்தழுதானம்மா (ச)

மைத்துனமார்களன்னைதன்னொடுமடிந்தாரென்றே
வித்தகனிரங்கியேங்கிவிடவரவுயர்த்தவேந்தன்
சித்தமார்துயரைநீக்கிச்சிந்தைநோய்தீர்வனென்னு
வத்தினபுரத்திற்றேர்மேலச்சுதன்சென்றான்மன்னே (ரு)

அரியிரதத்தின்மீதினத்தினபுரத்திற்செல்ல
வுரகமீதுயர்த்தகோமானுற்றவரெதிரேசென்று
பருவரலெய்துவான்போற்பரமனைத்தழுவலோடு
மிருவருஞ்சிந்தையுள்ளின்களிப்புறவிரங்கினுரால் (சா)

கருமுகில்வண்ணன்மாயன்கட்செவியுயர்த்தகோவை
யருவினையாவராலுமகற்றொணாதகனலையா
வெரியினிற்குந்தியோடுமிறந்தனரென்றிங்கெய்துந்
தெருமரலொழிதியென்றேசெப்பியாண்டிருந்தான்மன்னோ (௭)

வீடுமன்விதுரன்கன்னன்விமலன்றனிறைஞ்சிநிற்பச்
சேடுடைத்துரோணன்சேயோடெய்தியேயாசிசெப்பக்
கோடுகையேந்திறனைக்கண்ணிலான்குருநிற்றியின்
வீடினர்புதல்வரென்றுவிம்மியேயழுதான்மாதோ (௮)

துணியுறுவோரையெல்லாஞ்சுந்தரனோக்கியேதான்
வினைவலிதன்னினாலேயெரியினில்வீடினார்க்கின்
டனைவருமிரங்கியென்னபயனினியவர்களெல்லா
மினிமையாங்கதியையெய்தவெள்ளுநீரிறையுமென்றான் (௯)

அலாயுதன்பின்னோன்சொல்லவரவுயர்த்தோன்றன்பின்னோ
ரெலாரும்வந்திரங்கியேதானெரியினிலிறந்தோர்க்கெல்லாந்
திலோதகமளித்துப்பிண்டந்திரட்டியேகளித்தாண்டிட்ட
புலாலர்தஞ்செயலைநோக்கிப்புயல்வண்ணனிருக்கும்வேலை (௰)

பாஞ்சன்மீதுயர்த்தோன்வைகும்பதிதனிற்பரமன்றேர்மேற்
சார்ந்திடவக்குரூரன்சத்தனுவாவைநோக்கி
வேந்தநீகேட்டிநேரிற்சத்திராசித்துவிந்தை
காந்தனுக்களித்தானன்றேதான்பெற்றகன்னிதன்னை (௧௧)

கிருதவன்மாவுநீயுமிருக்கக்கேசியைத்தான்செற்ற
வரிதனக்கரிவைதன்னையளித்தவனுவிசோரப்
பரிதனோடிறந்தானோடுங்கூட்டியொண்மணியைப்பற்றித்
தருதியென்றென்றோதச்சத்தனுவாவுஞ்சொல்வான் (௧௨)

உன்னையுமென்னைத்தானுமுயர்குலக்கிருதவன்மாத
தன்னையுமிகழ்ந்துவெண்ணெய்திருடுகர்ந்தவனுக்காங்கே
மின்னினையளித்தானவ்விண்ணுறவதைத்துப்போக்கி
நன்மணிகவர்ந்துமீள்வனென்றிடநலனீதென்றான் (௧௩)

நிசிதனிற்கன்னமிட்டேநிலவரையதனுளெய்திச்
சசிநிகர்படிகமாடந்தனிற்றுயில்கின்றான்றன்னைச்
சசியுறுங்கண்ணன்வாளாற்றுணித்தநன்மணியைவாங்கி
வசையுறமனையின்வந்தான்சத்தனுவாவாமன்னன் (௧௪)

தந்தைதான்மடிந்ததன்மைசத்தியவாமைகேட்டு
வந்துமண்ணிடையின்வீழ்ந்துவயிற்றிடையெற்றியந்தோ
வெந்தைநீயிறந்தாயிங்ஙனென்செய்கேனென்றுநைந்து
சிந்தையிற்கலங்கிப்பின்னர்ச்சினமுறச்செப்பலுற்றாள் (௧௫)

எந்தையைவதைத்தானவியென்னுயிர்க்கொழுநனாலே
யந்தகபுரத்தினேற்றியரும்பகைமுடிப்பனென்னச்
சுந்தரியம்பிவாளாற்றுணிபடுந்தாதைதன்னைச்
சிந்தையினிடருற்றேதான்றிலதயிலத்திலிட்டாள் (௧௬)

மரகதநிறத்துமங்கைவாயுவின்முந்தியேகுங்
குரகதமிசையினேறிக்கொடியவார்வீக்கிநெஞ்சி
னெரிகதமுறவேகங்குலேகுமுனிமைப்பினெய்தப்
பொருகதைகரத்திலேந்தியத்திமாநகரிற்புக்காள் (௧௭)

அத்தினபுரத்திற்சென்றேயரிதிருவடியிற்றாழ்ந்து
சத்தியவாமைதந்தையிறந்தமைசாற்றலோடும்
வித்தகன்றேவிதன்னைத்தழுவியேவிம்மிக்கண்ணீ
ருத்தரீகாந்தான்றுங்காதோடவேயிரங்கினானால் (சஅ)

இரங்கியவிறைவன்றேவிதன்னுடனிமைப்பின்முன்னே
துரங்கமீதிருவருந்தானேறிவான்சுரர்கள்போற்றக்
கருங்கடலகழியாகக்கவினுறுதுவரையெய்திக்
குரங்கலோசனிதன்றாதைகோயிலினடைந்தானம்மா (சகூ)

சக்கரந்தரித்தானெய்தச்சத்தனுவாமாயன்றா
னுக்கிரமாகிவந்தான்செய்யுமாறுரைத்தியென்ன
வக்குரூரன்றான்கேட்டேயரியுடன்பகைத்தாரெல்லா
முக்கினரல்லாலியாவருய்ந்தனரென்றுசொல்வான் (உ0)

சத்தியவாமைதந்தைதனைவதையென்றார்சொன்னார்
சித்தசன்றன்னைத்தந்தான்செருத்திறமறிந்திலாயோ
குத்திரமாகிக்கங்குறன்னிடைக்கொன்றைநீதா
னித்தலத்திருந்துசாகாதேகுதிவிரைவினென்றான் (உக)

கூறியவக்குரூரன்கரத்தினிற்சோதியென்று
வீறியசமந்தகத்தைக்கொடுத்தவன்விரைவிற்செல்லும்
மாறிலாவிவுளிமீதின்வடதிசைநோக்கியேதா
னூறுசாவதங்கழிந்துநொடியினிற்சென்றானன்றே (உஉ)

வேறு. தூயசத்திராசித்துவைவாளினாற்றுணித்துத்
தீயனாகியசத்தனுவாசென்றதன்மை
மாயவனறிந்தலாயுதமன்னவனுடனே
பாயுமாவிரதத்தின்மேற்பார்மிசைச்சென்றான் (உங)

வாயுவின்விசைபின்னுறமணிநெடுந்தேர்மே
லேயெனுமுனர்நூறுகாவதநெறியேகித்
தீயவன்றனைபடர்சலுமிதிலையிற்சிறந்த
தாயகாவினிற்சத்தனுவாவயம்வீழ்ந்த (உச)

சோலைதன்னிடைத்தூயதாந்துரகம்வீழ்ந்திடலுங்
காலிற்காலெனச்சத்தனுவாக்கழிந்திடவே
சீலமாயவன்றேரினுமிழிந்துதானோடி
கோலநேமியாற்கொடியவன்சிரத்தினைக்கொய்தான் (உரு)

தரையின்வீழ்ந்திடுஞ்சத்தனுவாவினைமாயன்
தெரியநோக்கிநற்சமந்தகமணியினைக்காணான்
விரைவின்மீண்டுதன்முன்னவனுடனிவைவிளம்ப
வரவுருத்தவிர்வோன்சொல்லையையமாயறைவான் (உசு)

இரவிசத்திராசித்துவுக்கீந்தநன்மணிக்கிங்
குரியனீயலாலெனக்கதனாற்பயனுண்டோ
கரவலன்கையினிற்காண்கிலைமணியெனிலென்ன
விரைவினின்னகர்க்கேகெனமிதிலையிற்போனான் (உஎ)

முன்னவனிவைவிளம்பலுமுராரிவெண்ணகைசெய்
தின்னவின்மணிகண்டபினென்மொழிமெய்யென்
றுன்னிமன்னவவொண்ணகரடைதியென்றுரைத்துக்
கன்னலொன்றினிற்கடிபொழிற்றுவரையினடைந்தான் (உஅ)

கரவினாலவ்வதைசெய்தவனுயிர்களைந்ததனை
யுரைசெய்தேபினர்ச்சத்திராசித்துவையுயரு
மெரியிற்சேர்த்தியேயிருபுனற்கிரியையுஞ்செய்வித்
தரிதன்றேவிதன்னருந்தயரகற்றியங்கமர்ந்தான் (௨௯)

வாகிமீதிற்போய்மாண்டவன்வறுவரையிலீந்த
தேசெண்கலத்தனமுமிழ்மணியினோடேகிக்
காசியின்னிடைக்காந்தினிசுதனினிதிருந்து
மாசில்வேள்விகள்செய்துமாதானமுமீந்தான் (௩0)

ஆயவாறெலாஞ்செய்தவக்குரூரனையறிந்தே
மாயன்றான்வெருவாதிவண்வருதியென்றுரைத்து
நேயமாகியநிருபரைவிடுத்தலுநெறிசேர்
தூயகாந்தினிசுதன்றுவராபதியடைந்தான் (௩௧)

ஆழியானடிக்கமலத்தினிறைஞ்சியக்குரூர
னேழையேன்பிழைபொறுத்தியாற்றபனனன்றீந்த
மாழையின்மணியிதுவெனமன்னர்முன்கொடுப்ப
வேழம்வீழ்த்தவன்மீளவுமவன்கையிற்கொடுத்தான் (௩௨)

மதியைநேர்வணன்மாடனையொருவியேயேகி
மிதிலையின்வெகுலாசுவமன்னன்வேதியரோ
டெதிர்சொண்டார்க்கியமளித்திடவின்னமிர்தருந்திப்
புதியநன்மலர்குஞ்சியிற்புனைந்தினிதிருந்தான் (௩௩)

வேறு. வீரியவலாயுதன்முன்பெற்றிடவிளங்குமின்னாள்
பாரின்மேற்சிறந்தபானுமதியினைப்பரிவினாலே
வாரிபோலொலிப்பப்பேரிமறையவரோமஞ்செய்ய
நேரிலாவியாழமோங்குநிருபனுக்களித்தானம்மா (௩௪)

வேறு. ஆயகாலையினக்குரூரன்மணிகொண்டே
தூயகாசியினிருந்துபின்றுவரையினெய்தி
மாயவன்றனைவணங்கியவாறெலாமறிந்து
நேயமாயெய்துமந்தணர்கிழ்த்தினரன்றே (௩௫)

இந்தநல்லுரைகேட்டலுமிந்துவண்ணன்மு
னந்துசையுறுநாரணனுரைபழுதென்றே
சிந்தையினினைந்தேனந்தோவென்றுரைசெய்து
வந்துநற்றுவராபதியடைந்தனன்மாதோ (௩௬)

சீலமாகியவலாயுதன்றிருவடிதன்னின்
மாலிறைஞ்சிடத்தழுவியேமகிழ்ந்தினிதிருப்பக்
கோலநன்மணிகாந்தினிசுதனெய்திக்கொடுப்பத்
தாலசேதனன்சத்தியவாமைக்குக்கொடுத்தான் (௩௭)

வினையெலாமறவேதியராசிகள்விளம்பத்
தினகரன்றனக்கன்பனுஞ்சத்திராசித்தின்
றனையளாகியசத்தியவாமைதன்மனத்திற்
றுணியகன்றிடச்சுந்தரனிருந்தனன்மன்னோ (௩௮)

சத்தனுவாவதைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௧௧.

# ௩௮-வது காளிந்தி தேவியார் திருக்கலியாணப் படலம்.

வேளுந்துதிசெய்யவிசையனேடுகானேகி
நாளுந்திரைக்கடலினண்ணுதவன்பயந்த
காளிந்திநற்றவங்கண்டேமணந்தகண்ணன்மலர்த்
தாளுந்துன்னும்வினைகள்சாற்றுமவன்பெயரே (௧)

வித்துருமமொத்தவிதர்ப்பனுவந்தருண்மின்
சத்தியவாமைநலசாம்புவதிதற்சூழ
நித்திலம்பொன்னீலநிறைந்தமணிமண்டபத்தி
னத்திஞெளிர்செங்கையரிவீற்றிருந்தநாட்டனிலே (௨)

வேறு. அரவுயர்வஞ்சன்செய்தவரக்குமாளிகையினிட்ட
வெரியிடையுய்ந்துவேந்தர்குந்தியோடெய்தியேதான்
வரைதனிற்றுயிலவந்தவிடும்பனைவதைத்துவீமன்
சரியிலாக்கமலவல்லிதனையணைந்திருந்தநாளின் (௩)

அன்னவள்வயிற்றிற்றேன்றுங்கடோற்சசனுடனேயந்த
மின்னவணிருக்கவைந்துவீரர்களன்னையோடு
மின்னலின்மறையோர்வாழுமேகசக்கரத்தினெய்தி
வன்னிபோற்கனன்றுவந்தபகனைவாள்வீமன்கொன்றான் (௪)

மறையவரிடரைநீக்கிவல்லையினேகிச்செல்லு
நெறிநிசிநிறையவாற்றினீர்விளையாட்டினின்ப
முறுமுயரங்கிராமேல்விசையனேர்கொள்ளிவிட்டே
யெறிதலுந்தோற்றவன்றுளிறைஞ்சிடவவனையோவி (௫)

பரிகரியிரதமிக்கதுரோபதன்பதியையெய்தி
யரசர்கள்வளைக்கமாட்டாதவனியிற்கிடந்தவில்லை
விரைவினினணையேற்றிமீனெய்தவிசயன்மார்பி
னரியுறுமலங்கறன்னைத்துரோபதையணிந்தபின்னர் (௬)

வரிசிலைவளைக்கமாட்டாமன்னவர்திரண்டுதேர்மேற்
பொருதவர்வென்னிட்டோடப்புகையுறுவாளியெய்து
தருமனேடைவரெய்தித்தையலைவதுவைசெய்தே
யிரதமீதேறிப்பாண்டுமுன்னவன்பாலினேக (௭)

அந்தணுமரசன்பின்னேனருளியவைவர்கட்கு
மிந்திரப்பிரத்தமீயவிரதமீதேறிப்பாரி
னந்தமாநகரினெய்தியடைந்திடுமியல்புக்கெல்லா
மிந்திரைகொழுநன்றன்பாற்றருமன்றூதேவினுனல் (௮)

வந்திடுந்தூதரெய்திமாதவனடியிற்றாழ்ந்து
குந்திதன்சுதர்கள்செய்கைகூறிடச்சேட்டுமாயோன்
சிந்தையின்மகிழ்ந்துதந்தைக்கிளையனுஞ்சினிதான்பெற்ற
மைந்தன்சாத்தகிதன்னேடுமணிநெடுந்தேரிற்போனான் (௯)

இந்திரப்பிரத்தத்தேகியைவர்களெதிர்வந்தெய்த
வந்துமாலறன்சேய்தன்னைவீமனையிறைஞ்சியாங்கே
யிந்திரன்றனையன்றன்னைத்தழுவிமைத்துரைதானின்ற
மைந்தர்களடியின்வீழக்குந்தியையவணங்கினுனல் (௧௦)

மயன்விடைகொண்டுபோனபின்னர்மால்விசயனோடு
மயமுறுதேரினேறியனிசமாவெள்ளஞ்சூழப்
புயலடர்திகிரிசாலங்குரவசம்பொருந்தவோங்குங்
கயமுறுகானின்வேட்டைவிரும்பியேகடிதிற்சென்றார் (உஉ)

வேறு. கொம்புகுறித்தனர்பகழியெடுத்தனர்குனிவில்லார்
பம்பையடித்தனர்கடிதினுற்றனர்படிமீதின்
கம்புமுழக்கினர்கணைகள்விடுத்தனர்கதமல்கு
மும்பலுகைத்தனர்வயினர்வளைத்தனருரவோரே (உங)

கரிகிறைபற்றினர்முயல்களடித்தனர்கடிதோடி
வரையினினுற்றனர்பகழிவிடுத்தனர்வளைவில்லோ
ரெரிசினமுற்றிடுமரியைவதைத்தனரிடியஞ்சு
முரையினர்சுற்றினர்முடுவலைவிட்டனருயர்வேடர் (உச)

ஊக்கமிகுத்தவர்கணைகள்விடுத்தனருயரோங்க
லாக்கையர்கச்சையின்மீதுடைவாளினரமரஞ்சார்
நோக்கமுழலுற்றவரிடிகளுமஞ்சிடநொடிவாயர்
சீக்கைவிளைத்தனர்வலைகள்வளைத்தனர்சினம்விஞ்ச (உரு)

சுறடிபிடித்தனர்மயிடமடித்தனர்கணையேவி
நெறிகளடைத்தனர்ஞமலியைவிட்டனர்நெறியாக
வுறுகதமுற்றிடுமுழுமைகள்செற்றனருருமேபோற்
பறைகளடித்தனர்துடிகைகள்கொட்டினர்படிமீதே (உகா)

சலைகளடித்தனர்கசமுயிர்செற்றனர்கடிதோடி
வலைகள்வளைத்தனருழைகள்வதைத்தனர்மயிடத்தின்
றலைகளறுத்தனர்கரியைவதைத்தனர்தரைமீதிற்
புலிகளடர்த்திடவதனையெதிர்த்தனர்பொரும்வேடர் (உஎ)

மாவினிலுற்றவர்வாளையெடுத்தனர்வயவீர
ராவியமிற்றிடவேகதைவிட்டனரழல்வாளி
தூவியடர்த்தனரிருளிவதைத்தனர்சுடர்வேலா
லாவிசெகுத்தனரோவியகாயத்தினையம்மா (உஅ)

கட்கமெடுத்துயர்கடகம்வதைத்தனர்கடிதேகி
யுட்கதமுற்றிடுமிபகிரையட்டனருடைவாளான்
முட்கொடிதாயடர்கானின்முடங்குழையுயிர்செற்றார்
புட்கொடிவீரன்விரும்பிடவேபொருமரிகொன்றார் (உகூ)

பாத்தன்விலால்வெயபகழிவிடுத்தேயரிகொன்றான்
சாத்தகிசார்த்தூலங்கரிகிரிவெந்தழல்வாளி
கோத்துயிர்செற்றான்கொம்புகுறித்துச்சினவேட
ரார்த்துழையாளியாவிதமெல்லாம்வதைசெய்தார் (கூ0)

கந்தமெடுத்துக்கந்தினின்வைத்தேகழைமேவும்
பந்தரினின்றுபந்தமுயர்த்துப்பல்லீயச்
சிந்தவிசிந்தக்குழிசியினச்சாரஞ்சேர்த்தே
நந்தர்தனந்தன்றன்முனருய்த்தார்நல்வேடர் (கூக)

சித்தசனத்தன்மைத்துனனோடுயர்தேரேறி
யத்திரம்விட்டுயரெண்குகரித்திரளாருணங்கள்
சித்திரகாயமரித்திரளும்வதைசெய்தேவா
னத்தொடுகயலுறும்யமுனையினண்ணினன்வெயில்விஞ்ச (கூஉ)

தினகரன்புதல்வியோடுஞ்சில்லியந்தேரிலேறி
யனகன்பாண்டவர்கடன்னோடிறுவியேயனிகஞ்சூழக்
கனகவோபுரங்கள்சூழுங்கடிபொழிற்றுவரைதன்னிற்
சினிகவின்புரல்வனுனசாத்தகியுடனுஞ்சென்றான் (சச)

அன்னையர்தமையிறைஞ்சியலாயுதனடியிற்றாழ்ந்து
மன்னவன்வசுதேவன்றன்மலரடிவணங்கியோங்கும்
பொன்னின்மண்டபத்திற்சேக்கைபொருந்திடவிதர்ப்பன்பெற்ற
அன்னம்வந்தச்சுதன்றன்னடிதொழுதருகிருந்தாள் (சரு)

சத்தியவாமையெண்குதக்கசாம்புவதியின்பி
னுத்தமனடியிற்றாழ்ந்தேயுண்மகிழ்ந்திடக்காளிந்தி
தத்தைதேவகிதன்றாளினிறைஞ்சிநற்றவமிக்கான
சித்தசனன்னைபாதம்வணங்கினள்சிறக்கமாதோ (சசு)

தூயதேவியர்கள்சூழத்துலங்குமாமண்டபத்தின்
வீயுறுகுழலினார்கள்வீணையாழிசைக்கவேலை
காயுமான்விழியினார்மெய்கலனுறநடிக்கக்கண்டு
மாயவனிருந்தான்றூயமாமறையோர்கள்வாழ்த்த (சஎ)

காளிந்தி தேவியார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் -சருஅ.

## அசு-வது மித்திரவிந்தை தேவியார் திருக்கலியாணப் படலம்.

உத்தமவந்திமாராசனெண்ணகர்
மொய்த்தெதிரரசர்வென்னிடமுடுக்கியே
மித்திரவிந்தையாந்திருவைவேட்டரு
ணத்தொளிர்செங்கைநாரணனையேத்துவாம் (க)

சாமரைபுரளநற்றருமமோங்கிட
மாமணிக்கலன்கண்மார்பினில்வயங்கவே
காமனையளிப்பவளுடன்களிப்புறப்
பூமனையளித்தவன்பொருந்துநாட்டினில் (உ)

வேறு. தவந்தனைப்பகழியாக்கித்தருமமாந்தனுவைக்கோட்டிப்
பவந்தனைத்துணித்துவீழ்த்திப்பாரினிற்செங்கோலோச்சி
யுவந்திடுமறையோர்போற்றவொருதனிக்குடைக்கீழ்வைகு
மவந்திமாராசன்பெற்றவரிவைவானரம்பைபோல்வாள் (ங)

சூரசேனன்றான்பெற்றதுய்யராசாதிதேவி
சீருறுவசுதேவன்றன்சகோதரிசிறப்பான்மிக்க
வீரர்கண்மதிப்பப்பாராள்விறல்வந்திராசர்க்கன்பாம்
பாரிகற்புடையாள்பெற்றபைந்தொடிபவளம்போல்வாள் (ச)

அத்திரம்போன்றகண்ணுளாரவிந்தவதனத்தாளொண்
முத்தெனுநகையாள்கோங்கின்முகையெனுமுலையாள்வண்மை
நத்தெனுங்கிரீவத்தாளோதிமமெனுநடையளாய
மித்திரவிந்தைமேகக்குழலண்மெல்லிடையாங்கொம்பு (ரு)

அன்னவளெழிலைநோக்கியவந்திமாராசனென்று
மன்னவன்மகளுக்காங்கேயனுவைசெப்பருவம்வாய்த்தென்
றுன்னியிச்சுயம்வரத்திற்செய்தவிரொக்கலையென்றே
யின்னிலத்தரசர்க்கெல்லாந்தூதரையேவினுன் (சு)

ஆதுவர்வரைவினெய்திச்சொல்லலுந்திருபரெல்லா
மாதரவுடனேதேரினேறிமுற்றுழிவந்திப்
போதகமிரதம்பாய்மாப்படையொடுவையமீதின்
மாதவன்வந்திமன்னன்வாயிலிற்செறிந்தார் (எ)

நீலமொண்வயிரம்பச்சைநித்திலம்பவளம்பைம்பொன்
சோலகன்மணிகளெல்லாங்குயிற்றியமண்டபத்தின்
மாலைகண்மாழையாடையங்கியகிரணமான்ற
மேலவணிரேபோன்றவிலங்கியபீடத்தூழ (அ)

துன்னியமணித்தூணெல்லாந்துலங்கியமண்டபத்தின்
மன்னவரளப்பிலாதோர்பயந்தியேயிருந்தகாலை
மின்னிடைக்கலாபந்தோன்றமித்திரவிந்தைமெய்ய
மன்னமுநாணக்கையினலங்கலோடெய்துற்றாள் (கூ)

செல்லுயர்பிறைவில்வாணிசெங்கிடைவள்ளையார்ந்த
வில்லுவங்குமிழ்வெய்சோதிவிளங்கியகலசங்காந்தள்
வல்லிகற்கதலிவள்ளிவாளொளிப்பரப்புஞ்சோதி
லல்லியங்கமலமான்றவாடகக்கொம்புபோல்வாள் (க0)

இத்தகையெழிலாள்மிக்கமாதுமிணைப்புறிந்தொல்லோன்
மித்திரவிந்தைதன்னைமோந்துமேவல்லோரெல்லாம்
சித்திரம்போலநிற்கச்சிறந்துமின்னலங்கற்றன்னைக்
கைத்தலந்தன்னில்வாங்கிக்கண்ணன்றன்மார்பிலிட்டாள் (கக)

தெரியலைமங்கைவாங்கிச்சீதரனுரத்திற்போட
வரசர்களெல்லாநெஞ்சமழற்றுதற்கண்ணராகிக்
கரிபரியிரதவீரர்சணக்கிறந்தவர்களெல்லா
மரியிணைவளைத்ததோலினிறையெனயார்த்தாரன்றே (கஉ)

நிருபர்கள்வளைக்கமாயோனெடுஞ்சிலைவளைத்தவாளி
கருமுகில்பொழிந்தாற்போலச்சொரிதலுஞ்சரிமாகிரர்
தரணியின்மடிந்துவீழத்தசையுறுகுருதியெல்லாம்
பெருகிடக்கவந்தமாடப்பேய்களுங்களித்தமாதோ (கங)

நீறணிகடவுள்கண்ணினெருப்பினுற்புரங்கள்வெந்த
வாறெனவனீகமெல்லாமவனியின்மடிந்துவீழ
நாறுபூங்குழலினுண்மேனமிமயலெழுந்தவேந்தர்
பாறினராசைதோறும்பரிபவந்தொடரவம்மா (கச)

பீதிகொண்டரசரெல்லாம்பிறகிடமாயோன்றேர்மேல்
வீதியினெய்தமாதர்விழைவுறக்கண்ணுறேற்றி
மாதவன்வடிவினுலேயிமைக்கிலார்மயங்கிநிற்ப
ஏதமிலவந்திமன்னனெதிர்கொளக்கோயில்போந்தான் (கரு)

நவமணியினங்கள்சூழநன்பொருவிழைத்திலங்கு
முவமையிறூண்களெல்லாமுறவுயர்மண்டபத்தன்
றவர்களெண்சீலமிக்கமித்திரவிந்தைதானுந்
துவரையின்வீரன்றானுந்துலங்கவாதனத்திருந்தார் (கசு)

நெய்யினுகுதிகள்கார்க்கனிறைந்திடநெடியமாயன்
மெய்யொளிர்பவளம்போன்றமித்திரவிந்தையென்னுந்
தையல்கந்தரத்தின்செங்கைதன்னின்மங்கலநாண்சாத்தி
கையினாற்பொரியும்வீசக்களித்தம்மிமிதித்தாண்மங்கை (கஎ)

வானுயர்வடமீனேக்கிமாயவன்றேவிதன்னே
டானெய்பாலன்னமாழைக்கலத்தினிலமுதுசெய்தே
தேனுறுமலங்கல்சூடிச்சிறந்திடக்கலவைபூசி
மீனுறுங்கொடியோனைவிழுமியவின்பந்துய்த்தான் (கஅ)

நிவந்ததோலயுதமம்பொன்னிறையுமாதேரிரட்டி
சிவந்தவாய்மடவார்நானூறிவுளியோர்கோடிசிரா
மவந்திராசன்றனீயவச்சுதன்றேவிதன்னே
டுவந்திரதத்தினேறித்துவரையினுற்றான்மாதோ (ககூ)

மின்னிடைப்பவளக்கொம்பாமித்திரவிந்தைதன்னே
டன்னையர்தாளிற்றாழ்ந்தேயருள்செறிவசுதேவன்றான்
பொன்னடியிறைஞ்சுமாயோன்பொலன்கழற்பணிந்துநின்றாள்
தன்னிகரிலாதசிலவிதர்ப்பர்கோன்றந்தமங்கை (உ0)

சேடுறுநளினமங்கைசிமந்தகமின்சாளிந்தி
யாடகக்கொம்பாஞ்சாம்புவதியன்பாரவந்திராச
னீடியதவத்திற்பெற்றநேரிழையிவர்களின்பங்
கூடவேவசுதேவன்றனகுமரன்வீற்றிருந்தான்மாதோ (உக)

மித்திரவிந்தை தேவியார் திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சுஎகூ.

---

# அரு-வது நாக்கினசித்து தேவியார் திருக்கலியாணப் படலம்.

---

மாமகமெல்லாநூறிமறைத்தவர்வருந்தத்துய்ய
நாமகள்கொழுநனைநாலிருநயநனுய
பூமகன்மெலியவேதம்பறித்தகல்புணிரிபுக்க
சோமுகன்றன்னைச்சேலாய்த்துணித்தவன்புகழைச்சொல்வாம் (க)

அவியினல்வேள்விசெய்யுமருந்தவர்மகிழநீளும்
புவியினிற்செங்கோலோச்சிப்புரந்தரன்போலவாண்டு
குவிமுலைபார்பல்லாண்டுகூறிடமதியைநேராங்
கவிகையின்னிழலின்வாழ்வோன்கவுசலராசராசன் (உ)

ஆயதோர்காலைதன்னினரசனேழ்விடையைவிட்டான்
றீயெழவிழித்துச்செல்லுமவரையேசினந்துநோக்கி
யேயெனுமுன்னமெய்தியிடியெனவதிர்த்துக்கோட்டாற்
பாயவேவெருவிமன்னர்பார்மிசைப்பாறினாரால் (௧௪)

கடுவிடமெனவேயெய்திக்காவலரோடப்பாய்ந்த
விடையினமேலெழுந்துதன்மேல்வெற்பெனவருதலோடு
நெடியவனுருவேழாகிநின்றொருகணத்தின்முன்னர்
கொடியவேழேற்றின்வாலைப்பற்றியேசுழற்றிக்கொன்றான் (௧௫)

ஏழுருவாகிநின்றவிடையினையெதிர்ந்துசெற்ற
பாழியம்புயத்தோனுக்குத்தேவியர்பலரென்றாலுந்
தோழிமீர்கவுசலன்றன்றனியறப்பெற்றுவந்த
வேழைதோளொருவனென்றுமிவனெனவறைந்தார்மாதோ (௧௬)

அந்தரத்தமரர்போற்றியாடகமலர்கடூவ
நந்துதுந்துமிகளார்ப்பநான்மறையோர்கள்வாழ்த்தச்
சுந்தரவிமானமீதிற்றுலங்கிடவானிற்றோன்று
மிந்துநேர்வதனிகையாலலங்கலையெய்தாளம்மா (௧௭)

அரியுறுமலங்கறன்னையரிவைசேரரிதன்மார்பிற்
சரியுறுகரத்தால்வாங்கியெறிந்திடுஞ்சதுரைநோக்கி
வரிநெடுங்கண்ணார்சிந்தைமகிழ்ந்தனர்மாயோன்றானுந்
திருவுளமகிழ்ந்துநின்றான்றேவர்துந்துமிகளார்ப்ப (௧௮)

அறனுறுங்கவுசலக்கோனன்பெனுங்கடலினாழ்ந்து
மறையவர்சூழவேகிமாயனைத்தழீஇக்கொண்டேகிக்
குறைவிலாமரகதத்தூண்கோலமார்மண்டபத்தி
னெறியுறுமுனிவர்சூழநேமியோனுடனுஞ்சென்றான் (௧௯)

ஆரமாமணியொண்ணீலமணியுறுமாலையெண்ணில்
வேரிமாமலர்கொள்மாலைவிளங்கிடச்சூழநாற்றி
நேரிலாவரிகளேந்துமாதனமீதினீளும்
வாரிமேலிலங்குவானுமங்கையுமிருந்தார்மன்னோ (௨௦)

பங்கயன்போன்றகர்க்கன்பரிவினாகுதிகள்செய்யக்
கங்கையேதிகழ்பாதத்தன்கவுசலராசன்பெற்ற
மங்கைதன்கந்தரத்தின்மங்கலநாணைச்சாத்தி
யங்கியைவலமாய்வந்தான்றாள்பிடித்தம்மிவைத்தான் (௨௧)

அரிவைதன்னுடனேமாயனருந்ததிகண்டபின்னர்
நிரைமணியரிவாணத்தினிறையுமோதனம்பாற்றேக்கித்
தெரிமலர்சூடிநானங்கமழ்ந்திடச்செம்பொற்சேக்கை
யிருவருமெய்தியின்பக்கடலிடையிருந்தாரன்றே (௨௨)

ஆனிரையயுதமின்னேரிடையினாராயிரம்பேர்
மானவகோடிவீரர்மற்றதிண்கரிமடங்கோ
டனமிலிரதமெண்ணாறுயிரமீந்தானென்னே
னூனுறுவேல்கொள்கையான்கவுசலனுவந்துமன்னோ (௨௩)

ஊக்கமார்கவுசலக்கோனீந்திடவுவந்துமாயோ
னாக்கினைசித்தியோடுநலனுறுமிரதமேறிக்
கோக்குலவீரர்சூழவருங்குந்திசுதனோடன்பு
நீக்கமினெஞ்சனாகிநெறியிடையேகுமெல்லை (௨௪)

வேறு.

சுத்தமாமறைகள்சாங்கியத்தின்றேல்பொருள்
கைத்தலக்கனியெனக்காணுங்காட்சியா
னத்தூறுவயல்செறிநாட்டையாள்கின்ற
மத்திரன்குலத்திருட்சுரதகீர்த்திமன் (௨)

அன்னவன்பயந்தனனன்னமென்னடை
மின்னிடைகழைகடோளயில்விலோசனக்
கன்னறேன்மொழிகவின்பூகங்கந்தர
மென்னவேயிலங்கியவெழில்கொள்பத்திரை (௩)

கீதவேழிசையெலாங்கிளத்துமஞ்சுகந்
றீதிலாவுயர்புராணங்கள்சேரவே
யோதியங்குயர்ந்தசிற்பொருளையுன்னியே
மாதவனுதியென்றுணருமாமயில் (௪)

தூயமாமதுரையிற்றோன்றிக்கங்குலி
னுயர்நாயகன்மனையணுகியெய்தியே
பேயொடுசகடமாசுகம்பெசங்கன்று
தீயவேவதைத்தமால்செயலையுன்னுவாள் (௫)

தனுவினைமுரித்ததுங்கரியைச்சாய்த்ததுஞ்
சினமலிமல்லரைத்தரையிற்றேய்த்ததும்
வினையுறுகஞ்சனைவென்றவீரமு
மினியநல்வீணையினிசையப்பாடுவாள் (௬)

செருவினைவென்றுருப்பிணியைச்சேர்ந்தது
மிரவிநேர்மணியொடுமெண்கனீந்திடு
மரிவையோடமர்ந்ததுமலரிக்கண்பனு
நிருபர்கோனளித்தநேரிழையையுற்றதும் (௭)

என்றருள்காளிந்தியியற்றுமாதவ
நன்றெனமொழிந்தவணகிலைச்சேர்ந்தது
மன்றமர்செய்துவென்றவந்திமன்றரு
மன்றலர்குழலிதோளணைந்தவண்மையும் (௮)

விலங்கல்போலெதிர்ந்துமேலடர்ந்தவேற்றினங்
கலங்கவால்பிடித்திழுத்தறைந்தகாலையி
னலங்கலந்தோளின்மீதெறிந்தவாயிழை
யிலங்கவேயணைத்ததுமெண்ணிச்சோர்குவாள் (௯)

முடிமுகில்பிறைநுதன்முளரிசெங்கண்க
ளடியிடைதோள்கரமதரமார்புய
வடிவெலாங்கவினுறவரைந்துமாட்சியாம்
படமுறநோக்கியேபகருவாளரோ (௧௦)

கருமுகிலனையநின்னுருவங்கண்டியா
னுருகிடுமயலறவுற்றணைத்தெனை
மருவவிவ்வோவியவடிவமாகவே
யரியெனையணைத்தியென்றயருமெல்லையின் (௧௧)

கோடுயராழிகைதிகழக்கொண்டல்போ
லாடகவாடையுமணிந்துபங்கயக்
காடெனக்கண்கள்வாயுந்திகால்கர
மோடுறத்தோன்றினன்முராரிமாதுமுன் (௧௨)

றுண்டினபுரத்துறுமோகூடிநேன்றுட
ஞெண்டொடியார்பிசுபுவர்ந்தருந்திடக்
கொண்டன்மின்குழாமொடுகூடச்சேர்ந்தபோன்
மண்டபத்திருந்தனன்மாயன்முனமேரா (௨௨)

பத்திரையார் திருக்கலியாணப்படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் -௫௬௫.

---

# ௮௭-வது இலக்கணை தேவியார் திருக்கலியாணப் படலம்.

ஞாலமெண்பத்திரனகரமெய்தியே
வேலொளிர்விசயனெய்விசிகத்தப்பிய
சேலுறவெய்திலக்கணையைச்சேர்ந்தருண்
மாலடிதொழுதிரும்பிறவிமாயவே (௧)

வேறு. சீருறுநெறிநால்வேதந்திங்கண்மும்மாரியெல்லாம்
பாரினினிறையவாழும்பத்திரராசன்மைந்தன்
பேரியல்புடையவீரனாகியபிரகசேன
னோருறப்பயந்தநங்கையிலக்கணையென்பாண்மன்னோ (௨)

கழையினைநிகராந்தோளாள்காந்தளைநிகராங்கையா
ளுழைநிகர்விழியாடேவியோதிமநடையினாள்சீ
ரிழைநிகரிடையாள்செம்மையிலவைநேரதரத்தாள்வான்
மழைமுகினிகராமோதிவளைவினோர்புருவமங்கை (௩)

பங்கயமுகையைப்போன்றபயோதரிபாரின்மேவுங்
கங்கையின்சுழியையானக்கவின்கொளுமுந்தியாள்பொற்
சங்கமாம்பூகமாணத்தரளமார்கந்தரத்தாள்
மங்கயர்திலகந்தாவிளக்கெனவயங்குமாது (௪)

இயல்புறுபுராணமாறுசாத்திரமிவைகளெல்லாங்
குயின்மொழியணங்குனாடாநேனுதிமைக்கொண்டல்வண்ணன்
கயலுறுகடலையோவிக்காசினியெய்திவெண்ணெ
யயிலுவோன்செயலையுன்னிமயலெழவணையிற்சோர்ந்தாள் (௫)

அலக்கணுற்றயர்ந்துபஞ்சவணையின்மீதயர்ந்துவீழ்ந்த
விலக்கணைதன்னைமாதரிருகையாலெடுத்தணைத்துக்
கலக்கமுற்றிமசலத்தைவிடவிழித்தெழுந்தாள்கன்னி
துலக்குநல்லோவியந்தானுயிர்பெற்றதுய்மைபோல (௬)

அரியுறுமிழுதுபோன்மெய்யுருகிடவனங்கன்சாபத்
தரியுறுநாணைவாங்கிவிடுத்தவாசுகங்களுள்ள
மரியவேநொந்துமாலாமளக்கரினழுந்தித்தூய
வரிசெயறன்னையுள்கியிலக்கணையறைகின்றாள் .(௭)

மொழியினாற்குயில்களுனமுனைந்திருலிந்துநாண
விழியினாலுழைகளுனமிடையினான்மின்னுநாணக்
குழையினால்வள்ளைநாணக்கொங்கையாற்குரும்பைநாண
வழகினாலரம்பைநாணவரசர்கண்மயங்கவந்தாள் (௧௯)

பரிபுரமரற்றப்பாதசாலமும்வயங்கிக்காட்டத்
தெரிமணிக்கலாபமின்னச்சிறந்தபொற்கலிங்கந்தோன்ற
விருகரவளையிலங்கவெழின்முலையாரமாடச்
சுரிகுழலணியுமாடத்தோடுகாதாடவந்தாள் (௨0)

அரிமலரலங்கல்கையினழகுறவெய்தித்தோன்றுந்
தெரிவையையனோக்கிமன்னர்சித்திரம்போலநின்றார்
கருமுகில்வண்ணமாலைக்கண்டிலக்கணையாங்கோதை
இருகணேடாவிசிந்தையவன்வயினெய்தநின்றாள் (௨௧)

மாரன்விற்காற்றாராகிமகதர்கோன்றந்தமைந்தன்
வீரரெண்விசயனங்கன்சேதிபன்முதலாம்வீரர்
பாரின்வில்லெடுத்துநாரியேற்றியேபழிதன்றால்
நாரமுண்மயிலைப்பெய்துபழுதுறநாணமுற்றார் (௨௨)

விரியர்கையில்வாளிபழுதுறவெள்கிநிற்ப
ஆரியன்சிலைநாணேற்றியாசுகந்தொடுத்துத்தாழி
நீரினுணோக்கிவாளியெய்திடநெடுமீனறுபப்
பாரினில்விழத்தேவர்பன்மலர்தூவியார்த்தார் (௨௩)

சங்குமாபணவம்பேரிசச்சரிதழங்கப்பாரி
னெங்குநான்மறையோரேத்தவிலங்குமாதவன்றன்றோளிற்
பங்கயத்திருநேரானவிலக்கணைபரிவினாலே
வங்கையினலங்கறன்னையணிந்தனளமரர்வாழ்த்த (௨௪)

சேலறவெய்துநின்றதிருமகள்கணவனை
மாலுடன்மறையோர்சூழப்பத்திரமன்னன்மாசி
னீலமாம்வயிரம்பச்சைமரகதநித்திலஞ்சேர்
கோலமாமணியார்தூண்கள்கொண்டமண்டபத்திற்புக்கான் (௨௫)

சாதிபுண்டரிகம்வெட்சிதளவுகல்லாரம்வல்ல
சோதிசெய்மாலைசாலநவமணிக்கோவைதோன்றக்
கோதயர்திபமேந்திக்குலவுமண்டபத்தின்மீதின்
வேதியர்முனிவர்வேந்தரிவையர்மிடைந்தார்மாதோ (௨௬)

அலரியின்சுடரைக்காட்டுமவிர்மணியாதனத்தி
னிலகியநீலந்தன்னொடெழின்மணியமைந்ததென்ன
வுலகயின்மாயவன்றானிலக்கணையுடனீள்பாரி
னலனுறவீற்றிருந்தானகர்கடுதிப்பமன்னே (௨௭)

கரதாலாமலகம்போலவேதநூல்காட்டுஞ்சொல்லின்
சரதநான்மறையோர்சூழத்தவமுயர்கர்க்கனெய்திச்
சுருதியான்மொழிந்ததுய்யகும்பமுந்துலங்கவைத்தே
அரிதிருக்கையின்மங்கைகரத்தினிலணிந்தான்காப்பு (௨௮)

மந்திரநவின்றுநெய்யினாகுதிவழங்கவன்பின்
குந்திதன்முன்னோன்மைந்தன்மங்கலநாண்கைக்கொண்டே
யிந்துநேர்வதனியானவிலக்கணையென்னுமாதின்
கந்தரந்திகழச்சாத்தக்கம்பினங்கரங்கிற்றம்மா (௨௯)

முரனுடனீரேழுலகுளோரஞ்சமுடிகியெண்டிசைகளைவென்ற
விரணியநயனன்றனைவதைத்துயர்ந்தவெண்கணன்வலாரியோடேத்தத்
தரணியையெயிற்றிலிடந்தருள்வராகமூர்த்திதன்வோர்வினிற்சனித்த
வருணயமில்லாநரகனெண்பிறக்குச்சோதிடபுரத்திடையமர்ந்தான் (௨)

நிலமொண்டரளமணிமரகதங்கணிறைந்திடுமாடகோபுரங்கண்
மேலவன்பதத்தினுயர்ந்திடவயங்கும்வீதிகோபுரத்தினின்விளங்கக்
காலயந்தேயுக்கான்வரைநாரங்கணையுடனெழுவகையெயிலுங்
கோலமுற்றிடவேவளைந்திடக்கரிமாவீரர்தேர்குரகதம்நிறைய (௩)

வாறுறுமுரன்றன்னமைச்சனாய்வயங்கமற்றவன்சுதரெழுவோர்கள்
கரிபரியிரதந்துவாதசக்குரோணிசேனைக்குங்காவலராக
வருணனோடியமன்குபேரனைவென்றுமரனுநரகன்வானவர்கோன்
வெருவவெண்கவிகைமணிவரையதிதிகுண்டலம்விரைவினிற்பறித்தான் (௪)

அரசர்கள்பதினாறாயிரத்தவரையருஞ்சிறையிருத்தியேயவர்தா
மிருநிலம்வயங்கப்பயந்தகன்னியர்களெண்ணிரண்டாயிரத்தவரைச்
சுரருலகியங்குமரம்பையர்முதலோர்தும்புருநாரதர்நாணச்
சரியிலாக்கிதம்பயிற்றுவித்தனனாற்சதமகன்கவிகையைப்பறித்தான் (௫)

அடுஞ்சினநரகாசுரனிடுஞ்சிறையினழுந்தியவரசர்களொருங்கங்
கொடுங்கியேயுலர்ந்தேயுழல்பவரெம்மைச்சிறைவிடுத்துநவுதியென்னக்
கடுஞ்செறிகரியைக்காத்தருளரிபாற்கடுகியதூதரையேவத்
தடஞ்செறிதுவரையடைந்தரிமுனரினிருபர்சொற்சாற்றினரன்றே (௬)

மன்னவர்விடுத்ததூதுவருரையைவாசுதேவப்பிரான்கேட்டே
இன்னல்செய்நரகாசுரன்றனைவதைக்கவெண்ணிவானிமையவர்போற்றப்
பன்னகப்பகைஞன்றோண்மிசையதனிற்பண்மொழிச்சத்தியபாமை
தன்னுடன்விரைவிற்சென்றனன்கவிகைதயங்கிடச்சாமரைபுரள (௭)

துலங்கியபிறக்குச்சோதிடபுரத்தைச்சூழ்ந்திடும்புரிசைமாவரையை
இலங்கியகவுமோதகக்கதையதனாலிமைப்பொழுதினிற்றுகளாக்கிச்
சலங்கனலயங்காலெயில்களைத்திகிரிதன்னினாலறுத்துயர்வாளால்
விலங்கல்சால்பழுவமழித்தொருகணையால்விசிகமாமதிலினைச்சிதைத்தான் (௮)

எழிலிமீதுயர்ந்தவெழுவகைமதிலுமிமைப்பின்முன்னழிந்துயரண்டங்
கிழிபடுகாலமடர்ந்ததென்றிமையோரயிர்த்திடக்கிரிகளுமசைய
விழிதழலுறவேபுவியினைத்தாங்குஞ்சேடனுமிடியெனவெருவக்
குழலிசைவாயாற்பாஞ்சசன்னியங்கைக்கொண்டவண்முழக்கினன்கோமான் (௯)

**வேறு.** அரிகலுழனின்மிசையனநடையாளொடுமணுகியவ்வெயிலேழு
மொருநொடியிடுமுனமழிவுசெய்துயர்வளையூதியவொலிகேளா
விருநிலனயநிறைநதியினுண்மாமுரனிறுதியினுறுமேற்றி
னரனெனவைமுகமிலகவயங்கியவயில்கொடெதிர்ந்தனனால் (௧௦)

அவனியதிர்ந்திடவமரர்களஞ்சிடவார்த்தெதிர்சூலத்தா
லவனன்மெய்குருதிகளொழுகிடவான்மிசையுரனொடுருத்தலுமே
சிவனிடர்களையரியிருகணைகொடுவருதினகரனவிரேபோற்
பவமுறுமுரனிருகையினமரயிறுகள்படவுடற்றினன்மாதோ (௧௧)

அயிறுகடரமுரனடுசினமொடுவிடுமனவியகதைதானு
மியல்புடையரிகவுமோதகமோதிடவெணில்பலகூறாகக்
கயிலையினரனுதல்விழியுறுகனல்விலைகதமொடுதேரேறிப்
புயல்பொழிமழையெனவரிவிலொடுயர்கணைபுனிதன்மெய்யினிலெய்தான் (௧௨)

வேறு. முரன்விடுத்தகணையிறுதிக்காலமழையேயயவெங்கணுமுடுக்கியே
திரிபுரத்தினையெரித்ததேவனும்வெருக்கொளத்திசைகண்மூடவான்
சுரர்திகைத்தலறியோடவாரியனல்சூழும்வெம்மையதுகண்டுயர்
வரைகவித்துவருடந்தடுத்தவிறைவரிவில்வாளிகொடுமாற்றினன் (௧௩)

நீசனானமுரன்முனிந்துதாசனனெடும்படைக்கலம்விடுத்திட
வாசைவாரியுயரண்டமுற்றுமழல்விஞ்சிலேகர்திரளஞ்சியே
நாசமாமுலகமென்றுரைந்துமெய்நடுங்கவேவருதல்கண்டெழில்
வாசுதேவன்வரிவில்லினுலிரவிவாளிவிட்டவையறுத்தனன் (௧௪)

காயுதம்மெனமுனிந்துவாளவுணனஞ்சவிஞ்சவுமிழ்சஞ்சுகி
காயுதந்தனைவிடுக்கவானவர்களஞ்சவந்தடரவுணருங்
காயுதந்தனைலோகபாரணனிமைப்பின்முன்கடவவிரைபஞ்சு
காயுதாசனனையொத்தறைந்திடவெரிந்தமாசுடிகையரவமே (௧௫)

கறைமிடற்றரன்வெருக்கொளக்கடியகார்முகம்வளையவேமுரன்
மறலிதன்படைவிடுப்பமாதவர்களிரியவெண்டிசையின்வைகிடும்
கறையடிக்குலநடுங்கவேவருதல்கண்டுமாயன்விபுதர்க்கெலா
மறலிவெங்கணைகடாவியேயவையறுத்தனன்முனிவர்வாழ்ந்தவே (௧௬)

வேறு. வானேறெனவெதிர்த்தேமுரன்வரிவிற்கொடுகொன்றைப்
பூவேறியசடையோன்படைகடவப்புகையெரியாய்
மீனேறியகடல்வற்றிடவரவாவினம்விளங்கக்
கானேறிடைத்திரிவோனரன்கணையாலவைகளைந்தான் (௧௭)

முரன்விட்டிடுபடைமுற்றவுமுறியச்சினமுகிரா
வரிவிற்கடிதிரண்டாம்பிறைமானக்கையின்வளையா
வரிசத்தியவாமைக்கொடியருணர்க்கிளையவனீ
டரணிக்கணின்றெரியாவகைசரமாரிகள்பொழிந்தான் (௧௮)

வேறு. கடியவன்விடுசரமனைத்துமுறவுயரரிகணைசிலைகொடுவிட்டே
மிடலொடுபரிதியைநிகரெனவொளிவிடுதிகிரியைவிடவெனது
முடியொளிரைந்துகம்மறமுரன்மடிதலுமுனிவர்கடுந்தெய்த்த
நடமிடவமரர்கள்கடிமலருதவினரவனியினலனொய்து (௧௯)

முரனருள்புதல்வர்விபாவசுவசுசிரவணன்முதனிறமாய
வருணனுடன்போதாமிரனந்தரீக்கன்னறநெறியில்லா
வெரிகணன்பவனச்சுவன்முதலாகியவெழுவர்களுயர்சேனை
குரியவனாகியபீடனுடனிகமுறக்கணைபெய்தார்த்தார் (௨௦)

துந்துமிமுரசமுழங்கினசங்குகறங்கினதுவசங்க
ளந்தரமுறவிரதங்களடைந்தனவயநிரைபடிமிடையத்
தந்திகள்கடலெனநிறையவல்வீரர்கள்சாயகம்விட்டெதிரே
வந்துயர்வேலையில்வாண்மழுகுந்தமெறிந்தியவர்த்தனராய் (௨௧)

கரிபரியிரதமொடணிகம்வளைந்தெழுகடலெனவடர்தலுமே
யரிகணைபெய்திடவிபவணியற்றனவயநிரையற்றனவா
லூரனுடைவயவர்மடிந்தனர்செம்புனலோடியவாறெனத்
டரையினினலகைகள்சுற்றநடித்தனதாயுகவந்தமரோ (௨௨)

கொடிகுடையற்றனகவரிகளற்றனகுரகதமற்றனவாற்
சடகரியற்றனவரிசிலையற்றனகரமுரமற்றிடவே
வடவரையிற்றெனவவுணர்படிக்கணின்மடியவுடற்குருதி
கடலிடையுற்றனவலகைநடித்தனகழுதுகள்சுற்றிடவே (௨௩)

மறலியெனக்கரிபரியிரதத்திடைமலையவுணத்திரளோர்
பறைகளடித்திடவிடுபகழித்திரள்படியினிடைத்துகளாய்
நிறையமுடித்தலையுருளவிபத்திரனெடியசரத்துடனே
மறியவடிக்கணைதிசைதொறும்விட்டனன்மலர்மகளுக்கினியான் (உ௪)

இவுளிகளற்றிடவலவனுமற்றனனிரதமுமிற்றிடவே
அவசமுமற்றனவரிசிலையிற்றனதொடுகணையிற்றிடவே
யவுணர்களிற்றனர்மதகரியற்றனவலகைநடித்திடநீ
ளுவரியிலுற்றனநிறைகுருதிப்புனலுலகயில்வோன்கணையால் (உ௫)

விடியவிபநிரையிவுளிகளெண்ணிலவிடமெனவடரவுணர்
நீடியவரையெனவுடல்விழவெயிறுகள்பிறையெனநிலனுறவே
கேடகமறவிருகரமறமுடிமணிகிளரொளிவானமெலா
மூடிடவோடினகுருதிகண்மாயவன்முடுகியநீள்கணையால் (உ௬)

மலர்மகளையகன்வரிசிலையால்விடுவாளிமிடைந்திடலுங்
கலனொடுமார்பிருகரமரைதோடலைகால்கடுணிந்திடவே
மலையெனவீழ்மதவிபநிரையிவுளிகண்மாளமலைந்திடுவோ
ருலவையறைந்திடவுவரிகிழிந்தெனவோடினர்வாடியரோ (உ௭)

அரிசிலைகொடுவிடுசணையினிலவுணர்களமரின்மடிந்திடலும்
வெருவியுடைந்திடுமசுரரையஞ்சன்மினென்றுவிளம்பியுயர்
முரனருள்சிறுவன்விபாவசுவெஞ்சினமுடுகிடவையமிசைச்
சுரர்பயமெய்திடவேநெடுவாளிசொரிந்தனன்வில்லினரோ (உ௮)

ஈரமிலாமுரன்மகன்விடுகணையறயாதவர்தம்பெருமான்
கோரநெடுஞ்சரமெய்தழல்வாளிகுறித்தவன்மேல்விடலும்
வாரிகலங்கிடமதிகனலுற்றிடவடவையுமஞ்சிடமா
வீரவிபாவசுசென்னியறுத்தனன்விபுதர்நடித்திடவே (உ௯)

அசுரர்நடுங்கிடவிபாவசுமாண்டமைகண்டழல்வெஞ்சினனுய்
வசுநிகரற்றதோர்தேர்மிசையேவடவெற்பெனவந்திறுதிச்
சுசியெனவாசுகமாரிசொரிந்துயர்சுரர்கணடுங்கிடவே
சசிதரனஞ்சவருச்சுனமாகியசங்கமுழக்கினனால் (௩0)

திசைதிசைநிறையமுரன்சுதனேவுசிலீமுகமாரியெலாம்
நிசிகனலொளியனலுறுசெயலாமெனநேமிதரித்தபிரான்
விசிகம்விடுத்தவைநூறியிராக்கதர்வெம்படையுந்தியுயர்
வசுசிரம்வானுறவேதுணிசெய்தனன்வானவரேத்திடவே (௩௧)

அரவெனமுனிவசுசிரநெடுவானுறவசுரர்களோடிடலுஞ்
சிரவணனஞ்சன்மினென்றுயர்தேர்மிசைநின்றெளிர்சிலைவளையா
மருவமர்துளவனும்வசுதையுமுவணனுமறைவுறவிமையவர்க
டருவமர்நகரிறையுடன்வெருவப்பலசாயகமெய்தனனால் (௩௨)

முரனருண்மைந்தன்விடுங்கணையெண்டிசைமூடலுமாயன்விலாற்
சரமழைபெய்தவைமாற்றிமுரண்டருசமனுயர்படைவிடவே
யிரவியுமஞ்சிடவுததிகலங்கிடவெங்கணும்வெங்கனலாய்ச்
சிரவணன்வன்றலையைத்தரையிட்டனன்றேவர்களார்த்திடவே (௩௩)

முரனுறுசிரவணன்மடியமுனிந்துமுடங்குளைபோலவெதிர்ந்
தருணனுரத்தொடுதேர்மிசையெய்தியடற்சிலைநாணெறியாக்
கருணைமலிந்திடுகண்ணனைநீயிவைகாக்குதியோவெனவே
வருணனெடும்படைவிட்டனன்வானவர்மறுகியுளைந்தனரால் (௩௪)

மழுநேமிகன்னகம்வேலயில்வளர்குந்தமுழுசுண்டி
யெழுமாகதையவையெண்ணிலவெறிந்தும்வரிசிலையா
லழலாசுகஞ்சொரிந்தேகரியயந்தேர்நிரையனிகங்
குழனூறியவிறையோன்றனைவளைந்தார்த்தனர்கொடியோர் (௪௬)

வேறு வரையையொப்பவர்பிறையெயிற்றினர்வடவையுற்றெனவிருகணூர்
புருவநெற்றியினுறவிழிப்பவர்புகையுயிர்ப்பவராறனிலா
ருறுமுருட்கிடவெடிபடச்சொலுமுரையர்கட்செவியுமிழவே
வருவிடத்தினைநிகர்சினத்தினர்மறவருற்றனரிரதமேல் (௪௭)

படிபிளப்புறவடிபெயர்த்திடுபவர்களொப்பறுசிலையினைப்
பிடிகரத்தினர்பிறையெயிற்றனர்பிறிதியற்றுயர்முடியினு
ரிடிவெடித்திடவுறநகைப்பவரெழிலியைப்பிழியிருகையார்
கடமதித்திடுசரியினுற்றவர்கவசமுற்றொளிர்வயவரே (௪௮)

அடியினிற்பெருவரைபொடிப்படவிடரியத்தியினயமறக்
கடிதிறைப்பவரொருகரத்துயர்ககனமுற்றிடநிமிர்மெய்யார்
வடவையிற்றிடவிடுமுயிர்ப்பினர்மறமிகுத்தவருரகன்வாய்
விடமெனக்கதமுறுமனத்தினர்விரைவினுற்றனர்பரியின்மேல் (௪௯)

திசையினுற்றவர்வெருவவிற்கொடுசிலிமுகப்பெருமழைபெய்தே
சசியினற்பதியிமையவத்திரடவர்கண்முற்றவுமிரியவே
யசுரர்கைத்தலவளைமுழக்கினரழலுதிர்த்திடுநயனமா
கசரதக்குழுதுரகதத்தினமுறவளைத்தனர்கதமொடே (௫௦)

வேறு. மகராலயமெனவேவருமதமாவணிவளையச்
செகமாதரியுரகாரிமெய்தெரியாவகைசிலையா
லுகமாமழையெனவாசைகடொறுமாசுகமுறவே
யிகன்மாவுறுமிரதாதிபரசுரேசர்களெதிர்ந்தார் (௫௧)

அயில்வேலெழுமழுவாள்கதையடர்நேமிகளெறியப்
புயல்போலெழுசரமாரிகள்புவியாசைகணிறைத்தே
மயில்வாகனனயிராவதவிறைவானவர்வெருவ
வெயிலோனவிர்மறையும்படியசுரேசர்கண்மிடைந்தார் (௫௨)

எல்லோலநிறைந்தேவருகடலாமெனவசுர
ரெல்லோர்களுமம்பல்லாயுதமெரிந்தெய்துவந்தடர்ப்பச்
செல்லாமெனத்திகழ்மேனியன்றிசைவானமுமறைய
வில்லாலிறுதியிற்பெய்மழைபோல்வாளிகள்விடுத்தான் (௫௩)

வேறு. கரியமேகம்விழுதன்மைபோலவடர்கரிகளெங்கணுமடிந்துமா
வரைகள்வீழ்வதெனவேயுருண்டவுயர்வானிலங்கிடுவிமானநீ
டரையினிற்றதெனவிற்றதேர்நிரைசலங்கொளாற்றினைநிசாத்தலை
பரவுசெங்குருதியோடவாடியகவந்தநீளலகைபாடவே (௫௪)

நாரியற்றதனுவற்றவங்குலிகளற்றவற்றவகமிற்றபோ
தேரினுற்றவசுரேசர்மெயசிமயமற்றதொத்தவர்கள்சென்னிகள்
பாரினற்றவிடதாமெனுங்கரநிலத்தினற்றுவிழவேபல
வாரியுற்றதெனவெங்குமேமலிகணீர்பரந்தவரிவாளியால் (௫௫)

கவரியற்றகொடியற்றவெண்கவிகையற்றகூதனுயர்கந்தர
மிவுளியற்றுருளையற்றவற்றவிருதங்களாழியறவெதிரிலா
மவுலியற்றவடலுகமொத்தசுரர்மண்ணில்வீழவுதிரப்புன
லுவரியுற்றனவுலோகநாதன்விடுகணைகளெண்டிசையுமுறவரோ (௫௬)

கோடிமாசரியிமைப்பின்முன்னமிருகோடுகையுடல்குறைந்திட
நீடுநாகநிலன்வீழ்வதொத்துவருநிசாசரவுணர்முடிகள்வான்
முடியெண்டிசையுறச்செறிந்தபிணமுகிலின்மீதுடரவயிரிய
ராடல்போலெழுதவந்தமெங்கணுநடித்தமால்பகழியறையவே (ருஎ)

சுடிகைநீடரவின்மேனடித்தவிறைதூவுமாசுகமடர்க்கவோர்
கடிகைநேருமுனெணக்குரோணிபடையவியவேயசுரர்கணமெலா
முடிகள்வான்மிடையவுடல்கள்பார்நிறையமூழ்குசெங்குருதியோடநல்
வடகம்வீசிமலர்தூவியாடினார்கள்வானுளோர்தவர்மகிழ்ந்தரோ (ருஅ)

**வேறு.** குரமற்றிருதொடையற்றிடக்குதிரைத்திரளுருண்ட
கரமற்றுயர்தாளற்றிடவேவீழ்ந்தனகரிகள்
சிரமற்றிடவயவீரர்கண்மடிந்தார்கொடித்தேரின்
னிரையற்றிடவிழிந்தோடினரசுராதிபர்நிலத்தே (ருகூ)

இடைந்தோடலுநரகாசுரன்மொழியாலிபவீரர்
சுடுந்தீயினைநிகராகியகணைமாரிகள்சொரிந்தங்
கடர்ந்தேயிடப்பனகாசனன்சிறகாலடித்தயிர்தக்
கடந்தானெடுத்துயர்கைக்கொடுவலைத்தான்றருமா (சுO)

நஞ்சானனலானனனுகர்க்கிறைதரிப்பப்
பஞ்சானனஞ்சும்படிபணிலங்கண்முழங்கி
யஞ்சாதடரவுணர்த்திரளயமாகரிதேர்கள்
பஞ்சாமெனப்பறக்கச்சிறகடித்தான்ககபதியே (சுக)

கூர்வாணிகருகிராற்கரிபரிதேரிவையோர்த்துப்
பார்வான்கிரிதிசையெங்கணுமடித்தான்பலகரத்தா
னோரார்தமைமூக்காலுடற்றேளானெருப்புமிழ்ந்தே
யாராவிருசிறகேவிரித்தடித்தேவதைத்தனனால் (சுஉ)

அதிர்த்தேயடல்கலுழன்கையினவுணத்திரண்மாளக்
கொதித்தேவருநரகாசுரன்கொடுவாளிகள்பொழிந்தான்
டதிர்த்தார்த்தெறிசுடர்வேற்ககபதியாக்கையிலுறவுய்ப்
பதைத்தானதுகண்டாரியன்பகழித்திரள்பொழிந்தான் (சுங)

திருநாயகன்சிலையால்விடச்செறியாசுகமழையை
நரகாசுரனொருவாளியினறுத்தேசுரர்நடுங்க
வரிமேனியிலிரத்தப்புனலாறாய்நிலனோட
விருநாலுதிக்குறவாளிகள்விடுத்தார்த்தனனிடிபோல் (சுச)

கருமாமுகிற்றிகழ்துப்பெனக்கமலன்றனையளித்தோன்
றிருமேனியிற்குலிசப்புனலவிழவெண்ணாகதெரிய
நரகாசுரன்கொடிதேரினைநாலம்பினிற்சிதைத்தே
யொருவாளியினவனீள்சிலையறுத்தானுலகாந்தான் (சுரு)

வரிவில்லொடுமணித்தேரறமறவன்மிகமுனிடா
விரைவின்னுயரிரதத்திடைமேவித்தனுவளையாப்
பரவைக்குளினெழுமாவிடமெனவும்பலபகழி
சொரியக்கருடன்றோள்சிவப்புறவேதுளைத்தனனால் (சுசு)

நரகாசுரனிவனொப்பிலனாராயணனிவனென்
றரன்வாசவன்கமலாசனனறியாவகைதெரியா
தரைவாரிகடிசைவானகந்தெரியாவகைசரங்கள்
சொரியாவுயர்வலிபூதினர்சுரர்மாதவர்கலங்க (சுஎ)

இருவோர்களுஞ்சொரியாசுகமெரியாயுயகத்திசைகட்
குரியோர்மிகநடுங்கக்கடமுறுமெண்கரியிரியச்
சுரர்மாதவர்வெருவக்கடல்சுவறப்படிசுமக்கு
மரவாகநொந்தழன்மண்டிடவயனோடரன்றிகைத்தார் (சுஅ)

விடமாமெனமுனிந்தேயடர்நரகாசுரன்விடுப்பப்
படிவானமெண்டிசைபோர்த்திடும்பகழித்திரளறவே
நெடியோன்கணைவிடுத்தேயருணிறைதேவர்கடுதிப்பச்
சுடர்வாளிகளவன்றேரொடுந்தோன்றுவகைசொரிந்தான் (சுகூ)

வேறு.
ஆரியனெய்திடும்வாளிகடன்னையோரம்பாலே
வீரியனுநரகாசுரன்வீழ்த்துயர்விற்கொண்டே
மாரிவளைந்துபொழிந்ததுபோனெடுவானெங்கும்
பாருமறைந்திடவேபகழித்திரள்பெய்தார்த்தான் (எ0)

வேறு.
வெம்பியடர்ந்திடுநரகன்விடுத்திடும்விசிகம்வா
னம்பிறையிற்றிகழ்வாலொளிர்மின்னெனவரிநெற்றி
செம்புனலுற்றிடநிற்றலுமாலொருசெயலற்றே
வும்பர்நடுங்கிடவுவணனுளைந்திடவயர்வுற்றான் (எக)

சித்தசனைத்தருமாயனயர்ந்திடுசெயல்கண்டே
சத்தியவாமைமுனிந்துயர்சாரங்கம்வளைத்தேதா
னித்திலமாலையசைந்திடவேர்வுமெய்நிறையக்கூ
ரத்திரமாரியடர்ந்துசொரிந்தனளமுதொப்பாள் (எஉ)

காலணிநூபுரமோலமிடக்கரவளையார்ப்ப
மாலைகருங்குழன்மீதினசைந்திடவடிகாதின்
சோலநிறைந்திடுதோடுமலைந்திடவிற்சொண்டே
நீலநன்மேனிவயங்கிடவாளிநிறைத்தாளால் (எங)

தன்னெழிலொப்புருவம்மெனவேதனுவளைசெய்தாண்
மின்னிடையானனமின்பரிவேடவொண்மதியேயக்
கன்னன்மொழிக்குயிறன்விழிபோலொளிர்சணைமாரி
யுன்னுமுனெண்டிசையுவரிமறைந்திடவெய்தாளால் (எச)

சத்தியவாமையெனுங்கொடியெய்திடுசரமெல்லாஞ்
சித்திரபானுவெனத்திசையுற்றிடவசுரேச
னத்திமடிந்திடவிரதமரிந்திடவயம்வீழக்
கைத்தலமுரமிருகாலறவீழ்ந்தனர்படிமீதின் (எரு)

வேறு.
சங்கம்முரசந்துந்துமிதழங்கச்சின்னமுழங்க
வெங்குமணித்தேர்மாநிறையிபமெண்ணிலவளையச்
சிங்கம்மெனவெதிர்த்தாசுசுஞ்சிதறும்மசுரேச
ரங்கஞ்சிரமறவெங்கணைசொரிந்தாளரிமனையாள் (எசு)

மகரந்தமிணங்குங்குழன்மான்வாளிகள்பொழிய
நிகரந்தகனெனமுந்தியநெறிநீத்தவருடலாஞ்
சிகரந்தரைதனில்வீழ்ந்திடச்சிரம்வானுறவேயைம்
முகரந்தணனிறும்பூதெய்தமுனிவோர்திரணடித்தார் (எஎ)

அடியற்றனர்தொடையற்றனரரையற்றனருதரக்
குடரற்றனருரமற்றனர்குவவுப்புயமறவே
முடியற்றனரவுணத்திரண்முரன்காலனெண்மனையா
டிடியெய்ப்பழியிடைமேகலைநுலங்கக்கணைபொழிய (எஅ)

சாலிற்சிலம்பிலங்கச்சரவளையின்னிசைகறங்கக்
கோலச்சுடர்மணித்தோடுகளசையக்குனிவில்லால்
ஞாலத்தறைமழைபோற்கணைசொரியப்பரிகால்வாய்த்
தோலுற்றவர்கரமார்பிருதோளற்றிடமடிந்தார் ([illegible])

ஏறேழடர்த்தவன்றேவியெய்கணையெஞ்சலுமிறைய
நூறுயிரங்கரிமாவினர்நொடிப்போதினின்மடிந்தே
யாறுயெழுங்குருதிப்புனலலைக்கணமுழுங்கப்
பாறுடிடக்கவந்தம்பலபடிமீதினினடித்த ([illegible])

இருவிற்கணையிரண்டோடெழிலிலகத்திகழ்மதியைச்
சரியொத்திடுவதனக்கொடிசரந்தூவிடவயவ
ரெரியுற்றிடுசருகாமெனவிறவாசுரரிறைய
விரைவிற்கடல்கிழிந்தாலெனவெருண்டோடினராரார் ([illegible])

அரிமாமணையாளெய்திடுமழல்வாளிகளறையக்
கரிமாவிறவெதிர்வீரர்கள்கணக்கில்லவர்மடியக்
கூரார்மாமலர்பொழிந்தேகடமிடுவோர்துதிசெய்வ
நரகாசுரனொருமாதிவள்சமர்நன்றெனநவின்றான் ([illegible])

வடவாவனலெனவேமுனிந்தயர்தேர்மிசைவருமக்
கொடியோன்மிசையிறுகாலையிற்கொண்மூப்பொழிந்தாங்கு
னெடியோனுயிரனையாள்சிலைவளைத்தேநிறைபட்டு
விடமாமெனச்சொரிந்தாருயர்விண்ணோர்வியப்புறவே ([illegible])

வேறு. விரைகுழன்மாதெய்தவெண்டிகைபோர்த்திடும்...
நரகன்முனிந்தொருகணையினறுத்திடவகைசெய்தே
தரளமலைந்திடவேதழல்வெப்படைதனைவிட்டாள்
வருணசரங்கொடுமாற்றினன்வானவுனைன்மாதே ([illegible])

வாயுநெடும்படைவானவுணன்விடவடிவேலுண்கட்
பேவளப்படைகொண்டுதணித்திடவதுகண்டே
தீயவனிந்திரன்வாளிவிடுத்திடவேசிரா
மாயன்மனைக்கொடிமாற்றினள்வாசவனம்பாலே ([illegible])

அந்தகன்வாளியையசுரன்விடுத்திடவதுகண்டே
யிந்துமுகத்தவளப்படைசொண்டவையிறவெய்தாள்
சிந்தையழன்றுரகன்படைதீயவன்விடலோடும்
பைந்தொடிககபதிபடைகொடறுத்தனள்படிமீதின் ([illegible])

பற்றலனுமசுரன்கமலன்படைவிடவேபார்
முற்றவுமெரியுறமுடுகியசெயலவைகண்டேமின்
சிற்றிடைமேகலைதிகழ்கொடிதிகைமுகனம்பாலே
நற்றவர்மகிழவிலக்கினளாசர்கடுதிசெய்ய ([illegible])

சீறியவசுரனரன்படைவிடவதுசெகமெல்லாம்
நீறுசெய்திறுதியினெரியெனவருதலுங்கரிஸ்லா
வீறுடைநாயகிவிடையினிலுறுபவர்படைகொண்டே
நூறினளமரர்கண்மறையொடுதுதியினையுவந்தார்கள் ([illegible])

வீரியனுநரகாசுரன்மால்படைவிடவேயா
னீரெரிகானிலன்வெருவிடவருதலுங்கரிஸ்லா
வேருறுமிடையினளரிபடைகொண்டிவையிறவெய்யச்
சீருறுமமர்கண்மலர்மழைசிதறினர்புகழ்செய்தே ([illegible])

கடவுளர்படையறநரகன்விழித்தொனைகனறுவ
விடமெனவடுகணைபுவிதிசைமறைதரவிடலோடுந்
துடியிடையாளவையறவெய்துபகழிகள்பலதூவக்
கொடியவன்வரிசிலையாவமொடற்றனகொடிவீழ (௯0)

வேறு. வரிசிலையற்றிடவேநரகாசுரன்வாண்மழுகுந்தமயி
லிரவியினவிருறுவேயிலெழுமாகதையிவைகளொடுத்தெதிய
முருகவிழ்குழலினளவைகளறுத்தெதிர்முரலுறுகணைகள்விட
விரதமுமற்றனவிவுளிகள்பட்டனவலவனுமிற்றனனால் (௯௧)

வாளொடுசீறியெதிர்ந்துமுன்வருநரகாசுரன்மார்பினிடைத்
தோளிருகைநுதலுதரமருங்குயர்துடைகள்குறங்கினுறத்
தாளிணைமுற்றவுமுற்றிடவேயெதிர்சத்தியவாமைபின்
ணீளியபகழிநிறைத்தனண்மற்றவனிலனியர்ந்தனனால் (௯௨)

நரகனயர்ந்திடவாளிவிடுத்திடுநாயகிதன்விறலைச்
சுரர்கடுதித்தனர்மலர்கள்பொழிந்தனர்நந்துமிநந்தசின
மிரைகடலொத்துமுழங்கினமாதவரிந்திரனெண்கணனோ
டரனிவராசிபகர்ந்தனரப்பொழுதமலன்விழித்தனனால் (௯௩)

வேறு. வீரமால்விழித்துப்பார்த்தான்விறலுடைப்பவுமவெய்யோன்
பாரிடையயர்ந்துவீழப்பசுங்கொம்புமலர்கள்பூத்த
சீருறச்சாரங்கங்கொண்டுபொருதுதன்றேவிதன்னை
மார்பிற்சேருறவேபுல்லிமகிழ்ந்தனன்வானோர்போற்ற (௯௪)

தழுவியகொழுநன்றாயதாளினினிறைஞ்சிநின்ற
யுழைவிழியணங்கினோடுமுவணன்மீதுயர்ந்தமாயோன்
னெழிலினைநோக்கிப்பூவின்மாரிபெய்திமையோரார்த்தார்
தெழிகுரனரகன்றேறிவேறொருதேரிற்சென்றான் (௯௫)

வேறொருசிலையும்வாங்கிப்புட்டிலும்புறத்துவீக்கிச்
சீறியப்வுமன்கோடிவாளியாற்றிசையைப்போர்ப்ப
நாறுபூந்துழாயோன்கண்டுநகைசெய்தப்பகழியெல்லாம்
நூறினன்சார்ங்கம்வாங்கிநூறுசாயகத்தின்மாதோ (௯௬)

வெஞ்சினப்பவுமன்பின்னும்விசிகமாமழைபெய்தார்ப்ப
வஞ்சனவண்ணத்தையன்விடுத்திடுமாழிவானின்
விஞ்சியவிரவிதானுமின்மினியாகச்சென்றே
வஞ்சகன்சிரத்தைத்தள்ளிமீண்டதுவானோர்வாழ்த்த (௯௭)

அந்தரத்தமரர்பாரினம்பொன்மாமலர்கவேித்
துந்துமிபணவந்தக்கைதுடிகைகண்முழங்கவார்த்தா
ரிந்திரன்கமலனேற்றினிறையவன்முனிவர்வாழ்த்தச்
சுந்தரியுடனுமாயோனுவணன்மேற்றுலங்கிநின்றான் (௯௮)

அன்னதோர்காலைதன்னினவனிமாதென்னுமன்ன
மின்னிடையதிதிகாதிற்குண்டலம்விபுதர்க்கெல்லா
மன்னன்வெண்கவிகையோங்கமணிவரையேந்திமாயோன்
பொன்னடிவணங்கிநின்றுணரகன்றன்புதல்வரோடும் (௯௯)

தரணிமின்னிருகைகூப்பிச்சாற்றுவாள்பூவைப்பூவின்
வருணமுற்றிலங்குமாயன்மாய்கைக்குமாயஞ்செய்தே
முரணுறுமசுரர்தங்கள்குலத்தைவேரறுத்துமூவாக்
கருணையங்கடலாய்த்தேவர்க்கருள்செயுங்கமலக்கண்ண (௪00)

கோலமாயெயிற்றினென்னையேந்துநாட்சொடியவேர்வின்
சீலமில்குணத்தனுகிச்செனித்திடுநரகன்றன்னை
யாலின்மேலமர்வாய்செற்றுயவன்றருபுதல்வன்றன்னிற்
பாலனீங்கிவனைக்காத்தியென்றடிபணிந்தாண்மன்றே (௬0௧)

கடலுடையாடையானகாசினிமாதுகூறப்
படியினையளந்தோனன்பானரகன்முன்பயந்தசெய்க்கு
முடியினைக்கவித்துவானின்முண்டகன்போற்றப்பாராங்
கொடியினைப்போதியென்றுகூறிடப்பணிந்துபோனுள் (௬0௨)

இருநிலமடந்தைசிந்தையுவந்துதானேகலோடு
நரகனுற்சிறையின்வீழ்ந்தநவையிலாவரசரெய்தி
யரியினைவணங்கிச்சூழவவர்கடாம்பயந்தமாத
ரிரவிகாணரவிந்தம்போன்முகமலர்ந்திறைஞ்சினரால் (௬0௩)

காசிபன்மனைவிகாதிற்கனகக்குண்டலங்கடுய
வாசவன்கவிகையோங்குமணிவரையொருங்குகொண்டே
காசினியரசர்பெற்றகன்னியர்மகிழ்ந்துசூழ
ஈசனுண்கலுழன்மீதிற்றேவியோடேகினுனல் (௬0௪)

உவணன்மீதிலங்குமையனும்பர்மாமலர்கடுவத்
துவரையினெய்தித்தாதையடியினின்வணங்கித்தூய
தவமிகுமன்னைபாதம்பணிந்தசக்கரத்தான்முனி
னவையகல்விதர்ப்பன்பெற்றநங்கைவந்திறைஞ்சினுனால் (௬0௫)

பணவமர்பேரிபம்பைசச்சரிபணிலமார்ப்ப
வினையிலாக்கமுகுகன்னல்கதலிகளிலங்கும்வீதி
மணமலிமாலைநாலவயங்குதீபங்கடின்னக்
கணைநிகர்விழியினுர்கள்சோபனங்கழறினூரால் (௬0௬)

நண்ணிமாமறையோரோமமிட்டதநன்மண்டபங்க
ளெண்ணிரண்டாயிரத்தினேகமாமுகூர்த்தந்தன்னிற்
பண்ணினியாழ்பயிற்றுமாதர்பதினுறுயிரவர்தம்மைச்
சண்ணனுரொருவர்க்கோரோர்காந்தனுய்க்கலந்துவேட்டான் (௬0௭)

பின்னருநிலனுள்வேந்தர்பெற்றிடவயங்கிநின்ற
மின்னிடைக்கலாபமின்னும்வேற்கணூர்நூறுபேரை
மன்னவன்வசுதேவன்றன்மைந்தன்மாமுகூர்த்தந்தன்னிற்
றுன்னியமறையோரோமந்தொடங்கிடவேட்டான்மன்றே (௬0௮)

சித்தசனன்னையெண்கின்பாவைநாக்கினைசித்ராமின்
சத்தியவாமைவிந்தையிலக்கணைதவக்காளிந்தி
மத்திரன்மகளெண்ணீராயிரத்தொருநூறுமாத
ரத்தனையோருஞ்சூழவவனியினிருந்தானைய்யா (௬0௯)

நப்பினைகமலைநீலையிராதைபாளிகைநன்னிதி
தப்பில்சந்தரிகைமந்தாரகையிந்துவல்லிதந்தை
யொப்பிலாயிரவொண்மாதர்கூனிமிர்ந்தருயம்பெற்று
ளெய்பினிறுறைவான்றன்றேடமர்ந்தினிதிருந்தார்மன்றே (௬௧0)

நரகாசுரன்வதைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௧௩.

# அகூ-வது பாரிசாதப் படலம்.

சீலமினரகன்றிறலினாற்கவர்ந்ததேவர்கோன்கவிகையுமதிதி
கோலநன்மணியார்குண்டலந்தனையுங்கொடுத்தமராபதிமேவிச்
சாலநொந்தமரர்மோகிப்பப்பணிலமூதிவான்றருவினைக்கொணர்ந்தே
வேலிணைநயனச்சத்தியவாமைக்களித்தருள்விமலனைத்தொழுவாம் (௧)

கந்தநன்மாலைநிறைந்திடத்தென்றலுலாவிடக்கனகமண்டபத்தி
னிந்துவின்கிரணம்வயங்குசாளரத்தின்றயங்கிடத்தீபங்களிலங்கக்
கந்தரமிசையிற்கலனுறக்கவின்கொளஞ்சனக்கருமுகிலேலச்
சுந்தரன்கவரியசையவாதனத்தின்றுலங்கியேயிருந்திடும்வேலை (௨)

சிந்துரம்வளிகம்வயங்கிடக்கரத்திற்சூடகடிசழ்ந்திடவிழைகள்
கந்தரநிறையக்கங்கணமொளிரக்கவினுறக்கரவளையிலக
மந்தரநிகராந்தனமிசைத்தரளவடமலைந்திடமணிச்சிலம்பு
சுந்தரவடியிற்சிலம்பிடவிதர்ப்பன்மகளொய்திமலரடிதொழுதாள் (௩)

வந்தடிதொழுதவிதர்ப்பன்மாமகடன்மருணன்மெய்யழகினைநோக்கிச்
சிந்தையின்மகிழ்வாற்சிலதிகைக்கவரிவாங்கிநற்சிலம்படியிலகக்
கந்தமாமலர்களளகமீதொளிரக்கனகவொண்கைவளையரற்ற
நந்துமிழ்தரளவடநகிலசையநகையுறவீசியேநின்றாள் (௪)

கவரிகைக்கொண்டுவீசியவிதர்ப்பன்றருதிருக்கவினெலாநோக்கி
யவனியுண்டுமிழ்ந்தவரிநகையுடனேயணங்கினைப்பார்த்திவையறைவான்
புவியினிலரசர்திலகனாயுயர்ந்தபொறையுடைவிதர்ப்பன்றன்புதல்வி
நவையறவுலகர்நகைசெயவெனைநீநத்தியதென்கொலென்றுரைப்பான் (௫)

எதுகுலத்துதித்தவிழிவினன்மகுடஞ்சூட்டியாளரசெனக்கில்லை
யதுவலாலாயர்பதியினின்வளர்ந்தேனளைவெண்ணெய்களவினிலருந்திச்
சதுர்மறைநெறியைத்தப்பியேவிடனாய்ச்சராசந்தன்றனக்கிடைந்தோடி
மதுரையையிழந்துமகோததியிடையின்மறைந்தனன்வடிவொன்றுமில்லேன் (௬)

ஈதெலாமுணர்ந்துன்முன்னவனெனக்கேயுனையீகிலனென்றுசபத
மோதியேதமகோடன்சுதன்றனக்குக்கொடுப்பனென்றுரைத்திடநீயோர்
வேதியன்றனைத்தூதெனமுனர்விடுத்தும்விரகமுற்றெந்தனையணைந்தா
யேதமில்புராணம்பெரிதுணர்ந்தாலும்பெண்மதியிழுக்கெனவுரைப்பார் (௭)

நாரதனுன்னைமயக்கிடுமுரையானலனிலாவென்னைநீநத்தி
வாரிதியறியார்நதியினைக்கண்டுமருண்டவாபோலெனையணைந்தா
யாரிதுநன்றென்றறைபவரென்னையறிபவர்யாவருமில்லைச்
சீரிதென்றிகழாச்சின்மதிதன்னாலென்றுபின்சீதரனுரைப்பான் (௮)

மாலைசேர்குழலாயுந்தன்மேன்மாலாய்வடிவுடைச்சேதிபனிருப்பச்
சாலுவன்மகதன்றந்தவக்கிரனொண்டராதலவரசர்களிருப்பச்
சீலமிலெனைநீயணைந்திழிகுலத்தேன்செயலிலாவடிவினைக்கண்ட
வாலிலைவயிற்றாயுனதெழிற்கொத்தவரசரையடைகுதியென்றான் (௯)

இனையனமொழியக்கேட்டிருசெவியிற்காய்ந்திடுசலாகையேறியபோற்
றுனியுறக்கண்ணீர்தனமிசைப்புரண்டுதுகிலனைந்தவனியிற்பாற
மனமிகநொந்துவனசமாமலராண்மயங்கியேயயர்ந்திடுமவளை
யனகனுமிவ்வாறயர்ந்தமின்றன்னையங்கையாலெடுத்துரத்தணைத்தான் (௧௦)

ஆதனத்திருந்தமாமுனிவனுசிக
ளோதிடச்சத்தியவாமையுண்மகிழ்ந்
தேதமற்றறனுறவென்முனெய்தினே
போதனெண்டவனெனப்புகலுவாளரோ (உஉ)

என்னிவனெய்திய கருமம்யாவையு
நன்முனிவர்மொழியென்னநாரத
னன்னமென்னடைமொழியமிர்தம்வேயதொடோண்
மின்னிடையணங்கினுக்கிவைவிளம்பினான் (உ௩)

அனகன்றன்றேவியாரைவர்தன்னினு
முனையலால்வேறொருத்தியையுமுன்னலே
னெனுமொழிதவிர்ந்துருக்குமணிக்கின்பமாய்
மனமுயிரவள்வசத்துறமகிழ்ந்தனன் (உ௪)

காந்தமுமூசியுங்கலந்ததென்னவே
சாந்தணியவளருந்தனங்களோவலான்
வேந்தரெண்பாரிசாதத்தின்மென்மல
ரீந்துருப்பிணிதன்னோடின்புற்றானென்றான் (உ௫)

என்றிவையுரைத்துமாமுனிவனேகலுங்
கன்றியசிந்தையாள்கணவன்றன்செயல்
நன்றெனநகைத்தனளயனதீர்தனக்
குன்றினிற்குதிகொளக்கொதித்துச்சீறினாள் (உ௬)

எல்கிளர்தருமணிமுதலியாவையும்
நல்கியவுவரியைநிகர்த்துநாயகி
யொல்கியேதன்னகிலொளிருமாரங்கள்
பல்கலன்மேகலைபறித்துவீசினாள் (உ௭)

அலர்மலருதிர்ந்திடவலரிவெம்மையாற்
புலர்தருகொம்பெனப்பொருமிக்கண்ணினீர்
நிலனுறவணையின்மேற்சோர்ந்துநெஞ்சினிற்
சலமுறவவனிமின்றளருமெல்லையின் (உ௮)

தருமலர்திருவினுக்களித்துச்சக்கரக்
கரனிரதத்தின்மேலேறிக்காவலர்
பரிகரிபுடைவரப்பணிலஞ்சின்னமா
முரசுதுந்துமியெலாமுழங்கவெய்தினான் (உ௯)

நித்திலமலைந்திடநீலமேகம்போற்
சித்திரமண்டபம்வயங்கச்சேக்கையின்
சத்தியவாமைமின்றளர்ந்ததன்மையை
வித்தகன்கண்டணைமிசையின்மேவினான் (௩0)

ஓவியஞ்சுவைகெடுத்துயர்ந்தவுத்தமத்
தேவியையிருகையாற்றழுவச்சீறியே
காவியங்கண்கனல்கதுவநோக்கிநற்
றூவியோதிமநடைப்பாவைசொல்லுவாள் (௩க)

பொய்யினைமெய்யெனப்புகன்றுமண்டர்க
டையலார்தனங்களைத்தழுவுஞ்சக்கரக்
கையவுன்மாயமாங்கலவிநச்சிலே
னெய்கவர்சோரனீநீங்குவாயென்றாள் (௩உ)

வேறு. ஆனனங்கடுத்துச்செவ்வாய்துடித்திடவலகம்பஞ்சப்
பானலைப்பழித்தகண்கள்சிவப்புறப்பரமன்றன்னைத்
தானெள்சலுறவேயோதிச்சத்தியவாமையென்றுந்
தேன்மொழிபோதியென்னச்சீதரனகைத்துச்சொல்வான் (௩௩)

நாரதமுனிவனெய்திநவின்றிடுங்கலகச்சொல்லா
னேரிழைமுனியேல்வானொருலகினிலங்கிநிற்கும்
பாரிசாதத்தையுந்தன்முன்றினிற்பதிப்பேனென்ன
வாரியனுரைத்துமார்பினணைத்தனன்றேவிதன்னை (௩௪)

சுரிகுழன்பிசையிற்றெருங்கல்சூட்டியேதிலகந்தீட்டி
வரிநெடுங்கண்ணினீலவஞ்சனம்வளாந்துகாதின்
பருமணித்தோடுசேர்த்துப்பயோதரத்தாரம்பூட்டி
யரியுறுஞெகிழிதாளினணிந்தனனுயர்கோமான் (௩௫)

இரவியோன்குடபாலேகவிந்துவானிலங்கித்தோன்ற
வரியுயிர்த்தேவிதன்னோடாரமுதருந்தியன்பாற்
பருமணிக்கட்டிலேறிப்பரிமளக்கலவைபூசித்
தருமலர்சூட்டியின்பந்தழைத்திடவமர்ந்தான்மாதோ (௩௬)

அலரியோன்குணபாற்றோன்றவரியெழிந்தேவிதன்றோ
டிலகுமஞ்சனநீராடியிரணியவாடைசாத்திப்
பலகலனணிந்துமெய்யிற்பணிலமீரைப்பூண்டு
நலனுறுமறையோராசிகவின்றிடவயங்கினின்றான் (௩௭)

ஆயதோர்காலைதன்னினஞ்சிறைப்புள்ளின்வேந்தன்
மீயுயர்மகுடந்தோன்றவியாழமேனிறையப்பூண்டு
மாயிருஞாலமெல்லாஞ்சிறகினன்மறைத்தேமாயன்
றூயநற்கமலத்தாளிற்பணிந்துகைதொழுதுநின்றான் (௩௮)

ககபதிதன்பொற்றோளிற்கருணையங்கடலாமாயோன்
செகபதிவிந்தையானதேவியுந்தானுமேற
நகபதிகுலையநாகமெலிந்திடநாகர்போற்ற
மகபதியுலகிற்சென்றான்மறைகளார்த்திதம்பாட (௩௯)

கனகநற்கவிகையோங்கக்கவரிகண்மடவார்வீசத்
தினகரனவிரேயான்றசெழுமணிக்கலன்கண்மின்ன
வினையகலுவணப்புள்ளாம்வீரியன்றோளின்மீதி
னனகன்மாதேவிதன்னோடமரர்தம்முலகம்புக்கான் (௪0)

மாயவன்றேவிதன்னோடுவணன்மேல்வருதல்கண்ட
வாயிரநயனப்பாகசாதனனணியிழையோடு
மீயுயர்கவிகையோங்கவிளங்கயிராவதத்தின்
றூயபொற்கிரீடமின்னச்சுராலொலாத்தொழுவந்தான் (௪௧)

வேறு. கின்னரர்தூயகிம்புருடர்சித்தர்க
ளின்னலில்வித்தியாதரரியக்கர்க
டுன்னியகருடர்காந்தருவர்தும்புரு
மன்னியநாரதர்மகிழ்வினெய்தினார் (௪௨)

இரவியர்துவாதசர்வசுக்களெண்மர்வல்
லுராறுறுபதினொருவிடையிறுற்றவர்
மருதர்கள்சாரணர்வருணன்வண்மைசே
ரரனெழிற்சகாவுடனன்பினெய்தினார் (௪௩)

இத்தனைதிரள்களோடெய்தியிந்திரன்
சித்தசன்றனைத்தருஞ்சீதரன்றனைப்
பத்திசெய்தடியிணைபணிந்துபோற்றியே
வித்தகமாலுடன்வீதிமேவினான் (சச)

வீதியினரம்பைமேனகைவிளங்கிய
மாதுருப்பசிதிலோத்தமைமின்மாதர்கள்
சீதரன்மேனியைக்கண்டுசிந்தையி
னாதரவின்மயற்கடலுளாழ்ந்தனர் (சரு)

கலையுடன்மேகலைகழலக்கைவளை
தலமிசைவதிந்துறத்தரளமாமணி
முலைமிசைதழலெழமுராரியாசையா
லுலையினின்மெழுகெனவுருகிநின்றனர் (சசா)

வேறு. சுத்தநான்மறையுச்சியிற்றுலங்கியசோதி
நித்தனாரணனின்மலன்மாதவனெடுமா
லத்திருடுவராபதியச்சுதனெழிலுக்
கொத்தநாயகிசத்தியவாமையென்றுரைத்தார் (சஎ)

இன்னவாறெலாமியம்பியவரிவையரொருங்கு
மன்னுமாலினன்மாலின்மேல்வைத்தகண்வாங்கா
துன்னுமோவியம்போலநின்றார்சுரர்துதிப்பப்
பன்னகாசனன்மேன்மிசைடெய்தினன்பரமன் (சஅ)

ஒய்விலாதுமாமுரசுதுந்துமியெலாமொலிப்பத்
தூயதும்புருநாரதர்சுருதிகள்பாட
வேய்கொடோளிகள்கருப்புரவிளக்கங்கையேந்த
மாயன்வாசவன்கோயிலினெய்தினன்மகிழ்ந்தே (சகூ)

உததியிற்றுயிலுத்தமனென்றுணரேன்பெண்
மதிதனிற்சுதனெனநினைந்தேனினிமாயப்
பதிதனைத்தருவாயென்றுபகர்வனென்றுள்கு
மதிதிபங்கயவடிமிசைபணிந்தனனமலன் (ருo)

மாயன்வந்தடிபணிதலுமாயையின்மறந்து
நேயம்விஞ்சியவதிதிதன்சுதனெனநினைந்தே
யாயர்தம்பெருமான்றனையன்பினாற்றழுவித்
தூயசத்தியவாமையின்றெழுதிடவணைத்தாள் (ருக)

கடியனாநரகாசுரன்கவர்ந்தகுண்டலமுங்
குடையுமாவணிச்சயிலமுங்கொடுத்திடமாய
னடியினிற்பணிந்தாயிரவிலோசனன்போற்ற
நெடியமாதவனிருந்தனனிறைதவர்சூழ (ருஉ).

அன்னமென்னடைச்சத்தியவாமையையன்பால்
மின்னிடைச்சசியெதிர்ந்துறத்தழுவியேவிளங்கும்
பொன்னினன்மணிப்பொற்புடையாதனத்திருப்ப
மன்னிவெண்கவரித்திரள்மாதர்வீசினரால் (ருங)

கீதவீணைகள்கிளிமொழிமடந்தையரிசைப்ப
மாதரார்கள்பல்லாண்டுரைவழங்கவிந்திராணி
சூதின்மேல்விருப்புற்றனளாகியேதுலங்கும்
பூதநாயகன்றேவிதன்னோடிவைபுகல்வாள் (ருச)

சூதுநாமிருவோர்களும்பொருவம்யான்றோற்கி
லேதமில்லவண்பாரிசாதகமலரீவ
லீதுநிச்சயமென்னவேசத்தியவாமை
யாதவனருண்மணிபணையம்மெனவறைந்தாள் (௪௫)

இருவருமணிப்பலகையின்கயிற்றினையெறிந்தே
வருணமுற்றிடுஞ்சாரிகைபற்றித்தன்மதியின்
விரகினுடியிந்திராணியின்றோற்றிடவென்றாள்
சரியிலாதவொண்சத்திராசித்துவின்றனையள் (௪௬)

வாரிசூடுவராபதிமன்னவன்மனையா
ளொருலாவியவிந்திரன்றேவியைவெல்லச்
சீருலாவியநிலமிசைத்தேன்மொழியார்கள்
பாரிசாதமாமலரினைப்பறித்திடச்சென்றார் (௪௭)

அரியுலுங்குழலரிவையரடைந்திடுமெல்லை
தருவிஞெண்மலர்சாத்திடுமடந்தையர்சலத்தா
விருகண்ணுலமுழுறவிருநிலத்தினிற்பிறந்த
தெரிவைமீர்கடிதேகுமினென்றுசெப்பினரால் (௪௮)

சுரர்தநாயகன்றேவிதன்குழலிற்சூடுந்
தருவிஞெண்மலர்சத்திராசித்துமன்றந்த
தெரிவைநத்திடின்வாய்க்குமோசீரின்மானிடவ
ரரிவைமீர்கடிதேகுமென்றடர்த்திடமீண்டார் (௪௯)

மீண்டமாதர்கள்விபுதமங்கையர்சொலைவிளம்ப
மூண்டவெஞ்சினமுடுகியேசத்தியவாமை
யீண்டுநீவிரென்கொழுநனைக்கொணர்திரென்றியம்பப்
பூண்டவன்பிஞெடரிவையர்விரைவினிற்போனார் (௫௰)

தாவியன்றுலகளந்தவன்றனிவிற்பணிந்தன்
றேவியுன்றனைவருகெனச்செப்பினளென்றே
காவிநேர்விழிக்காரிழையார்கள்கட்டுரைப்பத்
தேவர்மன்னனையொருவியேமனைவியாற்சென்றான் (௫௧)

வந்தமாயனைச்சத்தியவாமைதான்வணங்கி
யிந்திராணிசூதாடியேதோற்கவென்மடவார்
கந்தநாண்மலர்பறிக்குமுன்காவன்மங்கையர்த
ணிந்தைகூறியவாறெலாநிகழ்த்தினண்முனிந்தே (௫௨)

பாரிசீறியேபகர்ந்திடப்பாரிசாதத்தை
வேரொடுங்கொணர்ந்தவனன்மேல்வைத்துயர்விமல
ஞரமார்புறவரிவையர்கவரிகள்வீசத்
தார்கொடேவியோடேகினன்றனிக்குடையிலங்க (௫௩)

வயினதேயன்மேற்பாரிசாதத்தினைவைத்துப்
புயலின்மேனியன்பெயர்ந்திடக்கண்டபுத்தேளி
ரயில்கள்வேன்மழுவங்குசமெறிந்தடர்ந்தார்த்தே
யெயிலெரித்தவன்வெருவிடவெங்கணும்வளைந்தார் (௫௪)

வேறு. வாசவன்வெள்ளையிராவதமேறிவளைத்திடவானவரா
னாசுகமாரிபொழிந்தயில்வாள்கதையங்குசம்விட்டெறிய
மாசகலுந்தருவைக்கொடியாதவபோகலையென்றுயரக்
பேரியடர்த்தனர்தும்பிகைசங்குயர்பேரிமுழங்கிடவே (௫௫)

விடையரியக்கர்கள்சாரணர்சித்தர்கள்விபுதர்மருத்துவர்கள்
கொடியுறுதேரினர்புரவியினர்குரகதமேல்வருவோர்
வடிவுடைவாளினர்வரிசிலையால்விடுபகழிகள்வாரியுறுங்
கடுவிடமாமெனமூழ்கிநிறைந்தனர்ககனமுமாசையெலாம் (௧௯)

கடமுறுவெங்கரியிறையுடனமரர்கள்கணைகள்பொழிந்திடலால்
படியுயிர்மால்வரைதிசைவயங்கியபணிலமுழக்கிடவே
கடலரவந்திசையுறுகரியஞ்சினகமலனடுங்கினன்வான்
வெடிபடுகாலமிதாமெனவிபுதர்கள்வெருவிவிழுந்தனரால் (௨௦)

மகபதியுடனிமையோர்கள்கலங்கிமயங்கிவிழுந்திடவே
ககபதிமீதுதருக்கொடுதுவரையினிற்கடிதெய்தியிட
நகபதிநல்கியநாரிதன்முயகனிடர்களைநாரணனைச்
செகபதியாகியுயர்ந்திடுமுக்கிரசேனனணைத்தனனால் (௨௧)

மாயவனெய்தியேதந்தையையன்பின்வணங்கியெழுந்துமகிழ்
தாயர்கள்பாதமிறைஞ்சிமுன்னோனடிதாழ்ந்துதன்னாயகியா
மாயிழைசத்தியவாமையினுண்மனைமுன்றிலினமுறவே
மீயுயர்தருவினைவைத்தவணோடும்விளங்கியிருந்தனனால் (௨௨)

பாரிசாதப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௭௬௮.

---

# ௩௦-வது சுபத்திரையார் திருக்கலியாணப் படலம்.

குலிசையருச்சித்தெட்டுத்திசையினுந்தாவித்தூய
வேலையைக்கடைந்துவாலின்றெசமுகன்றன்னைவீக்கி
யாலம்போலடர்ந்துதாக்குந்துந்துமியாவியுண்ட
வாலியைவதைத்தமாயோன்மலரடிமனத்துள்வைப்பாம் (௧)

சீலமார்வசுதேவன்பொற்புடையரோகணிசேயான
தாலகேதனன்கார்வண்ணன்சபையகத்திருக்கத்தந்தை
பால்னேர்மொழியாளானசுபத்திரைப்பாவைக்கொத்த
கோலமார்மருணனாரென்றுரைத்திடவிராமன்கூறும் (௨)

துடியிடையரம்பைநாணுஞ்சுபத்திரையானமாதைப்
படவரவுயர்த்தகோவுக்கீவமென்றுரைப்பப்பாம்பி
னடமிடும்பரமனீதேநலனெனக்கோயில்புக்கி
வடிவுடைவிதர்ப்பனல்குமங்கையோடிருக்குநாளின் (௩)

சந்திரன்போலக்கொற்றத்தனிக்குடைவயங்கத்தர்ம
னிந்திரப்பிரத்தந்தன்னிலிருந்தரசாளுநாளி
லந்தணர்பசுவைவேடர்கவர்ந்திடவமரர்கோமான்
மைந்தன்வெஞ்சினத்திறேடுமறனருள்மகன்பாற்சென்றான் (௪)

அருமறையோர்களாவையெயினர்கள்கவர்ந்தாரென்றே
யுரைசெயவிசயன்சென்றோராசனமிசையினாங்கார்
தருமனோடிலங்குகின்றதுரோபதிதன்னைக்கண்டு
பெருகியநதிகளாடவிடைபெற்றுப்பெயர்ந்தானன்றே (௫)

சரயுகாளிந்திமந்தாகினிசரசுவதிகோதா
விரியுயர்வேணிபம்பைவிளங்குகாவேரியெல்லாஞ்
சுரர்கடங்கோமான்மைந்தனுடியேதூயசேது
வருவினைதீர்க்கும்வாரியயத்தினிற்படிந்தான்மாதோ (௬)

உரகலோகத்தினெய்தியுலூபியைவேட்டுத்தூய
பரிகரியிரதஞ்சூழ்ந்தபாண்டியராசன்பாவை
விரைகமழ்குழலினாள்சித்திராங்கதையென்றுமின்னை
வரிகழல்விசயனன்பான்மதுரையின்வதுவைசெய்தான் (௭)

தூயதென்மதுரையோவித்துவரையினைச்சேவர்
நாயகன்மைந்தன்முக்கோல்கொண்டுநான்மறையோனாகிச்
சாய்விலாதுயர்ந்தநாமம்பன்னிரண்டொளிரச்சாத்தி
யாயிரநாமமோதுமறிஞர்போலாயினானல் (௮)

சங்குசக்கரந்தோண்மீதிற்பொதியுறநாமஞ்சாத்திச்
செங்கையின்வயங்குமுக்கோற்றிருத்தழாய்மணியடர்ந்தசீர்
பங்கயமணிகொண்மாலைபவுத்திரமாலையெல்லா
மங்கமீதிலகக்காவியாடையுந்திகழவந்தான் (௯)

சீலமாரெதிகளுந்தன்சேர்தலுமகிழ்ந்துசிந்தை
தாலசேதனனுஞ்சங்குசக்கரந்தரித்தசேரவும்
காலினிலிறைஞ்சித்தூயவருச்சியச்சடங்கள்செய்து
கோலமாராதனத்தினிருத்தியேகூறலுற்றார் (௰)

சிதரன்வடிவம்போலச்சிறந்தபாகவதருன்றன்
பாதமார்தூளியாலேபவித்திராமெனாம்யாமென்
றோதியுன்பதியேதென்றங்குரைத்திடவுருவமாது
மாதவனவருக்காசிமொழிந்திவைபகர்வான்மாதோ (௰௧)

எதிகளுக்கச்சுதன்றன்னிருப்பிடம்பதியாம்யாமன்
னதியினீராடிச்சேதுபொருணையின்படிந்தான்சோ
மதியினீராடிவந்தேமென்றலுமதியார்வண்ணன்
சதுமறைமுனிவன்றன்னைநோக்கியேசாற்றலுற்றான் (௰௨)

இன்னலின்முனியாஞ்செய்ததவத்தினாலெய்தினாய்நீ
யன்னமென்னடையாளொண்கைசுபத்திரையமிர்தமன்ன
கன்னிநன்மனையினெய்திக்கடத்தினிற்சயம்பார்த்தியாய்
யன்னநீயருந்தியென்னவறைந்தனனலாயுதத்தோன் (௰௩)

அறைந்திடுமிராமநம்பிச்சாசினன்மொழிந்துவேந்து
நிறைந்தநாமுனிவனையநிருபன்பொற்கலன்கள்சொல்லாந்
செறிந்தகந்தரத்தனாயசுபத்திரைசெம்பொற்கோயி
லுறைந்தோராசனத்தின்மீதிருவந்தவனிருக்குமவேலை (௰௪)

கந்தரம்பிறைவில்வாளிகவின்றுறுமெட்டுவள்ளை
யிந்துவின்வட்டமாம்பவிலங்குறிழ்த்திலதத்தின்பத்தி
நந்துவேய்காந்தளொங்குகளினவொண்முகைமின்னொத்தி
வந்தபொற்கொம்புபோலச்சுபத்திரையணங்குமாங்கவ் (௰௫)

வணங்கியேயெழுந்துநின்றமாயவன்றங்கையென்னு
மணங்கினைக்கண்டகண்கள்சிமிட்டிலானனங்கன்வில்லான்
மணங்கமழ்விசிகமெய்யவருவதுபோவதாகிப்
பிணங்கியவாவியோடுமாசிகள்பேசினானால் (சகூ)

எதியெனவிருந்தான்றன்னையிருகணுலமையநோக்கி
மதியெனும்வதனமங்கைமாதவநீதான்வைகும்
பதியெதிவ்வூரின்வந்தகருமநீபகர்தியென்றே
சுதையெனமொழிதலோடும்விபுதர்கோன்சுதனுஞ்சொல்வான் (கஎ)

இந்திரப்பிரத்தமென்னூர்யானந்தப்பதியையோவி
யந்தரநதியினாடியழகியகுமரிகன்னி
சிந்தையின்மகிழ்வினோடும்படிந்திந்தத்திருநகர்க்கே
வந்தனன்றீர்த்தமாடும்பலனிவண்வாய்க்கவென்றான் (கஅ)

நெறியுறப்பகர்ந்தான்றன்னைநோக்கிநேரிடையணங்கு
கறைமிடற்றரனால்வெந்தகாமனல்லுருவம்பெற்று
மறையவனாயினானோமறைந்திவண்வந்தான்செய்கை
யறிவனென்றுளத்தினுள்ளியன்பினான்மொழியலுற்றாள் (ககூ)

இந்திரப்பிரத்தந்தன்னிலிருந்தநீயாகிற்பாண்டு
மைந்தரிற்றருமன்வீமன்மாவலோன்சகாதேவன்றான்
குந்திதன்னுடனெல்லோருங்குறைவிலாதிருந்ததன்மை
கந்தநன்மலரோனொக்குமுனிவகட்டுரைத்தியென்றாள் (உ0)

நந்தனிகரத்தின்மங்கைநவின்றிடவிசயனன்பாற்
குந்திதன்புதல்வர்நால்வர்தங்களைக்குறித்துக்கேட்டா
யிந்திரன்சிறுவன்றன்னையியம்பிடாதிருந்ததன்மை
சுந்தரிமொழிதியென்னச்சுபத்திரைபகராலுற்றாள் (உக)

தரையினினதியிற்கங்கைதாரகைதன்னிற்பண்டி
விரைமலரதனிற்சாதிவிழுமியதானாற்போல
வரசரிலருச்சுனன்றானற்புதமாதலாலவ்
வொருவனைத்தனித்துக்கேட்கவுன்னினேனென்றுசொன்னாள் (உஉ)

மாதிவைமொழிதலோடுமகிழ்வுடன்வலாரிமைந்த
னீதிசேர்விசயனந்தப்பதியினைநீங்கியேகி
மாதவனாகிமந்தாகினிமுதனவதீர்த்தங்க
ளோதரவாடித்தூயசேதுவிற்படிந்தபின்னர் (உங)

மின்னிடையுலூகியென்னும்வியாழராசன்றான்பெற்ற
கன்னியைவதுவைசெய்துகடிபொழின்மதுரைதன்னிற்
றென்னவன்குமரியென்னுஞ்சித்திராங்கனையாமாதை
மன்னவன்வேட்டபின்னர்வந்துமுன்னிருந்தானென்றான் (உச)

என்றவனுரைப்பக்கேட்டேயிருகையிற்சிலையினாரி
யொன்றியதழும்பினாலுமுருவத்தினதிகத்தாலும்
வென்றிகொள்விசயனாமென்றுன்னியேவிரகத்தோடு
மன்றலர்குழலியெய்துநாணத்தான்மறைந்துநின்றாள் (உரு)

ஆயதோர்காலைதன்னிலயமுறும்பிரபாசப்பேர்த்
தூயமாநதியின்மேகஞ்சொரிதலும்புதுநீராட
மாயவனலாயுதக்கோன்றந்தைதாயினர்கண்மன்னர்
நேயமோடெய்தியாற்றின்கூலத்துணிறைந்துசேர்ந்தார் (உசா)

சங்குதூர்ந்துமிகளார்ப்பத்தனஞ்செயன்றனக்கன்பாலே
யெங்கையையளித்தேனென்றேயாதவனுதகஞ்செய்யச்
செங்கையாலேற்றுப்பார்த்தன்சிறந்தமங்கலநாண்கையான்
மங்கைதன்சிரசரந்திற்சேர்த்தனன்வானோர்வாழ்த்த (௩௮)

அருமறையவர்கணைப்யினருகிநிறைத்ததீயை
வளர்ந்தவிசயன்றேவிதன்னொடும்வலமாய்வந்து
பொரியிறைத்திருபாகத்தைப்புரந்தரன்புதல்வன்பற்றத்
தெரிவையர்திலகமம்மிமிதித்தனடேவரேத்த (௩௯)

அருந்ததிதன்னைத்தேவிதன்னொடுமமையநோக்கிக்
பெருந்தடங்கண்ணியோடுங்கண்ணனைவணங்கிப்பின்னர்
புரந்தரன்றனையிறைஞ்சமற்றவன்புகழ்ந்துவாழ்த்திப்
பெருந்தவரோடுமாலால்விடைபெற்றுப்பெயர்ந்தான்மாதோ (௪௦)

மைத்துனன்றனக்குந்தங்கைதனக்குமாமணிகள்வாரி
மித்திலக்கலன்களீந்துநீயெழிற்றேவியோடுஞ்
சித்திரவிரதமேறிவிந்திரப்பிரத்தஞ்செல்கென்
றுத்தமனருளிப்போனானுயர்நதிக்கரையினம்மா (௪௧)

மாயவன்போனபின்னர்விசயன்மாதேவியோடுந்
தூயபொற்கலத்தினன்னமருந்திநற்சுகந்தங்கோட்டிப்
பாயலிலெய்திப்பஞ்சபாணமெய்மதனன்வெள்கிச்
சாயவேசுரதநூதலின்றவறிலாப்போகஞ்செய்தான் (௪௨)

இருவருமொருவர்போலவிணைமுலையிறுகப்புல்லிப்
பரிபுரமரற்றக்கையின்பணிலங்களொலிப்பத்தாரி
னரியினமுரலப்போகந்தணிந்தபினன்பினோடும்
விரிமணித்தேரின்மின்னோடேகினன்விசயன்மன்னோ (௪௩)

அலரியோன்குணபாலெய்துமுன்னரினயம்பூண்டேரின்
வலவனும்மங்கையூரமகபதியருளுமைந்தன்
சலனெலாமிலங்கப்பாரினேகிடக்கண்டவீரர்
பலர்விலாற்பகழியெய்துபணிலங்கண்முழக்கியார்த்தார் (௪௪)

வேறு.

கங்குலினோரிரதந்தனிலேயுயர்கடல்வண்ணன்
றங்கைதனைத்திருடிக்கொடுதரைமிசைச்செல்கள்வா
வெங்கடவேகுதியென்றயில்வேல்களெறிந்தார்த்தே
மங்குல்கள்போலெழுமாகரிதேர்கள்பதாதிவளைத்தனரால் (௪௫)

பேரியறைந்தனர்பணிலமுழக்கினர்பிறைவாளி
நேருறவெய்தனர்சிலமிசைநிருபர்கள்கதம்விஞ்ச
நாரியர்திலகமின்விடுமிரதஞ்செலுநெறிநண்ண
வீரியவிசயன்முனிந்துயர்பகழிகள்விட்டானால் (௪௬)

தோலினமற்றனவற்றனதுவசநெடுந்தேர்கள்
வாலிருதொடைதுராமற்றிடமாண்டனவயவாசி
காலரையுரமொடுகவசமுமற்றனர்வயவீரர்
நாலிருதிசையினுமுற்றுநடித்தகவந்தங்கள் (௪௭)

ஆடினவலகைகடசையுறுகுருதிகளாறேபோ
லோடினவாடவர்வாசிகளும்பல்கணிறையெல்லாம்
வீடினமின்விடுதேரினில்விசயன்றன்விறலெல்லா
மோடியதூதரியம்பினர்பால்வணவிறையோடே (௪௮)

மாதுறுதேரினின்விசயனடாத்திடும்வலியெல்லாந்
தூதருரைக்கவிராமன்முனிந்துதொடர்ந்தோட
யாதவன்முன்னவனைத்தொழுதிச்சமர்தவிரென்றே
யோதவலாயுதன்மீண்டனனெழுசினமொருவத்தான் (சக)

மாயவன்மொழியினலாயுதன்மீளமணித்தேரின்
சீயமெனப்பொருதரசர்கள்பாறிடவேசென்றே
யாயிழையாளுடனன்பொடும்பற்குனனெறியெய்தி
யேயெனுமுன்பலயோசனைசென்றனனெழில்லோடே (ருo)

வேறு. நந்தணிகரத்தாளாயசுபத்திரைநங்கையோடுந்
சிந்தையின்மகிழ்ந்துபார்த்தனிந்திரப்பிரத்தஞ்சென்றே
யந்தமாரறன்சேய்பாதத்திறைஞ்சியேயன்னையான
குந்தியைவணங்கிவீமன்குரைகழற்சென்னிவைத்தான் (ருக)

மாயவன்றங்கையானசுபத்திரைமகிழ்விரோடுந்
தூயநற்குந்திதாளிற்பணிந்தெழிறுலங்குகின்ற
வாயிழையவர்களெண்ணுந்துரோபதையடியின்கீழ
வேயெனுந்தோளிதங்கைமெய்யினைத்தழுவிக்கொண்டாள் (ருஉ)

முரசுயர்வேந்தன்செங்கோன்முறைமையினடத்திப்பாரி
னரசெய்திமகிழப்பார்த்தனச்சுதன்றங்கையோடும்
விரைகமழலங்கல்சூடிமெய்யினிற்கலவைபூசி
யிரவுநன்பகலுநீங்காதின்பமோடிருந்தானிப்பால் (ருங)

சுபத்திரையார் திருக்கலியாணப்படலம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம்-சு௦௰.

## கூக-வது வாசுதேவர் வேள்விப் படலம்.

பவந்தனுற்றிரண்டமெய்யன்பாருறுசெந்துவெல்லா
நிவந்திடுங்கையால்வாங்கியகட்டினைநிறையத்தூர்க்குங்
கவந்தனைக்கரத்தின்வாளாற்றரித்தகாகுத்தன்பாத
முவந்தியாந்தொழுவந்தொண்டருறுவினையொருவியாற (க)

எங்கையைக்களவிற்கொண்டேகினன்விசயனென்று
வெங்கனல்பொழியுங்கண்ணனலாயுதன்வெகுண்டுசெல்ல
வங்கவன்முனிவைமாயனகற்றியந்திமையோவி
வங்கமாருவரிசூழும்பதியின்வந்திருந்தநாளின் (உ)

சூரியன்கிரணந்தோன்றத்துவரையையொருவிமாய
னேருறுதந்தைதாயருருப்பிணிமுதலோரெல்லாம்
பாரினினிலங்குகின்றசமந்தபஞ்சகதீராடத்
தேரின்முன்னவன்றனோடும்பல்லியங்கறங்கச்சென்றான் (ங)

பரசுராமன்கையேந்துங்கணிச்சியாற்படியையாரு
மரசர்களெழுமூன்றாயதலைமுறையடங்கநூறித்
திரையுறுகுமரிசேர்ந்தசமந்தபஞ்சகத்திற்சென்றே
யரியுடன்மகிழ்ந்தெல்லோருந்தடாகநீராடினாரால் (௪)

தலவுபவாசம்பண்ணித்தானங்கள்பலவுஞ்செய்து
நலனுறவனைவரோடுநாரணனிருக்கும்வேலை
நிலனுறுநிருபரோடுஞ்சமந்தபஞ்சகநீராடக்
கலனுரமிலங்கச்சென்றான்கட்செவியுயர்த்தகோமான் (௫)

அரவுயர்வேந்தன்றன்னையரியுறத்தழுவியன்போ
டிருநிலத்திருக்கமந்தாகினிசுதன்விதுரனெய்திப்
பரிவுடன்வணங்கத்தூயதுரோணனும்பகர்ந்தானாசி
நிருபர்களெல்லாமெய்தித்தொழுதனர்நேமியோனை (௬)

இந்திரப்பிரத்தந்தன்னினிலங்கியதருமன்வீமன்
சுந்தரவிசயன்றூயமத்திரைசுதர்களோடு
குந்தியாண்டெய்தக்கண்டமாயவன்பணிந்துகோதி
லந்தமாரறன்சேய்தன்னையன்பினோடிறைஞ்சினானால் (௭)

வாயுவின்மகனையன்பின்வணங்கிவில்விசயன்றன்னை
நேயமோடிரத்தினாரத்தழுவியேநின்றமாலைத்
தூயமாநகுலன்பின்னோனுடனடிதொழுதலோடு
மாயவனவரையன்பினணைத்துளமகிழ்ந்தான்மன்னோ (௮)

மன்னவன்பாஞ்சாலன்றன்மகடுரோபதையாமங்கை
பன்னகமடந்தைதூயசுபத்திரைபாரிற்றுய்ய
தென்னவன்வரத்தாற்பெற்றசித்திராங்கனைதன்னோடு
மின்னுநேமியன்றன்பாதத்திறைஞ்சினர்மகிழ்வுவிஞ்ச (௯)

நந்தனோடசோதைநங்கைநலனுறுமாதரோடும்
வந்திடக்கண்டமாயன்றந்தையைவணங்கித்தூய
சிந்தையளாயவன்னைசேவடியிறைஞ்சலோடு
மைந்தனைத்தழுவியன்பின்மடிமிசைவைத்துக்கொண்டாள் (௧௦)

பரிவினோடுச்சிமோந்தவசோதையைத்தழுவிப்பாம்பின்
சிரமிசைநடித்தவையன்மகிழ்ந்திடச்சீர்கொளாய
ரரிவையர்குழாங்களெய்தியரியிணையிறைஞ்சிநின்றே
யெரியுறுதுப்பாமென்னவுருகியேயின்பமுற்றார் (௧௧)

சிந்தையின்மகிழ்வினோடுதிறல்வசுதேவன்றன்னைக்
குந்திவந்திறைஞ்சியுன்றன்மருகர்கள்குறைவுதீர
வந்திலையென்றுகண்ணீர்நிலனுறவருந்துவாளைச்
சுந்தரவரிதன்றாதையணைத்திவைசொல்லலுற்றான் (௧௨)

கஞ்சன்வெஞ்சினத்தினெம்மைக்கடுஞ்சிறையிருத்தியென்றன்
மஞ்சனைவதைக்கவெண்ணிலசுரரைவிடுத்துவஞ்சம்
விஞ்சியகயவன்செய்தவினையினால்வந்திலேனீ
பஞ்சவருடனொன்றாற்பருவரலுற்றாயென்றான் (௧௩)

தேவகிகுந்திதன்னையன்பொடுதழுவச்சீரா
மாவடுவகிரின்கண்ணியுருப்பிணிமுதலாமாத
ராவலினவரன்னையடிமிசைவணங்கவாசி
நாவினினவின்றுபின்னர்நலனுறவணைத்துக்கொண்டாள் (௧௪)

குந்தியையலத்தோனன்னை தழுவித்தேவகிக்சொம்போக்கு
சிந்தையின்மகிழ்வோடெய்துமசோதையையணைக்கச்சிரா
மிந்துநேர்வதனத்தன்னவுருப்பிணிமுதலெல்லோரும்
நந்தனன்மனையாட்டாளினலனுறவிறைஞ்சினாரால் ([illegible])

விரைசெறிகுழற்பாஞ்சாலிமீன்விலோசனன்றன்பாவை
யரசமன்பயந்தனாகிசுபத்திரையுடனெல்லோரு
மரசரெண்விதர்ப்பன்பாவைமுதலரிவையரையெல்லாம்
பரிவுடன்றழுவிமாயினன்னைமைப்பணிந்தாரன்றே ([illegible])

தூயபாஞ்சாலன்பெற்றதுரோபதையன்பினாலே
வேயுறுதோளியானவிதர்ப்பன்மாமகளைநோக்கி
மாயவன்றனக்குநீயிர்வதுவையாயினவாறெல்லாம்
நேயமோடுரைத்தீரென்னவுருப்பிணிநிகழ்த்தலுற்றாள் ([illegible])

மாதவன்றனக்குயானோர்தூதனைவிடுப்பவந்தச்
சீதரனெனைத்தேரேற்றிச்செறுனரையமரின்வென்றே
யோதமாருவரிசூழ்ந்ததுவரையினெய்தியூங்கார்
வேதியர்வளர்க்குமோமம்விளங்கிடமணந்தானென்றாள் ([illegible])

பரியொடுபிரசேனன்றான்மடிந்திடப்பாய்ந்துசெற்ற
சரியிலாமடங்கறன்னைவதைத்தவென்றந்தைதன்னோ
டிருபதோடெட்டுநாட்போர்செய்யரிக்சென்றோடென்றிப்
பருமணிதனையுமீந்தானென்றனளெண்கின்பாவை ([illegible])

அனுசனைச்செற்றசீயந்தன்னையாண்டடர்ந்துசெற்ற
சினமலியெண்கைவென்றுசமந்தமணிகையபீய
மனமகிழெந்தையென்னைமாயனுக்கீந்தானென்று
தனமிருகலசம்போன்றசத்தியபாமைசொன்னாள் ([illegible])

ஆதவன்பயந்தநங்கையாயினேன்மாலைநாடிக்
கதிகலமுனையாற்றிற்சிறந்திடுங்கூலந்தன்னின்
மாதவம்புரிவேன்றன்னைநோக்கியேமகிழ்விலுற்றேரி
யாதவன்மணந்தானென்றுகாளிந்தியியம்பினாளால் ([illegible])

இலங்கியவவந்திமன்னன்புதல்வியானவையுளெய்தி
யலங்கலையரிதன்றோளினிடவெதிரரசரெல்லாங்
கலங்கியேயோடக்கண்டுமாலெனைக்கலந்தானென்று
துலங்கியகலன்கள்பூணுமித்திரவிந்தைசொன்னாள் ([illegible])

நிகரில்செங்கோலையோச்சுங்கவுசலநிருபன்பெற்ற
மகளியானரசரோடுமலைந்தவேழ்விடைகடன்னைச்
செகதலமிசையிற்செற்றுமாலெனைச்சேர்ந்தானென்று
நகிலெழிலிளநீர்போன்றநாக்கினசித்துச்சொன்னாள் ([illegible])

மாவணியிரதஞ்சூழ்ந்தமத்திரன்மகளியான்மாயன்
மூவுலகளந்தகீர்த்திமொழிந்தவன்படிவமுற்று
மாவலின்வரைந்துபார்க்குமோவியமதனூட்டொன்றி
மேவிமான்மணந்தானென்றேபத்திரைவிளம்பினாளால் ([illegible])

கோலமார்பத்திரன்றனக்கிடுங்கோதையென்னை
சேலறவெய்தானுக்கேயீவனென்றெந்தைசெப்ப
வேலொளிர்விசயனெய்யத்தப்பியகயலைவீழ்த்து
மாலெனைமணந்தானென்றேயிலக்கணையுரைத்தாண்மன்னோ ([illegible])

வரிசிலைநரகன்றன்னைவதைத்தவன்சிறையில்வைத்த
வரசர்களிடமைநீக்கியவர்கடாம்பயந்தகோதி
றெரிவையரியாங்களெண்ணீராயிரம்பெயரைச்சீரா
யொருமுகூர்த்தத்தின்மாயோனுற்றவண்மணந்தானென்றார் (உசு)

சயிலக்குன்றேந்திமாரிதடுத்தவனெழில்விறலே
மயலுறுவோமைப்பெற்றமன்னர்கம்வரையெய்தி
யியல்புடனியாங்களீரைம்பதின்மரையீந்தாரென்றே
யயில்விழியணங்கினார்களன்பினோடுறைந்தாரன்றே (உஎ)

எண்ணிரண்டாயிரத்துநூற்றெட்டாமெனுரின்மாதர்
கண்ணனைவிரும்பித்தாங்கள்சலந்தனைகழறலோடும்
புண்ணியம்புரிந்தமங்கைதுரோபதையுனாகிபொற்பார்
மண்ணினையாளுந்தென்னன்மகளிவர்மகிழ்ந்தாரன்றே (உஅ)

மாதவமுலைப்பிலசெய்துமண்மிசைப்பிறந்துசீயிர்
சீதரன்மார்பிற்சேர்ந்துதிருவினுமதிகமானீ
ரேதுமக்கரியதென்றேயிறைஞ்சினனவர்தோள்சேர்
கோதைகோதிலாதஞானம்படர்ந்திடக்கொழுகொம்பானாள் (உகூ)

வணங்குபாஞ்சாலிதன்னைவண்மைசேர்விதர்ப்பன்பெற்ற
வணங்கிருகையினாரத்தழுவியாதனைத்தினுய்த்து
மணங்கமழ்குழலினார்கண்மருங்குறக்கவரிவீசக்
குணங்களிற்குறைவிலாதகொம்பினிருந்தாளன்றே (கூ0)

வேறு.

புலத்தியனகத்தியன்புலகன்மார்க்கண்ட
னலத்துறுமியாக்கியவற்கனாரதன்
சலத்தினைவென்றவங்கிராதவத்தினிற்
பெலத்தொளிர்பிருகுமாமுனிபிரகற்பதி (கூக)

வாமதேவனுயர்வசிட்டமாமுனி
நாமறைமணத்திடுவியாசனற்றவன்
பூமியிற்பராசரனொடும்போதவே
காமனைப்பயந்தருள்கண்ணனைக்கண்டனன் (கூஉ)

கண்டெழுந்தலப்பிலாக்களிப்பினெய்தியே
யெண்டவரடிமிசையிறைஞ்சியீனமில்
புண்டரீகனைநிகர்முனிவர்போந்ததென்
பண்டைநல்வினைப்பயனெனப்பகர்ந்துமாயவன் (கூகூ)

அருந்தவர்க்கருக்கியமளிக்கவாபுனம்
பொருந்திடவாசிகள்புகன்றெல்லோர்களு
மிருந்திடநீரிவணெய்துமாண்செய்த
பெருந்தவப்பயனெனமாயன்பேசவான் (கூச)

படிமிசையெய்துமுன்பதுமம்போன்றெருணி
ரடிகளிற்பணிந்துயாவரைப்பிலாதவெங்
கொடுவினையொருவினமென்றுகூறிடு
நெடியவன்றனக்கவர்நிகழ்த்துவாரரோ (கூரு)

மேனிமிர்த்தளர்ந்தவுன்றளின்மேவிய
வானதிபெங்கண்மாபாவமாற்றுமா
லானிரைமேய்த்திடுமமலவெம்மைநீ
மானிடர்போலவேவந்திக்குமாயமென் (கூசு)

விருத்திராசுரன்றனைவீட்டியிந்திர
னருத்தியால்வேள்விசெய்யமுன்போலவே
வருத்தினார்முனிவர்சமித்திப்பாமகன்
உருத்திரன்மகிழ்வொடுஞ்செய்தகாவலன் (௪௮)

நிருபர்கடனக்குநேரிலாதநற்கலன்
சரிபரியிரதமுங்களிப்பினலளித்
தாசனுமகிழ்ந்திடவரிமுன்னோனுட
னிருநிலத்திறைஞ்சிடவெடுத்தாப்புல்லினன் (௪௯)

தனயரையன்பினுற்றழுவித்தேவகி
மனமகிழ்ந்திடவசுவுயன்மைந்தரோ
டினிதுடனிருக்கவேயெழிற்சொன்மாயனை
முனிவர்களாசிகண்மொழிந்துபோயினர் (௫௦)

அரவுயர்த்தோனெழுமனுசர்போயினர்
முரசுயர்த்தோனெழிலிளைஞர்மூரித்தேர்த்
திரளொடுங்குந்திபாஞ்சாலிதென்னன்மா
துரகமின்சுபத்திரையுடனும்போயினர் (௫௧)

நந்தனையசோதையுநற்றுணையுறு
மைந்தனைப்பொருவலாமனத்தராகியே
கொந்துழாயணிந்தவர்தம்மைநோக்கியின்
றிந்திரைநாயகனிரங்கிக்கூறுவான் (௫௨)

அன்னையாமசோதையைநோக்கியன்பினு
யுன்னையானொருவலெனென்றுரைத்துமால்
பின்னருந்திங்கண்மூன்றிருக்கப்பேரருண்
மன்னவேயவர்களுமகிழ்ச்சியெய்தினர் (௫௩)

கோவியர்மனமகிழ்ந்திருக்கக்கோவல
னேவியவடிவினையுற்றுநோக்கியே
யாவலினொருவிலாரன்புகூர்ந்திடத்
தேவனுண்டவரொடுஞ்சிறந்துதோன்றினன் (௫௪)

காவலொண்வசுதேவர்கற்புடைத்
தேவகிமகிழ்ந்திடமணிகள்சேர்கல
னவலினசோதைக்குமாயர்கோனுக்குங்
கோவியர்தமக்குமேகொடுத்தனனரோ (௫௫)

பாவமிலசோதையும்பழிப்பினந்தனு
மோவியவடிவனையணைத்துள்வாடியே
யாவியிலுடலெனவகலலாற்றெழுங்
கோவியருகரங்கூப்பிப்போயினர் (௫௬)

மாயன்முன்னோனெழிற்றந்தைவண்மைசேர்
தாயர்களுருப்பிணிமுதலொண்டையலார்
நேயமோடிரதமேனெறியிற்சேரவே
தூயநற்றுவரையிற்றுலங்கவெய்தினன் (௫௭)

நிருபனுத்தவன்வசுதேவனீதிசே
ருரனுறுமுக்கிரசேனனுற்றிட
வானுறுமுனிவர்கண்மருங்குசூழ்ந்திட
வரிசபாமண்டபத்தமரும்வேலையின் (௫௮)

அற்புதநீயுபரதிகனென்றுயான்
சொற்பகர்ந்திடவரிதாய . . . . . .
நற்பலவேள்வியினதி . . . . . .
சற்பமேனடித்தவன்காத்திருவென்றான் (எ0)

இவையெலாமுரைத்தியாழ்முனிவனேகலுந்
தவர்களுண்மறையவர்தரணியாண்மனர்
துவளாயினிலர்சுந்தரனைப்போற்றியே
நவையறுமுகவிவையென்னநவின்றனர் (எக)

நிலஞ்செறிமுனிவர்வேதியர்முதலிலா
நலஞ்செறியரிவிடையருளிநன்மணிக்
கலன்செறிமார்பினன்யினைகறங்கிட
பொலன்செறிபுருப்பிணிகோயில்புக்கனன் (எஉ)

சுரர்முனியிவையெலாமுரைப்பச்சோதியாம்
பரமனிப்பாரினிற்பாரநீக்கவே
யிருநிலத்திற்சுதனுயினனென
வரிசையார்மனன்வசுதேவனெண்ணியே (எ௩)

தேவகியுடன்வசுதேவன்சென்றுளரி
ரோவியவடிவின்மாலுறையுங்கோயிலின்
மேவிடமாயவன்விதாப்பன்பெற்றருள்
பாவையோடிவரிருபதத்திறைஞ்சினன் (எ௪)

இறைஞ்சியமுராரியையெடுத்தாத்தானனைத்
தறஞ்செறியும்வசுதேவனன்புள
நிறைந்திடநோக்கியேநீயென்மைந்தனென்
றுறைந்தனைபாரினினுலகுணேமியாய் (எ௫)

மதுரையிற்பிறந்தநாண்மகுடநாற்கர
மெதிரில்பீதாம்பரமிலங்குமாழிவான்
மதிநிகர்வலம்புரிவயங்கத்தோன்றிய
சதுரவென்றவத்தினுற்றனயனுயினுய் (எ௬)

நீயெழிலவனியின்சுமடுநீக்கவென்
சேயெனவென்வயிற்சனித்தசெய்கைநின்
றாயுடன்விளம்புமுன்றனையநீசெயு
மாயையின்மறந்துனைமகனென்றெண்ணினேன் (எஎ)

பூதலந்தனினைந்துபுலன்களாலெய்தும்
வேதனைக்ககப்படாதருளிமெய்மைசே
ராதியுன்பதமெமக்களித்தியென்றுமுன்
னோதியதந்தையோடுரைக்கலுற்றனன் (எ௮)

தூயநான்மறைசெறிசொல்லினுயென்றன்
றாயுடன்பின்னரென்பதத்திற்சாரென்றே
மாயவன்மாயையான்மறைப்பமன்னன்றன்
சேயெனவணைத்திடவன்னைசெப்புவாள் (எ௯)

ஏயெனுமுனமகோதரியினெய்தியே
தூயசாந்தீபினிசுதனைத்தந்தநீ
தீயவன்வதைத்தவென்சேயர்தங்களை
மாயவகொணர்தியென்றுரைவழங்கினள் (௮0)

கஞ்சனுன்மடித்தவரிவர்கள்காணென
நெஞ்சினுர்துணியறுமிறைந்துவணங்கினென்
மஞ்சராமிவரெனமகிழ்ந்துதேவகி
யெஞ்சிலாவிருதனப்பாலையீந்தனள் (கஉ)

சிந்தையின்மகிழ்ந்துதேவகியினீந்திடுஞ்
சுந்தரமுலையினிற்சுரந்தபாலினை
மைந்தர்களருந்திமாசாபமோவியே
யிந்திராணவன்றனடியிறைஞ்சினுர் (கங)

மாயனைவணங்கியேமகிழ்வுவிஞ்சிய
தாயெனுந்தேவகிகாலின்வீழ்ந்துவே
றோயெனுமுனர்விமானத்தின்னேறியே
தூயனென்மரீசியைத்தொழுதுசேர்ந்தனர் (கச)

கந்துறுகரத்தினனைகிலேறுடையாற்
சிந்தையின்மகிழ்வொடுமருத்திற்தேவரா
யந்தரவிமானமேலடையவீதென்றன்
மைந்தனற்செயலெனமகிழ்ந்துகூறுவாள் (கரு)

ஆதிதேவிமலனீயமலனியுயர்
சோதிக்பரமனீசுருசிநாதனீ
போதகமெனச்செழிப்பகல்வனுறிய
யாதவனென்பதமளித்திடென்றனள் (கசு)

அன்னையிவ்வாறுரைத்தனைறையவச்சுதன்
பின்னரென்பதத்தினைப்பெறுதியென்றவன்
மன்னியமாலையானமறைப்பமைத்தென்
றுன்னியேமாயனையணைத்துவந்தனள் (கஎ)

வசுதேவர்வேள்விப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-அகஅ.

---

## சஉ-வது கண்டாகருணன் மோட்சப் படலம்.

அந்தணனிவன்மாமகன்கள்செய்துயர்ந்தவதிருனறன்புதுப்பிணயாக்கை
தந்தனனமுதுசெய்தருளெனக்குந்தம்பிக்ரும்வீடுதாவென்று
வந்துநின்றடித்தாழ்செயுங்கண்டாகருணனேடுவலுமகிழச்
சிந்தையினுவந்துதன்பதமளித்ததிருவிஞயகனடிதொழுவாம். (க)

நவமணியினங்கள்வயங்குதூணணிகொளலனுறுமண்டபமிசையின்
கவினுறுகவரியசைந்திடக்காயாமலரெனக்கருமுகிலெனவே
யுவமையில்படிவமொளிரவிற்றிருந்தவொருதனிமுதல்வனையுற்றுத்
துவரிதழ்வாயாருருப்பிணிமுதலாந்தேவியர்தொழுதிவையுரைப்பார் (உ)

துனியறவிருவினைபொருவுமென்றினைப்போற்சுருதிநூனெறிவினையெய்துந்
துணயரையெமக்கின்றருளுதியென்னமைகைக்குதாசக்கரந்தரித்தோ
னனமெனுநடையீராருந்தவம்புரிந்தேயரனிடைவரத்தினைப்பெற்று
மனமகிழ்ந்திங்கற்புதல்வரைத்தருகவென்றுமண்டபமிசைவந்தான் (௩)

தாலகேதனமன்சினியருள்பு[illegible]
சீலமார்குணத்தனிவர்களைநோக்கித்திறலுடைமேயியனுரைப்பான்
காலனையனையபவுண்டரீகன்றனடர்ந்திடாவகையியண்காமி
னுமைமேருகருமரனிடைவரங்கள்பெற்றியான்மீள்வனென்றறைந்தான் (௪)

திருமகள்கொழுநன்மொழிந்திடக்கேட்டசிலியருள்சாந்தநிர்நல்சே
ரரனுடனிமையோர்மகபதிமுதலியமுனைத்தடைபொரிலும்
வரிசிலைவலத்தாற்றடைசெய்திண்டெதிருமொன்னலர்கங்கினையனைப்பன்
கருமுகில்வடிவாய்போதியென்றுரைப்பமகிழ்ந்தரிகருடன்மேற்சென்றான் (௫)

மாயவன்கலுழன்மிசையினிற்சென்றுவதரிகாச்சிராமத்திலுறமே
தூயநன்முனிவரனைவருமாகிசொல்லவாண்டவர்களைத்தொழுது
மீயுயரலரிருடகடலிடையின்மறைந்திடவிழுமியமுனை
யாயமாநதிமந்தாகினியுடனேயமர்ந்திடுங்கூலத்தினடைந்தான் (௬)

தூயநாதனைத்தன்னெஞ்சினினினைத்துத்தலங்கியயோகத்தினுயர்ந்த
மாயவனதியின்கோட்டுவாலுகத்தின்வயங்கிடவிருந்திடும்போழ்தி
னேயமோடரனைநினைந்துபல்லாண்டுநெடுந்தவம்புரிந்திடும்பூதன்
சீயமானுழுவையடர்ந்திடும்வனத்திற்சேர்ந்தவண்வருஞ்செயன்மொழிவாம் (௭)

அரிதிருப்பெயரைக்கேட்கலாகாதென்றறைந்திடுகண்டைசேர்செவியன்
பரிவுடனரனைநினைந்துபல்லாண்டுபழுவத்தினருந்தவஞ்செய்ய
வெருதினினிலங்குமிறையவனங்கெய்தவிருகையாற்றொழுதவனெளக்குப்
பரமநீயழியாப்பதத்தினையருளென்றுரைத்திடவுமாபதிபகர்வான் (௮)

இருநிலமமரர்பதிதனபதிதன்னகரிவையேநீவேண்டிடினுந்
தருகுவனெனலுமிசைகிலானலரிவெயிலிருந்றமிக்தவன்றனக்குப்
பருகுநீர்கொடாதிங்கெண்ணையையளித்தாற்பயனிலைபரமநீயெனக்கே
யருளழிவிலாதகதியினையெனவேயரியருநேயனெனவயன்றன் (௯)

அரியுயர்கதியையளிப்பனென்றுயர்ந்தவரனிலைமொழிந்திடக்கேட்டே
யிருசெவியதனினிலங்குகண்டைகளையிமைப்பின்முன்னிருகையால்வாங்கித்
தரையினிலெறிந்துசகாயனுய்வயங்குந்தனபதிகளையெலாஞ்சாற்றப்
பரிவுடனவனுமுராரியேயழியாப்பதந்தருவானெனப்பகர்ந்தான் (௧௦)

தூயவெட்டெழுத்துந்துவாதசாக்கரமுஞ்செவியிடைச்சொல்லியேதுலங்கு
மாயவன்றுவராபதியின்மன்னவனுப்[illegible]மறைய
வாயவைகேட்டுமகிழ்ந்திடுங்கண்டாகருணன்பால்பொரெலாமறைந்து
பேயினஞ்சூழப்பெருவரைபோலப்பிறங்கியபழுவத்திற்சேர்ந்தான் (௧௧)

**வேறு.**

பேயினர்சுற்றினர்பறைகளடித்தனர்பிரியாத
நாய்கள்குலைத்திடவெங்கழுமோடினர்கலனில்லா
மீயுயர்வானம்வெடிப்புறயார்த்தனர்பிறலோடுஞ்
சீயமொடேகரியுழுவைவதைத்தனர்சினமிஞ்ச (௧௨)

தீபநிரைத்தனர்சுரரைவதைத்தனர்செயிர்மிஞ்சுங்
கோபமனத்தினர்வினைகள்முழுத்தினர்கொடுதூய
பாவமிகுத்தவர்மயிடம்வதைத்தனர்படியீர்த்த
சாபம்வளைத்தனர்கிருடிமடித்தனர்தழலம்பால் (௧௩)

கருவரைபோலநடந்திடுகண்டாகருணன்று
னிருநிலமிசையினிலங்கியவேள்விசெய்தியல்பாரு
மருமறையோனைவதைத்தொருசூலத்தவனுக்கை
யுருவவெடுத்தனனலகைகள்சுற்றிடவிடமொப்பான் (கச)

மரைகரியரியையிழுத்தலைக்குலம்வரவாயாற்
பருகினனிருகையினுதிரநிறைத்துயர்படிமீதி
னெரிநயனத்தொடுகுடறகைதின்றெயிறிலகச்சீ
ரரிகரிபரமமுராரியெனுஞ்சொலறைந்தானால் (கரு)

ஆனைவதைத்தொருகொம்புகைபற்றினனரைமீதி
னானிறையுங்குடர்சுற்றினனீரல்களுண்வாயன்
கானிடையுற்றெழுனிரன்றுகண்மேய்த்துயர்துவரைக்கே
மானிடனாகியவாமனனேநமவென்பானால் (கசு)

கொலைபலசெய்தவனேமிகுபாவியெனக்கூறும்
நலனுறுமறையெனவோதுவர்நான்வதைசெய்வேனு
னிலமிசையிவ்வினைநீக்குதிநேமியவென்றேமான்
றலைநார்குடறகைதின்றுதருக்கிநடந்தானால் (கஎ)

மாதவனேநமவென்றுயராவைவதைத்தேநற்
றேநரனேநமவென்றரியின்பிசிதந்தின்றே
யாதியசஞ்சலவற்புதவச்சுதவெனவோதிச்
சோதிவயங்கியதாய்நதியின்னிடைசூழ்ந்தானால் (கஅ)

சுற்றியநாய்களையோட்டுமினென்றுரைசொல்லாமுன்
நற்றியமாலைநினைந்துநதிக்கரையிடமெய்தி
பற்றியமாகரிகோடுகள்பலசவமெல்லாமுக்
குற்றமிலர்த்தணைநற்பிணமோடுயர்குவைசெய்தான் (ககூ)

அறையின்விசித்திடுகுடர்கிலன்வைத்தனனன்போடே
விரைவினினேகிராற்றுனிசெய்குசையின்மீதிற்
றரையினிருந்தரிதாளைநினைந்துயர்முகில்வண்ண
பரமவிராமமுராரிபராபரநமவென்றான் (உ௰)

இலகியதீவிகையெண்ணெயினெண்டிசைதொறுமேற்றி
யலகைகளோந்திடவேயரிதன்னையரிச்சித்து
நிலமிசையிற்குவைசெய்தசவங்களினெடிதாய
பலகரிமயிடமுடங்குழையெண்குபடைத்தானால் (உக)

தூயவெழுத்திருநாலுறவாதசமிவைநெஞ்சி
னேயமோடேயிருகைசிரம்வைத்துநினைந்தேதா
னுயமுராரியசஞ்சலவற்புதவுயர்சோதி
மாயவநாரணவென்றுசெபித்துமகிழ்ந்தானால் (உஉ)

வேறு.

உம்பரின்குடரினையோகவட்டையா
யம்பரந்திகழ்கின்றவரையின்வீக்கியே
வம்பவிழ்துளவணிமார்பின்மாயனை
நம்பித்தன்னயனநீருகச்செபித்தனன் (உங)

அருவினையகன்மணிக்கருணனன்புட
னிருநயனந்தினைமுகிழ்த்தியேயிறைக்
குரியவெட்டெழுத்தினையுள்கந்தோன்றினன்
பிரமனையுந்தியிற்பெற்றவெம்பிரான் (உச)

தண்டுயர்சார்ங்கம்வாள்சங்குசக்கரங்
கொண்டொளிர்முராரிகோலந்தனெஞ்சினுட்
கண்டுகண்விழித்தலுங்காண்கிலாமையா
லெண்டிசைமுற்றவுமெழுந்துநோக்கினான் (உரு)

நவமணியணிமெயினலங்கொண்டோங்கிட
வுவமையினதிக்கரைமிசையினுற்றமா
துவரையின்மன்னனைக்கண்டுதூயனு
மவனிவனுமெனவாடிப்பாடினான் (உசு)

இருகணீரிருநிலநிறையவெய்தியே
யரிதிருவடியிணைவணங்கியார்வமோ
டுருகிவெஞ்சூலத்தாலுருவக்குத்திய
சரியிலாமறையவன்றனைமுன்வைத்தான் (உஎ)

தவர்களெண்மறையவன்றானுஞ்செய்தநல்
லவியுறுமகங்கள்செய்தநிறைாகிய
விவனலப்பிணந்தனையமுதுசெய்கென
வுவமையின்மாதவனுற்றுநோக்கினான் (உஅ)

கொலைபலசெய்திடுங்கொடியனாகிலும்
பொலனுறுமென்பெயர்புகன்றசெம்மையா
னலரிகாணிமமெனவினையகன்றிவ
ணலனுறுமெனவரிநவிலலுற்றனன் (உகூ)

உனக்கியான்றரும்வரனுரைத்தியென்றலு
மெனக்கழியாப்பதமீகுவாயென
மனக்கடுவினையகல்பவனுரைக்கமால்
முனிக்கணம்வியந்திடமொழிகுவானரோ (௩0)

கந்தநாண்மலருளோன்காணொணப்பதி
தந்தனனெனக்கண்டாகருணன்சாற்றுவா
னிந்திரைகொழுநனவப்பதியையென்பிறேன்
றெந்தகன்றனக்கருளென்றுசெப்பினான் (௩க)

என்றவனுரைத்திடவிறைவன்கூறுவா
னுன்றனையேலவேயும்பியென்றன்மே
லொன்றியவன்பனேவுரைத்தியென்றலும்
புன்றொழிலொருவினேன்புகல்வதாயினன் (௩உ)

தெந்தகனாகியவெம்பிசீரிலாப்
புந்தியினுன்றன்மேலன்பிலன்பொருந்
தந்தியைவதைத்தருடலைவவென்றலு
நந்தகோபன்சுதனவில்வதாயினன் (௩௩)

என்னலனறிகிலானெனின்முன்னேனெனு
முன்னுடனன்பனேவுரைத்தியென்னவே
பன்னகப்பாயலாய்பரிவிலானென்மேற்
பின்னவனெனக்கண்டாகருணன்பேசினான் (௩௪)

என்னையுமுன்னையுமெள்ளும்பின்னவ
னின்னலில்கதியுறவெக்குணத்தினான்
மன்னுவிப்பேனெனமாயன்கூறலுந்
துன்னியதுனிதுணித்தவன்சொல்லுவானரோ (௩ரு)

அனுசன்மேலன்பினாழியாயென
மனமகிழ்ந்தெழின்மலிமாலென்பத்தர்க
ளினிமையாயருள்வைத்தாலியாவராயினுந்
துணியகன்றுயர்குவரென்றுசொல்லுவான் (௧௬)

நீயுமுன்னனுசனுங்கரிலாதொளி
ராயிரங்கண்ணினானகரினன்புடன்
போயமிர்தருந்தியப்போகந்துய்த்தபின்
தூயவென்பதியெய்தித்துலங்குவீரென்றான் (௧௭)

சுந்தரன்மொழிந்திடத்தொழுதகையனை
யிந்திரவிமானத்தினேற்றித்தம்பியோ
டந்தரதுந்துமிமுழங்கவாய்மலர்
சிந்திடத்தேவர்தம்முலகுசேர்த்தனர் (௧௮)

கடகரிகாத்தமால்கருணன்றன்னுரு
விடர்கெடத்தேவர்தம்முருவமெய்தியே
யுடலொடுந்தேவர்தம்முலகமுற்றிட
வடதிசைக்கலுழன்மேன்மாயனேகினான் (௧௯)

கண்டாகருணன் மோட்சப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௫௭

---

## ௧௫-வது கயிலாச யாத்திரைப் படலம்.

பூதலந்தனிற்பிறந்தைம்புலன்கள்செய்
வேதனையுவரியின்விழுந்தெழுந்திரா
தேதமாமனிதர்களிடரொரீஇயுய
மாதவனடியிணைத்தொழுவம்வம்மினோ (௧)

உயர்விசும்பமரர்களுவந்துபோற்றவே
யியல்புறுதிகிரிகோடிருகையேந்திவான்
புயல்வணன்ககபதிபுயத்தின்மீதெய்திக்
கயிலையினருகிலங்கோடைகண்டனன் (௨)

ஏனமான்வல்லியமெண்குகேசரி
யானையீதிவையெலாம்வயிரமற்றறுங்
கானநூறேருசனைநீளமாங்கவின்
மானசவோடைமாவனசமான்றது (௩)

விரைபுரையலர்மலர்விண்ணினோங்கவே
கரையினிற்கவின்கொள்காவினங்கள்சூழ்ந்தது
பிரமனோர்சிரசினைக்கிள்ளிப்பின்னுகன்
சுரர்தொழுதிருந்திடத்துணிகளற்றது (௪)

இமவரைமன்னருந்தவத்திற்பெற்றிடு
முமையெனுமணங்கினையுருத்திரப்பிரா
னமரர்கடுதித்திடவதுவைசெய்தவன்
சமனின்மாமுனிவரோடிலங்கச்சான்றது (௫)

மாடுறுவேத்திரம்வளைந்தமாண்பின
னீடியதவஞ்செய்துநிகரினக்கனை
நாடியங்கிருடிகள்கயிலைநண்ணிய
வோடையினுவணன்மேன்மாயனுற்றனன் (௬)

மரவுரியுடுத்தவன்சடைகள்கட்டியே
யரனெழின்மந்திரமமைந்தநெஞ்சினோ
டிரவுநன்பகலுமாண்டிடைவிடாமலே
தரணியையிடந்தவன்றவஞ்செய்தானரோ (௭)

ஓமவிந்தனந்தினமுவணனீந்திட
மாமலர்பறித்துவண்டிகிரிநல்கிடச்
சாமரொண்குசப்புலுங்கட்கமீயவான்
பூமியெண்டிசையெலாங்காத்தபொற்சங்கு (௮)

நீதிலாக்கதைபரிசாரகஞ்செயத்
தாதலூழியத்தினைச்சார்ங்கம்பண்ணவே
சீதரன்றுவாதசவருடஞ்செல்லவே
மாதவஞ்செய்தனன்மண்ணின்மீதரோ (௯)

மாயவனருந்தவஞ்செய்பவானவர்
நாயகனளைமனமணமகிழ்ந்தினொ
டேயெனுமுன்னமாண்டமரரெய்தவே
தூயமாமுனிவர்கள்பலருந்தன்னினா (௧௦)

நேயமோடருந்தவஞ்செய்துநீடிய
தூயமாயோகிகடனக்குந்தோன்றலா
மாயனீதவஞ்செயுமாயமேதென
நோயகன்முனிவர்களுநவலும்வேலையின் (௧௧)

**வேறு.** வானதிபிறைவெண்கூவிளைகடுக்கைகரந்தையோடெருக்கலர்மத்தம்
பூனிறைசடைகளசைந்திடநுதலினழல்விழிபொருந்திடப்பஞ்ச
வானனந்திகழவுமைமழுக்கபாலமழல்கரத்துறமலைபரையன்
மானிடத்திலகக்கொடிகுடையயங்கவரனுயர்விடையின்மேல்வந்தான் (௧௨)

உரககங்கணங்கையிலிலங்கிடச்சூலமொளிவிடவுமாபதிவிடைமேற்
சரியிலாப்பவளக்கிரியெனவரவேசங்கொடுதமருகமுழங்க
மரவுரியுடுத்தசதமுகன்குண்டோதரன்றிரிவாகுமாவனுவோ
டரிமுகன்பஞ்சவாகுவெண்ணிறைந்தணிந்தவரன்புடைசூழ்ந்தார் (௧௩)

நீர்க்கரோமனனுன்னதங்கிசன்சிதானனன்சதக்கிரீவன்சினமிகுத்த
தீர்க்கலோசனன்குமித்துவன்விருபாக்கன்றிறன்மலிவாகுகன்சிறந்த
தீர்க்கவாகுக்குவத்திரன்பாவவத்திரன்றாலநாவலன்சீர்
தீர்க்கமாஞ்சிகையோன்சித்திரகாயவத்திரனிவர்களுஞ்சென்றார் (௧௪)

கதமிகுகண்டாகருணரோடெண்ணில்கணங்கணக்கினத்தினராகி
முதுகினிற்சவத்தைச்சுமந்துசெங்குருதிபருகிவெம்பூளைசுறுசர்...
புதியதாம்பிணத்தையயிலினுற்குத்தியெடுத்தநற்பொறிநகியவர்
மதுவளர்சடையோரவிருமருங்கடர்ந்துவானவர்வெருவுறச்சூழ்ந்தார் (௧௫)

குடர்மலிமாலைகபாலமார்மாலையசைந்திடவயிரவர்கொடிதா
மிடியெனவதிர்த்துத்தமரகமுழக்கியிருமருங்கினுமிடைந்தெய்தக்
கொடிகுடைகவரிவயங்கிடவிபுதர்குழாந்துதிசெய்திடத்தவள
விடையினினிலங்கியுமாபதிவரலும்வியந்தரிதொழுதிவைதுதிப்பான் (௰௬)

வரையினைத்தனுவாய்வளைத்தருண்முதல்வாநமவுனைமதிக்கிலாவசுரர்
திரிபுரமெரித்தசிவநமவிந்துதிகழ்கின்றவேணியாய்நமவே
கரியுரிதனைப்போர்த்தருளுவாய்நமவேகறைமிடற்றிறைவனேநமவே
யரகராநமவேபசுபதிநமவேயந்தகாந்தகநமவென்றான் (௰௭)

சீதரன்பரிவோடிவ்வகைதுதிப்பச்சிறந்திடுமிந்துசேகரன்றான்
பூதலமிசையிற்சருகுகால்புனலைப்புசித்தயந்தழலிடைப்பொருந்தி
மாதவமுயல்வோர்க்ககப்படாதுயர்ந்தமாயநீதவஞ்செய்மாயையினை
யோதுதியெனவேமகிழ்வுடன்மொழிந்தவுமாபதிபின்னருமுரைப்பான் (௰௮)

தரையினினரசர்குலத்துதித்தவன்போற்றனயர்கள்பெறத்தவஞ்செய்தாய்
பிரமனுன்மதலையவனுலகடங்கப்பெற்றிடும்பிதாமகனன்றோ
திருமகள்கணவவுணரொணாமாயஞ்செய்குவைநீயெனச்சிரித்தே
யரனுளமகிழவிருகணுநோக்கியரியுடனிம்மொழியறைவான் (௰௯)

நேயமோடியோகமுலப்பிலாவருடநிறையயானிற்கும்வேலையிலே
ஆயிரநயனனமரர்கண்மொழியாலடர்ந்தெனைச்சேருமன்மதனைத்
தீயுறுவிழியான்முனிந்துயானெரிப்பத்தேவர்கள்வேண்டிடவன்றே
தூயவவுனக்குச்சுதனெனநிலத்திற்றோன்றுவன்வேளெனச்சொன்னேன் (௨0)

முன்னம்யானறைந்தமொழியினையறியாதவர்கள்போலருந்தவமுயன்றாய்
பொன்னெடுவரையோடுலப்பிலாவுலகமுதரத்திலடக்கியபுனிதா
வுன்னைநீகரந்துமனிதர்போற்சுதரையுவந்துநீபெறத்தவஞ்செய்தா
யின்னல்களொருவவுயர்பதங்கண்டாசருணனுக்கீந்தனையென்றான் (௨௧)

ஆழிசென்னெறியைத்தரவருகெனமாவருந்தவம்புரிகுவார்போன்றங்
கேழுநாட்டருப்பைமிசையமர்ந்தயமனெய்திலானெனமுனிந்தெழுந்து
சூழும்வாரிதிநீர்சுவறிடக்கணைகள்சொரிந்தவன்வெருவியுன்பதத்தில்
வீழவேவரம்வேண்டுவதுபோலெனையும்விரும்பினையெனநகைத்துரைப்பான் (௨௨)

செயலுறப்படைக்கத்திசைமுகனாகிச்சிறந்திடவளிக்கநீயாகி
யியல்புறத்துடைக்கயானுமாய்த்தோன்றியெம்மையுநின்னிடைக்கரந்து
கயவர்கட்கியாங்களளித்திடும்வரத்தாலவரெம்மைக்கடிந்திடும்போதத்
துயரறவவரைவதைத்தவர்தமக்குன்றுலங்கியகதியினையருள்வாய் (௨௩)

சென்னியோகசிரநற்குஞ்சிசீமூதந்தினகரனிந்துகண்ணெண்டிக்
கின்னலில்செவிவிண்ணுபியொண்சிந்துவயிறுநற்சகனமுரோமந்
துன்றுபாதவங்கணயனமுமுகிழ்த்தலிராப்பகல்விழித்தலாய்த்தோன்றுந்
தன்னைநேர்பிறிதிலிறைவநீதவஞ்செய்மயக்கினைச்சாற்றுதியென்றான் (௨௪)

உன்னிடத்தயனோடெனையுதவுகையாலோதுவர்கேசவனெனவே
துன்னியவினைகளறுத்தரிக்கையினாலரியெனத்துலங்கினாயயத்துண்
மன்னியசெயலின்பொருளினாராயணனெனவயங்கினையுயிர்க
டன்னினீயுறையுந்தன்மையால்வாசுதேவனாம்பெயரினைத்தரித்தாய் (௨௫)

மறைகளுன்னாவின்மலிந்திடுஞ்செயலால்வண்மைசேர்கோவிந்தனானாய்
நிறையுமெய்ஞ்ஞானேந்திரியங்கடனக்குநீயிறையாகியபொருளா
லறைகுவரிருடிகேசவனென்றுன்னையளப்பின்மூவுலகுறவளர்ந்த
திறலினாற்றிரிவிக்கிரமனென்றுனையேசெப்புவர்சிறந்திடுமுனிவர் (௨௬)

ஏசில்சூக்குமனீயாதலினுன்னையியம்புவர்வாமனனென்றே
யாசினுளமிழ்த்தியடருமைம்புலன்கடன்னைநீயகற்றிடுஞ்செயலால்
மாசிலாமதுசூதனனெனவுரைப்பரெவர்க்குநீயுயர்ந்ததன்மையினு
லீசனென்றுனைத்தானறைகுவர்மறையோடிலங்கியவுபநிடமுணர்ந்தோர் (உஎ)

சகலமந்திரத்தினதிகமாயிலங்குபிரணவநீசதுர்மறைக்கு
ணிசரில்சந்தசுக்குள்வயங்கியகாயத்திரியுநீநிறைந்தவக்கரத்து
ளகரநீயுயர்ந்தவுருத்திரர்தமக்குளரனெனுமியானுநீயார்க்கும்
பகவனீதிசைக்குளமர்ந்திடும்வசுக்களெண்மரிற்பாவகனீயே (உஅ)

யாதவந்தன்னுட்பிப்பிலநீயேபன்னகந்தன்னில்வாசுகிநீ
யேதமின்முனிவர்தன்னினாரதனீயெண்டிசைப்பாலரினளகை
நாதனீயயத்துள்வருணநீநதியுட்கங்கைநீநலனுறுவரையின்
மீநுறுமனகவிலங்கனீயொளியுள்விசும்புறுகதிரவனீயே (உகூ)

தசனலப்பிரமர்தமக்குளின்வயங்குந்திசைமுகனீவிபுதர்க்குள்
வசையிலாப்புகழ்சேர்வலாரிநீமருந்துளமிர்தநீகுளிர்ப்பினுண்மதிநீ
யசுரர்கடனக்குட்பிரகலாதனுநீயதிகதேவதைகளின்மிகுத்த
சுசியுநீயுயர்ந்தபதியினின்வயங்குஞ்சோதிநீயாதியுநீயே (கூ0)

அண்டமெண்ணனந்தகோடியுன்னகட்டிற்றோன்றியேமீளவுமடக்கு
முண்டகமடந்தைகொழுநனேயென்றுமொழிந்தரன்முனிவரைநோக்கி
யெண்டவரறிமினிவனலாலிறைவேறில்லையீதுண்மையாமிவன்றன்
மண்டனிற்பிறந்துமயக்குமாயையினின்மருண்டிடாதுய்மினென்றுரைத்தான் ()

கறைமிடற்றரன்றன்மொழிந்திடக்கேட்டுக்களித்திடுமருந்தவரெல்லா
மறையையுமயக்கிக்கரந்துறைகின்றமலர்மகணாயகன்றன்னை
யிறைவனென்றியாங்களறிந்துயும்வண்ணமிதுவுபதேசநீசெய்தாய்
பிறையணிசடிலவெனத்தொழுதிடவேபிஞ்ஞகன்முராரியைத்துதிப்பான் (கூஉ)

கேசவநமவேநாரணநமவேகிளரொளிமாதவநமவே
மாசறுசுடற்கோவிந்தனேநமவேவண்மைசேர்விண்டுவேநமவே
வேசறவுயர்ந்தவெழிலுறுமதுசூதனநமவிடரினையகற்றுந்
தேசுறுதிருவிக்கிரமனேநமவேசிறந்திடும்வாமனநமவே (கூகூ)

சீதரநமவேசிறந்திடுமிருடிகேசனுந்தேவனேநமவே
யேதமில்பதுமநாபனேநமவேயெழில்கொடாமோதரநமவே
போதனைப்படைத்தபுனிதனேநமவேபொலன்சொள்பீதாம்பரநமவே
யாதியாம்பரமநமவெனத்துதித்தேயரனுயர்கயிலையையடைந்தான் (கூச)

அரனிவைதுதித்துக்கயிலையையடையவலாரியோடருந்தவரெல்லாம்
பரிவுடன்முராரிதனைத்தொழுதேத்திப்பன்மலர்பொழிந்தவரேக
வரிமகிழ்வுடனுங்கலுழன்மீதேறியாழியோடைம்படையேந்தி
மருமலர்மலியும்வதரிகாச்சிரமத்தெய்தினன்முனிவர்கண்மகிழ (கூரு)

வதரிகாச்சிரமத்தொருதினமிருந்துமற்றைநாண்மலர்மகள்கொழுந
னெதிரின்மாமுனிவர்குழாங்களையிருத்தியிலங்கியககபதிபுயமேற்
புதுமலரமரர்பொழியவந்தரத்திற்றுந்துமிமுழங்கிடப்புலனு
ருததிசூழகழாரொளிகொளுந்துவராபதியினினடைந்தனனுவந்தே (கூசா)

மாயவன்றுவரையடைந்தெழிற்றந்தைமலரடிவணங்கிமுன்னோனைத்
தாயரைப்பணிந்துமகிழ்ந்திடவுயர்ந்தசாத்தகிமகிழ்ந்துதாளிறைஞ்சத்
தீயுறுமெழுகுநிகரொனவுருகுந்தேவியருருப்பிணிமுதலாந்
தூயமங்கையர்களிருகணீர்நிலத்திற்றுளிகொளவடியிசைதொழுதார் (கூஎ)

தவாவலிமலியுங்கலுழன்மீதுயர்ந்தசங்குசக்கரந்தரித்தவனைத்
துவாதெசவருடம்பிரிந்தடர்விரகத்துனிக்கடலழுந்துதேவியர்க
ளவாவெலாந்தணியவரிபதிஞூயிரத்துநூற்றெட்டுருவாகித்
திவாவுடனிரவுமொருவிலனாகிச்சிறந்தினிதிருந்தனன்மாதோ (௬அ)

கயிலாசயாத்திரைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௬எ௫.

## ௧௪-வது பவுண்டரன் வதைப் படலம்.

கறைமிடற்றரனைநாடொறுங்கமலமாயிரங்கைகொடுபூசியாக்
குறைபடத்தனதுவிழியிரண்டுபறியாவருச்சனைதொடுக்கவே
யிறைவன்முந்திவரநாரணன்வடிவுபெற்றநற்றுவரையெய்தியே
பறையறைந்திடுபவுண்டரன்றனுடறுணிசெய்மாலினடிபணிமினே (௧)

தூயபுண்டரிகநாடன்வானினமர்சுரர்களும்வெருவுதிறலினான்
பாயுமும்பல்பதிஞாயிரத்துறுவலத்தினூறுபவுண்டரன்
னேயம்விஞ்சியமனத்திஞேடுபசுபதியைநித்தலுநினைந்துதா
ஞூயிரங்கமலமலர்பறித்தவனருச்சியாமகிழுநாட்டனின் (௨)

ஒருதினந்தனிவிரண்டுவாசமலர்குறையவேயுயர்பவுண்டரன்
பரிவுடன்றனிருவிழிபறித்துமகபூசைபண்ணவரனெய்தியாண்
டிருநிலத்தின்மிசைநீபகர்ந்தவரமீவனென்றுனாயியம்பிட
வரியுருத்தருதியென்றுகூறியிடுமன்பனுக்கிவையறைந்தனன் (௩)

கோலமாயன்வடிவங்கொடென்னபயனேன்றுகூறுமுமைகொழுநனைச்
சீலமில்லவனிறைஞ்சியவ்வுருவமீதியென்றுதுதிசெய்திட
நீலகண்டனுநகைத்துமால்வடிவுபெறுதியென்றுரைநிகழ்த்தியே
சூலமங்கையினிலங்கவெண்கயிலையெய்தினன்சுரர்கள்சூழவே (௪)

நீலகண்டன்வரமீயமால்வடிவுபெற்றுநீதியில்பவுண்டரன்
கோலமுற்றிடுகவுத்துவங்கனகவாடைகுற்றமில்கிரீடமின்
ஞாலுசெங்கரமிலங்கவாழிவளைநாந்தகங்கதைவினண்ணிடச்
சீலமுற்றகலுழன்றன்மீதினெழிறிகழவேதிரியுநாட்டனின் (௫)

முரசுபேரிகைமுழங்கவேதியர்களாசியெங்கணுமொழிந்திடப்
பிரசமென்மொழிமடந்தைமார்கவரிவீசவேபெருமையுற்றிடு
மரசர்சூழவரியாதனத்தினிடையரியிஞைடதிகழரியெனும்
வரிசையோடுயர்பவுண்டரன்னினிதிருக்கயாழ்முனியும்வந்தனன் (௬)

வந்தயாழ்முனிவஞைசிகூறியிடமாயவன்வடிவுபெற்றவன்
சிந்தையின்மகிழ்விஞேடுமாதவவிருத்தியென்றுனாகள்செப்பிவா
னந்தரந்திசைகளெங்கணுந்திரியுமறிஞநீபகர்தியென்னையே
நந்துசெந்திகிரிதிகழுமாலெனவுரைப்பரோவெனநவின்றனன் (௭)

மாயன்யானெனவுரைப்பனொண்டிசையினேடுமெண்ணினுறுமவரொலா
மாயனனவிழிகுல்னுமாயனெனவவனிமீதுதிரிகின்றன
னேயெனுமுனர்வலாரிவாழ்நகரினெண்கணுலகினெய்தியே
நீயுமென்னையுயர்வாசுதேவனெனவோதுவாயெனநிகழ்த்தினன் (அ)

அறிவிலாமன்மொழியும்பவுண்டரனைநோக்கியாழ்முனிவனறைகுவான்
குறைவிலாதவனைமின்னுமின்மினிநிகர்க்கில்விந்தைமகிழ்கொழுநனு
மிறைவனுக்குநிகராவைநீயெனவியம்பிடத்தழல்கொணயனனுய்
நெறியறுத்துமறன்மலியவேயமருநீசனங்கிவைநிகழ்த்துவான் (௯)

பாபமின்முனிவனுயினும்பரிபவங்கள்செய்துனையடர்ப்பன்யான்
சாபநீயிடுவையென்றுவிட்டனனெழுந்துபோதியெனலுந்தவன்
கோபம்விஞ்சியபவுண்டரன்றனருகோவியேகுறைவின்ஞானமெய்த்
தீபமாதவர்களுறையுமாதுவரைவீரனேடிவைகள்செப்பினன் (௰)

மாதவனெருவுமுன்னர்நீதிவமுவும்புறத்துறுபவுண்டரன்
றூதுவன்றனையழைத்துயாதவன்முனெய்தியேயிவைகள்சொல்லுவாய்
பீதவம்பரமோடழிவாள்கதைவில்வளையுயர்ந்தபெயர்விட்டுநம்
பாதமீதுசரணுயடைந்துய்தியென்றுநீபகர்தியென்றனன் (௧௧)

என்றுகூறியபவுண்டரனடியிறைஞ்சியெய்தியிடுதூதுவன்
மன்றல்சோலைமலிதுவரைமாநகரின்மண்டபத்தின்மிசையெய்தியே
சொன்றைசூடியருள்பெற்றுயர்ந்தவரியானகோவின்மொழியெல்லவுங்
கன்றிருல்விளவெறிந்தநீதொழுதுகேளெனக்கழறுவானரோ (௧௨)

வேறு. கோடுவிடுவில்லைவிடுவாளைவிடுகோதில்
நீடுகதைதன்னைவிடுநேமிவிடுபொன்னி
ஞடைவிடுபேரைவிடுநீசரணடைந்தே
யீடுறுபவுண்டரனையேதொழுதியென்றான் (௧௩)

ஈதெலவுநீவிடுவிடாயெனிலமர்க்கே
போதுதியெனக்கரம்புடைத்தரசர்நக்கார்
யாதவனகைத்திவையெலாம்விடுவனேகித்
தூதுவபவுண்டரன்வரும்படிசொலென்றான் (௧௪)

கோலமுறுமாயனிவைகூறவருதூதன்
காலெனவிமைப்பின்முனரிற்கடிதினேகிச்
சீலமில்பவுண்டரன்முனெய்தியிவைசெப்ப
வாலமெனவேகமிகவேயவனுரைப்பான் (௧௫)

ஆயரில்வளர்ந்தறிவிலாதுதிரிவானைச்
சாயகம்விடுத்தமரின்வென்றுவருதற்கே
தூயகரிதேர்நிறைகடுன்னுபடைவீரர்
பாயிவுளியோடெழுமினென்றுரைபகர்ந்தான் (௧௬)

அன்னவன்மொழிந்திடவறைந்தமுரசங்க
டுன்னுவக்குரோணிபணிரண்டுபுடைசூழ
நன்னிலநடுங்கிடநடந்தகரிவெள்ள
மின்னுமுகில்போலயுதகோடிகண்மிடைந்தே (௧௭)

காசிமனேடேகலவியன்கடிதுசெல்ல
வீசனருளாலரியுருக்கொளறிவில்லா
நீசன்வளைவாள்கதைவில்நேமியுடனேந்தி
யாசுறவருஞ்சருடன்மீதினினமர்ந்தான் (௧௮)

வாசவனொடுமுனிவர்வானவர்நடுங்க
வாசையுடன்வானிலமதிர்ந்திடவெழுந்து
வீசுதிரைமோதியிடுவேலையசமாக
மாசறவிளங்குதுவராபதியின்வந்தான் (௧௯)

நீதியில்பவுண்டரனொடுநெறிகளில்லா
தேதமலியுங்கலவியன்னெதிரிலாத
நீதிநூல்காசிபதிசெல்லவதுகண்டே
மாதவனெழுந்திரதமீதவர்முன்வந்தான் (௨௰)

அடற்கதைவில்வாள்பணிலமாழிகையிலேந்திச்
சுடற்கனகவாடையொடுதூயகலுழன்மேற்
படைக்கண்வினைபோலுறுபவுண்டரனிலக்கி
னடிக்குமவர்போலவரவேயரிநகைத்தான் (௨௧)

வேறு.

மைக்கணமிக்குச்சுற்றுமிடிக்கப்படர்வான்மின்
றிக்கவிரொக்கப்புக்கெனவும்பற்றிரள்சேர
வக்கிரமத்தோடச்சுதனைக்கண்டழல்கண்ணு
ரிக்கணமெற்றெற்றெற்றுதிரென்றேயெதிருற்றார் (௨௨)

இருள்வரைமருவுமருவியெனத்தான்மதமெய்தத்
தரையடிபுதையத்தாலிகர்க்கைக்கதைபற்றித்
திரைபொருகடல்போலும்பல்கள்பம்பத்திசைதோறும்
விரைபுரைதுளவத்தரியைவளைத்தார்விதியஞ்ச (௨௩)

அழலுறுநயனத்தானைமுனிந்தூதன்மெய்யி
னிழலினைமோதிநீண்டகரத்தாலுயர்வானின்
மழைமுகில்நிரையவ்வியுரிஞ்சியரிசேனைக்
குழுமுமுழுகிடவேவீசியஞாலங்குலைவெய்த (௨௪)

உவருறுகடல்போலும்பல்கள்பம்பியுயர்கையாற்
கவருடைநெடிதாமாணிறமோதிக்காலாலே
குவடுகடுமாளெழவிடறித்தன்னிருகொம்பிற்
சுவடுறநிலனிற்குத்தியவூர்த்துறையாக (௨௫)

வேலினர்கோலினர்வில்லினர்குந்தமிளிர்கையார்
காலனுமஞ்சச்சினவுறுகண்ணர்கடியராய
தோலின்வெரின்மேற்குரகசோதைக்கினிதாய
பாலனையுற்றுச்சுற்றினர்பகழிமழைபெய்தே (௨௬)

காலையடர்க்குங்காலொரிமைப்பிற்கனமீதின்
மூலமகற்றிந்தாவிடுமியவுரித்திரள்வீரர்
நீலமுகில்போனின்றருணொடுமால்முனரெய்தி
வேலையில்குந்தம்வீசினர்விண்ணோர்மிகநோவ (௨௭)

கரிவெரிநூறுவோரிரதமீதூறுவோர்கடிதாய
பரிவெரினமர்வோர்படியொடுககனமறைவெய்தச்
சொரிசரமழைபோற்குழுவலரிசரரோடுந்
தெருமரவெய்தவார்த்துவளைத்தார்திருமாலை (௨௮)

பேரிகைதிமிலைசச்சரிபடகம்பிரிதில்லாத்
தாரைகள்முரசந்தக்கையிடக்கைகவிழைபம்பை
யாருறுதுடிசைகரடிகையிடக்கையமொழியாதே
நேருறவயர்வளைத்தனருகுண்டுபடுமாலை (௨௯)

அதிரதரெண்ணிலர்மாரதர்சூழவலையாரு
முததிகள்போலவும்பல்கள்பம்பவுயர்சேணி
னதிர்தருமிடிபோற்கம்பினமார்ப்பவுறிதாவிப்
ததியனைநெய்பானுகரரிமுனரிற்சமர்செய்தார் (௯௰)

அத்திதரித்தோனருளினலரிபோற்றிரிமன்ன
னத்திகளேகமாகுவகாலத்தொலியேபோ
லத்திகளெல்லாம்பம்பிடவாணன்புயமட்ட
வத்திகிரிக்கோன்முன்னர்நடந்தானறிவில்லான் (௯௧)

வேறு. அரனருளமால்வடிவுபெற்றவறிவில்லான்
கரியிரதமாவினர்களோடுகெடிதெய்தத்
திருவின்மகுணன்முறுவல்செய்துசிலைகோலி
வருடமெனவெங்கணும்வடிக்கணைசொரிந்தான் (௯௨)

கரமறுவகோடிறுவகாலறுவநேரில்
சிரமறுவவாலறுவசெல்லெனவெழுந்து
புரள்வனகரித்திரடன்வென்னிறுறுவோர்கள்
வரையெனவிழுந்துருள்வர்மால்விடுசரத்தால் (௯௩)

தேருருளறுறிவலவன்சிரமறுத்துக்
காருலவுநற்கொடிகளைந்துகளைகண்ணும்
வீரர்சிலையோடுகைவிழத்தலைதடிந்தே
யாரியன்விடும்பகழியண்டமுகடுற்ற (௯௪)

திருமகுணன்விற்கொடுசிலீமுகம்விடுப்பக்
கரிவெரினினுற்றவர்கள்கால்கைகடுணிந்து
குருதியுகவும்பன்மிசைமற்றவர்குரம்பை
வரைமரநெறிந்ததெனமன்னியதுமன்றே (௯௫)

வெரினின்வருவீரரைமுராரிசரம்வீழ்ப்ப
வரைநிகரெனத்திரியுழும்பன்முனர்மற்றோர்
கரிபடநிலத்தின்விழுகாளையைமுனிந்தே
சிரமெய்தெரியாதவகைதேய்த்தனபதத்தால் (௯௬)

பரனெய்கணையாற்பரியின்மீதினுறுவீர
ரிருகரனொடேபரடுவீழவிணையில்லா
வரியைநினையாதவர்களைம்புலமெனத்தம்
முரைவழிநிலாதிவுளியோடவுளையுற்றார் (௯௭)

தேரின்வருவீரருயர்சீதரனெய்யம்பால்
நாரியறவேகொடையினன்கறிவிலாத
பூரியர்படைத்தபொருள்போலவெரிவுவத்
தாருமொளிராசுகம்விடுக்கிலதலைந்தார் (௯௮)

சிலையொடுகரங்களறவேகொடிகொடேராண்
மலையெனவிழுந்துருளவாசிகரியெல்லாந்
தலையறுவசெங்குருதிதாரணியினோடு
மலகையுயிர்செற்றவருளாளன்விடுமம்பால் (௯௯)

நாணியறவில்லறநலங்கொளிரதத்தி
ருணியறமாவலவனற்றுவிழவொன்னார்
தூணியறவீரர்கடுணிந்தனர்கண்மாயோன்
பாணமழையெண்டிசைபரந்தவனல்பொங்க (௧00)

சேடனணையாகவமர்தேவனெய்சரத்தால்
வீடினர்களானைபரியோடுவயவீர
ரோடினசெழுங்குருதிகூளிகளுவப்ப
வாடினகவந்தமெண்ணிலாதனவடர்ந்தே (சுக)

வேறு. அந்தகன்வெருவவேயயின்மழுத்தோமரமடுசரங்க
ளுந்தியேதந்தியெண்ணில்பரித்திரளின்மேலுருளுதேர்மேற்
சிந்துவின்னொலிகெடத்திசைசெவிடுற்றிருகங்கண்
மந்தரவரையெனக்குவையுறச்சுடுசரமால்விடுத்தான் (சுஉ)

கஞ்சனைக்காய்ந்தருள்கண்ணனூர்கார்முகத்தேவுமம்பாற்
குஞ்சரங்கோடகங்கொடிகடேர்கோடியோர்நிமிடமுன்னம்
பஞ்செரியுறவிறுந்தன்மைபோற்படிமிசைத்துகளதாக
வெஞ்சினக்கயவர்கம்விண்மிசைத்தாவினவெளியிலாமே (சுங)

தேரறக்கொடியறச்சிலையறப்பாகர்வெஞ்சிரமுமற்றே
காருறக்கரியறக்காலறக்கம்மறக்கவசமற்றே
வீரர்தம்முரமறநித்திலத்தாவடஞ்சிதறிவிண்மேற்
றாரகையவிர்தனக்கொப்பலாதென்பபோற்றுவுமன்றே (சுச)

நெடியவன்கணையினுற்கரிபரித்தேரறநிலையில்வீரர்
முடியறக்காதறக்குண்டலமெண்ணிலமுடுகிவிண்மேற்
கடிதினிற்சென்றுகீழ்வீழ்வனகவினுறும்பதமழிந்தே
யுடுவினமெரியுறத்தரையின்வீழ்செய்கையையொத்ததம்மா (சுரு)

அடல்செய்வோராக்கைமண்வீழவேநாவுமார்கலியினெய்த
வடவையினிருகணுமுற்றிடநாசிவாயுவினின்மேவக்
கடிதினிற்செவிகளைக்கனமீதிடுதலாற்கண்ணன்வாளி
யடைவினிற்பிதுருமெதத்தநூற்கிரியைசெய்ததம்மா (சுசு)

பகடுமாவீரனற்றசைநுகர்ந்துதிரநீர்பருகியெண்ணி
லிகலனுங்கூளியுஞ்ஞாளியுங்கங்கமுமெருவைதானு
மிகவுறும்பசிகெடும்படியெதிர்சேனையைவீட்டிமாயோன்
சிகியுறுஞ்செஞ்சரஞ்சென்றதாற்பரவுபகாரரொத்தே (சுஎ)

வேறு. அத்தியின்வாழ்வோ
னத்திரமேவ
வத்திகளெல்லா
மத்திகளாய (ருள)

கோலவரிக்கோன்
கோலினமேவத்
தோலினமெல்லாந்
தோலினமாய (ருஅ)

அரிவிடுவாளி
யரியினுமுடுகக்
கரியினமெல்லாங்
கரியினமாய (ருக)

பத்திரைகேள்வன்
பத்திரமேவ
வத்திரிமேவு
மத்திரமாய (சுo)

றான்றிருபவுண்டரன்றன்றிகிரியான்மடியச்சீற்ற
முறாவிரதத்தின்மீதிருந்துயர்காசிராசன்
கறையிட்டுரனையலக்கழுறத்திசைகளெல்லா
மறையவேவாளியாவிவலம்புரிமுழக்கியார்த்தான் (௭௨)

தாரணியெண்டிசைகளெங்குமறைத்தசாயகங்கடன்னை
யரியொருகணையினாலேயறுத்தழல்வாளிவிட்டுக்
கரிபரிவீரர்மாளவதைத்துயர்காசிராசன்
சிரமறுத்தெழில்கொள்காசித்தெருவிடையிட்டான்மன்னோ (௭௩)

பவுண்டரனுடனுங்காசிப்பதியிறைமடியக்கண்டு
சிவந்தெரிநயனனுங்கலவியன்றேரினெய்தித்
தவந்தனியுயர்ந்தோருஞ்சக்ரதாலகேதனன்றன்மீதி
னிவந்திடுசிலையால்வாளிநிறைந்திடத்தூவியார்த்தான் (௭௪)

நிலனுயர்வானமெல்லாநிறைந்திடும்வாளிதன்னை
யலமொளிர்கையினாற்சுற்றியசக்கரத்தியேயிராமநம்பி
சலமுறவெதிருநின்றகலவியன்றடந்தேர்தன்னை
யலவன்றோடிவுள்மாளவடித்தனன்வானோரேத்த (௭௫)

அலத்தினாலிரதமாவோடழியவேகலவியன்று
னிலத்திடைக்குதித்துமேருநிகரெனக்கதைகைக்கொண்டு
சலத்தொடுமெதிர்ப்பச்சக்ரதாலகேதனன்கலப்பையாலே
வலத்துடனடித்தலோடுமுறிந்ததுவயிரத்தண்டு (௭௬)

சதையிருகூறாய்வீழக்கலங்குமேகலவியன்று
னெதிருறவருஞ்சியோடியேழுயோசனையினீள
முததியினமுவந்தன்றுண்மூழ்கியாண்டொளித்துப்போனான்
மதியொளிவண்ணநம்பிமாயவன்றன்னைச்சேர்ந்தான் (௭௭)

வாசவன்வெருவவெய்யபவுண்டரன்வலியான்மிக்க
காசிமன்னுடனேமாளக்கண்டமாதவர்களெல்லா
மாசிகண்மொழியவானோராவலங்கொட்டியார்ப்பக்
கேசவன்றுவரையெய்தியிருந்தனன்கிளையோர்வாழ்த்த (௭௮)

பவுண்டரன்வதைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪0௩

## ௧௫-வது சுதக்கணன் வதைப் படலம்.

தேசில்காசிபதிசிறுவனாகியசுதக்கணன்றவசுசெய்திட
வீசன்மற்றவனுணர்த்தசொற்படியினீயவெய்தியகிருத்தியுங்
காசிமாநகரொடெரியநேமியடர்கவின்கொளாவிரலுகிர்தெறித்
தேசிறேவியுடனினியருந்துபொருமியாதவன்றனையிறைஞ்சுவாம் (௧)

காசிதன்னினெழில்வீதியிற்கடியகாசிமன்றலையுருண்டிட
வாசினுள்ளமிழ்சுதக்கணன்கடிதுநோக்கியேயழுதகண்ணினன்
வாசுதேவனிவைசெய்தனனெனமனத்தினின்மறநினைத்துய
ரீசனைத்தொழுதுகனல்வளர்த்திடவிருந்தருந்தவமியற்றினன் (௨)

வருத்தமோடுயர்சுதக்கணன்கனல்வளர்த்துமாதவமியற்றிய
வருத்திகண்டரன்முனெய்தியான்றருவதேதுநீயறைதியென்றலும்
பெருத்தவெந்தையைவதைத்தனன்னவிர்கொள்பின்னைநாயகனைவெல்லவோர்
கிருத்தியைத்தருதியென்னநஞ்சுதிகழ்கிரிவனிம்மொழிகிளத்துவான் (௩)

அழலினுகுதிபெய்தாபிசாரநிறையச்செய்தாலதனுளனலுறும்
விதியளாமொருகிருத்தியெய்துவளெனுவரன்கயிலைமேவினன்
கழைகொடோளியுமைபாகன்வாய்மொழியினெஞ்சின்வஞ்சமுறுகாவலன்
றழலினுவினெய்சொரிந்துகங்கையுறுசடையன்மந்திரநவின்றனன் (௪)

வேறு. அரனுரைக்கவேவளர்த்தவாவிசாரவனலுளே
யெரிமிகுத்தகண்கள்வச்சிரத்தெயிற்றுமுச்சிரக்
கரமொராறினயின்முசுண்டிகட்கம்வாள்வில்கதையுற
விரைவினிற்கிருத்தியெய்திவிபுதரஞ்சநின்றனள் (௫)

அழலுளெய்தியமர்கிருத்திதன்னைநோக்கியரசர்கோன்
குழல்கொடேதுவோனையின்றுகொன்றுமீடியென்னவே
சுழலழற்கண்பிறையெயிற்றள்சூலமேந்துகையினள்
தழலுயிர்ப்புநகையணிடுதரணியஞ்சவேகினள் (௬)

திக்கசங்கள்வெருவநீடுதிசைகளெங்குமெரியவே
யுக்கிரத்துரப்பியேயூழிகாலவிறுதியி
னக்கனுற்றவடிவுபோலநாகரஞ்சவிடியெனக்
கொக்கரித்தடர்ந்துவந்துகோலகாலமாக்கினள் (௭)

பன்னிரண்டுயோசனைபரப்புநீளமாகியே
யுன்னுமுன்னம்வானுடாசையெரியவோதையுவரின்
வன்னியென்னமுடிகிமாயன்வைகிவாழுநகருளோ
ரின்னலெய்திவெருவும்வண்ணமேகினள்கிருத்தியே (௮)

தவர்களெண்ணில்விபுதரோடுசதமகனடுங்கவே
யவனியின்கண்வடவைபோலமுடுகிவாரியலைகள்சூழ்
துவரைதன்னினடர்கிருத்திசூலமேந்திவருதலும்
பவமிலாதவரசர்சேனைபாறினர்களலறியே (௯)

இறுதிகாலமுறவெதிர்ந்தவீச்னெற்றிவிழியழ
லறுதியாகவந்ததையகோவெனுவரற்றியே
நறுநெய்யுண்டநாதகாவெனுநவின்றுநகருளோர்
முறையிடாநடுங்கிமாயன்முன்னரோடினரரோ (௧0)

வேறு. வித்துருமத்தூணெண்ணிலவிளங்குமாமண்டபத்தின்
சத்தியவாமையென்னுந்தத்தைநேர்மொழியாளோடு
நித்தமங்காடுகின்றநேமியானடிவணங்கிக்
கைத்தலங்குலைத்துநெஞ்சாகுலம்வரக்கழறலுற்றார் (௧௧)

வாரியைப்பருகியோங்கும்வடவையோகடுவோவன்றி
நீரணிவேணியான்றன்னெற்றியின்விழியிற்றீயோ
பாரொடுந்திசையைச்சுட்டுப்பரந்தகல்விசும்பைமுட்டி
யேருறுந்துவரைதன்னினெய்தினவிறைவவென்றார் (௧௨)

எரியுறவளர்ந்தெண்டிக்கைச்சுட்டதென்றிளைத்துவந்தோ
ருளைசெயக்கேட்டமாயோனுமாபதிவரத்தாற்காசி
யரசர்கோன்விடவேவந்தகிருத்தியென்றறிந்துதன்கை
விரலுகிர்தெறித்துச்சூதுவிரும்பியங்காடினுனல் (கங)

தாதுராகஞ்சேர்கூந்தற்சத்தியவாமையோடு
சிதரன்சூதங்காடிவிரலுகிர்தெறிக்கக்கோடி
யாதவரொளிபோற்றேன்றியாழியெண்டிசையுமண்ணு
மீதலத்துயர்ந்தவானும்விளங்கிடவெழுந்ததன்றே (கச)

அரிவிரலுகிளைத்தானேதெறித்திடவாழியாகி
யெரியுறவடர்ந்துவந்தகிருத்தியையெரித்துக்காசி
யரசனைவதைத்தவ்வூரையழலினுக்கிரையதாக்கிச்
சுரர்துதிசெய்யமீண்டுசோதியையடைந்ததன்றே (கரு)

சுதக்கணன்வதைப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪0௩௮.

## ௬௬-வது துவிந்தன் வதைப் படலம்.

அந்தரத்துயர்ந்தவென்றின்சுதனடிபணிந்துவாழ்த்த
விந்திரனுலகைத்தாண்டியிலங்குமேழ்சாலமெய்தே
துந்துமிதனைத்தாளால்வானுந்தியசோதிநாமஞ்
சிந்தையின்மகிழ்ந்துகூறுஞ்சிரியோரடியிற்சேர்வாம் (க)

சுந்தரஞ்செறிந்ததூண்கடுலங்குமாமண்டபத்தி
னந்தணர்குழாங்கள்சூழவிருக்குமச்சுதனைநோக்கி
யிந்துநேர்வண்ணனன்பாலசோதையோடிலங்குகின்ற
நந்தனைக்கண்டுமீள்வனென்றுரைநவின்றுபோனுன் (௨)

தூயமாமணித்தேர்மீதிற்றுலங்கியவிராமநம்பி
யாயர்தம்பதியினெய்தியசோதையைவணங்கியண்டர்
நாயகனுகியோங்குநந்தனைப்பணிதலோடு
நேயமோடணைத்துக்கண்ணீர்நிலனுறவிளம்புகின்றார் (௩)

இந்திரைகொழுநனின்பத்துடனிருந்தனனேவெம்மைத்
தந்தைதாயெனவேயெண்ணிநினைப்பனேசாற்றுகென்று
நந்தனேடசோதைகண்ணீர்நிலனுறநவிலலோடுஞ்
சுந்தரவிராமநம்பிபரிவுடன்சொல்லலுற்றான் (ச)

மாயவனுகிவந்தபவுண்டரன்றனைவதைத்துத்
தீயவெங்காசிமன்னைத்துணித்தவன்சேயைச்செற்று
நோயெனமுடுகிவந்தகிருத்தியைநொறுக்கிக்கண்ண
னுயுமாமறையோர்சூழத்துவரையினமர்ந்தானென்றான் (ரு)

நலத்துடனிராமநம்பிநவின்றிடயமுனையாறு
நிலத்திடையெய்தாதாகநெஞ்சுறுமுனிவினோடு
மலைத்திரளிழுத்தலோடுமடியினில்வந்துவீழ்ந்தாள்
சலத்தொடுநதியிற்றூயகாளிந்திதவளமாகி (கஎ)

ஆயிரநீலமுன்னரளித்துயர்யமுனையாளுந்
தூயவள்பயத்தினோடுந்துலங்கிடவிராமநம்பி
நேயமோடிலகுவாசநிறைமலர்பறித்துவீசி
வேய்கொடோளியர்களோடும்விரும்பிநீராடினானால் (கஅ)

அயவிளையாட்டுமுற்றியஞ்சனவாடைசுற்றிக்
கயல்விழிமடவாரோடுங்கலனெலாமணிந்துகொண்டே
யியல்புடையிரேவதத்தினெய்தியாழிசைகள்பாடி
மயிலுறுகானந்தன்னின்வனப்புடனிருக்கும்வேலை (கக)

அரிகளினதிகனானமயிந்தனுக்கனுசனாகி
நரகனோடளப்பிலாதநட்புடைத்துவிந்தனாயர்
புரிகளையழலாற்சுட்டுப்பொருவரைக்கரத்தாற்பற்றி
வரையுறுபிலனுள்ளிட்டுமறம்பலசெய்தான்மன்னோ (உ0)

நியுதயானையின்வலத்துத்துவிந்தன்வானீண்டமெய்யன்
கயிலையையிகர்த்ததாலகேதனன்களிப்பினோடு
மயினிகரணங்கினாரோடிரேவதைவரையிற்சார்ந்தே
வியல்புறவிருக்குங்காவினிமைப்பின்முன்னெய்தினானால் (உக)

மாதவர்மகிழத்தாலகேதனன்மதுரமிக்க
தேயாழிசைக்கும்வேலைகிட்டித்தன்றசனங்காட்டிப்
பாதவமீதினெய்திப்பாசடைபறித்துவீசி
மோதினன்கோடுவாங்கிமுனிந்துயர்துவிந்தனம்மா (உஉ)

மலையெனவுயர்ந்துதோன்றும்வானரமரத்தினேறி
யிலையொடுசாகைவாங்கியெறிந்திடமாதரெல்லாங்
குலைகுலைந்தவனியோடக்குபிதனாமிராமநம்பி
யலமெடுத்தவன்றன்மீதினெறிந்தனனமரர்வாழ்த்த (உங)

அடுசினந்திருகவீரனெறிந்திடுமலாயுதத்தைக்
கடுமையிற்றப்பிச்சேர்ந்துமதுவுறுங்கலசமெல்லாம்
பொடிபடவுடைத்துத்தூயபொன்னவிர்தூசைப்பீற
மிடலுடையிராமநம்பிமேல்விழுந்தடித்தானம்மா (உச)

சிரமிசையடித்துமார்பிற்புடைத்திடுந்தீயோன்றன்னை
முரணுறுமிராமநம்பிமுசலங்கொண்டடித்தலோடும்
வரைவிழுவதுபோல்வாயிற்குருதிநீர்மண்ணினோடத்
தரையிசைமயங்கிப்பின்னர்த்தெளிந்தனன்மயிந்தன்றம்பி (உரு)

தேறியதுவிந்தனெஞ்சிற்சினத்தொருசாலம்வாங்கி
யேறுறுமரனுமஞ்சவெறிதலுமிராமநம்பி
நூறுகூறாகத்தண்டாலொறுக்கியம்மரத்தைவீழ்க்க
மாறிலோர்பிறங்கலேந்தியெறிந்தனன்மயிந்தன்பின்னோன் (உசு)

வடவரைபொருவவெய்தமலையினையலத்தினாலே
படியிடைத்துகளாய்வீழப்பால்வண்ணனடித்தலோடுங்
கடுமையினெண்ணிலோங்கல்கவடுடைமரங்களெல்லா
மிடலுடைத்துவிந்தன்விட்டேயார்த்தனன்விண்ணோரஞ்ச (உஎ)

இடிகளும்வெருவவார்த்தேயெண்ணில்பாதவங்களோங்கல்
கடியவன்விசையின்மென்மேலெறிந்திடக்கண்டுகோல
வடிவுடையிராமநம்பிவருவரைமரங்களெல்லாம்
பொடிபடவலத்தானூறப்பூமழைபொழிந்தார்விண்ணோர் (உஅ)

விட்டிடுமரங்களெண்ணில்விலங்கல்கள்பொடியதாக
மட்டவிழலங்கல்சூடுமதிவண்ணனலத்தான்மோதக்
கிட்டியதுவிந்தனூர்த்துக்கிரியிடையிடிவீழ்ந்தென்னச்
சிட்டரெண்ணிராமநம்பிசிரமிசைப்புடைத்தான்மன்னோ (உக)

சிரமிசைப்புடைத்தலோடுஞ்சீறியேயிராமநம்பி
யரிகுலவீரன்மார்பினசனிவீழ்ந்தென்னவாங்கே
யொருகரமுறுக்கிக்குத்தவுதிரம்வாயொழுகியோட
வரையுருளுவபோற்பாரின்மடிந்தனன்றுவிந்தன்மாதோ (௩0)

தியனுந்துவிந்தன்மாளச்சிறந்திடுஞ்சுரர்களெல்லாந்
தூயமாமலர்கள்வீசித்துதித்தனரிராமன்றன்னை
நேயமோடாயர்மாதர்நிறைந்திருமருங்குஞ்சூழ
மாயவன்முன்னோனெய்தியசோதையைவணங்கினானால் (௩க)

தாயெனுமசோதைதன்னைப்பணிந்தசக்கரத்தோன்முன்னோ
னாயிரிற்பெரியோன்றன்னையடிதொழுதெழுதலோடுந்
தியனுந்துவிந்தன்றன்னைச்செற்றவன்றன்னைநந்தன்
றூயமாதேவியோடுமணைத்தருள்சுரந்தானன்றே (௩உ)

விலங்கலாமவன்வான்றோயவிலங்கலின்முழையுட்போடக்
கலங்கியவாயர்தம்மைவிடுத்துயர்கண்ணன்முன்னோ
னலங்கிளரசோதைநங்கைநந்தனோடிரங்கிநிற்பப்
பொலஞ்செறியிரதமீதிற்றுவரையிற்புகுந்தான்மன்னோ (௩௩)

அன்னையைவணங்கித்தூயவருள்செறிவசுதேவன்றன்
பொன்னடிபணிந்துநின்றம்பொற்புறுமலத்தோன்றன்னைப்
பின்னவனிறைஞ்சமார்பிற்றழுவிப்பேரின்பமெய்து
மன்னவர்குழாங்கள்சூழமகிழ்ந்தினிதிருந்தான்மாதோ (௩௪)

துவிந்தன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௪0உ.

---

## ௬எ-வது மதனன் ஜனனப் படலம்.

சோமனைச்சடையிற்றாங்குமரன்படுந்துன்பநீக்கிப்
பூமனைத்தந்திரேழுபொழில்களும்படைத்துக்சஞ்ச
மாமனைவதைத்துப்பின்னர்மாதவர்குழாங்கள்போற்றக்
காமனையளிக்குமாயோன்கழலிணைகருதுவோம்யாம் (க)

ஆழிசங்கிலங்கும்பாசமங்குசமளிநாணுதும்
வேழவில்வெறிகள்வீசும்விசிகம்வேயமர்ந்தவெண்கை
மாழையின்கடையபந்தோன்றமதனகோபாலனாகி
யாழினைப்பழிக்குமின்சொல்லுருப்பிணிக்கின்பமீந்தான் (உ)

கத்தூரித்திலதநெற்றிகவினுறக்கழுத்தின்மார்பின்
முத்தாரமிலங்கநேரிக்கவுத்துவமுகிலின்மின்போல்
வித்தாரத்திலதநாமந்தெரிவுறவரம்பைவாம
மொத்தூருவயங்குமாதாமுருப்பிணிக்கின்பமீந்தான் (௩)

தாடொருகளினத்தேவிதன்னுடன்றேனும்பாலுங்
கூடியதொப்பச்சிந்தைகுளிர்ந்திடப்பாயலெய்தி
நீடியவின்பமெய்திநேமியோன்மகிழுநாளின்
பீடுடைமதனனெய்துமியல்பினைப்பேசலுற்றாம் (௪)

நக்கன்மாதவர்கட்கெல்லாம்நாயகனனைசோதி
திக்கெலாம்விளங்கவைகித்தினம்பரிசாரகஞ்செய்
திக்குநேர்மொழியளாயவுமையுவந்திறைஞ்சியேத்தத்
தெக்கணமூர்த்தியாகிச்சிறந்துயோகஞ்செய்நாளின் (௫)

தியவெஞ்சூரன்றன்னைச்செயித்திடச்சிவன்முன்செய்யுந்
தூயமாயோகமாறிச்சுதன்றனையளிக்கும்வண்ண
மாயிரநயனன்றன்னோடமரர்கண்மதனைநோக்கி
நீயரன்றவத்தைமாற்றியெம்மிடர்நீக்கென்முரால் (௬)

சூரிவைமொழியமாரன்றாயகன்னலின்வில்லேந்தி
யரியுறுநாணதாகவைமலர்வாளிபூட்டி
விரைவினிலரன்மேலெய்யவெகுண்டவனுதலின்கண்ணை
யெரியுறவிழிக்கக்காமனெரிந்தனனிமைப்பின்முன்னம் (எ)

அரனுதல்விழியினாலேயழகியமதனீறாக
இரதிதன்வயிற்றினெற்றியிருகணீர்நகிலின்வீழப்
பருவரற்பரவைதன்னுட்பதைக்கின்றுடனைநோக்கிச்
சுரரெழில்வலாரியோடுந்துலங்கியவரன்பாற்சென்றார் (அ)

அரனெழிற்பாதந்தன்னிலிறைஞ்சிவான்வலாரியண்ட
ருரைசெய்வாருமைதன்கேள்வவுன்னுதல்விழியிற்றோன்று
மெரியினிறந்தான்றேவியிரதியங்கெய்துகின்ற
பரவரலொழித்தியென்னப்பகர்ந்தடிபணிந்தார்மன்னோ (௯)

சுரரொடுவலாரியெய்தித்துதிசெய்தமொழியைக்கேட்ட
வரனருள்புரிந்தெல்லோர்க்குமனங்கனாய்த்திரிந்துமாற
னிரதிதன்விழிக்குத்தூயவுருவனாயியங்குவானென்
றுரைசெயமதனன்றேவியுவகையோடிறைஞ்சலுற்றாள் (௧0)

என்னிருவிழிக்குத்தூயவுருவனாய்வசந்தனென்னை
மன்னுவதெப்போதென்னமண்மிசைப்பாரநீக்க
நன்னிலமதனிற்றோன்றுநாரணன்சுதனாய்ப்பாரி
னுன்னுடனணைவனென்றேயுமைகணவன்பின்சொல்வான் (௧௧)

தரணியிற்பாரநீக்கித்தன்னுடைச்சோதிதன்னி
லரியுவந்தெய்தும்போழ்தினனைவர்க்குமனங்கனாகி
யுருவுடைக்கொழுநனாகவுன்னுடன்சேர்வனென்றே
யெருதினிலுறுவோன்கூறவிரதிதானேகினாளால் (௧௨)

அன்றிரதிக்குத்தூயவரன்வரமளிக்கமாரன்
வென்றிகொள்விதர்ப்பன்பெற்றமெல்லியல்வயிற்றிற்றோன்றக்
குன்றெடுத்தருளுமாயன்றேவியைக்குறித்துநோக்கி
மன்றலர்குழலினாடேவகிமனமகிழ்ந்தாண்மாதோ (௧௩)

கருப்பமோராறுதிங்கணிறைந்திடக்கவின்கொணங்கை
யுருப்பிணியுடன்மாலோராதனத்திருந்துவகையெய்தத்
தருப்பையைவிரித்துக்கர்க்கன்றழலினுகுதிசெய்தோமம்
விருப்பமுற்றுயர்வேதத்தின்விதிவழிநிறைத்தான்மன்னோ (கச)

மறையவர்தமக்குப்பூமிதானமாதானஞ்செய்து
நறுநெய்பால்பருகுமாயனலனுறந்தசமாந்திங்க
ணிறையவேவிதர்ப்பன்பெற்றநிகரிலாவனசமங்கை
மறுவிலாமதனன்றன்னைப்பயந்தனள்வானோர்வாழ்த்த (கரு)

அறந்தவருதுமாயோன்றனக்கழகானமைந்தன்
பிறந்தனனென்றுமாதர்பேசிடவுவகைநெஞ்சிற்
செறிந்திடவிறைநீராடித்திமிலைசின்னங்கள்பேரி
யறைந்திடக்கோயில்புக்கானந்தணர்குழாங்கள்சூழ (கசு)

நந்தொடுதிகிரியேந்துநாரணன்கோயின்மேவி
மைந்தனையெடுத்துத்தூயமதிமுகநோக்கலோடுஞ்
சிந்தையின்மகிழ்ந்துகர்க்கன்சாதகவோமஞ்செய்ய
வந்தணர்குழாங்களாசியறைந்தனர்பேரியார்ப்ப (கஎ)

வேறு. தேவகிரோகணிசிறந்தரேவதி
பாவையர்பலருடன்பரிந்துநோக்கியே
யோவியஞ்சுவைகெடுமுருவினன்றனை
ஆவலினணைத்திவன்மதனனுமென்றுள் (கஅ)

தாலகேதனன்வசுதேவன்சாத்தகி
சீலமாருக்கிரசேனன்றேவகன்
கோலமார்மாயவன்குமரனுகிய
பாலனைநோக்கியாசிகள்பகர்ந்தனர் (க௯)

தரளமாமணிகள்சாமீகரத்தொட
னிரவலர்மிடிகெடவீந்துமாதவன்
சரியிலாதுயர்ந்தகோகோடிதானங்க
ளருமறையறிபவர்க்கருளினனரோ (உ௦)

வீழியின்கனியெனவிளங்கும்வாயினை
டாழ்விலாவுருப்பிணிதனயன்றன்னுட
னேழ்தினமகிழ்வுடனிருக்குமவ்வழி
யூழ்வினைச்செயலினையுரைக்கின்றேனரோ (உக)

மதனன் ஜனனப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉஉரு

## கூஅ-வது சம்பரன் வதைப் படலம்.

வச்சிரப்படையனோடண்டர்வாழ்த்திட
ரச்சுறுமரவின்மேனடித்துவேதத்தி
னுச்சியினசைவிலாதொருவனுகிய
வச்சுதன்பெயரினையறைந்துய்வாமரோ (க)

நம்பர்தந்ருதலுருநயநத்தியினு
லம்பரத்தெரிந்துபின்னனங்கனுனவன்
வெம்பகையாயசம்பரன்வெகுண்டெழுந்
திம்பரினிரதியைப்பற்றியேகினுன் (உ)

நீரணிசடையினுனெற்றிக்கண்ணினுன்
மாரவேவெரிந்திடமயங்குஞ்சிந்தையாள்
பாரினிற்சம்பரன்பற்றியேகவே
யாருயிர்விடுவனென்றயரும்வேலையின் (௩)

இந்துவின்சடையனுலெரிந்தமன்மதன்
சுந்தரவரிசுதனுகித்தோன்றியே
வந்துநின்னிடர்கெடமணப்பனுமென
வந்தரத்துயர்ந்தவசரீரிசாற்றின (௪)

துனியறவுயர்ந்தவசரீரிசொல்லவே
வினையுறுசம்பரன்மேவும்போதெலாந்
தனையவண்கரந்துதன்மாயைதன்னினு
லினியதோரரிவையைப்படைத்தங்கேருவாள் (௫)

ஆசுறுசம்பரனணுகும்போதெலா
மாசின்மாயாவதியானமங்கையைத்
தேசுறவேவியாண்டிரதிசீருற
வேசறுமருந்ததியென்னவைகினுள் (௬)

பவமறுநாரதன்பழிப்பின்மன்மத
னவனியிற்சனித்தமையறையச்சம்பரன்
றுவரையினெய்திமால்சுதனைப்பற்றியே
யுவரியினெறிந்துதன்னூரிற்சென்றனன் (௭)

கடியுடைக்கமலமின்கண்களிக்கத்தன்
மடிமிசைக்கிடத்தலுநகைத்தமைந்தனைக்
கடுமையிற்சம்பரன்கைக்கொண்டேகவே
யிடருறவிருநிலத்திரங்கிச்சோர்ந்தனள் (௮)

தினமோரேழ்மகிழ்வுடன்சிறந்திருந்திடும்
வனிதைதன்மடிமிசைமகனைக்காண்கிலா
ணினைவழிந்தலறியேநிலத்திற்சோர்ந்திட
வனைவருமெய்தியாண்டரற்றினுரரோ (௯)

மாமியாந்தேவகிமலர்க்கணீருகப்
பூமிசைவனிதையையெடுத்துப்புல்லியே
காமனைநிகர்த்தவென்கண்ணன்பாலகன்
போம்வகையேதெனப்புலம்பினுளரோ (௧௦)

சேயினையிழந்தவ்விரங்குஞ்செய்கையை
மாயவனறிந்துயர்மனையினெய்திநற்
ருயுடன்றந்தையுந்தழுவச்சக்கர
ஞேய்விலாதிருகணீருகவரற்றினுன் (௧௧)

மதுமலருறையுமின்னெழுந்துமாயவன்
பதமிசைவிழுதலுமணைத்துப்பார்மிசை
விதியினைவெலற்கரிதென்றுவிம்மியே
சுதையைநேர்மொழியினுட்கினையசொல்லுவான் (௧௨)

மாயமாய்ச்சம்பரன்வஞ்சஞ்செய்தநுந்
தூயநற்சுதனினிவருமேஞ்சூட்சியு
மாயவையெல்லவுமறியக்கூறினான்
சேயினையிழந்தவடேறும்வண்ணமே (கந)

எதுகுலத்தரசர்களிடரின்வீழ்ந்திடப்
பதகனுஞ்சம்பரன்மதனைப்பற்றியே
யுததியினெறிந்திடவொளிகொள்வேலினைக்
கதுமெனவிழுங்கியமகரங்கண்டரோ (கச)

பரதர்கள்பரவையிற்பரந்துமீன்கொலக்
கருதியேவலைகளைக்கடிதுவீசிட
விரதிதன்கொழுநனைவிழுங்கியேகிய
விருதுறுமகரமீன்பிடித்துமீண்டனர் (கரு)

சகரநீர்கிழியவேதாவியோடிய
மகரமீன்றனைக்கொடுதிமிலர்வண்மைசேர்
சிகரமாடங்கள்சூழ்நகரிசென்றுதா
னிகரில்சம்பரன்றனக்கீந்துநின்றனர் (கசா)

கடியவச்சம்பரன்கண்ணினோக்கியே
நெடியவிம்மீனினைச்சமையுநீரென
மடையர்கண்மகரமீன்வயிற்றைப்பீறநற்
சுடரொளிமதலைதான்றோன்றக்கண்டனர் (கஎ)

தூயமீன்வயிற்றினிற்றோன்றுமைந்தனை
நேயவாலுவர்கடாம்வாங்கிநீதியில்
தீயசம்பரன்முனர்க்காட்டத்தேவியா
மாயமாயாவதிமகிழவீந்தனர் (கஅ)

ஆயதோர்காலையினணுகிநாரதன்
றாயமாவிரதிமுன்சொல்லுவானரன்
காயவேயெரிந்திடுங்காமன்மண்மிசை
மாயனுந்துவராமன்மைந்தனாயினான் (ககூ)

சீருறுமுருப்பிணியீன்றசேயினைப்
பூரியசம்பரனெடுத்துப்போந்துயர்
வாரியினெறிந்திடமகரநுங்குமிவ்
வீரியனவேளெனவிளம்பினனரோ (உ0)

நீயவன்றன்னையேவளர்த்துநேரிலா
மாயையாயிரங்களும்வருவித்தீரெட்டுத்
தூயநல்வருடங்களொருவவுன்றனி
மாயவிவ்வசந்தனுக்குனாயிவ்வாறெலாம் (உக)

சோடசவருடங்களொருவித்தூய்மதன்
சேடனும்வெருவுறத்திரியுஞ்சம்பர
னோடமர்பொருதவனுடறுணிப்பனாற்
பிடுடையிரதியேயென்றுபேசினான் (உஉ)

ஈதெலாமொழிந்தவண்முனிவனேகலுந்
தீதெலாமகற்றியவிரதிசிந்தையின்
காதலாற்கணவனையணைத்துத்தன்கர
மீதினில்வளர்த்தனண்மகிழ்வுவிஞ்சவே (உந)

இருந்துபின்றவழ்ந்துமெல்லநடந்தைந்துபருவமெய்தி
யருந்தவர்மகிழவேதமறைந்துயர்சாத்திரங்க
டிருந்திடப்பயின்றேயோங்குஞ்சிலையினால்விதங்கள்கற்றே
யருந்ததியனையதேவிவளர்க்கவேளழகனானான் (உ௪)

காயுமாகரிநடத்திக்கதையினால்கற்றுப்பாரிற்
பாயுமாவிரதமூர்ந்துபதினாறுவருடஞ்செல்லத்
தூய்மையாங்கொழுநன்றன்னைநோக்கியேதுயரமோவி
மாயையாயிரமுமோதுவித்தனளிரதிமாதோ (உ௫)

கன்னல்வில்லேந்துகாமன்கவினாறுமிரதிதன்னை
யன்னையென்றினிதுநோக்கவவளெழிற்காந்தனென்று
தன்னிருவிழியாற்காதறழைத்திடநோக்கலோடு
மென்னிவையென்னவுன்னிமதனாண்டியம்பலுற்றான் (உ௬)

அன்னைநீயன்றோவென்னையளப்பறுமாசைதுன்ன
வுன்னிருவிழியாற்காதலுற்றிடநோக்குகின்றா
யென்னிவையுரைத்தியென்னவெழின்மதனியம்பலோடு
மின்னிடையிரதிகாந்தன்றனக்கிவைவிளம்பலுற்றாள் (உ௭)

நீயென்றன்மணாளனாயவேனிலாய்நெற்றிக்கண்ணான்
காயமேயெரிந்துமீளக்கவினாறுதுவரைமன்னா
மாயன்றன்சுதனாய்வந்தநின்னைவாரியினுள்ளிட்டான்
றீயவுன்பகைஞனானசம்பரன்சேர்ந்துமன்றோ (உ௮)

வாரியுண்மகரநின்னைவிழுங்கிடவலைஞரெய்தி
நீரினுண்மீனைத்தாங்கள்பற்றியேநெறியின்மீண்டு
சீரில்சம்பரன்றன்முன்னர்காட்டக்கூவியர்கள்சேர்ந்து
பாரினிற்பிளக்கநீயாங்குழவியைப்பரிவிற்கண்டார் (உ௯)

மடையர்கணின்னையுன்றன்புரவலன்முன்னர்வைப்பக்
கடியனுடனேகூடிக்கலந்தனுபவந்தான்செய்ய
வடிவுடைமங்கைமாயாவதிதனைப்படைத்தேனந்தக்
கொடியிடைமடவாள்கையிற்கொடுத்தனனின்னையென்றாள் (௩0)

இவையெலாமென்முனெய்திநாரதனியம்பினானென்
றுவமையிலிரதிகூறத்தேவியையணைத்தொண்டேரி
னவையறுகுணத்துநாரியிவுளியைநடத்தியேகப்
பவமுறுசம்பரன்றான்பயமுறவார்த்தானன்றே (௩௧)

மாரவேளிரதியோடுமணிநெடுமிரதமேறி
வீரமார்தனுவினாணையெறிந்தண்டம்வெடிப்பவார்ப்பச்
சூரராமசுரரோடுந்துன்மதிச்சம்பரன்றன்
றேரின்மீதேறிமூரிச்சிலையெடுத்தெதிர்ந்தானன்றே (௩உ)

சம்பரனெதிர்த்தலோடுந்தழங்கியசங்குபேரி
தூம்பிகளெண்ணிலாததுரகமோடுயரும்வீரர்
வெம்பியேவளைந்துசூழவீரவேள்விசிகமாரி
யம்பரந்திசைபாரெங்குமிறைத்தவனார்த்தானம்மா (௩௩)

கரியொருகரமுமற்றுக்கால்களுமறவேவீழ்ந்த
பரியிருகுரமுமற்றுப்பருப்பதம்போன்றுசாய்ந்த
வரிசிலைதுணியவீரர்முடித்தலையுருளமாண்டார்
குருதிபேராறாயோடக்கொடிகுடைமிதந்தமாதோ (௩௪)

வசந்தனேவையமாகவயங்கிடுவசந்தன்வாளி
கசந்தனைத்துணிக்கச்சந்தங்காண்கிலாதேபல்கூறு
யசந்தசைக்குவைபோல்வீழவசைந்ததின்சுவலோர்வீழ்ந்தார்
புசந்தலையுரங்கைகாலேபுசம்படப்புரண்டுபோனார் (௯௫)

பீடுடைவசந்தன்வில்லாற்பிறைமுகவாளிபெய்யக்
கோடுடைக்கசங்கணெண்ணிற்குரகதநிறைகண்மாள
வாடினகவந்தங்கோடியளக்சரிற்குருதிபாய
வீடினரசுரரெல்லாம்வெகுண்டுசம்பரன்றான்வந்தான் (௯௬)

சம்பரன்றனுவைவாங்கிச்சாயகமாரிபெய்தே
யும்பர்கணடுங்கவானமறைத்துருத்தார்த்தலோடும்
வம்பவிழ்மாலைமார்பன்மதனழல்வாளியாலே
யிம்பரினறுத்துவீழ்த்தானெதிருமாசுகங்கடன்னை (௯௭)

எரியுறுநயநனுயசம்பரனெதிரிலாத
வரவுறுபடையைவிட்டானமரர்களஞ்சியோட
விரதிதன்கொழுநன்வெய்யவிராக்கதர்படையைவாங்கிச்
சுரர்துதிசெய்யவெய்யத்துணிந்தமாசுணங்களெல்லாம் (௯௮)

கடியசம்பரன்றானெஞ்சிற்கனன்றுகாந்தர்ப்பவாளி
படியெலாம்நடுங்கவிட்டான்பார்த்துயர்மதனராசன்
கொடியவெங்கூளிவாளிகுணிவிலாற்றொடுத்துவிட்டு
நொடியின்முன்னறுத்தலோடுநுவன்றனராசிவிண்ணோர் (௯௯)

தீயசம்பரன்றானெஞ்சிற்சினமுறச்சிலையினாலே
யாயிரவிதங்களானமாயவாசுகங்கள்விட்டான்
மாயவன்மதலைபத்துநூறதாமாயவாளி
யேயெனுமுன்னமெய்தேயறுத்தனனிமையோரேத்த (௱0)

சுதமுறுசம்பரன்றான்கதைதெடுத்தெறியவானின்
பதியினர்நடுங்கவெய்தக்கண்டரிபயந்தமைந்த
னுதநியைக்கடைந்தமத்தையொத்ததோர்தண்டாலும்பர்
துதிசெயப்படியின்மீதிற்றுகளுறவடித்துவீழ்த்தான் (௱௧)

இரதிமாவிரதமூரவெங்கணுந்தானுமாரன்
சரதவாசுகங்கடன்னாற்சம்பரன்மேனியெல்லாங்
குருதியாறுகவோடக்கொடிசிலைதுணித்துத்தேரின்
பரிதரணியின்கண்மாளப்பகழிகள்விடுத்தானன்றே (௱௨)

சூலியெண்ணசுரன்றேர்மாத்துவசம்வில்லழியப்பொங்கி
ஞாலமுற்றொருவேல்கொண்டுநமனஞ்சவெதிர்த்தலோடும்
மாலிரும்புதல்வன்வெய்யவாளினைச்சுழற்றிவிட்டுச்
சீலமில்சம்பரன்றன்சிரத்தினைத்துணித்தானம்மா (௱௩)

சம்பரன்மடிந்துவீழச்சதுர்மறைமுனிவரோடு
மம்பரத்தும்பரெய்தியாவலங்கொட்டியார்த்து
வம்பவிழ்மலர்கடூவிமகிழ்ந்தனர்மதனராச
னிம்பரினிரதமீதினிரதியோடிலங்கினானல் (௱௪)

சம்பரன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧௱௭.

# ௯௯-வது அநிருத்தப் படலம்.

திகிரியையெடுத்துந்திகிரியைத்தரித்துத்திகிரியையூதிவெஞ்சினத்த
புகரிபமடர்த்துப்புள்ளின்வாய்கிழித்துப்புனிதமாதுலன்றனைவதைத்துப்
பகிரதிமுடித்தவேணியங்கடவுள்பலிதவிர்த்துலகெலாம்வளர்க்கு
முகினிறக்கரியவச்சுதானந்தமுகுந்தமாதவனடிபணிவாம் (௧)

வேறு. உவரியேயகழதாகவுயர்ந்தகோபுரங்கள்சூழ்ந்த
துவரையினிலங்குகின்றதூயபொற்கோயிலின்கண்
ணவமணித்தூண்கண்மேவநலங்கொண்மாமண்டபத்திற்
றவமுறுவிதர்ப்பராசன்றந்தமின்னிருந்தாளன்றே (௨)

எண்ணிரண்டாயிரத்தோடீரைம்பத்தேழுமாதர்
நண்ணியெம்மருங்குஞ்சூழநற்பொனாசனத்தின்மீதின்
பெண்ணினுக்கரசியாகிப்பிறங்குசாமரைகள்வீச
விண்ணவர்மலர்கடூவவீற்றிருந்தருளும்வேலை (௩)

பரிதடந்தேர்கள்சூழப்பவமுறுசம்பரன்முன்
பொருதுடற்படியின்வீழ்ந்துபொன்றவெஞ்சமரின்வென்று
சுருதியையறையும்வானோர்துதிசெயவானமீதி
விரதமீதிரதிதன்னோடெய்தினானெழில்கொள்காமன் (௪)

வருகின்றமதனைநோக்கிமாதவனெய்தினானென்
றிருகயனயனமாதரெழுந்திருந்தொதுங்கிநிற்பத்
திருமகளிவனாரென்றுசிந்தையினினைந்துனைந்து
முருகவிழ்கமலமங்கைமுலையிற்பால்சோரச்சொல்வாள் (௫)

வாடியதிருத்தான்பெற்றமகனையானிழந்தநாட்கள்
சோடசவருடமாயச்சுதனுய்த்துவளர்த்ததாகி
லாடவர்திலகனாகிவருமிவனழகையொக்கு
மேடவிழலங்கல்சூடியெய்துவானியாரோவென்றாள் (௬)

என்றவளுரைக்கும்வேலையெழில்கொடேவகிதன்னோடுங்
குன்றெடுத்தருளுமாயோன்குறுகியேநோக்குங்காலை
நன்றிகொண்மறையையோதுநாரதனெய்திஞான
மொன்றியவிதர்ப்பனல்குமுருப்பிணிக்குரைப்பதானான் (௭)

நீயன்றீன்றுதவுமைந்தன்மதனிவன்றன்னைநீனு
மாயஞ்செய்சம்பரன்முன்வாரியினெறிதலோடுந்
தூயதாமகரமீனிச்சுதன்றன்னைவிழுங்கித்துள்ளிப்
பாயுமாதரங்கமோங்கும்பரவையுட்டிரியுநாளின் (௮)

வலைஞரம்மகரந்தன்னைப்பற்றிச்சம்பரன்முன்வைக்கக்
கொலைசெய்சூகரர்கள்வாங்கிக்கோதின்மீனகட்டைப்பீற
நலனுறுங்குமரன்றன்னைக்கண்டவர்மகிழ்ந்துநல்கிப்
புலையனாமசுரன்முன்னர்ப்பொலனுறச்சுட்டினாரால் (௯)

அரனுதல்விழியிற்றீயினெரிந்திடுமனங்கனில்லா
ளிரதியைப்பற்றிநீசச்சம்பரனேகவந்தத்
தெரிவைதன்மாயந்தன்னாலவனுக்கோர்தேவியாக
மருவமர்குழலிமாயாவதியினைப்படைத்தான்மாதோ (௧௦)

தூயமாவிரதிமாயைதன்னிறைற்றுலங்குகின்ற
வேயுறுதோளிமாயாவதிகரத்தன்புமிக்க
நீயவன்கொடுக்கலோடுஞ்சிறந்திடுமதனைத்தேவி
மாயிருநிலத்தினேயமலிந்திடவளர்த்தாளன்றே (கக)

தூயவிண்வடமீன்போன்றசுந்தரவிரதிவேளுக்
காயிரமாயமெல்லாமருளவேயீரெட்டாண்டு
போயபின்னுற்றதெல்லாம்புகன்றிடமதனன்பொங்கித்
தீயசம்பரன்றனைச்செற்றுத்துவரையிற்சேர்ந்தானென்றான் (கஉ)

முனிவனீதுரைக்குமுன்னர்முண்டகமடந்தைதாளின்
வினையகன்மதனனெய்தியிறைஞ்சிடவிதர்ப்பன்பாவை
தனயனையணைத்துமோந்துதன்முலைப்பாலையீய
வனையிருநகிலிற்றூயவமுதைவேளருந்தினானல் (கங)

தாயிருநகிலிற்பாலையருந்தியேதந்தையான
மாயவன்றிருப்பாதத்தின்வணங்கியமதனைநோக்கி
நேயமோடுரத்திற்புல்லிநேமியோன்மகிழ்ந்தலோடுந்
தூயதேவகிதன்றாளிற்பணிந்தனன்றுலங்கும்வில்லோன் (கச)

அன்னையரளப்பிலோரைவணங்கியேயலாயுதத்து
மன்னனையவன்றாய்தன்னைமற்றவன்றாதைதன்னைத்
துன்னியவன்பினலேயிறைஞ்சினன்றூயதாய
கன்னல்வில்லாகப்பூவின்கணையினைத்தொடுக்குங்காமன் (கரு)

சுரிகுழலிரதியாயதூயவளோங்குகின்ற
வரிகவினுறும்பாதத்தினிறைஞ்சியைங்கணைகொண்டெய்யு
மொருமகன்றனைப்பெற்றவுருப்பிணிதாளின்வீழ
மருகியையிருகையாரவணைத்துளமகிழ்ந்தாண்மன்றே (கசு)

நவையறுகுணத்தனுயநான்மறைக்கர்க்கனெய்தி
யவனியன்றிடந்ததூயோனருடிருமகனுக்கன்பா
லுவமையிலோமம்பண்ணியுயர்தவருவப்பநாமஞ்
சவளமோடுயர்ந்தமுந்நூற்றரித்துபநயனஞ்செய்தான் (கஎ)

அரிதிருமகன்றன்றேவியுடன்றவிசெய்தவாங்கே
சரதமாமறையோரோமத்தழலினாகுதிகள்செய்ய
விரதிகந்தரத்திற்காமனிலங்குமங்கலநாண்சாத்திக்
கரதலவிரலைப்பற்றிக்கனல்வலம்வந்தானன்றே (கஅ)

தூயவளிரதியம்மிமிதித்திடச்சுரர்கள்போற்ற
மாயவன்மதலைநாரிதன்னுடன்வடமீனோக்கித்
தாயினைவணங்கித்தந்தையடியினிற்றாழ்ந்துமாரன்
றீயவையகலத்தேவியுடன்சிறந்திருந்தானன்றே (ககூ)

**வேறு.** சிருறுமதனன்சுதக்கணன்சுசாருதிறன்மிருபத்திரசாரு
சாருகந்திரன்சாருகதன்விசாருசாருயர்சாருமேகதனன்று
னேருறுசாருகுத்தனேடிவர்கள்பதின்மரையீன்றனளொழில்சேர்
பாருறும்விதர்ப்பன்றவத்தினாற்பயந்தபங்கயத்திருவுருப்பிணியே (உ0)

பானுவன்சுபானுபானுவான்சரதபானுசீர்ச்சந்திரபானு
தேனுறுமலங்கலணிபிரபானுசிறந்தசீபானுநற்பாரி
லூனமில்பிரகற்பானுசற்குணத்தானுயபரிபானுசொற்கீர்த்தி
யீனமில்பிரதிபானுவோடிவரையீன்றனள்சத்தியபாமை (உக)

றலங்கியசாம்பன்சுமித்திரன்வசுமான்றூயவன்புரிகிரசிரத்துப்
பொலன்கொளுஞ்சதசித்திரவணன்விசையன்பொறையுடைச்சித்திரகேது
சலங்களைந்துயர்ந்தசுகனிவாசகனோடைந்துதனயரையீன்றா
ளிலங்கியவடமீனனையகற்புடையாளொழிலுறவயங்குசாம்புவதி (௨௨)

வேறு. மாகவானிகராம்பானுசந்திரன்வயங்குகுந்தி
யாகவச்சிரத்திராகுசங்கனச்சுவசேனன்றான்
வேகவான்விருடநாமன்விளங்கியவாமன்றன்னோ
டோகையார்கவுசலன்றானுதவுநாக்கினசித்தின்றாள் (௨௩)

வீரியசுரதன்றீரன்விருடனேகலன்சுவாகு
பூரணான்மாதன்சாந்திபொறையுறுபத்திரன்றான்
சூரரொண்கவியன்சோமனிகரரியிவர்கடம்மைப்
பாரினிற்றவஞ்செய்தோங்குங்காளிந்திபயந்தாளன்றே (௨௪)

வேறு. தீரரெண்ணியபிரகோடன்காத்திரவான்சிங்கனூர்த்துவன்கன்மாசத்தி
மாரனைநிகர்க்கும்பலன்சகனோசன்வயங்கியபராசிதனசமன்
சீருறத்துலங்கும்பிரபலனுடனேசிறந்திடுபதின்மரையீன்றாள்
பாரினிலங்குமத்திரராசன்பயந்திடும்பத்திரைத்திருவே (௨௫)

விருகுயர்பவனன்விவேதனன்வன்னிவிழுமியகிருத்திரனன்னி
னருள்செறியுதகன்மகாத்துமாகுதியறிவினாலுயர்ந்தமன்னுத
னுருவுடையிவர்கள்பதின்மரையீன்றாளுலகெலாமொருதனிக்கோலாற்
றிரமுறவரசாளவந்திமன்பயந்ததிருநிகர்மித்திரவிந்தை (௨௬)

துலங்குசங்கிராமன்சுபத்திரன்சூரப்பிரகரன்றூயவாமாயு
வலங்கொளுங்கீர்த்திமான்செயன்பிரகசேனன்பத்திராச்சுவன்வண்மை
இலங்குசத்தியகனெழில்கொடாமிரபத்திரனிவரீரைந்துபெயரை
யலங்கல்சேரளகவிலக்கணைபயந்தாளருணெறியறமெலாந்தழைப்ப (௨௭)

பாரினிலரசர்தவத்தினாற்பயந்தபங்கயத்திருவெனத்திகழ்வா
ரீரெண்ணாயிரத்தோர்நூற்றுவரொத்திக்கிளாந்துசுதரெனவீன்றார்
வாருறுமுலைநப்பின்னைதன்னுடனேவயங்கியவாயர்தம்மடவார்
தாரணிமகிழப்பயந்தனரெண்ணிறனையளாயறனெலாந்தழைப்ப (௨௮)

அரசர்கள்பயந்தமங்கையர்பதினாறாயிரத்தொருசதத்தெண்மர்
விரைசெயுங்குழலாச்சியருடனிவரோரொருவர்பூமெல்லியல்சிவண
வரிசையாலோரோர்பெண்மகப்பெற்றுமகிழவேதேவகிமைந்தன்
கரைசெயற்கரியகளிப்புடனிருந்தான்ககனமார்புலவர்கடுதிப்ப (௨௯)

கூனிமிர்ந்தெழிலார்வடிவினிலுயர்ந்தகோதையாள்பயந்திடுங்குமர
னூனமிலுருவமுறுசுபலோபனாகியவுத்தவனுயர்ந்தே
யீனமில்புராணஞ்சுரர்முனியியம்பவறிந்திருவினைகளையகற்றி
வானவர்மகிழவரிதிருப்பெயரைமறப்பிலாமனத்துடனிருந்தான் (௩0)

நன்பொனார்மதிலினிஞ்சிசூடுவரைநாயகன்கோயிலினுயர்ந்த
வொன்பதினாறாயிரத்தினுப்பரிகையொளிகொளவுவமையின்மணிக
ளன்பதாயிரத்தோடிந்திரநீலமயுதமாடத்திழைத்திலங்கத்
தன்பெருந்தேவியுருப்பிணிமுதலாந்தையலாருடனினிதிருந்தான் (௩௧)

தேவியர்பதினாறாயிரத்தொருநூற்றெண்மர்க்குந்தனித்தனிசிறப்ப
வோவியவுருவைப்பழித்தசேடியராயிரத்தினரூழியஞ்செய்யக்
காவினுங்கமலவாவியினிடத்துங்கனகமண்டபத்தினுங்களித்தே
யாவியுமுடலுமெனுமரியவர்கட்களப்பிலாக்களிப்பளித்தமர்ந்தான் (௩௨)

மாயவன்பதினாறாயிரத்தொருநூற்றெண்மராமனைவியருடனு
நேயமோடிருக்குமெழிலினையறியநாரதமுனிநினைந்து
தூயயாழ்கரத்தினேந்திநற்குடைகுண்டிகைகையிற்றுலங்கவேதோன்றி
யாயுநான்மறையோரமர்ந்திடுந்துவராபதியினையடைந்தனனன்பால் (௩௩)

வேடனையருளாற்பயந்திடுநளினமின்னுடன்விரும்பியநிர்த்த
மாடியுமகிழ்ந்தேயிருந்துழிசிகரிலருள்செறிநாரதனணுக
வீடியவினையென்றுவந்தெதிர்கொண்டுவிழுமியமுனிவனையிறைஞ்சி
யாடகமணியாதனத்திடையிருத்தியருக்கியமளியுடனளித்தான் (௩௪)

தீதகன்முனிவன்பாதநீர்கரத்திற்சிரத்தின்மேற்றெளித்தொளிதிகழ
மாதவன்மனைவியுடனவணிருந்துமாசறுமனையின்வாழ்க்கையினி
னாதரவுறத்தீவினைபலசெய்வென்சனனத்தையகற்றுதியென்றே
யோதலுமுனிவனகைத்துயராசியுரைத்துளமகிழ்ந்துபோயினனால் (௩௫)

சத்தியவாமைமனையினிலங்குமச்சினிகோத்திரந்தயங்கச்
சித்தசன்றன்னையுதவியமுகுந்தன்சிறப்பொடுவளர்த்திடுமெல்லை
சுத்தரெண்முனிவன்வருதலுமிறைஞ்சித்தூயவாய்மைமகன்பலபேரி
னத்தொடுந்திகிரிசெறியரிக்காசிபகர்ந்துநாரதமுனிநடந்தான் (௩௬)

சாம்புவன்மகளில்லவளுடனிலங்குஞ்சராசரவொண்டவியிடையிருந்து
பாப்பினிலடித்துபரனெழிற்கிதம்பகர்ந்திடக்கேட்டருள்வேலை
யேம்பலுற்றடைந்தமுனிவனையிறைஞ்சியிப்பிறப்பதுதந்தயாறுய்ய
வாம்பரிசுரைத்தியெனத்தவனகைத்தேயாசிகளறைந்துபோயினனால் (௩௭)

தினகரன்மகளோடிலங்குமாமனையிற்சிறுவர்கள்சன்மநாளுறவே
யனகன்மாமறையோர்க்குயர்ந்தமாதானமளப்பிலாதருள்கின்றவேலை
முனிவடிக்குயர்ந்தசுரர்முனிவரனுமிறைஞ்சியென்சுதர்களிக்கிரக
வினைகடிந்துயநீயருள்கெனநகைத்துவிழுமியநாரதன்போனான் (௩௮)

மித்திரவிந்தைமனையினிலிருந்துவிளங்குமாயவனவள்பயந்த
புத்திரருடனுமினியசீராட்டப்பொருந்தியேமகிழ்ந்திடும்வேலை
சுத்தமாதவத்தோன்வருதலுமெழுந்துதொழுதுநீயெய்தவென்மரபோ
ரெத்தவஞ்செய்தாரெனநகைத்தாசியியம்பியாண்டெழின்முனிபோனான் (௩௯)

நாக்கினசித்தின்மனைதனிலவளோடிருந்துயர்நவ்விளையப்பழித்த
நோக்கியர்கவரியசைத்திடச்சுதர்க்குநூலினைவருவிக்குமெல்லை
வாக்கினிலரியைநவின்முனிவரனுமிறைஞ்சிநீவருசயானென்ன
பாக்கியஞ்செய்தேனெனநகைத்தாசிபகர்ந்துநாரதமுனிபோனான் (௪௰)

பத்திரையுடனேராதனத்திருந்துபரமன்றன்சுதர்களைவில்வா
ளத்திரத்தொழிலைப்பயிற்றிடும்வேலையருந்தவனாரதனெய்தப்
புத்திரருடனுமுவந்துவந்திறைஞ்சிப்புநிதவென்புண்ணியமன்றோ
யித்தலத்திவணீனெய்தியதெனவேநகைத்தெழின்முனிவனேகினனால் (௪௧)

மருவமர்குழலியிலக்கணைமனையின்மற்றவளுடனினிதிருந்தே
யரியுயர்புராணமினிதுடன்கேட்குமளவினாரதமுனியடைய
விரைவினினெழுந்துவணங்கியைம்புலனென்மெலிந்திடாவகையருளெனலு
மிருவினையகற்றுமுனிநகைத்தாசியியம்பியேகினன்மகிழ்வுடனே (௪௨)

சுரர்முனியிறையோர்மனைதனிலங்குந்தூயநீராடக்கண்டேகி
யரியொருமனையிற்சுதர்களுக்கழகாஞ்சவுளஞ்செய்யன்பினைக்கண்டான்
கரிபரிநடத்திமனைவியோடெழில்சேர்காவினிற்களித்திடக்கண்டான்
பெரியவருடனேயிருந்தொருமனையிற்பேசியேயின்புறக்கண்டான் (௪௩)

கந்தரன்மலரிற்கடவுளெண்முனிவன்கடல்வண்ணவரியொருமனையி
னந்தணர்க்குவந்தோதனமிடக்கண்டானதன்பினர்முகுந்தனோரகத்திற்
சந்திசெய்கிரமச்சதிரினைக்கண்டான்சங்குசக்கிரத்தனோரில்லிற்
சிந்தையிற்செபஞ்செய்திருந்திடக்கண்டேசெபமுடிந்தெதிர்வரக்கண்டான் ()

மருளொழிமுனிவன்மற்றுமோரகத்தின்மாயவன்றேவிதன்னுடனு
மிருந்திலத்திலம்பாடரவிருந்தநஞ்சிறுவரீடேறிவாழ்ந்திடவோ
தாரணியிற்றனமார்ச்சிப்பமென்றுரைத்துத்தனயரைத்தழுவிடக்கண்டான்
கரியினைவதைத்தோன்வேறொருமனையிற்கண்டுயில்கவினையுங்கண்டான் (சரு)

அருந்தவமுனிவன்முராரியோரகத்தினலாயுதமன்னவனுடனே
யிருந்தொருகருமமாவிடக்கண்டான்யாதவன்வேறொருமனையிற்
றிருந்தியகதைவாள்கேடகச்சிரமஞ்செய்திடக்கண்டொருமனையிற்
கருந்தடங்கண்வேசையருடன்விளைதங்கழறியமுராரியைக்கண்டான் (சசு)

இயல்புடைமுனிவன்வேறொருமனையினியாதவர்கிளையெலாஞ்சூழ
வுயர்தவருவப்பமுராரிதன்சுதர்க்கேயுபநயனஞ்செயக்கண்டான்
புயல்வணமெனவேபோருருமுகுந்தன்புதியதோரகந்தனின்மேவிக்
குயின்மொழியனையாளுடனிருந்தகன்றகூவறேண்டிடுங்கவின்கண்டான் (சஎ)

நேரிலாமுனிவன்வேறொருமனையினேமியோன்றேவிதன்னுடனே
யேருறவிருந்துவயிரியர்நடிப்பவிருசணுனோக்கிடக்கண்டான்
வாருறுமுலையார்மகிழுவாமனன்றன்மனைவிதன்னுடன்களிப்பெய்திச்
சீருறவேறோரகந்தனில்வயங்குஞ்சலக்கிரீடையுஞ்செயக்கண்டான் (சஅ)

நீடியதவன்மால்வேறொருமனையினிகரிறேரூர்ந்திடக்கண்டா
னுடைவர்திலகவரியொருமனையிலாருயிர்த்தேவிதன்னுடனே
யூடலுமவளுக்கினியதாழ்ச்சியினையுரைத்துமெய்தழுவிடக்கண்டா
னேடவிழலங்கன்மனைவியோடிறையோரில்லினினணிந்திடக்கண்டான் (சகூ)

அண்டரொண்முனியோர்மனையினின்முராரியாருயிர்த்தேவியோடிருந்து
தண்டுலந்திலத்தின்றைலநெய்கோதிசருக்கரைமாடனன்முறக
மெண்டவர்வியக்கவவைமுதலாகவாண்டினுக்கிட்டிடக்கண்டான்
மண்டனில்வேறோர்மனையிற்பூமரங்கள்வைத்திடுமாயனைக்கண்டான் (ருO)

நிதகன்முனியேராகந்தனிற்சிறந்தசிதரன்றேவிதன்னுடனே
கோதில்கோதானஞ்செய்திடக்கண்டான்குறைவிலாவரியொருமனையின்
வாதுசெய்தடைந்தோருரையதுகேட்டுவழக்கினையறுத்திடக்கண்டான்
மாதவன்மிருகயாத்திரைசெய்தோர்மனையினிலெய்திடக்கண்டான் (ருக)

மாதவன்பதினாறாயிரத்தொருநூற்றெட்டுமாமனைதனின்வயங்கித்
தீதிலாமடவாருடனிருந்தனேகஞ்செயலினைக்காட்டநாரதனும்
வேதியனிரவிவிழுவதன்முன்னம்விரைவினினோக்கினேனடியே
னாதலினெனைநீமயக்குமாயைகளினகப்படாதறிந்தனனென்றான் (ருஉ)

நீயயன்முதலோடுலகெலாநின்னுண்ணிருமித்திவ்வவனியிற்றோன்றி
மாயையின்மயக்குஞ்செயலினையடியேனறிந்தனன்மாதவவென்றே
தூயனுமுனிவன்றுதித்திடமகிழ்ந்துசுருதிநாயகனருள்சுரப்ப
நேயம்விஞ்சிடமாலடியினைவணங்கிநெறியுறுநாரதன்போனான் (ருங)

நாரதன்மகிழ்ந்துதுதிசெய்துநாகருலகினிலெய்தநாரணன்றன்
மாரதரனையசிறுவர்களுடனேமகிழ்ச்சியோடமர்ந்திடுநாளின்
வாரிதிபுடைசூழ்வரையினிலங்குமதனெழிலிரதியாமொப்பில்
பாரிதன்னுடனேகலவிசெய்தின்பப்பயிரினைவிளைத்தினிதிருந்தான் (ருச)

வேறு. எழில்கொண்மதன்றனக்கேயவனுயிராகியவிரதி
யழகின்மலியநிருத்தனையளித்தேயிடவன்பான்
மழையின்முகில்வணத்தானெடுவிதார்ப்பன்றிருமகனா
முழையின்விழியாடன்சுதன்மதன்மேனிகண்டுவந்தான் (ருரு)

மாரன்னதிரோடியொண்மகன்வாண்முகநோக்கிப்
பாரின்மறையோரின்புறப்பலதானமுஞ்செய்தே
யேர்விஞ்சிடவுயிர்சாதகசவுளம்மிவைமுடித்தே
நாரம்முறுகடன்மீதமர்நாதனொடுமகிழ்ந்தான் (ருசா)

கயமன்றழைத்திடவந்தருள்சரியோன்மகன்சுதனுக்
குயரும்முபநயனஞ்செய்துமறையோதினர்க்கெல்லா
மியல்பின்னுறுபலதானமுமளித்தேயெழின்மலிந்து
வயிலொண்விழிநயனத்திருவுடனேமகிழ்ந்தமர்ந்தான் (ருஎ)

அநிருத்தப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉஉச.

---

## க00-வது அங்கிசமன் டிபிகன் வதைப்படலம்.

கராவினைச்செற்றுக்கைமாக்களித்திடக்கதியையீந்து
மராமரமேழுமெய்துவாலியைவதைத்தபின்ன
ராவினிணடித்துவெண்ணெக்காடியேகுரவைகோத்த
பராபரமானசோதிபாதமேபற்றுநெஞ்சே (க)

சாலுவதேசந்தன்னைத்தனிக்குடைநிழலினோம்பும்
வேலொளிர்கரத்தன்மிக்கவிறலுடைப்பிரமதத்த
னீலகண்டனைத்தானோக்கிநெடுந்தவஞ்செய்துபெற்று
ஞாலமேநிகரரானவங்கிசன்டிபிகன்றன்னை (உ)

மித்திரசகனும்நாமவேதனோர்புரோகிதன்று
னத்தியிற்றுயில்வோன்றன்னைநோக்கியேயளவிலாண்டு
சுத்தநற்றவந்தான்செய்யத்தோன்றிமாலீயப்பெற்ற
புத்திரன்செனார்த்தனன்றன்புகழுடையொருவனுளன் (ஙா)

அங்கிநேரங்கிசன்பின்னோனுடன்தவஞ்செய்காலைத்
திங்கள்வேணியன்றனெய்தித்திவ்வியாத்திரங்களீந்து
பிங்குரிடிகப்பேர்க்கும்போதரனெனும்பெயரதாய
பொங்குவெஞ்சினப்போர்செய்யும்பூதங்களிரண்டுமீந்தான் (ச)

உருத்திரன்வரந்தானீயவுருத்திராக்கம்வெண்ணீறு
திருத்தமாயணியுமெய்யார்செனார்த்தனமறையோன்றன்னோ
டருத்தியாய்மிருகவேட்டையங்கிசன்டிபிகனெய்திப்
பெருத்தவெங்கரிகளோடேயரிகளைப்பிடித்துமீண்டார் (ரு)

மிருகவேட்டையினையாடிமீண்டவர்வெயிலால்வாடிப்
பொருமுனீரிலங்குகின்றபுட்கரசரசினெய்திப்
பரவுநீர்படிந்துதுய்யபருதிவானுச்சிக்கேக
விருகையாலொருகால்வேதத்தருக்கியமீந்தபின்னர் (சா)

சிருறுகாசிபன்றன்சத்திரயாகஞ்செய்யு
மேரினைநோக்கியேகுமங்கிசன்டிபிகனென்போர்
பாரினெண்டுருவாசன்செய்தவத்தினைப்பார்த்துநக்குக்
கோரவெஞ்சொல்லராஞரிவையிவைகூறலுற்றார் (௭)

சிகையொடுமுந்நூலில்லாய்செய்தவமேதுபாரி
னிகழ்வலாற்செதியீவராரியம்புநீகெடுவதன்றிச்
சகலலோகத்தின்வாழுந்தவரையுங்கெடுத்தாயென்று
புகறலும்புரோகிதன்சேய்பொறுக்கலாதுரைக்கலுற்றான் (௮)

எதிகளையிகழுநீசர்குலங்களோடிறுவரென்று
சதுமறைபறையுமென்றுசாற்றுவார்சான்றோரன்றோ
மதியுடைச்செனார்த்தனன்றனுரைத்திடமதியாராகி
விதிவெருவிடவேயந்தமுனிவனைவெகுண்டுவைதார் (௯)

வைதுநற்றுருவாசன்றன்மருங்குறுமுனிவர்தங்கள்
கையினிற்கமண்டலங்களுடைந்திடக்கன்மேன்மோதித்
துய்யகோவணங்களெல்லாந்துனியுறப்பறித்துப்பீறி
வெய்யவரிரதமீதின்மேவினார்நகரிதன்னின் (௧௦)

மறுவறுதுருவாசன்றான்டிபிகனங்கிசன்றனக்குக்
கறைமிடற்றரன்றானீந்தவரமெலாங்கருத்திலுள்கி
யுறியுறுகலசமெல்லாமுடைத்திழுதுண்டான்முன்ன
ரறைவனென்றெழுந்துபோனானருந்தவரெல்லாஞ்சூழ (௧௧)

எதிகளையாயிரம்பேரிருமருங்கிடையினெய்தக்
கதுமெனநடந்துகாடுவரையெலாங்கழிந்தபின்ன
ருததிசூழகழதாகவோங்குமாதுவரையென்னும்
பதியினிலெய்தினானற்பருவரற்றுருவாசன்றான் (௧௨)

துன்னியமணிகள்கோடிதுலங்குமாமண்டபத்திற்
பொன்னவிர்பீடமீதிற்புயலெனவிளங்குமாயோன்
மன்னவர்மறையோர்சூழவிருத்தலும்வாயில்காப்போ
ரின்னலில்துருவாசன்றானெய்தியதியம்பினாரால் (௧௩)

தீதகல்வாயில்காப்போருரைத்திடச்சீதரன்றான்
மாதவர்திரளையெல்லாம்வரவிடுநீரென்றோதப்
போதனெண்முனிவரெல்லாமிருமருங்குறவேபோந்த
வேதமில்துருவாசன்றன்னிணையடியிறைஞ்சினானால் (௧௪)

வாசுதேவனானெய்தியிறைஞ்சலுமறைகளாலே
யாசிகள்பகர்ந்ததூயவருந்தவர்தங்கட்கெல்லாம்
நேசமோடருக்கியங்களளித்தம்பொன்னிறையவிஞ்சு
மாசனமீதலோடுமனைவருமமர்ந்தாரன்றே (௧௫)

ஊறிறவடர்த்தகோமானெழின்முனிதன்னைநோக்கி
மாறிலெண்டவர்களோடும்வந்திடும்செயலேதென்னச்
சீறியமனத்தன்வேர்வுசெறிந்திடுமெய்யன்றீயு
ளூறியநயனனாயமாதவனுரைக்கலுற்றான் (௧௬)

வேரறிந்தவற்குவேறோரிலேயெனவெருட்டிக்காட்டும்
பேரெனவறியாதார்போற்பேசினாய்பரவையோவிப்
பாரினிற்பாரநீக்கப்பிறந்துபன்மாயஞ்செய்யு
மாரியவுந்தன்செய்கையறிவலுன்மயக்கலென்றான் (௧௭)

கொடுவினைகளைந்தமான்முன்முனியிவைகூறலோடும்
படமுடையரவின்மீதுநடித்தவனகைக்கப்பாரி
னுடைபடுகமண்டலத்தினோடுகோவணங்களெல்லாம்
படியின்மேற்பரமன்முன்னர்வைத்தெலாம்பகர்ந்தாரன்றே (கஅ)

அருமறையவனைநோக்கியங்கிசன்டிபிகன்றன்னை
யெரிமுகக்கணையினாலேயிமைப்பின்முன்வதைத்தேயுங்கள்
பருவரலொழிப்பனென்னுப்பரனிவைமொழியக்கேட்டாண்
டருவினைதுடைத்தோராசியியம்பியேபாடினால் (ககூ)

ஏருறுவெண்பட்டாடைகிழித்துகௌபீனமெல்லாஞ்
சீருறவளித்துச்செம்பொன்கமண்டலஞ்சிறப்பவீந்து
நீரிவணிருமினென்றுநிகழ்த்திநெய்பாலோடன்ன
மாரியனவரையெல்லாமருத்துவித்தமருநாளின் (உ0)

அருமறையவரையெல்லாம்வைதவர்கௌபீனங்கள்
காமுறப்பறித்துப்பீதிக்கமண்டலங்கன்மேன்மோதி
விரைவினிளகரினெய்திவிறலுடையங்கிசன்றன்
றெரிவுறமறையையோதுஞ்செனார்த்தனனோடுஞ்சொல்வான் (உக)

மன்னவர்தம்முனெல்லாந்திறைகொண்டுவாராதானைச்
சின்னபின்னங்களாகச்செருக்களத்தவியநூறி
யென்னுடைத்தந்தைதன்னையிராசசூயஞ்செய்விக்க
வுன்னினனென்றலோடுஞ்செனார்த்தனனுரைக்கலுற்றான் (உஉ)

வீடுமன்விதுரன்கன்னன்விறலுடைச்சேதிராச
னேடவிழ்தொடைசேர்தந்தவக்கிரன்மகதனென்னோர்
வீடவேசமர்செய்வாசுதேவன்சாத்தகிபால்வண்ண
னேடைமாலியானைபூருமுதிட்டிரன்றன்னோடைவர் (உ௩)

மந்திரன்சோழன்றென்னன்வலிமிகுகீசகன்ற
னித்தனைபேரும்வீரவதிரதக்குழாங்களாகி
யித்தலத்திருப்பநீதானிராசசூயத்தையெங்கள்
வித்தகவுன்றந்தைக்குச்செயுந்திறம்விளம்புகென்றான் (உ௪)

என்றவனுரைப்பக்கண்களெரியுறச்சீற்றமெய்திக்
கொன்றையையணியுமீசன்கொடுத்தவத்திரத்தொன்றானா
வென்றெனையளித்ததந்தைக்கிராசசூயத்தின்வேள்வி
குன்றுதலிலாமற்செய்வித்திடுவன்யானென்றுகூறும் (உ௫)

நீயிதற்கெதிர்மாற்றங்கணிகழ்த்திறுயாகினுந்தன்
வாயினைக்கிழிப்பனீபோய்வாசுதேவன்பாலெய்தி
மீயுயர்வரைகள்போலவிழுமியலவணங்கொண்டே
யேயெனுமுன்னம்வாவென்றியம்புகென்றேவினனால் (உ௬)

சீரிலான்மொழிந்தமாற்றஞ்செவிசுடுநாராசம்போ
னேரிலாமறையோனின்றுநடுங்கியேநெறியிலாதா
னுரியன்பகழியாலேயிறப்பனென்றகத்துட்கொண்டே
யேருறுசிவிகையின்மேலேகினன்மறையோர்சூழ (உஎ)

துன்மதியவர்களோடுபேசுதலிருத்தலொட்ட
னன்மதியவர்கட்காகாதானந்தநவைகடூர
மன்மதன்றந்தையானவெந்தையின்வடிவுராணைப்
பொன்மதிற்றுவரைதன்னிற்போயவதேபுந்தியென்றான் (உஅ)

தியவன்விடுத்ததூதனென்றெனையிகழ்ச்சிசெய்யான்
மாயவனுயிர்கடோறும்வைகியசெயலினாலே
தூபதன்னடியார்க்கென்றுமடியர்கடொண்டனென்றுஞ்
சேயமாயவுணன்றன்னைச்செற்றவன்காப்பானென்றான் (௨௯)

இவையெலாமறைந்துமாயோன்செயனினைந்திருகணீர்க
ளவனியினுகவேயன்பின்செனார்த்தனனளக்கர்சூழ்ந்த
துவரையினெய்திவீதிதுலங்குமண்டபங்களோங்கு
முவமையில்சிகரநோக்கியுவந்தரிகோயில்புக்கான் (௩0)

வித்துருமங்கணீலம்விழுமியமணிகளெல்லாம்
பத்திசெய்தூண்களெங்கும்பரந்தமண்டபத்தின்மீதிற்
றத்தைபோன்மொழியார்வீசுஞ்சாமரைதயங்கவூங்கா
ருத்தவனுடனேமன்னருறைந்திடவிருந்தான்மாயன் (௩௧)

தூயனுந்துருவாசனோடுருந்தவர்தொலைவிலாதோர்
நேயமோடெய்தியெங்குகிறைந்தருகிருக்கும்வேலை
வாயிலோரங்கிசன்றன்மறையவன்வந்தானென்ன
வோயுமாகரியைக்காத்தானழைத்தியென்றுரைத்தான்மன்னோ (௩௨)

நந்தியைக்களைந்தவேந்தன்சாற்றலும்வாயிலாள
ரந்தணவருதியென்றேயுரைத்திடவவனுமெய்திச்
சுந்தரவடிவினானையிருகணானோக்கத்தூய
சிந்துவினமிர்தையுண்டோன்செயலெனக்களித்தானன்றே (௩௩)

என்புடனுருகியாசியியம்பியேயெதிர்வந்துற்ற
வன்பனையிருத்தியென்னவச்சுதனறையவாங்கே
யன்பகன்மறையோன்றானுமிருந்தபின்மாயனோக்கி
யென்புகுந்ததுநீயிங்ஙனியம்புகென்றிசைத்தானன்றே (௩௪)

முரனுடறுணித்தகோமான்மொழிந்திடமறையோன்சொல்வான்
றரணியின்விஞ்சுகின்றசாலுவதேயமாள்வோன்
பிரமதத்தன்றன்சேயர்பிஞருகன்வரங்களீய
வரிகளும்வெருவும்வெய்யவங்கிசனவன்பின்னோனும் (௩௫)

வெந்திறலதனுன்மிக்கவிராசசூயத்தின்வேள்வி
தந்தையைச்செய்விப்பாராய்ச்சதுமுகன்றன்னைத்தூய
யுந்தியிற்படைத்தசோதியுப்புயர்வரைபோலுன்னைத்
தந்துமுன்வைத்தியென்றேசாற்றிடச்சொன்னாரென்றான் (௩௬)

வெங்கணங்கிசன்றான்மிக்கவிராசசூயத்தின்வேள்வி
சங்கரன்வரத்தினாலேதந்தையைச்செய்விப்பானாய்ச்
சிங்கலிலரியையுப்புத்திரையிடச்சொல்கைகன்றென்
றங்கையோடங்கைதாக்கியரசர்கணகைத்தாரன்றே (௩௭)

யாதவனகைவந்தெய்தவிராசசூயத்தின்வேள்வி
தாதையைச்செய்விப்பானாய்த்தருக்குமங்கிசமன்றன்னை
போதனேர்முனிவர்வைகும்புட்கரசரசினானைக்
காதுதற்கெய்துவாயென்றெய்தியேகழறுகென்றான் (௩௮)

தூயசாத்தகியைநோக்கித்துலங்கியமறையோன்றன்னோ
டேபெனுமுன்னமெய்தியியல்பிலங்கிசமன்றன்னைத்
தீயவாசெருக்களத்திற்செருச்செய்யவருதியென்றே
மீயுயர்துவசத்தேரின்மீசாகுதிகடிதினென்றான் (௩௯)

மாதவன்மொழியக்கேட்டுச்சாத்தகிவையமீதின்
வேதியன்றன்ருேடெய்திவிழுப்பமிலங்கிசன்முன்
போதலுமுனிந்துநோக்கிப்பொதுவர்தங்குலத்தனைய
யாதவனெங்கேயீந்தல்வணமெங்கேசொல்லென்முன் (௪0)

திறையிடுலவணத்தோடுந்தேவகிசுதன்வாராமன்
மறையவமீடியோவென்றுரைத்துவாய்மடித்தேயென்றன்
விறலெலாமறிந்தென்முன்னர்மேவியவிவனூர்வல்லே
யறைதியென்றுரைத்தலோடுமச்சுதனனுசன்சொல்வான் (௪௧)

அப்பினிலமருமையனனுசன்யானங்கிசாகே
ளுப்பிணைவிருப்புற்றுயேலுயரருந்தவத்தோர்வேதஞ்
செப்பியேவேள்விசெய்யும்புட்கரசரசிற்சேர்ந்து
நப்பின்னைகேள்வன்றன்னுன்மடிதியென்றுரைத்துநக்கான் (௪௨)

மாதவனனுசன்கூறவடவைபோல்விழித்துநோக்கித்
தீதுறுமனத்தனுன்னைவதைப்பனீசெப்பவந்த
தூதனுயுய்ந்தாயானேதூயபுட்கரத்தினெய்தி
யாதவர்குலத்தையெல்லாமிமைப்பின்முன்கொல்வேனென்முன் (௪௩)

தீயவனுரைப்பக்கேட்டுச்சினியருள்செம்மனேக்கி
நீயுமுன்கிளைஞரோடுநெடியமால்வாளியாலே
மாயவேபுட்கரத்தின்வருதியென்றுரைத்துமீண்டு
தூயவச்சுதன்றன்முன்னரிவையெலாஞ்சொன்னனன்றே (௪௪)

தீதுறுமங்கிசன்முன்செப்பியவுரையைக்கேட்டு
மாதவத்துருவாசன்றன்வதனத்தைநோக்கிமாயன்
வேதனையுமைச்செய்தோனைவீட்டுவன்புட்கரத்தின்
போதுமினென்றலோடுமகிழ்ந்தவர்போயினாரால் (௪௫)

முனிவர்கள்போயபின்னர்முராரிதன்முன்னோன்றந்தை
சினிசுதன்கிருதவன்மாகிருறுக்குவசன்சாங்கன்
றுனியகனிகடன்சஞ்சன்முதையாந்தூயமன்ன
னனிகமும்புடைசூழ்ந்தேகப்புட்கரத்தடைந்தாரன்றே (௪௬)

துந்துமிமுரசஞ்சங்கந்தூயகாகளஞ்சின்னங்கள்
சிந்துவின்னரவம்போலத்திசைதொறுமிரட்டல்செய்ய
வந்தரத்தமரராடியாடசமலர்கடூவ
விந்திரைகொழுநனெய்திப்புட்கரத்திருந்தவேலை (௪௭)

அடல்பொரவருதியென்றேசாத்தகியறைந்துபோகக்
கொடியனங்கிசமனெஞ்சிற்கோபவெங்கொழுந்திமூள
விடையனுமவன்றனேடுமியாதவர்குலத்தையெல்லாங்
கடிதினிற்கோறல்செய்யக்கடும்படையெழுகவென்முன் (௪௮)

தீயவனுரைக்கப்பேரிமுரசொலிதிசைகள்சேரப்
பாயயமூன்றுகோடிபருப்பதநிகராய்த்தோன்றக்
காயுமேழுயுதமானகரிபத்தக்குறோணிகாலாள்
மீயுயர்கனகத்தேர்நூறுயிரமிடைந்தமாதோ (௪௯)

விசக்கிராசுரனுந்தூயவிடம்பராக்சதனும்வெய்ய
நிசிச்சுளிற்சரிப்போரெண்ணிலிருதர்தானவர்கள்சூழத்
திசைக்கணினுறுவோரோடுந்தேவர்களிரியவாசைக்
கசக்குலம்போலவீரர்கல்த்திடவெழுந்தாரன்றே (௫0)

ஏறுறுமிறைவனீயவங்கிசன்களிக்கவெய்து
மாறில்பிங்கிருடிகும்போதரனிவர்வரையாமெய்யி
னீறணிந்துருத்திராக்கமணியிணைநிறையப்பூண்டு
சீறியமனத்தராகிச்சிலைகரத்துறவேவந்தார் (ருக)

முரசொலிகரங்கப்பேரிமுழங்கிடவிரதமீதி
னரசர்கள்குழாங்கள்சூழவங்கிசனனுசரோடுந்
திரைசெறியளக்கர்போலத்திரண்டெழுசேனையார்ப்ப
வரிசைசேர்மகுடமின்னவானவர்வெருவவந்தான் (ருஉ)

கட்கம்வேன்முசுண்டிபாசங்கப்பணமுசலமீட்டி
முட்கணைபலவுமேந்திமுடங்குளைபோலத்தேவ
ருட்குலைவெய்தவீரருவரிபோல்வாய்விட்டார்ப்பப்
புட்கரசரசின்வந்தானங்கிசன்பொறையிலாதான் (ருங)

மாதவர்வெருவத்திக்குமறைந்திடச்சேனையார்ப்ப
வாதவன்றேற்றம்போலவங்கிசனெய்தலோடு
மியாதவர்சேனைவெள்ளமெதிர்ந்திரதங்கள்பாய்மாப்
போதகமிடையக்கண்கள்பொறியுகத்தாக்கினாரால் (ருச)

பரியினமயங்களோடுபாய்ந்திடப்பருப்பதம்போற்
கரியினமிபங்களோடுகாதினகனகத்தேர்மே
லரியினம்போலவீரரடர்ந்துவெஞ்சிலைகள்கோலிப்
பரவைவான்றிசைகளெல்லாமறைந்திடப்பகழியெய்தார் (ருரு)

வேலினாற்றேலின்கைகால்விழுந்திடத்துளைசெய்தார்ப்பக்
காலைநேர்பரியையெல்லாங்கதையினால்வதைப்பர்வில்லின்
கோலினாலிரதமோடுகொடிவிழவலவன்மாள
வாலமாவிடமேபோலவடருவரரசரம்மா (ருசு)

வரிசிலைவளையவாங்கிவான்றிசைமறையவாளி
சொரியவேயிரதங்கைமாத்துரகம்வீழ்ந்துதிர்வெள்ளந்
திரையுறுநதிபோலோடச்சிரமுரந்தோள்கள்கால்க
ளரைதுணிந்தரசர்வீழவாடினகவந்தமம்மா (ருஎ)

போதகநிறைகள்பாய்மாப்புவியிடைமடியத்தண்டான்
மோதியேயிரதவீரர்முடித்தலைபுரளத்திங்கட்
பாதிபோலொளிருந்துய்யபகழிகடேவியார்த்தே
யாதவர்முனிந்துதாக்கவிரிந்தவங்கிசமன்சேனை (ருஅ)

அங்கிசேரங்கிசேனையாசைதோறிரியக்கண்டு
வெங்கணன்கடுவையொப்பான்விசக்கிராசுரனும்வீரன்
சங்கரன்றேற்றம்போலச்சாதுரங்கமுமுன்சூழ
மங்குல்கள்பொழிவபோலவாளிகடேவியார்த்தான் (ருகூ)

விசக்கிராசுரன்கைவில்லால்விசிகமாமழைபெய்தார்ப்பக்
கசக்குலமிவுளிவீரர்கணக்கிலாவரசர்மாளத்
தசைக்குவைமலைபோலோங்கத்தாவியேயவைகழுளை
பொசித்திடக்கவந்தமாடக்குருதிநீர்புரண்டபார்மேல் (சுo)

தீயவன்முனிவினோடுஞ்சிலையினால்விடுத்தவாளி
பாயவெங்கரிமாமாளநிருபர்கள்படியினோட
மாயவன்றனுவைநாரிதன்னினால்வளையவாங்கி
யேயெனுமுன்னர்வாளியெண்டிசைமறையவெய்தான் (சுக)

மால்விடுவிசிகந்தன்னால்வாளெயிற்றசுரரெல்லாங்
காலுரங்கரந்தோள்சென்னிகடிதடந்துணிந்துசாயத்
தோலினம்வரைபோல்வீழ்த்துரகந்தாடொடையுமற்று
ஞாலமேற்புரளவெண்ணில்கவந்தங்கணடித்தவன்றே (௬௨)

மானவனிமைப்பின்முன்னம்வரிசிலைவளையவாங்கித்
தானவர்குலங்கண்மாளச்சரம்பலதூவக்கண்டே
யீனமின்மணித்தேர்மீதினிலங்கியவிசக்கிரன்றா
றுணையன்றுரித்தானஞ்சவழற்கணைதூவியார்த்தான் (௬௩)

மறனுறுமசுரனெய்தவடிக்கணைமாரிதன்னை
யிறையவன்விசிகத்தாலேயறுத்தெழுபத்துமூன்று
பிறையெனவயங்கும்வாளிபெய்திடவவுணன்மார்பி
னுறவிழிகுருதிபாரினோடினநதிபோலெங்கும் (௬௪)

உரமிசையுதிரவெள்ளமோடலும்விசக்கிரன்றா
னெரியுகுநயனனாகியிந்திரன்படையைவாங்கி
யரிதிருமார்பினாழவழுத்தலுமருணநீத்தம்
பெருகலுமவுணர்கோமான்பிஞ்ஞகனஞ்சவார்த்தான் (௬௫)

நிலனுறவுரத்தின்வீழுங்குருதிநீர்நிறையமாயோன்
சிலையினைக்குனியவாங்கிச்சிலீமுகம்விடுத்துவெய்யோன்
வலவனோடிரதம்பாய்மாமடியவிற்றுண்டமாக்கி
யுலகொடெண்டிசையுமஞ்சவூதினானுயர்வெண்சங்கம் (௬௬)

வரிநெடுஞ்சிலையுமற்றுவலவனோடிரதம்வீழத்
தரையினினிழிந்துவெய்யோன்றமனியப்பொருப்பைநேராங்
கிரியெரிந்தார்த்தலோடுங்கேசவனதனைப்பற்றி
யுரமிசையெரிதலோடும்விசக்கிரனுதிரங்கான்றான் (௬௭)

காலனைநிகர்க்கும்வெய்யவிசக்கிரனுதிரங்கான்று
ஞாலமேலயர்ந்துவீழ்ந்தானெழுந்துவானடுங்கவங்கோர்
சாலம்வேருடனேவாங்கித்தடக்கையாற்சுழற்றிவிட்டான்
மாலெழுகணையால்நூறுதுணிபடவறுத்தான்மன்னோ (௬௮)

காயும்வெங்கனல்போனெஞ்சங்கதமுறக்கதைகொண்டார்த்து
மாயவன்மீதினோடிவிசக்கிரன்வருதலோடுந்
தூயவன்வரிவிற்கோலியழற்படைதொடுத்துவிட்டான்
றீயவன்சிரத்தைத்தள்ளிச்சென்றதுதேவரார்ப்ப (௬௯)

அந்தகன்முதலோரஞ்சவடர்ந்திடுவிசக்கிரன்றா
னிந்திரைகொழுநனம்பாலிறந்திடவிமையோரெல்லாந்
துந்துமிமுழங்கப்பொற்பூச்சொரிந்தனர்சுரர்கள்கோனுங்
கந்தமார்கமலன்றானுங்களிப்புடன்றுதித்தாரன்றே (௭௰)

வேறு.

காலனைநிகர்த்திடுவிசக்கிரன்மடிந்தசெயல்கண்டுகனலா
வாலமெனவேடிபிகன்முந்தியிரதத்தின்மிசையாடகவரை
போலவரிவெஞ்சிலைவளைத்துநெடுவாளிகள்பொழிந்துவரவே
மாலனுசனானவுயர்சாத்தகிதடுத்தனன்வடிக்கணைகளால் (௭௧)

மாயனனுசன்கணைவழங்குதலுமேடிபிகமன்வரிவிலா
லேயெனுமுனாசுகமையாயிரம்விடுத்திடவெழிற்சினியருள்
சேயன்மெய்யழுந்துறவலர்ந்ததொருகிஞ்சுகமலர்ச்செயல்பெறக்
காயநிறைசெங்குருதியோடியதுகாசினியின்மீதருவிபோல் (௭௨)

வெருசின மிகுத்தடிபிகன் விடுவடிக்கணைகள்மெய்பினுறவே
சஞ்சலனவதைத்தமனனுக்கிளையகாவலன்மனங்கதமுற
விஞ்செழிலிபெய்வதெனவேவிசிகமெண்ணிலவிடுத்தெதிரெயும்
வஞ்சகநெடுஞ்சிலையறுத்துலகமஞ்சவளையூதினனரோ (எகூ)

மற்றுமொருவெஞ்சிலைவளைத்துடிபிகன்கணைவழங்குதலுமே
வெற்றியுயருஞ்சினிசுதன்முனிவிஞேடுவிசிகங்களவன்வில்
விற்றிடவிடுத்திடவிமைப்பின்முனர்வெய்யவனெடுத்தொருகையாற்
பற்றியெய்தனுக்களறுநூறுமுறியப்பகழியேவினனரோ (எச)

முற்குணமலிநதிடுமுராரியனுசன்முனிவிஞேடுடிபிகன்
விற்களறுநூறுதணிசெய்தவிறல்கண்டுவிபுதத்திரடுதிச்
சொற்கள்கொடுபூமழைசொரிந்தனர்களங்கிசமனுக்கிளையனும்
பிற்குணனிலத்தினுயர்வாள்கொடுபிறங்கலெனவந்தனனரோ (எரு)

வீறிவருகாலெனவடர்ந்துவருவெய்யவனெடுத்தசுடர்வா
ளூறுதுணியாய்விழுநொடிக்குவமுன்வாளிகள்விடுத்தரிபிஞே
ஞூறுகுருதிப்புனல்விழக்கணையுரத்திடையழுத்தட்டிபிகன்
பாறுவதுகண்டுசுரர்பன்மலர்கடுவினர்கள்பார்நிறையவே (எசா)

அங்கிநிகரங்கிசன்பிஞேனுடைதஞேக்கியவரக்கர்பெருமான்
வெங்கனல்பிறங்குநயனன்விறலிடும்பனிருதக்குழுவுடன்
சங்கிஞேடுதுந்துமிமுழங்கவுயர்தேரின்மிசைசாரும்வரைபோன்
மங்குலிடியஞ்சவகல்வாயொலியுறக்கடிதுவந்தனனரோ (எஎ)

**வேறு.** விக்கிரமத்தின்மிக்கவிடும்பன்வரலோடு
முக்கிரசேனனுடன்வசுதேவனுயர்தேரிற்
புக்கெதிர்வந்தேபொருதடர்நிருதத்திரண்மாளத்
திக்கயமஞ்சச்சிலையொலியுறவெங்கணைபெய்தார் (எஅ)

விருத்தரின்முந்துமுக்கிரசேனன்மிகுஞான்றுந்
திருத்தமுறுந்தேவகிகணவன்முன்சமர்செய்யு
மருத்தியுறப்பேராகுளிநிறையவழல்வாளி
பெருத்தவிபத்தோடிவுளிகண்மடியப்பெய்தார்த்தார் (எகூ)

நீடியசிலையாலிருவரும்வாளிநிலன்வான
மூடியமுகில்போற்பெய்திடமூளுஞ்சினநாகங்
கோடகம்வீரர்கோடியின்மேலுமடியக்கண்
டோடினர்நிருதருவகைகொளரசர்திரளாட (அ0)

நிருதர்கள்பாறக்கண்டவிடும்பனிலமீதின்
வருதனிமேருபொருவநடக்தேவலன்விஞ்சப்
பொருதிறலரசர்புகரிபமினமாவிரதங்க
டைரதனின்மடியக்கைகொடறைந்தான்றழன்மண்ட (அக)

ரியையெடுத்தேபரியைவதைத்தான்கனகத்தே
ருநிலமிசையிற்சிதறவடித்தானிருகையா
ரர்களைவாரித்தின்றுசெருக்கிநதிபோலப்
பெருகியகுருதிபருகினனகலும்பிலவாயால் (அஉ)

ம்பரினிறையுமிவுளிகணரர்நீளிபமெல்லா
ம்பர்கள்வெருவத்தின்றுகுடித்தானுதிரங்க
ம்பரமெனவேயடரரிகளைவாயிடுவீரக்
ம்பகனன்போலெய்துமிடும்பக்கொடியோனே (அங)

மருவமர்தொடைசூடுக்கிரசேனன்வசுதேவ
னிருவர்கள்சிலையும்பற்றியிறுத்தேயென்வாயி
னரர்புகுவீரென்பசிகெடவென்றேநலனில்லா
னுரைசெயவரிகாணிபமெனவஞ்சியுலைவுற்றார் (அச)

சிலையிறலோடுந்தேரினிழிந்தேபெயர்வாரை
நலனிலிடும்பன்பற்றவுமுன்னூரணன்முன்றே
னிலகியசையாலிடியெனவவன்மார்புறவெற்ற
நிலமிசைவீழ்ந்தேநிருபர்களார்ப்பவயர்வுற்றான் (அரு)

வாயுறுகுருதிமண்மிசைநிறையவயர்வுற்றே
யேயெனுமுன்னஞ்சேறியெதிர்ந்தோனிருகாலைத்
தூயவிராமன்பற்றியெறிந்தான்சுரர்போற்றத்
தீயவன்மாண்டான்காவதநெறிபோய்ச்சிதைவுற்றே (அசு)

அடும்பழவினையேயொத்துலகத்தையடர்கின்ற
விடும்பனிறந்தநற்செயல்கண்டேயிமையோர்கள்
கடம்பொழியயிராவதவிறையுடனுங்கனகப்பூ
விடம்பொழியரவினுருவொழியரசன்மேல்விட்டார் (அஎ)

வேறு. வெங்கணனிடும்பன்றீயவிசக்கிரன்மடியக்கண்டு
சங்கரன்முனிவையொத்ததழற்பொறிநயனன்றேரி
னங்கிநேரங்கிசன்றானானைகளிரதம்வீர
ரெங்கணுநிறையவந்தானிணையிலாவீரரார்ப்ப (அஅ)

ஆலமாவிடமேபோலவங்கிசனடர்தல்கண்டு
தாலகேதனனும்வீரன்றமனியவிரதத்தேறிக்
கோலமார்சிலையின்வாளிகொண்டல்போற்பொழியத்தேர்க
டோல்கண்மாமடியவீரர்துணிந்தனர்குருதியோட (அகூ)

தன்னுடையனிகமாண்டுதளைபடவெருவினோர்கள்
வென்னிடக்கண்டுபொங்கிவிடத்தைநேரங்கிசன்று
னன்னமார்வண்ணன்மார்பினழுந்துறநூறுவாளி
வன்னிபோன்மடுப்பவெய்யமதிநிறனுதிரங்கான்றான் (கூ0)

சக்கரந்தரித்ததாமோதரன்முனோன்குருதிவாயாற்
கக்கினன்கனன்றுபொங்கிக்கடுஞ்சிலைகையின்வாங்கி
யுக்கிரமிகுத்தவேழாயிரங்கணையுலகமஞ்சக்
கொக்கரித்தெதிர்ந்தவெய்யகொடியவனுரத்தினெய்தான் (கூக)

மதிவணன்சரங்கள்பாயமதியிலங்கிசமன்மார்பி
னுதிரநீர்பெருகலோடுமுளங்கனன்றழனேர்வாளி
கதுமெனவிடுத்திராமன்கடுஞ்சிலைதுணித்துத்திண்டேர்
சிதைவுறவலவன்மாளச்சிலீமுகம்விடுத்தங்கார்த்தான் (கூஉ)

வலத்தினங்கிசன்றானேவும்வாளியால்வலவன்மாண்டு
நிலத்துறவிரதம்வீழநெடுஞ்சிலைதுணியக்கண்டே
சலத்தினிராமநம்பிசக்கன்றேர்முறிந்துசிந்த
வலத்தினினடித்தங்கார்த்தானசனியார்ப்பரவமொத்தே (கூங)

தேரிறவலவன்மாளச்சினத்துடனங்கிசன்றான்
பாரினிற்குதித்துநீண்டபருமணிக்கதையைப்பற்றி
வாரியிறெளிபோல்வாய்விட்டடித்தலுமதியார்வண்ணன்
வீரியனலத்தினாலேவிலக்கினன்விண்ணோர்வாழ்த்த (கூச)

சாரிகைமாறியெங்குந்தமணியவரைகளேலப்
பாரினிற்றிரிந்துவிஞ்சும்பரவையினொலிபோலார்த்துப்
போரினெண்ணலத்திறேடுமணிக்கதைபுடைத்துத்தாக்கி
வீரியரமர்செய்வேலைவெய்யவன்கடலில்வீழ்ந்தான் (கரு)

இரவிபோய்மறைதலோடுமிருவருமுலகமஞ்சப்
பொருசமரொழியத்தூயபுட்கரமிசையினெய்தி
யரிபெருஞ்சேனைசூழவமர்ந்தனனங்கிசன்றன்
சரியிலாத்தேர்மேற்கோவர்த்தனகிரிதன்னைச்சார்ந்தான் (ககா)

குடதிசைமறைந்துவெய்யோன்குணதிசையுதயமாகக்
கடகளிறடர்த்தகோமான்கரிபரியிரதஞ்சூழ
வடகிரிபொருவுங்கோவர்த்தனவுயர்வரையைச்சார
வடர்மணித்தேரினேறியங்கிசனார்த்துவந்தான் (கஎ)

அங்கிநேரங்கிசன்றனார்த்துவந்தடர்தலோடுஞ்
சங்கரன்பணியினலேசார்ந்தபிங்கிருடியோடு
வெங்கண்பொங்கனலங்காலவிறல்செய்கும்போதரன்றன்
மங்குல்கள்பொருவவார்த்துவங்கியங்கறங்கவந்தான் (கஅ)

வேறு. கும்போதரப்பெயரோனுடன்கொடிதாயபிங்கிருடி
வம்பார்தொடையணியுந்திருமாயோன்படைவீரர்
கம்பாதமுரந்தோளரைகரம்வேறுறவழலா
ரம்பாற்றுணிசெய்தேகயமயமெண்ணிலவதைத்தார் (ககா)

கதையாற்பலகனம்போலெழுங்கரிவீழ்ந்திடப்புடைத்தாண்
டுதையாற்கொடியுயர்தேரினமொடிந்தேயுருண்டிடவுங்
குதியாற்பரியினந்தோறசைகுழம்பாயிடமிதித்தே
மதியாற்பொலிசடையோன்விடவருபூதங்களார்த்த (௪00)

கரிதேர்படிமடியக்கடுவிடமாமெனவடரு
மிருபூதமும்வெருவக்கடிதிருசாலையும்பற்றி
யரிநூறுசுற்றுறக்கையினிற்சுழற்றுவரன்பதியாம்
வரைமேல்விழவெறிந்தார்த்தனன்வானோர்மலர்சொரிய (௪0க)

புயலார்நிறைத்தரிவந்தெதிர்பூதங்களைக்கரத்தாற்
சயிலாயவெற்புறவீசிடக்கண்டான்கதமுறவே
யயமார்கயனெடுந்தேர்மிசையமரங்கிசன்சிலையாற்
கயமாவினமுயர்வீரர்கண்மடியக்கணைசொரிந்தான் (௪0உ)

உயருக்கிரசேனன்சினிசுதனெண்வசுதேவ
னியல்புற்றிடுமலத்தோனுடனெதிர்ந்தார்திரளெல்லா
மயமுற்றிலகுந்தேர்சிலையழியச்சமர்பயிலுஞ்
செயலற்றிரிந்தோடச்சணைதிசையெங்கணுநிறைத்தான் (௪0ரு)

சியம்வரவிரிந்தோடியதிரட்போதகமெனவே
மாயனொருவனும்நின்றிடமதிநேர்வணன்முதலோ
ரேயென்னுமுன்னிடைந்தோடிடவிமையோர்களும்வெருவத்
தீயன்வளைமுழக்கிப்பெருஞ்சிலைநாணினையெறிந்தான் (௪0ச)

அரிமுற்படவிபமாமெனவடரங்கிசனுறைவா
னிருபர்க்கிறையானென்பதுமறிந்தேயிடையானீ
வெருவித்திரையிடுமேப்பெனக்களித்தேயடிவீழாய்
சரிநிற்குதியென்றேகொடுந்தழல்வாளிகள்பொழிந்தான் (௪0ரு)

சினிதன்சுதன்றேரூர்ந்திடச்சிலைவான்பிறைகடுப்ப
வனகன்ஞெருநொடியின்முனரமலம்புகள்சொரிய
வினையொன்றியவிறலங்கிசன்விடையோனெனமுனியாக்
குனிவில்லினிற்சரமாரிகள்கோத்தேயவைகுறைத்தான் (௧0௬)

அனலன்படைதொடுத்தச்சுதனூர்த்தானதுகண்டே
புனலின்படைதொடுத்தேயவைதடுத்தான்பொறையிலமன்
கனமொத்தமெய்யினனுசுகன்படைவிட்டிடக்கனலாஞ்
சினமெத்தியமனனிந்திரன்கணைகொண்டவைசிதைத்தான் (௧0௭)

ஈசன்படைதொடுத்தானிறையதுகண்டெரிநயன
னீசனரன்படைகொண்டவையறுத்தார்த்தலுநெடியோன்
வாசஞ்செறிமலரோன்படைவிடுத்தார்த்திடவானோர்
கூசும்படியயன்வெம்படைகோத்தங்கிசன்குறைத்தான் (௧0௮)

அரிதன்படைதனைவாங்கலுமயனூர்திசையனைத்து
மெரியுற்றிடுஞ்செயல்கண்டிரதத்தங்கிசனிழியா
வெருவிப்பெருகுங்காளியமடுவின்னிடைவியலார்
வரையொத்துறக்குதித்தான்புவிபரிமாசுணமஞ்ச (௧0௯)

வேறு. அரிபடைவாங்கலுநடுங்கியங்கிசன்
வெருவியேயமுனையின்வீழவேநகைத்
தொருநொடியிடுமுனமுகைந்துமற்றவன்
சிரமிசைப்பாய்ந்தனன்சீதரப்பிரான் (௧௧0)

சாளியன்மடுவிற்குப்புற்றுக்காலினன்
மீளியைநிசர்த்திடும்வீரவங்கிசன்
மாளவேசிரம்விழவுழக்கிமாயவன்
கேளிர்கள்களித்திடக்கிளர்ந்துதோன்றினன் (௧௧௧)

நதியினிலங்கிசன்மடியநாரம்விட்
டுதயமாகிரிதனினுச்சிநீடிய
கதிரவனெனமணிமகுடங்காணவே
யெதுகுலமன்னவனிரதமேறினன் (௧௧௨)

நீரினுளங்கிசன்மடியநேமியோன்
றேரின்மேற்சிறந்திடத்தேவர்துந்துமி
வாரிபோன்முழங்கமாமலர்கடூவினர்
பாரின்மேலருந்தவர்பாடியாடவே (௧௧௩)

வெங்கணனுகியடிபிசவீரியன்
சங்கிடக்கையினைச்சார்ந்தென்முன்னவ
னெங்குளானிரைவினியம்புவாயென
மங்குல்போலொளிருமெய்மாயன்கூறுவான் (௧௧௪)

தமயனைத்தேடியடிபிகசார்ந்துநீ
யமுனையைக்கேளெனவிமலன்கூறலும்
நமனைநேரங்கிசன்றன்னைநாடியே
கமையிலான்காளியமடுவின்மூழ்கினன் (௧௧௫)

கோடடர்யமுனையிற்குதித்துத்தம்முனைத்
தேடிநீரமுவத்துட்டிரிந்துங்காண்கிலான்
வீடினனுமெனமேவிக்கூலமே
லாடகன்சாலன்முன்னமுதரற்றினன் (௧௧௬)

ஆவலின்வெண்ணெயுண்டடிபட்டேயுழல்
கோவலவென்முனோன்றன்னைக்கொன்றிடும்
பாவிநீயென்றுநாப்பற்றிவாங்கித்தன்
றுவிவானறப்பறித்தரற்றிமாண்டனன் (௧௧௭)

அங்கிரேரங்கிசனனுசன்மாண்டுற
மங்கிடாவருந்தவர்மகிழ்ச்சியெய்தினார்
சங்குதுந்துமியொடுமுழங்கச்சக்கர
னெங்குமன்னவர்தொழவிருந்தவெல்லையின் (௧௧௮)

நறுந்துழாயணியரிநதியினண்ணிய
துறிந்துயர்நந்தனுமசோதைநங்கையு
நிறைந்தெழுகளிப்பொடுநேயவாயருஞ்
சிறந்திடுமரிவையர்சூழச்சேர்ந்தனர் (௧௧௯)

சிந்தையிற்களிப்புறத்திருவினாயகன்
றந்தைதாயடியினின்முடியைத்தாழ்த்தலு
மைந்தனைமகிழ்வுறத்தழுவிவானிறை
யிந்துநேர்சிந்துவின்மகிழ்ச்சியெய்தினார் (௧௨௰)

நெய்யிழுதுடன்றதிநிறைந்தவோதனந்
துய்யபாலனமலிரூபமாதியாய்
வையமேலுண்டுமாராவயிற்றினு
மையனையருத்துவித்தனளசோதையே (௧௨௧)

கடிமலர்த்தொடையலையணிந்துகங்கைசே
ரடியன்மெய்யழகுறக்கலவையப்பியே
யுடலெல்லாம்புளகமுற்றுச்சிமோந்துதன்
மடிமிசையிருத்தித்தான்மகிழ்ச்சியெய்தினாள் (௧௨௨)

முன்னுறுதவத்தினான்முடிவிலாததோர்
நன்னலனெய்தியநந்தகோபனை
யின்னிலத்தவரிமையோர்களேத்தவா
முன்னையைநோக்கிமாலருளுவானரோ (௧௨௩)

தூயநன்கன்றுகடுள்ளுமோவவை.
மேயவேபசும்புலுந்துளிர்க்குமோவிளங்
காயுடன்களங்கனிநிறைந்தகானெலாம்
பாயுமான்கலையுடனெறித்துப்பார்க்குமோ (௧௨௪)

மறுவிலாக்கறந்திடமலியும்பாற்றதி
நறுநெய்யோடிழுதுகணலங்கொளாய்ச்சிய
ருறியெலாமடுக்கியகலசத்துள்ளவை
சிறியவர்நித்தலுந்திருடித்தின்பரோ (௧௨௫)

ஆவினங்கன்றுயான்மேய்த்தகோலடர்
காவினிலூதும்வேய்கடையுமத்தினந்
தூவினங்கேகயத்தோகையின்பினல்
கோவணியணியெலாமுளதுகொல்லென்றுன் (௧௨௬)

இந்திரைகேள்வனீதியம்பலோடுமே
தந்தையுந்தாயுமத்தனயனைத்தழீஇச்
சுந்தரவறைந்தவையாவுஞ்சோர்வில
வெந்தைநீயெய்திலாயெனவிரங்கினார் (௧௨௭)

நின்னையெம்பாடியினித்தங்காண்கிலா
வின்னலேபொறுக்கிலாமெனவிரங்கிய
வன்னையோடத்தனையன்பினுற்றழீஇப்
பின்னைதன்னுயகன்பேசுவானரோ (கஉஅ)

அருந்தவர்தங்களினதிகமாகவே
திருந்தியசெயலினைச்சிந்தைசெய்தநீர்
பெருந்தவர்பெருப்பதம்பெற்றுவாழ்விரால்
வருந்தனீரென்றரிமகிழ்ந்துகூறினன் (கஉகூ)

பொலனுறுகலன்களும்பொன்னினுடையு
நலனுறத்தந்தைதாய்க்களித்துநாரணன்
சிலைநுதலாய்ச்சியர்திரட்குமாயர்க்கும்
விலையில்பூடணமெலாம்விளங்கவீந்தனன் (கஙம)

நந்தனையசோதையைவணங்கிநாரண
னிந்துநேரானனமிலங்குமாய்ச்சியர்
சிந்தைதன்பின்செலத்தேரினேறியே
துந்துமிமுழங்கிடத்துவரைசேர்ந்தனன் (கஙக)

துவசமார்துவரையிற்சேர்ந்துதூயதா
நவமணிக்கோயிலைநண்ணிநாரணன்
றவமுறுதேவகிதாளில்வீழ்தலு
முவமையில்குமரனையுச்சிமோந்தனள் (கஙஉ)

மாவடுவகிர்நிகர்மைக்கணுண்மரைப்
பூவினைத்துறந்துயர்விதர்ப்பன்பொன்மலை
மேவியமெல்லியலுடனும்விஞ்சிய
தேவியரனைவரும்வணங்கச்சேர்ந்தனர் (கஙங)

காயும்வெங்கரியினைவுதைத்தகாவலன்
றூயராங்குமரர்கள்சுதருங்கூடமூ
வாயிரகோடியெண்ணாயிரத்தெண்ணூறா
ரேய்வீலாவீரர்சூழ்ந்துறவிளங்கினன் (கஙச)

அங்கிசமன் டிபிகன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சஙகுஅ.

---

## கoக-வது நிருகராசன் மோக்ஷப் படலம்.

---

பாதவண்டுளியிற்பவங்களொவிநற்
கோதமன்மனைவிமுன்னுருக்கொண்டேகவே
தீதகல்சனகர்சோன்பயர்தகெதயா
மாதினைமணந்தமாதவனைவாழ்த்துவாம (க)

நந்தொடுதிகிரியையேந்துநாரணன்
மைந்தர்கடமக்கெலாம்வதுவைசெய்துயர்
சுந்தரஞ்செறிபுதல்வியரைத்தோமிலா
வந்தமாரரசர்க்கிந்தமருநாட்டினில் (உ)

பானுநற்சாம்பன்விற்காமன்பத்திர
வீனமில்சாருசங்கிராமரேனுடிவர்
கானசந்தனின்விரைந்தேகிக்கட்கமோ
டேனமானெண்கிவைபிடித்தின்புற்றனர் (ங)

ஆவிதநசாயுதமடர்ந்துபற்றியே
தூவியன்னங்குயிற்றுலங்கத்தோன்றிய
காவினிலெய்திநீர்காண்கிலாதபாண்
கூவலின்வரைநிகர்கோம்பிகண்டனர் (ச)

தரணியிற்சூழ்ந்திடுஞ்சலமில்கூவலின்
வரைநிகர்கோம்பியைக்கண்டமைந்தர்கள்
விரைவினிற்கயிற்றிடைவீக்கிவாங்கவே
யொருசிறிதசைவிலாதிருந்ததோதியே (ரு)

கிரியெனக்கூவலுட்கிடந்தவோதியின்
பெருமையையேகிநற்புதல்வர்பேசிட
வரியிரதத்தின்மேலரசர்சூழ்ந்திட
விரைவினிலெய்தியேவியந்துநோக்கினன் (சா)

அரிபுவியின்னிடத்தாழ்ந்தகூவலின்
வரையெனக்கிடந்திடுமோந்திவாலினை
யொருகையிற்பற்றலுமுருவமிக்கதோர்
புருடனாய்விமானமேற்பொலிந்துதோன்றினன் (எ)

துலங்கியகிரீடமுஞ்சிரத்திற்றேன்றநற்
சலன்களும்வயங்கிடக்கனககுண்டல
மிலங்கியேயசைந்திருகாதினேருற
வலங்கலுமார்பிடையலையத்தோன்றினன் (அ)

வரைநிகர்கோம்பியாமுருவைமாற்றிநற்
புருடனைவிமானமேற்பொலிந்ததன்மையை
யுரையெனவருள்செயுமுலகுணேமியா
னிருகழற்பணிந்தவனியம்புவானரோ (கூ)

இரவிதன்குலமனுப்பயந்தவிக்குவா
வருளியநிருகன்யானயோத்தியென்னுமா
புரியினினறநெறிபொருந்தப்பாரெலாந்
திருவுறவுயர்ந்தசெங்கோல்செலுத்தினேன் (௧0)

பரவையின்மணலினைப்பரந்தமீனினைத்
திரையினுளொறிந்தசீகாத்தையெண்ணினு
மருமறையோர்க்கலங்காரத்தோடியா
னிருநிலத்தளித்தகோதானமெண்ணொணு (கக)

மாமறையறைந்திடுமறையவர்க்கெலாம்
பூமிதானங்களெண்புகரிபங்கவின்
மாமணிதிரவியம்வயங்குகன்னிய
ரேமமோடெண்ணிலாதவைகளீந்தனன் (கஉ)

நீதகன்றிடமகாதானஞ்செய்நயா
னேதமிலிருக்கினையியம்புவோனுக்கே
கோதிலாதுயர்ந்தகோதானமீதலும்
வேதியன்பசுவுடன்மனையின்மேவினன் (கங)

சரியிலாமறையவனகத்திற்சார்ந்தகோ
விரவினிற்பாறியென்னிரையின்மேவவே
யருவினையேனுணராதவாவினை
யொருதினத்தொருமறையவனுக்கீந்தனன் (கச)

ஏசிலக்கோவைமுன்னீயப்பெற்றிடுந்
தேசுறுமறையவனெங்குந்தேடியே
யாசுறப்பின்னர்யானளிக்கவாங்கிய
மாசறுமறையவன்மனையிற்கண்டனன் (கரு)

சுருதியையறைபவன்கண்டிந்நாயகோ
நிருகனெற்கீந்தனனென்னநீதியா
ரரசனின்றெனக்கிவாவளித்தனனென
விருவரும்விரோதமாயென்முன்னெய்தினார் (கசு)

இருவருநிகழ்ந்தமையியம்பவாயிர
நிரையிதற்கீகுவனென்னநேரிலா
ரருமறையவரிசையாதவாவினைச்
சரியிலோர்மறையவன்றனக்கன்றீந்தனன் (கஎ)

சரியிலாக்கோவினைத்தானமீந்திட
விருவருஞ்சினமுறவென்னைநோக்கியே
யரசநீதரணியினுழந்தகூவலின்
கிரியைநேரோதியாய்க்கிடத்தியென்றனர் (கஅ)

இருமறையவர்களன்றியம்புசாபத்தாற்
பருவரையெனப்பயமிலாதகூவலி
னொருநொடியிடுமுனமோதியாகியே
மருளுறுவினையினால்வந்துவீழ்ந்தனன் (ககூ)

நீவினையேனையுன்கரத்திற்றீண்டியே
நாவினின்மறையவர்நவின்றசாபமாம்
பாவமாமிருளினைப்பற்றறுத்துயர்
தேவனுக்கினையெனத்திருவினாயகா (உ0)

மையுறுகருங்கலாய்க்கிடந்தவானுநற்
றையறன்பவமெலாந்தானினீக்கினாய்
கையினின்றென்வினைக்கடலைப்போக்கினாய்
துய்யவாவென்றடிதொழுதுசொல்லுவான் (உக)

துன்பகன்றுயர்பெருஞ்சோதியெய்நயா
னுன்பெயரோதியுன்னடிமறக்கிலா
வன்பெனக்ககல்கிலாதருடியாலென்றன்
புன்பிறப்பகற்றியபுனிதவென்றனன் (உஉ)

நிருகனிவ்வுரையெலாநிகழ்த்திநேமியோ
னிருசரணங்களினிறைஞ்சிக்கண்ணினீர்
தரையினினிறைந்திடத்தழைத்தவன்பினாற்
சுரர்துதிசெய்திடச்சுவர்க்கத்தெய்தினான் (உங)

இவையெலாமியம்பிவானிருகனெய்தலுந்
தவரையினிலங்கியசுருதிநாயக
னவனியிற்கிளைஞராமரசர்கேட்கவே
யுவமையில்புதல்வர்கட்குரைக்கலுற்றனன் (உச)

திருவுறவுலப்பிலாவேள்விசெய்துயர்
பரிவிறுலைப்பின்மாதானம்பண்ணினே
னிருவருக்கும்மொருபசுவையீந்திடு
மருவினைதொடரவேயோதியாகினேன் (உரு)

ஆதலினளக்கரினரவமன்றுமிழ்
தீதுறுவிடமருந்திடினுந்தீர்க்கலாம்
வேதியர்சோகங்களியார்க்குமீட்கரி
தேதமாந்தீவினையெய்துமென்றனன் (உசா)

மறையவர்க்கீந்திடும்புவியைவவ்விரே
னறுபதினுயிரமாண்டமேத்திய
கிறுமியாயுழலுவனென்றுகிழ்மையி
லறிஞர்கள்சொலுமொழியுண்மையாமென்முன் (உஎ)

என்னுரைதனைமறையியம்புசொல்லென
வுன்னிநல்வேதியருடைமைகொள்களீ
ரன்னவருயரரியயனையானனன்
றன்னினுமதிகரென்றுணர்ந்துதாழுமின் (உஅ)

அந்தணர்பெரியவரறிமினென்றுயர்
மைந்தருக்கிம்மொழியியம்பிமாதவன்
சிந்தனைவிலசெறிதுவரைசேர்ந்தவ
ணிந்திரைதன்னுடனிருந்தனனரோ (உகூ)

எண்ணிரண்டாயிரச்சதத்தெண்மாதரார்
மண்ணிடைமகிழ்ந்தருண்மைந்தர்வாணரு
கண்ணியரெண்ணிலார்தம்மைவேட்கக்கார்
வண்ணனுட்களிப்பொடுமகிழ்ந்துமேயினன் (ஙo)

நிருகராசன் மோக்ஷப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௬அஅ.

## ௧0உ-வது உருக்குமி திருக்கலியாணப் படலம்.

பெருநாட்டவஞ்செயவெய்தியபிறைவேணியனருளும்
வரசோதனையறியக்கரமரன்சென்னியில்வைப்பான்
றனாமீதுயருலகெங்கணும்விரைந்தோடியசமுக்கன்
விருகாசுரன்மடியும்வகைசெயுமால்புகழ்விரிப்பாம் (௧)

திருவாகியவுருக்கும்மணித்தேரின்புறத்திறல்சா
லரிதானருண்மதனார்சுதனனிருத்தமன்றலைக்குச்
சரியாகியமடவாடனைத்தரணிக்கணிணாடிப்
பரிவானெறியறியுத்தவனுடனிம்மொழிபகர்வான் (௨)

நீயின்றுருக்குமனார்சுதனருணேரிழையாளைத்
தூயன்னுயரனிருத்தமன்றனக்குத்தரச்சொல்லென்
றேயும்பொதுவோருய்ந்திடவனலுண்டவனோத
வேயென்னுமுனயருத்தவனிரதம்மிசைபோனான் (௩)

பொன்னார்மதில்சூழ்போசகடம்மாநகர்புகுந்தே
தன்னேரிலுத்தவன்வீடுமகன்சேயிடைசார்ந்தே
யுன்மாமகன்றருமங்கையையுலகேழையுமாந்தோன்
றன்மாமகனருளுஞ்சுதன்றனக்கீகுதியென்றான் (௪)

உயருங்குணமலியுத்தவனுரைகேட்டுருக்குமன்றா
னயிலொன்றியகரத்தென்மகனருண்மங்கையையன்பாற்
சயலெண்ணியவிழிநங்கைதன்சுதனாகியகாமன்
னியல்பின்றருமனுருத்தமன்றனக்கீகுவனென்றான் (௫)

விறல்சேருருக்குமனன்புடன்விளம்புமுறைகேளா
நெறிமேவியவெழிலுத்தவனெடுந்தேர்மிசையெய்தி
மறையோருறுதுவராபதிமனனோடிவையறையப்
பிறைபோனுதற்கமலாசனியுடனேபெரிதுவந்தான் (௬)

மாயோன்றனைத்தருதேவகிவசுதேவன்மன்மதனுஞ்
சேயோருடனனிருத்தமன்றேர்மீதினின்வரவே
தூயாளுயர்மலர்நாயகியுடன்றேவியர்சூழக்
காயாமலர்வடிவாகியகருணைக்கடல்சென்றான் (௭)

சினிபுத்திரனெறியுத்தவன்றிறல்சாலலமுடையோன்
கனமுற்றிடுமெழிலுக்கிரசேனன்னுடன்களித்தே
முனையுற்றெதிரடல்வீரர்கண்முகிலொத்தெழுகரிசே
ரணிகத்துடனுயர்தேரினுமயமீதினுஞ்சென்றார் (௮)

**வேறு.**

காகளங்கொம்புதாரைசம்புதுந்துமிகளெங்கு
மோகரித்தெழுந்தமேகத்திடியெனமுழக்கம்விஞ்ச
நாகந்தாரிவுளிபொற்றேர்நலனுறுதுவசமோங்க
வேகவானெயில்சூழ்போசகடநகர்க்கெழில்சூழ்மாயன் (௯)

நந்துறுசெங்கைமாயனளினமின்னுடனேதேரின்
வந்தனனென்றுதூதர்கூறிடவிதர்ப்பன்மைந்தன்
சிந்தையின்மகிழ்ந்துபோசகடநகர்தன்னைச்சீரா
விந்திரனகரிபோலவலங்கரித்தெதிர்சென்றானால் (௧0)

உருக்குமன்வரதன்சீராமுருக்குமவரதப்பேரோ
னுருக்குமமாலிவீரவுருக்குமசேனன்விஞ்சு
முருக்குமமனன்போலொத்தவிளைஞர்களுவந்துசூழ
வுருக்குமன்மாயன்றன்னையுரமுறத்தழீஇக்கொண்டானால் (௧௧)

முன்னவன்றன்னையன்பான்முளரிமின்னிறைஞ்சலோடு
மன்னரெண்விதர்ப்பன்மைந்தன்மனமகிழ்ந்தெதிர்கொண்மாயன்
றன்னொடும்விரைவினெய்தித்தரளகோபுரங்களோங்கப்
பொன்னவிர்மதில்சூழ்போசகடநகர்புகுந்தானன்றே (௧௨)

ஏருறுகிரீடமோங்கவெழில்கொள்குண்டலமிலங்கத்
தாருறுமுரத்தின்மீதிற்றரளமாவடங்களாட
நேரிலாத்தவளப்பட்டுமருங்கினினிறைந்துசூழ
மாரவேள்வெள்கவந்தான்மற்றவன்சுதன்றேர்மீதின் (௧௩)

தூயதாம்வீதிதோறுந்துலங்கியகலன்வில்வீச
வேயுறுதோளின்மாதர்விளைகுழலலையவெய்தி
மாயனைநோக்கிவேளின்வடிவினைநோக்கிமாரன்
சேயினைநோக்கிப்பாரின்சித்திரம்போலநின்றார் (௧௪)

துந்துமியிடக்கைதக்கைதுடிகைமாபேரியார்ப்ப
வந்தரமாதரெல்லாமாடகமலர்கடூவ
விந்திரைமருகியானவிரதிதன்சிறுவன்றேர்மேல்
வந்திகர்திரண்டுவாழ்த்தமறுகிடைச்செல்லும்வேலை (௧௫)

புயல்பிறைவில்லுவாளிபொற்குமிழாம்பல்வள்ளை
சயிலம்வேய்நந்துசாந்தட்டயங்குமின்கதலிநள்ளி
யியல்புறுநளினமேந்துமிரணியக்கொம்புபோல
வுயர்மணிக்கும்பவூசலுருக்குமியாடினாளால் (௧௬)

கவரிகடிகழக்காதிற்கவின்கொடோடாடமெய்யி
னவமணிக்கலன்கண்மின்னநாமநன்னுதலிற்றோன்றத்
தவளவெண்ணகைவில்வீசத்தாளினூபுரங்களார்ப்ப
வுவமையினம்பொனூசலுருக்குமியாடினாளால் (௧௭)

ஊசலினிலங்கவாடுமுருக்குமியெழிலைநோக்கித்
தேசுறுமிரதிபெற்றசிறுவனோரிபத்தின்மீதின்
வீசுவெண்கவரியோங்கவெய்தலும்விரைகொண்மாலை
காசணிநகிலிசிந்தைகளித்தவன்புயத்திலிட்டாள் (௧௮)

சீருறுமலங்கறன்னைத்தேவிதன்புயத்திற்சூட்ட
மாரவேள்சிறுவன்சிந்தைமகிழ்ந்துயர்மணங்கொண்மாலை
நாரிதன்கந்தரத்தினலனுறவணிந்தூசன்மே
லேருறமனைவிதன்னொடெய்தியேயாடினானால் (௧௯)

இரணியவூசன்மீதுமனைவியோடிரதிமைந்தன்
றரணியன்றிடந்தகோவுந்தனயருமகிழவாடி
முரணுறுமரசர்வாழ்த்தமுரசுதுந்துமிகளார்ப்ப
வருணவண்டேன்கள்சேருமண்டபமிசையின்வந்தார் (௨௦)

நித்திலவிதானமோங்கநிறைவிளக்கினங்கள்சூழச்
சுத்தநன்மணிகளம்பொன்றுலங்குமாதனத்தின்மீதின்
சித்தசனருளுமைந்தன்றேவியோடிருக்கும்வேலை
கைத்தலக்கனிபோனூலின்பயனுணர்கர்க்கன்வந்தான் (௨௧)

சரதவேதியர்கள்சூழத்தவமுறுகர்க்கனெய்திச்
சுருதிநூல்வழியிலோமந்தொடங்கமங்கலநாண்கையா
லிரதிதன்சிறுவன்றேவிகந்தரத்திலங்கச்சாத்திக்
கரதலம்பற்றித்தீயைக்கவினுறவலம்வந்தானால் (௨௨)

ஆலிலைவயிற்றுளாயவுருக்குமியம்மிமீதிற்
காலினின்மிதிக்கத்தேவியுடனருந்ததியைக்கண்டு
மாலினையிறைஞ்சிமாரனடியினில்வணங்கித்தூய
சீலமார்வாரிமின்னைப்பணிந்தனனிரதிசெம்மல் (௨௩)

அறனுறுமக்குரூரனுக்கிரசேனனுன்ற
நெறியுறுவசுதேவன்சீர்நிறைந்தசாத்தகிபோர்தன்னிற்
றிறலுடையலாயுதத்தோன்றேவகியுடனுள்ளோரை
மறுவிலாமனைவியோடுமதன்மகன்வணங்கினுனல் (உச)

மருநிறவுதைத்தோன்மைந்தன்மகனுருக்குமிதன்னோடு
மிரதியைவணங்கித்தூயவின்னமுதருந்திமேற்கிற்
பரிதிபோய்மறையத்தேவியுடன்பரியங்கமீதிற்
சுரதநூல்வழியின்போகந்துய்த்தினிதிருந்தானன்றே (உரு)

ஏதமின்மதனன்மைந்தனெழிலுருக்குமன்செய்நல்கு
மாதுடனின்பமெய்திமகிழ்ந்தினிதிருக்கும்வேலை
யாதவன்கிரணமோங்கியளக்கரினெய்தத்தூய
வேதியரிருகையாரவருக்கியம்விடுத்தாரன்றே (உகா)

ஆதவனுதயமாகவரசர்கள்குழாங்களோடு
மாதவன்முன்னேன்பொன்னின்மண்டபத்திருக்கும்வேலை
நீதியில்கலிங்கன்றன்னேடுருக்குமனெறியிலாத
சூதினில்ராமன்றோற்கவெல்வமியாமென்றுசொன்னன் (உஎ)

நீதியிலுருக்குமன்றானிகழ்த்திடக்கலிங்கராசன்
சீதரன்முன்னேனென்றுஞ்செருக்களந்தன்னிற்றோலான்
பூதலத்தரசர்முன்னுட்புந்திப்புள்ளுவத்தினுலே
சூதினைப்பொருதிராமன்றோற்றிடவெல்லென்றுனல் (உஅ)

விரைவினிற்கலிங்கனிவ்வாறுரைத்திடவிதர்ப்பன்மைந்த
னருவினைதொடரவெய்தியலாயுதன்றனைநோக்கித்
தரணியிலரசர்முன்னர்ச்சதிருநத்தம்பூட்டி
யிருவரும்பொருவோமென்னவிசைந்தனனிராமநம்பி (உகூ)

இரணியப்பலகைதன்னிலெழிலுறுசாரிபூட்டி
யரசர்கள்குழாங்கள்சூழவிருவருமாடலோடு
முருமெனவதிர்க்குஞ்சொல்லானுருக்குமன்றோற்கவேதான்
விரைவினிற்பொருதுவென்றுன்விறலுடையலாயுதத்தான் (கூ0)

பின்னருஞ்சாரிபூட்டிப்பெருஞ்சினவுருக்குமன்று
னின்னலில்லலத்தோன்றன்னேடிருங்கவறெறிந்தேயாடித்
துன்னியவரசர்முன்னேதோற்றவனிராமன்றன்னை
யென்னுடன்பொருதுதோற்றுயிரண்டுபோதென்றுநக்கான் (கூக)

தீயவன்மொழியக்கேட்டுச்சிறந்திடுந்தவளவண்ண
னீயெனக்கிருகாற்றோற்றுநிகழ்த்துவதிதுவேதென்ன
மாயும்வெங்காலமெய்திமதியிலாவுருக்குமன்றான்
றூயவன்றன்னைநீயேதோற்றனையென்றுசொல்வான் (கூஉ)

அரசரெல்லீருங்கேண்மினலாயுதன்சூதென்னேடும்
பொருதிருதரந்தான்றோற்றுப்பொய்யிவண்மொழிந்தானென்றே
யுரைசெயக்கலிங்கராசனுண்மையீதென்றுகூறி
யிருவருங்கரங்கடாக்கியிடியெனநகைத்துச்சொல்வார் (கூக)

அரசர்முன்சூதிங்காடியலாயுதன்றோற்றானென்று
முரசறைகென்றலோடுமுனிந்தரிமுன்னேன்சீறி
யொருகையாற்கபோலந்தன்னிற்புடைத்திடவுருக்குமன்றான்
வரையெனவுருண்டுமாண்டான்மன்னவர்வெருவியோட (கூச)

சிலமில்கலிங்கன்றன்னைச்சினத்தலாயுதத்தோன்கையாற்
காலினைப்பற்றிச்சுற்றிபெறிதலுங்கலங்கிவீழ்ந்து
ஞாலமன்னவர்களெல்லாநகைத்திடப்பாறலோடு
மாளுடனுற்றவெல்லாமுரைத்தனன்மதியின்வண்ணன் (௬௫)

இன்னல்செய்யுருக்குமன்ருனிறந்தமையிராமன்கூற
மன்னரெண்வசுதேவன்சேய்மவுனனுயிருக்கும்வேலை
முன்னவனிறந்தமாற்றங்கேட்டயர்முளரியன்னாங்
தன்னிருவிழிநீர்சோரச்சக்கரன்ருளின்வீழ்ந்தாள் (௬௬)

வந்தடிவீழ்ந்துகண்ணீர்மலியவேயரற்றுகின்ற
விந்திரைதன்னைநோக்கியிருகையாற்றழுவிவாடி
முந்துதம்வினையின்செய்கைமூவருங்கடக்கலாற்ருர்
சுந்தரியிரங்கேலென்ருத்தேற்றினன்சுருதிநாதன் (௬௭)

துடியிடையாளைத்தேற்றிச்சுந்தரன்முன்னேன்கையி
லடியினின்மடிந்தான்றன்னையழலுறவிடுதலோடும்
படியினிலிறந்தான்மைந்தன்பயத்தொடுதிலத்தாற்செய்யுங்
கடனெலாமறையோர்நூலைக்காட்டவேமுடித்தானன்றே (௬௮)

படியினின்மடிந்துவீழ்ந்தவுருக்குமன்பயந்தசெய்க்கு
முடியினையிலங்கச்சூட்டிமுராரிதன்றேவியோடுங்
கடிமலர்க்குழலியானவுருக்குமிகாமன்பெற்ற
வடிவுடையவனேடெய்தமணிநெடுந்தேரிற்சென்ருன் (௬௯)

தவமுறுந்தந்தைதாயர்தேவியர்தனயர்முன்னே
னரசர்கணிறைந்துசூழவயமுறுமிரதமீதிற்
கவரிகளசையப்பேரிகாளஞ்சின்னமார்ப்பத்
துவரையின்விரைவினெய்திச்சுந்தரனிருந்தான்மாதோ (௭௦)

உருக்குமி திருக்கலியாணப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௪௨௮.

## ௧௦௬-வது அத்திஞபுரத்தைப் போர்த்த படலம்.

கும்பன்மாநிகும்பன்வெய்யமகோதரன்கும்பகன்ன
னும்பர்கோன்பகைஞன்றன்னேடுற்றிடுநிருதர்மாள
வம்பினிலிலங்கைவேந்தனுருயிர்கொன்ருன்பாத
கம்பியாந்தொழுவந்தொண்டீர்நவையுறுபிறவிநீங்க (௧)

வித்துருமத்தின்பொன்னின்வயிரத்தின்வெள்ளிதன்னி
னித்திலந்தன்னிலோங்குநிகரில்கோபுரங்கள்சூழ
நத்துயர்முரசம்பேரிகறங்கிடநவையிலாத
வத்திவெம்பரிதேர்மல்கவத்தினபுரியையாள்வோன் (௨)

கண்ணிலாநிருபன்பெற்றசுதனெழிற்காமன்போல்வா
னண்ணலார்மடியமோதிநாலிருதிசையும்வென்று
மண்ணெலாமொருகோலோச்சிமதிநிகர்கவிகையோங்க
வெண்ணிலாவரசர்போற்றவிலங்கியவிராசராசன் (௩)

சந்திரவண்ணனானதாலகேதனன்றான்பெற்ற
சுந்தரியானபானுமதியுடன்சுயோதனன்று
னிந்திரன்சசிதன்னோடிலங்கியதென்னமுத்தின்
பந்தரின்சுரதநூலின்படிநலக்கலவிசெய்தான் (௪)

நிலக்குறும்பறுத்துச்செங்கோனிறுத்தியசுயோதனற்கே
யலக்கரவரசன்பெற்றவணங்கரம்பையரின்விஞ்சுந்
துலக்கமுற்றுயர்ந்தபானுமதிவயிற்றோன்றினார்க
ளிலக்கணகுமரன்றன்னோடிலக்கணையென்னுமாது (௫)

பானலேவள்ளையாம்பல்பசழிவிற்குமிழீதெல்லாம்
வானிறைமதியின்மீதின்வயங்கியமாட்சிபோல
வானனமிலங்குகின்றவணங்குயரரம்பைநாணுந்
தேனுறுமொழிகொள்கஞ்சத்திருமகளெழிலையொப்பாள் (௬)

காந்தளைநிகர்த்தகையாள்கழையெனவயங்குதோளாள்
பாந்தளினல்குலாள்செம்பவளம்போலிலங்குவாயாள்
மாந்தளிர்மேனியாள்சீர்வடவிலைவயிற்றாளங்கார்
நாந்தகநயகியாடன்னடையினலனத்தைவெல்வாள் (௭)

இந்துவின்வதனத்தாண்மாநதியினீர்ச்சுழியீதென்னு
முந்தியாள்கதலிநாணுமூருவினுருவமிக்கா
ணந்தெனுங்கழுத்தாள்கோங்கின்முகைநிகர்நகிலாணீலக்
கந்தரமனையவைம்பாற்கொடியிடைகமலத்தாளால் (௮)

இந்திரையெழிலுக்கொத்தவிலக்கணையென்னுமாதைச்
சுந்தரஞ்செறிந்தோனெய்திவ்துவைசெய்சுயம்வரத்துக்
கிந்தமாநிலத்திலுள்ளவரசர்கள்வருவீரென்றே
யந்தமன்புதல்வனாயவரசன்றூதுவரைவிட்டான் (௯)

தூதுவர்திசைகடோறுமெய்தியேசொல்லலோடும்
பூதலத்தரசரெல்லாம்புகரிபந்தேர்மாச்சூழ
மாதர்தந்திலகமாயவிலக்கணைவடிவைநோக்கு
மாதரம்பெருகவத்திநகரியையடைந்தாரன்றே (௧௦)

சாம்புவன்புதல்விமைந்தன்சாம்பன்பொற்றடந்தேர்மீதிற்
காம்பினைப்பழித்ததோளாள்கமலத்தைப்பழித்ததாளா
ளாம்பலைப்பழித்தவாயாளிலக்கணையழகுநோக்கப்
பாம்புறுதுவசன்வைகும்பதியினைச்சேர்ந்தானன்றே (௧௧)

நித்திலம்வயிரம்பச்சைநீலநற்பதுமராகம்
வித்துருமங்களெல்லாம்விளங்கியதூணோர்சோடி
வைத்தமண்டபத்திலங்குமடங்கலாசனத்தின்மீதி
னத்தினபுரியையாளுமரசர்கோனிருந்தானம்மா (௧௨)

கவரிகளசையபத்தாரக்கவினுறுங்கவிகையோங்க
நவமணிக்கிரீடமின்னநானமெய்கமழப்பாரி
லுவமையில்கலன்விம்மிசவுரகமீதுயர்த்தகோமான்
நகமுறுகிபுரர்கோமான்சரியெனவிருந்தானம்மா (௧௩)

வீடுமன்விதுரன்கன்னன்வேதியன்சிறுவன்சிந்து
நாடுறுமன்காந்தாரன்பகதத்தனவையின்மாலை
சூடியபூரிபூரிச்சிராவெழிற்சோமதத்த
னாடரவுயர்த்தகோமானருகினிலிருந்தாரன்றே (கச)

வினைமலிந்துயர்ந்ததுச்சாதனனெனும்வீரன்றன்னோ
டனுசரெண்மருங்குஞ்சூழவரசர்கண்மகிழ்ந்துநிற்ப
வனிதையர்குழாங்கள்பல்லாண்டிசைத்திடமறையோரெல்லா
மினியதாமாசிகூறவிருந்தனனிராசராசன் (கரு)

போரிடையதிகரானபுரவலர்பரிவாற்பெற்ற
வேருறுகுமரரெல்லாமிருமருங்கிலங்கிநிற்ப
வாரமார்கலன்கண்மின்னவாடகவாடைதோன்ற
மாரனும்வெள்கநின்றான்மாயவனருளுஞ்சாம்பன் (கசா)

இலங்கிடுகுமரரெய்தியெழிலுறநிற்குமெல்லைக்
கலன்கண்மெய்யிலங்கமாழைக்கலிங்கமென்மருங்கிற்றோன்ற
வலங்கலைக்கரத்திலேந்தியிலக்கணையவையினுள்ளே
துலங்குமிந்திராபோலெய்திச்சுயோதனனருகினின்றாள் (கஎ)

மாவடுவகிர்நாண்கண்ணிவடிவினைநோக்கியுற்றே
கோவிளங்குமரரெல்லாங்குறித்திருகண்ணானோக்கி
யாவியுஞ்சிந்தைதானுமவள்வயினெய்தவேதா
மோவியம்போலநாட்டமிமைக்கிலாதுருகிநின்றார் (கஅ)

ஆடரவுயர்த்தகோமானன்பிற்றன்மகளைநோக்கி
யேடவிழலங்கனின்றன்னெழினிகர்மகுணன்றோளிற்
சூடுதியென்னலோடுந்தோடுகாதாடத்தூய
வாடகவாடைதோன்றவனமெனவவையின்வந்தாள் (கக)

அரசர்தம்மவையுளெய்தியரவிந்தமடந்தைபோலச்
சரிகரத்திலங்கத்தாளிற்சதங்கைநூபுரங்கள்கொஞ்ச
விரைவினிலெய்திச்சாம்பன்றோண்மிசைவிரைகொண்மாலை
பரிவுடனணிந்துநின்றாள்பாவையர்திலகமன்னாள் (உ0)

நாம்புறுமதியினலங்கிளர்நுதலுநாந்தகநயநமுங்கூம்பா
வாம்பலுள்ளாரமவிர்பரந்தெனவேயதரமுமூரலும்வயங்கக்
காம்புயர்தோளின்றொடிகையுந்தயங்கக்காந்தளேய்கரத்தினிலங்கல்
சாம்பன்வல்லுரத்தினணிந்துளமகிழ்ந்தாள்சர்ப்பகேதனன்றருதனயள் (உக)

**வேறு.** தெரிவைசாம்பன்றன்றோளிற்றெரியலையணியக்கண்டே
யரவுயரரசனெஞ்சமழன்றெண்கினரிவைமைந்தன்
புரவலரவையுளச்சமொருவியேபோந்தான்றன்னை
விரைவினிற்பற்றுமென்னவெகுண்டனர்வீரரெல்லாம் (உஉ)

**வேறு.** முரசுதுந்துமிகள்வளைமுழங்கியிடமுரணுறுங்கரியினிரைகொடே
யரசரெண்ணிலர்களடுசினங்களுடனலைகாலமெனவடரவே
புரிசைவிஞ்சியுறுதுவரைமாயனருள்புதல்வனுகிவருசாம்பனும்
வரிசைமன்னுமணியிரதமேறிவளையூதிவாளிகள்பொழிந்தனன் (உரு)

வாள்வைவேலுடனுலக்கைதோமரமுசுண்டிமாவலயம்வீசியே
மீளியாமெனவெகுண்டுமன்னவர்கள்விசிகமாமழைகள்பொழியவான்
காளமாமுகினிகர்த்தமாயனருள்குமரன்வெங்கணைகடாவலு
நீளுமாகரிகளிவுளிவீரரொடுநிருபரெங்கணுமடிந்தனர் (உச)

கரங்களற்றுயர்விலற்றுமார்பினுறுகவசமற்றிரதமற்றுமாச்
சிரங்களற்றுநிலமேன்மடிந்தனர்களரசர்சீறுகரியினமெலா
முரங்களற்றுவரைபோலவெங்களனுமுருண்டசெங்குருதியோடியே
தரங்கமுற்றகடலுற்றவெண்ணிலகவந்தமாடியனதாவியே (௨௫)

கோடுடைக்கரியைவென்றமாயனருள்குமரன்வெங்கணைகடாவவே
யாடல்வெங்கரிகளுருளமாவயவர்மடிதல்கண்டரசரோடலும்
வீடுமன்விதுரன்வேதியன்சிறுவன்வெய்யவனருளுமைந்தன்வான்
மூடவெங்கணைபொழிந்தெதிர்த்தனர்கண்முரசுதுந்துமிமுழங்கவே (௨௬)

வந்தெதிர்ந்துகணைசொரியும்வில்விதுரன்வீடுமன்மறையவன்சுத
னந்தகன்னெனவடர்ந்துசிறிவருமங்கராசனிவரைவர்தே
ருந்துவெம்பரிகளோடுபாகனிறவுலகுணேமிதனயன்கணை
சிந்திமற்றவர்கள்சிலையறுத்திடலுமோடினார்கடிசைதோறுமே (௨௭)

வேதியன்சிறுவன்வீடுமன்விதுரன்வெய்யவன்குமரனிவர்கடாம்
பீதிகொண்டிரிதல்கண்டுகண்கனல்பிறந்திடுஞ்சகுனிபூரியோ
டேதமற்றபகதத்தனோடரவுயர்த்தகோவினிளையோனரு
ணீதியற்றறனில்சிந்துநாடனொடுநிருபரெண்ணிலர்நெருக்கினார் (௨௮)

சிலைவளைத்தரசரிறுதியிற்பெயுஞ்செல்லெனக்கணைகள்சிதறவே
யலைவளைத்திடுமளக்கரிற்றுயிலுவந்தவச்சுதனருட்சுதன்
கொலைவளைத்தகரிகோடிவீடவுயராசைதோறுமிகுகொற்றவர்
தலைவளைத்திடமுனிந்துசாயகம்விடுத்தனன்றனுவளைத்தரோ (௨௯)

கஞ்சமாமனைவதைத்தமாயனருள்குமரன்வெங்கணைகடாவவே
விஞ்சுமாகரியுலப்பிலாவிவுளிவீரரெங்கணுமடிந்திட
விஞ்சிசூழ்நகரவீதிதோறுநிறைகுருதிவாரியெனவேசலு
மஞ்சியோடினர்கள்சிலையறச்சகுனிசிந்துநாடன்முதலனைவரும் (௩௰)

திரிபுரத்தையெரிசெய்துநின்றசிவனொத்தமாயனருடிருமக
னரவுயர்த்தவன்விடுக்கவந்தடானீகமெல்லவும்வதைத்திட
வெரிசினத்தின்வருமங்கர்பூபதியெழிற்றுரோணனுயர்வீடுமன்
வரிசிலைக்கையின்வளைத்துவாளிமழைதூவியேவளைசனூதினார் (௩௧)

மாதவன்னருள்குமாரன்வெஞ்சிலைவளைத்துவாளிகள்விடுத்துயர்
வேதியன்கைவில்லறுத்துவீடுமன்விளங்குதேரினையழித்துவா
னாதவன்னருளுமங்கராசன்மெய்யழுந்தவாசுகநிறுத்தவே
பூதலத்துறுமிரதமீதினின்மயங்கினானிரவிபுதல்வனே (௩௨)

ஊறுசெங்குருதிவரையின்மீதிழியுமருவியென்னநிலனோடவே
தேறினானிரவிசிறுவன்மாயனருடிருமகன்றனோடுசீறியே
நூறுமாயிரமுமெய்துவாளிகளொடிப்பினெண்டிசைமறைத்திட
மாறில்சாம்புவதிமைந்தன்வெம்பகழியெய்தறுத்துவளையூதினான் (௩௩)

பரிதிமைந்தன்விடுபகழியெல்லவுமறுத்துநின்றபரமன்சுதன்
பொருதவீரமதுகண்டுகண்களனல்பொங்கவேயரவுயர்த்தகோக்
கிருபன்வேதியனல்வீடுமன்சகுனிகிரியையொத்தபகதத்தன்மா
நிருபரெண்ணிலர்களுடனுமெய்தியுயர்வாளிவிட்டெதிர்நெருக்கினான் (௩௪)

உரகமுற்றதுவசத்தன்வந்தடரவுலகுணேமியனருள்சுத
னெரிகனற்கணைவிடுத்துமாசரியோடெண்ணில்வீரரைவதைத்துமா
குருகுலத்தரசன்வரிவிலோடுகொடிகுடையறுத்திடலும்வெருவியே
யரிமுனேகடுகியோடுமும்பலெனவோடினானரசரஞ்சவே (௩௫)

பங்கமெய்திடவிராசராசனுயர்படியின்மீதுகடிதோடலு
மங்கராசனொடுவீடுமன்சகுனியந்தணனரசரனைவருஞ்
செங்கண்மால்சிறுவன்மேனியிற்குருதிவீறவெங்கணைகள்சிதறிவெண்
சங்கமூதினர்வளைத்தடர்த்தனர்கடாணையெங்கணுநிறைந்திட (௩௬)

வாசவன்விபுதர்முனிவரஞ்சியிடமன்னர்வெஞ்சிலைவளைத்துமா
வாசுகங்கள்விடவச்சுதன்சுதனழன்றுவானமொடுதிசையெலா
மோசையுற்றிடவின்ஞாணெறிந்துபலபகழிதூவிவளைபூதின
னாசமுற்றனர்கள்வீரரெங்கணுநடித்தவெண்ணிலகவந்தமே (௩௭)

சீதரன்றனயன்வென்றுநின்றதிறல்கண்டுசீறியமனத்தினோன்
வேதியன்முடுகிவில்லறுத்திடலும்வீடுமன்கொடியறுத்தன
னாதவன்சிறுவனுரகவெங்கணைகொடச்சுதன்னுதவுகுமரனைப்
பூதலத்திடைபிணித்தனனுவகைபொங்கிமன்னவர்களார்ப்பவே (௩௮)

வேறு.

மந்தரநிகரெண்டோலின்மறுப்பினையிறுத்தோன்மைந்த
னிந்திரன்றன்னைமுன்னாளிருந்தளையிட்டபோன்றே
யந்தகனனையகன்னனரவினாற்பிணித்துக்கட்டச்
சுந்தரச்சாம்பன்றன்னைச்சுயோதனனேமஞ்செய்தான் (௩௯)

இவையெலாமுணர்ந்ததூயயாழ்முனிதுவரைக்கேகி
யுவமையிலரிதன்னோடேயுணர்த்துவானுன்றன்சேயாங்
கவினுறுஞ்சாம்பன்றன்னைக்கணவனாய்க்கருத்தினுன்னி
யவையினிலலங்கறன்னையிலக்கணையவன்றோளிட்டாள் (௪௦)

தொடையினைவிரைவிற்சாம்பன்றோண்மிசையரிவைசூட்டப்
படவரவுயர்த்தகோமான்பணியெனமுனிந்துநோக்கி
வடிவுடையவண்முனெய்திநின்றமாயவன்சேய்தன்னைக்
கடிதினரசர்பற்றிக்கடுஞ்சிறையிடுமினென்றான் (௪௧)

அரசர்தேர்கரிமாச்சூழவலைகடலஞ்சவார்த்துப்
பொருதவரனிகமெல்லாம்பொடிபடநொறுக்கிச்சாம்பன்
விரைவினிற்பரிதிமைந்தன்வீடுமன்முதலாம்வீரர்
தரையினின்வென்னிட்டோடத்தழலுறுவாளியெய்தான் (௪௨)

ஆம்பரிசுணராநாகத்துவசத்தோனடர்ந்துசீறத்
தூம்புறுதடாகஞ்சூழ்நாட்டங்கர்கோன்சுடிகையோங்கும்
பாம்பினிற்சாம்பன்றன்னைப்பற்றியேசிறையில்வைத்தான்
கோம்பியாநிருகன்சாபநீக்கியகோவேயென்றான் (௪௩)

சுரர்முனிசாம்பன்றன்னைச்சுயோதனன்சிறைவைத்தானென்
றுரைசெயக்கேட்டமாயனூழித்தீயெனவேசீறி
விரைவினிற்றேரினேறிச்சேறலும்விலக்கிமுன்னோ
னரவுயர்துவசன்பேரிற்சினமின்றுமகற்றாயென்றான் (௪௪)

பொருகரிபரிசூழத்திப்புரியிடையானேயெய்திக்
குருகுலமகிபன்பெற்றகுமரியையெண்கின்பாவை
திருமகன்றனக்கேகோலவதுவைசெய்வித்துமீள்வ
னிருகன்வெஞ்சாபநீக்குநேமியாயென்றுபோனான் (௪௫)

உத்தவனுடனேவானினுடுநிறைமதியின்வண்ணன்
சித்திரமணித்தேர்மீதிற்றெரிவையாகவரிவீசச்
சுத்தவொண்கலன்கண்மின்னத்துந்துமிமுழங்கவேகி
யத்தினபுரியின்வேறோரிமலர்ச்சோலைபுக்கான் (௪௬)

நத்துறுவண்ணன்யானீண்டிறுத்தமைநவினீயென்ன
வுத்தவன்விரைவினெய்தியுரகசேதனனுக்கோத
வத்தினபுரியையாள்வோனங்கர்சோன்சகுனியின்னோர்
மைத்துனன்மறையோன்வானநதிமகன்சூழவந்தான் (௪௭)

சீலமில்சுயோதனன்றன்சிறந்திடுமரசரோடுஞ்
சோலையின்விரைவினெய்திச்சுடர்முடிமகுடமின்ன
மாலின்முன்னோனையன்பாற்றழுவிமன்னவர்கள்சூழக்
சோலமுற்றிருந்தவெல்லையலாயுதக்கோமான்கூறும் (௪௮)

வடிவினையுடையபானுமதியருண்மைந்தனோடும்
படியினிற்செங்கோலோச்சிப்படவரவுயர்த்தசோவே
யிடரறச்சுகத்தினெய்தியிருந்தனைகொல்லோவென்றே
மிடலுடையலாயுதத்தோன்பின்னரும்விளம்பலுற்றான் (௪௯)

அரசர்தம்மவையினுள்ளேயிலக்கணையன்பினோடுந்
தெரியலைச்சாம்பன்றோளினணிந்திடச்சிறியேநீ
சரிபரியிரதஞ்சூழக்கடுஞ்சமர்செய்தேயெண்கு
தருமினுடனயன்றன்னைத்தளையினிலிறுத்தினையாம் (௫0)

சூர்முனிதுவரைச்செய்தியிவையெலாஞ்சொல்லலோடு
முரனுடன்செங்கோலோச்சுமுக்கிரசேனமன்னன்
விரைவினின்மணித்தேரேறிவெகுண்டவன்வருதலோடுந்
திருமகள்கொழுநன்றன்னோடியானவன்சினத்தைத்தீர்த்தேன் (௫௧)

விரைவினின்யானேசென்றுவிடவரவுயர்த்தோன்பெற்ற
வரிவையையெண்கின்பாவையருள்சுதன்றனக்குவேட்டு
வருவனென்றுன்பால்வந்தேனென்னக்காந்தாரிமைந்த
னிரவிதன்சிறுவன்றன்னோடிருகரம்புடைத்துநக்கான் (௫௨)

சகுனிதுச்சாதனன்சீர்சற்றுமில்சிந்துநாடன்
மிகநகைத்துரைக்கலுற்றார்விளங்குசிங்காதனத்தி
னிகரிலாக்கிரீடந்தாங்கிருடனேயிருக்கைகேளோ
மிகழ்வுறவிருத்தனாய்வாழுக்கிரசேனனென்றார் (௫௩)

வரிசிலைபிடிக்கும்வண்மைவல்லனோகேளீரென்பார்
கரிபரியிரதமூருங்கல்வியுமுளனோவென்பார்
திரைசெறிகடலூரோவியுக்கிரசேனன்சீறி
விரைவினின்னகரத்தெய்தினென்செய்வோம்விளம்புமென்பார் (௫௪)

நரிவரிலரியினங்கள்வெருவுமோநன்றிதென்பார்
கரியினங்கரத்தைக்காணிற்கலங்குமீதுண்மையென்பார்
வரிசிலைமறையோன்கங்கைமகனிவர்தடுக்கநில்லா
தொருவரையொருவர்நோக்கியுருமெனநகைத்தாரன்றே (௫௫)

அரவமர்துவசன்றுச்சாதனனங்கர்தேயமாள்வோன்
வரைநிகர்சிந்துநாடன்மறனுறுசகுனிமற்றும்
புரவலராயினோர்கள்போசனையிசழ்ந்துகூறி
விரைவினிலெய்தித்தத்தமனைதனிலெய்தினரால் (௫௬)

நிந்தைகள்பலவுங்கூறிச்சுயோதனனிருபரோடு
நந்தல்வந்துறவேசோலைகடந்துபோய்நகரினெய்தச்
சிந்தையிற்கனன்றிவ்வூரைச்சிந்துவினிடுவேனென்
றிந்துவின்வண்ணநம்பியலாயுதமெடுத்தானன்றே (௫௭)

உத்தரதிக்குத்தாழவொருநொடியிடுவமுன்னங்
கைத்தலத்தலாயுதத்தாற்கடுஞ்சினத்துடன்பால்வண்ண
னத்தினபுரியைப்பேர்க்குமளவினிலளப்பிலாத
சித்திரச்சிகரமெல்லாமிடிந்தனவீதிதோறும் (௫௮)

கொடியுறுமாடநீடுகோபுரங்கூவந்தோறும்
பொடிபடவிடிந்துவீழ்ந்தபுகரிபம்வெருவியோடப்
படியிசையரசரெல்லாம்பருவரலுடனேயாறத்
துடியிடைமடந்தைமார்கடுனியொடுங்கலங்கிவீழ்ந்தார் (௫௯)

ஆடரவுயர்த்தகோவோடரசர்கள்வெருவிப்பாரைச்
சேடனின்றலைக்கின்றானோவென்றவர்திகைக்கும்வேலை
வீடுமனிராமனிந்தப்பதியினைக்கடலின்வீழ்ப்பான்
பீடுடையலத்தைக்கொண்டுபேர்க்கின்றானென்றுசொல்வான் (௬0)

உக்கிரசேனன்றன்னைநீயெள்கியுரைக்கையாலே
சக்கரன்முன்னோனிந்தப்பதியைச்சாகரத்தின்வீழ்ப்பான்
விக்கிரமத்தினோடும்வெருண்டலாயுதத்தாற்பேர்த்தா
னிக்கணத்தெறிதன்முன்னமவன்சரணடைவாயென்றான் (௬௧)

பகிரதிமைந்தன்கூறப்படவரவுயர்த்தவேந்தன்
மிகமெலிந்தெழிலார்பானுமதியுடன்விரைவினெய்திப்
புகழுடையிராமநம்பியடிமிசைப்பணிந்துபோற்ற
நகையுடனலாயுதத்தோனவனொடுநவில்வதானான் (௬௨)

மதியுறுவதனத்தாளுன்மகளிலக்கணையாமாதைத்
ததிகளவாடுமாயன்றனயனுக்கின்றென்முன்னர்க்
கதுமெனவதுவைசெய்தியலாதெனிற்கலப்பையாலே
யுததியினின்னூர்தன்னையிடுவனென்றுரைத்தானன்றே (௬௩)

மதிவணன்மொழியக்கேட்டுமாசுணமுயர்த்தவேந்தன்
சுதைதருமொழியளாயவிலக்கணைதன்னைத்தூய
விதியினைப்பயந்தான்பெற்றவீரியன்றனக்கீந்தேனென்
றுதகஞ்செய்திருவர்தம்மையொருதவிசிடையின்வைத்தான் (௬௪)

அருமறையவர்களெல்லாமாகுதிசெய்யச்சாம்பன்
றெரிவைதன்கந்தரத்திற்சிறந்தமங்கலநாண்சாத்தி
யரிவைதன்னுடனேதீயைவலம்வரவம்மிமீதின்
மருவமர்குழலிகாலான்மிதிக்கவான்வடமீன்கண்டார் (௬௫)

மதிமுகம்வயங்குகின்றவிலக்கணையென்னுமாதைச்
சதுமுகன்றந்தைதந்தசாம்பனுக்கீதலோடுஞ்
சதமொழிந்தவனிதன்னைப்பேர்த்திடுங்கலப்பைவாங்கி
யதிரதர்குழாங்கள்போற்றவரிமுனோனுவந்துநின்றான் (௬௬)

**வேறு.**

பரியினஞ்சதவாயிரம்பருப்பதநிகராங்
கரிகளும்பன்னீராயிரங்கனகமாமணிசே
ரிரதமோருபத்தாயிரமீரைந்துநூறு
மரிவைமாருடனீந்தனனரவுயர்துவசன் (௬௭)

குருகுலத்திறையளித்திடுங்குரகதங்கரிதே
ரிருமருங்கினுநெருங்கிடவிலக்கணையுடனே
யரியருள்சுதன்வயங்கிடவரசர்கள்போற்றச்
சுரர்துதித்திடவலாயுதன்றுவரையிற்புக்கான் (௬௮)

மாயனெய்தியேமுன்னவனடிமிசைவணங்கத்
தூயசாம்பனாந்தகன்மகனருள்சுதையுடனு
நேயம்விஞ்சிடநிகரிலாமுராரியையிறைஞ்சித்
தாயரைப்பணிந்தெழுந்துவேடாளினிற்பணிந்தான் (௬௯)

சுந்தரஞ்செறிசுயோதனன்மகளுடன்சாம்பன்
சிந்தையின்மகிழ்ந்தோதனமருந்தியேசிறந்த
சந்தணிந்தின்பமாகியசாகரந்தழைப்ப
விந்திரன்சசியொடுமிலங்கியதெனவிருந்தான் (௭௦)

அத்தினபுரத்தைப் பேர்த்த படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௪௯௮.

---

## ௧௦௪-வது வாணாசுரப் படலம்.

---

வீணைசேர்கரத்தாள்கனவினிற்கண்டவேளருள்குமரனைத்தோழி
சேணினேர்கொடியிற்கொணர்ந்திடவசுரன்றிருமகள்கொங்கையிற்சேர்ந்தே
பேணலார்மடியச்சமர்பொருதரவிற்பிணிப்புண்டபேரனுக்காகி
வாணனாயிரந்தோடுணித்தருடிருமாலடியிணைவணங்குவாமனனே (௧)

தன்னுடைப்பெயரெவ்வுலகெலாமுரைப்பச்சங்கரன்முராரிபேர்தவிர்த்தே
யன்னவென்னுறுவோனமரர்கோன்முதலோரஞ்சிடவரியிலையென்றே
மின்னியமணித்தூண்மிசையறைந்ததனில்வயங்கியமீளியான்மாண்ட
பொன்னவன்சுதனும்பரமபாகவதன்புத்திரன்விரோசனனுமவுணன் (௨)

அவுணனும்விரோசனருளுமாவலிமாலிரந்திடமூன்றடியளித்த
தவனுவந்தளித்ததனயர்நூற்றுவர்க்குந்தலைவனாய்ச்சனித்திடும்வாண
னவமணிக்கடகமிலங்கியகரமோராயிரம்வயங்கநற்கயிலைச்
சிவனடிநினைந்தேயிலிங்கமைந்நூறுதினந்தொறுமருச்சனைசெய்வான் (௩)

அஞ்செழுத்தைத்தன்னெஞ்சினிலழுத்தியளப்பருமருந்தவம்புரிந்தே
விஞ்சியவாணாசுரன்களிப்பெய்தவிழுமியநீறுமெய்க்கணிந்து
பஞ்சின்மெல்லடியாளுமையிடப்பாகம்வயங்கிடப்பரவையினெழுந்த
நஞ்சினைநுகர்ந்துதிரிபுரமெரியநகைசெய்கங்காதரன்வந்தான் (௪)

தேவர்கடொழவேவிடையினின்வயங்குசிவனுயர்வாணனைநோக்கி
யீவனுன்மனதுக்கிச்சையாம்வரத்தையியம்பெனவென்றுடன்சினத்துப்
பூவினிலயனைப்படைத்தவன்பொரினுநீயுந்தன்புதல்வரோடெய்திக்
காவெனையெனவேமொழிந்திடவதற்கங்கிசைந்தரன்கயிலையிற்போனான் (௫)

இந்திரனகரியெனவிலங்கியசோணிதபுரத்திருந்துகும்பாண்ட
மந்திரியுடனுமகிழ்ந்துலகாண்டுவயங்கியவாணன்வானவர்கள்
சிந்தையிற்கலங்கியிரிந்திடப்பொருதுதிசைதொறும்புவியினைச்சுமக்குந்
தந்திகள்வெருவியுடைந்திடத்துரந்துதாரமார்கயிலையிலடைந்தான் (௬)

உமையிடப்பாகனடிமிசைவணங்கியுரைசெய்வான்வாணனென்னுடனே
சமர்பொருதிறலோரிலாமையாலென்கைதினவுறத்தரிக்கிலேனதனு
லிமையவர்வெருவக்கவந்தநின்றுடவெங்கணுங்குருதிநீர்பெருக
வமர்பொருமவரையருளெனநகைத்தேயந்தகாந்தகனிவையறைவான் (௭)

கடகரியிவுளிகனகமாரிரதங்காதியேகவந்தநின்றுட
மிடனுடையவயவர்மிடைந்தவெம்போர்களுன்னுடன்விளைத்திடுங்காலந்
துடிகைசங்கிடக்கைதுந்துமிமுழங்குசோணிதபுரத்தினிற்சிகரக்
கொடிதுணிந்தவனிமிசைவிழுந்திடுநாட்குறுகுமென்றரன்மொழிந்தனனால் (௮)

அரனிவைமொழியமகிழ்ந்திடுவாணனசுரர்கள்குழாம்புடைசூழ
விரைவினிரதமிசையினினெய்திவிளங்கியசோணிதபுரத்திற்
கிரியிவர்சிகரங்கிளர்ந்தமண்டபத்திற்கிரீடசேகரம்வயங்கிடநற்
றெரிவையர்கவரியசைத்திடமணியாற்சிறந்தசிங்காதனத்திருந்தான் (௯)

வரைநிகரெனவேவயங்குகும்பாண்டமந்திரியுடன்மகிழ்வாணன்
கரமொராயிரமுமிலங்கிடக்கலங்கள்கவினுறவிருந்துழிக்கவினூர்
சுரருலகளவாய்த்துலங்கியதுவசந்துணிந்துதன்முன்விழக்கண்டு
செருவருதினந்தான்சேர்ந்தனவென்றேசிந்தையின்மகிழ்ந்துரைசெய்வான் (௧௦)

சிவனடியிறைஞ்சியென்னுடைப்புயத்திற்றினவறச்செருச்செயவொன்று
ரவனியினெதிர்வாரருளெனவுரைப்பவதற்கரன்சோணிதபுரத்திற்
றுவசமற்றுன்முன்விழுந்திடிற்சமரந்தொடரவேவருமெனவுரைத்தான்
குவடெனநிகர்தோளுடையகும்பாண்டவுணர்திநீயென்றுகூறுவனால் (௧௧)

விடையுடைவிமலனருண்மொழிவழியின்விண்டலமிசையினினுயர்ந்த
கொடிதுணிந்திவணின்விழுந்ததுசமரங்குறுகியதறிதிகும்பாண்ட
கடகரிபரிதேர்கதமுறுமசுரரணிவகுப்பாயெனக்கழறிக்
குடையொளிதிகழத்துந்துமிமுழங்கவாணன்றன்கோயிலிற்புக்கான் (௧௨)

**வேறு** உரனுறுவாணனல்குமுடாங்கனையென்னுமங்கை
விரைபுரைபுயல்வேல்வள்ளைவிற்குமிழாம்பனந்து
கரியிருகோடுகாம்புகாந்தண்மின்கதலிநள்ளி
மரைமலரிவையைத்தாங்குமாழையின்கொம்புபோல்வாள் (௧௩)

உருவினிலெவருமொவ்வாவுடாங்கனையுவப்பினாலே
யரனுறுகயிலையெய்தியம்பிகைதனையிறைஞ்சிச்
சரியிலேழிசைகொள்வீணைதரளவெண்ணகையாளோதித்
தெரிவையர்திலகமென்னத்தினந்தொறுமகிழுநாளின் (௧௪)

செம்பொனின்மணிகளான்றுசிறந்தமாமண்டபத்தின்
வம்பவிழலங்கலுலமாழைசால்விதானமோங்க
வம்பிகையுடனேநம்பனமர்ந்திடவாணனல்குங்
கம்பெனுங்கிரிவத்தாள்வெண்கவரிகையசைத்துநின்றாள் (௧௫)

வித்துருமத்தினெடும்விளங்குமாமரகதம்போற்
சித்தசன்றன்னைக்காய்ந்தோன்சிறந்திடவிமவான்பெற்ற
வுத்தமியுடனுந்தோன்றவுடாங்கனைவிரகமுற்றே
யெத்தினத்தெனக்கோர்கொண்கன்வருவனென்றெண்ணினாளால் (௧௬)

மனமுறவருந்திவாணன்மங்கைதான்விரகமுற்ற
நினைவினையறிந்துநம்பன்றேவிசொனிகழ்த்துவாணின்
கனவினேர்குமரன்றன்னைக்காண்குவையவனையெய்தி
யிமையமேசேர்கொழுந்துகியன்னைதுவனுன்னையென்றாள் (௧௭)

கடகரியுரியைப்போர்த்தோன்காதலியிச்சொற்கூறி
விடைகொடுத்தருளலோடுமுடாங்கனைவிரைவிற்சென்று
துடிகைகாகளங்கள்சின்னமுழங்குசோணிதபுரத்திற்
கொடிககனத்திலோங்குந்தமணியக்கோயிற்புக்காள் (௧௮)

வித்துருமங்கணீலமரகதம்விளங்குதூண்கள்
பத்திசெய்திலங்குகின்றபசும்பொனின்மண்டபத்தி
னித்திலவிதானமோங்கநிகரிலாச்சேக்கைமீதி
னுத்தமவடிவின்மிக்கவுடாங்கனைதுயிலுங்காலை (௧௯)

ஓவியப்பாவைபோலவுடாங்கனைதுயிலும்போதிற்
காவிஞோர்குமரனெய்திக்கருங்குழன்மிசையிற்காவிற்
பூவினைச்சூட்டக்கண்டுபொருக்கெனவிருகையார
வாவலிற்கொங்கைமீதிலணைத்தவள்விழித்துப்பார்த்தாள் (௨௦)

தன்னெழில்வடிவுக்கொத்தகாந்தனைத்தன்கையாரக்
கன்னறேன்மொழியாளன்பாற்றழுவிக்கண்விழிக்கக்காணா
தின்னலிலழுங்கித்தூயவிருவிழியருவிசோர
வன்னமென்னடையாளாகமனனுறவறைகின்றாளால் (௨௧)

துய்யமன்மதன்றன்றந்ததோன்றலைக்கனவிலேயென்
கையினிலுறுகப்புல்லுங்காலையில்விழித்தேயெந்தன்
மெய்யினைக்கரைத்தேகண்ணேவிளங்கநின்னிடத்திற்றீட்டு
மையினைக்கரைத்துநீயீண்டழுகின்றவாறெனென்றாள் (௨௨)

சுழித்திடுங்கங்கைவேணிச்சோதிதன்குமரன்றன்னைப்
பழித்திடுமுருவினானைப்பரிந்துநானணைக்குமுன்னர்
விழித்தகண்ணிரங்குகின்றாய்விழுமியோர்தமக்குத்தீமை
யிழைத்தவரிடருறாமலிருப்பரோவென்றுசோர்ந்தாள் (௨௩)

விரைகமழ்மலர்மீதின்வயங்குமின்னிடையாடன்னை
யரிவையரணைத்துமெய்யினிமசலமடர்ந்துவீசச்
சுரிகுழன்மடவாடேற்றத்துய்யகும்பாண்டன்பாவை
தெரிவையர்திலகமன்னசித்திரலேகைசேர்ந்தாள் (௨௪)

சித்திரலேகையெய்திச்சிறந்திடும்வாணனல்குந்
தத்தையின்மொழியினாளைத்தழுவிநீதளருந்தன்மை
யெத்துயரதனால்வந்ததியம்பெனவிசைத்தலோடு
நித்திலநகையளாயவுடாங்கனைநிகழ்த்தலுற்றாள் (௨௫)

என்னுயிர்த்துணைவிகேளாயான்றுயில்கொள்கனாவிற்
கன்னலஞ்சிலையினானோகயிலையோன்குமரன்றானோ
பன்னகப்பாயலானோபகரொணாக்கவின்கொண்மெய்யன்
றுன்னியவெழிற்பூங்காவிற்றோன்றியேயென்முன்னின்றான் (௨௬)

கருமுகிலனையமெய்யன்கமலம்போலிலங்குகண்ணன்
வரையினைநிகர்த்ததோளான்மதியைநேர்வதனச்செல்வன்
றரளவெண்ணகையன்முந்நூற்றரித்திடுமுரத்தன்வானி
னிரவிநேர்கலன்கள்பூண்பான்யாவனோவறியேன்றோழி (௨௭)

வந்துமுன்னின்றுகாவின்மலரினைக்குழலிற்சூட்டிச்
சுந்தரஞ்செறிந்தமெய்யாற்றுலங்கியநகையாலெந்தன்
சிந்தையுமுயிருங்கொண்டசெல்வனையணைத்துத்தூய
விந்திரகோபமன்னவிலவிதழமிர்தின்றுண்டேன் (௨௮)

துய்யசுந்தரனையென்றன் றுணைநகிற்றடத்திற்சேர்த்திக்
கையினினிறுகப்புல்லிக்கலவியைவிளைக்குங்காலை
மெய்யெனக்கருதியேதான்விழித்திடவவனைக்காணே
னுய்யுமாறறியேன்மாதேயென்றுபின்னுரைக்கலுற்றாள் (௨௯)

துயிலினையகற்றியின்பக்கலவியைத்துரத்தித்தூய
புயலெனுமுருவினானைப்பிரித்தெந்தனுயிர்போம்வண்ண
மயலினைநிறைத்துச்சிந்தைவருந்திடவிழித்துப்பார்த்த
நயனநமுள்வினையதானானுன்செய்வதிங்கேதென்றாள் (௩0)

துயிலினிற்சொழுநன்றன்னைக்காண்பனோவென்றுதுய்ய
நயனநான்முகிழ்த்திருனுங்காண்கிலேனாரமோவுங்
கயலெனப்பதைத்தென்னுள்ளங்கலங்கிமெய்கனலதானே
னுயிரினியுடலிற்றங்காகாண்டியென்றுரைத்துச்சோர்ந்தாள் (௩௧)

உயிரிலையென்னச்சோர்ந்தவுடாங்கனைதன்னையன்னச்
செயலுறுநடையளாயசித்திரலேகைநங்கை
கயிலெடுத்தணைத்துவாசவிமசலங்கலவைகோட்டி
யயர்வினையொழித்துத்தேற்றிப்பின்னிவையறையலுற்றாள் (௩௨)

வனசமன்னுலசெண்டிக்குளுறைகுவோர்மண்ணினுள்ளோ
ரனைவரினெழில்சேர்ந்தாரையானறியாததில்லைக்
கனவிலுன்முன்னரெய்திக்கலவிசெய்தகன்றான்றன்னை
வனிதைநீகாண்டியென்னவரைந்தனள்படத்தின்மீதே (௩௩)

சித்தசனியக்கர்சித்தர்வித்தியாதரர்கடேவர்
நத்துறுகரத்தன்வானோர்நாயகனுமையாளீன்ற
வித்தகன்முதலினோரைவிளங்கிடப்படத்தினோக்கி
யித்தனைபேரில்யான்சாண்குரிசிலைக்காணேனென்றாள் (௩௪)

வேறு.

இன்னலிலாதுயர்சித்திரலேகை
நன்னிலமெய்நெறிநண்ணிடவாழு
மன்னவர்தம்மைவரைந்திடலோடு
மன்னவரன்றெனநோக்கினளன்னம் (௩௫)

துவரையின்மதனருள்சுதனெழில்பார்த்தே
குவிமுலைமீதினணைந்துயிர்கொண்டா
னிவனிவனிவனிவனிவனிவனென்றே
யுவமையின்மாதுவருந்தியுரைப்பாள் (௩௬)

கனவினிலென்னையணைத்திடுகள்வன்
வனிதையென்முன்னின்வரைந்தபடத்தி
னனைவரினும்முயராடவன்வாயா
லினியசொல்கூறிலனென்றயர்வுற்றாள் (௩௭)

மலரணைமீதுமயங்கியமாதை
யிலவிதழ்வாயொளிர்சித்திரலேகை
கலவையோடேபனிநீர்கவின்மெய்யி
னலனுறவீசலுநாரிதெளிந்தாள் (௩௮)

தேறியுடாங்கனைசித்திரலேகாய்
மாறில்வரைப்புயனாரிவன்மதனோ
நீறணிவோன்மகனோநெடுமாலோ
கூறெனவேருறுகொடியிவைசொல்வாள் (௩௯)

தேவகிதந்தருள்சீதரன்மைந்தன்
பூவுறுவாளியினோனருள்புதல்வ
னோவியநாணுமுருத்திகழ்வோனுன்
னாவியனானனிருத்தமனாமால் (௪0)

வித்துருமத்தினைவென்றிடுவாயாய்
நித்திலவாணகையாய்நிகரில்லாச்
சித்தசன்மைந்தனுரத்திடைச்சேர
வெத்தனைமாதவமெய்தினையென்றாள் (௪௧)

அஞ்சலைவாணனருள்புதல்வீநா
ணிஞ்சிகள்சூழ்துவராபதியெய்திக்
கஞ்சமலர்க்கொடிபெற்றருள்காமன்
மஞ்சனுடன்வருவேனென்றுரைத்தாள் (௪௨)

நீயயராதிருநிகரின்மடந்தாய்
மாயையின்மாயன்மகன்சுதனைக்கொண்
டேயெனுமுனமிவணெய்துவனென்னா
மீயுயர்வானின்விரைந்துபெயர்ந்தாள் (௪௩)

திகழ்கனைகிலொளிர்சித்திரலேகை
ககபதிவிசையினுமுடுகினள்கடல்சூழ்
சிகரமொடெயில்கள்சிறந்திடுதுவரை
நகரெழினோக்கினளிருநயனத்தால் (௪௪)

கடலகழாகியகவினுறுமெயில்கள்
வடவரைநிகரெனவானுறநிறையுங்
கொடியினிரவுறவேகுருமணியின்
சுடரொளியாற்பகலாகியதுவரை (௪௫)

புயலினையளவியபொழில்பொலிவுறவே
யயமிபமிரதமொடனிகமுமலிய
வெயிலவனொளிதருகலனகின்மிடையக்
கயனிகர்விழியினர்கவினிறைநகரம் (௪௬)

காசணிநகிலியர்கயல்விழியிலக
வூசலினெழிலுறவாடினரொருபால்
வாசமென்மலர்மலியிமசலமடவார்
வீசினராடவர்மேலுறவொருபால் (௪௭)

சுகனெனமறையறையறுதொழிலவர்கள்
மகமுடிவனசெய்துமகிழுவரொருபால்
நகில்கலனணிபவர்நாயகர்விரகச்
சிகியுறுமவரொடுசீறுவரொருபால் (௪௮)

இந்துவின்வதனியரிழைகண்மெய்யிலகக்
கந்துகநிலனறையுங்கவினொருபாற்
றந்திகளிவுளிகடமணியவிரத
முந்திடுகுமரர்கண்மோகமதொருபால் (௪௯)

மாதவர்விரகமுறத்தணிமடவார்
கீதநல்லோசைகிளத்துவரொருபால்
காதலினாலுயர்கணவனிடைக்கே
தூதினையேவிடுதோகையரொருபால் (௫0)

கோடுகடாரைகள்கொம்புகள்வாரான்
மூடியபேரிமுழங்குவவொருபா
லூடியமாதர்கள்விரசமுளுறவே
கூடுவராற்பிரிகொண்கரையொருபால் (௫௧)

இவ்வெழிலுறுதுவராபதியிலகச்
செவ்விதழ்வாயினள்சித்திரலேகை
நவ்வியொண்விழியினிநோக்கியிந்நகர்போ
லவ்வியமகல்புரியிலையெனவறைவாள் (௫௨)

ஏசறுதுவரையினெழிலினைநோக்கி
வாசவனகரளகாபுரிமலரோ
னேசகல்பதிமுதலாநகரெல்லா
மாசுறுமெனுமுரைகூறிமகிழ்ந்தாள் (௫௩)

இனையனகூறியசித்திரலேகை
வினையறுதுவரையினெய்திடும்வேலை
தினகரனவிர்குடதிசையினின்மறைய
நனியிருள்பரவினநாலிருதிசையும் (௫௪)

வேறு. பகலவன்குடதிசைப்பரவைமூழ்கவே
யுகவிறுதியினடருமையினாயகன்
புகரிபவுரிபுரிமூடப்போர்த்தபோற்
ககனமெண்டிசையெலாம்பாய்ந்தகங்குலே (௫௫)

சித்திரலேகையின்குழலின்சேலினை
வைத்தனவயங்குகண்மையுமற்றவள்
குத்திரமனத்தினின்சொன்கையேலவே
யெத்திசைதொறும்பரந்தெழுந்தகங்குலே (௫௬)

அங்கண்மாவவனியிற்றிமிரமான்றுற
வெங்கணுந்தாரகையாரம்பூண்டெழூஉக்
கங்குலினுரத்தின்வெண்கலவைசேர்த்தபோல்
பொங்கிளந்திங்கள்கங்குலிற்பொலிந்ததே (௫௭)

அவனியெண்டிசையெலாம்பிறைநிலாவுற
வுவமையின்மதன்சுதனுறையுங்கோயிலிற்
குவிமுலைச்சித்திரலேகையாங்கொடி
துவசமெய்மறைத்திடத்தோற்றமாற்றினள் (௫௮)

மறைந்தவளிருத்தலுமன்மதன்சுத
னறந்தவமுதவச்சுதன்றன்பேரவை
யுறைந்தரியேவிடவொளிருந்தேர்மிசை
நிறைந்திடுங்கரிபரிநெருக்கவெய்தினன் (௫௯)

பல்லியங்கறங்கிடப்படைஞர்சூழ்ந்திட
வல்லிறமணிவிளக்கங்கையேந்தியே
மெல்லியர்குழாமுறக்கவரிவீசிட
வொல்லையினடைந்தனன்வேள்சுதன் (௬0)

அரசர்தங்குமரர்களளப்பிலாருறச்
சரியிலாக்கொடிகள்சாமரைகளோங்கவே
தெரிவையர்யாவருஞ்செந்தீபமேந்திடப்
புரவலர்துதித்திடக்கோயில்புக்கனன் (௬௧)

ஓவியந்தனைப்பழித்தொளிருருக்குமிப்
பாவைசென்றெதிர்ந்தடிபணியவேள்சுதன்
றேவிதன்னுடன்மணிசிறந்தமண்டப
மேவியங்கிருந்தனன்கவரிவீசவே (௬௨)

மையமர்நயநியாமனைவிதன்னுடன்
றுய்யபொற்கலத்தினிற்றுலங்குமோதன
நெய்யுறுமறுசுவையருந்திநேரிலாக்
கையிமசலத்தினிற்கழுவினானரோ (௬௩)

கலன்கண்மெய்வயங்கிடக்கலவைபூசியே
யலங்கலங்கிருவருஞ்சூடியானனந்
துலங்கவெள்ளடையினையருந்தித்தூயபொன்
னிலங்கியமலரணையெய்தினாரரோ (௬௪)

உருக்குமியுளத்தினையுருக்கிக்காமநூற்
பெருக்கநற்கலவைகள்பிறழுங்கொங்கையை
நெருக்கியேயுரத்திடையணைத்துநேரிலா
முருக்கிதழதரநீர்முழுதுமுண்டனன் (௬௫)

பரிபுரமரற்றிடப்பசும்பொனார்வளை
கரமிசையொலித்திடக்கலன்கண்மின்னவே
யரியுறுமலங்கல்சேரளகபாரமுஞ்
சரியநற்கொழுநனைத்தழுவினாளரோ (௬௬)

அயில்விழியிலங்கிடவானனங்களின்
வெயர்வுறச்சுரதநூல்விளைத்துத்தீர்ந்தபின்
குயின்மொழியுருக்குமியுடனுங்கொற்றவ
னியல்புறத்துயின்றெழிலிலங்குமெல்லையின் (௬௭)

காவிசேர்விழியுருக்குமியைக்காமன்சே
யாதலினணைக்கவேளமரொழிந்துவெண்
பூவலரிருமுகப்புங்கவந்தனை
யாவருமுண்மறைத்தபோலகன்றவம்பிறை (௬௮)

திணிநிசியுறவிளந்திங்களேகமேல்
லணைமிசையணங்கினையணைத்துக்கண்டுயி
லிணையிலாக்குமரன்றன்னெழிலையெய்தியே
கணைவிழிச்சித்திரலேகைகண்டனள் (௬௯)

வேழமாக்கயத்தினுளழைக்கமேவிய
வாழியான்மகன்சுதனழகைநோக்கியென்
னூழிதானிவன்புயந்தோய்கிலாதுயிர்
வாழ்கிலாளென்றுதன்மனத்தினெண்ணினாள் (௭௦)

மருளுறுமந்திரமாயைதன்னினா
லுருவுடையுருக்குமிதன்னையோர்கணத்
திருகையினெடுத்திருநிலத்தினிட்டனள்
சுரிகுழலுடாங்கனைதுயரைநீக்குவாள் (௭௧)

மாயையால்வந்தபேயுயிரைமாய்த்தவன்
சேயருள்புதல்வனைச்சிறந்தமாமணித்
தூயபொற்கட்டிலோடெடுத்துத்தோள்சுமந்
தேயெனுமுன்னர்வான்மிசையினேகினாள் (௭௨)

மாரவேள்சுதன்றனைமாழைக்கட்டிலின்
காருறுககனமீக்கரத்தினேந்தியே
சீருறுசோணிதபுரத்திற்சேர்ந்திட
வேருறுபயோதரியெய்தும்வேலையின் (எங)

சித்திரலேகையாள்சிறந்தவேளருள்
புத்திரன்றனைக்கொடுவருவன்போயெனா
யத்திசூடுவரையினணுகிமீள்வமுன்
னித்திலநகையுடைநிகழ்த்துவாளரோ (எச)

துயிலிடையெய்தியென்றுணைமென்கொங்கையின்
புயலெனவணைந்தியான்விழிக்கப்போயவன்
மயலினையளித்தெனைவருத்தஞ்செய்தனன்
கயலுறுதுவசவேள்கணைகள்பெய்யவே (எரு)

சிந்தையிற்களிப்புறக்கனவிற்சேர்ந்துவெண்
மைந்தன்யான்விழித்திடமறைந்தான்னெழிற்
றந்தையெய்மலர்க்கணைதத்தபுண்வழி
யிந்துவுஞ்சுடும்படியியற்றினனென்றாள் (எசு)

**வேறு.** கனவினென்னைமயக்குகள்வனையின்றுகிட்டிசையுறுகடற்
றினகரன்வருமுன்னமேகொடுவருவனென்றுரைசெப்பிய
வனிதைபோயினம்வந்திலாளெனமதிமயங்குமுடாங்கனை
நினைவழிந்தெழுவிரகவேதனைநிறையவேயயர்வேலையின் (எஎ)

வனசமன்படைமேகநாதன்விடுப்பமாதசரதன்மக
னனுசனோடனைவோருமாருதிதந்தமால்வரையவுடதந்
தனையளாவியவாசமேவரவுய்ந்தபோலனிருத்தனு
மனகன்மேனியின்வாசம்வீசவயர்ந்தவாயிழைதேறினாள் (எஅ)

வாசுதேவனருட்சுதன்மகன்மெய்யின்வாசம்வந்துமேல்
வீசவேயுடையென்னுமங்கைதெளிந்துவிண்ணிடைநோக்குமுன்
னேசிலாவனிருத்தமன்றனையணையின்மீதுறவேந்தியே
மாசிலாதமடந்தைசித்திரலேகையன்புடன்வந்தனள் (எகூ)

வந்துயாமணிமண்டபத்தினின்மாழைவிஞ்சியமஞ்சமீ
விந்தைமாமகனருள்குமாரனைவைத்தசித்திரலேகைமின்
னிந்துநேர்வதனத்துடாங்கனைதன்னையின்பமுறத்தழீஇச்
சிந்தைவெந்துயர்தீரவேயணைதிதில்கொண்கனையென்றனள் (அ0)

துணைவிகூறமகிழ்ந்துடாங்கனைதூயகட்டிலின்மலருறு
மணைமீதனிருத்தமன்றுயிலழகைநோக்கியளப்பிலாப்
பிணியைநீக்குமருந்துபெற்றவர்போலவன்புபெருத்திட
விணையிலாக்கமலங்கணுணவிலங்குதாளினிறைஞ்சினாள் (அக)

களிகொள்சிந்தையுடாங்கனைத்திருசணவன்மெல்லடியிணையினை
வளிகொடன்கவினுறுகவான்மிசைவைத்துவந்துசிறந்திடுந்
துளைகொணித்திலவடமசைந்துதுலங்குகொங்கையிலிலங்கவே
வளைகறங்கிடயிருகரங்கொடுவருடியேமகிழ்வேலையின் (அஉ)

தூயமாதிருவடிபிடித்திடுமெல்லையிற்றுயினீங்கியே
பாயன்மீதினுணர்ந்துவானனிருத்தமன்பரவைக்குளின்
மாயனென்னவெழுந்தபோதினின்வாணனல்குமின்னேகவே
நேயமோடுமுன்னின்றசித்திரலேகையோடுநிகழ்த்துவான் (அங)

இந்தமாபுரிதுவரைமாநகரன்றெல்லீர்களுமெமரலீர்
கந்தமார்குழலாளுருக்குமிதனையொழித்தொளிர்கட்டின்மேற்
சிந்துசூழ்நகரொழியவேயிருள்செறியமல்கியகங்குலிற்
றந்தவாறிதுவென்கொலென்றுதடக்கைதாக்கிநகைத்தனன் (௮௪)

அங்கைதாக்கிநகைத்தவீரியனடியின்மீதினிறைஞ்சியே
சிங்கலில்லெழிலுடையசித்திரலேகைநின்றிவைசெப்புவா
ளெங்களூரிதுசோணிதாபுரமிறைவன்வாணனவன்பெறு
நங்கைபேருடையென்பண்மற்றவட்டுணைவிநானெனநவிலுவாள் (௮௫)

குனிவிலாமெனுநுதலியானவுடாங்கனைக்கொடிதுயிலுறக்
கனவினிற்கடிகாவினுன்னெழில்கண்டணைத்துவிழிக்கநீ
துனியிவட்குறமேவயகன்றனைதூசுசோரமெலிந்துமெய்
யினலுறக்கனலுருகவாடினளென்றுபின்னருமறைகுவாள் (௮௬)

வேறு. உன்மயலுறவேயோதனநுகராளோதிலள்கிளியோடு
மன்மதனடலால்வாடினளாடாள்வாவியிலுறுநாரம்
நன்மலர்சூடாளூசலிருடாளுணமுமணியாண்மெய்
பொன்மயமாகுளிவள்படுதுனியைப்புகலவுமரிதையா (௮௭)

சந்தினையணியிற்செந்தழலென்பாடமணியவளைசோர
லிந்துவையுயருமென்றெனமெலிவாளெரியுறுமெழுகாகு
ளந்தகனுருவாமிவையெனவைவாளந்தியையுறநோக்கிச்
சிந்துகிளொலியாற்சிந்தையினயர்வாடினியுரைசெயலாமோ (௮௮)

அன்றிலினிசையாலயருவடுயிலாளருவிகொணயநந்தா
டென்றன்மெய்யுறவேசீறுவணளினத்திருவழகொழிவாளா
மொன்றியமணிநாவோசையின்மெலிவாளுயரரிபெயர்கொண்டார்
கொன்றையையணிவான்பெயருறக்குழையுங்கொடியிடைதுயரீதால் (௮௯)

உடலிடையுயிர்தானிலையெனவயருமடையினண்முனர்யானோர்
படமிசையெழில்சேர்பவர்களைவரையப்பார்த்தவளுனைநோக்கிக்
கடிகமழ்பொழிலிற்கனவிடையணையுங்காவலனிவனென்றே
துடியிடைமடவாள்படுதுனியொருவத்துவரையின்யான்வந்தேன் (௯0)

துனியறுதுவரைப்பதியினிலெய்திச்சோதிசெய்யெழிலாருன்
மனையவடனைமண்மிசையினின்வைத்தேமலரணைதனையேந்தி
யுனையுயர்வானிற்கொடுகடிதிவணுற்றனனுடைகாணுங்
கனவினிலிவளைமயல்செயுமுதல்வாவென்றனள்கவின்மிக்காள் (௯௧)

இனியவிவ்வுரையைச்சித்திரலேகைகூறுமுன்னெழின்மிக்க
வனிதையர்திலகமாயவள்வாணன்மகண்மலர்மகள்போலத்
தினகரனவிர்சேர்மணியுறுகலன்மெய்திகழ்வுறமுனரெய்தி
யனமெனுநடையாளுவகையினனிருத்தனையடிதொழுதாளால் (௯௨)

வந்தடிதொழுதேநின்றிடுவாணன்மகளெழிலினைநோக்கி
யிந்திரைபுதல்வனருளியவனிருத்தமன்மயலெழலோடுரு
சந்திரவதனச்சித்திரலேகைதமருடன்மறைபோதிற்
சுந்தரியுடனேமலரணைமிசையிற்றுயவன்மகிழ்வுற்றான் (௯௩)

கலவைகளுந்திரக்கரவளைகையிற்கலகலகலவென்றே
யொலியுறநன்னூபுரமிருதாளினேலமிடக்கோல
மலருறுமணசங்கனமெனவலையமதிமுகம்வெயர்வாகக்
கல்லூறாகிறன்பதியுமுறவேகலவியைச்செய்தனளன்றே (௯௪)

அயில்விழியிலகச்சுவைதருமமிர்தத்தனமிருவருமுண்டே
குயின்மொழிபதறக்கொடியிடைதுவளக்கொங்கைகள்புளகிப்பக்
கையினகமுடலிற்கவினுறவெழுதிக்கலவிசெய்மதனூலி
னியல்புறவனிருத்தமனுடையுடனேயெழிலுறமகிழ்வுற்றான் (௯௫)

இலகியவிருவோருடலொருமெய்போலிறுகிடவனுராகச்
சலதியின்மூழ்கிக்கலவிகடணியத்தாமெழிலுறவேநற்
கலவைகள்கமழக்கவினுறுமணைமேற்கண்டுயிலுறுவோரை
நலனுறுமனையிற்சோதனையிடுநன்னாரியர்பலர்கண்டார் (௯௬)

வடிவுடையவனோடுடைவிழிதுயிலக்கண்டிடுமடநல்லார்
கடிதினில்வாணாசுரனிடையெய்திக்கவினுறுமனிதன்றான்
மிடலுடையிறைவாநீயருண்மகளாமெல்லியலுடன்மேவிக்
கடிகமழ்மலரினணைமிசைதுயிலக்கண்டனம்யாமென்றார் (௯௭)

பிறையெனுநுதலாரிவையினைமொழியப்பிஞ்ஞகன்முனிவோடு
மிறுதியின்வருவபோலெழும்வாணனசுரர்கடனையேவி
மறுவிலென்மகடன்மனைதனின்மேவுமனிதனைநீர்பற்றிச்
சிறையினிலிடுமினென்றுரைசெய்தான்றேவர்கடிரளஞ்ச (௯௮)

வெம்பியவாணனிவ்வுரைகூறவிடமெனவடர்வீரர்
தும்பிகளியுளிதேர்நிரைநன்னத்துந்துமியுயர்பாண்டில்
கும்பிகைதிமிலைசம்புலிதுடிகைகாகளமொடுகோடு
பம்பைகளுருமிமுரசிவைவிம்மச்சென்றனர்படிமீதின் (௯௯)

விறலுடையசுரரெரியுறுநயனர்விடையவன்முனிவொப்பார்
பிறையெயிறிலகப்பலபடைகொண்டேபெருவரையினமேபோற்
கறையடியடரத்தேர்மிசையுயருங்கதலிகைநிறைவாகத்
திறலுடையனிருத்தமனுறைமனையிற்சென்றனர்பெரிதார்த்தே (௧௦௦)

குயின்மொழியினளாமுடையிருகொங்கைக்கோடுரமிசைபூணத்
துயிலுறுமனிருத்தமனசுரேசரார்த்திடுதொனிகேளாக்
கயனிகர்விழியாளுடனுணர்வுற்றுக்கவினுறுபொற்கச்சை
யியல்புறவரையினணிந்தெழுசியமெனவவனெழுபோதின் (௧௦௧)

வரையினைநிகராமசுரர்கள்செயலிங்கடுவெனவரநோக்கிப்
பருவரலுடனேயிருநயனங்கள்பயமுறவுழுவாளைத்
தெருமரலொழிநீயிவர்செருவென்றுசேருவனெனவோதி
யரிவையையிருகையுறமெய்யணைத்தானச்சுதன்மகன்மைந்தன் (௧௦௨)

உடையெனுமினைநீதெருமரலொழுதியென்றினிதுரைசெய்து
மிடலுடையனிருத்தமனுயர்முழையைவிட்டெதிராரியொத்தே
கடிதினின்மனைவாயிலினிடையெய்தியவனொருகதைகொண்டே
வடவரைநிகராமசுரர்கள்வெருவவந்தெதிரார்த்தானால் (௧௦௩)

வந்தெதிரார்த்தேநின்றருடிருமான்மகன்மகன்றிறநோக்கித்
தந்திகளியுளிதமனியவிரதந்தாரணிநிறைவாகச்
சிந்தினர்கணைவேல்வாண்மழுவுடன்வெந்தீயுறுமயில்விட்டே
முந்தினரசுரர்துந்துமிமுரசமுழங்கிடவளையூதி (௧௦௪)

**வேறு.**

அரிமைந்தனருள்சுதன்மேலசுர
ரிரையுங்கடல்போலவெதிர்ந்திடவே
சுரரிந்திரனெண்கணன்றாயதவர்
செருவின்றிறல்சேர்ந்துறநோக்கினரால் (௧௦௫)

சினருத்திரர்வந்ததிரட்சியென
வனிருத்தமன்மேலடரும்மசுர
ரினரத்திரமெய்திடவெய்தினவா
கனவத்திமஞேடுகலங்கினரால் (கoரு)

எதிர்வந்துதயித்தியரெய்கிடமா
பதிமைந்தனருட்டனயன்பரியக்
கதைகொண்டுகணத்தினிடைப்படையை
வதைசெய்தனன்மாகரிவீழ்ந்திடவே (கoஎ)

கரிபட்டனவீரர்கள்கால்களொடிந்
தரையபற்றுவிழுந்தன ரஞ்சவிலாப்
பரிபட்டனதேருறுபாகர்சடஞ்
சிரமற்றனமூளைகள்சிந்திடவே (கoஅ)

ஏறேறிறையஞ்சவெதிர்த்தவர்கை
வேருயுடல்விண்டுவிழுந்திடவே
பாருடநிலம்பரவுங்குருதி
யாருமெனவோடவடித்தனனுல் (கoகூ)

கொடியற்றுவிழுந்தனகோடசமு
மடியற்றுவிழுந்திடவேயசுரர்
முடியற்றுமடிந்தனமூளைதிணங்
குடர்பற்றியருந்தினகூகையினம் (ககo)

உடலற்றனவும்பல்களொடிரதம்
பொடிபட்டனவீரர்புரண்டிடவே
குடரற்றுமடிந்தனுமாகுருதி
கடலுற்றதுகூளிகளித்திடவே (ககக)

வேறு. வேலாளர்வாளினர்கள்வில்லினர்கள்பாய்மா
தோலாழிசூழிரதமோடுதுகளாகக்
காலாளதாகியுயருங்கதையிஞலே
யாலாலமென்னமதன்மாமகனறைந்தான் (ககஉ)

பீடுடையதேர்நிறைபிளந்துநிலன்வீழக்
கோடகமொடேகரிகுலந்துமடிவெய்த
வீடினர்கள்வாளவுணர்வீரியகவந்த
மாடியதுசெங்குருதியாறெனமடுப்ப (ககங)

மாதவனருள்சுதன்மகன்கதையிஞலே
மோதுதலும்வீரர்கண்முடித்தலைசிதைந்தே
பூதலமிசைககரிகள்பொன்றவசுரேசர்
வீதிதொறுமோடினர்கள்விண்ணவர்களாட (ககச)

வேளருள்சுதன்கதைகோடேவிரைவின்மோத
மூளுமதமீளிமுடுகிப்படியினெய்த
ஞாளியினமோடிமெய்நடுங்குவதுபோல
வாளவுணர்பாறினர்கள்வானவர்நகைப்ப (ககரு)

யாதவனருள்சுதன்மகன்கதைகொடெற்ற
வீதிதொறும்வேலையெனவெங்குருதிவெள்ளம்
போதவசுரேசர்திரள்பொன்றுசெயல்கண்டே
திதுமுயல்வாணனுயர்தேர்மிசையுறுத்தான் (ககசு)

கலன்கணிறைமெய்கவினுறக்கவிகையோங்க
வலங்கொள்கரமாயிரம்வயங்கியிடவாண
னிலங்குமகுடங்கிரியினென்றெழுவதொத்தே
துலங்கவசுரேசர்திரமுன்னவெதிர்வந்தான் (கசள)

காகளமுழங்கவுயர்பேரிகள்கறங்க
நாகமெணிலாதவடநாகமெனமேவ
மாகமுறவேகதலிகைத்திரள்வயங்க
வேகமொடுசென்றனன்விண்ணோர்கண்மிகவஞ்ச (கசஅ)

தாவுபரிதேர்நிரைகள்சாரவெதிரில்லா
மாவலவனுருமிரதத்தினுயர்வாணன்
கோவியர்களுதன்மகனல்கியகுமாரன்
மேவியொளிர்வீதியின்மிடைந்துறவளைந்தான் (கசகூ)

கடியவசுரேசர்திரளைக்கதைகொடெற்றி
நொடியின்முன்வதைத்தவனிருத்தமனைநோக்கி
வடிவுடையுடாங்கணைமகிழ்ச்சியுறுபோதின்
மிடலுடையவாணன்வரவேயுளமெலிந்தார் (கஉ0)

மிடலுடையவாணன்வரவேளருள்குமாரன்
வடமிசையினுலுவிழுதின்குழுவைமானுந்
தடவரையினுலுமுயர்சர்ப்பவினமோவெங்
கடியவசுரன்பணிசெய்கைகளொநக்கான் (கஉக)

நகைத்தெதிர்நடந்தவனிருத்தமனைநண்ணிப்
பகைத்திருமருங்கசுரர்பல்கணைகள்விட்டே
மகத்துரகமோடிபம்வளைக்கவுயர்வானோர்
திகைத்திடவழற்கணைகள்சிந்தினர்களெங்கும் (கஉஉ)

விக்கிரமவல்லசுரர்வாளிகள்விடுத்தே
திக்கினைமறைப்பவுயர்காமனருள்செம்மல்
பொக்கமுறவெய்துழுவைபோலவுயர்தண்டா
லிக்கிறமிதிக்குமிபமென்னவதைசெய்தான் (கஉங)

தேரறவடித்திவுளிகண்சிதறமோதிக்
கார்கிறவடற்கரிகள்காலுகளொடிந்தே
பாரின்வரைபோலுடல்பதைத்துவிழவேபோர்
மாரன்மகன்வன்கதையினெற்றினன்வலத்தால் (கஉச)

சிரமுடையவேகடிதின்மாள்வர்சிலர்காலோ
டுரமொடியவேவரைகள்போலவுருள்வார்வண்
கரமொடியவேசிலர்கள்வீழ்ந்தனர்கலங்கிக்
குரமொடியவேகுரகதங்கள்குலைவுற்ற (கஉரு)

அடர்ந்துகதைசுற்றியனிருத்தமனடிப்ப
மிடைந்தகரிதேர்பரிகள்வீழவசுரேசர்
கடைந்தகடன்மீனெனநடுங்கினர்கலங்கி
யுடைந்திடவெகுண்டியரும்வாணனெதிருற்றான் (கஉசு)

வாணனெதிருற்றுவரிவெஞ்சிலைவளைத்துப்
பாணமழைதூவியிடவேயுயர்பதத்தாற்
சேணுறவளர்ந்ததிருமால்சுதனருள்சேய்
தூணினைநிகர்த்தகதைசுற்றவவையற்ற (கஉஎ)

மாலின்மகன்மைந்தனுயர்வன்கதைசுழற்றி
யாலமெனுமாசுகமனைத்தையுமுறிக்கக்
காலனெனவாணன்றூல்வெங்கணைகடாவி
வேலயின்முசுண்டிமழுவீசினனனந்தம் (கசஅ)

நூறுதசமானகரவாணனெடியின்முற்
சீறிவிடுவேலயில்சிலீமுகமனைத்து
மாறிலரிசேய்புதல்வன்மாற்றியொருதண்டா
னூறியசுரேசரைநொறுக்கினனுருக்கி (கசகூ)

எய்தகணைமாரிகளெறிந்தபடையெல்லா
நொய்தினனிருத்தமனெறுச்கியநுகண்டே
கைதவமுறுங்கொடியகாலனிகர்வாண
னெய்யழலினூற்றனனெருப்பெழவிழித்தான் (கரு0)

அட்டதிசைமுற்றவுமடர்த்ததிறல்வாணன்
சிட்டர்துதிசெய்யரிகுமாரனருள்சேய்மேன்
மட்டவிழும்வேணியனளித்தவடிவேலை
விட்டனனயன்றனெடுவிண்ணவர்களஞ்ச (கருக)

கண்டையொடுதண்டைகள்கறங்கவனல்சிந்த
வண்டரயனிந்திரனருந்தவர்களஞ்ச
வெண்டிசையினுற்றகரியும்வெருவவென்றின்
மண்டலநடுங்கவடிவேலெதிரின்வந்த (கருஉ)

சுற்றுமனல்விஞ்சவருதூயவடிவேலைப்
பற்றியனிருத்தமனெறிந்தபதகன்மே
னற்றவர்துதித்திடவிடுத்திடலுநண்ணி
யுற்றவுயர்வாணனுரமீதிமுரகம்போல் (கருங)

வரையின்மிசைவீழருவிபோலவுயர்வாண
னுரமிசையின்வீழ்குருதியோடவுளைவுற்றே
யரிதிகழவோடிரதமீதிடையயர்ந்தான்
சுரரிரதிமைந்தன்மிசைதூவினர்கள்பொற்பூ (கருச)

வேறு. ஊறுசெம்புனலொழுகிடவயர்ந்திடுவாணன்
றேறியேயனிருத்தமன்றனைக்கண்டுசீறி
மாறில்வையமேல்விடுத்தலும்வல்லையிற்றடுத்துக்
கூறினனுயர்மந்திரியாயகும்பாண்டன் (கருரு)

சினமிலன்விழிசிவக்கிலன்சிருறும்வீழிக்
கனிநிகர்த்தவாய்மடித்திலன்வெயர்வுமெய்காணு
னனிகமெல்லவும்வதைத்தனையருப்பமாய்ப்பொருவான்
மனிதனென்றுநீமனங்கொளேல்வாணவென்றுரைப்பான் (கருசா)

கையின்வில்லிலனீயெயுங்காளமாமுகில்போ
லெய்யும்வாளிகளனைத்தையுமெழுவினுன்மாற்றி
யையநீயெறிவேலையுன்னுகத்தினழுத்தித்
துய்யவெண்ணிலாவெனநகைதுலங்கிடநின்றான் (கருஎ)

ஆதலாலிவனேர்பொரவமைதியேலிவனிற்
சாதறிண்ணம்நீமறைதியாலென்றுரைசாற்றப்
பீதிகொண்டுயர்வாணன்வானகத்தினிற்பெயர்ந்தான்
சீதரன்மகன்சேயினைப்புகழ்ந்தனர்தேவர் (கருஅ)

உதிரமார்பினும்வாயினுமொழுகிடவாண
னெதிர்நிலாதுபோயொளித்தலும்யாதவகுமாரன்
கதிர்மணிக்கலன்கவினுறக்கைகொட்டிநகைத்தான்
முதிரும்ஞானமாமுனிவர்களாசிகண்மொழிந்தார் (௧௩௯)

மேகமீதின்மறைந்திடுவிடநிகரசுர
னேகபாசத்தைவிடுத்தலுநற்றவர்நடுங்கச்
சாகரந்தனைக்கடைந்தமால்சுதனருடனைய
னேகந்தோள்ரண்டழுந்துறச்சுற்றியதரவம் (௧௪0)

அரவினானலனிருத்தமன்பிணிப்புணக்கலங்கி
யிருகண்மீதினிற்புடைத்துடாங்கனைமிகவிரங்கச்
சுரர்நடுங்கியேதுயரமுற்றிடவுயர்வாணன்
றரையினெய்தினான்றானவர்பெரிதுவந்தார்ப்ப (௧௪௧)

கறைமிடற்றினன்வரத்தினாற்களித்திடுவாணன்
பிறையெயிற்றழலுமிழராப்படையினிற்பிணித்தே
மறுவிலாவனிருத்தமன்றனைச்சிறைவைத்தான்
றிறன்மிகுத்திடுமசுரர்கள்சேனையோடார்ப்ப (௧௪௨)

அரவின்வேள்சுதன்பிணிப்புணக்கண்டிவையறைவான்
சுரரெண்ணாரதன்றுவரையிற்சென்றிடும்வேலை
யிரவிற்கொண்கனைக்காண்கிலாதெழுந்துநொந்திரங்கி
யுருகுநேரிடையுருக்குமிசெயலினையுரைப்பாம் (௧௪௩)

வேறு. சித்திரலேகையென்பாள்சித்தசனருளுமைந்த
னித்திரையுறவேயெய்திநிசியினிற்சேக்கையோடுங்
கைத்தலமிசையினேந்திக்ககனமீதேகப்பின்ன
ருத்தமவடிவின்மிக்கவுருக்குமிவிழித்துப்பார்த்தாள் (௧௪௪)

கணவனையணையினோடுங்காண்கிலாண்மருண்டுநோக்கிப்
பிணைவிழிநிறையத்தோயம்பெருகிடவிதலையெய்தி
யுணர்விலையென்னச்சோர்ந்தேயுறுதுனியுளத்தைத்தீய்க்க
மணமலிகுழலிபின்னும்வாய்திறந்தரற்றலுற்றாள் (௧௪௫)

கருங்கடன்முகில்போன்மேனிகவினுறுங்கணவன்றன்னைப்
பிரிந்துமென்னுயிர்போகாதேபேதையேனன்புளார்போ
லரந்தையுற்றிரங்குகின்றேனழகிதென்கற்பென்றுள்ளம்
வருந்தியேயரற்றலோடுமடந்தையர்பலருங்கேட்டார் (௧௪௬)

உருக்குமியரற்றுமோசைகேட்டவொண்டொடியாரெல்லாம்
பொருக்கெனவெய்திவேடன்புதல்வனைக்காணாராகி
யரக்கனலுற்றதென்னவாகுலமுற்றெல்லோரு
மிரக்கமுற்றழுதவோசையாவருங்கேட்டாரன்றே (௧௪௭)

அரிதனயன்றன்மைந்தன்கோயிலினரற்றல்கேட்டே
யிரதிவந்தெய்திச்சேயைக்காண்கிலாதிரங்கிக்கண்ணிற்
கரதலமதனாலெற்றிக்கங்குலினழுதவோசை
புரிதனிலுறைவோர்கேட்டுப்பொருக்கெனவெழுந்தாரன்றே (௧௪௮)

மாயவனுரத்திற்கொங்கையழுந்துறமலர்க்கையார
நேயமோடணைத்துத்தீபநிரையிருமருங்கிற்றோன்றத்
தூயபொன்னமளிமீதிற்றுயில்கொளும்மலரின்றோகை
யாயிழைமார்களெல்லாமரற்றியவோசைகேட்டாள் (௧௪௯)

தன்னுடைக்குமரன்பெற்றதனயன்றன்கோயின்மேவி
யன்னமென்னடையினாண்டவன்றனைக்காண்கிலாளா
யின்னல்வந்தெய்தக்கண்ணீரிருநிலமிசையினோடே
வன்னியின்மெழுகுபோலவுருகினள்வயிற்றினொற்றி (௧௫0)

உருக்குமிதன்னைக்கையாலணைத்துளம்வாடிநொந்து
மருக்குழன்மடவாயுந்தன்மகனெங்குற்றானென்ன
விரக்கமுற்றிடவேதூயவிரேவதியரிதன்மாதா
முருக்கிதழ்வாயினோடரற்றியேமொய்த்துநைந்தார் (௧௫௧)

குண்டினபுரிக்கோன்பெற்றகோதையென்மகன்றன்மைந்தா
புண்டரீகக்கண்செவ்வாய்பொலிவுறுவடிவாயுன்னைக்
கொண்டகன்றனர்கள்யாவர்கொடியவல்லசுரர்தாமோ
வண்டர்நாயகனுக்கெவ்வாறறைவனென்றேகும்வேலை (௧௫௨)

சரண்மகன்கோயிறன்னிற்சங்குலினரற்றக்கேட்டு
விரைவினிலெழுந்துதூயவுருப்பிணிமேவவேதி
ரரியனிருத்தமன்சோணிதபுரத்தமர்ந்ததெல்லாந்
திருவுளத்துணர்ந்துமொன்றுந்தெரிகிலான்போலநின்றான் (௧௫௩)

தீவிகைமாதரேந்தச்சீதரனிற்கும்வேலை
யோவியமுயிர்பெற்றென்னவுருப்பிணியொல்லையெய்தித்
தேவவுன்குமரன்சேயைக்காண்கிலேனென்றுசெப்பி
யாவியும்பதைப்பத்துய்யதாளின்வீழ்ந்தரற்றினாளால் (௧௫௪)

இருகணீர்நிலத்தினோடேவிறைஞ்சியதேவிதன்னை
யரியிருகையினாரவெடுத்தணைத்தன்னமேயுன்
றிருமகனருளுமைந்தனுருவினைநத்தித்தீதி
லரிவையரிடத்திற்கொண்டுபோயினராகுமென்றான் (௧௫௫)

மண்ணின்மேலெட்டுத்திக்கின்வலியுடையசுரரேனில்
விண்ணின்மேற்கரந்துகொண்டுமேவினரெனினும்பாலே
நண்ணியுன்மகன்சேய்தன்னைக்கொணர்குவனென்றுநாரி
கண்ணினீர்துடைத்துத்தேனேகலங்கலையென்றுசொன்னான் (௧௫௬)

தேவிவெந்துயரமாற்றியிருத்திநீயென்றுசெப்பிக்
காவியங்கண்ணார்தீபநிரையினைக்கையினேந்தக்
கோவியர்துகிலைக்கொண்டான்கோபுரவாயிலெய்த
மாவணிகரிதேர்துன்னமன்னவர்மிடைந்தார்மாதோ (௧௫௭)

சாத்தகிமதனன்சாம்பன்றுலகேதனமன்குந்தி
மூத்தவனவன்றன்மாமன்முதலினோர்முன்னாள்வேழங்
காத்தவனருகிற்சென்றுசுதமுறமேனிவேர்ப்ப
நேத்திரஞ்சிவப்பச்சீறிநின்றிவைநிகழ்த்தினாரால் (௧௫௮)

மானவனருளுமைந்தன்மகன்றனைக்கொண்டுபோனார்
தானவரெனினும்வானோர்தலைவன்றானெனினுமுன்னா
ளானையினுரியைப்போர்த்தானெனினுமாண்டமரின்வென்றே
யீனமில்வேடன்சேயைக்கொணருவமேகியென்றார் (௧௫௯)

அரசர்களறைதலோடுமச்சுதனஃதேயென்ன
முரசுதுந்துமிகள்கோடுமுழங்கிடவணிசவீட்டங்
கரைசெயாவுததிபோலக்காசினியிடத்தின்வானின்
வரைசெறிபழுவமெண்டிக்கினையெலாம்வளைந்துசூழ்ந்தார் (௧௬0)

வேறு. பொறியுகுவிழியினரொன்னார்புரமெரிசெயுமிறைநிகர்வார்
கறையடிபுரவிகள்விடுவார்கதமுறுமனதினராஞ்சா
ரிறுதியினழலெனவெழுவாரிடியெனவெதிர்தருகுரலார்
செறிகளையடையுமினொன்ரூர்நிலமிசைநிருபர்கண்மிடைவார் (சகூக)

காகளமொடுவளைதுடிகைகரடிகைபடலிகைதிமிலை
சாகரவொலியெனவறையத்தரணிகடிசைதொறும்விரவி
னேகினரிரதிதன்மகளையார்கொடுபோயினரெனவே
நாகணையரியொடுமரசர்நவிலுமுன்னாரதன்வந்தான் (சகூஉ)

சுரர்முனிவிரைவினினெய்திச்சுந்தரவரியொடுசொல்வா
னிரவிடையிரதிதன்மகளையெழிலுறுவோவியலேகை
விரைவினிலொருநொடியிடுமுன்விண்மிசையேகொடுவிடவே
யரியுறுகுழலுடைமின்றூண்டுறவவளவளையணைத்தான் (சகூங)

உடையொடுமதனனருட்சேயுறவவையறியுயர்வாணன்
கடலெனவணிகங்கள்விடவேகடுமையின்வதைசெயமுனிவாய்
விடமுமிழரவுறுபடையால்வேளருள்குமரனையொளிசெய்
கொடியவனிருகைபிணித்தானெனுமுரைகூறினன்முனிவன் (சகூச)

நாரதனிவ்வுரைநவிலநாரணனுயர்சசிநிறமன்
வாரிதியருண்மகன்மகன்வல்லூகமனருளியமின்சேய்
சீரதினுயர்சினிச்செம்மல்தேர்கரிதுரகதவனிக
மாரதர்திரளொடும்வாணன்வளநகரெயிலைவளைத்தார் (சகூரு)

நந்தனுடையபகந்தன்சாரணன்முதலினர்நண்ணத்
துந்துமிகோடியர்துரகந்துடிகையொடெங்குமொலிப்ப
விந்திரைநாதன்வளைந்தானிவுளிகடேர்நிறையெண்ணி
றந்திமுனலக்குறேணித்தாணைகளும்புடைசூழ (சகூசா)

மாதவன்வந்தெயில்சூழவாணன்முனிந்துயர்தேரின்
போதகமாவணியிரதம்பொருபடையசுரர்களெல்லா
மோதமெழுங்கடல்போலவுற்றிடவேயுயர்பேரி
நாதமலிந்திடவந்தாருகர்நடுங்கவடர்ந்தே (சகூஎ)

வரையெனவுயரியதோளார்வளர்பிறைபோலெயிறுடையா
ரெரியுறுமுதிர்சினவிழியரியமனும்வெருவுறமுனிவார்
பரவையிரைலியெனவதிர்வார்படியலையும்படிவருவார்
கரிபரிதேர்மிசையுயர்வார்கடுவிடமனையவர்மறவோர் (சகூஅ)

விழியுறுதழலினிலெழிலிவெந்திடவேயுயர்தேரி
னுமுவையினினமெனவதிர்வாருறுமயில்விடுகரமுடையார்
பொழிமழையெனவிடுகணையார்புகரிபவெரிமிசையெழுவார்
முழைவிடுமரியினைநிகராய்முடுகினரவுணர்கள்வரைபோல் (சகூக)

ஆனகதுந்துமியருள்செயரசர்கள்பலருடன்வளைய
மானிடனிவனெனமதியார்வடவையினனலெனமுனிவார்
தானவர்சதவெளமுறவேதசசதமுறுகரமிலக
வானவர்வெருவுறவந்தான்மாவலியருளியவாணன் (சஎ0)

வேறு. கோபம்விஞ்சியசிந்தையர்கூற்றஞ்சும்
பாவமீருருவாய்ப்படிவந்தெனக்
கூவகன்னன்கும்பாண்டன்குனித்திடுஞ்
சாவங்கொண்டுயர்தேர்மிசைத்தாக்கினூர் (சஎக)

சங்கமார்த்தனபேரிதழங்கின
சிங்கம்போன்றசுரேசர்திரண்டுபா
ரெங்கும்வேல்கதைவாளெறிந்தார்த்தனர்
மங்குநாளெனவானவரஞ்சவே (௧௭௨)

அவுணரெய்துமெறிந்தும்வந்தார்த்தலுந்
துவரையாதவவீரர்கடுன்னியே
கவனமாக்கரிதேர்கள்கடாவியொண்
டவளமாவளையூதினர்தாக்கியே (௧௭௩)

கவளமாகரிதன்னுடன்காதின
விவுளியோடுபுரவியெதிர்த்தன
துவசம்வையமுந்தேருந்துலங்கிட
வவுணர்தம்மோடரசர்கடாக்கினார் (௧௭௪)

தோளுந்தோளுந்தொடர்ந்தெதிர்தாக்கவே
சூலஞ்சூலமோடேடபடரச்சுடர்
வேலும்வேலுமிடைந்திடவிற்செறி
கோலுங்கோலுமுமிழ்ந்தகொடுங்கனல் (௧௭௫)

திசைதொறுங்கணைமாரிகள்சிந்தியே
தசையுமென்புஞ்சிதைந்திடத்தோமரம்
விசையினெற்றிவிழிக்கனல்பொங்கிட
வசுரரெங்குமடர்ந்தெதிரார்த்தனர் (௧௭௬)

முரசுதுந்துமிசங்குமுழங்கிட
நிரைசெய்மாகரிதேர்கணெருங்கிட
சிரசின்மீமகுடந்திகழ்ந்தேயிட
வரசராசுகமாரிபெய்தார்த்தனர் (௧௭௭)

கரங்களற்றனகால்கடுணிந்தன
சிரங்களற்றனதேர்சிலையற்றபின்
னுரங்களற்றுமடிந்தனவும்பல்கள்
குரங்களற்றுவிழுந்தனகோடகம் (௧௭௮)

சிலையிழந்துருடேரறச்சிறியே
நிலனிழிந்துநெடுங்கதைதன்னிறு
னலையெழுங்கடல்போலெதிர்ந்தார்த்துயர்
தலைபிளந்திடச்சாடிமடிந்தனர் (௧௭௯)

மேசமின்னொடும்வீழ்வனபோன்றுகை
நாகமெங்குமடிந்தடர்வீரர்கள்
சேகரங்கடுணிந்திடச்செம்புனற்
சாகரங்களிற்சார்ந்தலைவீசின (௧௮௦)

மீளிபோலவெகுண்டெழும்வீரர்கள்
வாளொண்வேல்கண்மழுக்கரத்தோச்சியே
தாளுந்தோளுந்தலையுந்துணிந்தனர்
கூளியாடினஞாளிகுரைக்கவே (௧௮௧)

அரசருமசுரேசருமார்த்துயர்
வரிவில்வாளிகளெங்கும்வழங்கவே
பரிகள்பொன்றப்பருப்பதம்போன்றெழுங்
கரிகள்விழக்கவந்தமுமாடின (௧௮௨)

மழுமுசுண்டிவலயங்கள்சப்பண
மெழுமுரட்கதைவிட்டெறிந்தியாதவக்
குழுவுளோரசுரேசரைக்கொன்றன
ருழுவைமானினத்தைச்செற்றதொத்தரோ (௪௮௩)

வேலும்வாளுமுலக்கையுமிக்கமுட்
கோலுமீட்டியுங்குந்தமும்விட்டெறிந்
தாலமென்னவழன்றவுணதிபர்
மாலின்சேனையைச்சூழ்ந்துவதைத்தனர் (௪௮௪)

படகம்பேரிபணிலமுழங்கவே
கொடியவல்லசுரேசர்கொதித்திடும்
வடவைபோலெழும்வாளிகடேவியே
யடரவோடினமாயனனிகமே (௪௮௫)

வேறு. எரிசினமுற்றசுரேசர்களெங்கணுமுனிவொடெதிர்ந்திடவே
புரவிகளெண்ணிலபுகரிபவீரர்கள்பொன்றிடமன்னரெலா
மிரிதலுமஞ்சன்மினென்றுயர்வேணுபகந்தனிராமவிறை
வரிசிலையொண்டெழுசாத்தகிசாம்பமகிபனுடெய்தினரால் (௪௮௬)

பேரிகறங்கிடவேயுயர்தேவகிபெற்றிடுமைந்தன்முனேன்
றேரினிழிந்தலமேகொடுமாவணிசிந்துறவெங்கரிகள்
வீரர்கரங்களுரங்கள்சிரங்கள்முரிந்துவிழுந்திடவே
சாரிகையாகவடர்ந்தெதிர்மோதினன்வானவர்தான்மகிழ (௪௮௭)

வரைகளெனக்கரிநிரைகண்மடிந்திடவாசிகளுஞ்சமுற
வுரமொடுதோள்கரமென்புமொடிந்தசுரேசருருண்டுதிர
மிருநிலமேனதியாயெழவெண்ணிலதேர்நிரையிற்றிடவே
யிரைவினலாயுதமேகொடுமோதினன்விபுதர்கடுதிசெயவே (௪௮௮)

சில்லுளைமாவுறுதேர்மிசையேதிகழ்பினிபருள்சாத்தகிதன்
வில்லொலியேயுலகெய்திடவேபலவிசிகம்விடுத்திடலு
மெல்லையிலாவிவுளித்திரள்சரிநிரையிரதமொடசுரர்குழா
மொல்லையினிற்றனவுதிரமிகுத்தவனோடினநதியெனவே (௪௮௯)

வாரிகலங்கிடமாரனெறிந்தவின்ஞணொலிவானிலுறப்
பாரினிடைப்பொழிமேகமெனப்பலபகழிசொரிந்திடவே
தேர்நிரைமீதசுராதிபரிவுளிகள்சிந்திடவெங்கரிக
ளோரிமையின்முன்மடிந்திடவாடினவலகையுலப்பிலவே (௪௯௦)

அடிதொடையற்றனகுரகதமுற்றவுமமரர்துதித்திடவே
கடகரிநிரைகரமுரமறவரைகள்கடுப்பவிழுந்திடநீள்
கொடிகுடையிரதமறச்சினவசுரர்குலைந்துமடிந்தனரால்
வடிவுடைமதனன்விடுத்திடுபல்லவமாரியெனச்சொரிய (௪௯௧)

சாம்பனெடுங்கணைதூவிடவேயுயர்தானவர்வெண்கவிகைக்
காம்பறநீள்கொடியிரதமறச்சிலைகவசமுமற்றிடவே
சோம்பினர்பாறினர்மற்றவர்துஞ்சினர்தோல்பரிபொன்றினகண்
டேம்பலுறக்கடிமலர்கள்சொரிந்தனரிமையவரெங்கணுமே (௪௯௨)

நந்தனுடேயுபகந்தன்விடுங்கணைநஞ்செனவேமுடுகத்
தந்திகள்பொன்றினசடனுடுசாரணைனேவியசாயகமு
முந்திய முந்திடவிவுளிகள்பட்டனமுக்கணனார்முனிவால்
வெஞ்சபுரத்தினர்போமடிந்தனர்வெஞ்சமராலே (௪௯௩)

சடனெடுசாரணன்மதனுயர்சினியருடனயனலப்படையோன்
மிடலுடையெண்சருண்மசண்மகன்வீறுபங்கறெடிவர்கள்விடு
மடுபகழித்திரளாலனிகத்தைவதைத்திடவசுரருமோர்
கடலிறுதியின்வருகாலினுடைந்தெனவோடினர்காசினிமேல் (௧௯௪)

ஆசுகன்மோதநிலாதுபரந்திடுபூளைநிகர்த்தசுரர்
வாசிகடோலணிதேருறும்வீரர்மடிந்திடவேகுருதி
காசினிமேனதிபோலுறவெண்ணில்சவந்தநடிக்கிடவு
மாசைகடோறுமிரிந்திடமாமலரமரர்பொழிந்தனரால் (௧௯௫)

வேறு.

பாறுசேனையையஞ்சலென்றேபகர்ச்
தேறின்மேவுமிறையெனவேவமிகச்
சீறுகின்றகும்பாண்டனஞ்சியப்போல்
வீறுகூபகன்றன்னெடுமேவினான் (௧௯௬)

கொடிகொடேரிடைக்கோளரியேலவே
யிடிகளஞ்சிடவார்த்திருவோர்களும்
வடவைபோலெழும்வாளியெய்யவத்
தடரவோடினமாயனனீகமே (௧௯௭)

மீளிபோலக்கும்பாண்டன்வெகுண்டியர்
வாளிதூவிவருதலும்பாங்கவனர்
மூனுநம்வெஞ்சினத்தோடுமூட்டிப்புத்
தேளிர்தேறிடச்சென்றெதிர்தாக்கினன் (௧௯௮)

அசுரன்விட்டவழற்கணையாவையும்
விசிகமொன்றின்விலக்கியவாயுதன்
சசியிலிப்பிரவானசரங்கள்யான்
றிசையனைத்துமறைத்திடச்சிந்தினன் (௧௯௯)

தாலகேதனனெய்தசரங்களைச்
சிலையில்லவன்மாற்றிச்சினமுற
மாலின்முன்னவன்மார்பினழுந்திடவ
யாலமென்னவடர்ந்துவர்ந்தார்த்தனன் (௨௦௦)

உரமுறக்கணைகேக்கவுதிரநீர்
பெருகவேமுனிந்தேபிறையாளியா
லரிமுனேனைகுரன்சிலைதேர்கொடி
பரியெலாமறுத்தானவன்பாரினன் (௨௦௧)

பாபருபிகும்பாண்டன்பரிகடோர்
சாபமுமற்றுப்பாறச்சமுக்கலுங்
கூபகன்னன்கொறித்தெழக்கொதிவா
மாபதிச்சிறுவன்வந்தாக்கினன் (௨௦௨)

மாரன்வந்துதடுத்தலுமாறிலாக்
கோரனுகியகூபகன்னன்றிறல்
வீரவெஞ்சிலையால்விடுத்தான்கணை
பாரினிற்பெய்பயோதரமானவே (௨௦௩)

தியனேவுஞ்சிலீமுகம்யாவையு
மாயன்மைந்தன்வடிக்கணையானறுத்
தேயெனுமுன்னவனிரதங்கொடி
தாயவெஞ்சிலையோடுதுணித்தனன் (௨௦௪)

கொடிகடோர்சிலையற்றுச்கொடியவன்
கடிதின்வேல்கொடெறிந்திடச்சாமவேள்
சுடர்கொள்வெங்கணையாற்றுணித்தெய்தவ
னுடலில்வாளியழுத்திடவோடினான் (உ0ரு)

தியசூபகன்னன்சிலைநேரற
வேயெறுமுன்னிடைந்திடவாணனும்
வாயுவேகிச்சரும்பரிமேவயமேற்
சியம்போலனிகத்துடன்சென்றனன் (உ0சு)

வேறு. பரிகரியிரதமோடளவிலபடைஞர்கள்படிமீதி
னிரைதரவுயர்கொடிககனமோடுறவரிநிரைதேரின்
வரையுறுகதிரெனவேமுடிசிரமிசைதிகழ்வாண
னெறியுறுவிழியினனிமையவர்வெருவுறவெதிர்வந்தான் (உ0எ)

தசசதமுறுகையினயிலெழுமழுவொடுதிகழ்வாகத்
திசைசெவிடுறவுயர்சிலையொலியெழவிளையிளையூதி
யசுரர்களிறையவனமரர்கள்வெருவுறவழல்வாளி
விசையுறுமெழிலிகள்பொழிவதுநிகரெனவிடுகின்றான் (உ0அ)

ஆரகமெய்குரமிருதொடைசிரமிவையறுபடவேயெண்
கரிகரமுரம்வருபதமறவிழுவனகலமேபோல்
வரிசிலைகொடிகுடைதலையறவிழுவர்கண்மனர்பாரிற்
குருதிகள்பெருகிடவலைகைகளணிவனகுடர்மாலை (உ0கூ)

அரனருள்வரனுறுமவுணர்களதிபதியழல்வாளி
விரைவினினெழிலிகள்பொழிவதுநிகரெனவிடவேபூ
திருபர்களிலமிசைவெருவினர்திலையிலையெனவோட
வெரிசினமுறவுயர்சினியருடனயனெதிர்ந்தானல் (உக0)

இரிதருபுரவலர்வெருவன்மின்வெருவன்மினெனவோதி
வரிசிலைகொடுசினியருண்மகன்முனிவொடுவடிவாளி
சொரிதலுமசுரர்கடலைநிலன்விழவுயர்துரகங்கள்
சிரமிபநிரையுடலடியறவுருள்வனதிசையெங்கும் (உகக)

அவுணர்கடலைகரமுரமரைதொடையடியறலோடு
மிவுளிகள்சிரமறுவிபநிரைகரமறவுயர்தேர்க
ளவனியினிநவலவனுமறவடுசேனைபலவிட்டா
னுவமையில்சினியருள்சுதனுகவிறுதியின்மழையொத்தே (உகஉ)

கடகரிபரிநிரைகதமுறுமசுரர்கள்படிமீதின்
மடிவுறவெழுகுருதிகணதியெனவரமகிழ்கூளி
குடர்தொடையணிவனநடமிடவசுரர்கள்குலைவுற்றே
யுடைதலும்விபுதர்கள்வெருவுறமுடுகினனுயர்வாணன் (உகங)

எரிசினமுறவுயர்தசசதமுறுகையினிலகும்போர்
வரிசிலைபலகொடுமழைபொழிவனவெனவடிவாளி
சொரிதலுமருள்செறிசினியருள்சுதனொருசுடர்வாளி
விரைவினில்விடவவையறுதலும்விபுதர்கடுதிசெய்தார் (உகச)

வினையுறுமசுரர்களிறையனலுறுபடைவிடலோடுஞ்
சினியருள்சுதனழலுறுபடைசெலவிடவவையற்ற
துனியுறுபவன்மகபதிசரம்விடவவைதுணிசெய்தான்
றினகரனருளியபடைகொடுசீதரனனுசன்றான் (உகரு)

அந்தகன்வெருவுறவவுணர்களதிபதிசரமெங்குஞ்
சிந்திடவவையறவரியனுசன்சிலீமுகவாளி
யுந்திடவெதிர்பொருமாவலிபருன்சுதனுஞ்சேர்மா
வித்துவையனவியதுவிசைபலசிலைநிலையற்ற (௨௧௬)

உருளிரதம்பரிகொடிகுடைவில்லிவையுறவழுரி
யெரியெனமுனிவுறுமசுரர்களிறையொருதேரோதி
வரிசிலைபலகொடுசினியருள்சுதனுரமிசைவாளி
சொரிதலுமிமையவர்வெருவுறவுருவினனிலைசெய்தே (௨௧௭)

உரமிசைகுருதிகள்பெருகிடமுனியுறுமாசன்போ
லெரியுறுவிழியினனுயர்சினியருள்சுதனிடபந்த
வரிசிலையொலியுறவசுரர்களதிபதியன்மார்பி
னுருவிடவிடுகணைசடவினனொருகொடியிடுமுன்னம் (௨௧௮)

நீயவனுரமிசைகுருதிகள்பெருகிடவிதிரி
யாயிரமடுசிலைகொடுசினியருமாசுகன்றேர்மாத்
தூயவில்லுயர்குடைதுவசமுமறவெயதிலைமிசின்
வாயுவின்விசைகெடவோடினன்மாதவனுதைசன்றுன் (௨௧௯)

பூதலமிசைசினியருளியபுதல்வனிவைநடத்தோட
நீதுறுமவுணர்களிறையவனூர்த்துவர்சிலைகோலி
மாதிரம்வான்மண்மறைத்திடவாளிகள்விட்டிடவோ
டீடிடயாதவவீரர்கள்வெருவியுடைந்தாரால் (௨௨௰)

யாதவவீரர்கண்டிசைதோறுமுடைந்தோட
மீதுயர்சேர்மிசைநின்றுவிளங்கியமேகம்போல்
மாதவன்வெஞ்சிலைகோலியடற்திவாளிகளே
லாதவன்வெஞ்சுடர்போற்றிகழுறமெய்தார்த்தான் (௨௨௧)

மாயன்விடுங்கணைமாரியைவாளிகளால்வான
னேயெனுமுன்னமறுத்தியமன்படையெய்தார்ப்பத்
தூயவனிந்திரன்வெம்படைகொண்டவைதுணிசெய்தே
மீயுயரண்டம்வெடித்திடவூதினன்வெண்சங்கம் (௨௨௨)

வாயுவின்வெம்படைவானவன்விடுத்திடநிசாமெய்க்கு
மாயனெடிப்பினிருசுகம்வாளியினவைமாற்றத்
தேயுவின்வெம்படைதியன்விடுத்திடவருணக்கோன்
றூயவழற்படையாலவைமாற்றினன்சுடர்நேமி (௨௨௩)

பிரமனடற்படைவிட்டனனவுணர்கள்பெருமானம்
பரமனயன்படைகொண்டவைமாய்த்திடும்படியெய்தான்
புரமெரிசெயநகைசெய்தருளும்புனிதன்வியுஞ்
சரமசுரன்றுயர்தனுவைவளைத்துவிடுத்தாலுஞ் (௨௨௪)

தானவன்விட்டதழற்கணைவெம்படைசுடுமோதிம்
வானவரஞ்சிடவடவனலிதுவெனவுநீலோடு
பானுவின்மண்டலமீதுறையும்பரனுமைமாதின்
கோனுடைவெம்படையெய்தறுத்தனனுயர்வில்லால் (௨௨௫)

வெங்கயமன்றுவதைத்தருண்மாலொருவிசிகத்தாற்
சங்கரன்வெம்படையைத்துணிசெய்திடுசதுர்கண்டே
சிங்கமெனச்சினமுறவுயர்வாளிகள்சிலைகோலி
மங்குல்பொழிந்தெனவெங்கும்விடுத்தனன்விறல்வாணன் (௨௨௬)

ரியவன்விட்டசிலீமுகமெங்கணுமுறவெரிர்
மாயவன்மேனியின்மங்குலின்முந்தயநாகிரேபோ
லேயெனுமுன்னுருகிப்புனல்விஞ்சிடவிமையோரோ
ராயிரநயநனும்வெருவினரவுணத்திரளார்த்தார் (௨௨௭)

ஆடகன்மகன்மகனுதவியசேயருள்சூதனம்பு
மூடலுமானகைசெய்துயர்வாளிகள்விடமூட
னீடியகொடிசிலையறவலவன்சிரநிலன்வீழக்
கோடகமுருளநிறைந்தநுசெம்புனல்கொடியோன்மேல் (௨௨௮)

வேறு. சிலையிழந்துயர்கொடியிழந்துருடேரிழந்தயமறமிகும்
வலவன்மங்கியிடமெய்துளைத்தடருமாலின்வாளியினிவ்வாணனூர்
நிலையழிந்திடுபொழுதின்மற்றவனன்னைகேட்டறநெறியிலாள்
கலையிலாதளகம்விரித்தெழுந்தொளிருநக்னனாமுனெய்தினாள் (௨௨௯)

நக்கினத்தொடுகுழல்விரித்தவண்ணமேவமிகநகைசெயாச்
சக்கரத்தவனணியேபொருசமரபூமிகழிந்தபின்
னுக்கிரத்தெதிர்வாணன்மால்விடுபகழியான்மெய்யுளைந்தமை
யக்கணத்தினறிந்தனன்கயிலாபதிக்கதிபதியரோ (௨௩௦)

வாணனுக்குயர்வரமளித்தருளீசன்வாளிநிறைந்திடுந்
தூணிதன்வெரினீக்கிநற்சிலைதூயகையிலிலங்கிட
வேணியிற்சசிகங்கைமங்கைவிளங்கவேயுரகங்களாம்
பூணுரத்தின்வயங்கிடப்புலியதளினுடைபொருந்தவே (௨௩௧)

விடமமைந்தகிரீபமீதுயர்வியாழபூடணமிலகவே
நடமிடும்பதமிசையின்வச்சிரநற்சிலம்புபுலம்பிட
வடிவுடைத்திருமேனியின்னிறைநீறுவெண்மைவிளங்கிட
விடபமேதிகழ்துவசம்வானடரிரதமீதினிலேறினான் (௨௩௨)

கொன்றைதும்பைகரந்தைமத்தையெருக்குநன்மலர்கூவிள
மொன்றுசெஞ்சடைதிகழவேநுதல்விழிவயங்கிடவொப்பின்மான்
கன்றுநன்மழுசூலமங்கிகரங்கண்மீதுதுலங்கிட
வென்றுவின்சுடர்மானுமாமணியிரதமீதினிலங்கினான் (௨௩௩)

ஆகுவானைமீதினைங்கரனெய்தவேயழகானதோர்
கேகயத்தினின்மேவியாறுகிரீடமார்குமரன்வர
வேகமாகியகுகியர்டாகினிவிஞ்சுபூதபசாசுகள்
சாகரத்தொலியஞ்சவாய்விடுபிரமராக்கதர்தாமெழ (௨௩௪)

விடமதாகியதாருதாரைகள்விகடமாகியபிரமர்தாம்
படியின்மீதுயர்கூச்சுமாண்டர்கள்பயமிலாதவேதாளர்க
ளிடிகளஞ்சமுழக்குபூதர்மதர்வுடன்னிவரெண்ணிலார்
கடுவைநுங்கியகாலகாலன்முன்னேபடர்ந்துகலந்தனர் (௨௩௫)

முடிவன்மீதிடைடமருகங்கண்முழக்கியேவருவயிரவர்
துடிகைசச்சரிபம்பைகும்பிகைதிமிலைதுந்துமிதூயகோ
டிடிகளஞ்சமுழக்கமோங்கியவிரணியச்சினமெங்கணும்
விடையன்வந்தனன்விமலன்வந்தனனென்றவோசைகள்விஞ்சவே (௨௩௬)

திரிபுராந்தககாலகாலசிவாசிவாவிடபாரூ
டுரகபூடணசசிசடாதரவுமைவயின்னுரியாடையா
யரகராவிமவானளித்தருளரிவைநாயகவென்றுதா
மிருமருங்கினுமெண்ணில்பூதகணங்கண்மேவியியம்பவே (௨௩௭)

கழைகொள்வரைகணிசர்காலவயிரவர்கள்
விழியிலுமிழழல்கள்வீறியடரவுய
ரெழில்கெழுசிகிலன்விழவிலைமயவர்க
ளழிவுறுலகமெனவெருவியலறினரே (௨௪௯)

வேறு. பூதமாசாலிழிப்பொறிகொள்வேதாளமோ
டேதமார்பிரமராக்கதரிடாகினியுளோர்
தீதுசேர்கூச்சமாண்டகர்சினம்மலியவே
காதினாரரசர்கள்சதையினான்மடியவே (௨௫0)

பரிகளைத்துரகளுறப்படிமிசைப்பிசைகுவார்
கரிகளைக்கோடுகைகளாலும்வெருவுகவே
தரைதனிற்றுகள்செய்வார்தமணியத்தேர்களை
வரையிடைத்தறைகுவார்வயிரவத்திரள்களோ (௨௫௧)

கோடுடைக்கரிகளின்குருதியைப்பருகியே
யாடுநற்பரிகளின்றசையருந்திடுவதோர்
சாடிவெஞ்சூரர்கடலைகளைத்திருகுவார்
பாடியங்கோடியேபிரமராக்கதர்பலர் (௨௫௨)

பூதவேதாளமாவயிரவர்பொங்கியே
பாதவம்வேர்பறித்தேபலவரையினால்
மோதிவெங்கதையினான்முடுகியேசாடவே
யாதவப்படைஞர்நில்லாதிரிந்தோடினார் (௨௫௩)

தோலினற்றேர்வினைப்போர்த்தவன்படைஞர்சூழ்ந்
தாலகாலம்மெனவடரவேயரசர்கள்
ஞாலமீதோடலுங்கண்டழனயனனாய்த்
தாலகேதனனலங்கைகொட்டேதாக்கினான் (௨௫௪)

கயிலையங்கிரியெனக்கனலந்திகழவே
சயிலமேர்பூதவேதாளடாகினியர்தஞ்
செயலழித்தோடவேசெகதலந்தொலையவே
முயலகன்முதுகினின்றான்முனேமோதினான் (௨௫௫)

சிகைபெருங்கண்ணன்வெஞ்சிகரமேபோலுவான்
புகையுயிர்த்தேயலத்தாற்புடைத்திடலுமே
குகியரும்பிரமராக்கதர்களுங்குருதிவா
யுகிலத்தோடினாரும்பருங்காணவே (௨௫௬)

வடவனற்பிறமுகண்மதிவணனாஞ்சிலா
விடிகளோங்கலின்விழுந்தென்னமோதிடலுமே
கொடியவெங்கூச்சமாண்டகர்களுங்குலையவே
கடுகியேயோடினார்குருதிவாய்காலவே (௨௫௭)

அரவெனச்சீறியேயலமெடுத்தரிமுன்னோன்
பரவையைக்கடையுமத்தினைநிகர்பயிரவர்
சிரமிசைக்கடிதடித்திடலுமேதிசைதொறும்
வெருவியக்கணத்திலத்தோடினார்வெட்கியே (௨௫௮)

புரமெரித்திடுமரன்படைஞராய்ப்பொருமவ
ருரமிசைக்கிரியின்வீழுருமெனச்சிவணன்
கரமெடுத்தலமுறக்கடுகியேமோதலும்
பிரமதப்பெயரினோர்பீதியோடோடினார் (௨௫௯)

மீளவுங்கணைமதனனெய்திடவேவெருண்டவனிரதமா
மாளவெங்கதைகொண்டுமோதினன்வண்மைசேர்கரிவதனனுங்
காளமாமுகின்மானுமெய்யொளிர்கண்ணன்முன்னவனும்மிறை
மூளும்வெஞ்சினமோடலாயுதமோதியேயெதிர்முந்தினன் (உஎக)

வந்தெதிர்ந்திடுமாயன்முன்னவன்மீதின்வெஞ்சினம்வந்துறத்
தந்தியானனன்முந்தியேயொளிர்தண்டுகொண்டுறமோதலு
மிந்துவண்ணன்முனிந்தலத்தின்விலக்கியேயெதிரேற்றிட
வந்திவண்ணனருட்சுதன்கதைகொண்டடர்ந்துதடுத்தனன் (உஎஉ)

சரிமுகன்கதமுறமுரண்கதைகொண்டுவானவர்காணவே
யரிமுன்னோனுரமிசையறைந்திடவடுசினத்தொடுசசிவண
னெரிவிழித்திடிவரையினுற்றெனவிரைகடற்றிரையென்னவு
மரவமுற்றிடவரனருட்சுதன்மீதடித்தனனழலுற (உஎஙூ)

ஆகுவின்னுடன்மீதடித்துயரைங்கரன்னொருகொம்பினி
னாகமுற்றிடிவீழ்வபோற்றிருநாதன்முன்னவன்மோதிட
வாசவந்தனினிற்கலானுயரண்டர்நோக்கிடவக்கணம்
வேகமோடுகழிந்துபோயினன்விறலடங்கிவிநாயகன் (உஎச)

வேறு. பூதகணமோடுகரியானனனுடைந்திடவெருண்டுபுகழ்சே
ராதவனளக்கரினிலங்குகவின்விஞ்சியிடவாறுமுகவ
னேதமின்மயூரமிசையேறியொளிராறுமகுடம்மிலகவே
யூதினன்வயங்கியவலம்புரியையண்டர்திரளோடியிடவே (உஎரு)

தண்டைமணிநூபுரமலர்க்கழலின்விஞ்சுதபனன்சுடர்தர
முண்டகமலர்ந்ததெனவெண்ணகைபொருந்தியமுகங்களிலகக்
கொண்டலினுறும்மிரவிபோலமயின்மீதொளிருலாவவுலகோ
டெண்டிசையுமஞ்சிடவெழிற்சிலையினாணியைவெறிந்தனனரோ (உஎசு)

நாணியையெறிந்திறுதியிற்பெய்மழைபோலவளைநற்சிலைகொடே
பாணமுயர்வானுலகமெண்டிசைகளும்பரவவெய்திடலுமே
தூணிகர்தாளுடையதும்பியொடுவெம்பரிதுணிந்துநிருபர்
பாணியொடுகந்தரமிழந்தனர்கவந்தநடமிட்டபடிமேல் (உஎஎ)

கோடுடையவெங்கரிகள்கொடியவழல்வாளிகொடுகொய்துகொடிசே
ராடகம்வயங்குமுருடேரின்வயமாவலவனற்றுவிழவே
நீடுசரமேவிநிருபத்திரள்கண்மாளவிசிகம்நிறையவே
மூடினன்முன்னுளினடர்சூரனைவதைத்தருளுமாறுமுகவன் (உஎஅ)

சாம்பன்வில்லறுத்தவிர்கொள்சாத்தகியுரத்தெரிதழற்கணைவிடப்
பாம்புருவொழிந்தவன்மெய்யெங்குமுதிரப்புனல்பரக்கமுதுகிற்
போம்படிசுடர்க்கணைவிடுத்துயர்புராரியருள்புத்திரனனி
யேம்பலுறவூதினன்வலம்புரியையெண்டிசையுமஞ்சியிடவே (உஎகூ)

காலிலணிதண்டைகள்கலின்கலினெனக்கனமெனத்திகழ்மெயின்
பீலியுறுதோகைகவினுற்றிடவயங்குவெரினின்பிறையணிந்
தாலநுகர்வோன்மகனமர்ந்திடவிலங்கியமயூரமதமாத்
தோலிவுளிவீரர்கண்மடிந்திடவடித்ததிருதூயசிறகால் (உஅ0)

வீரமயில்வாகனனெடுங்கணைசொரிந்தவிறல்கண்டுமுனியா
மாரனுயர்தேர்மிசையின்வெஞ்சிலைவளைத்தெழில்கொள்வாளிபொழியச்
சூரனைவதைத்தவிறைதூயவிசிகத்தவைதுணித்துநெடிய
வாரியொலியஞ்சியிடவூதினனிலங்கியவலம்புரியரோ (உஅக)

ஆறுமுகன்வெய்யவனடற்படைதொடுத்திடலுமச்சுதன்மகன்
மாறியனல்வெம்படைதொடுத்தவையறுத்தவனையூசியிடவே
யேறுளவன்மைந்தனியமன்படைதொடுத்துவிடவிந்திரைசுதன்
கூறரியவிந்திரன்விறற்படைதொடுத்தவைகுறைத்தனனரோ (உஅஉ)

வேறு. காலனுயிர்கொண்டவிறைநல்கியருள்கந்த
னாறுமுகன்வெம்படைதொடுத்துவிடவன்கா
ராலிலையின்மீதினமரச்சுதகுமாரன்
சீலமலரோன்படைதொடுத்தவைசிதைத்தான் (உஅங)

கோலமிகுவள்ளிபுணர்கொண்கன்முனிவுற்றே
வேலினையெடுத்தெறியவேலைதனில்விஞ்சு
மாலமெனவேயமரரஞ்சினரிரிந்தார்
ஞாலமிசைபோர்வெருவுதன்னவிலலாமோ (உஅச)

கண்டைகள்கலின்கலினெனக்கனல்கள்சிந்த
விண்டலநடுங்கவடவெற்புமசைவெய்த
வெண்டவர்களஞ்சியிடவேயலரியென்றின்
மண்டலமுமின்மினியையொப்பவெதிர்வந்த (உஅரு)

கந்தன்விடுவேல்ககனமஞ்சவரலோடு
மிந்திரைதன்மைந்தனரன்வெம்படையெடுத்தே
மந்திரநவின்றுவிடமாவடவைபோலச்
சிந்துதழலோடுமவன்வெம்படைசிதைந்த (உஅசா)

வேலறவரன்சுதன்வெகுண்டுவரிவந்த
வாலநிகர்வெங்கணையடர்ந்துவிடவோடி
மாலின்மகன்மார்புறுதல்வாருதிரமெல்லாம்
காலமுகில்பெயவதெனவேசொரிதிகாற்ற (உஅஎ)

தீயுமிழுமவாளிவிடவேள்சினமிகுந்தே
வாயுவினுமும்மடிவிசைத்திறலையும்வாளி
தூயவுமையாண்மதலைமெய்யிடையுரப்ப
வேயெனுமுன்மாமயிலொடேகினவிடைந்தே (உஅஅ)

வேறு. போதகவதனன்பூதபசாசர்புகைவாயர்
தாதவிழ்தொடைசேர்சண்முகனிவர்வெஞ்சமர்செய்தே
பீதியொடோடக்கண்டனனுயர்பிஞ்ஞகநாதன்
சூதனைவிடுதூய்மைகொளிரதந்தனையென்றுன் (உஅகூ)

ஆதவனவிர்போலிலகியவிரதந்தனையாகில்
சூதன்விடச்சாமரைகுடைநிகழ்த்துவசம்வான்
போதவடர்ந்திடுபூதகணங்கள்புடைசூழ
நாதனெதிர்ந்தானறுமுகன்வானோர்நனியஞ்ச (உகூ0)

திங்களகடுக்கைகூவிளைகொன்றைதிரைவீசுங்
கங்கைவயங்குஞ்செஞ்சடைமீதிற்கவின்மல்க
வங்கையின்மானுமங்கியுமழுவுமழகாகத்
தங்கிடவம்பொன்னூபுரமுந்தாடனின்மேவ (உகூக)

சரியுரியுடலிற்போர்த்தருண்முதல்வாகடன்மீதின்
வெறும்பிடறுகர்வாய்மதிவளர்சடையாயமழுவல்லாய்
திரிபுரதகனுதகனல்யாகஞ்சிதைவித்தா
யரகரசிவனேயென்றடர்பூதத்திரளாட (உகூஉ)

துந்துமிதக்கைதுடிகையிடக்கையறைபம்பை
நந்துயர்முரசம்படலிகைநன்பொன்னுறுசின்னஞ்
சிந்துவிணைலியுமஞ்சிடவெண்டிக்கினின்மேவுந்
தந்திகள்வெருவப்பேரொலியெங்குந்தரவந்தான் (உகஉ)

பிறையெனவளைவுற்றிலகுபிணாகங்கரமேந்திக்
கறையுறுகிரிபங்கட்செவிதிகழுங்கலன்மல்க
விறுதியினீரேழுலகையழிக்குமிறைவன்வா
ணுறைபவர்மறுகவூதினனெண்சங்கினையம்மா (உகச)

இண்டைகொள்சடையனிந்துவினெழிலார்வளையூத
வண்டர்களண்டம்விண்டதுகொல்லென்றடர்நஞ்சை
யுண்டவன்முனிவுற்றேயிவண்வந்தானுலகோடு
மெண்டிசையுள்ளோரியாவருமுய்யாரெனநொந்தார் (உகரு)

பூதகணத்தோடேயிரதத்திற்பொலிவெய்தி
மாதொருபாகன்வானவரஞ்சவரலோடு
மூதையினில்லாதோடியபூளைதனையொத்தே
யாதவவீரர்களெண்டிசைதோறுமிரிவுற்றார் (உகசா)

நீருறுசடையன்முனிவொடுவரவேநெடுவானிற்
பாரினிலமர்வோரிரிவனகண்டேபைம்பொற்றேர்
தாருகன்முடுகத்தாமரைமலரார்புயமுனே
யேருறவெதிருஞ்செயலுறவந்தானெழின்மாயன் (உகஎ)

ககபதியுறுநற்கதலிகையுயரக்கனகத்தேர்
செகதலமதிரச்சிலைவளைசார்ங்கந்திகழ்கையா
னுகவிறுதியிலேவருமரனெதிரேயுற்றேமைக்
ககனமுமறையக்கணைகள்பொழிந்தான்கனமேபோல் (உகஅ)

சக்கரனெய்திச்சார்ங்கம்வளைத்துக்கணைதூவ
நக்கன்முனிந்தேநற்சிலைகோலியழல்வாளி
யுக்கிரமுறவேயெய்துதடுத்தங்குறுமேக
மிக்கவனிக்கண்பெய்ததுபோல்வாளிகள்விட்டான் (உகக)

ஆலநுகர்ந்தவனெய்திடும்வாளிகளடரச்சீர்
மாலழல்வெங்கணைகொண்டுசிதைத்துயர்வளைவில்லா
னுலிருதிக்குமறைந்திடவேயுகமழைநாண
நூலிடைமங்கையர்நோக்கநிகர்த்திடுகணையெய்தான் (௩00)

அரிவிடுகணைகளறச்சிவன்வெங்கணையெய்தார்ப்ப
விரவினெடும்படையெய்தினனிந்திரைசொழுநன்முன்
கரியுரிசெயுமிறைகாலனெடும்படைகைக்கொண்டே
வரிசிலைவளையவிடுத்தவைமாற்றினன்வளையூதி (௩0க)

கடுவிடநுகரிறைகனகமணித்தேர்வலம்வந்தா
லிடம்வருமாயவனிரணியவிரதமிருவோரும்
விடுபடையதனால்விண்ணகமெல்லாம்புகையாகப்
படியினெடெண்டிக்குறவனலெங்கும்பரவிற்றால் (௩0உ)

அரியிவனரனிவனென்றயன்மகபதியிமையோர்க
டெரிவகையறிகிலர்சிந்தைதியங்கினருயர்தேரி
னிருவருமவலமிடமெண்ணிலசாரிகைவந்தேவின்
சொரிமழைபோனெடுவாளிபொழிந்தனர்சுரரஞ்ச (௩0௩)

குழலிசைவாயனுமுமையவள்கொழுநனுமெய்தார்ப்ப
வழலுறும்வாளிகளம்புவியாசைவிண்ணளவாக
வெழிலிசரிந்தனவுடுவுமுதிர்ந்தனவிமவானுஞ்
சுழல்நெடுங்கிரியசையவறண்டதுசூழ்வாரி (௬௦௪)

கங்கைசொள்வேணியனுங்கடல்வண்ணனுமெய்தார்ப்ப
வெங்குநிறைந்திடுவாளிகளெண்டிசைதமைமூட
வங்கியுமங்கினவாயுவுமற்றனவடர்சீதந்
திங்களிழந்தனவிரவிசுழன்றனதிசைமாறி (௬௦௫)

மலிதவமுனிவர்கண்மகபதிவிபுதர்கண்மனநொந்தே
நிலையிலையுலகினியழியுமெனச்சொலிநினைவற்றங்
கலையுறுபரவையுளமிழ்வுறுவங்சமிதாமென்ன
மெலிவுறுமுடலினர்வேதனுடன்பகர்வுற்றூரால் (௬௦௬)

ஏழுலகுண்டவனிவனவனவ்வேழுலகத்தை
யூழியின்மாய்ப்பவனிருவருமொன்றுயுயர்வோர்கள்
பாழிகொள்புயமீதிடைவலிகாட்டிப்படைவிட்டா
லேழையரெங்ஙனமுய்குவமென்றூரிமையோர்கள் (௬௦௭)

இமையவர்முனிவர்களிவ்வுரைகூறிமெய்மெலிபோழ்தின்
சமனிலவரிவிடுசாயகமெங்கணுநிறையச்சீ
ருமையவண்மகுணன்விழிக்கனல்பொங்கவுறுத்தேதான்
விமனலன்மெய்மீதினின்வாயுவின்வெம்படைவிட்டார்த்தான் (௬௦௮)

**வேறு.** ஈசனெய்யனிலன்படையேழ்கடலீறிலாவடமேருவசைந்திட
வாசையெங்குமமர்ந்தபிறங்கல்களான்றெழுந்தமரங்கள்பரிந்திட
வீசியெண்டிசையுந்துகண்மண்டிடமேகபந்தியலைந்துகலைந்திட
வாசவன்கமலன்றிகழண்டர்கண்மாபயங்கொளவந்ததுமுந்தியே (௬௦௯)

மாறில்வெம்பவனன்படைவிஞ்சியவாரியின்னயமுங்கிழ்வெய்திட
வீறிவந்திடுசெய்கையறிந்துயர்வேதனையனும்வெஞ்சிலையின்விடு
பாறுவின்படைகண்டனிலன்படைபாரின்விண்டுவிழுந்திடவைமுகன்
சீறியண்டர்நடுங்கிடவில்லடர்தேயுவின்படைசென்றிடவுந்தினன் (௬௧௦)

மங்கைபங்கன்விடுங்கனல்வெம்படைவங்கமுந்தியசிந்துவரண்டிட
வெங்குமங்குல்கள்வெந்துவிழுந்திடவென்றுடிந்துநடுங்கிடவெண்டிசை
வெங்கயங்கண்மெலிந்துகுலைந்திடவிஞ்சுமண்டமும்விண்டிடவும்பர்க
ளுங்குமெவ்வுலகங்களையும்மெனநொந்தலைந்துருவன்றிடவந்ததே (௬௧௧)

தேயுவெம்படைபெவ்வுலகங்களுந்தேயமுந்தியசெய்கைதெரிந்தெழின்
மாயவன்வருணன்படையுந்திடமாரியென்னவளைந்தழலின்கணை
யோயவெங்குமடர்ந்தயரும்பரிஞேடிவந்தரிவென்றுறையுள்புக
வாயதன்மைகள்கண்டுமுனிந்தனனாறுசெஞ்சடைதங்கியவண்ணலே (௬௧௨)

பாவகன்கணையும்மறலுமுமைபாகன்விஞ்சியசெஞ்சிலையின்செயு
மாவகம்முறவெஞ்சுரவெம்படையாசையெங்குநிறைந்திடவெய்தலும்
வாவுகங்கையுமிந்துவும்விஞ்சியவாரியும்மனன்மண்டவசுந்தரை
தூவகந்தரமுஞ்சுடவந்ததுதூயவம்புவியின்னுயிரஞ்சவே (௬௧௩)

பூதலந்திகழும்முயரெண்வரைபோதவெங்கனன்மண்டிடவெண்கணின்
வேதியன்சசியின்பதிவிண்ணவர்மேவருந்தவருள்ளமெலிந்திட
மாதுபங்கன்விடுஞ்சுரமன்னுருவாகிவந்துவளைந்திடநந்துகொள்
சீதரன்னதுகண்டுலகுய்வகைசீதம்விஞ்சுசுரந்தனையுந்தினன் (௬௧௪)

தாழியின்னிறையுந்ததியுண்டருள்சாமளன்விடுதண்சுரம்விஞ்சிய
வாழியின்வடவெங்கனலுங்குளிர்வாகினொந்நுகுலைந்திடமுன்செயு
மூழியென்னவடர்ந்திடுவெஞ்சுரமோடவெங்கணுமெய்தியடர்ந்திட
வேழமன்றுரிசெய்தவன்வெம்படைமீளவந்தரிமுன்னிவைசொல்லிய (௬௫)

நீயுடன்றெய்ததண்சுரம்வந்தெனை நீயிவண்கொண்டவெம்மையையொருவென
வோயும்வண்மையையுன்னியெவெண்டிசையோடினுங்குளிருள்ளாடர்கின்றது
போயுயுந்திறமில்லையுன்மெல்லடிப்போதுநம்பியடைந்தனனென்றனு
மாயன்வெண்முறுவல்செய்துதண்சுரம்வாவெனுமுனகன்றிடவுய்ந்ததே (௬௬)

**வேறு.** தான்விடுவெஞ்சுரமஞ்சியகன்றிடுதன்மைகள்கண்டுமையாள்
கோன்விடமென்னமுனிந்துநெடுஞ்சிலைகோலியெதிர்த்துயரும்
வான்மணடுங்கிடவிஞ்சியபாசுபதாத்திரம்வாங்கியொளி
பூனணிசந்துநிறைத்தடர்மூச்செழுபுகையுறவிட்டனனால் (௬௭)

மூன்றுசிரங்கரமாறுகொடுங்கனன்முதிர்விழியொன்பதுடன்
மூன்றியடும்படைபூதபசாசுகள்சுற்றியுறக்கடுவே
கான்றுகொழும்புகையோடனல்வீசியகாலுறவேயுலகை
மீன்றவன்முன்னுலகெங்குநடுங்கவெழுந்ததுபாசுபதம் (௬௮)

அனிலநிறைந்தனவொருதிசைகன்மழையாயினவோர்திசையின்
கனல்களெழுந்தனவொருதிசைபூதகணங்களனந்தம்வகை
யினமொடடர்ந்தனவொருதிசையெங்கணுமிடிகளுமஞ்சிடவே
கனவொலிவிஞ்சவெழுந்ததுகண்டைகறங்கியபாசுபதம் (௬௯)

சாகரம்வெந்தழலாகிவறண்டனதாரணிதாங்கியிடும்
நாகநடுங்கியலைந்தனவெண்டிசைநாகமிரிந்திடவே
மேகமெரிந்துவிண்மீனுமுதிர்ந்தனமேருவசைந்தனவா
னேகிடுமென்றொடுமிந்துசுழன்றனவீசன்விடும்படையால் (௭0)

ஆசைகளம்புவியம்பரமுற்றவுமாசுகமுங்கனலும்
வீசிடவெண்ணிலபூதகணங்கண்மிடைந்துமருங்குறவே
பாசுபதம்வரவொண்டவரண்டர்கள்பதியயனேமுலகும்
நாசமுறும்மினியென்றுநவின்றுநடுங்கியிரிந்தனரால் (௭௧)

வேலையின்வடவைகலங்கிடவேயுயர்வெற்புமலைந்திடவே
காலன்வெருண்டிடவேயழல்வீசியபாசுபதக்கணைதா
னுலிருதிசையுநடுங்கிடவருதலுநாகணைமீதமரு
மாலொளிர்நயிருதவத்திரம்விட்டனன்வரிசிலைகோலியரோ (௭௨)

பங்கயமாதுறுமார்பினனெய்திடுநயிருதவத்திரம்வா
னெங்குநிறைந்துயரென்றொளிமின்மினியென்னவிலங்கிவருஞ்
சங்கரன்விட்டிடுபாசுபதக்கணைதன்னையிமைப்பின்முன
நுங்கியெழுந்தரிவெரினுறுமாவமுள்ளுற்றநொடிப்பினரோ (௭௩)

பாசுபதக்கணைபழுதுறநீடியபரவையினஞ்சைநுக
ரீசன்முனிந்துபினாகம்வளைத்துகமாமழையென்னவொளி
ராசுகமாசைகடோறுநிறைத்திடவச்சுதன்மெய்யுதிரங்
காசினியெங்குநிறைந்ததுமகபதிகமலனொடஞ்சவரோ (௭௪)

ஆகநிறைந்துயர்குருதிகள்கண்டுயரச்சுதனகையிலக
மோகநெடும்படைவரிசிலைநாணொலிசெவியுறமுடுகிடனு
நாகமுரித்தவனினைவறநின்றனனற்பவளக்கிரிபோல்
வேகமிகுத்திடுபூதகணம்பலவெருவியிரிந்தனவால் (௭௫)

பாணியிலங்கிடவேமழுமாணிவர்பாவகனுற்றிடநீர்
வேணியனிணைவறநின்றமைகண்டுவெகுண்டிரதத்திடையே
வாணனெடும்புயமாயிரமோடெதிர்வந்துவயச்சிலையி
னுனொலிதிசையுறவெய்தனன்வாளிகளுகர்நடுங்கிடவே (௯௨௬)

ககனமொடெண்டிசைகவினுறுபறவைகள்காசினிமேருவெலா
முகவிறுதியின்மழையாமெனவாளிகளுறவிடுவாணன்மிசை
யிகல்புரிமாயவனிடர்கெடவெழிலுறுகரமிசையிலகியிடுந்
திகிரியையேவினன்றிசைமுகன்முனிவர்கடேவர்கண்மகிழ்வுறவே (௯௨௭)

சூரியர்கோடியெழுந்திடுதன்மைதுலங்கிடவேயுயரு
மேருவைவலம்வருகதிரெனவாணன்விளங்குபுயங்களெலாம்
பாரிடைவிழவிழுகுருதிகளொலியுறுதிரைவையினெய்திடவே
யாரியனேவியதிகிரியறுத்தனவண்டர்களார்த்திடவே (௯௨௮)

மாறிலையெனவருதிகிரியுயர்ந்திடுவாணனடுங்கிடவே
வீறியதோள்களையொருநொடியிடுமுனறுத்திடுவேலையின்வா
யேறுறுமிறைதெளிவெய்தியிலங்கைமன்னிலகியதலைகளொலா
நூறியகணைவலமாதவன்முன்னரினின்றுநுவன்றிடுவான் (௯௨௯)

மாதவவற்புதவச்சுதவண்டமளந்தருள்வாமனனே
வேதியவித்தகநின்னிருதாளைவிடுத்தொருதேவதையை
யாதியெனத்தொழுமறிவிலரமிர்தினைவிட்டடராலநுகர்
பேதையரொத்திடுவாரெனவேயுயர்பிஞ்ஞகனுரைசெய்வான் (௯௩0)

சீறியெழுந்தமர்செய்விறன்மாவலிசேய்தசநூறெனவே
வீறுகரங்களிரணுலுகைவிட்டருளென்றரன்வேண்டவுய
ரேறிறவேன்றருண்மாலசுரன்னிடவீரிருகையறுமுன்
மாறிலையாகியதிகிரியைவாவெனவந்துகையுற்றனவால் (௯௩௧)

அவுணர்பிரான்கரநாலொழியப்புயமாயிரமற்றிடவே
யுவமையிலாதுயர்திகிரிவிபவிட்டருளும்புருடோத்தமன்மேற்
றவரயன்வானவர்சதமகன்வெறியுறுதண்மலர்மாமழைபோ
லவனியினன்பொடுதூவினரந்தரதுந்துமியார்த்திடவே (௯௩௨)

மூலமெனுங்கரியுய்ந்திடவந்தருண்முண்டகமின்கணவா
மாலரிகேசவநாரணவச்சுதமாயவன்முன்னரின்வந்
தாலநுகர்ந்தவன்வேண்டவியந்திடுமாழியறுக்குகிலா
நாலுகையிற்றெழுதேவிறன்மாவலிமைந்தனவின்றிடுவான் (௯௩௩)

கிரியுருவாயொளிர்பொற்கணனுருடல்கிழியவதைத்தனையா
லரியுருவாயொளிராடகன்மார்புபிளந்தனையவனருள்சேய்க்
குரியபெரும்பதமருளினையெந்தையுயும்படிமூவடிநீ
தருகுதியென்றிருதாளினளந்தனைதாரணிவானமெலாம் (௯௩௪)

பிற்குணமென்னைமயக்கவுனைத்தொழுபெருமையையறிகிலனென்
றுற்குணமின்றெழிவித்தனைநேமியசுருதியினெறியினுறு
முற்குணமாதவவாமனமாயவமுராரிமுகுந்தவுயர்
சிற்குணநாரணவச்சுதவற்புதசீதரவென்றனனால் (௯௩௫)

மாயவநீயருளத்திகழ்மாரன்மகனனிருத்தமனுக்
கீய்குவனென்மகளாயவுடாங்கனையெனுமினையென்றலுமே
பேயுயிருண்டவனன்றெனவேயுயர்பிஞ்ஞகன்மகிழ்வுறநற்
சீயகிகர்த்திடுவேளருளுங்குணசீலனடைந்தனனால் (௯௩௬)

மாரனருட்சுதன்வந்தடிபணிதலுமகிழ்வொடுமற்றவனை
யாரியன்மார்பினணைத்திடவேளுடனனைவருமெய்தலுமே
வீரியனுமநிருத்தமனவரடிவீழ்தலும்வாசமலி
தாருறுமுரமிசைசிந்தையின்மகிழ்வொடுதழுவினர்புளகமுற (௩௩௭)

எதுகுலம்வாழநிருத்தமனுக்குடையென்னுமிளங்கொடியை
யுதவுவனென்றுயர்வாணனுரைத்திடவுதிரபுரத்தினுளோர்
கதலிநிறைத்தனர்கழைகளுயர்த்தினர்கமுகுகணட்டனரான்
மதமுறுகரிகுடரலகைகடசையொடுவாரியவீதியெலாம் (௩௩௮)

பூரணபொற்குடமழகுறவேயுயர்பொன்னின்விதானமுறத்
தோரணநட்டனர்தீவிகைவைத்தனர்தூபநிறைத்தனரால்
வாரணமுற்றவரிற்றிடவாடுகவந்தமொடேமணிசேர்
தேரணியிற்றிகழவுணர்சிதைந்துடல்சிதறியவீதியெலாம் (௩௩௯)

நாசமுறுங்கணவோரைநினைந்தழுநாரியர்வீதியெலாந்
தூசுதிகழ்ந்திடவெய்தியமங்கையர்சோபனமேநவிலக்
காசணிகொங்கையர்நூபுரம்லிஞ்சியகாலினர்கடகமின
வீசினரிமசலம்வீறியகுருதிகளோடியவீதியெலாம் (௩௪௰)

அண்டரியக்கர்கள்சாரணர்சித்தரரம்பையர்நின்றனரா
கண்டலனெண்கணனன்கயிலைக்கிறைகடலரசன்றன்மகன்
முண்டகமின்கணவன்முதலரசர்கண்முனிவர்களணிநிறையு
மண்டபமேவியிருந்தனர்வாணன்மகிழ்ந்திடவேயமரர் (௩௪௧)

மின்னியநவமணிவிஞ்சியபீடமிசைக்கணின்வேள்சுதனு
மன்னனிருத்தனொடுங்குணவுடையெனுமாதுமகிழ்ந்திடவே
துன்னியதொடைகவினுறவளர்தீபிகைதூபநிறைத்திடவே
யன்னமென்னடையினர்சாமரையெங்குமசைத்தனரழகுறவே (௩௪௨)

அந்தணர்முனிவர்களோமநிறைத்திடவேயனிருத்தமமன்
னிந்துவின்வதனம்வயங்கிடநயனமிலங்குமுடாங்கனைதன்
கந்தரமிசையெழின்மங்கலநாணிருகையினணிந்திடலுந்
துந்துமிநந்துமுழங்கிடவம்மிமிதித்தனடோகையரோ (௩௪௩)

மாயனருட்சுதனுதவியமைந்தனொடேயுடையாகியமான்
றேயுவைவலமுறவந்துபினெற்பொரிசிதறிமகிழ்ந்துயர்வான்
றாயவருந்ததிநோக்கிடவமரர்துதித்தனர்சுருதியினூ
லாய்பவராசிபகர்ந்தனரந்தரதுந்துமியார்த்தனவால் (௩௪௪)

மின்னிடையாயவுடாங்கனையோடனிருத்தமன்விழுமியமால்
பொன்னடிமீதுபணிந்துயரும்விடையேறியபுனிதனயன்
றுன்னியவமரர்கள்பதியிவர்தாளினிறைஞ்சியெழுந்துசுடர்
மன்னுதன்மண்ணினமுந்தவணங்கினன்மதனனொடனைவரையும் (௩௪௫)

நாரமமர்ந்திடுவேணியனுன்முகனுகர்கடம்பெருமா
னாரணமோதியமாதவரண்டர்களன்புடன்மாயவனைக்
கோரமுறுஞ்செயல்செய்திடுவோர்கள்குலங்கள்களைந்தவனிப்
பாரமகற்றுதியென்றுயராசிபகர்ந்தவர்போயினரால் (௩௪௬)

மங்கையுடாங்கனையும்மநிருத்தனுமனமகிழத்திரைசொள்
கங்கையுறும்பதிவாணனையுன்பதிகாவெனவேகழறி
வெங்கயமாவணிவீரரலாயுதனொடுமிடைந்துவரச்
சங்கொடுபேரிதழங்கிடவேதுவராபதிசார்ந்தனரால் (௩௪௭)

உக்கிரசேனனொடு வசுதேவனுவந்தெதிர்வந்திடவே
சக்கரன்மற்றவர்தாளினிறைஞ்சியெழுந்துதவங்கடனின்
மிக்கிடுதேவகிதாடொழுதேதிருமேவியபொன்மனையிற்
புக்கினனார்கலன்மெய்யினிறைந்திடுபோதமர்மின்பணிய (௩௪௮)

மாரனருட்சுதன்வாணனளித்திடுமங்கைதன்னொடெய்தி
வேரியுறுங்கமலத்திருவின்னடிவீழவிதர்ப்பன்மக
ளார்வமோடாசிபகர்ந்துடைமின்னினையன்பினணைத்திடலு
மேருறுமிரதியையடிதொழுதேமனையேகினன்வேள்சுதனே (௩௪௯)

இடரறவேயெதிரெய்தியுருக்குமியெழிலுறுகணவனிணை
யடிமிசையன்பினிறைஞ்சிடநாயகிதன்னையணைத்தன ளு
லுடையெதிர்வந்தயர்முன்னவடாளினிறைஞ்சியுவந்திடவே
துடியிடையாரிருதேவியரோடுதுலங்கினன்வேள்சுதனே (௩௫௦)

வாணசுரப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪௮௪௮.

---

## ௪௦௫-வது மகதராசன் வதைப் படலம்.

---

உலகெலாம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்
தலகையினுயிர்செகுத்தரவினாடியே
சிலகையினிறுத்திபஞ்செற்றுமல்லர்க
டலைகளைந்திடுமையன்றாளையேத்துவாம் (௧)

மாறிலாவிதர்ப்பர்கோன்பயந்தமாதுட
னூறியகலவிசெய்துவகைவிஞ்சவே
யேறுறுமிறையவனிடரைத்தீர்த்திடு
நாறுபூந்துழாயன்வீற்றிருக்கும்நாட்டனில் (௨)

வாரியிற்கதிரவன்வந்துதோன்றவே
யாரியனிருக்கினிலருக்கியமளித்
தேருறுமறையவர்க்கியைந்ததானங்க
ளீரொடுமளித்தனனிருபர்போற்றவே (௩)

கோபமிலந்தணராசிகூறவே
சோபனமரிவையர்சொல்லவெண்ணிலாந்
தீபமுமடந்தையரெடுப்பத்தேன்மலர்
நாபியனிலங்கினனகரேத்தவே (௪)

சீருறுநவமணிசிறந்ததேரின்மேற்
முருகன்கோல்கொளச்சங்குதுந்துமி
வாரிபோன்முழங்கவந்தியர்களேத்தவே
வீரியனிகரின்மண்டபத்தின்மேவினான் (௫)

வாசவன்கொணர்சபாமண்டபந்தனி
லேசிலாநவமணியிலங்குமாசனந்
தேசுறச்சத்திரந்திகழச்சாமரை
வீசவீற்றிருந்தனன்விளங்குமாழியான் (சு)

உத்தவன்சாத்தகியுயரும்வேளவன்
புத்திரன்சாம்பனேடுலப்பில்பொற்புடை
வித்தகக்குமரர்கள்விளங்கவெண்மைசேர்
நித்திலப்பந்தரினிறைந்துசூழவே (எ)

மீனினஞ்சூழ்ந்தவெண்மதியமானவே
யீனமிலரசரெம்மருங்குமொய்த்திட
மானவனிலங்கவானரம்பைநாணநற்
பானகுமொழியர்கீதங்கள்பாடினார் (அ)

பணவமோடிலகியதாளம்பாரினி
லிணையிலாவுரும்சச்சரியிரட்டவே
மணமலிமலர்க்குழலசையமாதிலாக்
கணைநிகர்விழியினார்நிருத்தங்காட்டவே (கூ)

மாதவரரசரெம்மருங்குஞ்சூழ்ந்திட
யாதவனிவ்வுளியிருக்குமெல்லையின்
பூதலத்தரசர்கள்விடுப்பப்போந்ததோர்
தூதனற்புதனவண்வந்துதோன்றினான் (கo)

வாயிலோரற்புதமனிதன்வந்தமை
யேயெனுமுன்னர்வந்தியம்பமாதவன்
றாயவன்றனைக்கொணர்கென்றுசொல்லலும்
நேயமோடணுகினனிருபர்தூதுவன் (கக)

வந்துமுன்வணங்கியவவனைமாயவ
னெந்தமாபுரியுனக்கிவணென்முன்னரின்
முந்தியகருமநீமொழிதியாலெனச்
சுந்தரகேளெனத்தொழுதுசொல்லுவான் (கஉ)

தரணியிற்கொடுவினைதழைப்பவாழ்கின்ற
நிருபனுமகதர்கோனெறியையோவியே
திருவிலிசிறையிடத்தியங்குமன்னவ
ரிருபதினாயிரரேவவெய்தினேன் (கங)

நரகனையமரினில்வதைத்துநன்றிசா
லரசர்கள்சோடசவாயிரத்தவர்
பருவரலொழித்திடும்பரமவீண்டிவர்
தெருமரலகற்றுதியென்றுசெப்பினான் (கச)

மாரதர்வாண்முகநோக்கிமாயவன்
பேரிதவசனமேபேசுந்தூதன்சொல்
வாரிதியமுதநேரென்னுமுன்னமா
நாரதனவ்வுழிநண்ணினனரோ (கரு)

சுரர்முனியடைந்திடத்தூயமாதவ
னரசரோடெழுந்தவனடிவணங்கலும்
பரிவுடனாசிகள்பகரமாழையால்
வரிசையாராதனம்வழங்கினனரோ (கசு)

ஆதனத்தருந்தவனிருக்கவச்சுதன்
மாதவவெவணிருந்திவணின்வந்தனே
யோதுதியென்றலுமுயர்ந்தவொண்முனி
சீதரன்வியப்புறச்செப்பலுற்றனன் (கஎ)

நீதிலாவிந்திரப்பிரத்தஞ்சேர்ந்தியான்
யாதவநாயகாவெய்தினேனென
மாதவன்மகிழ்ந்துயர்தருமன்வண்மையை
யோதுதிமுனியெனவுரைக்கலுற்றனன் (கஅ)

அனுசர்கள்சூழ்ந்திடவறஞ்செய்தன்மனே
வனசமார்திருவவண்வைகமாமணிப்
புனைசபாமண்டபம்பொருந்திப்பாரினைக்
குனிசெயாதுயர்ந்தசெங்கோல்கொடாள்கின்றான் (கக)

மதியிவர்வெண்குடைவயங்கமன்னவர்
துதிசெயத்துவாதசவாயிரத்தர்மா
சதுமறையறிபவர்தழைப்பவாழ்கின்று
னெதிரிலாத்தருமனென்றியம்புவானரோ (உ0)

நீண்டகன்றழகெலாநிறைந்தகண்ணிலு
ணேண்டியவிளக்கெனத்தூயமாதவம்
பூண்டகற்புடையபாஞ்சாலிபொற்பமர்
பாண்டவர்க்கைவரைப்பரிந்துபெற்றனள் (உக)

தீவினையொருவருச்சுனற்குத்தென்னவன்
பாவையும்பன்னகன்பயந்தலூகியுந்
தேவகியருளியசெல்வநங்கையு
மூவரும்பெற்றனர்சுதர்கண்மூவரை (உஉ)

இன்னலின்மைந்தர்களெய்தவேமகிழ்ந்
தொன்னலர்வென்னிடவுயருமாநெறி
துன்னிடத்தருமன்வெண்குடைதுலங்குமா
மன்னவர்திலகனுய்வயங்குநாட்டனில் (உங)

மறலிதன்னவையினிற்பாண்டுமன்னவ
னுறைவுழியானவணுற்றகாலையிற்
றிறலுடைநிருபனென்சேய்க்கென்செய்கைதா
னறியநீவிளம்புகென்றறையலுற்றனன் (உச)

நன்னெறியோம்பியேநடத்திவாழ்கின்ற
தன்னையும்பயந்தியான்சமனுலோகத்தில்
மன்னுவதேழமைவலாரிவாழ்பதிக்
குன்னுமுனெய்தயானுபாயங்கூறுகேன் (உரு)

இன்னல்கடிணியவேயிராசசூயமா
மன்னநல்வேள்வியையமைத்துளானெனின்
மன்னுவன்மகபதிநகரையென்றுமன்
சொன்னசொல்லுதிட்டிரனறியச்சொல்லினேன் (உசு)

தந்தைசொற்கேட்டுயர்தருமனெந்திடுஞ்
சிந்தையன்பிதாவுயர்கதியைச்சேர்ந்திட
வந்தணரிலங்கவேயிராசசூயமா
மந்திரவேள்வியைவளர்க்கவெண்ணியே (உஎ)

மாதவனிவையெலாமாயவன்றனக்
கோதியேபருவரலொழியவொல்லையின்
யாதவன்றன்னொடுமெய்தவாயென்று
ஞுதலின்வந்தனனமலவென்றனன் (உஅ)

சுரர்முனியிவையெலாஞ்சொல்லத்தூயவன்
றருமன்மாவேள்வியைநடத்தச்சார்துமோ
வரசர்தஞ்சிறையினையகற்றச்சேர்துமோ
வுரையெனவுத்தவனுணர்ந்துகூறுவான் (உகூ)

இந்திரப்பிரத்தமாநகரினெய்திநற்
குந்திதன்சுதரொடுங்கூடிப்பின்னரின்
மந்திரமுணர்ந்துமேல்வருவசெய்கெனப்
புந்தியின்மிகுத்தவுத்தவன்புகன்றனன் (௩0)

உத்தவனுரைநலனென்றவுத்தமன்
மைத்துனன்வயங்கியாள்வண்மைசேர்பதி
யத்திமாவிரதமோடணிகமெல்லவு
மொத்துமுற்செல்கெனவுரைபகர்ந்தனன் (௩௧)

மாதவனிவ்வுரைவழங்கவள்ளுவர்
போதகமிரதமாவனிகம்போர்மனர்
தீதிலாத்தருமன்வாழ்பதியைச்சேர்மினென்
றோதியேயறைமுரசுததியொத்ததால் (௩௨)

முரசொலியெண்டிசையுறலுமூரிமா
விரதமோடிபநிரையெண்ணில்வீரர்கள்
கரைசெயற்கரியதோர்களிப்புமல்கவே
தரையினிற்றுகள்விணிற்றுவவேகினார் (௩௩)

சூலம்வாள்கப்பணமுசுண்டிதோமரங்
காலவேலெழுமழுக்கணையமீட்டிமுட்
கோலொளிர்வரிசிலைவயங்கக்கொற்றவர்
ஞாலமேற்பரிகரிநடக்கவேகினார் (௩௪)

கரியினங்கருங்கடல்கடுப்பவேகின
பரியினநதியெனப்பரந்ததெங்கணுந்
தெரிமணிவயங்கியதேர்கண்மங்குலின்
சுரருறுவிமானமேயேலத்தோன்றிய (௩௫)

கொடிகுடைகவரிகண்மிடையக்கோதிலாப்
படியெலாமிருண்டிடப்பைம்பொற்றேர்மனர்
சுடர்மணிக்கலன்களாற்றுலக்கிக்காட்டுவ
வடர்மருளறவருமரியையேலவே (௩௬)

நாகமேலமர்ந்தெழினலங்கொண்மங்கையர்
மேகமேல்வயங்கியமின்னேமானவே
யேகினாரிணைவிழியிலகக்கேகையத்
தோகைபோன்மலர்க்குழலழகுதுன்னவே (௩௭)

குங்குமங்கருப்புரங்குழைத்தசந்தனம்
நங்கையரிருதனத்தணிந்துநாண்மலர்
மங்குலைச்சுமந்துகீழ்வளைவயங்கிடும்
பங்கயமிலங்கநற்பரியினேகினார் (௩அ)

காலணிநெகிழிகண்மிழற்றக்கைவளை
யோலமிட்டிலகவேயுவமைகூறொணா
நூலிடைநுடங்கியநோக்கினாடவர்
மாலெழுமலர்க்குழலசையவந்தனர் (௩௯)

காசணியிருதனங்கதிப்பவாசமே
வீசியகுழற்பினல்வெரினில்வீழமை
மாசுணமேலுறுமதியம்போலவே
யேசிலாவாநநமிலங்கவெய்தினார் (௪௦)

கனகமேகலையல்குற்றேர்கொடேகவின்
குனிசிலைப்புருவமுங்கோட்டிக்கட்கணை
யனநடையணங்கனார்விடுப்பவாடவர்
மனமெலிந்தியமிரதத்தின்வாடினார் (௪௧)

கதமுறநடந்திடுங்கரியினங்களின்
மதமுறுமருவிகண்மண்ணின்மல்கிய
நதியெனப்பெருகவேநங்கைமார்கடம்
பதிகரமிருகையாற்பற்றியேகினார் (௪௨)

பாடகமிலங்கவான்பருதிவெம்மைபால்
வாடியேவருவநிதையர்க்குவீரர்கள்
கேடகநிழலுறக்கிட்டித்தாங்கித்தம்
மாடகத்தூசவரடியினாக்கினார் (௪௩)

தாரணியுறுங்குழல்சரியவாநந
வேர்வழித்துச்செலுமின்னனார்கள்கைக்
காரணிக்கலுழியிற்காந்தன்கையினாட்
பேரளியுடனளித்தவர்பின்சென்றனர் (௪௪)

அந்தணரரசர்கட்காதிகூறியே
குந்தியநடையினர்குடைகைதாங்கிநீ
டந்திகளிவுளிதேர்த்தையலார்திரள்
வந்திடவிலங்கியவழிகொண்டாரரோ (௪௫)

ஔவியமவித்துநான்மறையினார்பொருள்
வெளவியசிந்தைமாதவர்கள்சூழ்ந்திட
வெவ்விடப்பணிமணிமிளிருநித்திலங்
கௌவியசிவிகைமேற்கற்கனேகினான் (௪௬)

உருக்குமற்கிளையவுத்தமியொண்மாமணி
வருக்கமார்சிவிகைமேல்வயங்கவானுளோ
ரிருக்கறைந்தெழின்மலர்தூவியேத்தவே
முருக்கிதழ்வாயினார்மொய்ப்பவேகினாள் (௪௭)

சத்தியவாமைசாம்பவதிகாளிந்தி
பத்திரைநாக்கினசித்துப்பண்மொழி
மித்திரவிந்தைமெய்விளங்கிலக்கணை
நித்திலச்சிவிகைமேனெறியினேகினார் (௪௮)

எண்ணிரண்டாயிரத்தேற்றநூற்றுவர்
பெண்ணருங்கலமனார்பிறங்குமாமணி
வண்ணமார்சிவிகைமேல்வாமமல்கிட
விண்ணவர்மடநலார்வெள்கவேகினார் (௪௯)

குயிலெனமயிலெனக்கோதிலோதிமத்
தியல்பெனவெண்ணிலாவெழில்கொண்மாதரா
ரயில்விழியிலங்கிடவயகமெங்கணும்
புயல்வணன்றேவியர்மருங்கிற்போயினார் (௫0)

மதிவணன்சாத்தகிமாரன்மற்றவன்
சுதனெழிற்சாம்பனோடிவரைத்தூயமா
வெதிருமொன்னலரைவிண்ணேற்றிவாரிசூழ்
பதியினைக்காவுமென்றுரைபகர்ந்தனன் (௫௧)

சாரதிதாருகனுகைச்சக்கர
நாரதமுனியொடுநன்பொற்றேரின்மேற்
பேரிதவெள்வளையொலிபெருக்கவே
மாரதர்திசைதொறும்வணங்கவேகினன் (௫௨)

ககபதிக்கதலிகைக்ககனமோங்கவான்
மகபதிமுதலினோர்மலர்கவேவே
நகபதிமருகன்வில்முறித்தநாரணச்
செகபதியேகினன்றேரின்மீதரோ (௫௩)

சாமரைபுரளநற்றாளவெண்குடை
சோமனைநிகர்த்தெழிறுலங்கநீலமா
மாமலையுச்சியின்வயங்குசெங்கதி
ராமெனக்கிரீடமீதமரவேகினன் (௫௪)

மன்னவர்மருங்குறவாசிதேர்கரி
துன்னவேவீரர்கணிறைந்துசூழ்ந்திட
முன்னமீரேழுலகளந்தமூர்த்திபொன்
சின்னவோசைகடிசைசேரவேகினன் (௫௫)

துந்துமிபடலிகைதுடிகையம்புலி
நந்துகாகளஞ்சினநகிபிகம்பலை
முந்தியபணவமாமுரசுபம்பைகள்
சிந்துவினொலிகெடமுழங்கச்சென்றனன் (௫௬)

கறையடியிடர்கெடக்கராவைபட்டகோன்
மறையவராசிகள்வழங்கவான்மிசை
நிறையுமாதவர்நெடுந்தேவர்தூவிய
நறுமலர்வெறிநெறிநாறவேகினன் (௫௭)

இவுளிகளிபநிரையெண்ணில்வீரர்கள்
நவமணிநிறைந்திடநலங்கொடேரினம்
மவனியினெழுதுகளடர்ந்துபொன்னகர்
புவியினைநிகர்த்திடப்போயினனரோ (௫௮)

வேறு. அவனியினிலங்குமத்ததேசத்தையடைந்தேயையன்
றவர்களெண்சவுவீரப்பேர்ப்புரியினைச்சார்ந்தங்கோவி
நவமணிநிறைந்தேயோங்குநலமருநாட்டிற்சேர்ந்து
பவமிலவனசநற்பேர்ப்பதியினையொருவிப்போனான் (௫௯)

வேறு. முரசினொடுதுந்துமிமுழங்கிடவெழுந்தே
யரசர்திரடேரிடையமர்ந்துவரவேகிப்
பிரசமுமிழுங்கிரியினூடுபிரயாகைச்
சரசுபதியென்னுநதிசக்கரனிருந்தான் (௬0)

கூலமிசைவாளைகயல்சேல்கள்குதிகொள்ள
வாலொளிர்கொளும்வளைவராலொடுமெதிர்ப்ப
வேலையொலியஞ்சவறையுந்திரைவிசைப்ப
ஞாலமிசையோடியதுநன்னதிபரந்தே (௬௧)

பங்கயமலர்ந்ததுறைதோறுமளிபாட
மங்கையர்குறங்குநிகர்வண்கதலியெங்குந்
தங்கிநிறையக்கமுகுசந்தனமரங்க
ளெங்குமிருபக்கமுமிலங்கந்திபொங்க (௬௨)

தூயநதியின்கரைதுலங்கியபொழிற்கே
மாயனுயர்தேவியர்வயங்கிடவமர்ந்தா
ராயுமறைவேதியருந்தவர்களெல்லா
மீயுயர்பிறங்கன்முழையெய்தினர்விரும்பி (௬௩)

வாசிகரிதேர்நிரையினோடிலகமன்னர்
பாசிழைவயங்கவருபாவையர்களோடும்
வீசுதிரையின்கரைவிளங்குகடிகாவி
லோசையுறுவேலையவணுற்றெனவமர்ந்தார் (௬௪)

வேறு. சுகமுறுஞ்சுகஞ்சூழ்ந்திடுஞ்சோலைவாய்
பகடுறும்பகடெங்கும்பரந்தன
சிகையுறுஞ்சிகியின்னினஞ்சேர்ந்தபோ
னகையுறுங்நகைநாரியர்துன்னினார் (௬௫)

பவர்பகட்டினம்பாதவம்பேர்த்தெழக்
குவிதனத்தியர்கொட்புற்றிரிந்தன
ருவரிபோலறைதூம்பினவோசையாற்
கவணவொண்கவியாவினகாவெலாம் (௬௬)

வேறு. பயம்பயம்பிரித்தபாற்றந்தபாற்புறுங்
கயங்கயங்குடைந்திடக்கானமாமென
வியம்புயம்புயத்தொரீஇச்சூதமேகச்சந்
தியந்தியங்கெய்தவந்தணர்கள்செய்தனர் (௬௭)

சாடரம்பைக்கனிசாடரம்மல்கக்
கோடரமொருவிக்கோடரமருந்திய
பாடரங்கினிலப்பாடரிப்பிணை
யோடரவிந்தமோடரியுற்றேறின (௬௮)

ஆசினியாசினியணவநீண்டடர்
காசினியுறமதுக்கான்றகாசினம்
வீசினகதிரவிர்வீசினப்பொடி
பூசினகேசரம்பூசல்செய்தரோ (௬௯)

போதில்காம்போதியைப்புகலச்சிகர
மேதிமேதினிக்கயமேவமாங்கனி
கோதியேகோதிலாச்சுகங்கள்கொஞ்சவே
யோதியோதியர்களொண்வீணையோதினார் (௭0)

வேடணையுதவியமின்றொடெண்மருஞ்
சோடசவாயிரத்தொகையொடேசதங்
கூடியவனிதையர்குழாமுஞ்சேரமா
லோடுமாநதியினீராடலுற்றனன் (௭௧)

பொருப்பெனவளர்முலைத்தடத்திற்பூசிய
கருப்புரக்கலவைகள்கரையநூலினு
மருப்பநுண்ணிடையரச்சுதன்றன்னொடுமே
விருப்பமுற்றயவிளையாட்டின்மேவினார் (எ௨)

புதிதலர்பங்கயம்போன்முகத்தியர்
நதியினிற்படிந்தெழுநாரம்விஞ்சிய
வுததியிற்றிருப்பலவுருவமாகிய
விதமெனவெங்கணும்விளங்கினாரரோ (எ௩)

அளிதொடர்ந்தாடவேயனசனீருற
நளினமென்முகத்தியர்நாரணன்றனை
வளைபவர்மரகதமலையைச்சுற்றிய
வொளிர்கொளுந்துகிற்கொடியொத்துத்தோன்றினார் (எ௪)

அரிவையர்நதியினுளாடப்பொங்கிய
திரையினுளமிழ்ந்தசெங்கமலத்தேன்மலர்
வரிநெடுங்கண்ணினார்வதனமாண்பினைச்
சரியொவோமென்றயந்தாழ்வபோன்றவே (எ௫)

மின்னியமுகிலெனவிளங்கும்மாழியான்
றன்னுபங்கயமலர்பறித்துச்சோர்விலா
வன்னமென்னடையவர்க்களிப்பவோர்மிகுண்
முன்னமீந்திலையெனமொழிந்துசீறினாள் (எ௬)

அரிவையர்சுற்றவேயயத்துளாடிய
கருமுகிலெனவொளிர்கமலக்கண்ணினான்
சரியிலாக்கரிபிடியினத்தொடுஞ்சல
மருவியவியல்பெனவயங்கினனரோ (எஎ)

சுதைதருமொழியுடைத்தூயவாணகை
மதிமுகமடந்தையர்மருங்குசூழ்ந்திட
நதியினுட்குடைந்துயர்கரையினண்ணியே
புதியபொன்னுடைமால்புனைந்துநின்றனன் (எ௮)

ஏசகல்கிரிமிசையெழுந்தவென்றெனக்
கேசவன்சென்னியிற்கிரீடமோங்கவே
மாசகல்கலன்மெயில்வயங்கமாழைசேர்
தூசுநன்மருங்கினிற்றுலங்கநின்றனன் (எ௯)

உழையெனும்விழியர்பொற்றூசுடுத்துமை
யெழிலிசூழ்மதியெனமுகமிலங்கநற்
கழையினைவென்றதோள்வயங்கக்கையினாற்
குழலினிற்புனலறக்கோதிநின்றனர் (அ0)

நீலமார்கவரிபோனிறைந்தவோதியின்
கோலமார்மலரிணையணிந்துகோதிலா
வேலைநேர்விழியின்மைவிளங்கமெல்லிதட்
காலினூபுரங்கதிரெரிப்பநின்றனர் (அ௧)

ஓவியநாணவேயுருக்கொண்டோங்கிய
தேவியர்கலன்மெயிற்றிகழச்சூழநற்
கோவியர்துகிலொடுங்குருந்தினேறினான்
காவினன்மலர்கொயக்கருதியேகினான் (அ௨)

ஆசகன்மெய்யினல்லாரம்வில்லிட
வேசகன்முலையினிற்கலாரமின்னவே
வாசமார்கலவைகளணிந்துமாமழையின்
றாசுமீமேகலைதுலங்கத்துன்னினர் (அங)

நாகமாரம்வளைநாளிகேரம்நீள்
பூசமாம்பிரமலர்பொலியுஞ்சண்பக
மேகமார்மாதவிமிளிருய்யானத்தின்
ரோகைமாருடனிறைதுலங்கினனரோ (அச)

கோகிலங்கூவிடச்சுகங்கள்கொஞ்சிட
நாசமேலளியினநாதம்விஞ்சிடக்
கேகயமாடவேகிளர்ந்தசோலையின்
பூகமாங்கனியுதிர்த்தோடனேக்கினர் (அரு)

குழலினுற்கேகயமொதுங்கக்கோதிலா
மொழியினுற்கோகிலமுடுகிப்பாறவே
யெழில்கொண்மாநடையினேதிமங்களேகிட
வழகியவணங்கனர்மலர்கொய்தாரரோ (அசு)

தளவுமென்வலம்புரிசரியின்மௌவறண்
ணளியுறுகருமுகையான்றபட்டிகை
கிளர்வளைபாடலம்வகுளம்கேகைய
வளனுறுசாயன்மங்கையர்கள்கொய்தனர் (அஎ)

கிதநற்கிதமேகிளர்த்தக்கேழிலாச்
சூதமேற்சம்பரன்சூதன்காகள
நாதமல்கிடச்சகநாதன்றேவியா
மாதர்மாதருமலர்மகிழ்ந்துகொய்தனர் (அஅ)

வேலிணைவிழியினர்மிடைந்துசுற்றவே
மாலவரொடுமலர்பறித்துவண்மைசேர்
சோலையினிருந்துநற்றொடையல்சூட்டிநற்
பாலனமருந்தினன்பாவைமாருடன் (அகூ)

வெள்ளடைக்காயமுதருந்திவித்தக
வள்ளறன்றிருவுளமகிழ்ந்ததேவியர்
தெள்ளியவிளரியாழ்செங்கைதாங்கியே
யொள்ளியவசுணமும்வியப்பவோதினர் (கூ0)

தெரிவையர்புருவநற்சிலைகுனிக்கிலார்
மருவமர்குழலியன்மயிலனர்பெருங்
கருமைசேர்நெடுங்கணர்கற்புற்பாதவ
முருகநல்வீணைகையுறவங்கோதினர் (கூக)

தும்புருநாரதர்தியங்கச்சூர்கிகர்
வம்பவிழ்குழலியர்மதுரகீதயா
ழம்புதவமிர்தெனவறையக்கேட்டரு
ளெம்பரனுயயாதவனின்புற்றனன் (கூஉ)

ஆதவன்குடகடலுறவருக்கியஞ்
சீதரனளித்தருக்குமணித்தேன்முதன்
மாதர்கட்கத்தனைவடிவமாகியே
யோதமரமளியிற்புல்லினனரோ (கூங)

மங்கையர்கொங்கைமார்பழுந்தமாதவன்
செங்கையிணைத்துநற்கலவிசெய்யவே
கங்குன்மின்னுறக்கழிந்தபோலவா
னெங்குமூடிருளறவிரவிதோன்றினான் (௯௪)

வாரியிற்கதிரவன்வந்துதோன்றலு
மாரியனருக்கியமளித்தம்பொன்னினார்
தேரின்மேல்வயங்கிநற்சேனையார்த்தெழப்
பேரிகாகளத்தொலிபெருக்கவேகினான் (௯௫)

**வேறு.** தூயபாஞ்சாலதேயமொருவிநீர்த்துறையிற்சங்கு
மேயுமாவிராடனாடுமகன்றுவெவ்வினைகளெல்லாஞ்
சாயவேதருமமோங்குஞ்சக்கரப்பிரத்தமோவி
மாயன்மாதருமனாட்டின்வண்மைகண்டுவந்தான்மாதோ (௯௬)

கன்னலொண்கதலிபூகங்கவினுறுபழனமெல்லாஞ்
சென்னெலின்பெருக்கமெங்குஞ்சிறந்திடவரம்பின்மீதி
னன்னம்வந்திருப்பச்சங்கமடரநித்திலங்கள்பாரின்
மின்னவேமணங்கொள்பூங்காவிளங்கியபலவுங்கண்டான் (௯௭)

மாதராநநங்கள்போலவலர்ந்திடுவனசவோடை
மேதிவீழ்ந்துழக்கவாளைவெருவியேகரையிற்பாயச்
சூதமேற்குயில்கள்கூவச்சுகவினமிழற்றவண்டி
னாதமேழிசையுநல்கநதிபரந்தோடக்கண்டான் (௯௮)

ஆலைவாய்ப்புகையுந்தூயவந்தணர்வேள்விமுற்றுஞ்
சாலைவாய்ப்புகையுமாதர்தமணியமனைகடோறும்
பாலுடனடிசிற்பாகம்பரிந்தடுபுகையுமோங்கிக்
கோலமார்வானிற்கொண்மூக்குறுகியேயடரக்கண்டான் (௯௯)

ஆவெலாமலியத்தூயவந்தணர்மறைகளோது
நாவினாமகளுமெய்யும்விரசநன்னெறிகண்மல்கத்
தேவராலயங்களெங்குஞ்சிறந்திடுதருமனாட்டை
மாவின்வாய்பிளந்தானோக்கிமகிழ்ந்துமாநெறிசெல்வேலை (௪00)

**வேறு.** தூதுவரோடினர்மாதருமன்னிடைதுன்னிமகிழ்ச்சியொடே
யாதவன்வந்தனனாரணன்வந்தனனுன்னிடரைக்களையு
மாதவன்வந்தனன்மாயவன்வந்தனன்வாமனன்வந்தனனஞ்
சீதரன்வந்தனனென்றிருகைதொழுதாடினர்சீருறவே (௪0௧)

கேசவன்வந்தனனென்றமிர்தச்சொல்கிளத்தியதூதுவர்கட்
காசகலுங்கலனாடையளித்துயரார்வமுறுந்தருமன்
வாசவனூருடனேயளகாபுரிநாணவிம்மாநகரந்
தேசுறவெய்தியலங்கிரதஞ்செயுமென்றுரைசெய்தனனால் (௪0௨)

மன்னனுரைத்திடவள்ளுவரெங்கணுமாமுரசெற்றிடவே
துன்னினர்மாநகர்வீதிநிறைந்துதுலங்கிடவாடவர்கள்
கன்னன்மணங்கமழ்பூகமொடேவளர்கதலிகள்கதலிகைகள்
பொன்னினன்மாலைவயங்கிடநீடொடைபொலியநிறைத்தனரால் (௪0௩)

தேரணிவாரணமாவுயர்மன்னர்சிறந்திடுவீதியெலாந்
தோரணமல்கிவயங்கினநித்திலமாலைதுலங்கிடவே
பூரணபொற்குடமெங்குமிலங்கினபொன்னின்விதானமுற
வாரணிகொங்கைமடந்தையர்தீபநிறைத்துமகிழ்ந்தனரால் (௪0௪)

வீடுமகன்மனளித்தருண்மெல்லியலோடொளிர்வெண்ணகையார்
கூடவியாதவன்வந்தனனென்றுரைகூறமகிழ்ச்சியொடும்
பாடினர்பண்ணுறவேபனிநீர்கள்பரந்திடவீசியெழுந்
தாடினரோடினராடவரோடளியாடளகத்தியரே (௧௦௫)

கோபுரமண்டபம்வேதிகைதுன்னியகோயில்வயங்கிடவே
தீபநிறைந்தனதுவசமிலங்கினதேவர்களுநரெனவாய்த்
தூபநறும்புகைவிஞ்சியவெறிகமழ்தொடையல்விளங்கியதாற்
பாபமறத்திருவைகிடவேயரசாடருமன்பதியே (௧௦௬)

பொன்னகர்மாசுறவேயழகெய்தியபுதுமணியாரமெலாந்
துன்னிவயங்கியபதியெழினோக்கிமகிழ்ந்தருள்குந்திசுதன்
பின்னவர்சூழவெழுந்துயர்தேர்மிசைபேரிகறங்கிடமா
மன்னர்மருங்குறவேயுயர்மாயனையெதிர்கொளவந்தனனால் (௧௦௭)

வாசிகலித்திடமதகரிபிளிறநன்மணியிரதங்களுரு
மோசைமிகுத்திடமுரசநெடுங்கொடியும்பரினுற்றிடவே
யேசில்புகழ்த்தருமன்னிளையோரணிகங்களுடன்னிலக
யோசனையொன்றுகடந்தெதிர்கொண்டனரொப்பிலவுத்தமனை (௧௦௮)

அன்புமுன்னுற்றிடவருவினைபின்னிடவனிகமதின்னடுவே
யென்புருகப்புளகம்மெயின்மல்கிடவெதிர்வருதருமனையே
துன்பமகற்றியசோதியெதிர்ந்தவனடியிணைதொழுதிடலுந்
தன்பதமீதுவணங்கியவரியின்மெய்தழுவினன்வீமன்முனோன் (௧௦௯)

வீமன்முனெய்திவணங்கியமாயனைமெய்யிருகத்தழுவச்
சோமனைநிகரிடுமாநநமகபதிசுதனெனவாழ்விசயன்
மாமுகில்கண்டமயூரமெனக்களியெய்திடவருமவனைத்
தாமமழுந்துறமார்பினணைத்தனனியாதவர்தம்பெருமான் (௧௧௦)

மத்திரன்மருகர்களிருவருமெய்திவணங்கியெழுந்தவரை
யத்தியினரவினமர்ந்தருளச்சுதனன்பினுடன்றழுவி
நத்தொடுபேரிகறங்கிடவீதியினன்மணியிரதமிசை
மைத்துனமாரொடுமெய்தினன்மண்மிசைவானவர்மலர்சொரிய (௧௧௧)

**வேறு.** குந்திதன்மைந்தர்சூழக்கொடிகுடைகவரியோங்கத்
தந்திகளிவுளியீட்டந்தமணியத்தேர்கள்சுற்றத்
துந்துமிபணவஞ்சின்னந்துடிகைழாமுரசமார்ப்ப
விந்திரப்பிரத்தம்புக்கானிணையிலியாதவர்கள்கோமான் (௧௧௨)

மானெனவனத்தின்கூட்டம்வருவனபோலமஞ்ஞை
தானெனச்சுதங்கைகொஞ்சத்தமனியஞெகிழியார்ப்பத்
தேனினம்விரும்புமாலைசெறிகுழலசையமாதர்
நானமெய்கமழவந்தார்நாரணன்றன்னைக்காண (௧௧௩)

காவியுங்காயாம்பூவுங்கருமுகினிறமுநாண
மாவுறுமணித்தேர்மீதுவருகின்றமாலைநோக்கி
யாவியுநையத்தூசுமாழியுமவனிவீழ
வோவியம்போலநின்றாரொப்பிலாவுருவமாதர் (௧௧௪)

மாளிகைவாயிறோறுமண்டபமிசைகடோறுஞ்
சாளரநெறிகடோறுந்தாமரைமலரின்றுய்ய
வாளிணைவயங்கிற்றென்னமதிமுகங்காணநோக்கிக்
காளமாமுகிலொப்பானைக்கண்டிவைகழறலுற்றார் (௧௧௫)

ஓதுதற்குவமையில்லாவுருவமேயொளிரநீலப்
பூதரமென்னவோங்கும்புயலெழிலுடையனுன
சீதரன்றனக்குத்தூயதேவியராகிவாழு
மாதரெத்தவஞ்செய்தாரென்றுரைத்துளம்வாடினுரால் (ககசு)

நாரணனழகைநோக்கியிமைக்கிலாநயனராகிப்
பாரினில்வளைகடுயபசும்பொனின்கலைகள்வீழ
வேருறுமணங்கனுர்களொழுதுமோவியம்போனிற்பச்
சீருறுதருமன்கோயிற்சேர்ந்தனன்றிருவின்கேள்வன் (ககஎ)

வாருறுமுலையினுர்கண்மங்கலகீதம்பாடக்
காருறுகுழலினுர்கள்கருப்புரத்தீபமேந்த
வேருறுமறையோராசியியம்பிடத்தருமன்கோயி
லாரியனெய்திக்குந்தியடிமிசைவணங்கினுனல் (ககஅ)

மருகன்வந்துவகையோடும்வணங்கிடக்குந்திதேவி
யுருகியமனத்தண்மெய்யினணைத்தவனுச்சிமோந்து
பெருகியவன்பினுலேபீதகப்பீடமீதின்
முருகவிழ்தொடையான்வைகமுகமலர்ந்தாசிசொன்னுள் (ககக)

தூயபாஞ்சாலன்பாவைசுபத்திரைதென்னன்பெற்ற
வேயுறுமிருதோணங்கைமின்னிடையுலூகியொடு
மாயவன்மலர்ப்பாதத்தின்மகிழ்வினுல்வணங்கிநிற்ப
வாயிரநாமத்தையனுசிகள்பலவுஞ்சொன்னுன் (கஉ0)

ஒருகையிற்குன்றேந்தையனுயர்சுபத்திரையாநாமப்
பொருகயல்விழியாள்பெற்றபுதல்வனுமபிமன்றன்னை
மருகனென்றணைத்துமாழைவயிரநற்கடையர்துய்ய
விருகையிற்சேர்த்துமார்பினணிந்தனனிலங்குமாரம் (கஉக)

துன்னுபொற்கலன்கண்மல்குந்துரோபதைசுதரைவர்க்கும்
பன்னகவரசன்பாவைபயந்திடுகுமரனுக்குந்
தென்னவன்மகடன்சேய்க்குஞ்சிறந்தபூடணங்களெல்லாம்
பின்னைதன்மணளனீந்துபெரிதுவந்திருந்தான்மன்னே (கஉஉ)

சுந்தரவிதர்ப்பன்பெற்றவுருக்குமற்கிளையதோகை
நந்தணிகரத்தராயநங்கையருடனுமெய்திச்
சிந்தையின்மகிழ்ந்துகுந்திதேவியையிறைஞ்சலோடும்
முந்தியமகிழ்வினுலேமொழிந்தனளாசிமன்னே (கஉங)

உருச்சமனிலாதமெய்யனுருப்பிணிமுதலோர்பாதத்
தருச்சனைசெய்துதுய்யவருச்சுனன்றேவிமாருந்
திருச்சமனென்னத்தோன்றுஞ்சிறந்தபாஞ்சாலிதானும்
மருச்சுருளளக்ந்தாழவணங்கியேமகிழ்ந்தாரன்றே (கஉச)

வந்தடியிறைஞ்சுந்தூயதுரோபதையபிமன்மாதாச்
சுந்தரவுலூகிதென்னன்றேகையரிவர்கடம்மை
முந்தியவுவகையோடுமுருப்பிணிமுதலாமாதர்
சந்தணிமுலையினுரமழுந்துறத்தழுவினுரால் (கஉரு)

தவர்களினதிகனுயதவுமியமுனிவனெய்த
வுவமையின்மாயனெய்திவணங்கலுமுவந்தநெஞ்சன்
சிவனிடர்களைந்ததேவதேவனுக்காசிகூறி
நவமணியிலங்கும்பீடத்தமர்ந்தனனவையிலாதான் (கஉசு)

கர்க்கவொண்டவனும்வீணைகரத்துறுமுனியுமெய்த
வர்க்கியமளித்துத்தன்மனனுசரோடடியின்வீழ
வற்கலைமருங்குசுற்றுமாதவர்மறையின்விஞ்சுஞ்
சொற்களினசிஃறிச்சுவணபீடத்தினுற்றார் (கஉஎ)

சரியிலாத்தவர்க்குவெவ்வேறிருப்பிடமளித்துத்தாழ்வி
லரியுளமகிழ்ந்துதுய்யவறுசுவையடிசிலன்னந்
குருகுலத்தைவரோடுங்கூடியாண்டமுதுசெய்தே
யிரவிமேற்கடலின்வீழயாவருந்துயின்றரன்றே (கஉஅ)

தினகரனுதயஞ்செய்யச்சிறந்திடுமுனிவர்சூழக்
கனகமார்மண்டபத்திற்கவரிகணிறைந்துவீச
வனகன்வீற்றிருப்பத்தன்மனனுசர்களுடனுநீதி
புனைகவினரசர்சுற்றும்பொருந்திடவிருந்தவெல்லை (கஉகூ)

சுந்தரன்வதனநோக்கித்தூயமாதருமனெந்தன்
றந்தையாம்பாண்டுவேந்தன்சமனுறையுலகமோவி
யிந்திரன்பதியினெய்தவிராசசூயத்தின்வேள்வி
முந்தியான்முடிக்கும்வண்ணமொழிகெனமுராரிசொல்வான் (கங0)

செயலழித்தரசர்தம்மைச்சிறையிலிட்டவனியாளுஞ்
சயிலநேர்புயத்தனனசராசந்தன்றன்னைச்செற்று
லியல்புடையிராசசூயவேள்வியையியற்றலாமென்
றுயரரிகூறக்குந்திகான்முனையுரைக்கலுற்றான் (கஙக)

அதிரதவரசர்தம்மைச்சிறையில்வைத்தவனியாள்வோன்
மதியமர்சடையோனுலும்வதைக்கொணுவலிமைமிக்கோ
னெதிரிலாமகதர்கோனையாவரேகொல்லவல்லா
ருததிசூழ்துவரையாளுமுத்தமவுரைத்தியென்றான் (கஙஉ)

தீமையில்செங்கோலோச்சித்திருவுறவுலகமாளுங்
கோமகன்மனத்தினோர்ந்துகூறியவசனங்கேளா
வீமனுன்மகதன்வீயவகைசெய்வேன்வெருவலென்று
தாமரைமலர்மேன்மங்கைநாயகன்சாற்றினுனல் (கஙங)

அரியிவைகூறத்தன்மனறனிலாமகதர்கோனைத்
திருவுறைமார்பாநீயேசென்றிவன்றன்னுற்செற்று
விரிவுளவிராசசூயவேள்வியைமுடிப்பாய்வீம
னுரமுளவிசயனேடுன்னடைக்கலமென்றேயீந்தான் (கஙச)

தருமனீதுரைத்தியாமுன்சரணமேகெதியாய்வாழ்வோந்
திருவினுயகனேகாத்தியென்றுசென்றடியின்வீழ
வரியிருகையினுரவணைத்துளமார்பழுத்தி
நிருபவுன்னிடரையெல்லாம்நீக்குவனென்றுசொன்னுன் (கஙரு)

குறைவிலாத்தருமன்றன்னையிருத்திநீயென்றுகூறி
யிறையவன்வீமனேடுமிந்திரன்சிறுவனேடும்
மறையவர்வேடந்தாங்கிமகதனைவதைக்கவெண்ணி
நெறியுறுவரையுங்கானுநீங்கியேகடுகிச்சென்றான் (கஙசா)

வேறு.

திருவிசையத்தொடுதிகழுமார்பொளி
ரரிவிசையன்கவியனுசனேடுமே
வருவிசைவாயுமும்மடங்குமானவே
கிரிவிரசன்னகர்கிட்டினனரோ (கஙஎ)

சரியிலாமண்டபந்தரளவேதிகை
பருமணிவயங்கியபசும்பொற்கோயில்கள்
கிரிநிகர்சிகரங்கள்கிளர்ந்துதோன்றிய
புரியினினன்மையைப்புகலலாவதோ (கங அ)

முரசொலியுருமெனமுழங்கவெங்கணு
மரசர்கடிறைகொணர்ந்தளிப்பவானுயர்
புரிசையினுஞ்சில்கள்பொலிந்துதோன்றிய
வரைசெறியிருபுயமகதன்வாழ்பதி (கஙௌ)

காரினமெனக்கடகளிறுதுன்னநற்
பாரினிற்கோடகந்துறையப்பன்மணித்
தேரினம்வயங்கிடச்சிறந்தபல்லியம்
பேரொலியுலகெலாம்பெருத்ததாமரோ (கச0)

எண்டிசையினுஞ்சமரெதிர்ந்துவென்றுயர்
மண்டலத்தரசரைச்சிறையில்வைத்தெழிற்
குண்டலமறையவர்குழாங்கள்சூழ்ந்திடத்
திண்டிறன்மகதன்மாமகஞ்செய்கின்றனன் (கசக)

தவத்தினர்மருங்குறத்தானமெண்ணில
புவித்தலமறையவர்க்களித்துப்பொன்னுறு
பவுத்திரமொளிவிரப்பரவவெண்குடை
கவித்திடுமகதர்கோன்மகஞ்செய்காலையின் (கசஉ)

சரியிலாமறையவர்வேடந்தாங்கிய
வரியுடனருச்சுனன்வியப்பவாடக
வரையிவரெயிலினைமுறித்துமாருதி
புரியிடைநெறியிடப்போயினாரரோ (கசங)

வீதியிற்கவினெலாம்விளங்கநோக்கியே
மாதவர்மலியமாமகஞ்செய்காலையின்
வேதியரெனத்திகழ்வேடந்தாங்கினோர்
தீதுறுமகதன்முன்சென்றுநின்றனர் (கசச)

வெற்பெனும்புயணிடிவெருவிவீழ்ந்திடச்
சொற்பகர்மகதர்கோன்றூயவேதிய
ரற்புதரிவரெனவறைந்துமற்றவர்
பொற்பதம்பணிந்தவண்போதுமென்றனன் (கசரு)

மாதவர்மறையவருறையுமண்டபத்
தாதனத்தமர்கிலாவந்தணாளரை
வேதியர்குழுவினின்மேவலீரிவ
ணேதுநுங்கருத்தெனவிறைவன்கூறுவான் (கசசு)

நீண்டகலவனியினிருபர்மண்மிசை
மாண்டிடப்பொருதுமாமகஞ்செய்தேயிவண்
வேண்டியவதனைவேதியர்க்குநல்குவா
யீண்டியாங்கேட்குவதீதியாலென்றான் (கசஎ)

மறையவனிம்மொழிபகரமாகத
னறைகுதிர்வினவியதருள்வனென்றுநீ
ருறைதருகுண்டிகையுதகம்பண்ணவே
யிறைவன்முன்கரத்திடையேந்தினனரோ (கசஅ)

ஈருவன்வேண்டுவதியம்புவாயென
வேகமுந்தியதிறல்வீமனெய்தியே
யாகவத்தாளகீயருடியென்றலு
மாகதன்முகிணகைமலரக்கூறுவான் (கசகூ)

வேதியர்க்கடாதவெஞ்சமரம்வேண்டினு
லீதனுக்கிசைவனோவென்னவீமனும்
பூதலத்தரசன்யான்பொருவனுன்னுடுங்
காதுதற்கேகெனக்கழறினனரோ (கருO)

ஏவலான்றமயனீதியம்பலோடுமே
சேவலானெனமனஞ்சீறிமாகதன்
மூவர்நீராரெனமொழிதிராகவ
மீவனென்றலுமிறைவன்கூறுவான் (கருக)

இவரெழிற்றருமனுக்கிளையகொற்றவர்
துவரையிற்றேவகிதோன்றல்யானென
வுவரியின்விடமெனக்கனன்றன்றாழியின்
சிவனெனமாகதன்சீறிக்கூறுவான் (கருஉ)

நீயெனக்குடைந்துயர்நெடியமால்வரைத்
தீயிடையொருவியேதிரைகொள்வேலையிற்
போயுயிருய்ந்தனைபோருக்காளலை
வாயுவின்மதலைபோர்வல்லனோவென்முன் (கருரு)

மகதர்சோனிவ்வுரைவழங்கமாருதி
நகையுறப்பொருதனைத்தெறுவனனென
மிகமுனிந்துயருமாவேள்விச்சாலைவிட்
டிகல்புரிநிலத்திடையேகினனரோ (கருச)

தும்பையின்மலர்மகுடத்திற்றேன்றநற்
செம்பொனூர்கச்சினைமருங்கிற்சேர்த்தியே
யும்பரும்வெருவிடவுயருமாகத
னிம்பரின்மடங்கல்போலெதிர்ந்துநின்றனன் (கருரு)

மந்தரமெனவயங்கிரண்டுமொக்கதை
வெந்திறன்மகதனும்வீமனும்பொரத்
தந்திடவிருவருந்தடக்கைபற்றியே
சிந்தையிற்கதமுறச்சென்றுதாக்கினர் (கருசு)

தண்டுகைசுழற்றியெதிர்தாக்கினர்கண்மென்மே
லண்டர்கள்வெருக்கொளவடித்தனர்கள்கண்டு
மண்டிடவிழித்தனர்கள்வாயினொலிமண்விண்
ணெண்டிசையுமுற்றனவிடிந்தநிலமெங்கும் (கருஎ)

அதிர்த்தனரடர்த்தனரடற்கதைகள்கொண்டே
குதித்தனர்கொதித்தனர்கள்கோளரிகள்போல
வெதிர்த்தனர்நகைத்தனரிடத்தினும்வலத்து
மிதித்தனர்கள்சாரிகைவிழிக்கனல்பிறங்க (கருஅ)

வீரமுறுமாமகதராசனிவன்விஞ்சு
மேருறவயங்கவெதிர்வீமனிவனென்றே
யாருமறியாவகையடற்கதைசுழற்றிச்
சாரிகைதிரிந்தனர்தடக்கிரிகண்மான (கருகூ)

சக்கரமெனச்சுழல்வர்சாரிகைகண்மாறி
யுக்கிரமுறக்கதைகொடோடுவரடித்தே
முக்கணனுமஞ்சிடவதிர்ப்பர்சண்முழக்குந்
திக்குறுமதக்கரிசெறுத்தெதிர்வதொத்தே (கசுo)

மாமகதராசன்வயிரக்கதைசுழற்றி
வீமனுரமீதிடிவிழுந்ததெனமோதக்
காமன்மகன்முன்னவன்முனிந்துகதைகொண்டே
பூமியதிரப்பகைஞன்மார்பிடைபுடைத்தான் (கசுக)

கடந்தருமதக்கரியெனக்கதமனத்தின்
மிடைந்துவருமாகதனுவீமனுமெதிர்ந்தே
யடர்ந்தசனியஞ்சிடவடித்தெதிர்தடிப்ப
வொடிந்தவிருவோர்கரமுறுங்கதையிரண்டும் (கசுஉ)

முரணுறுமணிக்கதைமுறிந்துவிழவோடு
மிருவருமெதிர்ந்திருகரங்களைமுறுக்கி
வரையினிடிவீழ்வதெனமார்பினுமுகத்துங்
குருதிசொரியக்கடிதுகுத்தினர்களொத்தே (கசுங)

விக்கிரமவாலியும்விளங்குகதிரோன்சேய்
சுக்கிரிபனும்பொருவதென்னவுயர்தோளா
ருக்கிரமுறக்கைகொடுரத்தின்மிசைகுத்திக்
கக்கினர்செழுங்குருதிகாதியகளத்தே (கசுச)

மகதன்முனிவெய்தியுயர்வீமனைவலத்தா
லிகல்புரிநிலத்திடையெடுத்துவிண்ணெறிந்தான்
சகபதியெனக்கடிதினெய்தியொருகாலாற்
பகைஞனுரமீதுபவனன்சுதனுதைத்தான் (கசுரு)

உதைத்தவனுரத்தின்மகதன்னுருமுபோலக்
கொதித்துரமுறுங்கைகொடுகுத்துதலும்வீம
னெதிர்த்தவன்விழும்படியுதைப்பவிமையோர்க
டுதித்துமலர்தூவினர்கள்சூரரிவரென்றே (கசுசு)

தெழித்துவருமாகதனைவீமனெரிசிந்த
விழித்தவனடித்துணைபிடித்தவனல்வீர
மழித்தொருகரங்கொடுசுழற்றிமிகவார்த்தே
கிழித்தனன்விண்ணோரிகிரீடிமகிழ்வெய்த (கசுஎ)

இருபிளவதாய்மகதனிம்பரின்விழுந்தே
யரனெடுநடித்தலகைசுற்றியவணங்காஞ்
செரையுடல்பொருத்தசெயலாலுருவுகூடி
வரையினைநிகர்த்துவிறலுன்னவெதிர்வந்தான் (கசுஅ)

பிளந்தமெய்பொருந்தியுயிருற்றுயர்பிறங்கல்
வளர்ந்ததெனவெய்திவருமாகதனைவீமன்
கிளர்ந்துசினமோடவனையுற்றுடல்கிழிப்பத்
தளர்ந்திலனெழுந்துசரசந்தன்மிகவார்த்தான் (கசுகூ)

கண்ணினிமைகூடுவமுனேயுடல்கலந்து
விண்ணவருமஞ்சமகதன்னெதிரவீம
னெண்ணிலதுமீளவுமெதிர்ந்துமெய்கிழித்தே
மண்ணிலிவன்மாள்கிலனெனுமனமுளைந்தான் (கஎo)

கூறுபடவேவடிவுகூடிவருவோனை
வேறுவகைசெய்வகையில்வீமன்முகநோக்கி
யீறில்மறைசாயையையெடுத்துகிரிலங்கக்
கீறியடியின்னுனிகிடந்திடவெறிந்தான் (கஎக)

சிறந்தவரிசெய்தவகைதிண்டிறல்கொள்வீம
னறிந்துமகதன்றலையின்மீதினடிசேர்த்தே
யிறந்திடவுரங்கொடுகிழித்தவமெறிந்தான்
றுறந்ததவராடவிமையோர்மலர்சவே (கஎஉ)

வேறு. முரணுறுமகதராசன்முடியின்மேலடிதான்வீழத்
தரணியின்மடிதலோடுந்தருமனுக்கிளயவேந்தன்
வருணமுற்றிலங்குகின்றவாசவன்மைந்தனோடு
மரணமக்குன்றுளென்றேயச்சுதனடியின்வீழ்ந்தான் (கஎ௩)

அடியினிலிறைஞ்சத்தன்மனனுசரையணைத்தன்பாரும்
வடிவுடைமாயன்றன்னைமகபதிசிறுவனோக்கி
மிடலுடைவீமன்கையாற்பிளப்புண்டுமகதன்வீதி
யுடலுயிர்மாயாதொன்றியெதிர்ந்ததையுரைத்தியென்றான் (கஎச)

இந்திரன்சிறுவன்கூறவிந்திரைகொழுநன்சொல்வான்
மந்தரவரைபோன்மாண்டுகிடந்தவிம்மகதராசன்
றந்தையெண்டிசையுமாள்வோன்றனயரில்லாமையாலே
கந்தனூர்தந்தையெய்தக்கடத்திடைத்தவஞ்செய்தானல் (கஎரு)

தனயரைவேண்டிவேந்தன்றவம்பலகாலஞ்செய்ய
வினியனுய்விடையிலேறுமிறையவனெய்தியானுன்
னினைவுறுவரந்தானீவனிகழ்த்துதியென்றலோடும்
வினையறநோற்றுநின்றவிறலுடைமன்னன்சொல்வான் (கஎசு)

மாதுபங்காளவெற்கோர்மைந்தனையருடியென்னச்
சூதமென்கனியொன்றீந்துன்றுலங்கியதேவிதானே
யீதினையருந்தனேரிலிருபதாயிரத்திற்பாதி
போதகப்பலத்தையெய்தும்புதல்வனுண்டாகுமென்றான் (கஎஎ)

அரனிவைகூறியீந்தவாம்பிரக்கனியைவேந்த
னிருபிளவாக்கித்தூயவிரண்டுதேவியர்க்குமீயத்
தெரிவையர்மகிழ்வினோடுமருந்திடச்சிறிதுநாளிற்
கருவயிற்றெளிர்தலோடுங்காவலன்களிப்புக்கொண்டான் (கஎஅ)

மாங்கனிப்பிளவைவாங்கியருந்தியமடநல்லார்க
ளோங்கிடவொருகண்ணக்கால்செவியுடனிதயம்பாதி
நீங்கியகுழவியாகியிருவரும்பெறவேநீதி
பாங்குறுமன்னனோக்கிப்பருவரலெய்திச்சொல்வான் (கஎகூ)

சிகியுறுகரத்தனீந்தசிறந்தமாங்கனியினாலே
மிகுவலிமதலேதோன்றிவிளங்குமென்றருளப்பொய்த்தீண்
டிகழ்வுறப்பிறந்தபாதியுருபரையிரவினோகி
யகழிடைபெறிமினென்றுசெவிலியர்க்கரசன்சொன்னான் (கஅ0)

அரசனீதுரைக்கப்பாதியுருபரையங்கையேந்தி
விரைசெறிகுழலினார்கள்வீதியினிரவினேகிக்
கிரிசெறிந்தெனவேதுன்னிக்கிளர்ந்தகோபுரங்களோங்கும்
புரிசையின்புரத்தினூழ்ந்தவகழிடைப்போட்டாரன்றே (கஅக)

அகழினிலிடிபோற்பாதியுருவினரரற்றக்கேட்டு
நகரியைச்சூழ்காப்பாளாமரனுடனடித்தநங்கை
புகையுறவிழித்துத்தோன்றுமலகைகள்புடைசூழ்ந்தெய்த
விகழ்விலாச்சரையாநாமக்காளிவந்தெய்தினாளால் (கஅஉ)

ஒருகரங்கண்கால்பாதியுடலுறவிணையாய்த்தோன்றச்
சரையிரண்டொன்றும்வண்ணந்தடக்கையாற்பொருத்தத்தாழ்வி
லுருவுடைக்குமரனாகியுருமெனவழுதவோசை
யிரவிடையிடிபோல்விஞ்சயாவருங்கேட்டாரன்றே (கஅ௩)

இரவிதேர்குணபால்வேலைவலயத்தினெழுதலோடு
முருமெனவரற்றுகின்றமதலைவாயோசைகேட்டுப்
புரவலனகழியெய்திப்புத்திரன்றன்னைநோக்கிச்
சரியிலாவுருவனென்றுதடக்கையாற்றழுவினான் (கஅச)

சரையுடல்பொருத்தலாலேசராசந்தனென்றுநாம
முருவுடைமதலைக்காமென்றுயர்ந்தசரீரியோத
வரசனுமகிழ்ந்துசேயையங்கையினேந்திச்சென்றே
திருவெனவயங்குகின்றதேவியர்கையினீந்தான் (கஅரு)

அரன்வரமருளவெய்திவளர்ந்தருளரசன்மைந்தன்
சரையுடற்பொருத்தலாலேசராசந்தனென்னும்பேரோன்
கிரியிவருடலைவீமன்கிழிப்பவுமொடிப்பின்முன்ன
மிருபிளப்பொன்றாய்க்கூடியெழுந்தமர்செய்தானென்றான் (கஅசு)

ஆரியன்மொழியக்கேட்டவருச்சுனன்மகிழ்வினோடுங்
கோரையையுகிராற்கீறியடிநுனிகூடும்வண்ணம்
பாரினிலெறிந்துகாட்டிப்பகைஞனைவதைப்பித்தாயென்
றேருறவீமன்றன்னோடேத்தியாண்டிறைஞ்சினானால் (கஅஎ)

மறுவிலாவீமனோடுமருச்சுனன்வணங்கக்கண்டே
யிறையவனிருவர்தம்மையணைத்தின்புற்றிருக்குமெல்லை
சிறையினிலிருந்தமன்னர்திரண்டுளமகிழ்ச்சியெய்தி
நிறையவேமலர்கவேமிநேமியைவணங்கினாரால் (கஅஅ)

திறனுடைமகதன்வைத்தசிறையிடர்தீர்ந்துவந்த
நெறியுறுமிருபர்தம்மைநீவிர்நும்பதியினெய்தி
மறனிலாவறன்சேய்வேள்விகாணியவம்மினென்றே
யிறையவனறையப்பாரினிறைஞ்சியாண்டேகினாரால் (கஅக)

வாயுவின்மதலைதன்னான்மடிந்திடுமகதராசன்
சேயுயர்சாதேவன்றன்சிரத்திருகரத்தைக்கூப்பித்
தூயமாமதுரைதன்னிற்சோதிநீகாத்தியென்றே
யாயுமாமலர்கவேயடியினினிறைஞ்சினானால் (ககூ0)

இவுளிகடேர்களெண்ணிலிபரிரையெல்லாங்கொண்டு
நவமணிவயங்குசெம்பொன்னவையகலகன்களெல்லா
மவனியிற்பிறங்கல்போலக்குவைசெய்தைம்புலன்கள்செற்ற
தவர்களொண்முராரிபாதத்திறைஞ்சினன்சராசந்தன்சேய் (ககூக)

இருநிலத்திறைஞ்சிநின்றமகதன்சேய்க்கெழில்கொண்மாய
னரசனீயாகியவையுமறத்துடன்காத்தியென்று
முரசொலிகறங்கப்பொன்மாமுடிதனையிலங்கச்சூட்டித்
திருமன்மாவேள்விக்கிந்தத்திறையொடுஞ்சார்தியென்றான் (ககூஉ)

யாதவனருளலோடுமிறைஞ்சியேமகதன்மைந்தன்
சீதரதருமன்வேள்விகாணவித்திறையுங்கொண்டு
போதுவனென்றுகுந்திபுதல்வரைவணங்கிப்போனான்
மாதவன்மணித்தேர்மீதின்வயங்கியேநெறியிற்சென்றான் (௧௬௩)

மணிமுடியிலங்கவோங்குமைத்துனரிருவரோடு
மணிகலன்வயங்கமாவினணியுடனணிகவீட்டங்
கணகணகணவென்றோசையுறுமணிக்கரிகள்சூழப்
பணிபதிப்பணத்தின்மீதுநடித்திடும்பரமன்சென்றான் (௧௬௪)

துந்துமிமுழங்கத்தேவர்தூயமாமலர்கவேத்
தந்திகளிவுளியீட்டந்தமனியத்தேர்கள்சூழக்
குந்திதன்புதல்வராயவிருவருங்கூடவேதா
னிந்திரப்பிரத்தஞ்சேர்ந்தானிணையிலாவெழில்கொண்மாயன் (௧௬௫)

கரிதுரகந்தேர்சூழக்கதலிகைககனத்தோங்கத்
தருமன்வந்திடலுமன்புதழைத்திடவணங்கிமாயன்
றெரிவையர்குழாங்களெண்ணிறீவிகையெடுப்பச்சேர்ந்து
புரவலர்பணிந்துபோற்றப்பொன்னவிர்கோயிற்புக்கான் (௧௬௬)

திருமகள்கணவனெய்திச்செம்பொனாதனத்தினோங்கக்
கிரிவிரசத்தினெய்திக்கிளர்ந்திடுமகதனாய
மருவலன்மடியச்சாயைவகிர்ந்தமால்செய்கையெல்லாந்
தருமனுக்கன்பினாலேதருமன்சேய்சாற்றினானால் (௧௬௭)

பற்குணன்பகர்தலோடும்பரிவுடன்பணிந்துதன்மன்
முற்குணமுதல்வாவெங்களிடரறுத்தருளுமூர்த்தி
பொற்கணன்மடியக்கோலமாகியேபுவியைக்கீண்ட
சிற்குணவென்றுபோற்றத்திகழ்ந்தனன்றிருவின்கேள்வன் (௧௬௮)

மகதராசன்வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௦௪௬.

## ௧௦௬-வது சிசுபாலன் வதைப் படலம்.

அத்தியையுரித்துப்போர்க்குமாதியால்விருகாசூர
னத்தமேல்வைக்கயாருமவியவேயருள்வரத்தாற்
பித்தனோடிடவேதோன்றிப்பேதுறவதைத்தமாயோன்
பத்தவற்சலன்மால்சோதிபரமன்றாள்பற்றுநெஞ்சே (௧)

**வேறு.** மகதராசனுயிர்வீமன்வௌவும்வகைசெய்துமன்னர்சிறைவிடுவியாத்
தகுதிநீதியுணர்தருமன்வேள்விதனிலக்கிரபூசைதனையேதகைந்
திகல்செய்சேதிபனுடற்றுணித்தவனுயிர்பெருஞ்சுடரெழுந்துதன்
னிகரிலாததிருவடியினெய்தியுறநின்றமால்வடிவைநினைமினோ (௨)

மதியெனக்குடைவயங்கவாழ்தருமராசன்மாதவன்முனெய்தியே
யெதிரிலாதநலராசசூயமெனும்வேள்விசெய்வகையியற்றென
வதிரதர்க்குளுயர்மகதராசனையடர்ந்துவீமன்வதைசெய்தன
னுததிசூழுலகிலொன்னலார்களினியில்லையென்றரியுணர்த்துவான் (௩)

ஆசையின்கணுறுமரசரைத்திறைகொடெய்தவேயனுசர்நால்வரை
வீசுதொல்புகழையுடையமன்னவவிடுத்தியென்றரிவிளம்பிட
வாசவன்மகன்வடக்குமாருதிகிழக்குமாவலவன்மேற்குற
வேசின்மத்திரைதன்னிளையமைந்தனுயர்தென்றிசைக்கணுறவேவினன் (௪)

தென்றிசைக்கணுறுநால்வருக்கிளையசிறுவன்மன்னவர்கடிரளெலாம்
வென்றுமற்றவர்கொடுத்தமாதிறையும்விறல்கொடென்னவனளித்திடு
மென்றுநாணுசுடர்மணியுநித்திலமொடெண்ணிலாதகலனிவையெலாங்
குன்றுபோலொளிரவெய்தியேதருமன்முன்னரிற்குவைகள்செய்தனன் (௫)

வீரம்விஞ்சியுயர்நகுலனுங்குடதிசைக்கண்மேவிமனர்வெருவுறப்
பாரின்வெஞ்சமரின்வென்றுமற்றவரளித்தபன்மணிவுருக்கமோ
டாரமம்பொன்வரைபோலவேகொடிகடேரின்மாநகரடைந்துதா
னேருறுந்தருமன்முன்னர்வைத்தடிவணங்கினனிணையிலாதவன் (௬)

உத்தரத்திசையினேகும்வாள்விசயனென்னலார்கடிரள்விறலெலா
மத்திரத்தினிலழித்துமற்றவரளித்தவம்பொன்மணியவிருறு
நித்திலங்கள்கலனுயர்பிறங்கலெனிகர்த்திடப்பதியினேகியே
யுத்தமத்தருமன்முன்னரிற்குவைகள்செய்தனனுவகைவிஞ்சவே (௭)

விறல்கொள்வீமனுயர்பூருவத்திசையினுற்றமன்னவர்கள்வெருவுறக்
கறைமிடற்றரன்முனிந்தெழுந்ததெனவேவயங்குகதைபற்றிமா
மறலியஞ்சிடவடித்துழக்கியமர்வென்றுமற்றவரளித்திடுந்
திறைபிறங்கலெனவெய்தியேதருமன்முன்னரிற்குவைகள்செய்தனன் (௮)

பாழிமல்கியபுயத்தனுகியகடோற்கசன்பரவைதாண்டியே
யாழிசூழ்நகரின்வீடணன்முனரினுழியோனறனருள்சுதன்
வேள்விசெய்யவெனையுன்முனுற்றிடவிடுத்தனன்னெனவளித்திடு
மேழுமாழையொளிர்கணவமங்கைகொடியாதவன்னடியிறைஞ்சினன் (௯)

வீடணன்வரவிடுத்தமாழையுறவிஞ்சுசாலமரநோக்கியே
கோடுகையினில்வயங்குமாயனெடுகுந்திமைந்தர்கண்மகிழ்ந்தன
ரோடையானையினமெண்ணிலாவிரதமூவரிபோலனிகநிரையொடு
மாடன்மாவினணிநிறையவெண்டிசையினரசர்வந்தடிபணிந்தனர் (௧௦)

வேறு.

வாயுமகனேகிவரைமீதினறைகூவி
நீயெனைவிரைந்திருகைபற்றெனவிகழ்த்த
வேயெனுமுன்னேழுசிவபூசையையியற்றித்
தூயபுருடாமிருகமெய்தியதொடர்ந்தே (௧௧)

விரைவினுயர்வீமனகர்வாயினிடைமேவப்
புருடமிருகங்கடிதுபோந்தடிபிடிப்ப
விருவரும்விரோதமுடனேகியெழின்மன்னுந்
தருமன்முனரெய்தியதுசாற்றினர்கணின்றே (௧௨)

நீதியுடன்வந்தமைநிகழ்த்துதலும்வீமன்
பாதியுடல்கொண்டுபெயர்கென்றுரைபகர்ந்த
மாதருமனைத்தழுவிவாயுமகனுக்கை
யேதமகலும்மிருகமீந்தனனென்ற (௧௩)

அந்தமுறும்வேள்விமுடியும்மளவுமன்புற்
றிந்தநகர்சுத்தமுறவேயமர்தியென்று
குந்தியருண்மைந்தன்மொழிகூறிடவிருந்த
புந்திமகிழ்வோடுபுருடாமிருகமுற்றே (கச)

வேறு. வீடுமன்விதுரன்கன்னன்வேதியனவன்றன்மைந்தன்
பீடுடைப்பூரிபூரிச்சிரவாவுடன்பிறங்குவேந்தர்
கோடகநிறைகள்கைம்மாக்கொடியுடைத்தேர்கள்சூழ
வாடரவுயர்த்தகோமானனுசரோடடைந்தானன்றே (கரு)

அத்தினபுரியையாளுமரசர்கோனெய்தலோடு
முத்தமத்தருமனெய்தியணைத்தின்பவசனமோதிச்
சுத்தனும்விதுரன்கங்கைசுதனுயர்துரோணனெய்தப்
பத்திசெய்தடியின்வீழ்ந்தான்பாண்டுவின்சுதரின்மூத்தோன் (கசு)

அங்கர்கோசலவர்தென்னரவந்திகர்சோழர்கங்கர்
சிங்களர்குலிங்கர்போசர்கவுசிகர்சிந்துநாடர்
கொங்கர்காம்போசர்மச்சர்குச்சரர்கலிங்கர்சோனர்
வங்களர்துளுவர்சீனர்மத்திரர்மகதர்வந்தார் (கஎ)

கேரளர்சேதிநாடர்கௌடர்கேசயர்கள்வீர
வாரியரிகற்பாஞ்சாலரரசர்யாதவர்கள்வண்மை
நேரில்காந்தாரர்துய்யநெறியுறுவிதர்ப்பராசர்
வாரிசூழுலகிலெண்ணுமாறுவர்பலரும்வந்தார் (கஅ)

காடவர்விறலின்மிக்ககன்னடர்குருதரோடு
மாடவர்திலகரானவவனியினரசரெல்லாங்
கோடுடையிபங்கள்சூழக்குரகதவணிகள்விஞ்ச
நீடியகொடிகொடேரினிரையுறவடைந்தாரன்றே (கசு)

பொறையுறமறங்கள்வீயப்பொறிகலங்காமலோங்கு
நெறியுறநால்வேதங்கணிகரில்சாத்திரங்களோதி
யிறையறிந்திலங்குகின்றமறையவரெண்ணிலாதோ
ரறிவுறுதருமன்முன்னராசிகள்பலவுஞ்சொன்னார் (உ0)

வேறு. தவுமியனுசுரிசவுனன்போதனோர்
கவுதமன்கண்ணுவன்கணுப்பராசர
னுவமையில்செயமுனிசுமதியொண்சுக
னவையகல்பார்க்கவராமநாரதன் (உக)

காசிபன்புலத்தியன்சுமந்துகர்க்கனற்
கோசிகன்காதுவன்வீதிகோத்திரன்
மாசகலகத்தியன்வைசம்பாயனன்
தேசுறுபிருகுடன்றிரிதமாமுனி (உஉ)

மாதவவசிட்டனெண்வாமதேவனல்
வேதமார்கிருதவவீரமாமுனி
யேதமிலசிதனோடதர்வனீறிலாப்
போதனோர்வியாசனும்பொறைகொண்மாமுனி (உங)

பவமறவிலங்கியபரத்துவாசனெண்
டவர்களெண்ணியமைத்திரேயன்றத்துவ
னுவமையிலாவுபகூதனோடெழிற்
புவனமீதருந்தவரடையப்போந்தனர் (உச)

மாதவரனைவரும்வரனுமேமகிழ்ந்
தேதமிற்றருமன்றன்னிளைஞரோடுமாண்
டாதரத்துடனடிவணங்கிமற்றவர்
பாதபீதருச்சனைபண்ணினனரோ (உரு)

சாரிணைக்கரியின்பொற்கலப்பைவீக்கியே
யேருறுமணிநுகமிலங்கப்பூட்டிநற்
கூரியவச்சிரக்கொழுமடுத்திடச்
சீரியவேள்விசெய்நிலந்திருத்தினர் (உசா)

சாலறவுழுதுபொற்றலங்கொள்சாலையின்
காலையினவிர்மலர்கவின்கொண்டோங்கியே
மாலையினணிநவமணிகொடாவட
நாலவேதிறைத்தனர்நறுநெய்த்தீபமே (உஎ)

மாழையினகம்பலவயங்கமாமணஞ்
சூழவேநறும்புகைத்தூபம்விஞ்சிட
வீழமார்நவமணியிலங்கச்செய்திடும்
வாழையும்பூகமும்வயங்குஞ்சாலையே (உஅ)

மாலொடுமரசர்கள்வயங்கிச்சூழ்ந்திடச்
சீலமாரனுசர்கள்சிறந்துதோன்றிடக்
கோலநற்றுரோபதைக்கொம்பனாளொடுஞ்
சாலையிற்புக்கனன்றருமராசனே (உகூ)

மண்டலத்தரசர்மாதவர்மலிந்திட
முண்டகத்திறையரன்முகிலினூர்தியோ
டெண்டிசைக்காவலரியக்கர்சாரணர்
விண்டலவிபுதரந்தரத்தின்மேவினார் (௩0)

கருடகாந்தருவர்கிம்புருடர்கின்னரர்
மருடருவிழிகொள்வானுறையுமங்கைமா
ரருடருந்தருமனன்பாரச்செய்திடும்
பெரருடருவேள்விகண்டுவப்பப்போந்தனர் (௩க)

சித்தர்வித்தியாதரர்சிறந்துதோன்றிய
வித்தகத்தும்புருவுடனுமேவினர்
நத்தொடுகாகளநலங்கொடுந்துமி
மத்தளமுடன்முழங்கியதுவாரியோல் (௩உ)

மோடுடைத்தவநிறைமுனிவரெங்கணு
மாடுறவுதிட்டிரன்மகநடத்தவே
சோடசவிருத்துக்கள்வரித்துத்தூய்மையா
நீடியகனலினாகுதிநிறைத்தனர் (௩௩)

சாத்திரவழிப்படித்தவறலின்றியே
சூத்திரவிதிப்படித்தொடங்கிநாலிரு
நேத்திரன்றிசையினர்நிருத்தமாடுகைப்
பாத்திரன்மகிழ்ந்திடப்பரிவிற்செய்தனர் (௩ச)

முன்னநாள்வருணமன்முடித்தவேள்விபோ
லின்னல்களொருவமாமறையியம்பியே
துன்னியமறையவர்தொடங்கிச்செய்திட
மன்னரெண்ணுதிட்டிரன்மகம்வளர்த்தினன் (௩ரு)

திக்கினெண்பாலகர்திசைமுகத்தவ
னக்கனொடிமையவர்மகிழநான்மறை
மிக்கவர்வேள்வியைமுடித்தபின்னரி
னக்கிரபூசையார்க்களிப்பமென்றனர் (௩௬)

அக்கிரபூசையார்க்களிப்பமென்றுநான்
மிக்கவர்மகிழ்வுடன்விளம்பமத்திரை
மக்களிலிளையவன்வாசுதேவனே
தக்கவனுமெனச்சாற்றுவானரோ (௩௭)

சாங்கியயோகதத்துவத்தினுச்சியை
நீங்கிலாவிறையவனீண்டபேரொளி
யோங்கியவொருமுதலிவனிதுண்மையா
லீங்கிவனிருக்கவேறியார்கொலென்றனன் (௩௮)

குன்றினாற்பொழிமழைகாத்தகோவினுக்
கின்றுயாமளியுடனீந்தயாவையு
மொன்றுதானநந்தமாயோங்குமெய்மையே
யென்றுமாநகுலனுக்கிளையவன்சொனான் (௩௯)

மாதவர்மகிழமத்திரைதன்புத்திர
னாதியைவணங்கியர்ச்சித்துமற்றவன்
பாதநீர்சென்னியிற்றெளித்துப்பன்மறை
யோதியேயீவதற்கொருப்பட்டானரோ (௪0)

தடித்துறச்சொரிமழைதாங்கக்குன்றையன்
றெடுத்தவர்க்கக்கிரபூசையீயுமுன்
மடித்திடுவாயினன்மறங்கொள்சேதிபன்
றடுத்தனன்மத்திரைதனயன்றன்னையே (௪௧)

மாலினார்க்கக்கிரபூசைவாங்கியே
கோலமாயளித்திடுங்கொற்றவன்றனை
யாலமாவிடமெனவடர்ந்துசேதிபன்
சீலமேயிலாதவன்செப்புவானரோ (௪௨)

காங்கையனிருக்கயானிருக்கக்கைதவ
நீங்கியமகத்துவானவரிருக்கநீ
பாங்கிலாவிடையன்றன்பாதநீர்சிரந்
தாங்கினாய்பாலனாந்தன்மையாலென்றான் (௪௩)

ஆதியாமன்னவன்சபிக்கவீனமாய்ப்
பூதலத்திழிகுலமானபுன்மையா
வீதிசேர்வருணமாங்குலத்துநிற்கிலாக்
கோதுறுவானிறையாகுங்கொல்லென்றான் (௪௪)

மானமேயிலாதிவன்முன்னவன்மது
பானமேபண்ணினன்பதிதர்போலவே
யீனமாங்குலனிவனிடையர்மாதர்தோள்
கானிலேகலந்தவன்கடலுளீசனோ (௪௫)

மகத்தினிலேபுரோடாசம்வாங்கியே
செகத்தினிற்காகத்துக்களிக்குஞ்செய்கைபோன்
மகத்துவானவர்களீண்டிருக்கமார்க்கமி
லிகழ்ச்சியானவனுக்கோவீகுவாயென்றான் (௪௬)

ஓங்கலொத்திருந்துடற்கனன்றுசேதிபன்
பாங்கிலவசனங்கள்பகர்தலோடுமே
காங்கயன்செவியிணைக்கையிணலமைத்
தீங்கிறைவனையென்கேலென்றுகூறுவான் (சஎ)

மாதவர்க்ககப்படாவனசப்பாதனைச்
சோதியையுயிர்தொறுந்துலங்குவான்றனை
யாதியையறிவிலாதெள்கலேயுந்தன்
பேதைமையென்றிவைபேசுவானரோ (சஅ)

வேறு. இவனேயுலகேழையுமீன்றருள்வோ
னிவனேயயனைத்தருமீறில்பிரா
னிவனேயரன்வெவ்விடரைக்களைவோ
னிவனேயுயரும்பதமீபவனே (சகூ)

நிலநீரெரிகானெடுவானகமா
யலைவீசிடுமாழிகளாய்வரையாய்
மலர்மேலயனாய்மழுவாளனுமா
யுலவாதுயர்சோதியுமாமிவனே (ருO)

பாயாவுழைசெற்றருள்பாணனிவன்
பாயாவுழையுற்றொளிர்பாதனிவன்
காயாமலர்மெய்க்கவினுமிவனே
காயாமலரைக்களைவோனிவனே (ருக)

உயிராயுயிர்தோறுறையும்பரனுய்க்
கயிறுழிவயங்கியகார்முகில்போற்
றுயில்வானரவின்மிசையென்றுசொலு
மயிராலிலைமீதமர்வோனிவனே (ருஉ)

மாமானைவதைத்திடுமாயனிவன்
மாமானையணைத்திடுமார்பனிவன்
பாமான்பதிதந்தைபயோதரமொப்
பாமெய்யவனேபரமேட்டியரோ (ருங)

கூராழியொடைம்படைகொண்டுகையிற்
றீராவினைதீர்த்துயர்பத்தர்களுக்
காராவமுதாயளவந்தமிலாப்
பேராயிரமானபெம்மானிவனே (ருச)

மகன்வாய்மைபொய்மாதவனில்லையென
விகழ்வாலறையுந்தறியுள்ளினெழுந்
துகிராடகன்மார்பிடையுற்றுவரும்
வகிர்வீரமடங்கலிம்மாதவனே (ருரு)

மீனுமைவராகம்விளங்கரியாய்
வானுரவளர்ந்தவன்மாமழுவோன்
றேனார்குழறுன்னியசீதையுடன்
கானுரநடந்தருள்காரிவனே (ருசா)

நறுமாமலர்நண்ணியநான்முகனோ
டிறையாமெனவெண்ணியதேவர்களு
மறைதானுமயங்கிடமாயைசெயும்
நெறியோனெளிதாய்வெளிநின்றவிவன் (ருஎ)

தானேபதினாலுலகுந்தருவோன்
றானேயவைமீதுசனித்திடுவோன்
றானேகொடியோர்கடமைத்தடிவோன்
றானேயுயராழிதரித்திடுவோன் (௫௮)

என்றின்னவிர்மன்னிடவெவ்வொளியுங்
குன்றுஞ்செயல்போலொருகுழவியதா
யன்றிவ்வுலகுண்டவனன்றிமறை
யொன்றும்மிறைவேறிலையீதுணர்வாய் (௫௯)

அகழ்வேலையதாகுமரக்கன்முடி
திகழ்மாதசசென்னிதமைக்களைவோன்
புகழ்பாடிமகிழ்ந்திடுபுந்தியிலா
யிகழ்வாயினியெங்ஙனமுய்குதியோ (௬௦)

அன்றிவ்வுலகுண்டருளாதியைநீ
பொன்றும்படியேயிகழ்புன்மையினாய்
நன்றன்றிவைசேதிபர்நாயகனே
யென்றொண்ணதிமைந்தனியம்பினனால் (௬௧)

வேறு. கங்கைதன்மைந்தனாயகாங்கயன்மொழியக்கேட்டே
யங்கையோடங்கைதாக்கியனலெழநகைத்துவெய்ய
சிங்கமேபோலவோங்குஞ்சேதிபனிறுதிக்கால
மங்கைபங்காளனொத்துவாய்மடித்திவைகள்சொல்வான் (௬௨)

மதியினையுடுக்களெல்லாம்பொருவிடின்மண்ணினோடு
நதியெலாந்துலங்குமந்தாகினிநலநிகர்க்குமாகி
லெதுகுலத்திடையன்றானுமிறைவனாமென்றுநக்கு
முதுமதிக்கங்கைமைந்தாகேளெனமொழியலுற்றான் (௬௩)

உததிபோல்யமுனையாற்றினொலியுறுபாடிதன்னிற்
றதியிழுதுடனேயள்ளித்தடக்கையானுகரக்கண்டே
கதுமெனமாதர்மத்தாலடித்திடக்கலங்கிமண்மேன்
மதியிலாதோடுவானோமறைகடேடரியநாவோன் (௬௪)

நீருளேகுடையுமாதர்நிறைதுகில்வாரியேகிப்
பாரினோர்குருந்தினேறிப்பணியநக்கினத்தராகி
வாரும்நீர்தொழுமினென்றுமற்றவர்முலைமேற்றோய்ந்த
சோரனோவுலகமெல்லாம்படைத்திடுஞ்சோதியாவோன் (௬௫)

விஞ்சுமாமதுரைதன்னிற்பிறந்திடைப்பாடிமேவி
நஞ்சுபோன்மறைந்துதூயநந்தகோபன்றன்சேயாய்க்
கஞ்சமாதுலனைச்சற்றுங்கருணைவையாமற்கொன்ற
வஞ்சனோகஞ்சமேவுமங்கைதன்மணாளனாவோன் (௬௬)

மழுவொளிரரன்போற்காலயவன்வரமதுரைவிட்டே
யுழுவையைக்கண்டமான்போல்வெருவியாண்டோடியோடித்
தழைகொண்மால்வரையின்மன்னுமுசுகுந்தன்றுயிலுங்காவார்
முழையினுட்கரந்துய்வானோமூவராமூர்த்தியாவோன் (௬௭)

சரியிலாமகதர்கோமான்றொடர்ந்திடத்தளர்ச்சியெய்தி
வரையினிற்கரந்துபின்னர்மற்றவன்வைத்ததீயால்
வெருவியேவியாளங்கண்டகருப்பைபோற்பெயர்ந்துவிஞ்சும்
பரவையிற்கரந்துய்வானோநிகரிலாப்பரமனாவோன் (௬௮)

குலமிலன்மகுடமில்லன்குருவிலனுறவுமில்ல
னலனிலனறனுமில்லனுணமுமிலன்றிண்டோளின்
வலியிலனருளுமில்லன்வரம்பிலன்றெய்வம்பேணும்
பலனிலனெறிகளில்லன்பண்பிலனிவனோநாதன் (௬௯)

சேதிபனிவைகளாமிவ்வெள்கலைச்செப்பக்கேளா
மாதவக்கங்கைமைந்தன்மனமெரிந்தவனித்தூள்க
ளாதவன்சுடரையெய்திமறைப்பவவ்வவிர்போகாதா
லோதவமுரைக்குமன்னோவென்றனனுவமையில்லான் (௭0)

தூயனுங்கங்கைமைந்தன்சொல்லியவுரையைக்கேளாத்
தீயவனிகழ்ச்சியாம்பல்வசனங்கள்செப்பலோடு
மாயவனைகைப்பவீமன்வடவனலேயநோக்கிக்
காயும்வெஞ்சினத்தினோடுங்கதைகைக்கொண்டெழுந்தானன்றே (௭௧)

வாயுவின்மதலைபொங்கியெழுதலும்வலாரிமைந்தன்
றூயகாண்டபங்கையிற்றுலங்கிடவெழவேநோக்கி
மாயவனவர்கடம்மைமலர்க்கையாலமர்த்தலோடுந்
தீயவன்பின்னும்வெய்யகடுஞ்சொலேசெப்பினானால் (௭௨)

நாலுகைநுதலிற்றோன்றுநயனமொன்றுடனேநீண்ட
ஞாலமேற்சிசுபாலன்றான்சனிக்கநாரதன்வந்திந்தப்
பாலனைவதைக்கவெய்தும்பகைவன்வந்தடுக்கினெற்றி
மேலுறும்விழியுங்கைகளிரண்டும்போமெனவிளம்ப (௭௩)

நிருபரெல்லாருமெய்தியடுத்திடநிகரிலாத
கரியினைவதைத்தோனெய்திநோக்கலுநுதலிற்கண்ணு
மிருகையுமொருவலோடுமிவன்றனையீன்றமாது
வெருவியேதுவரைவாழும்வீரனைவணங்கிச்சொல்வாள் (௭௪)

மாறில்சேதிபன்றன்மாதாமாதவனுடனேயென்சேய்
நூறுவெம்பிழைசெய்தாலுஞ்சமியெனநுவலக்கேட்டே
யீறிலொண்மாயோன்றீயனியம்புசொற்சதந்தானெண்ணிச்
சீறிலைசிசுபாலாநீசெருச்செயவருதியென்றான் (௭௫)

அரியிலையருளக்கேளாவனலுறச்சேதிராசன்
நரியெதிர்ந்திடவேசியநடுங்குமோவென்றுநக்காண்
டிருமெனவதிர்த்துத்தேரினுற்றமர்பொருதியென்னத்
திருமகள்கணவன்வையத்தமர்ந்தவண்சேர்ந்தானன்றே (௭௬)

இருவருமிரதமேறியெதிர்ந்திடவிமையோர்கோமா
னரிவைபங்காளன்வானோரயனொடுமணுகிநோக்கப்
புருவமுஞ்சிலையுங்கோட்டிப்புகையுயிர்த்தடருந்தீயோன்
றிருவமர்மார்பன்றன்மேற்சிலீமுகமழைபெய்தார்த்தான் (௭௭)

சேதியன்சிலையாலெய்தசிலீமுகந்திசையைப்போர்ப்ப
மாதவன்வரிவில்வாங்கிவாளியாலறுத்துமாற்றி
யாதவன்படையைவிட்டாங்கார்த்திடமறங்கொடீயோன்
மோதுவெந்தழலினம்புமுடுகியேதுணித்துவீழ்த்தான் (௭௮)

மாறிலாமாயன்வெய்யவாயுவின்படையைவிட்டான்
பாறுவின்படையைவிட்டேயறுத்தனன்பவங்கொணெஞ்ச
னீறிலச்சுதனுமையனிந்திரன்படையைவிட்டான்
சீறியசேதிராசன்மறலிதன்படையாற்றீர்த்தான் (௭௯)

வெஞ்சினம்பெருகவெய்யசேதிபன்வின்ஞண்வாங்கி
நஞ்சுமிழ்ந்தடருகின்றநாகபாசத்தைவிட்டான்
கஞ்சனைக்கடிந்தவெங்கோன்கருடன்றன்படைகடாவப்
பஞ்செனப்பறந்துபோனபன்னகப்பகழியம்மா (அ0)

மலரயன்படையைவிட்டான்மாயவன்மறவன்கண்டு
சிலைவளைத்தெண்கஞன்றன்படையினுலறுத்துத்திங்க
ளிலகுவேணியன்முனீந்தபடையினையெடுத்துவிட்டா
னுலகயிலையன்றுனுமுமாபதிபடையால்வீழ்த்தான் (அக)

விடமெனமுனிந்துவெய்யசேதிபன்வின்ஞண்வாங்கிக்
கடிதினிற்கனமேபோலக்கடுங்கணைசொரிந்துமாயன்
கொடிகுடைகவரிவீழ்த்துக்குனிசிலையறுத்துத்தேரைப்
படிமிசைத்துகளதாக்கிப்பணிலம்வாய்முழக்கியார்த்தான் (அஉ)

மருடருமனத்தனுனசேதிபன்வாளிதன்ன
லுருடருமணித்தேர்பாய்மாவுயர்சிலைதுவசம்வீழப்
புருடவுத்தமன்முன்மிக்கபொன்முடிதுலங்கத்தூய
கருடவாகனனய்நின்முன்கலன்கள்மெய்கவின்கொண்டோங்க (அங)

சங்குவாளாழிதண்டுசார்ங்கமோடைந்துந்துய்ய
வங்கையினேந்தியம்பொன்னுடைதன்மருங்குசேர
மங்குலின்வனசமல்கிமலர்ந்தபோல்வயங்குவானைச்
சிங்கமேபோலநின்றசேதிபன்றெரியக்கண்டான் (அச)

இரவியினவிராற்பாறுமிருளெனச்சேதிராச
னருவினையொருவத்தூயவறிவுவந்தணுகப்பொற்றேர்
மருவுசாரதியைநோக்கிமாதவன்கலுழன்மீதிற்
கருமுகிலெனவேநின்றுனவ்வண்ணங்காண்டியென்றுன் (அரு)

வேறு.

புவனமீரேழையுமுதரத்துட்பொதிந்
துவரிசூழண்டம்விண்டுயருநாரமேற்
கவினுறுவடவிலைமிசையிற்காட்சியா
மவிருறவமர்ந்தவச்சுதனைக்காண்டியால் (அசு)

அப்பமரரிதனக்கடியர்நான்முனி
செப்பியசாபத்திற்சென்மந்தீர்த்தெனை
முப்பிறப்பாக்கியமுராரிசெற்றெனக்
கொப்பிறன்சரணளிக்குவனென்றேதினன் (அஎ)

தரணியினிலங்குமிம்மாயன்சாற்றவே
யிரணியனுயுறைந்தெற்றுதூணிடை
முரணுறுமுடங்குளையாகிவந்தியான்
மரணமுற்றிடவுயர்மார்பைப்போழ்ந்தனன் (அஅ)

பின்னரும்விச்சிரவாவின்பிள்ளையா
யின்னலில்சிரங்களீரைந்துநாலைந்து
துன்னியகரங்களாய்த்தோன்றுமென்னையே
மன்னவனிராமனய்வதைசெய்தானரோ (அக)

இருபிறப்பொழியவேயிம்பரின்னுய
ரரசரிற்சேதிபன்சிறுவனுகிவல்
லுரனுறுந்தேரிடையுற்றவென்முன
ரரியுருவாகியேயரிக்கவெய்தினன் (கூ0)

ஆதலினரிதிருவாழிதன்னிறற்
பூதலத்தியான்மடிந்தாவிபோயுயர்
மாதவனடிமிசையடையும்வண்மையைச்
சூதநீகாண்டியென்றறியச்சொல்லினன் (கூக)

சூதனேடிவைசிசுபாலன்சொல்லுமுன்
மாதவன்கலுழன்மேல்வயங்கித்தோன்றியே
சோதிசெய்திகிரிவான்றுலங்கவேவிடச்
சேதிபன்சிரத்தினையறுத்துச்சென்றதால் (கூஉ)

சீருறுதிகிரிசென்றறுப்பச்சேதிபன்
பாரினின்மடிந்திடப்பரிந்தவாவிமின்
பேரொளிவானுறப்பிறங்கித்தோன்றியே
யாரியனடிமிசையடைந்ததாமரோ (கூங)

சேதிபன்மடிந்தவனாவிசென்றுயர்
சோதிசெய்பேரொளியாகித்தோன்றியே
மாதவனடிமிசையடையவானுளோர்
போதனேடொளிர்மலர்பொழிந்துவாழ்த்தினர் (கூச)

கைதவமகற்றியேகருதொணாத்தவஞ்
செய்தவர்பெருத்திருவடியைச்சேதிபன்
வைதிவணடைந்திடவழங்கினையென்று
பொய்தவிர்முனிவர்கள்போற்றினாரரோ (கூரு)

பகையிலனுறவிலன்பரமன்முனெனு
நிகரிலான்மறைப்பொருணிகழ்த்துநீர்மையா
லிகழ்வுறுமிவன்றனக்கடியையீந்தனை
புகலருஞ்சோதிநீயென்றுபோற்றினர் (கூசு)

அகழ்ந்தவர்க்கவனிநல்லயமளிப்பபோ
லிகழ்ந்தவனாவியுன்னிணையிலாவடி
திகழ்ந்திடவளித்திடுந்தேவனீயுனைப்
புகழ்ந்தவர்க்களிப்பனபுகலலாவதோ (கூஎ)

என்றுநான்மறைப்பொருளியம்பியேறுறு
கொன்றைவார்சடையினன்கோதிலாவயன்
பொன்றலின்முனிவர்கள்புரந்தரனொடு
மன்றல்சேர்மலர்மழைபொழிந்துவாழ்த்தினர் (கூஅ)

வீடுமன்வேதியன்விதுரன்மத்திர
னாடினார்தருமனேடனுசர்கூடவே
வீடினவினையெனவிமலன்மெல்லடி
சூடினர்சென்னியிற்றெழுதங்கேத்தியே (கூகூ)

சோதியென்றுணர்ந்திடுந்தூயமன்னரை
மாதவன்மாயையான்மயக்கமாறிலா
வாதியென்றறிகிலாரவனியெய்திய
வியாதவனெனவணைத்தின்புற்றாரரோ (க00)

செருவிடைச்சேதிபன்மடியச்சீருறு
தருமனேடனுசர்கடழீஇக்கொண்டின்புற
முரசுடன்பேரிகைமுழங்கமாதவன்
றரணியின்வேள்விசெய்சாலையெய்தினன் (க0க)

உக்கிரச்சேதிபன்மடியவோங்கிய
சக்கரம்விடுத்தருள்சார்ங்கபாணிக்கே
யக்கிரபூசையையளித்துமத்திரை
மக்களிலிளையவன்மகிழ்ந்துவாழ்த்தினன் (கOஉ)

வேறு. எதிரிலாவிராசசூயமென்னுமாவேள்விசெய்து
சதுமறையறைபவர்க்குத்தருமன்றெக்ஷணைகணல்கி
யெதியினமகிழ்ந்துசூழவெண்ணின்மாதானமெல்லா
மதிதிகள்பெறவேயீந்தானம்பொன்மாமாரிதன்னை (கOந)

தனமெலாநகுலன்சேர்க்கத்தடக்கையாற்சுயோதனன்றன்
மனமெலிந்தீயவின்சொன்மகபதிசிறுவனேதை
வனகன்வேதியர்கள்பாதத்தயம்விடவளப்பிலாத
கனகமாதானமெல்லாங்கன்னனேசெய்தான்மன்றோ (கOச)

மத்திரைக்கிளையமைந்தன்மகிழ்ந்தருச்சனைகள்செய்ய
வித்தகவிதுரன்பூரிவிகனனேவலர்களாகப்
பத்திசெய்தன்னவர்க்கம்பவனன்சேய்சமைப்பித்தீயச்
சுத்தமாமறையோர்க்கெல்லாந்துரோபதன்சுதரேயிட்டார் (கOரு)

வேறு. பூதலத்தருமறைபுகலுவோர்க்கெலாந்
தீதகலத்தசதானஞ்செய்துயர்
மாதவர்மகிழமாதருமன்வையமே
லாதபத்திரனிழலமரவேகினன் (கOசா)

சங்குதுந்துமிபடலிகைதழங்கவே
வெங்கயமிரதமாமிடையவேகிநற்
பங்கயமுகத்துரோபதைதன்னோடுமே
திங்கணேர்குடையன்வானதியைச்சேர்ந்தனன் (கOஎ)

நவையகறர்மன்பின்னவர்களுல்வரோ
டுவமையிறுரோபதையுவப்பவேகியே
பவமகல்பகீரதியயத்தினிற்படிந்
தவபிரதங்குடைந்தாடினனரோ (கOஅ)

அவபிரதங்குடைந்தாடியாடக
வுவமையிலாடையொண்மருங்கிற்றுன்றவே
நவமணிக்கிரீடமுஞ்சிரத்தினண்ணிடத்
தவர்களாசிகள்சொலத்தருமனேகினன் (கOகூ)

நவையகறம்பியர்நால்வரோடுமே
யுவமையில்கலன்கண்மெய்யோங்கவெய்தியே
துவளாயின்விளங்கியதூயமாயனைத்
தவர்களெண்ணுதிட்டிரன்றழுவினனரோ (ககO)

மாயவன்றருமனைமகிழ்வுறத்தழீஇத்
தூயநல்வசனங்கள்சொல்லியின்புறப்
பாயயம்வயங்கியபசும்பொற்றேரின்மேல்
மீயுயரலரிபோல்விளங்கினனரோ (கக்க)

தம்பியர்தமனியத்தேரிற்சார்ந்திடக்
கம்புதுந்துமிசினங்கறங்கவானுய
ரும்பர்கண்மலர்மழையுதவிவாழ்த்தவே
வம்பவிழ்தொடையுதிட்டிரன்வயங்கினன் (ககஉ)

அடிமிசைநூபுரமுறப்பொன்னுடைசேர்
துடியிடைமருங்கின்மேகலைதுலங்கிடக்
கடயமென்கரம்பசைகவின்கொண்டோங்கநல்
வடிவுடைத்துரோபதைவயங்கினளரோ (கககூ)

தவளவெண்ணகையுறத்தரளமாவடங்
குவிநகிலிணையினின்வயங்கக்கோதிலா
நவமணிக்கலன்கள்சந்தரத்தினண்ணவே
துவரிதழ்வாயினுமிலங்கினளரோ (ககச)

புதிதலர்பங்கயப்போதைவென்றுயர்
மதியினிலிருகயல்வயங்குமாட்சிபோ
லெதிரிலாநகம்விழியிலங்கமாதர்க
டுதிசெயத்துரோபதைதுலங்கினளரோ (ககரு)

நனிமலர்க்குழலளிநண்ணியாடவே
யனநடையணங்குளரம்பைநாணிட
வினமணித்தோடுகாதிலங்கத்தேரின்மேல்
வனிதையர்க்கரசிபோல்வயங்கினளரோ (ககசு)

துலங்குபொன்னிரதமேற்றுரோபதைத்திரு
விலங்கிடக்கவரிகளசையவெய்தவே
கலன்கள்மெய்யிலங்கிடக்கவிகையோங்கிட
வலங்கொளுந்தருமன்முன்வழிக்கொண்டானரோ (ககஎ)

அதிரதர்துவாதசவாயிரத்தவ
ரெதிரிலாவிரதமேலிருகைகூப்பவே
மதியுறவளர்கொடிநிறையமாமுர
சுததியினொலியுறவுவந்தங்கெய்தினன் (ககஅ)

தவளவெண்ணகையினர்சாமரைத்திரள்
கவினுறவிருமருங்கசையக்காட்சியார்
துவசம்வானுற்றிடத்துரகந்தேர்பரி
யவனிமேனிறைந்திடவணிகமார்ப்பவே (ககக)

மங்குலைநிகர்த்தகொந்தளத்துமாதரா
ரெங்குநற்சுண்ணமண்ணிலங்கவீசிடக்
குங்குமமிமசலங்கொண்டுமைந்தர்க
ளங்கையினிறைத்துயர்வசந்தமாடவே (கஉ0)

துந்துமிவளைசினந்துடிகையார்த்திட
வந்தமன்சிறுவனெஞ்சழலுறுத்தவே
தந்திகள்புடைவரத்தருமன்வையமே
லிந்திரைகொழுநனோடேகினனரோ (கஉக)

பொருப்பெனவளர்முலைபுயலொண்கூந்தலார்
கருப்புரதீவிகைகரத்தினேந்தவே
விருப்பமுற்றமரர்வான்மலர்கள்வீசிடத்
திருப்பொலியுதிட்டிரன்வீதிசென்றனன் (கஉஉ)

சின்னமூதொலிகளெண்டிசையுஞ்சேர்ந்திட
மன்னவர்குழுவெலாமகிழ்ந்துபோற்றவே
கன்னன்மென்மொழித்துரோபதையுடன்கவின்
பொன்னெடுங்கோயிலிற்றருமன்புக்கனன் (கஉரு)

அயனகர் தன்னினுமதிசயித்திடு
மயன்மகிழ்ந்துதவுமாமண்டபந்தனிற்
கயல்விழிமடநலார்கவரிவீசவே
யியல்புடன்றருமன்வீற்றிருந்திட்டானரோ (கஉச)

ஆடகவாடைபொற்கலன்களாரநற்
கோடகமதமுறுங்குஞ்சரங்கடோர்
பீடுடைத்தருமன்பேருவகையெய்திட
வேடவிழ்தொடையுறுமரசர்க்கீந்தனன் (கஉரு)

வேண்டியதனைவர்க்குமளித்துவிஞ்சிய
பாண்டுவின்மதலையாந்தருமன்பாரினை
நீண்டடர்வராகமாயிடந்துநீணெறி
பூண்டவனுடனிருந்தனன்பொற்பாரவே (சஉசு)

சாமரைதிகழநற்றம்பிமாருறச்
சோமனுனநத்துரோபதன்றரு
மாமலர்த்திருவனுள்வயங்கித்தோன்றவே
காமனேர்தருமன்வீற்றிருக்குங்காலையின் (கஉஎ)

தருமன்மாவேள்விசெய்தருக்குந்தம்பிமார்
பெருமையுந்துரோபதையழகும்பேர்க்கொளுத்
திருவுறுசெல்வமுங்கண்டுசீரிலா
வரவுயர்துவசனெஞ்சழல்வதாயினன் (கஉஅ)

நத்துறுசெங்கைநாரணன்றன்செய்கையா
லித்திருவிவர்களுக்கெய்திற்றுமெனுச்
சித்தநொந்திலங்கியசெல்வநோக்கிலா
னத்தினபுரிநகர்க்கடையவெண்ணியே (கஉகூ)

உயர்ந்திடுதருமனுக்குணர்த்தியோவுவா
னயம்பளிங்கெனப்பளிங்கமருநீரென
வியைந்திடுமண்டபமருங்கினின்சொலார்
நயந்திணையிலாதவனண்ணினனரோ (ககூo)

கூரியவாளினைச்சுழற்றிக்கொற்றவ
னேருறுதுகிருடைக்கேறவாங்கியே
நீரெனப்படிகத்துநடந்துநீரினைப்
பாரினிற்பளிங்கெனப்படிந்துநீந்தினன் (ககூக)

பயமெனப்பளிங்கெய்திப்பளிங்கிதாமென
வயமதிலமிழ்ந்திடுமவனைநோக்கியே
செயலுறுதுரோபதைதிருவைநேரெனு
மெயினவிர்கலனுறமிகநகைத்தனள் (ககூஉ)

நிலவெனத்தளவலரிலங்குநீர்மைபோ
னலனுறத்துரோபதைநகைக்கநோக்கியே
வலனுறுமுதிட்டிரன்முனியவாரியி
னலையுறத்துயில்கொள்வோனறைகுவானரோ (ககூங)

வீரியர்போலவாள்விதிர்த்துவந்தவ
னீரளற்றமுழ்ந்திநீந்திடுதல்கண்டவ
ரார்நகைசெயாதவரரசகேளென்றே
நாரணனிலங்கிடநகைசெய்தானரோ (ககூச)

பவர்களானவரெலாம்படியின்மாண்டுய
ரவனியாள்சுமடகனகையிதாமென
விவுளியாய்ப்பின்வருமிறைவனெண்ணியே
வுவகைவிஞ்சிடக்கவினுறநகைத்தனன் (கரு௫)

திருமகளுயகன்சிரித்தெல்லீர்களு
மொருமுகமாகவேநகைமினென்னவொண்
ணரிவையர்நகைசெயவனுசர்தம்முடன்
றருமனுநகைத்தனன்றவர்களோடுமே (கருசு)

நீரினுளமிழ்ந்துபின்னீந்தியேறியே
வீரவெண்டுகில்களைந்திழமேமலி
நேரிலாக்காழகம்புனைந்துநின்றவன்
சீருறுந்துரோபதைசிரிக்கநோக்கினன் (கருஎ)

தருமனோடைவருநகைப்பச்சக்கர
னிருகரங்கொட்டியேசிரிப்பவினமுற்
றொருவரைநோக்கிலானுளங்கனன்றுற
விரைவினின்மண்டபமிசையின்மேவினன் (கருஅ)

அரவுயர்த்தவன்வரவன்பினோடுமா
முரசுயர்த்தவனலமொழிகள்பேசியே
தெரிமணிக்கலனெலாஞ்சிறக்கவீதலும்
விரைவினிலெழுந்தவன்விடைகொண்டேகினன் (கருகு)

வேதியன்காங்கையன்விதுரன்கன்னனோ
டேதமிலனைரும்விடைகொண்டேகவே
வாதவனெனத்திகழரவுயர்த்தகோன்
றீதகலத்தினபுரியிற்சென்றனன் (சச0)

இருடருமனச்சுயோதனனுமேகவே
யருடருந்தவர்களாச்சிரமத்தெய்தினர்
கருடவாகனனுயர்கழல்பணிந்துயர்
புருடமாமிருகமும்போயிற்றுமரோ (சசக)

சேதிபன்சிரத்தினைத்துணித்துச்சீருறு
மாதவன்மருங்குறப்பாண்டுமைந்தர்கள்
வேதனையொருவவேவேள்விமுற்றுவித்
தாதியோனிருந்தனனமரரேத்தவே (சசஉ)

வையமாய்வானுமாய்மதியுடுக்கதிர்
வெய்யவெங்கனல்புனல்வாயுமேருவாய்ச்
செய்யதாமரையயன்சிவனுமாமறை
யையனேயச்சுதானந்தரூபனே (சசஙு)

சிசுபாலன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உகஅகூ.

## ௧௦௭-வது சாலுவன் வதைப் படலம்.

உந்தியம்புயத்தினுலகெலாமுதவியொருமுதலாய்ப்பலவுருவாய்த்
தந்திமுன்னின்றுகராவினைச்செற்றுச்சகமெலாந்தானளந்தருளி
யிந்திரையவனிக்கினியகொண்கனுமாயியாதவர்குலத்தினுற்பவித்துச்
சிந்தியாமறவோர்குலமறமுருக்கிச்சிறந்தசீதரனையேதுதிப்பாம் (௧)

**வேறு.** சீலமன்னுமதனோடடர்ந்துபதினுலுமேழுமுறுதினமெலா
மாலமென்னவுலகெங்குமஞ்சவடுகணைசொரிந்துவிசையோடய
வேலியெங்குமுறநின்றசாலுவனோடமர்செய்வேலைமுறையிட்டபாஞ்
சாலியாடைதொலையாதுநல்கியவனுயிர்கொண்மாலினடிதாழ்மினோ (௨)

சோலமாகியவிதர்ப்பனல்கியருள்கோதையோடிரதமேறியே
நீலமேனியனடர்ந்தபோரினெதிர்நிற்கலாதுநிலனோடிய
சாலுவன்னிருகைதன்னின்மண்கொடுதழற்கணன்றனைநினைந்துயர்
ஞாலமீதினொருவருடனற்றவநிறைப்பவீசனவணண்ணினான் (௩)

தூயமால்விடபமீதினேறியருள்சோதியைத்தொழுதுசாலுவன்
மாயன்மாநகரழித்துமற்றவனைவெல்லவெண்டிசைகள்வானெலா
மேயெனுமுனரினெய்தவானுயரிருப்புவேலியொளிர்மாபுரம்
நீயெனக்கருள்செய்யென்னவேயரனினைக்குமுன்னுதவிநீங்கினான் (௪)

சிவனளித்திடுமிருப்புவேலியொளிதிகழ்புரத்தினிடையெய்திமா
துவரையிற்கணைசொரிந்துமாமழைகள்போலவெண்மணல்கவியே
பவனனுயனலைவீசிவானுயர்பருப்பதங்களையெறிந்துதா
னுவமையில்கனககோபுரங்கள்பொடியுறவழித்தனன்முனிந்தரோ (௫)

எரிவளைந்திடவெரிந்தவாயுதிசையெங்கணுமனல்பரப்பிட
வரவினங்கள்விடம்வாயுமிழ்ந்துவளையப்பிறங்கன்மழையடரவே
உருமெனக்குரலினோசையுற்றிடவுயர்ந்துசாலுவன்முடுக்கலு
மரசரோடினர்களிறுதிக்காலவழிவாமெனுவமரர்வெருவவே (௬)

சாலுவன்னயமிலங்குவேலியுறுபுரமொடுஞ்சமர்முடுக்கலு
மாலின்மைந்தனொடுசாம்பன்விந்தனுயர்சாரணன்சினிமனன்சுதன்
சீலம்விஞ்சுதிறலக்குரூரனொடுமரசர்தேர்கண்மிசையேறியே
காலமாரியெனவில்லினானெடியகடியவாளிகள்கடாவினார் (௭)

சாகரந்திகழுமூரின்மன்னர்கணைதூவிடக்கடியசாலுவ
னேகரூபவெகுரூபமாகியுயரெண்டிசைக்கணினுமுற்றெழிற்
சேகரம்புயமுரங்கரங்குருதிசொரியவாள்மழைசிதறலு
மோகரங்களுடனடரும்வீரர்திரள்முறியமாரனெதிர்முடுகினான் (௮)

மாரன்வெஞ்சிலைவளைத்துவாளிகள்வழங்கிடக்கடியசாலுவன்
கோரவெங்கணைகொடேயறுத்தரிகுமாரன்மார்பினுறுகுருதிகள்
பாரினோடொளிராசுகங்கண்மெய்யழுத்தலோடுமெழுபருதிபோற்
றேரின்மீதிடைமயங்கினானளினமங்கைதன்னுடையசிறுவனே (௯)

சீதரன்சுதன்மயங்கிவீழவுயர்தேர்கொடேவலவனேகலு
மேதமில்லிரதிகொழுநனோர்கடிகையெய்தவேதெளிவுவந்திடப்
பீதிகொண்டுவெரினிட்டனன்பகைஞன்முன்னரென்றுசிலர்பேசிடச்
சூதநீயிரதமீளவிட்டனையெனுவறைந்துரைகள்சொல்லுவான் (௧௦)

எந்தைதன்னொடுமலாயுதன்றனொடுமியானிடைந்துயிர்கொடும்முனின்
வந்தனன்னெனவுரைப்பனோவனுசர்தேவிமாரெனைமதிப்பரோ
முந்துமென்விறலையழிவுசெய்தனையெனமொழிந்துயருமாரவேள்
சிந்தைநொந்திடலுமிருகையிற்றொழுதுதாருகன்சிறுவனுரைசெய்வான் (கக)

சூதர்செய்தொழில்கள்செய்தனன்னதிலுன்வீரியத்திறமைசோருமோ
சீதரன்குமரவென்றுகைதொழுததாருகன்சிறுவனைக்கடி
தேதமற்றவிரதத்தைநீவிடுதியென்றுசாலுவன்முனெய்தியே
யாதவன்படையைவிட்டனன்மறவனழலின்வாளிகொடறுத்தனன் (கஉ)

மாயவன்குமரன்வாசவன்படையைவிட்டனன்வலியனுகிய
தீயவன்மறலிவெஞ்சரங்கொடுவிலக்கினன்றிருவருட்சுதன்
வாயுவின்படைவிடுக்கவேமறவன்மற்றதேகொடுதடுத்தனன்
றூயவன்முகில்கள்போலவெண்டிசையுமறையவெங்கணைசொரிந்தனன் (கங)

சம்பரன்றனைவதைத்தவன்கணைசொரிந்திடக்கடியசாலுவன்
வெம்புநெஞ்சினன்வில்வளையவாளிகள்விடுத்தறுத்திடலும்வேனிலா
னம்பரத்தினொருதண்டுகொண்டறையவேயயப்புரனொளித்தலு
மும்பர்மாமலர்சொரிந்துவந்தனர்களுவரிபோலரசரார்ப்பவே (கச)

அந்தரத்திடையொளித்தசாலுவ
னரைக்கணத்தினையப்புரத்
திந்திராதிபர்நடுங்கவெய்திவளை
யூதவாளிமழைபொழியமா

விந்தைமைந்தன்முனிவெய்திவில்வளைய
வாசுகங்கொடுவிலக்கவே
யிந்தவண்ணமிருபத்தினோர்தின
மெதிர்ந்துவெஞ்சமர்செய்காலையின் (கரு)

**வேறு.** வீரனையெதிர்ந்துவந்தசாலுவன்விசிகத்தாலே
பாரினோர்மன்னரஞ்சிப்பலதிசைதோறுமோட
மாரவேளெதிர்ந்துதாக்கும்வலனெலாமாலுக்கோதச்
சூரசேனன்சேயாண்டோர்தூதனைவிடுத்தானன்றே (கசு)

தூதுவன்விரைவினெய்தித்தூயமாதருமனுரு
மேதமினகரினெய்திபிறைவனைவணங்கிமாரன்
மீதலத்தயங்கொள்வேலிவிஞ்சுசாலுவன்றனோடே
பூதலத்தமரிற்றுக்கும்பொருளெலாமுரைசெய்தானால் (கஎ)

மாரவேளமரிற்றுக்கும்வகையெலாந்தூதன்கூற
வாருநேரிலாதமாயோனணிமணித்தேரினேறித்
தாருகன்விரைவிற்றூண்டச்சத்தியவாமையோடு
மேருறுதுவரைதன்னினிமைப்பின்முன்னெய்தினுனல் (கஅ)

நீலமாமேகம்போலநேமியோனெய்தலோடு
மாலமாவிடமேபோலவயங்கொண்மாபுரத்தினூடே
காலனேடிமையோரஞ்சச்சாலுவன்கணைகள்பெய்து
கோலமார்வளையையூதிக்கோளரிபோலவார்த்தான் (கக)

சாலுவன்வரிவில்வாங்கிவிடுத்திடுஞ்சரங்களெல்லா
மாலொருகணையினலேயறுத்திடமறவன்வெய்ய
நீலகண்டன்றனீந்தநிகரிலாவேலைவாங்கி
நாலிருதிசையுமஞ்சவெறிந்தனனமனேபோல்வான் (உ௦)

சாலுவனெறிந்தவேலெண்டிசைகளுந்தழல்கள்கால
வாலமாவிடமேபோலவமரர்களஞ்சமாயன்
மேலுறவருதலோடுவிமலன்வில்வளைத்தேயைந்து
கோலினாறுகூறாய்க்குறைத்தனனிமையோரேத்த (உக)

வேலொருநூறுகூறாய்விழுதலும்விடமேபோலச்
சாலுவன்முனிந்துவெய்யசரங்களான்மாயோன்கையிற்
சோலவில்லிறுத்துநீண்டகொடியினைத்துணித்துவீழ்த்துக்
காலன்மெய்நடுங்கவார்த்துக்கடியவன்கழறலுற்றான் (உஉ)

எனக்குயிர்த்துணைவனானவெதிரிலாச்சேதிராசன்
றனக்குநிச்சயித்தமாதுதன்னைநீபுணர்ந்ததன்றிக்
கனக்கிரியேலவிஞ்சுமவனையுங்கடிந்துசெற்ற
வுனைக்கொடுஞ்சரங்களாலேவதைப்பனென்றுருத்துச்சொன்னான் (உ௩)

பூரியனினையவாய்மைபுகறலுமாயோனோக்கி
வீரியர்வில்லினல்லால்விளம்புவபுன்மையென்றே
யாரியன்கதையைவாங்கியறைந்திடப்புரத்தினோடு
நேர்கிலாதொளித்துப்போனானெறியில்சாலுவன்றான்மாதோ (உ௪)

அயமொளிர்புரத்தினோடுமந்தரத்தொளித்துப்போன
கயவனோர்கடிகைமீதிற்கடலுறுவிடமேபோல
வியமனிந்திரன்வானோர்கணடுங்கிடவெதிர்வந்தார்த்துப்
புயல்வணன்மீதின்வானம்புகைந்திடச்சரங்கள்பெய்தான் (உ௫)

தீயவன்விடுத்தவாளியனைத்தையுஞ்சிலீமுகத்தான்
மாயவனறுத்தலோடுமுலப்பிலாமாயைவல்லோன்
றூயமாவசுதேவன்றன்றோளினைக்கயிற்றால்வீக்கி
யேயெனுமுன்னர்யாகப்பசுவெனவிசித்துவந்தான் (உ௬)

இந்திரைகொழுநன்றீயோனியற்றியமாயமெல்லா
முந்தியேயறிந்துங்கண்ணீர்முகில்விடுதாரைபோலச்
சிந்திடவெந்தாயந்தோசெறுநனுன்றோளைவீக்கித்
தந்தனனென்செய்கேனென்றரற்றினான்றடந்தேர்மீதின் (உ௭)

அரியிருகண்ணீர்சோரவரற்றலுஞ்சாலுவன்றா
னொருகையின்வாளைவாங்கியுயர்ந்திடும்வசுதேவன்றன்
சிரசினையறுத்துப்பாரினெறிந்திடத்தேரின்மீதின்
வெருவியோர்கடிகைப்போதுவிமலன்மூர்ச்சித்தான்மன்னோ (உ௮)

மாயையிற்றன்னைவீக்கித்துணித்துத்தன்மகன்றன்முன்னர்த்
தீயவனெறிந்தசெய்கைதெரிந்துயர்வசுதேவன்றான்
றூயபொன்னிரதமீதிற்றோன்றலும்விழித்துநோக்கி
யாயிரநாமத்தையன்றேவியோடறையலுற்றான் (உ௯)

சாலுவனெந்தைதன்னைத்துணித்துமுன்னெறிந்ததன்மை
வேலிணைவிழியாய்மாயமென்பதுவிளங்கிற்றென்றே
மாலொளிர்முறுவல்செய்துவரிவிலைவளையவாங்கிக்
காலமாமாரிபோலக்கணைபொழிந்தார்த்தானன்றே (௩0)

ஆரியனெய்தவாளியனைத்தையுஞ்சாலுவன்றான்
கோரவெஞ்சரத்தான்மாற்றிக்கொடுங்கணைதூவியார்ப்ப
வீரியன்விசிகத்தாலேவிலக்கியேதிகைத்துவில்லைத்
தேரின்மேலூன்றிநிற்கத்தேவிபார்த்தறையலுற்றாள் (௩௧)

மருவலனெய்தவெய்யசரங்களைவாளியாலே
யொருநொடியிடுவமுன்னமறுத்துநீயுயர்ந்தவில்லைச்
செருவிடையிரதமீதினூன்றியேதிகைத்துநின்ற
கருமமேதறைதியையாவெனவரிகழறலுற்றான் (௩௨)

பாவமில்பாஞ்சாலன்றன்பயந்திடுமமுதம்போல்வா
ளாவிநைந்துருகிவெய்யவரந்தையுற்றிருகைகூப்பிக்
காவெனைமாயாவென்றுகழறிடத்திசைத்தேனென்ன
மாவடுவகிரையொத்தவாட்கணுளியம்பலுற்றாள் (௩௩)

அருந்ததியனையகற்பார்துரோபதையரந்தைபெய்தி
வருந்தியின்றுனைக்காவென்றுரைத்திடுவசனமெல்லாங்
கருந்தடங்கண்ணினார்தங்களையெலாம்விரைவின்வாரிக்
குருந்தின்மேலேறுமையாகூறுதிதெரியவென்றாள் (௩௪)

சத்தியவாமையிவ்வாறுரைக்குமுன்சாலுவன்று
னத்திரநிறைப்பக்காத்தேயரியமழல்வாளிதூவக்
குத்திரமனத்தோன்வானிற்கரந்திடக்குடைக்கூத்தாடி
நித்திலநகையினாளேகேளெனநிகழ்த்தலுற்றான் (௩௫)

இந்திரப்பிரத்தத்தைவர்க்கெய்தியவிபவங்கண்டு
நொந்தவன்பளிங்கென்றூழ்ந்தவயந்தனின்விழவேநோக்கி
நந்தொளிர்கரத்தளாயதுரோபதைநகைத்தலோடும்
வெந்திடுசிந்தையோடுஞ்சுயோதனனகரின்மேவி (௩௬)

நீதியில்சிந்துநாடனெறியிலாக்காந்தாரன்சே
யாதவன்சிறுவன்றீயனானதன்னனுசனோடுந்
தீதகறருமனோடுஞ்செல்வமுஞ்சகுனியாடுஞ்
சூதினாற்கவர்வானாகிச்சுயோதனன்சிந்தைசெய்தே (௩௭)

சந்திரனவிர்போற்றுய்யதரளமண்டபத்தின்வண்மைக்
குந்திதன்சுதர்கள்காணவருகெனக்கூறவேதூன்
றந்தையால்விதுரன்றனனையேவவேயவனுந்தாழ்வி
லிந்திரப்பிரத்தத்தெய்தித்தருமனோடிவைகள்சொன்னான் (௩௮)

எந்தைதான்பணித்தமாற்றந்தவிர்தனன்றன்றென்றே
யிந்திரப்பிரத்தமோவியெழிலுறுமடந்தைதன்னோ
டந்தமாரறன்சேய்பின்னோரனைவருங்கூடவேகி
விந்தைசேர்ந்தழகாரத்திப்பதியிடைமேவினூரால் (௩௯)

மன்னரெண்டருமன்மூத்ததாதையைவணங்கிப்பின்ன
ரன்னையையிறைஞ்சித்தூயதுரோபதனருளவந்த
மின்னையாண்டிருத்திப்பின்னோர்மேவிடவிளங்குமாரந்
துன்னுமண்டபத்தின்வந்துசுயோதனனருகிற்சார்ந்தான் (௪௦)

அந்தமாரறன்சேயெய்தவந்தமன்சிறுவனுங்கே
சிந்தைவெந்திருகையாரத்தழுவிச்சிங்காதனத்திற்
குந்திதன்மைந்தரோடுங்கூடியேயிருத்தலோடும்
வெந்திறற்சகுனிபாண்டுசுதனுடன்விளம்பலுற்றான் (௪௧)

நீதிசேர்தருமவீண்டோர்விநோதமாய்நிகரிலாத
சூதினைப்பொருதியென்னவுதிட்டிரன்சூதையாடி
லேதமார்நாசமெய்துமென்னலுமிச்சூதுக்கே
யாதவன்சிறுவனீதானஞ்சினைகொல்லோவென்றான் (௪௨)

இரவிதன்சிறுவன்சூதுக்கிடைந்தனைகொல்லோவென்னத்
தருமன்வெஞ்சினத்தினோடுந்தருதிசூதாடவென்ன
விரைவினிற்சகுநிநிர்த்தக்கயிறுமின்சாரியெல்லா
மிருநிலமிசையின்வைப்பவிருவருமாடினரால் (௪௩)

நிகரிலாவிவுளிகைம்மாநெடுமணித்தேர்கடோற்றுப்
பகரொணாவளங்கள்விஞ்சும்பதியொடுநாடுதோற்று
மிகவொளிர்கலன்களோடும்விழுமியநிதிகடோற்றுச்
சகுனியோடாடித்தன்மன்றம்பியர்தமையுந்தோற்றான் (௪௪)

தன்னையுந்தோற்றுத்தன்மன்றுரோபதன்றவத்தாற்பெற்ற
மின்னையுந்தோற்கலோடும்விடவரவுயர்த்தகோமான்
றுன்னியமகிழ்வினோடுஞ்சூதினைத்தவிர்மினென்று
கன்னனோடிலங்கினான்வெண்கவரிகளசைந்துசூழ (௪௫)

ஓவியமலியவம்பொன்னோங்கியகோவின்மேவி
யேவல்செய்தாதியாகியிருக்கப்பாஞ்சாலன்பெற்ற
பாவையைவிடுதியென்றேபகர்ந்தனனந்தன்சேயாங்
காவலன்றன்றேரூரும்பிரதிகாமியன்றன்னோடே (௪௬)

பிரதிகாமியன்றானேகித்துரோபதராசன்பெற்ற
விரதிநேரழகினாடன்கற்பினாலெய்தவஞ்சிச்
சுருதிநூல்வழியினாய்ந்தவழக்கவனெஞ்சிற்றோன்ற
நிருதர்போனெறியிலாதநிருபன்றானெய்திச்சொல்வான் (௪௭)

தன்னைமுன்றோற்றுச்சூதுசகுனியோடாடித்தன்மன்
பின்னரினென்னைத்தோற்கப்பெறாவழக்காகையாலே
வின்னிலமதனிலுங்கட்கியான்பணியில்லையென்று
சொன்னனள்பழிப்பிலாததுரோபதையென்றுசொன்னான் (௪௮)

சொன்னவன்றன்னைநோக்கிச்சுயோதனன்முனிவினோடு
மன்னவர்முன்னீசொல்லும்வழக்கினையுரைக்கவாவென்
றன்னமென்னடையினாளைத்தருதியென்றனுசன்றன்னை
யின்னல்கண்மலியுநெஞ்சனேவினானெவருமஞ்ச (௪௯)

துன்மதியானதுச்சுவாதனன்றூயவாணி
னன்மதிமுகத்தளாயதுரோபதைதன்னைநண்ணி
யுன்மதிதன்னாற்சொல்லும்வழக்கினையுரைக்கவேதான்
மன்மதனானவெங்கோன்முன்னரின்வருதியென்றான் (௫0)

இன்னல்கொளரசன்கூறவென்னைப்பின்றோற்றதன்மன்
றன்னைமுன்றோற்கையாலேதாதிநானல்லவென்ன
வன்னையுந்தடுக்கநில்லான்றுரோபதையணங்கினாளை
மன்னவரவையின்முன்னேமயிர்பிடித்திழுத்துவந்தான் (௫௧)

கங்கைதன்மைந்தன்கண்டுகாவலனிளையோன்றன்னை
யங்கையினடித்தேயன்பால்விடுவித்தேயரற்றுகின்ற
மங்கையைத்தேற்றிநீசொல்வழக்கினையுரைத்தியென்ன
நங்கைமெய்நடுங்கிநாவினீரறநவிலலுற்றாள் (௫௨)

தருமனிச்சூதையாடித்தன்னைமுன்றோற்றுப்பின்னர்
நிருபரேயென்னைத்தோற்கநீதியோவென்றுகூற
வரசர்வாய்திறப்பவஞ்சவரவுயர்த்தவன்றன்பின்னோன்
விரைசெறிமாலைமார்பன்விகர்ணனாங்கெழுந்துசொல்வான் (௫௩)

விரைவினினெழுந்துதன்னைத்தோற்றபின்மெய்ம்மைசேருந்
தருமனிங்கிவளைத்தோற்கத்தகாதிந்தநெறியைத்தப்பி
லருநரகடைவரென்றேயியம்பலுமவனைவைது
மருவமர்குழலினாளைவாங்குதிதுகிலையென்றான் (௫௪)

அரவுயர்துவசன்சொல்லவறனிலாவனுசன்றானே
மருவமர்குழலினாடன்றுகிலினைப்பற்றிவாங்க
வரியின்வாயுற்றமான்போற்றுரோபதையாவியில்லா
ளிருகரஞ்சிரத்தின்வைத்தேயாதவாகாத்தியென்றாள் (௫௫)

சுற்றமும்விட்டாள்வெற்றிப்பதியரைவிட்டாயே
நற்றுணையென்றென்பேரைநவின்றிருதாளைநெஞ்சாற்
பற்றலுந்திகைத்துநின்றேன்பாவைதன்மருங்கின்மீதிற்
சுற்றியதுகிலோயாமல்வளர்ந்திடச்சொன்னேனென்றான் (௫௬)

அத்தியன்றாலமென்னவடைந்துகாத்தருள்வோன்கூறச்
சத்தியவாமைதூயகொழுநன்பொற்றாளிற்றாழ்ந்து
பத்திசெய்பாஞ்சாலன்றன்பாவைவெந்துயரந்தீர்த்த
சுத்தனீசுருதிக்கெட்டாச்சோதிநீயென்றுசொல்வாள் (௫௭)

சூதினிற்றருமன்றோற்பத்துரோதைதூசைப்பற்றி
நீதியிலரசன்வாங்கநீதுகினிறைத்ததெல்லா
மோதினாயுந்தைதன்னைச்சாலுவனுயிர்கொன்றானென்
றாதிநீயறியார்போலவரற்றியதென்கொலென்றாள் (௫௮)

இறையெனவுயர்வைமீளவிருநிலத்திழிந்தேயாய
ருறியினிலிழுதுநெய்பாலுகருவையுவமையில்லாய்
மறைகளுக்ககப்படாமன்மயக்குமுன்மாயந்தன்னை
யறிபவராரோவென்றேயறைந்தடிதொழுதாளன்றே (௫௯)

என்றவளுரைத்தலோடுமெதிர்நிலாதொளித்துப்போன
குன்றெனவுயர்ந்ததோளான்கொடியசாலுவன்றான்றோன்றி
வென்றிவில்வளையவாங்கிவிசிகமாமழைபெய்தார்ப்ப
மன்றலந்துளபத்தாரோன்வாளியாலறுத்துவீழ்த்தான் (௬0)

ஏயெனுமுன்னர்வானினெண்ணிலாவுருவமாகி
வாயுவோடனலாய்வீசிமலைபலவெறிந்துதோன்றுந்
தீயவன்கவசம்வைய்யஞ்சிலைசிரோமணியையம்பால்
மாயவனறுத்துவீழ்த்துவரைதுகளாகவெய்தான் (௬௧)

சிலையொடுகவசமின்னுஞ்சிரோமணிவீழக்கண்டே
மலையொடுமரமுமேந்திமறவன்றானெறியமாதர்
கலைபலவாருமையன்கதையினிலெற்றலோடு
மலையுறுகடலின்வீழ்ந்தானயப்புரந்துகளதாக (௬௨)

உததியின்விழுந்துநீந்தியோங்கல்போற்சாலுவன்றான்
மதிதவழ்வேணியான்றன்வரத்தினாலீயப்பெற்ற
கதையினையிமையோரெல்லாங்கலங்கிடவெறிதலோடும்
விதியினையருளும்வீரன்விசிகத்தாலறுத்துவீழ்த்தான் (௬௩)

காலனைநிகர்த்துவெய்யகடியவன்கனன்றுநேரில்
சூலம்வெங்கரத்தாற்பற்றிச்சுழற்றியேவருதலோடு
நீலமாமேகமொப்போனேமியைவிடுத்தலோடுஞ்
சாலுவன்சிரத்தைத்தள்ளிச்சென்றதுதபனன்போல (௬௪)

மந்தரவரைவீழ்ந்தென்னச்சாலுவன்மடிதலோடுந்
துந்துமிமுரசமார்ப்பத்தூயமாமலர்கடூவி
யந்தரத்தமரரெல்லாமாவலங்கொட்டியார்த்தா
ரிந்திரைகொழுநன்றேவிதன்னொடுமிலங்கினானல் (சுடு)

சாலுவன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உஉருச.

## க0அ-வது தந்தவக்கிரன் வதைப் படலம்.

அலரியோன்றன்குலத்துதித்துவருளார்முனிபின்னடந்தரக்கி
பலருமரக்கருடன்வலையப்படுத்துமகங்காத்தப்பாற்போய்
மலரினுறைவாள்சீதையைவில்லிறுத்துமணந்துராவணன்பட்
டுலரவாளிதொடுத்தருளுத்தமராகவனைநினைந்துய்வாம் (க)

வேறு.

நகிலொளிர்துரோபதைநவின்றநாமத்தாற்
றுகிலளவில்லதாய்க்கொடுத்ததூய்மையாற்
பசலிரவாச்கியபரமன்றன்புகழ்
புகலுவோரிமையவர்போற்றவாழ்வரே (உ)

சாலுவன்மடிந்திடத்தந்தவக்கிரன்
வேலைபோற்கரிபரிவீரர்தோன்றவே
யாலமாவிடமெனவதிர்த்துவெங்கணை
மாலின்மேலெண்டிசைமறையத்தூவினான் (ங)

தந்தவக்கிரன்விடுசாயகங்களை
யிந்திரைகொழுநன்வில்லேந்திவெங்கணை
சிந்தியேயறுத்தவன்சேனையீட்டத்தை
வெந்திறற்பகழியாலறுத்துவீழ்த்தனன் (ச)

வெங்கரியிவுளிதேர்வீரர்மாள்தலுஞ்
சங்கரனெனமுனிதந்தவக்கிரன்
மங்குல்போலெங்கணும்வாளிதூவவே
யங்கண்மால்பகழியாலறுத்துவீழ்த்தனன் (ரு)

தீயவன்பின்னருஞ்சிலீமுகங்களை
மாயன்மேல்விடுத்தலுமாற்றிமாதவ
னேயெனுமுன்னவனேந்தும்வெஞ்சிலை
துயமாகொடிகடேர்துணித்துவீழ்த்தனன் (சா)

கொடிகடேர்சிலையறக்கொதித்துவெய்யவ
னிடியெனவதிர்த்தொருகதையையேந்தியே
வடவரைநிகரெனவந்துமாயன்மேல்
மிடலுடைக்கரங்கொடுவீசியோச்சினான் (எ)

தண்டுகொண்டோச்சியதந்தவக்கிர
னண்டமுண்டவன்மிசையடர்ந்துதாக்கலு
முண்டசன்றனையருண்முராரியோர்கதை
கொண்டுறவதைத்தனன்குருதிகக்கவே (அ)

உக்கிரக்கதையைமாலுரத்தினோச்சலுங்
கக்கினன்குருதிநீர்கடியவன்னுயிர்
மிக்கவெஞ்சுடரெனவிளங்கித்தோன்றியே
சக்கரவரியிருதாளிற்சேர்ந்தது (கூ)

உடலிடையுயிர்பெருஞ்சோதியோங்கியே
புடவியன்றளந்தவனடியிற்புக்கிடத்
தடவரைநிகரெனத்தந்தவக்கிரன்
படியின்மேற்குருதிநீர்பரவமாண்டனன் (கo)

இரணியக்கண்ணனாயிறந்திலங்கையாண்
முரணுறுமிராவணற்கிளையமூர்க்கனாய்த்
தரணியின்மடிந்தவித்தந்தவக்கிரன்
வருணமாரரிபதமலரிற்சேர்ந்தனன் (கக)

தந்தவக்கிரன்மடிந்திடலுந்தாழ்விலா
விந்திரனோடிமையோர்கண்மாதவர்
துந்துமிமுழங்கிடமலர்கவியினார்
நந்தொளிர்கரத்துநாரணனையேத்தியே (கஉ)

தந்தவக்கிரனுயிர்த்தம்பியானவன்
மந்தரவரையெனவளர்ந்ததோளினான்
வெந்திறலானவிடூரதன்சினத்
தந்தகனேலவந்தடர்ந்துதாக்கினான் (கங)

வாளொடுகேடகஞ்சுழலமால்வரைக்
கோளரிபோலவேகொதித்துமேல்வர
நீலைதன்னையசனேமியாலவன்
றோளொடுதலையறத்துணித்துத்தள்ளினான் (கச)

விடமெனமேவுவீடூரதன்னுய
ருடலொடுதலைநிலனுருளமாள்தலுங்
கடிமலரிமையவர்பொழியக்கார்வண
ணிடமுடையிரதமேலிலங்கினானரோ (கரு)

மாரன்வந்தடிமிசைவணங்கமாதவன்
வீரவச்சுதன்றனைவிரும்பிநோக்கியே
யார்வமுற்றிருகணீரவன்றன்குஞ்சியிற்
சாரவேயிருகையாற்றழுவினானரோ (கசு)

மாதவரெண்வசுதேவனெய்தவே
சீதரனவனடியிறைஞ்சிச்சேர்தலும்
போதனைப்படைத்தருள்புண்ணியன்றனை
யாதரத்துடனணைத்தன்புற்றானரோ (கஎ)

தாலகேதனன்வரச்சக்கரத்தவன்
ஞாலமேல்வனடியிறைஞ்சநண்ணியே
நீலமால்வரையெனநிறைந்தமேனியார்
மாலின்மார்பமுந்துறமகிழ்ந்துபுல்லினான் (கஅ)

சினியருள்சுதனொடுசாம்பன்சீருறு
தனயர்களனைவருந்தாளிற்றாழ்தலு
மனமலிமகிழ்வொடுமார்பிற்புல்லியே
கனமெனமாயவனின்றகாலையின் (கக)

ஓவியம்பழித்தமெய்யொளிருருப்பிணித்
தேவியோடனைவருஞ்சிவிகைமீதினின்
மாவினமிபமுறுமன்னர்காக்கவே
மேவினரிந்திரப்பிரத்தம்விட்டரோ (உ0)

மாதவன்றேவியரனைவரும்வரத்
தீதிலாத்துவரையிற்சேர்ந்துதேவகி
பாதமீதிறைஞ்சிடப்பரிவினொடெடுத்
தேதமில்குமரனையிருகப்புல்லினாள் (உக)

செறுநர்கள்செருக்களத்தவியத்தேவர்க
ணறுமலர்பொழியநால்வேதமோங்கவே
நெறியுறுந்தேவியர்நிறைந்துசூழ்ந்திட
விறையவன்றுவரையிலிலங்கினனரோ (உஉ)

தந்தவக்கிரன் வதைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உஉஎசு.

---

## க0கூ-வது பாண்டவர் வனவாசப் படலம்.

சூதினால்வஞ்சஞ்செய்துசுயோதனனடரக்கானின்
மாதினாளுடனுமேகுமறனிலாப்பாண்டுமைந்தர்
வேதனைதவிர்த்துத்தூயமீள்கிலாக்கதியையீந்த
சீதரனனைவெங்கோன்றிருவடிவணக்கஞ்செய்வாம் (க)

மன்னரெண்டருமராசன்மறமிகுஞ்சகுனிதன்னோ
டின்னல்செய்சூதையாடியியல்புறுநாடுதோற்றுப்
பின்னவர்தன்னைத்தோற்றுப்பிறங்கியகலன்கடோற்றுத்
தன்னையுந்தோற்றுத்தேவிதன்னையுந்தோற்றான்மன்னோ (உ)

நீதியிலரவுயர்த்தோனெறிகொள்பாஞ்சாலன்பெற்ற
மாதைமண்டபத்தினேற்றிவாங்குதிதுகிலையென்றே
யோதலும்வெகுண்டுதுச்சாதனன்சென்றேயுரிதலோடுஞ்
சீதராகாத்தியென்றேதுரோபதைதியானஞ்செய்தாள் (ஙு)

காலனைநிகர்த்ததுச்சாதனனிடைக்கலிங்கம்பற்றச்
சேலெனமிளிருங்கண்ணாள்சென்னிமேற்செங்கைகூப்பி
மூலமென்றோதுமானைமுன்னர்வந்துதவுஞ்செய்கை
யேலவேயென்னைக்காத்திபுயல்வண்ணவென்றுசொன்னாள் (ச)

வேலொளிர்விழியாளங்ஙன்விளம்பிடக்கேட்டுவெய்ய
சாலுவனுடனேதாக்குஞ்சமரினைத்தவிர்ந்துமின்றே
யாலிலையகட்டாள்சுற்றுமாடைதான்வளர்கவென்று
சேலுருவாகியோங்குஞ்சீதரனறைந்தானன்றே (ரு)

கோடொளிர்கரியையட்டகொற்றவன்கூறுங்காலைச்
சூடகமிலங்குகின்றதுரோபதைதுகிலைப்பற்றி
மூடனுமரசன்மென்மேன்முடுகிடவுரியலோடு
நீடுபொன்னுடைநீங்காமருங்கினினிறைந்ததன்றே (௬)

முறைமையின்மன்னன்மென்மேன்முடுகலுமிளையமூட
னிறைமலர்க்குழலினுடன்னெடுந்துகிலதனைப்பற்றி
யுறுவலிகரத்தாலொன்றைவாங்கவொன்றுளதேயாகி
மறுவிலாமறையோர்க்கீவான்றனமெனவளர்ந்ததன்றே (௭)

நேரின்மின்னிடையினுடன்னெடுந்துகினிறையக்கண்டு
பூரியவரவுயர்த்தோன்பொறைகொண்மாமடநல்லாளை
யூருவினிருத்தியென்றேயுரைக்கவவ்விடத்தினுங்கார்
வீரியவீமன்றண்டால்வீகுதியென்றாண்மின்னே (௮)

ஏருறுவீமனெய்தியிலங்குநூற்றுவரைச்செற்று
நேரிலாமடந்தைசுற்றுநெடுந்துகில்பற்றினோன்றன்
மார்புறுகுருதியள்ளியுண்பளவுந்தான்வாவி
நீர்கதைதன்னான்மோதிநிறைபுனலுகர்வனென்றான் (௯)

பாரிலொண்பாஞ்சாலன்றான்பயந்திடுபாவையாகு
நேரிலாவணங்குசெவ்வாய்துடித்திடநிகழ்த்துவாளென்
வீரியவீமன்றண்டால்வீந்துவீழரவுயர்த்தோன்
மார்பிடையேறியல்லான்மயிர்முடியேனீண்டென்றாள் (௧௦)

சகுனியைச்சகாதேவன்றான்றெறுவனென்றுரைத்தான்றாழ்வில்
பகலவன்குமரன்றன்னைப்பற்குணன்வதைப்பனென்றான்
மிகமுனிந்திவர்களெல்லாம்விளம்பிடவெள்கல்கூறி
நிகரிலாவரவுயர்த்தோனிறைமணிக்கோயில்புக்கான் (௧௧)

கண்ணிலாவரசனெய்தித்துரோபதனருளுங்கற்புப்
பெண்ணினைச்சிறியோர்செய்தபிழையினைப்பொறுத்தியென்று
புண்ணியத்தருமன்சூதாற்றோற்றிடும்பொருள்களோடு
மண்ணுறுவளநாடீந்துமன்னநீபோதியென்றான் (௧௨)

கரிபரியிரதம்வீரர்கணக்கிலார்மருங்குசேர
வரசர்கண்மிடையத்தன்மனனுசர்கள்சூழநொய்தி
னூரனுறுதேரினேறியுயர்ந்தபாஞ்சாலியோடு
மரவுவாய்விழுங்கிவிட்டவாதவன்போலச்சென்றான் (௧௩)

தருமனுங்கெய்தலோடுஞ்சகுனிதன்மருகனோடே
வரையின்கந்தரத்திற்றூங்குமடங்கலையெழுப்பிவீக்கிப்
பரிபவஞ்செய்துவிட்டபான்மைபோலிவனைவிட்டா
லரியுடனெழுந்தெல்லோருமவியவேபொருவரென்றான் (௧௪)

ஆதலிற்றருமன்றய்யவனுசரோடேகுமுன்னுன்
றாதையாலழைத்துவெய்யதரணியினுறுங்கான்றன்னிற்
சூதவர்தோற்கவென்றுதுரத்துதல்கருமமென்றே
யோதிடத்தந்தைபாலினுரககேதனனுஞ்சென்றான் (௧௫)

தாதைநீயைவர்தம்மைத்தனயரென்றேவினையேன்
மாதவரோடுங்கூடிவளநகரெல்லாங்கொள்வா
ராதலினவரைமீளவழைத்துயர்சூதால்வென்று
தீதுறுபுரவந்தன்னிற்சேர்த்துதல்கருமமென்றான் (௧௬)

மைந்தனீதுரைத்தலோடுமருளுறக்காணுவேந்த
னந்தமாரறன்சேய்தன்னையனுசரோடழைத்தென்பாலிற்
றந்திடுமென்னத்தூதருரைத்திடத்தருமராச
னெந்தையேனழைத்தானென்றேயிளையவரோடுமீண்டான் (கஎ)

வந்தடிவணங்கிநின்றமன்னியதருமன்றன்னை
யந்தமன்னெறியிலாதானுறிரண்டாண்டுகோனின்
முந்தியேகரந்தோராண்டுமுடியுநாளதனிற்கண்டான்
மைந்தனேபதின்மூவாண்டுவனமுறச்சூதாடென்றான் (கஅ)

என்றவனுரைக்கவேதானிசைந்திடுதருமனோடுங்
கன்றியசகுனியெய்திக்கடியசூதாடிவெல்ல
வொன்றியவினையினாலேயுதிட்டிரனனுசர்சூழ
மன்றல்சேர்குழலியோடும்வனத்திடையேகினானால் (கக)

குந்தியைக்காணுவேந்தன்கொடிநகரிருத்தியென்றே
யிந்திரப்பிரத்தத்திற்றம்வனிதையரெவருந்தந்
தந்தையர்பதியினெய்தச்சாற்றியேதூதர்தம்மை
யந்தணர்நம்பாலெய்தவறைமினென்றேவினானால் (உ0)

இந்திரப்பிரத்தந்தன்னிற்றூதுவர்தம்மையேவிக்
குந்திதன்மைந்தர்தேவிதன்னொடுங்கொடியகானின்
முந்தவேபகாசூரன்றன்னிளையவன்முழங்கவார்த்து
வந்திடவவனைவீமன்வதைக்கமாதவர்பாற்சேர்ந்தார் (உக)

மாதவரிடத்திற்செல்லமகிழ்ந்தவராசிகூற
வாதவனைவர்முன்னரடைந்தொருபாண்டந்தன்னை
யோதனஞ்சுவைகளாறுந்தினந்தொறுமுதவவேதா
னீதலுங்குந்திமைந்தர்பணிந்திடவிரவிபோனான் (உஉ)

தூதுவர்விரைவினெய்திச்சொல்லலுங்குந்திதேவி
மாதுயருளேந்தேயத்திவளநகர்தன்னைச்சேர்ந்தா
டிலாமடந்தைமார்தந்தந்தையர்பதியிற்சேர
வேதியர்பன்னிரண்டாயிரர்மன்பான்மேவினாரால் (உரு)

உவமையிலபிமனோடுஞ்சுபத்திராதேவியோங்குந்
துவரையினெய்திமாயோனடிமிசைவணங்கச்சோதி
நவமணித்தேரினேறிநாகர்மாமலர்கடுவேப்
பவமிலாதைவர்வாழும்பழுவத்தினெய்தினானால் (உச)

மாயவனெய்தலோடும்வருடங்காணுலர்பைங்கூழ்போற்
றாயவரைவர்வாட்கட்டுரோபதையுடனுமெய்தி
யாயிரநாமத்தையனடிமிசையிறைஞ்சலோடு
நேயமோடிரங்கிக்கண்ணீர்நிலத்துறவணைந்தானன்றே (உரு)

சேதரனணைத்தவோர்க்குஞ்சிந்தையிற்றுயரமாற்றி
மாதவப்பாஞ்சாலன்றன்மகளிருகண்ணீர்மாற்றிச்
சூதுசெய்சுயோதனன்றன்சுற்றமோடமரின்மாளக்
கோதைநின்குழலையானேமுடிப்பனென்றுரைத்தான்கோமான் (உசா)

துடியிடைமடந்தையெய்தும்
துனியறத்தேற்றியைவ
ரிடரினையகற்றிமாயோ
னெழிலுறுந்துவரைக்கேகக்

கொடியவெஞ்சுரத்தினைவ
ரந்தணருடனேகூடிக்
கடுவினையொருவுந்தூய
காசிபனிருக்கைசேர்ந்தார் (உஎ)

பாண்டவர்வனவாசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உ௯0௯.

---

## ௧௧0-வது குருகுல மரபுப் படலம்.

ஆதிமால்பரமன்மாயோனயன்றனக்கன்னமாகி
வேதநூலருளுந்தூயவிமலனாரணன்வைகுந்தச்
சோதியாடகத்தோன்றுய்யசுதன்முனிற்றுலங்கத்தூணின்
மோதவாண்டெழுந்துதோன்றுமுடங்குளையடியிற்சேர்வாம் (க)

காசிபன்றன்னையைவர்வணங்கலுங்கருணைதன்னோ
டாசிகள்பலவுமோதியருந்தவன்மகிழ்தலோடு
மேசகன்மறையோர்கூடவைவருமிருக்குநாளின்
மாசகல்பராசரன்றன்மகன்வரவணங்கினாரால் (உ)

தருமனோடைவரெய்திவணங்கலுந்தாழ்வொன்றில்லா
வருமறையதனுலாசியறைந்தமாமுனியைநோக்கித்
தரணியிற்காசிபன்றான்சந்திரகுலத்துவந்த
குருகுலமரபுசொல்லென்றுரைத்திடவியாசன்கூறும் (௩)

நாதனம்புருடோத்தமனுபியிற்சனித்த
வேதனெண்வரையெழுகடல்விண்ணவர்முனிவர்
பூதலத்துயர்சராசரம்படைத்தவன்பொறையார்
நீதிவிஞ்சியதிகரில்லத்திரியையுமளித்தான் (௪)

வித்தகத்திரியருளியவேதியன்பயந்த
வத்திரித்தவனேத்திரத்தழகுறப்பிறந்தா
னுத்தரத்துயர்வரையினைவலம்வருமொளியோன்
சுத்தவுத்தமச்சுதையினையுதவிடுஞ்சோமன் (௫)

அந்தணன்றருமத்திரிநுதலினிற்றோன்று
மிந்துவிஞ்சியவிராசசூயத்தினையியற்றிச்
சிந்தையிற்களிப்பெய்திடச்செய்யுமாறறியா
னிந்திரன்குருமனைவியைப்பற்றியேகினனால் (௬)

**வேறு.** ஈரேழுலகத்துள்ளவர்களெள்கும்பழிவந்தெய்திடவே
சீரார்வலாரிபுரோகிதனுய்ச்சிறந்தகணவன்றனையொருவி
வாரார்முலைபொற்கலசமெனமருங்குகொடியாமெனவயங்கு
தாராதேவிசந்திரனைத்தழுவிக்கருப்பந்தரித்தனளால் (எ)

சுரர்தம்மிறைபீதகன்றேவிதன்னைச்சோமாவிடுதியென்றே
யிரையுங்கடல்போலிலேகருடனெழுந்தங்கடர்ந்துமுடுகுதலுஞ்
சரியிலுசனன்சசிக்காகச்சாற்றவசுரர்மிகவெகுண்டு
பரியுங்கரியுங்களத்தவியப்பணிலமுழக்கிப்பொருதனரால் (அ)

அண்டம்விண்டதாமெனவேயசுரரார்த்தங்கமரருடன்
மண்டிச்சமர்செய்திடுங்காலேவனசத்திறைவந்தமர்விலக்கித்
தொண்டைக்கனிவாய்த்தாரைதனைச்சுரர்தங்குருவின்கைக்கொடுத்தே
யிண்டைச்சடையோனிகர்முனிவரிமையோரேத்தவேகினனால் (௯)

தவரெண்வலாரிபுரோகிதனுந்தாராதேவிமுகநோக்கி
யுவமையில்லாவென்சேயாங்கசனுன்வயிற்றிலுதித்தமையாற்
பவவார்கலியினீயிழுந்துபதைப்பச்சபியாதின்றெழுந்தே
னவமேமுயலும்பொதுமகட்குமிழிவாந்தொழிலாயெனவறைந்தான் (௧௦)

சதுர்வேதத்தையறிந்தகுருசாற்றத்தாரைவிதலையுற்றுப்
பதிபாதத்தினிறைஞ்சியெந்தன்பிழையைப்பொறுத்தியெனப்பகர்ந்து
விதிதானிழைத்தசெயற்படியேமெலியுமடவாளமருமலி
புதனும்புதல்வன்றனைப்பயந்தாள்புவிவானமையாப்பழிபூண்டாள் (௧௧)

பிறந்தபுதனைப்பீதகன்றன்பிள்ளையென்றுமகிழ்நாளின்
செறிந்தவமுதகிரணனுந்தன்சேயாமென்றுசிலுகிடவே
யறிந்தபிரமனவணைடைந்திம்மகவைப்பயந்ததார்க்கென்ன
நிறைந்தபழிபூணரிவைவிதுசுதனுமென்றுநிகழ்த்தினளால் (௧௨)

தாராதேவிசந்திரற்குப்பயந்தேனென்றதனயனைத்தா
னேரார்பிரமனிரவியுடனொருவாதமர்வாயென்றகலச்
சீரார்குணமிக்கெழுந்தபுதன்சிறந்தேவயங்குங்கோள்களுக்கு
நேராயுயர்ந்தவடவரையைநித்தம்வலமாய்வருநாளில் (௧௩)

வேறு. கத்தமப்பிரசாபதியயந்திடுங்காளை
யுத்தமத்திளனுருவிலிவெள்கிடுமுருவோன்
வித்தகக்குணன்விபுதர்கடுதித்திடும்விறலோ
னித்தலத்துயர்வாலிகதேசத்துக்கிறைவன் (௧௪)

இளமனன்கரியிவுளிதேர்வீரர்கணெருங்கக்
கிளையடர்ந்திடுகடத்தினிற்சிருடிசார்த்தூலம்
விளையும்வெஞ்சினமுடங்குளையெல்லவும்வீட்டி
யளகைமன்சகாவமர்ந்தகாந்தாரத்தையடைந்தான் (௧௫)

அரனிலங்கியவுமையுடனரிவையாய்த்தோன்றி
விரியுங்கானிடைமேவியசெயலினாலதனுட்
டிரியும்பல்லுயிரெவைகளுந்தெரிவையராகத்
தரையின்வைகியவிளமனன்றனயளாயினனால் (௧௬)

அரிவையாகியவிளமனனரன்றனைநோக்கிப்
புருடனாகவேதவஞ்செயப்புராரிவந்தெய்தித்
தெரிவையாமுருவொழிக்கிலமுனக்கென்றுசெப்பத்
தரையையாளுமன்றளர்தலுமுமையவள்சாற்றும் (௧௭)

கங்கைவேணியன்காதலியிளமனைநோக்கித்
துங்கமன்னவதோகையாயேகமாந்திங்கட்
டங்கியும்மொருமாதநற்புருடனாய்ச்சார்ந்துச்
சிங்கம்வைகுங்கானிவ்வுழிதிரிகுதியென்றாள் (௧௮)

அரிவணக்குயிலம்மொழியறைந்திடவரசன்
கரிவணக்குகாவலர்கள்காரிகையராய்ச்சூழ
வரியிணக்கியவாணகுவிலோசனியாகிச்
சரவணத்தினினிளையளாய்ச்சரித்திடுங்காலை (௧௯)

மதிபயந்திடவானுறுபதங்களையொருவாப்
புதனிறைந்திடுசரவணப்பொய்கையிற்போந்தே
விதமடந்தையரிருமருங்கினுமுறவிளங்குஞ்
சுதையெனும்மொழியினையெனுந்தோகையைக்கண்டான் (௨௰)

கம்பெனுங்கிரீவக்குயிலழகினைக்காணு
வம்பரத்தினிற்சசிசுதனனங்கசாயகத்தால்
வெம்புநெஞ்சனிம்மின்னிடையெவளெனவுள்கி
நம்பனூலிறைநாரியாயினசெயலறிந்தான் (௨௧)

அறிந்தநற்புதனரிவையர்தங்களைநோக்கிச்
சிறந்தகிம்புருடர்களுடன்சேருமென்றவர்கள்
பிறிந்துபோம்வகையியற்றியேபிறங்கியகலன்க
ணிறைந்தமெய்யினைதன்னுடன்கலவியைநிறைத்தான் (௨௨)

தேவர்மங்கையர்திலகமாய்ச்சிறந்திடுமிளையோ
டாவல்விஞ்சவேயமுதசம்பூதனன்குமரன்
பூவினுண்மதுப்புசித்திடும்பொறிவரியளிபோற்
காவிவாளியன்வெள்கிடக்கலவிசெய்தனனால் (௨௩)

இரவுநண்பகலுமொருவாமலேயியம்புஞ்
சுரதநூல்வழிச்சோமன்றன்சுதன்புயந்தோய்ந்து
வருதினங்களாய்நிறையுமோர்மாதமுமொருவப்
புருடனுமிளன்புதன்றனைநோக்கியேபுகல்வான் (௨௪)

மிருகயாத்திரைவிரும்பியிவ்வனத்தின்மேவினனென்
பரிகரிக்குலம்படைஞரெங்குளரெனப்பகரச்
சொரிகலாய்க்கனஞ்சொரிந்திடவிறந்தனரென்றே
முருகவிழ்தொடைப்புயன்சசிசுதன்மொழிந்தனனால் (௨௫)

விரகினற்புதன்விளம்பிடமெலிந்திடுமரசன்
சொரிகலிற்றரைமடிந்தவென்படைஞரைத்தொடர
வெரிகனற்படிந்திறப்பனென்றெழச்சசிபுதல்வ
னுரைகளிற்பலமொழிந்திடரொழிந்திடவுரைப்பான் (௨௬)

இறந்தநின்படைவீரர்களெவருமோராண்டு
நிறைந்தபோதினிற்சரிபரிநெருங்கிடநின்னோ
டுறைந்துவாழ்வரென்றுரைத்திடத்தேறிநால்வேத
நிறைந்தநற்புராணங்கள்கேட்டிருந்தனனிருபன் (௨௭)

நிருபனாகியோர்திங்களானதிற்பினர்நிகரி
லரிவையாகியேசசிசுதனுரத்தினையணைந்து
தரையினிற்பினும்புருடனாய்த்தையலாய்மாறி
வருதினங்கண்முன்னூறுநற்புதனுடன்மகிழ்ந்தான் (௨௮)

அஞ்சுதிங்களாண்டரசனாயருள்செறிபுராணஞ்
செஞ்சொனற்பொருளுணர்ந்துநூற்றைம்பதுதினமும்
பஞ்சின்மெல்லடிப்பாவையாய்ப்பரிபுரத்தொலிகள்
விஞ்சிடப்புதன்மகிழ்ந்தனுராகத்தைவிளைத்தான் (௨௯)

அரிவையாகியசெயலெலாமாணதாய்மறந்து
நிருபனாகியசெயலெலாநிகரின்மின்னுருவாய்த்
தெரிகிலாதுநற்புதன்புயஞ்சேர்ந்துறுகருப்பம்
பருவமாகியேபுரூரவாவினைப்பயந்தனளால் (௩௰)

அரிவையாகினன்மகவினைப்பயந்தபின்னறிவாம்
புருடனாகியவிளமனன்புன்மைதீர்ந்திடத்தான்
சரியிலாப்புதன்றவர்களைக்கூவியேபழிப்பி
லரன்மகிழ்ந்திடவேயயமேதத்தையமைத்தான் (௩௧)

குறைவின்மாதவர்கோடகமேதத்தைவிளைப்பக்
கறைமிடற்றரன்கண்முனிற்றோன்றியேகரிமா
நிறையவீரர்கடன்னொடனிருபனாய்நிலத்தி
னுறைகுவாயெனவிளன்றனக்குரைத்தரன்போனான் (௩௨)

அரன்வரங்கொடுத்தேகவேயரிவையருருவைத்
தரையினோவிநீளிபமயவீரர்கள்சாரப்
புருடனாகியவிளமனன்புதனடிவணங்கிப்
பரிகரித்திரள்பொதுளத்தன்பதியிடையடைந்தான் (௩௩)

அரசனாகியாண்டிளமனன்றன்னகரடையச்
சரியிலாப்புதன்புரூரவாத்தனைவளர்த்தெழில்சா
னிருபனாக்கியேமுடிகவித்துலகினீள்சிகர
மிரவிசேர்பிரதிட்டமாபுரியினையீந்தான் (௩௪)

புதனளித்திடுபுரூரவாபுரியினினெய்தி
மதியெனக்குடைவயங்கிடமதனனுநாண
விதிமதித்திடுவேதியராசிகள்விளம்பக்
கதமிலாதரசியற்றியேகளித்திடுங்காலை (௩௫)

**வேறு.** மித்திரவருணரென்போர்விசும்புறைவோர்கடம்மி
னுத்தமவடிவின்மிக்காருருப்பசியெழிலிற்காம
னத்திரமடரநொந்தேயவளைத்தாம்வரித்துக்காம
மொத்துவீரியமுன்வீழவொருகுடத்தமைத்தாரன்றே (௩௬)

இருவர்வீரியத்தைநொய்தினிலங்குகும்பத்தினேற்பச்
சரியிலாநிமிசாபத்தாற்றவர்களெண்வசிட்டன்றானுங்
கரையிலாவுவரிதன்னைக்கரத்திடையமைத்தோன்றானு
மரியநான்மறைகளோங்கவவதரித்தார்களன்றே (௩௭)

ஒருகுடத்திரண்டுபேருமுதயமாய்வயங்கியேகத்
தெரிவையர்திலகமாயவுருப்பசிநகிலிற்சேர்ந்து
சுரதநூற்படியிற்றோயாத்துன்பவீரியந்தான்வீழ
விரகவேதனையினாலேமித்திரவருணர்சொல்வார் (௩௮)

மீனகுவிழியாயெம்மைவிரும்பியுன்னகிலிற்சேர்த்தே
யீனமிலதரவூறலீந்திலையதனானீபோய்
மானிடன்றேவியாகிவாழ்குதியென்றுபோக
வூனமிலுருப்பசித்தேனும்பர்விட்டிம்பர்வந்தாள் (௩௯)

**வேறு.** பரிபுரமரற்றச்சதங்கைமிளிர்றப்பாதசாலம்பதமிலங்கக்
கரவளையொலிப்பத்தொடிகையுந்தயங்கக்காஞ்சிநற்கலிங்கமேல்வயங்க
விருதனமசையக்கொடியிடைதுவளவிருகயல்விழிகுழையடர
வரிமலர்க்குழன்மையெழிலியைப்பழிப்பவவனியினுருப்பசியடைந்தாள் (௪௦)

அரூபியாமதனன்மனந்தடுமாறவருந்தவர்மயலெழுந்தலையப்
புரூரவாமுனர்வந்துருப்பசிநிற்பப்புதனருள்புதல்வன்பொற்பாருஞ்
சுரூபியாமிவள்விண்டோகையர்துதிக்குஞ்சுதைமொழியெவளெனவுளத்தி
னிரூபியாதயர்ந்தேயனங்கசாயகமெய்நிறையநீயாரெனவுரைப்பாள் (௪௧)

மித்திரவருணரறைந்தசாபத்தான்மேதினியடைந்தனன்பழிப்பில்
சித்தசன்சமழ்க்குமுருவுடைமனநின்செயலெலாநாரதன்செப்ப
வித்தகநின்றேளணையவெய்தினன்யானுருப்பசியெனவிறலரச
னெத்தவமுறநீயிவணடைந்தனையென்றியம்பிடவிலங்கிழையறைவாள் (சஉ)

நெய்யெனக்குணவாய்ப்பருகுவன்மிகுத்தநேயமாய்வளர்த்திடுமிரண்டு
மையிளப்பறழைக்காத்துநீயிருளின்மகிழ்வுடனணைகுவதன்றி
வெய்யவன்கனலியுடுபதியொளியால்விழுமியகலையினச்சினமாய்த்
துய்யவபுவியினிருவருங்காணின்றொருவுவன்யானெனச்சொன்னாள் (சங)

ஓவியத்தெழிலைப்பழித்திடவிலங்குமுருப்பசிமொழிந்திடவதற்குக்
காவலனிசைந்துபரிதிபோய்மறையக்கங்குலிற்கவினுறுமணைமே
லாவியுமுடலும்வதிந்தசீரெனவேவறுபதினாயிரம்பருவம்
பாவையர்திலகியோதரவணைமேற்சுரதநூற்பரவையிற்படிந்தான் (சச)

தூயநற்புரூரவாபுயத்தழுந்தத்துணைநகிற்கிரியினைமடுத்தும்
வாயமிர்தளித்துநகக்குறிவகுத்துவன்பதாயுதங்குயின்மயிறே
னீயனஞ்சகோரஞ்சரோருகக்குறும்பூழியம்பிடுங்குரன்மொழிந்தணைந்தே
யாயுமன்னவனோடறுவரைப்பயந்தாளமரர்தம்பதியுறையணங்கே (சரு)

சந்திரன்புதல்வன்சிறுவனைத்தழுவித்தனயர்களறுவரைப்பயந்த
சுந்தரமலிந்தவுருப்பசியணங்குதுலங்கியபுவியமர்நாளி
னிந்திரனவையின்முராரியூருவினினெழுந்தபூங்கொம்பினைக்காணன்
கெந்தருவரைச்சென்றவனியினரிவைக்கிளியினைத்தருதிரென்றுரைத்தான் (சசு)

சசிபதிமொழியாற்சென்றகந்தருவர்தரணியிற்றபனன்போய்மறைய
நிசிபரந்தெழுந்தகங்குலினணைமேனிகரிலாவுருப்பசியுடனே
கசரததுரகவலமனன்சுரதக்கலவியிற்களித்திடுங்காலை
விசையினிற்செச்சைப்பறழிரண்டரற்றவிண்ணிடைப்பற்றியேகினரால் (சஎ)

அயப்பறழிரண்டுமரற்றியவொலியையணங்குகேட்டழகதாயுயர்தன்
குயத்தினின்வதிந்துகலவியைவிளைக்குங்கொற்றவன்றனையெண்டிசையுஞ்
செயித்திடுமனவென்சிறுவர்போல்வளர்த்தசெச்சையைக்களவர்கொண்டேகப்
பயத்தையுற்றெதிராவலியெனவிருந்தாயென்றுபல்லிழிவுகள்பகர்ந்தாள் (சஅ)

இக்கிரதச்சொல்லேந்திழைவிளம்பவினைமகனுந்தகமெடுத்தே
நக்கினத்தினனாய்ப்பின்றொடர்ந்திடவேநகிலொளிருருப்பசிகவினன்
மிக்கபொன்னுடைபுனைகிலளாகிவெற்றரையாகிப்பின்னடக்க
விக்கிரமத்தாலேகுகாந்தருவர்மின்னவிர்மாயையால்விளைத்தார் (சகூ)

மின்னவிரதனாற்புவிவெளியுறவேமெல்லியல்வெற்றரைதன்னை
மன்னவன்பார்க்கவரசனக்கினத்தைமான்விழியுருப்பசிகண்டே
யின்னலினிருபவிருவர்நக்கினமுமிருவருநோக்கினமென்னாச்
சொன்னசொற்படியினவனியையொருவிச்சுரரிறைநகரினைச்சேர்ந்தாள் (ருo)

இருவர்நக்கினமும்வெளிசெய்ததெனவேயியம்பிவானுருப்பசியேக
நிருபனைந்தலைந்துநினைவிலாதயர்ந்துவிழுந்தவண்டேறியேநிகரி
லரிமலரணையிற்காண்கிலன்வெருவியகன்மனையெங்கணுந்தேடி
மருளுறவறிவுபறிபடநகரின்மருங்கெலாந்தேடினன்மயங்கி (ருக)

ஓவியமுயிர்பெற்றெனநடந்தெய்தியுவட்டிலாக்கலவியைவிளைத்தென்
னாவியுமனமுந்தன்னிடத்தமையத்தினந்தினமற்புதமுறவே
காவிநல்விழியாணகையினாமொழியாற்கலசமென்னகிலினாலிடையாற்
பூவின்மெல்லடியானடையினாலுருக்கும்பொற்கொடியகல்வதேனென்னும் (ருஉ)

புயல்பிறைசயல்விற்குமிழ்வளையிலவம்பூகம்வேய்காந்தள்பொற்கலச
மியல்புறுந்துடிகட்செவிகவின்கதலியலவனெண்ணிணைவராற்கமடஞ்
செயல்புரைநளினமமர்ந்தகொம்பெனவேசிறந்தமின்சேணுறினென்மெய்
யுயிரிராததனாலிம்பரினுளளென்றோடியேதேடினனெனெல்லை (௫௩)

புரவலன்கலங்கிச்சலதியிற்பிறவாப்புதியநல்லமிர்தெனப்பொருந்தி
யிரவுநன்பகலுஞ்சுரதநூற்சுவையையீந்தமின்யாண்டுளாளென்றே
சரிபரியிரதந்துதைந்திடும்புரியிற்காண்கிலானாட்டினையிகழ்ந்து
கிரியரியிரலைகிளர்கறையடிசேர்கிரியடர்பழுவத்தையடைந்தான் (௫௪)

வரையிடைக்காணான்பொழிலிடைச்காணான்வாவியின்மருங்கிடைக்காணான்
வெருவிவிண்டிறைவில்லெழிலியைக்கண்டுவிரியுநீர்மீன்வராற்கமட
மரைமலர்குமிழாம்பல்கயல்கதலிவல்லிநீர்ச்சுழியெலாநோக்கி
யரிவைதன்னுருவைப்புவியினுசினியிற்சிதறினள்கொல்லெனவயர்ந்தான் (௫௫)

நிலமிசையயர்ந்தநிருபர்கோன்றேறிநிகரிலாவரையிடத்தெய்திக்
கலவியின்கனியேயமிர்தினின்சுவையேகடுவினையேனுடற்குயிரே
புலவிசெய்தகன்றாய்புல்லவாவெனவேயம்மொழிமலைத்தொனிபுசலச்
சிலையெனுநுதலியிவணுளாளெனமன்றேடியேகாண்கிலாதறைவான் (௫௬)

அணைக்கவாவெனயானுரைத்தசொல்லுரைத்ததரிவையோபிறங்கலோவறியேன்
மணத்தபூங்கணையோனிரதம்வாள்கவிகைமாமுரசியாவையும்பகையாய்ப்
பிணக்கைமாவருந்தும்விளாங்கனிபோன்றேன்பரவையின்முளரியென்றெய்யுங்
கணைக்குநேர்விழியாய்வருதியென்றுரைத்துக்காசினியெங்கணுந்திரிந்தான் (௫௭)

மாறிலாக்குருக்கேத்திரத்தலப்பொழிலின்மங்கையர்குழாம்புடைசூழ
நாறுபூங்குழலாளுருப்பசியவணினண்ணவேபுரூரவாநோக்கி
யூறியகளிப்போடவண்முனரெய்தியுன்மயலுறவரன்விழியா
னீறுறவெரியுமதனனைப்போல்யானிறந்திடாதணைத்திநீயென்றான் (௫௮)

மதிசுதன்சிறுவன்மொழிந்திடக்கேட்டவனமுலையுருப்பசியணங்கு
பொதுமடந்தையர்க்குக்கற்புமெய்யுளதோபுவியினெண்டிசையினைவென்று
மதகரிவெரினின்வருமனமகளீர்மயக்கினைவெல்கிலையென்னுச்
சுதைதருமொழியாள்வருடமொன்றொருவித்தோய்குவனுன்னையென்றகன்றாள் ( )

அரிவையர்திலகியிவையெலாமறைந்தேயமரர்தம்பதியினையடைய
விரகவேலையின்வாய்வதிந்திடுபுரூரவாவொளிர்நகரத்தின்மேவி
வருடமொன்றொருவக்கழிந்தநாட்குருக்கேத்திரந்தனின்வயங்குமோடையினிற்
பரிவுடனணுகவுருப்பசிமடந்தைபரிபுரம்புலம்பிடவந்தாள் (௬0)

மங்கையர்திலகவுருப்பசிவரலுமனமகிழ்புரூரவாவவடன்
கொங்கைதன்னுரத்திற்குழைவுறக்கமழுங்குங்குமக்கலவைகள்கோட்டித்
தங்கமெல்லணையிலிருவரோருடல்போற்றழுவியேசுரதநூற்கலவி
பொங்கிடவமுதவாயினீரளித்துப்புரவலன்மயங்கிடப்போனாள் (௬௧)

இலவிதழமிர்தவூறலைப்பருகியிணைமுலையிறுகுறத்தழுவிக்
கலவியைவிளைத்துப்புளகமெய்யரும்பக்களிப்புடன்போகமுற்றுயர்ந்தே
யுலர்பயிரெழிலிபொழிந்திடத்தழைத்ததொத்துளம்வியந்திடுமரசன்
மலரணைமிசையினுருப்பசியணங்கைக்காண்கிலான்மாழ்கலுற்றயர்ந்தான் (௬௨)

மங்கையங்கொருவவலரியின்வெயிலால்வாடியேயுலர்ந்தபாதவங்க
ளங்கிவந்தடற்பவெரிந்திடுசெயல்போலரசன்மெய்யனங்கசாயகத்தால்
வெங்கனன்மடுப்பவிரகவேதனையுள்வெதுப்பவேறொருசெயலறியான்
சிங்கலின்முனிவர்திரளிருப்பிடத்தைச்சேர்ந்தடிபணிந்திவையறைவான் (௬௩)

அருப்பநுண்ணிடையாளுருப்பசியெனையெயணைந்துயர்விசும்பினையடைய
நெருப்புறுவிரகவேதனையுளத்தைநிறைத்திடநகரினைநீங்கிப்
பொருப்பிணைபுயத்தின்வலியெலாம்பொன்றிப்புவியையாடிறமெலாமழிந்தேன்
கருப்புரக்கலவைகமழ்குயத்தவளைக்கலந்திடவருளுவீரென்றன் (௬௪)

நிருபனீதுரைப்பநெடுந்தவமுனிவர்நிறைமதிமுகமடந்தையர்மேல்
விரகமுற்றவர்க்கீண்டறநெறியுரைத்துவிலக்கினுந்தவிர்கிலார்பயத்துட்
சிரமமிழ்ந்திடவேயுறுபவர்தம்மைத்தீயினூற்சுடவொணாததுபோற்
பரமனைநினையாதுருப்பசிசெயலைப்பற்றினையென்றுநகைத்தார் (௬௫)

முறுவல்செய்முனிவரரசனைநோக்கிமொழிகுவாரித்தலையோடு
நிறையநின்றூட்டிலிரந்திடவலையேனிகரிலாவுருப்பசிநின்றே
ளுறுவளென்றுரைப்பப்புரூரவாவுவந்தேயுயர்ந்திடுங்கபாலத்தையேந்தி
யறனுறத்தாளுளவனியினிரப்பவடைந்தனன்மயலினுலைந்தே (௬௬)

அரிவைதன்மயலாலறிவழிந்தரசனடவியையொருவியோர்கரத்தின்
விரிவுறுகபாலமேந்தியேதானுள்வளாகத்திற்சென்றவன்வெள்கி
வரையுயர்பழுவத்தெய்தியத்தலையோடுடைத்துருப்பசிமயறன்னு
ளெரியமீச்செய்வதறிகிலானயர்ந்தேயருந்தவர்பாற்சென்றதறைவான் (௬௭)

தவர்கணீருரைத்தமொழியினாலவணிற்சுட்டியதலையினோடேந்திப்
பவமிலாதிலங்குநாட்டினிற்சென்றுபலியெனவெள்கியேவிரைவி
னுவமையில்பழுவத்தெய்தியத்தலையோடுடைத்துருப்பசிமயலொருவா
திவணின்வந்தனன்யானெனலுமாமுனிவர்நகைத்திவைவிளம்பலுற்றனரால்

நீயவனுடைத்தகபாலமோர்மரமாய்நிவர்ந்திடுமதனினைக்கடையப்
பாயுதாசனனையெம்முனிற்கொடுவாவென்றவர்பகர்ந்திடப்பாறி
வேயுயர்பழுவத்துடைத்திடுங்கடிஞைபிசுமந்தமாகியேவிளங்கத்
தீயுறவஃதைக்கடைந்துதேயுவினைமுனிவர்பாற்சென்றுசுட்டினனால் (௬௯)

முனிவர்மன்கொணர்ந்தகனலினான்மறையைமொழிந்துகாமியமகமுடிப்பக
கனமணியிலங்குவிமானமேற்கவரியசைத்திடக்கலனெலாமிலங்க
வனமெனநடைகொளுருப்பசிபுரூரவாவினையங்கையினணைத்துத்
தினகரனவிரைச்செயித்தொளிதிகழுந்தேவர்தம்பதியினைச்சேர்ந்தான் (௭௦)

உருப்பசியுடனும்விருப்பமுற்றுயர்ந்தவும்பர்கோனகருறைநிருபன்
றிருப்பொலியுரத்தனழிவிலாப்பதத்திற்சேர்வனென்றருந்தவர்செப்ப
அருப்பநுண்ணிடையாள்கலவியையொருவியவனியினிழிந்துநன்மதியாற்
பொருப்பினிற்றவஞ்செய்தரியமர்பதத்திற்புகுந்தனனுலகெலாம்புகழ (௭௧)

தூயநற்புரூரவாவுருப்பசியைத்துறந்துநற்கதியுறவவன்சே
யாயுமன்னரசாண்டறநெறிதழைப்பவழகியநகுடனைப்பயந்து
மீயுயர்மவுலிசிறுவனைக்கவித்துவெவ்வினைவேரொடுமடிய
வாயுமாதவரைப்பணிந்தருந்தவத்தாற்கதியினையடைந்தனனன்றே (௭௨)

பகடுயரிரதம்பரியெலாநிறையப்படைஞர்கள்பரவைபோற்றுதைய
விகடராங்கயவர்வேரொடுமடியவிழுமியவறநெறிவிளங்க
நகுடனுசனத்தின்கவிகைமீதுயரநற்புயத்தழகியநளின
மகளணிந்தயமாச்சதமகமுடித்துமறையவர்சூழவாழ்நாளின் (௭௩)

**வேறு.** இந்திரன்பீதகன்றன்வரவெழுந்தெதிரிற்சென்று
வந்தனைசெயாமற்செல்வமகிழ்ச்சியாலிகழ்ச்சிசெய்ய
நொந்துபூசுரனுமேகநூறுபத்தாகுநோக்கன்
சிந்தையிற்றளர்ந்துதேவகுருவின்பாற்செல்லும்வேலை (௭௪)

வாசவனெய்தித்தன்னைவந்தனைசெயாதியான்செய்
யாசினைப்பொறுத்தியென்றங்கறைவதன்முனரிற்றெய்வ
பூசுரன்கரத்தலோடும்புரந்தரன்வலிமைபொன்ற
வீசனுமஞ்சவார்த்தேயவுணர்களெதிர்த்தாரன்றே (எரு)

தானவர்க்காற்றாராகிச்சக்கரன்மொழியினாலே
வானவர்துவட்டாநல்குமகன்மறைநெறியையோம்பி
யீனமில்விசுவரூபன்றனக்கின்சொலியம்பித்தங்கட்
கூனமிலாசானாகென்றுரைக்கச்சம்மதித்தானன்றே (எசு)

சதமகனுடனேவானோர்தழைத்திடவாசானாகிக்
கதமிலாவிசுவரூபன்காமனுக்கன்பினாலே
சுதைதருமொழிசேர்நாராயணகவசத்தைத்தூய்நா
யிதவுபதேசஞ்செய்யவிலேகர்கள்களித்தாரன்றே (எஎ)

சிந்தையின்மகிழ்ந்துநாராயணகவசத்தைச்செப்ப
விந்திரன்வலிமைசேரவிலேகர்களுடனேதந்த
தந்தியின்வெரினிற்றோன்றித்தானவர்தம்மைநூறிப்
புந்தியின்களிப்பினோடும்போந்தினிதமருநாளின் (எஅ)

சுரையுயர்சோமபானந்தூயதாமன்னமெல்லாம்
பரிவுடனுதரமாரப்பருகியுமருந்தமூன்று
சிரமுளவிசுவரூபன்சிறந்திடத்தன்னைநல்கு
மரிவைநல்லசுரனன்பாலருண்மகளாகையாலே (எகூ)

நிரந்தரம்வேள்விதன்னினிறைந்திடுமவிர்ப்பாகத்தைக்
கரந்துநற்றுவட்டாநல்குங்காளைவாளவுணர்க்கீயப்
புரந்தரன்வேலினாலேபொறியுகவவன்றன்மூன்று
சிரந்தனைத்துணித்துவீழ்த்தான்றேவர்கண்மகிழமன்றோ (அ0)

அன்னவன்சிரங்கண்மூன்றுங்கவிஞ்சிலமழகார்தோகை
தின்னியகலவிங்கந்தித்திரிஷபனுங்ககமாய்த்தோன்றி
யின்னிலத்தெழலுமப்போதெழும்பிரமகத்திதேவர்
மன்னனையடர்தலோடுமற்றவன்கரத்தினேந்தி (அக)

அருமறையோனைக்கொல்லவடர்பிரமகத்திதன்னைத்
தரைமரந்தோயந்தூயதையலார்தாங்கவீய
வரிவையர்கருப்பமாயும்புணரத்தோண்டவனிமல்சப்
பெருகநீர்தறித்தசாலந்துளிர்க்கவிவ்வரங்கள்பெற்றார் (அஉ)

மண்ணினிற்களரேயாகிமரத்தினிற்பிசினேயாகி
எண்ணருந்தோயந்தன்னிலிழிவதாநுரையதாகிப்
பெண்ணினுக்கோராந்திங்கட்பிறந்திடுமிருதுவாகி
நண்ணியவலாரிதன்னைநலிபிரமகத்திதானே (அ௩)

இந்திரன்கரத்தின்மீதினெழும்பிரமகத்தியேக
மைந்தனைக்கொன்றானென்றுமனமெலிதுவட்டாச்சிறித்
தந்தியையூருவோனைவதைக்கச்சத்துருவந்தெய்த
மந்திரநவின்றுநேரின்மகத்தினைவளர்த்தான்மாதோ (அச)

இந்திரன்றன்னைக்கொல்வானெழவெனுஞ்சத்தம்பேதித்
தந்தமிக்குயரச்செய்யும்வேள்வியின்றழலின்முந்து
மந்தரவரையுநாணவிருத்திராசுரன்வானோங்கு
மந்தகாந்தகனைப்போலவவுணர்கண்மகிழுந்தன்முன் (அரு)

தினமொருகாவதந்தானகன்றுயர்ந்தெழுந்துதேவர்
மனமறுகிடவேயோங்கிவிருத்திராசுரன்வான்விஞ்சுந்
தினகரனவிருநாணச்சிறந்திடுஞ்சூலங்கொண்டாண்
டனவெரின்மன்னுவோனுமஞ்சிடவார்த்தானன்றே (அசு)

கண்டகவசுரர்சிந்தைகளித்திடத்தினங்கடோறும்
விண்டலத்துயர்ந்துசூழவகன்றெங்கும்வெளியிலாதா
யண்டமாமுகட்டைமுட்டியார்த்துவந்தடர்க்கவேயா
கண்டலனமரரோடுங்கலங்கிமெய்விதலையுற்றான் (அஎ)

விதியரன்வெருவத்தோன்றும்விருத்திராசுரனைநோக்கி
சதமகன்விபுதர்கட்குஞ்சமர்விறன்மாழ்கித்தாமா
பதியினையுலகமெல்லாம்படைத்தளித்தழித்தேயோங்கும்
கதியினையருளுவானைகினைந்தெமைக்காத்தியென்றார் (அஅ)

உந்தியிற்பிரமன்றன்னையுதவியேயவன்றனோங்கித்
தந்திடுமுலகமீதிற்சனித்ததியவர்களாலே
நொந்தவெந்துயரைநீக்கியவர்களைநொறுக்குமைய
தந்திமுன்வந்தபோல்வந்தெம்மிடர்தவிர்த்தியென்றார் (அகூ)

துவாதசாக்கரமுமட்டாக்கரமுநெஞ்சிடையிற்றுன்னக்
குவானிருவடியாற்கொண்டுகொடியகோளரியேயாகிக்
கவான்மிசைக்கனகன்றன்னைவதைத்துக்கட்செவியின்வைகி
யவாவவர்க்ககப்படாதானடிநினைந்தியோகஞ்செய்தார் (கூ0)

வெந்துயரதனுலியாக்கைமெலிந்திடயோகஞ்செய்யு
மிந்திரன்விபுதர்தங்களிடரறவிலங்குபேரி
துந்துமிமுழங்கவீணைச்சுரர்முனிநடிப்பத்தூய
சிந்துவினரவையோவிச்சீதரன்றேன்றினுல் (கூக)

வேறு.

சனந்தனுஞ்சனுதனுஞ்சனற்குமாரனுஞ்
சுனந்தனுஞ்சனகனுந்தூயநந்தனு
மனந்தனிற்களிப்புறமறையையோதியே
யனந்தன்மீதமருவான்முனர்வந்தாடவே (கூஉ)

வேறு.

நீலமாகிரியினம்போருகநிறைந்துச்சிமீதிற்
கோலமார்தவனனெய்துங்கொள்கைபோற்கிரீடமின்ன
கால்கரமுந்திமார்பங்கண்செவ்வாய்கவின்கொண்டோங்கச்
சீலமார்கலுழன்மீதிற்றிகிரிசங்கேந்திவந்தான் (கூங)

சூரியர்கோடிபேர்கடுன்னியவொளிகளான்றங்
கேருறுகிரீடந்தன்னிலெண்ணிலாமணிகடோன்ற
வாரியினிலவுவெய்யோனிளவெயில்பரந்தமான
வாரமுங்கலனுமெய்யினவிருறத்தோன்றினுல் (கூச)

கனகபூதரத்தினுற்றகருமுகிலேலமாயோன்
றினகரன்வலவன்றம்பிதோளின்மேற்சேர்தலோடும்
வினைசடிந்துயர்ந்தோமென்றுவிண்ணவர்விபுதர்நாதன்
புனமயில்புயலைக்கண்டபொற்பெனவாடினுரால் (கூரு)

ஆடினுர்புளகமெய்யினரும்பவாரணத்தின்சொற்கள்
பாடினுர்நெடியோன்பாதம்பணிந்தனர்படியிற்கண்ணீ
ரோடத்தம்முளமுமென்புமுருகிடவிருகைகூப்பி
யாடகாந்தகனைநோக்கியமரர்கோன்றுதிக்கலுற்றான் (கூசு)

அண்டமெண்ணிலாதவாகியவற்றுள்ளும்புறத்துமாகி
முண்டகத்திறைவனேந்துமுகனுமாதவர்க்குந்தோன்றாக்
கண்டகக்கராவானொந்தகரியுய்யவடைந்ததேலப்
புண்டரீகங்கள்பூத்தபுயலெனவந்தாயென்றான் (௯௭)

மந்தரவரைமத்தாகவாசுகிகயிறதாகச்
சிந்துவைக்கடைந்துதூயதெரிவையாயமிர்தமீந்து
மந்தகன்வெருவவெய்துமாடகன்றசக்கிரீபன்
வந்தெமைநலிவார்தம்மைவதைத்திடர்கடிந்தசோதி (௯௮)

உருத்தமணியத்திணுங்கல்பொடிபடவுயர்ந்துதோன்றும்
விருத்திராசுரனைக்கொல்லும்விறலிலேன்சுதையினெய்து
மொருத்தியையுரத்தின்வைத்தவொருவனேயவனைவெல்லுந்
திருத்தநீயருடியென்னத்திருமகள்கணவன்செப்பும் (௯௯)

கடுவினையகற்றுநாராயணகவசத்தைநெஞ்சிற்
றிடமுடன்செவித்தியோகஞ்செய்யுமாத்ததீசியத்தி
மிடலுறுவயிரமாகுமதுதனையவன்பால்வேண்டிக்
கடையவக்குலிசத்தாலேயவுணனைக்களைதியென்றான் (௨00)

பின்னருங்கமலைகாந்தன்பேசுவான்முனிவனத்தி
தன்னின்மற்றதனையேந்துஞ்சதமகவுன்கைதன்னின்
மின்னெயிற்றவுணனுக்கைவீழ்ந்திடுமவனிதன்னின்
மன்னுமென்சத்திநீபோய்வதைபுரியவனையென்றான் (௨0௧)

என்றரியருளலோடுமிந்திரனெழுந்தங்காடி
மன்றலந்துளவினானைவணங்கியேபோற்றவானோ
ரன்றுலகளந்துநுங்கியாலிலையமர்ந்தவையா
வின்றெமையளித்தாயென்றேயிறைஞ்சமாலேகினானல் (௨0௨)

அரிபயோததியினெய்தவமரர்கண்மகவானோடுஞ்
சரியிலாத்ததீசிதன்னைச்சார்ந்தவணிறைஞ்சியம்பொன்
வரைதுகளாகவோங்கும்விருத்திராசுரனைமாய்க்க
வருளுவாய்முனிவவுன்றனத்தியையெமக்கீண்டென்றார் (௨0௩)

கரிவெரினுயர்வோன்வானோர்கழறிடத்ததீசிகேட்டுச்
சரிரநித்தியமீங்கன்றுசரோருகன்றனக்கென்றாலு
நரைதிரைமூப்புநோய்கணலியுமிக்குரம்பைவேண்டேன்
பரவுபகாரமாகப்பருத்தவென்பளிப்பனென்றே (௨0௪)

தேவர்கட்குபகாரத்தைச்செய்திடத்ததீசிதன்மெய்
யாவிபோயரிபதத்தையடையயோகத்தானீங்கப்
பாவமில்விபுதர்கோமான்பழுதிலாமுனிவனத்தி
யாவலிற்கரத்தால்வாங்கியமரரோடேகினானல் (௨0௫)

உயிரகன்முனிவன்மெய்யினூரமுறுமத்திதன்னைச்
செயலுறக்கடைதியென்றுமகபதிதெய்வத்தச்சன்
கயினுறக்கொடுக்கவன்னான்கடைந்தவச்சிராயுதத்தைப்
புயறனைப்பரியாவூரும்புரந்தரன்கரத்தினீந்தான் (௨0௬)

அத்திவெங்குலிசமாகவகமகிழ்வலாரிவெண்மை
யத்தியின்வெரினிற்றோன்றியமரர்கண்மிடைந்துசூழ்ந்தாண்
டத்தியினொலிபோலார்த்துத்துதைந்திடவவுணனிற்கு
மத்திசைநோக்கிச்சென்றானாதபத்திரமீதோங்க (௨0௭)

சுரர்தசரிபுக்கள்சத்தர்துவாதசாதித்தர்தேயு
மருதரெண்வசுக்களேகாதசவிடையமர்ந்தோர்வானிற்
சரியிலாப்பிதுர்க்கடெய்வவைத்தியர்தாழ்வொன்றில்லா
வருகுருவிசுவதேவர்முதலினோரார்த்துவந்தார் (௧0அ)

துந்துமிபேரிதக்கைதுடிகைகாகளங்கள்சின்னஞ்
சிந்துவினொலியுமஞ்சத்திசைசெவிடுறவேயார்ப்பந்
தந்தியின்வெரினிற்றோன்றிச்சாமரைதயங்கியோங்க
விந்திரனவுணரோடாண்டெதிர்பொரவடைந்தானன்றே (௧0௯)

பருத்தவெள்வரையைப்போலும்பகட்டிறைவரலுநோக்கி
விருத்திராசுரனுமெண்ணிலசுரர்கண்மேவவஞ்சக்
கருத்தினனாகிவானோர்கலங்கிடக்கடைநாட்டோன்று
முருத்திரனெனவேசீறியுறுத்தனனுலகமஞ்ச (௧௧0)

**வேறு.** சம்பரனமுசிபருவரனிடபன்சங்குசிராவயக்கிரீப
னம்பரன்றுவிமூர்த்தனன்புலோமாகியழல்சினவிருடபர்வாவு
மும்பரஞ்சேதியுயர்பிரகேதியுற்காஎன்விப்பிரசித்தி
யம்பரவொலிபோலார்த்தனர்சுமாலிமாலியோடரக்கர்வந்திடவே (௧௧௧)

**வேறு.** எரிசினத்தினர்பிறையெயிற்றினரிறுதியிற்பெயுமுகிலெனச்
சரம்விடுப்பவர்வடவையொப்பவர்தழலெழச்சுழல்விழியினர்
வரைதுகட்படவடிபெயர்த்திடுமறவர்குத்திரரொருகையா
லிரைதிரைக்கடறனையிரைப்பவரெதிரடர்த்திடுமவுணரே (௧௧௨)

இடிவெடித்திடுகுரலர்முற்கரமெழுமழுப்பலவெறிகுவார்
வடவையொத்திடுவிழியர்கப்பணம்வலயம்விட்டெதிர்மலைகுவார்
கடன்மடுத்திடுமெரியெனக்கதமுறமுரட்கணைகடவுவார்
கொடியர்நக்கனும்வெருவவிற்கொடுகுறுகியத்திரம்விடுகுவார் (௧௧௩)

பறையிடக்கைகடிமிலைசச்சரிபணவமொத்திடுகரடிகை
யறையுநற்சினவொலிமிகுத்திடவடரரக்கர்களவுணரோ
டுறைவர்மைக்கிரியெனவெதிர்ப்பவருருமினைப்பொடியுகுகையார்
கறைமிடற்றரனணிபணிப்படைகடவுமுக்கிரர்கடுகவே (௧௧௪)

விடையினுற்றவரெனவயிற்கொடுமிடைவர்விற்கணைசொரிகுவார்
வடவரைக்குவடுறவுயர்த்தெழுமகுடமெத்தியசிரசினர்
புடவியுட்கிடவடிபெயர்த்திடுபுகைமிகுத்திடுநகையினர்
திடமிகுத்தவரழலுகுக்கணர்தினகரப்படைவிடுகுவார் (௧௧௫)

அறனழித்தவர்திறன்மிகுத்தவரடர்சுடர்க்கதைவிடுகுவா
ரிறுதியுற்றிடுமரனெனக்கடிதிரவிசுறப்படைகடவுவார்
மறலியுற்றெனவெதிர்நடப்பவர்வடவனற்கணைசொரிகுவார்
நெறியறுத்தவர்புகையுயிர்ப்பினர்வெடுவெடுச்சொலினிருதரே (௧௧௬)

முதுசினத்தவர்வயிரமுற்றவர்முகிலெரித்திடுவிழியினர்
திதியளித்தவர்விதிமதித்திடுதிறலர்சக்கரமெறிகுவார்
மதிதனைப்பிளவுறுமெயிற்றினர்வரைபொடிப்படவிடறுவா
ருததியுற்றெனவொலிமிகுத்தவருமைபதிப்படைவிடுகுவார் (௧௧௭)

துருமுகத்தவர்கதமிகுத்தவர்சுசியினைத்தருசுழல்கணர்
வரமிகுத்தவர்வரிசிலைக்கையர்வடவையுற்றெனவருகுவா
ரரவுமிழ்ந்திடுவிடமெனப்படியதிரவுற்றிடுமடியினு
ருரனுறக்கரியுதைபதத்தினருரகவத்திரம்விடுகுவார் (௧௧௮)

சிலைபிடிப்பவர்மலைபையொப்பவர்சிவனருட்படைவிடுகுவார்
வலைனயுற்றவர்சலனையற்றவர்வலயமுட்கரமெறிகுவார்
கலியையுற்றவருலவையொத்தறைககபதிக்கணைமுடுகுவார்
சலமிகுத்தவர்கொலைமனத்தினர்தழலுகக்கணைபொழிகுவார் (௪௧௯)

வேறு. தானவப்படைஞர்வாடண்டயின்முட்கரம்
வேண்மழுக்கணையம்வில்லேறுவிட்டேசணை
சோனையிற்பதின்மடங்காகவேசொரியவே
வானவர்க்குழுவெகுண்டேமலைந்தாரரோ (௪௨௦)

குந்தம்வாள்கப்பணங்கூரயில்லெழுமழு
நந்தகம்விட்டுவின்ஞணிகாதுறவனைத்
திந்துவின்பிளவைநேர்கணைசொரிந்தெதிரவே
யந்தரத்தவுணர்தம்படையெலாமற்றவே (௪௨௧)

சுரர்விடுங்கணையினூற்றிதிதருஞ்சுதர்படை
எரியமாநிருதருமசுரருமெண்ணிலா
வரைகளுஞ்சாலமும்வானமீமறையவே
சொரிதலும்விபுதர்கள்கணைகளாற்றுணிசெய்தார் (௪௨௨)

நிருதருமவுணருநெறியிலார்விடுவரை
மரமெலாந்துகளுறவாளியான்மாற்றிநற்
சுரர்நெடும்படைகளும்விசிகமுஞ்சொரிதலுஞ்
சரிநிலாதோடிஞர்தானவப்பெயரரோ (௪௨௩)

கடையுகக்காலினூற்கடல்கிழிந்தென்னவே
யடல்முனைந்தேயெதிரவுணருநிருதரு
முடைதலுந்நீள்துவட்டாச்சுதனுருமெனத்
தடைசெய்தங்கவரொடுஞ்சாற்றலுற்றனரோ (௪௨௪)

அதிதிதன்சுதர்களோடமர்செயப்பயமுறத்
திதிதருஞ்சிறுவராங்திரளெலாம்பாறினீர்
மதியிலீர்சமர்செய்திங்குயிர்துறந்தார்கள்வான்
கதியினேறுவரலாணிரயமேகாண்கிலார் (௪௨௫)

ஈதுரைத்தஞ்சன்மின்னெனுமுரைகூறியே
யோதையாருவரியினொலிகளுமஞ்சிடப்
பாதவம்வரையகற்படியினிற்பொடியுறப்
போதுவான்றேள்புடைத்தார்த்தனன்பொறியுக (௪௨௬)

கண்டகன்றோள்புடைத்தார்த்திடக்கவினுறு
முண்டகன்றரமாமலையுளோன்முனிவரோ
டண்டம்விண்டதுகொலோவெனவுளைந்தாரமர்
மண்டுமெண்டார்க்குயிர்மாய்ந்தபோன்மாழ்கினர் (௪௨௭)

அரியொலிக்கஞ்சியேயயமமர்ந்தாலெனச்
சுரர்துவட்டாச்சுதன்றொலியின்மூர்ச்சித்தனர்
கரிவெரினூறுமவன்கண்டுசெங்கனலவே
முரணுறும்வேலயின்முந்திடவீசினன் (௪௨௮)

வேலயிலெழுமழுக்கணையம்விட்டேறுமுட்
கோலடற்கப்பணங்குந்தம்வாளெறிதலுங்
காலனாகியதுவட்டாச்சுதன்கண்டுகைச்
சூலவெம்முனையினிற்றுணிசெய்தேயார்த்தனன் (௪௨௯)

ஆர்த்தவன் செய்கையைக்கண்டவா கண்டவன்
பார்த்துவெஞ்சினமுறப்பாய்பசடுத்தியே
காத்திநீயென்றுவெங்கதைவிசைத்தெறிதலும்
பூத்தலனஞ்சிடவவுணன்மேற்போயதே (கசு0)

சதமகன்விறலிஞற்றான்விசைத்தெறியும்வெங்
கதையினையவுணர்கோன்கையிஞற்பற்றியாண்
டதிதிசெய்மேலடித்தானையின்மத்தகம்
பிதிரவேமோதிஞன்பெருமையார்கரமதால் (கசுக)

தந்தியின்மத்தகக்குருதிதாரணியுற
விந்திரன்சதையிஞலிபமொடேசோர்ந்தவண்
சிந்தையிற்கதமுறத்தேறிஞன்றன்னுடன்
மந்தரமனையவாளவுணனுமொழிகுவான் (கசுஉ)

சரியிரேனுமுன்னையுங்கடுகியேகொன்றெனக்
குரியமாபகைமுடிப்பேனதுவொழியினீ
விரைவினிலென்னையும்வதைசெய்தால்வீறயற்
கரியவீடெய்துவேனென்றுபின்னறைகுவான் (கசுங)

உனைவெலிற்பகைமுடித்தேனதையொழியினீ
யெனைவெலில்யான்சுவர்க்கந்தனையெண்ணிலேன்
முனிவர்பிஞ்ஞகனயனுணரொணமுண்டக
வனமுறுமார்பினன்பதவியினடைகுவேன் (கசுச)

ஆதலாலுந்தனைவதைசெயாதேகின்யான்
சாதலேகலனெனச்சாற்றியேவிபுதர்தன்
ஞதவுன்கதைகொடேநானடித்தேனெனப்
பீதிகொள்ளேலெனப்பின்னரும்பேசுவான் (கசுரு)

தூயவிக்கதைபழுதாயபோற்சுரர்கடந்
நாயகவுன்கரக்குலிசநல்லுரனெலா
மோயுமென்றேயுரைக்கலையதற்கேயுறப்
பாயுமத்திறலினைப்பகர்வனென்றுரைசெய்வான் (கசுசு)

வேறு. நீதியையகற்றுநாராயணகவசத்தைச்சீரா
யோதியததிசியத்தியுரனுறுகுலிசமாக
நீதரித்ததுவுமன்றிநெடியவன்சத்தியெய்தக்
கோதிலாயுதமாய்த்தோன்றிற்றென்றுபின்கூறலுற்றான் (கசுஎ)

குலமிலரெனினும்நோயாற்குறையுளரெனினும்வஞ்சக்
கலரிவரெனினுங்கள்வக்கடியவரெனினுநக்கன்
சிலையிறுத்தருளுமெந்தையளியுறினவரேதிரா
வலனுறப்பகையைச்செற்றுவானவர்க்கதிகராவார் (கசுஅ)

ஆதலாலரிதன்சத்தியமரர்கட்கிறைவவுந்தன்
கோதகல்கரத்தின்மீதுங்குலிசத்தும்நிறைத்தேயும்பர்
வேதனைநீரவென்னைவதையெனவிளம்பக்கேட்டுப்
பீதிகொண்டிருத்தியென்ருநகையுறப்பேசிஞனல் (கசுகூ)

நகையுடனவுணர்கோமானவின்றிடுமுரையைக்கேளா
மகபதியுரனற்றேனென்றின்றெனைமதியாதிங்ங
னிகழ்வினைப்பகர்ந்தாயென்ருவெதிர்ந்திடத்துவட்டாமைந்த
னகபதிமருகன்போலநாட்டங்கள்சிவந்தானன்றே (கஎ0)

வேறு. காலனும்வெருவவெதிர்த்தசுரன்கடுவிடமேயா
நீலமுறுங்களனஞ்சிடவெண்கரிநிலனோட
வேலைகிழிந்திடவார்த்துயர்விண்ணவர்பெருமான்மேற்
சூலமெடுத்தழல்சூழவெறிந்தனன்முனிவுற்றே (கசுக)

கண்டைகலித்திடவழலுறமல்கியகதிர்கோடி
மண்டியசெயலெனவவிர்கள்பரந்திடவடவைத்தீ
மொண்டுபொழிந்தெனமூவிலையோரமுமெரிமூள
வண்டர்நடுங்கியரற்றிடவெய்தியதயிலம்மா (கசுஉ)

சுரர்முறையிட்டனர்முனிவர்பதைத்தனர்துயராலே
யரர்கைவிதிர்த்தனரயன்வெருவுற்றனனெறிமாறி
யிரவிதிகைத்தனன்மதிகனலுற்றனனிமவானும்
வரைபிதிர்வுற்றனவுடுவினமுட்கினமறைவற்றே (கசுங)

வேறு. அந்தகனஞ்சிடமணிகள்கறங்கிடவழலுறவெகிருமயில்
வந்ததுகண்டமரற்கிறைகுலிசமெறிந்திடவானின்மிசை
முந்தியமூவிலையொளிர்படையிற்றுகமுகடுயர்வாளவுணன்
மந்தரவரைநிகரொருபுயமற்றனவானவரார்த்திடவே (கசுச)

சிந்துவினணையெனவேயுயர்தோள்படிசிதறவிழுந்திடலு
முந்தியகறைநதியாமெனவோடமுனிந்துபிணுகியென
விந்திரன்மீதொருகைகொடுமோதியிலங்கயிராபதமாந்
தந்திமுகத்திடிபோலவடித்தனனவுணர்கடம்பெருமான் (கசுரு)

வீறியவசுரனடித்திடவிந்திரன்விறலுறுகுலிசம்விழ
வூறியகறைநதியாமெனவோடவுளைந்தயர்வுற்றமரர்
பாறிடவோர்கணமோப்பனமும்மதநீடுபகட்டின்வெரின்
னேறியவன்கரவாயுதமேந்தவொணுற்கிவைசெப்பினனால் (கசுசு)

நீயிவணென்கரமோதவயர்ந்தனையென்றுநினைந்துபயந்
தேயமர்செய்கிலையென்னவிதழ்ச்சிகள்செப்புவராற்பலரு
மாயவனச்சுதன்வாமனன்மாதவன்மாலரிகேசவன்விண்
டாயன்முராரியருட்பெறுநீதளரேலெனவேயறைவான் (கசுஎ)

வென்றவர்தோற்பர்கள்வெருவினர்பயமிலர்வரவிபவத்தினுளே
நின்றவர்நல்குரவாகுவரிரவலர்புரவலராய்நிறைவ
ரன்றுலகுண்டருளாதியியற்றியசெயலினிவ்வாறுறுமாற்
குன்றைநிகர்த்திடுமதகரிமேலமர்கோவுணரென்றுசொல்வான் (கசுஅ)

மசகமறைந்திடமேருவிழுந்திடுசெயலெனவலனுறுமென்
புசமுனியத்தியைநீவிடவற்றனபுனலுறுவேணியினிற்
சசிதரியரனிடர்களைபவனருளெனவுணருதிசதமகனே
வசையறவமர்செயமுனைகுதியென்றுயர்வாளவுணன்சொலுவான் (கசுகூ)

வேறு. அரியுனைமுனிவனத்தியதினெனைவதைத்தியென்றூண்
டுரைசெய்தானெனுமாங்காரமொழிதியாலுன்றலெந்தன்
சரிரம்வீழ்போதென்றுவிசக்கரந்தரித்தோன்பாதத்
திரவியினதிகமாகவேகுவகாண்டியென்றான் (கருo)

பின்னருமுரைப்பானும்பர்பெருமநீகேட்டியெந்த
னன்னையாம்வேள்வியாகியத்தனுந்துவட்டாவாகி
யென்னரும்பகையாயிங்ஙனெதிர்ந்திடுநீயுமாகி
யுன்னருபதத்தென்றுவியுறவருளொருவனுவோங் (கருக)

சோதியாயுலகமெல்லாம்படைத்தளித்தழித்துத்தோன்றி
நீதியாய்நெறியாய்நாலுமறையதாய்நிறைந்துநிற்கு
மாதியுன்னடியார்தங்கட்கடியர்தம்மடியரானோர்
பாதமேபற்றுவோரைப்பற்றவேயருள்செய்வாயே (௧௫௨)

தரணியினரசுந்திக்குக்காவலர்விபவந்தானுஞ்
சுரரெனுஞ்செல்வந்தானுந்துயநான்முகன்றன்வாழ்வு
நரகெனநினைவனுந்தன்பதவியைநத்திலேன்யான்
பரமவுன்பத்தர்க்காளாய்மகிழ்ந்திடப்பணித்தியென்றான் (௧௫௩)

தோர்வையிற்றுயரமில்லேன்செயத்தினிற்சுகமுமில்லே
னேருறுபதங்கடம்மையிச்சியேனூழியேந்து
மாரியவுந்தன்பத்தர்க்கடியவர்க்கடியனாகுஞ்
சீரினைச்சநநந்தோறுமளித்தருள்செல்வவென்றான் (௧௫௪)

இருகணீர்புரளவென்புமிதயமுமுருகிநின்றே
யரிதிருமருணையவச்சுதவனந்தமூர்த்திக்
குரியவவுலகமெல்லாமுண்டுமிழ்ந்தளந்துவைகுங்
கரியவவென்றென்றேத்தியவுணர்கோன்கழறலுற்றான் (௧௫௫)

சதமகாபீதியோவிச்சமர்பொரமுனைதியென்று
சதுமுறுமவுணன்கூறமகபதிகழறலுற்றா
னதன்மமாரசுரனையுமந்தகாலத்திற்பூமான்
பதியினைப்பத்திசெய்துபரமபாகவதனானாய் (௧௫௬)

பாகதிநச்சிலேனுன்பத்தர்கட்கடியனாகும்
வரமருளென்றாயஃதேயமிர்தமாம்வாரியோவி
மருளுறக்கூவனீரைப்பருகிடுமதியிலார்போ
லரியடியவரைவிட்டங்கவன்பதமிச்சிப்பாரால் (௧௫௭)

ஆதலாலவுணர்வேந்தேயந்தகாலத்தினொப்பில்
சோதிதன்னடியார்க்காளாய்த்துலங்கிடச்சிந்தைசெய்தா
யேதுனக்கரியதென்றேயியம்பியமகவான்மீதிற்
பீதகவரையுமஞ்சப்பெருங்கதையெறிந்தேயார்த்தான் (௧௫௮)

உலகெலாமஞ்சவேதனுளைந்திடவும்பரெல்லா
நிலைகுலைந்தோடவெய்துநெடுங்கதைதன்னைநோக்கிச்
சிலையிருஞ்சிறகைநீக்குந்தேவர்கோன்குலிசந்தன்னை
யிலகியதிருமஞ்சுமவிருறவெறிந்தங்கார்த்தான் (௧௫௯)

தாளினால்வரையையெற்றுந்தானவர்பதிதான்விட்ட
நீளுமாகதைதூளாகநிலத்துறவெறிந்துதானோர்
கோளரிநகமேபோன்றகுலிசங்கூற்றஞ்சநின்றான்
றோளினைத்துணித்துவீழ்த்தசுரரெங்குந்துள்ளியாட (௧௬௦)

தரையினைத்தாங்குஞ்சேடன்படந்தடுமாறவோங்கும்
வரையினந்துகளதாகமகபதிகுலிசத்தாலே
யெரிசினத்தவுணன்றோளற்றிருநிலமிசையின்வீழக்
குருதிபேராறாய்ப்பக்கமிரண்டினுங்குரைத்ததன்றே (௧௬௧)

ஞாலமேலிரண்டுதோளும்விழுந்திடநயனத்தீயைக்
காலவெண்டிசையினெட்டுக்கரியிரிந்தோடவேழு
வேலைசூழண்டம்விண்டதாமெனவவுணரார்த்துக்
கோலகாலந்தானுக்கிவலாரியைக்குறுகினானல் (௧௬௨)

கிழணலவனிதன்னைமறைத்திடக்கிளர்ந்தவானைச்
சூழமேலோட்டம்பற்றச்சுரர்பதியுடனுந்தந்த
வேழமோடகன்றவாயால்விழுங்கிவிண்விபுதரோட
ஊழிகாலத்திற்றோன்றுமுருத்திரனொத்தங்கார்த்தான் (௧௬௩)

கரியுடன்மகவான்றன்னைக்கடியவன்விழுங்கக்கண்டு
சுரரிருகண்ணினெற்றித்துறந்தவரோடுமோட
வரனயன்றிகைப்பவட்டவசுக்களாதித்தர்சித்தர்
மருதரோடனேகரெட்டுத்திசையினுமிரிந்தார்மாதோ (௧௬௪)

வேறு.

நீடுநாராயணகவசநெஞ்சுறக்
கூடியயோகத்தால்விபுதர்கொற்றவ
னோடைமாலியானையோடவுணனுண்ணவும்
வீடிடாதவனகட்டிடைவிளங்கினான் (௧௬௫)

வளர்ந்திடுமவுணர்கோன்வயிற்றினுட்புகுந்
தலைந்திடுகரிவெரிநமருங்கொற்றவ
னுளந்தளராதவனுதரந்தன்னையே
பிளந்தனன்குலிசத்தாற்பெருமையோங்கவே (௧௬௬)

அறந்தவறிடக்கடிதவுணனுங்கவங்
கிறந்தனனிந்திரனெனவிரங்கிய
துறந்தவராடநற்சுரர்மன்றோனுடன்
பிறந்தனனுமெனப்பெயர்ந்தனன்னரோ (௧௬௭)

சுரரொடுமுனிவர்கடுதித்துத்துள்ளவே
கரிவெரிநினையுறும்விபுதர்காவல
னாரனுறுமவுணர்கோன்சென்னிமேலொளி
ரிரவிநேர்வச்சிராயுதமெறிந்தனன் (௧௬௮)

கடமுறுகரிவெரிந்காவலன்விட
வடவரைவலம்வருமிரவிமானவே
திடமுடையவுணர்கோன்சென்னிசுற்றநற்
சுடருறுவச்சிராயுதந்துலங்கிய (௧௬௯)

கருடவாகனன்கையிற்கதிர்கொளாழிபோ
லிருடவிர்குலிசம்வானிலகவேகியே
கிரிடமொன்றவுணர்கோன்கழுத்தைக்கிறித்தான்
வருடமொன்றறுக்கக்கம்மண்ணின்வீழ்ந்தவே (௧௭௦)

சேடனும்வெருவுறத்தேயுவின்சகாக்
கூடியேயவனிவான்குலையமோதிட
வாடகவரைக்குவடளக்கர்வீழ்ந்தபோ
லீடுதானவன்சிரநிலத்துவீழ்ந்ததே (௧௭௧)

இரணியவரைக்குவடிறத்தன்வேரறத்
தரணியின்வீழ்ந்தபோற்றானவனுடல்
சிரம்விழுந்ததற்பினர்திசைக்கணெண்கரி
வெருவிடவரவுமெய்குலையவீழ்ந்தது (௧௭௨)

ஆடகவரைநிகரவுணன்மாண்டிட
வோடினரவுணர்களிருதரோடுமே
வீடினவினையெனமுனிவர்விண்ணவ
ராடினராவலங்கொட்டியார்த்தரோ (௧௭௩)

துர்துமிதழங்கிடச்சுரர்கள்பொன்மலர்
சிந்தினரரம்பையர்திபமேந்தவே
சந்ரமன்வசரிபுமருதர்சாரண
ரிந்திரன்றனைத்துதித்திறைஞ்சுமெல்லையின் (கஎச)

வேறு.

தாரணிதன்னின்மாண்டதானவருடலையோவிப்
பேரொளியாகிச்சிவன்பெயர்களாயிரத்தோன்னவகுஞ்
சீருறுபதத்தினேகச்சிறந்திடுமுனிவர்புத்ரே
னொருறுமரியையேத்தவிந்திரனியம்பலுற்முன் (கஎரு)

என்றனுலவுணன்றன்னைவதைத்திவனுவியுன்னை
யொன்றவிங்கருள்செய்சோதியுன்றனைச்குறவுமில்லை
கன்றியபகையுமில்லைகாலயந்தேயுவிண்மண்
ணென்றிவைநிறையுமண்டமெண்ணிலாதளிப்பாய்வீப்பாய் (கஎசு)

சித்திரகேதுவென்னுந்திறலுடையரசன்கோடி
நித்திலநகையரானதேவியர்நிறையவேட்டுப்
புத்திரயாகஞ்செய்தங்கிராவவிசியப்பொற்பா
ருத்தமச்சிறுவன்றன்னையுதவினுண்மூத்தபாரி (கஎஎ)

முந்தினதேவிபெற்றபுதல்வனைமுடுகுசீற்றம்
வந்திடமற்றங்குள்ளமனைவியர்மருந்தாற்கொல்ல
நொந்துமன்னரற்றலோடுநூலறியங்கிராவுஞ்
சந்ததம்வீணையேந்துந்தவனும்வந்தடைந்தாரன்றே (கஎஅ)

அறிவுறுமுனிவர்தேற்றவரசர்கோன்றேறுனுகிச்
சிறுவனற்றவர்களாலேயுயிருறச்சிறந்துதோன்றி
மறுவறுமரசநீயோதந்தையான்மகனேவெண்ணிற்
பிறவியினியார்யானுரென்றிவைபேசினுனுல் (கஎகூ)

மறுவறுசிறுவனிவ்வாறுரைத்தவண்மரித்தலோடு
மறிவுவந்துறவேதேறுமரசனுக்கங்கிராவு
நெறிகொணுரதனுந்தூயநேமிதோத்திரத்தைக்கூறி
யறைதியீதேழுநாளினனந்தன்முன்றுவனென்றுரால் (கஅ0)

முனிவரீதோதியேகமுராரிதோத்திரத்தைவேந்த
னினியனுயறையலோடுமேழுநாளுறலுந்தூய
தினகரனவிரைப்போன்றகலன்களுஞ்சிறந்துதோன்றத்
துனியறவனந்தன்வந்துதோன்றமன்வணங்கினுனுல் (கஅக)

மறையினுலன்பினேத்திமன்னவன்வணங்கலோடு
மிறைவனுமனந்தனேக்கியென்னெழிற்பதத்தினீதா
னுறைகுதிசிலநாளேகியென்றுரைத்தேகலோடும்
பொறைகொளுமரசன்வித்தியாதரனுகிப்போந்தான் (கஅஉ)

தூயதோர்விமானம்வானிற்றுலங்கிடவதன்மீதேறி
வாயுவின்விசையாலெட்டுத்திசையினும்வயங்கியேகுந்
தீயவையகற்றிஞானந்தெரிந்தவண்றேவர்சூழ
வாயிழையுமையாள்வாமத்தொடையுறுமரனைக்கண்டான் (கஅங)

கறைமிடற்றரனைநோக்கிக்கழறுவான்றேவர்சூழ
விறையெனவிருப்பாய்நாணமேகவுன்னூருமீதிற்
பிறைநுதற்றேவிதன்னையிருத்தினைபெரியோர்க்கீது
முறைமையோவென்றுசாலமுறுவலித்திகழ்ந்தானன்றே (கஅச)

முறுவலித்திகழ்ந்தான்றன்னைமுக்கணன்றேவிநோக்கி
யறைகுவாளொன்னைநீதானவமதித்துரைத்தசொல்லா
னெறியறுமசுரனாகிச்சனித்தியென்றியம்பநேரி
லறிஞனுந்துவட்டாவேள்வியனலிடையுதித்தானன்றே (௧௮௫)

சருத்தினிலரியைவைத்துக்கடுவினைகளைந்ததூயோ
னெருத்தமரிறைவன்றேவியியம்பியசாபத்தாலே
விருத்திராசுரனானவீட்டியபாவந்தானே
கிருத்திமநீசியாகிக்கிட்டியவலாரிதன்னை (௧௮௬)

வேறு. வரத்தால்விருத்திராசுரனைவலாரிவதைக்கப்பிரமகத்தி
யுரித்தாயடரப்பாதாளத்தோடையயத்துளமிழ்ந்திடவெஞ்
சரத்தாலசுரரடர்த்திடலுஞ்சாயும்விபுதர்தலைவனிலாக்
கருத்தார்துனிகண்மலிந்திடவேகளைகணில்லாதலைந்தனரால் (௧௮௭)

தலைவனில்லாவிபுதரொடுந்தவர்கணுறுமசஞ்செய்து
நிலையாளுநகுடனைத்தானிகரிலமரர்க்கிறையாகக்
கலனெலாமெய்யிலங்கிடவெண்சவரிகவிகைசாட்சியுற
வலர்பூந்தொடையலுரத்தணிந்தேயரியாதனத்தினமர்ந்தனனால் (௧௮௮)

இந்திராணிதனையணைக்கவெண்ணிநரவாகனமேறக்
கந்தர்தாதைநிகர்முனிவர்கனகதண்டைகடாவிடலு
முந்தியடையுமுயற்சியினாற்சர்ப்பமாகவெனமொழியச்
சிந்துநுகருங்குறுமுனிநீசெப்புஞ்சர்ப்பமாதியென்றான் (௧௮௯)

ஆவாய்விழுதியெனமுனிவனறையவரசன்மிகநடுங்கித்
தரைமேற்பணியாமுருவொழியச்சாற்றுகென்னத்தவத்தோனுன்
மரபாந்தருமனுடன்சுருதிவழுவாதுரைத்திவ்வடிவொருவி
விரிவாஞ்சுவர்க்கத்தடைதியெனவியாளமாய்மன்னிலன்வீழ்ந்தான் (௧௯௦)

வரத்தால்விருத்திராசுரனைவதைக்கவும்பர்க்கிறைமீதிற்
பெருத்தேயடர்த்தபிரமகத்தியொருவப்பெரியதவர்கூடிக்
கருத்தார்மறையாலயமேதமகத்தைமுடிக்கக்கடுவினைபோய்த்
தருத்தார்மாலையுரத்துறவேசசியோடமர்ந்தான்சதமகனே (௧௯௧)

வியாளமாகியவனிமிசைவீழ்ந்தநகுடனெழிற்புதல்வன்
யயாதிமகுடங்கவித்தழகாரரியாதனத்தின்மிசையேறி
நியாளபடகமுரசொலிநிறையவயங்குமமரர்பதி
யியாளியெனவேபுவனமெலாமருளோடரசாண்டமர்நாளின் (௧௯௨)

சசிமின்கணவன்புரோகிதனைத்தாராதேவியணைத்துதவுங்
கசனெண்சஞ்சீவினியுரையைக்கற்பான்கருத்தினினைந்திடவே
வுசனனடியிற்றொழுதெனக்குங்குருநீயென்னவுவந்தவனும்
பசுவின்குழுமேய்த்திடுதியெனப்பணித்தானிரையைமேய்த்தனனால் (௧௯௩)

அசுரராசான்மொழிப்படியினமரர்குருவினெழிற்புதல்வன்
பசுவினிரைமேய்த்தடவியுறும்பலமூலங்கடனையருந்தி
நிசிவந்துறவேயகத்தடைந்துநீதியுடனாயிரம்வருடம்
வசையிலுசனன்மனமகிழவவுணர்பதியின்வைகினனால் (௧௯௪)

பாவமலியுமவுணர்குருப்பயந்தமான்பங்கயவதனி
காவிவிழியாள்சிலைநுதலாள்கனமேபோன்றகருங்குழலா
ளோவியனம்போனடையுடையாடுடிபோன்மருங்கினெழிலுடையா
டேவயானைகசன்மீதிற்சிறந்தவன்பாயமர்நாளின் (௧௯௫)

மகவான்குருவின்சுதனமரிஸ்மடியும்விபுதர்க்குயிர்வரவே
நிகரிலாதவுசனன்மறைநிறைமந்திரத்தைத்தனக்கருளும்
வகையாநிரைமேய்க்குவதறிந்தவடிவாளாலேயசுரர்திரள்
சிகிபோற்கனன்றுகசனுடலைச்செந்நாயருந்தவதைத்தனரால் (ககூசு)

விசைகொள்பரிபூணிரதமொடுவெய்யோன்மறையமனையிடத்திற்
பசுவின்குழுவந்தடைந்திடவேபவமிலுசனனருள்குமரி
கசனைக்காணாதுயிர்விடுவேனென்னவசுரர்கதிர்வாளால்
வசையிலமரர்குருசுதனைவதைத்தசெயல்சுக்கிரனறிந்தான் (ககூஎ)

தீயவசுரர்கசன்றன்னைவதைத்துச்செந்நாய்க்கிட்டதெல்லாந்
தூயவுசனனுணர்ந்தயருஞ்சஞ்சீவினிமந்திரஞ்சொல்ல
நேயமிருகன்னிகைமகிழநிசியில்விபுதர்குருச்சிறுவன்
சீயமெனச்செந்நாயகட்டைப்போழ்ந்துசென்றங்கமர்நாளின் (ககூஅ)

மாறிலுசனன்செவித்திடவேவலாரிகுருவின்மகனுடலி
னூறுமுயிர்வந்தெய்திடவங்குரப்புஞ்செந்நாயுடைவயிற்றைப்
பீறியெழலுஞ்சோதித்தசுரர்பின்னுமவனைவதைத்தரைத்து
வீறுந்தரையின்றிரைகுரையும்வீரையயத்துட்கரைத்தனரால் (ககூகூ)

ஆவின்குழுவோடழகுடனேயடையுங்கசனைக்காணமற்
காவிவிழிநீர்ததும்பிடவேகலங்குமகளைக்கண்டுசனன்
றேவர்க்கிறைவன்புரோகிதன்றன்சிறுவனுடலைத்துணித்தரைத்துப்
பாவமலியுமவுணர்கடற்பயத்துட்கரைத்தசெயலறிந்தான் (உ00)

அறிந்தவுசனன்செவித்திடவேயமரர்குருவினழகியசேய்
சிகழ்ந்தவடிவமொளிதிகழத்தெய்வயானைமனமகிழ
நிறைந்ததிரைசூழ்சிந்துவினைநீங்கியசுரர்புரோகிதனைச்
செறிந்தகளிப்பினுடன்வணங்கிச்செகத்தாவினத்தோடமர்நாளின் (உ0க)

இரையுங்கடலிற்கரைகுரம்பைகூடியெழுந்தாநிரைமேய்க்குஞ்
சுரர்தங்குருவின்மகனுடலைச்சுட்டுச்சாம்பறனைவாரி
விருடபருவாமனையிடத்தின்வேரிமலியக்கலந்தசுரர்
பரிவினுடனேகொடுத்திடலும்பானஞ்செய்தானுசனனம்மா (உ0உ)

இருகோம்பொளிரவருநிரையோடிலங்குங்கசனெய்தாமையினு
லரிவையரற்றச்சுக்கிரன்றனவுணரவனைவதைத்துடலை
யெரியினடுக்கியடலைதனையெடுத்துச்சுரைநீரதிற்கலந்து
விரகின்றனக்காண்டளித்ததெலாமறிந்தேமிகவுமுனிந்துசொல்வான் (உ0௩)

மதுவைப்பருகுமசுரர்செயுமாயத்தழுந்திச்சுரைநுகர்வோர்
பதிதராவரெனச்சபித்துப்பவமிலுசனன்செபித்துவரிச்
சுதையையருந்துமிலேகர்குருச்சுதனையழைப்பத்தன்வயிற்றுள்
விதியினியற்றுலுருவுறவேவிஞ்சுங்கசன்கூவென்றனனால் (உ0ச)

வீறியெழுந்துதரத்தினுளேமிண்டிக்கூவுங்கசன்றனக்கு
மாறிலுசனன்மந்திரத்தையுபதேசித்தென்வயிற்றினையே
பீறியெழுந்துதரையினின்றுபெருமையுறுஞ்சஞ்சீவினிதான்
கூறுமுறையாற்செபித்தெனைத்தானெழுப்புகென்றங்குரைத்தனனால் (உ0ரு)

அசுரராசான்மொழிப்படியினவன்சாடரத்தைப்போழ்ந்தெழுந்தே
கசன்சஞ்சீவிமந்திரத்தைக்கழறவெழுந்தசுக்கிரன்றன்
வசைகொளவுணருனையினமும்வதையாமுன்னரேகெனவே
யுசனனடியின்வணங்கியவனும்பருலகிலுறுங்காலை (உ0சு)

தேவயானைகசனடியின்வணங்கிச்செப்பலுற்றனளொன்
றாவியனையாயெனைவேட்டின்றனைத்தென்னோடுமணைதியெனப்
பாவமகல்வோன்செவிபுதைத்துநீயும்யானும்பழமறையை
நாவினுணர்வோனகட்டுதித்தோநங்காய்நானுன்னனுசனென்றான் (௨௦௭)

நிறையொருவுங்கசனிவ்வாறுரைப்பத்தெய்வயானையென்றன்
றாதையருளுமுவமையிலாச்சஞ்சீவினிமந்திரமுதவா
தேதமுறுதியெனச்சபிக்கவெரியுநயனனேந்திழையை
வேதமுறுமந்தணர்க்காகாய்வேந்தனிலத்தின்வேட்பனென்றான் (௨௦௮)

சஞ்சீவினிமந்திரம்பழுதேயாகச்சபித்ததையறனை
நெஞ்சார்சினத்தினிருபனின்னையணைவனெனநிகழ்த்தி
மஞ்சார்விசும்பிற்கசனடையமடந்தைவெருவிவரும்விதியை
யஞ்சானனற்குங்கடக்கவரிதென்றேமாழ்கியமர்நாளின் (௨௦௯)

விருடபருவாப்பயந்தமின்னாள்வேலேர்விழியாளுருவமிலாப்
புருடன்விரும்பும்பயோதரத்திபுயலேரைம்பாற்சம்மிட்டை
வருடகாலமொருவிடவேமாதர்சூழவொருநயநங்
குருடனாவோன்குமரியொடுங்குறைவிலிலஞ்சிக்கூலமுற்றாள் (௨௧௦)

மருங்கிற்கலைகடலத்திலஞ்சிமருங்கினெறிந்துநதிபதிபோற்
றரங்கமெறியுந்தடாகமெலாஞ்சந்துநானங்கமழ்ந்திடவே
கருங்கண்சிவப்பச்குழலவிழக்கவினாரதரம்வெளுப்பமின்னார்
நெருங்கிக்கொழுநருடன்கலவிநிறைத்தார்போலப்பயத்தனைந்தார் (௨௧௧)

வனசமலர்கள்பறித்தெறிந்துவளைகளொலிப்பக்கரங்கோர்த்துப்
புனலுளமிழ்ந்துவிழுந்தெழுந்தும்பொற்பார்மடவார்மகிழ்வேலை
யனிலன்விசையாலறைந்தவர்களம்பொற்கலைகள்குவித்தேதகக்
குனிவினுதலார்தமனியநற்கொம்புபோலக்கலைந்துடைந்தார் (௨௧௨)

நனையுங்குழற்காலலையவதினரநிலத்தினருவியுறப்
புனலையகற்றிப்பாறுமவிர்பொற்கொம்பெனவேசம்மிட்டை
யனிலன்விசையாலெழுங்கலைக்குளசுரர்குருவின்மகளழகாய்ப்
புனையம்பரத்தையெடுத்துடுப்பத்தெய்வயானைபுகலலுற்றாள் (௨௧௩)

**வேறு.** அந்தணப்பெண்ணினுடையசுரர்கோன்மகளாநீயோ
வந்திவண்புனைவாயென்றுமதிப்பிலாதிகழ்ச்சிகூறச்
சிந்தையிற்கனன்றென்றாதையீயத்தேகியென்றேற்பான்
றந்தநீயிகழ்ந்தாயென்றுசம்மிட்டைமுனிந்தாண்மாதோ (௨௧௪)

சம்மிட்டைமுனிந்துதோழித்திரள்களுந்தாமுங்கூடிக்
கும்முட்டக்கிழிந்தநீரில்கூவலிற்கோதின்மாதை
யம்மிட்டைச்சிவணமங்கையங்குலியுறவேபற்றிக்
கம்முட்டித்தள்ளவீழ்ந்தாள்கவின்மலிதேவயானை (௨௧௫)

பாவமுண்மலியும்வெய்யசம்மிட்டைபயமிலாத
கூவலிற்றள்ளவீழுங்கொடியதிற்கொடியைப்பற்றி
யாவெனவரற்றும்வேலையவனியின்யயாதியென்னுங்
காவலன்மிருகவேட்டையாடுவான்கண்டானன்றே (௨௧௬)

ஓவியப்பாவையாவியுற்றிடவயங்கிற்றென்னக்
கூவலிற்கொடியைப்பற்றியரற்றியகோதைகையைச்
சேவினிற்றிகழ்வோன்கண்ணினெரிந்திடாச்சீர்வேளேலக்
காவலன்வலக்கைதன்னாற்பற்றியேகரையின்விட்டான் (௨௧௭)

வலக்கையாலரிவைசெங்கையமுக்குறப்பற்றிவாங்கி
யிலக்கணமிலங்குமன்னன்கூவலின்கூலத்தேற்றிக்
கலக்கமுற்றரற்றுமின்மெய்க்கவினெலாங்கண்டுவாரி
யலைக்குளினமிர்தமின்போலடைந்தநீயாவளென்றான் (௨௧௮)

ஆசகலரசன்கூறவசுரர்கோன்புதல்வியென்றன்
றாசினைப்புனைந்துவையத்துன்மதியென்னைப்பற்றி
வீசவிக்கூவறன்னின்வீழ்ந்தநான்மெலிவுதீர்ந்தேன்
ஏசகலுசனன்பெற்றமானெனவிளம்பலுற்றாள் (௨௧௯)

என்னெழிற்கரத்தைநீயுன்னிலங்கியவலதுகையான்
மன்னவபற்றலாலென்மருணனீமணஞ்செய்கென்ன
வின்னலின்மறையோன்பாவைநீயியானிம்பர்வேந்த
னுன்னையான்புணருந்தியில்லையென்றுரைக்கலுற்றான் (௨௨௦)

அந்தணமின்னீமன்னனாதலான்மணஞ்செய்நீதி
யிந்தமாநிலத்திற்றீதேயென்னினுமுன்னைநல்குந்
தந்தைவந்துதகஞ்செய்யிற்றாரமாய்க்கொள்வேனென்று
கந்தநற்றொடையன்மன்னன்கழறிநன்னகரிற்புக்கான் (௨௨௧)

அசலைமன்னிவைகளெல்லாமறைந்துதன்னகரியேக
வுசனனொண்புதல்வியாங்கோர்வடத்தின்கீழுலைந்துவைக
வசையகல்சுக்கிரன்றன்மகளைப்பாழ்ங்கிணற்றிற்றள்ளி
யசுரர்கோன்புதல்விசெய்தபுன்மையுமறிந்தானம்மா (௨௨௨)

மகடனைக்கிணற்றிற்றள்ளும்வஞ்சகிசெயலால்வெள்ளி
மிகமுனிந்தசுரர்கோன்பாலிவையெலாம்வெகுண்டுகூறிச்
சிகியுறுநயனனெஞ்சார்சினத்தினினெழுந்துநின்றே
யிகழ்வுனக்காகவுன்னையொருவுவனென்றுசொன்னான் (௨௨௩)

வெஞ்சினத்துடனும்வெள்ளிவிளம்பவேயசுரர்கோமா
னஞ்சினனிருகைகூப்பியையநீயகலினாங்கள்
விஞ்சுசிந்துவினின்வீழ்ந்துவீடுவம்வினையேனல்கும்
வஞ்சகிபிழைபொறுத்தியென்றடிவணங்கினானால் (௨௨௪)

வெந்திறலவுணர்கோமான்வணங்கியேவெள்ளியோடுந்
தந்திவல்லூகம்வெம்பூதரமமர்வனத்தினுள்ளே
சிந்தைநொந்திருந்ததெய்வயானையைச்சேர்தலோடுந்
தந்தையைத்தழுவியேங்கியிரங்கினாடையலம்மா (௨௨௫)

தந்தையின்பதத்தின்வீழ்ந்தேயிரங்கியதையறன்னைச்
சிந்தைநொந்தசுரர்கோமான்வணங்கியென்மகளாஞ்சீரில்
புந்தியளிழைத்தவஞ்சம்பொறுத்தியாலென்றுகூற
விந்துநன்முகத்திதெய்வயானைதானியம்பலுற்றாள் (௨௨௬)

வாதம்வந்தறையக்கூடும்வண்ணமார்துகிலினென்றன்
பீதவம்பரத்தைச்சார்த்திப்பெலத்தினாற்கிணற்றிற்றள்ளி
வேதனையுவரிபோலவிளைத்தநின்குமரிதன்னைத்
தாதியாய்த்தருதியாயிற்சார்வனுன்பதியிலென்றாள் (௨௨௭)

சிந்தையிற்கனன்றுதெய்வயானையிவ்வாறுசெப்ப
யிந்திரன்பகைஞனவசுரனென்புதல்விதன்னைத்
தந்தனன்றாதியாகச்சாருதிபுரியினென்ன
நந்தொளிர்கரத்திதந்தைதன்னொடுநகரம்புக்காள் (௨௨௮)

உசனனற்புதல்விதன்னோடொளிர்நசெரெய்தலோடு
மசுரர்கோன்பரிவினாலேயளித்தசம்மிட்டைதன்னை
வசையின்மான்விழியார்நூற்றுப்பத்துமங்கையர்களோடே
சசிமுகத்தெய்வயானைதனக்குத்தாதியராயீந்தான் (௨௨௯)

தானவர்கோமானீயுஞ்சம்மிட்டைத்தோகைநல்லாண்
மானிகர்விழியார்நூற்றுப்பத்துமங்கையர்களோடு
மீனமேமலியுந்தாதியூழியத்தேவல்செய்ய
வூனமேயிலாததெய்வயானைதானுவக்குநாளின் (௨௩௦)

பாவமிலுசனன்பாதம்பணிந்தவன்பாவைசொல்வாள்
கூவலின்விழுந்தவென்னைக்குறுகியேவலக்கைதன்னாற்
காவலன்பற்றியென்னையெடுத்திடர்களைந்தானென்ற
னாவியேயனையான்றன்னையணைத்திடவளித்தியென்றாள் (௨௩௧)

உசனன்றன்புதல்விகூறுமுரையினையுள்ளத்தெண்ணிக்
கசனிவண்மறையோர்க்காகாள்காவலர்க்காவாளென்று
சுசியெனமுனிந்துசொல்லுஞ்சாபத்தாற்சூழ்ந்ததென்றே
யசலையாள்யயாதிபாலந்தணர்களையேவினாளால் (௨௩௨)

அந்தணரழைக்கவந்தயயாதியாமரசனுக்கு
மந்திரவிதியினாலேமங்கையையுதகஞ்செய்யக்
கந்தரக்குழலிதெய்வயானைதன்கணவனோடுந்
தந்தையைவணங்கிப்போனாடாதிசம்மிட்டையோடே (௨௩௩)

வாயுவின்விசையின்முந்தும்வையமேன்மடவார்சூழத்
தூயவடேவயானைசம்மிட்டைத்தோகையோடு
பாயுமாகரிதேர்சூழப்பதிதனிற்கோயின்மேவி
யாயிரவருடமன்னோடநங்கசாத்திரத்தினாழ்ந்தாள் (௨௩௪)

மாதரெண்டெய்வயானைதன்னுடன்யயாதிமன்ன
னாதரவுடனேதோய்ந்தங்கவள்சற்றுமறியாவண்ணந்
தாதிசம்மிட்டைதன்னைத்தழலின்முன்விவாகஞ்செய்து
போதவிழ்சோலைதன்னுட்கரந்தனுபோகஞ்செய்தான் (௨௩௫)

அசுரர்கோன்மகளோடன்புற்றணைந்திடும்யயாதிசெய்கை
யுசனன்றன்புதல்விசற்றுமுணர்ந்திலளன்புவைத்துச்
சசியுயர்கவிகையான்சகுலிகேதனன்றன்னாலி
னிசையுறத்தழுவித்தோய்ந்துதுருவசுபூருவீன்றாள் (௨௩௬)

முருகவிழ்குழலாள்கோங்கின்முகைநகிற்சம்மிட்டைப்பெண்
பெருகியவன்பினாலேயயாதியையணைத்துப்பெற்ற
துருவசுபூருவென்னுமூவராய்த்துலங்கும்பேரை
யொருகணிலுசனன்பாவைக்கொளித்தவள்வளர்த்தாளன்றே (௨௩௭)

பெருந்திறலவுணர்கோமான்பெற்றசம்மிட்டைப்பேரா
ளருந்தவவுசனன்பாவையவனியினறியாவண்ணங்
கரந்துதான்வளர்க்குமூன்றுதனயரைக்கண்டுநெஞ்ச
மெரிந்திடுந்தெய்வயானையயாதியைமுனிந்துசொல்வாள் (௨௩௮)

ஆதரவுடன்யானுன்னையணைக்கவுமன்புநீத்தென்
றாதியைப்புணர்ந்துமூன்றுதனயரையளித்தாயென்று
வேதனைமலியக்கண்ணீர்வெள்ளமொத்திழியவேகித்
தாதையாமுசனன்முன்னர்த்தளர்ந்தெலாஞ்சாற்றினாளால் (௨௩௯)

இருகணீர்கலுழத்தெய்வயானைவந்திறைஞ்சிநின்றே
யரசரெண்யயாதிசெய்தபிழையெலாமறைதலோடு
மெரியெனமுனிந்தென்பெண்ணையெள்குமன்னிளமையோவி
நரைதிரைமூப்புவந்தேநலியுமென்றுசனன்சொன்னான் (௨௪௦)

முனிவினாலுசனன்சாபமொழிந்திடயயாதிமன்னன்
குனிவில்வினைந்துமூப்புக்குறுகிடநரைவந்தெய்த
மனமெலிந்தசுரராசான்மலரடிவணங்கியென்றன்
வினையகல்வரமீயென்னவெள்ளியங்குரைப்பதானான் (௨௪௧)

மன்னவாமைந்தர்தம்மிலொருவனின்மூப்பைவாங்கி
யின்னலிலிளமையீயிலெழிலுறுபுருடனாய்நீ
யன்னமென்னடையினாரையணைந்தவராசைதீர்ந்த
பின்னுன்சேய்க்கிளமையீந்துபெருந்தவமுயறியென்றான் (௨௪௨)

**வேறு.** ஏருறுமுசனன்மொழிந்திடநகரினெய்தியென்சரையினைத்தரித்துச்
சீருறுமிளமைதருகுதிரெனவேசிறுவருக்கரசர்கோனுரைப்ப
வீரியவெதுமன்றுருவசுதுருவும்வசுவிவர்மறுத்திடவிளங்கும்
பூருநல்லிளமையளித்திடயயாதியழகுறப்பொலிந்தனனன்றே (௨௪௩)

பூருமனிளமையளித்திடயயாதிபொற்புடைச்சம்மிட்டையெழிலார்
பாரியதனத்திற்படிந்துவாயமிர்தம்பருகியேமதனசாத்திரமாம்
வாரியின்வருடமாயிரமழுந்திவெறுத்தபின்மகன்மெயிற்சரையை
நாரியால்வளைந்ததனுவெனத்தரித்துத்தனயனுக்கிளமைநல்கினனால் (௨௪௪)

சீருறுசுதனுக்கிளமையையளித்துச்சிறந்தவொண்மவுலியைக்கவித்துப்
பாரினிலரசாண்டிருத்தியென்றெழிந்தசிறுவரைப்பரிவறநோக்கி
யேருறுமகுடமிலாதுநீரிழிவாய்த்திரிதிரென்றவர்களையிகழ்ந்தே
நாரியர்கலவியொழிந்துகானகத்தின்யயாதிபோய்நற்றவம்புரிந்தான் (௨௪௫)

கதமிகும்யயாதிமொழிந்தசொற்படியேகனகநன்மகுடமுமின்றி
யெதுமனன்மரபோரியாதவராளுரியல்பிலாத்துருவசுக்குலத்தோர்
மதமிகுதுருக்கராயினார்துருவின்வழியினோர்போசராயினர்க
ளதன்மமேமலிந்தவசுப்பயந்தவர்தாமிலேச்சர்களாயினாரம்மா (௨௪௬)

தந்தைதன்முனிவான்மகுடமும்மின்றித்தனயர்நால்வருமிகழ்வாகக்
கந்தனைநிகர்த்துக்கனகநன்மவுலிகவித்தெழிற்பூருநன்கமல
விந்தையின்கருணைவளர்ந்திடவவனிவிளங்கவேயிருந்தரசாண்டா
னிந்திரனெனவேபுவியிடையரசர்திறைகொணர்ந்தெங்கணுமிறைஞ்ச (௨௪௭)

**வேறு.** பூருவின்குமரன்சனமேயவன்றன்புத்திரன்பிரதிமானவன்சே
யேருறும்பிரவீரனனவன்சுதன்மனிலங்கியநமசியிப்புவியின்
சீருறுமவன்றன்புதல்வனாயெழுந்தோன்சிறந்தசாருபனுமரசன்
பாரினிலவன்றன்சிறுவனாயுயர்ந்தோன்பழுதகலுஞ்சுதத்துய்மன் (௨௪௮)

நீதிசேர்குணத்துச்சுதத்துய்மன்புதல்வனிகரிலாவெருகவனவன்சேய்
கோதிலாயயாதியவன்சுதனியாதியவனருட்குமரனாயுயர்ந்தோன்
மாதவமுடையவுத்திராசுரனுமற்றவன்மகனரிதேயு
பூதலத்தவன்றன்சிறுவனாயெழுந்தான்புலனுறுதத்திரிமனனே (௨௪௯)

தூயதத்திரிமன்சுதனெனவயங்குந்தோன்றல்கேதாரியாமரசன்
றீயவரவியச்செயித்திடுமவன்சேய்சிறந்திடும்வலாரியைநிகர்த்தே
காயுமாகரிமாகவினுறுமிரதங்கடலெனநிறைந்திடவதன்ம
மோயவேதருமம்வளர்ந்திடவுலகாளொப்பிலாத்துச்சந்தநிருபன் (௨௫௦)

நீதிமெய்தருமநிறைந்திடவோம்பிமிகிலாமதனவேள்வடிவாய்ப்
பூதலமிசையின்மடங்கலாசனத்திற்புரந்தரன்போலவீற்றிருந்து
மாதவர்மகிழமலர்மகள்விரும்பமறையவராசிகள்வழங்கத்
தீதறமவுலிபுனைந்துதுச்சந்தன்றிசையெலாம்புகழுறவாண்டான் (உருக)

சிறுவர்தாய்தந்தைசகோதராரிவரையிழந்திடுசெனங்களுக்கெல்லாங்
குறைவறவவராயிடரினையகற்றிக்கொழுநரையிழந்தமங்கையர்க்கு
நறுமலரணையிற்புணர்வதேயன்றிமற்றெல்லாநடத்துவனென்றே
பறையறைபுவியினெனவுரைத்தந்தப்படியினிற்படியினையாண்டான் (உருஉ)

தூயதாகியதுச்சந்தமன்னிரதந்துரகம்வெங்கரியினஞ்சூழ
வாயுநேர்புரவிமிசையினின்வயங்கிவயவர்கள்வாரிபோல்வளைய
நாயெலாந்தொடரவலைகொடேசவரர்நடந்திடப்பழுவத்தினண்ணிச்
சீயமானுழுவைகிருடியாவிதங்கள்சினமுதிரெண்கெலாம்வதைத்தான் (உருங)

எண்ணருங்கலைதோனகாயுதமுழுவையெண்குபூதாரமாவிதங்கண்
மண்ணிடைவிழவேவலக்கைவாளதனுல்வதைத்துயரிவுளிமேல்வயங்கி
விண்ணவரரசனெனக்கலனணிந்துவிளங்கியதுச்சந்தமன்னன்
கண்ணுவமுனிவனினிதுவீற்றிருக்குங்கடத்திலுச்சிரமத்தைக்கண்டான் (உருச)

**வேறு.**

முனிவனுச்சிரமத்தினெய்திமுண்டக
வனிதைநோக்குளமனன்மனையுளாரெனக்
கனிகள்கொய்திடத்தவன்கடத்திலேகவே
தனியளாஞ்சகுந்தலைத்தையற்றூன்றினள் (உருரு)

கந்தரம்பிறைசிலைகணையெட்பூவள்ளை
நந்துவண்டிகிரிநற்கோடுநன்குறு
மந்தரம்வடவிலைவயங்குநீர்ச்சுழி
யந்தரஞ்சுமந்தபோலணங்குதோன்றினள் (உருசு)

மின்னிடைதுவண்டிடவெறிகள்வீசவம்
பொன்னிழைவயங்கிடப்பொதியுநாணவே
யன்னமுமொதுங்கிடவணுகுமாமயின்
மன்னனைக்கண்டிவன்மதனென்றுன்னினள் (உருஎ)

நீவியுங்காஞ்சியும்வயங்கநேரிலா
வோவியப்பாவைபோலுற்றமங்கையைக்
காவலன்கண்களிற்கண்டுநெஞ்சிறே
டாவியுநையநீயாரென்றோதினன் (உருஅ)

வண்ணவெம்பரிமனனறையவாட்கணள்
கண்ணுவன்மகளியான்கனிகள்கொய்திட
வெண்ணரும்வனத்திடையேகினனெனப்
பெண்ணருங்கலமனுள்பேசினளரோ (உருகூ)

அன்னமென்னடையினளறையமன்னவன்
கன்னல்வின்மதனனைக்காயுங்கண்ணுவ
னுன்னையென்றுதவினனுண்மைகூறெனா
மின்னனையென்றிவைவிளம்புவானரோ (உசா0)

வேதியன்பாவைநீயென்னின்மின்னுன்மேற்
காதலுற்றென்மனங்கலங்குமோவகல்
பூதலத்தரசர்தம்புதல்விநீயென
வோதமான்முகிலனைகையொளிரக்கூறுவார் (உசாக)

அரசனீகேட்டியென்சனனமென்றணங்
குரைசெய்வானுலகெலாமறைகளோங்கிட
வரிசையார்மடங்கலாசனத்தின்வைகியே
விரைசெய்தார்க்கௌசிகவேந்தனுண்டனன் (௨௬௨)

சுரர்கள்கோனுமெனச்சுவணபீடத்தி
னிருபனுயாள்கின்றநிசரில்கோசிகன்
மிருகயாத்திரையினைவிரும்பிக்கானிடை
யரிகிரிகரிமரையடங்கச்செற்றனன் (௨௬௩)

வனமுறுமிருகங்கண்மடியமோதிமன்
வினையகல்வதிட்டனுச்சிரம்மேவவம்
முனிவன்வந்தாசிகள்மொழிந்துதேனுவை
யினியநல்லடிசிலையிடுதியென்றனன் (௨௬௪)

ஈனமில்வசிட்டனீதுரைப்பவெய்திய
தேனுமன்னவனுக்குஞ்சேனைநாதர்க்கு
மூனமிலடிசிலையுதவவுண்டபின்
னானமுஞ்சாந்துநன்மலருமீந்தது (௨௬௫)

அறுசுவையடிசிலையளித்தங்காரமு
நறுமலருடன்கொடுத்திடுநல்லாவினை
மறுவிலாவசிட்டனைவேண்டமண்ணினுக்
கிறைவயானீகிலனென்றனன்றவன் (௨௬௬)

மையகன்முனிவனீதுரைப்பமன்னவன்
றுய்யநற்பசுவினைத்தொடர்ந்துபற்றவா
மெய்மயிர்சிலிர்த்துதறிடலும்வெஞ்சமர்
செய்யவேசோனகர்சீனர்தோன்றினார் (௨௬௭)

தேனுவின்மெய்மயிர்சிலிர்ப்பத்தோன்றிய
சோனகர்பப்பரர்யவனர்சூலம்வாள்
வானகமறையவேயெறிந்துமன்னர்கோன்
சேனையைச்சின்னபின்னங்கள்செய்தனர் (௨௬௮)

மாசறுசுரபியின்மயிரின்வந்தவ
ரேசறுவசிட்டன்வஞ்சனையினாலெழுந்
தாசறுசேனைசெற்றனர்களாமெனக்
கோசிகன்றனயர்கள்கொதித்துவந்தனர் (௨௬௯)

மாயையிங்கியற்றியமுனிவன்மாளவே
காய்வமென்றயில்கொடங்கடரக்கண்டவன்
றீயெழவிழிக்கமன்சிறுவர்மேலழல்
பாயவங்கெரிந்தனர்படியிற்சாம்பராய் (௨௭0)

தவன்விழித்தழலினாற்சாம்பராய்விழு
முவமையில்சிறுவருக்கிரங்கியோங்கல்போ
லிவுளிகொண்டெழுமிரதத்திற்கோசிகன்
சிவனெனமுனிந்துவெங்கணைகள்சிந்தினான் (௨௭௧)

காத்திரமுறக்கவுசிகன்கைவில்லினாற்
கோத்தெதிர்விடுத்தெழுங்கோல்கள்வெங்கன
னேத்திரனஞ்சவேநிறைப்பத்தன்கையில்
வேத்திரந்தனைமுனியெதிரவிட்டனன் (௨௭௨)

மங்குல்கள்பொழிந்தெனமன்னனேவிடு
மங்கியம்மிறையயனரனருட்படை
வெங்கனன்மடுத்திடமுனிவன்வேத்திர
நுங்கினவவையெலாநொடிப்பின்முன்னரோ (உஎ௩)

வேறு. பாவமில்வசிட்டன்கையிற்பாண்டில்வந்தெதிர்ந்துநின்று
தேவர்தம்படையையெல்லாம்விழுங்கலுஞ்சிவனைநோக்கிக்
காவலன்வரத்தாற்பெற்றுக்கடாவியகணையைப்பார்த்து
நாவினல்வளைத்துவேதமுனிநுங்கநடுங்கினன்மன் (உஎ௪)

தவர்களுக்குயர்ந்தஞானமன்றியேசமருக்காகார்
புவியையாளரசர்வென்றிபொருந்தியபுயத்தரென்பர்
தவமருந்தவர்க்கேவெற்றியறிவறநிறையுமஃதே
யுவமையில்வசிட்டனுலேயுணர்ந்தனனென்றுசொல்வான் (உஎ௫)

நிலனையாணிருபர்செல்வநிகரிலாவிளமைசெய்யும்
வலனருந்தவத்தாற்பெற்றபடைக்கலமற்றுமெல்லாஞ்
சலவிபியாகிமாண்டுசமன்கையிற்படுகைதிண்ணம்
புலனையுள்ளடக்கிஞானம்பொருந்தியதவஞ்சொன்றென்முன் (உஎ௬)

அவனியாள்விபவம்விட்டானரிவையர்கலவிவிட்டா
னிவுளிதேரணிகள்வீரரிபநிரையெல்லாம்விட்டா
னவமெலாமொருவஞானமடையப்பூருவமாந்திக்கிற்
பவனமேயுணவாயோகம்புரிந்தனன்படியின்மாதோ (உஎஎ)

நாசியைப்புதைத்தேயுச்சிநடுவுறமூலவங்கி
வீசயோகத்தனுகவிசும்பெலாமழலாய்ச்சூழ
நாசமாமுலகமென்றுநடுங்கினர்விபுதர்துய்ய
வாசவன்கவுசிகன்செய்தவமெலாமனத்துட்கொண்டான் (உஎஅ)

வானகமெல்லாமூலவங்கிதான்வளையநின்று
கானகத்தியோகஞ்செய்யுங்கவுசிகன்றவத்தைநீக்க
மானகுவிழியாளம்பொன்மலைநகுமுலையளாய
மேனகையென்னுமாதையேவினன்விபுதர்கோமான் (உஎ௯)

காமனங்குரைப்பக்காமன்கடிமலர்க்கணைவிற்கொண்டு
சோமனும்வசந்தன்றானுந்துணையதாய்த்தொடர்ந்துசூழ
வீமனுங்குழலிவேலின்விழியண்மேனகையாங்கொம்பு
பூமனுந்திருவுநாணப்புவிமிசைநடந்துவந்தாள் (உஅ0)

காசணிகுயங்களம்பொற்கலசமாமெனவேவிம்மக்
கேசமென்மலர்கடுன்னக்கெழிலாக்காஞ்சிமாழைத்
தூசுடனிலங்கமின்னுந்துடியிடைதுவளத்துய்ய
கோசிகன்முன்னர்வந்தாள்கூறெருணுக்கவின்கொள்கொம்பு (உஅ௧)

பரிபுரமரற்றக்கையிற்பருமணிக்கடகமின்னச்
சுரிகுழறிவளக்காதிற்றோடுகடயங்கமானுண்
வரிவிழியிலங்கமுல்லைநகைநிலாவயங்கவார
மிருதனமிசையவாடவெழிலுறநடந்துவந்தாள் (உஅ௨)

சுந்தரவடியாலன்னநடையினுற்றுடிமின்னுனு
மந்தரவிடையாலம்பொற்கலசமார்முலையான்மாண்பார்
நந்தெனுங்கழுத்தால்வேலினுட்டத்தாற்பவழவாயாற்
கந்தரங்குழலாற்றுய்யோன்றவமெலாங்கலங்கவந்தாள் (உஅ௩)

வருமவளெழிலைநோக்கிமறந்தனன்யோகமெல்லா
மெரியுறுதுப்பாமென்னவிதையமுமுருகவாசை
பெருகமாமதனன்வாளிபெய்யவேமதிதன்னான்மெய்
கருகநற்கவுசிகன்றான்கண்ணிமையாதுநின்றான் (உஅச)

மன்றலங்குழலினாடன்மார்பினின்வயங்குந்தூசைத்
தென்றல்வந்தலைத்துவீசச்செம்பொனின்கலசநாணக்
குன்றினைநிகர்த்துவிம்முங்குவிமுலைக்கவினைநோக்கித்
தன்றவமழிந்துவந்துதழுவினான்றடக்கையார (உஅரு)

கொங்கையைத்தழுவித்துய்யகுமுதவாயமிர்தமுண்டு
மங்கைதன்மருங்கிற்காஞ்சிமாழையின்கலிங்கநீக்கிச்
சிங்கலிலாடைதானேசேக்கையாய்மதனநூல்கள்
பொங்கிடக்கலவிசெய்தான்காமத்தால்யோகம்போக (உஅசு)

ஆயிரவருடம்பாயலகல்கிலானாகிமங்கை
தூயமென்முலையிற்றோய்ந்துசுரதநூல்விளைக்கலோடும்
வேயெனவயங்குந்தோளாண்மேனகைகருப்பந்தாங்கி
மாயிரும்புவியினீன்றாண்மகளதாங்குழவிமாதோ (உஅஎ)

கானகந்தன்னிற்றன்னைப்புணர்ந்திடுங்கவுசிகற்கு
மேனகைபயந்தசெய்யகுழவியாமின்னைக்காட்ட
வானகத்தரசன்செய்தவஞ்சமென்றறிந்துதுய்யோன்
றேனகுமொழியினாளைமுனிந்துதென்றிசையினுற்றான் (உஅஅ)

**வேறு.**

கவுசிகன்றென்றிசையேகக்காரிகை
யவனியிற்றான்பெறுமணங்கைவைத்தவ
ளுவமையில்விபுதர்கோன்பதியையுற்றிடப்
புவியிடையமுததப்பொலன்கொணற்சிசு (உஅகூ)

தந்தைதாயின்றியேதரையின்வைகிய
வந்தமன்குழவிதானழுதுவிம்மலுங்
கந்தமார்மலர்ப்பொழிற்ககங்கள்பார்ப்புடன்
வந்துதாஞ்சிறகினான்மறைத்தணைத்தன (உகூ0)

அலரியின்வெயிலினாலடர்ந்துபெய்முகிற்
சலம்விடுதாரையாற்றளர்தலின்றியே
நலமுறுஞ்சிறகினான்மறைத்துநாரம்வீழ்
மலையுறுபிரசந்தம்வாய்கொடீந்தன (உகூக)

எண்ணருங்ககக்குலமிரண்டுபோதினு
மண்மிசைக்குழவியைவளர்க்குநாட்டணிற்
கண்ணுவமுனிவனங்கெய்திக்கண்டுதன்
னுண்ணலக்களிப்பினான்மகளென்றோம்பினான் (உகூஉ)

மறுவிலாக்குழவியைவளர்த்தவெண்ணிலாப்
பறவைபேர்சகுந்தமென்றுரைபகர்ந்திடு
முறைமையாற்கண்ணுவமுனிவன்பெண்பெயர்
குறைவிலாச்சகுந்தலையென்றுகூறினான் (உகூ௩)

கானிடைக்கவுசிகன்கலந்தணைக்கவே
மீனகுவிழியண்மேனகைபயந்திட
வூனமில்ககக்குலங்காப்பவொண்முனி
தான்வளர்த்திடுஞ்சகுந்தலையென்பேரென்றாள் (உகூச)

பின்னருஞ்சகுந்தலைபேசுவாளுயர்
மன்னவவுன்பெயரேதுவைகிடு
நன்னகரேதுவெனநவிலுநீயென
மின்னனுள்விளம்பவவ்வேந்தன்கூறுவான் (உகரு)

வேறு. இந்துத்தருபுதனின்மரபுளின்வந்தவனெனதூர்
தந்திக்கடனிறையும்பிரதிட்டானவண்பதிதண்
சந்திற்படிதனத்தாய்பெயர்துச்சந்தமனென்றன்
சிந்தைப்படிமயறீர்க்குதியெனமாதிவைசெப்பும் (உகசு)

கந்தங்கனித்திரளேகொடுகடிதின்வருமெந்தை
தந்தின்புரினுன்மார்பினணைப்பேனெனச்சாற்ற
வுந்தைவரத்தாழ்க்கும்மெனதுயிர்போமுனந்தழுவிச்
சிந்தைத்துனிதீர்ப்பாயெனத்திகழ்மாதிவையறைவாள் (உகஎ)

ஓமக்கனன்முனரென்கழுத்தொளிர்நாணினைத்தரித்துத்
தாமப்புயத்தணைப்பாயெனத்துச்சந்தன்சம்மதித்தே
வாமத்திரளொழவேதியர்சொலுமந்திரப்படியின்
காமற்கபிடேகப்பெண்ணைமணந்தான்களிப்புறவே (உகஅ)

இருவோருடலொருமெய்யெனவணைத்தெண்புளினிசையுந்
தரவேல்விழிசிவப்பக்கலையொருவப்பதந்தனிலார்
பரிநூபுரமரற்றக்கரவளைபம்பமுத்தெனவே
வருவேர்வுநல்வதனத்துறமதனூலினைவிளைத்தார் (உகக)

தந்தக்குறியதரத்துறத்தனமேனகக்குறியு
முந்தக்குழலலையத்தொடைவிழச்சொன்மொழிபதறச்
சிந்தைக்களிப்புறவேயணைத்திருவோர்களுஞ்சிறந்து
கந்தக்கடுங்கோலெய்மதனூலின்கரைகண்டார் (௩௦௦)

அனுராகவண்கடல்வீழ்ந்தெழுமிருவோருமன்புறமா
மனனீயிருமாதேநகரடைவேனெனமடமா
னுனைநான்பிரிந்துயிர்வாழ்கிலனெனவாண்டொளிர்நயனப்
புனருரைகண்முலைமேற்குதிகொளவேபொருமினளால் (௩0௧)

தன்னுருயிரனையாடுயர்கண்டேதலவரசன்
மின்னேபுரியடைந்தேயுனையென்பாலினின்மேவப்
பொன்னூர்வுறுமிரதம்வரவிடுவேனெனப்புகலா
நன்னூரிதன்னயனப்புனறுடைத்தொண்ணகரடைந்தான் (௩0௨)

வேறு. மன்னவன்மணந்துதன்னைத்தழுவியேயொருவமாது
துன்னியபரிவினேடுபரிவுறத்துளங்கியேதான்
கன்னன்முத்துதிர்ப்பதொத்துக்கண்ணினீர்ததும்பநிற்கு
மன்னமென்னடையாண்முன்னர்க்கண்ணுவனணுகினனல் (௩0௩)

கனியுடன்கந்தங்கொண்டுகண்ணுவனெய்தலோடும்
வனிதைபொற்சிரகநீரான்மலர்ப்பதம்விளக்கிநாணி
முனிவதனத்தைநோக்காண்மொழிகிலாளருகுநிற்ப
வினையறுதவத்தோன்மின்னையணைத்திவைவிளம்பலுற்றான் (௩0௪)

வனிதைநீநாணிநின்றசெயலெனவனத்தினெய்தி
யுனைமணந்தவன்றன்யாவனுரைத்தியென்றோதமாது
தனைநிகரிலாதசோமன்குலத்திற்றுச்சந்தமன்ன
னெனைமணந்தணைத்துப்போனனென்றனள்வெள்கிவெள்கி (௩0௫)

அன்னமென்னடையாள்கூறவருந்தவன்மகிழ்ச்சியெய்தி
மன்னவர்திலகனுனதுச்சந்தன்மணந்தான்செய்ய
வென்னமாதவஞ்செய்தாயுன்னுதரத்தினெழில்கொண்டோங்கித்
தன்னிகரிலாதவண்மைத்தனயன்வந்திடுவனென்றான் (௬0௬)

அருந்தவன்மகிழ்வினோடுமருளவேமனத்துட்கொண்டு
கருந்தடங்கண்ணியின்பம்பெருகிடக்களிக்குநாளிற்
பெருந்தவப்பலத்தினாலேபெலனுறுகருப்பங்கற்புத்
திருந்துமின்னுதரத்தின்கட்சிறந்திடநிறைந்ததன்றே (௬0எ)

மருடனையொருவிவையம்புரக்குந்தன்மகுணனுன
புருடன்மாநகரந்தன்னிற்போந்தபின்பெறுவனென்று
வருடமூன்றுதரத்துள்ளேமகவினைப்பரித்தலோடு
மருடருமுனிவன்மங்கைகருத்தறிந்துறையலுற்றான் (௬0அ)

மாதுநின்மகுணன்பாற்போய்மகவினைப்பெறுவனென்று
வேதனையுடன்மூவாண்டுபரிப்பதுவிழுமிதன்று
லேதமிலுயர்ந்தநாளினின்றிடுமகவையென்னத்
தாதைசொற்படியேபெற்றாள்சகுந்தலைமதலைதன்னை (௬0௯)

ஐந்துகோளுச்சமாகவமரர்கண்மலர்கடூவ
மைந்தனைப்பெற்றுமாதுமகிழ்தலுமுனிவனெய்திச்
சிந்தையின்மகிழ்வினோடுசாதகவோமஞ்செய்தே
யந்தணருடனுமாசிபகர்ந்தினிதிருந்தானம்மா (௬௧0)

உவமையின்மதலைமெல்லத்தவழ்ந்துபின்னடந்தேயோங்கச்
சவுளமுநடத்தித்துய்யதவனுபநயனஞ்செய்து
பவமறுபுராணவேதசாத்திரம்பலவுங்கற்பித்
தவனியினிடர்கடீரவளர்த்தின்பமடைந்தானன்றே (௬௧௧)

**வேறு.** உவமையில்குமரனாகியேவருடமொன்பதோடேழுறப்பலத்தாற்
பவமலிநிருதரசுரரைப்பிசைந்துபகடுபஞ்சானனமுழுவை
யிவையெலாங்கரத்தாற்புடைத்துடலொடித்தேயெதிரிலாதவன்றனைநோக்கித்
தவருளங்களித்திங்கிவன்பெயர்சருவதமனனென்றுரைத்தனர்மன்னோ (௬௧௨)

வருவிலின்வலத்தாற்பெலத்தினாற்குணத்தான்மண்ணினினிகரிலாக்குமர
னரன்விழிக்கனலாலெரிந்திடாமதனனிவனெனவழகமர்ந்திடவே
சரியிலாக்கொழுநன்கலவியைநினைந்துசகுந்தலைதளர்ந்தவளுடலங்
கருகியசெயலைக்கண்ணுவமுனிவன்கண்டிவைகழறலுற்றனனால் (௬௧௩)

மங்கைநின்மகுணனுறையுமாபுரத்தின்மகனொடுமடைகுதியென்று
சிங்கலின்முனிவன்மொழிந்திடவிறைஞ்சிச்சகுந்தலைசிறுவன்றன்னுடனே
பொங்கியமகிழ்வாலருந்தவர்சூழப்புவியினினடந்துகான்கடந்து
வெங்கயம்பரிதேர்நிறைந்திடும்பிரதிட்டானமாநகரின்மேவினளால் (௬௧௪)

புரியிடையடைந்துவயங்குமாதவரைப்போமினுச்சிரமத்தினென்றே
யரிகொளாதனத்தினமரர்கோனிகராயமர்ந்ததுச்சந்தமன்னவனைச்
சரியிலாமகனோடிறைஞ்சியாண்டெழுந்தசகுந்தலைதரியினைச்சார்ந்தே
யிருகணுங்கொழுநன்புயத்தழுந்துறத்தானிமைக்கிலாளாகிநின்றனளால் (௬௧௫)

இரதியிந்திராணியரம்பைமேனகையோடுருப்பசியிவரெலாநாணத்
தரளமாவடங்கடனமிசையலையத்தமனியக்கொம்பெனச்சாரும்
விரன்மனர்வெருவுஞ்சிறுவனோடடைந்தமின்னினைத்துச்சந்தமன்ன
னிருகணுனோக்கியவையுளெய்தியநீயெவளெனச்சகுந்தலையியம்பும் (௬௧௬)

அரசநீவனத்தினடைந்துகண்ணுவனாச்சிரமத்தினணுகியேயென்மேல்
விரகமுற்றுயர்நான்மறைவிதிப்படியால்வேட்டெனையணைக்கயான்பயந்த
திருமகனிவனைமவுலியைக்கவித்துச்செம்பொனாதனத்திடையிருத்தித்
தரணியைக்கொடுத்தியெனச்சகுந்தலைமின்சாற்றமன்னனதைத்திவைமொழிவான் ()

யான்வனத்திடையேயெய்தியேயணைக்கவெனக்குநீபயந்திடும்புதல்வன்
றனிவனெனவேயசத்தியமொழிந்துதரணியைவிடுகுதியென்றே
வீனமுண்மலியும்பொதுமடந்தையர்போலியம்பினைதந்தைதாயுனக்கார்
நீனவிலெனவாண்டரசர்கோன்கழறநிகரிலாச்சகுந்தலையுரைப்பாள் (௱௧௮)

கானகத்திடையிற்கவுசிகமுனியையணைத்திடுங்கயினுறுமணங்கா
மேனகைபயந்தபுதல்வியானெனவேவிளம்பிடமணந்தெனையணைத்த
நீநகைத்திவணினசத்தியமுரைத்தாய்நிருபனீயளித்திடும்புதல்வன்
றனொருவுவனேமவுலியைக்கவித்துத்தரணியைக்கொடுத்திடென்றுரைத்தாள் ()

சுதைதருமொழியாள்விளம்பிடக்கேட்டுத்துச்சந்தன்தவத்தினையொழிந்து
மதியறுமுனிவன்விரகமுற்றிடத்தான்மயக்கியேயணைத்தமேனகையாம்
பொதுமகள்பயந்தபுதல்வியாகையினாற்பொய்விளம்பினையெனப்புகன்று
கதுமெனக்கரங்களறைந்துறநகைக்கக்காரிகைகண்சிவந்துரைப்பாள் (௱௨௦)

என்னைநீயிழிவாங்குலத்தியென்றுரைத்தாயிந்துவின்சுதன்புதனளித்த
மன்னனையணைந்தேயுருப்பசியுதவுமகன்வழிவரும்யயாதிக்கித்
தன்னிகரிலாதவுசனனுண்மகடன்றுதிசம்மிட்டைதான்பெறவே
யின்னிலத்துயர்ந்தோன்மரபினில்வந்தாயெனையிகழ்ந்தனையெனநகைத்தாள் ()

அரிவையர்திலகிநகைத்திவைமொழியவரசர்கோனதற்கிழிவறைந்து
தெரிவையேயுனக்கன்பானவரிடத்திற்சிறுவனோடேகெனும்வேலை
சுரரொடுமுனிவர்கிலத்தினிற்றோன்றித்துச்சந்தமன்னனைநோக்கிச்
சரியிலாவடமீனிகர்சகுந்தலையைச்சாற்றலையெள்கலென்றுரைப்பார் (௱௨௨)

காவலர்திலகநீவனத்தெய்திக்கண்ணுவமுனிவனாச்சிரம
மேவியிவ்வணங்கைக்கண்டுதான்களித்துவிரகமுற்றனலின்முன்வேட்டே
யாவியுமுடலும்பொருந்தியபோலவளியுடனணைத்தெழிலாருந்
தேவியையிகழேலிவள்பயந்திடுமிச்செல்வனின்சிறுவனுமென்றார் (௱௨௩)

சுரரொடுமுனிவர்திரளிவைவிளம்பத்துச்சந்தமன்னவனுரைப்பான்
மிருகயாத்திரையைவிரும்பியான்வனத்தின்மேவியேயிவடனைவேட்டுப்
பெருகியகளிப்பான்மணந்துயானணைந்துபிரிந்தென்னூரடைந்ததுமுளதே
யிருநிலத்தவர்கள்பழித்திகழுவரென்றதற்குயானெள்கினேனென்றான் (௱௨௪)

நெறியுறுமரசனிவையெலாநிகழ்த்தநெடுந்தவரிலேசர்களுரைப்பார்
மறுவினின்மனைவியருந்ததிநிகர்ப்பாண்மதனனெண்வடிவநற்குணத்தாற்
குறைவிலுன்குமரனிவரைநீயெள்கேலென்றவர்மறைந்திடக்கோமான்
சிறுவனைத்தழுவிமவுலியைக்கவித்துச்செம்பொனாதனத்திடைவைத்தான் (௱௨௫)

சுருதியையறையும்மறையவர்விதிப்பத்துச்சந்தன்சுதன்றனக்குயர்பேர்
பரதனென்றுரைத்துப்பரிவுடன்மவுலிகவித்துப்பாரரசெலாமீந்தே
யிரதியையணையுமதனனுநாணவெழிலுடைச்சகுந்தலையுடனற்
சுரதநூல்வழுவாதவளினைநகிலிற்றோய்ந்துபல்லாண்டினிதிருந்தான் (௱௨௬)

**வேறு.** கோசிகனருள்குமரியோடெழில்கொடுச்சந்தன்
வாசமும்புதுமலரும்போலாயிரவருட
மாசைமல்கிடவணைந்தபின்னறிவுவந்துறவே
யேசின்மாதவம்புரியவேவனத்தினேகினனால் (௱௨௭)

விரதமார்தவம்வெஃகியேதுச்சந்தனேசச்
சுருதிநூனெறிதுணையதாய்ப்புவியினையாளும்
பரதமன்னவன்மரபினிற்பருதிபோலெழுந்தா
னிரதிகொண்கனைநிகர்த்திடுமத்திநேரிலாதான் (௩௨அ)

அத்திமன்னவனருணெறியறன்மறைதழைப்ப
வத்திவெம்பரியம்பொனினிரதமாரனிக
மத்தியென்னவேமலிந்திடவரியணைமிசையி
னத்திநன்னகர்தன்பெயராலமைத்தமர்ந்தான் (௩௨௯)

சரியிலத்திமன்மரபினில்வந்தவன்றரணி
யரசர்தங்களையாயுதம்பயிற்றுவித்தமையாற்
குருவெனப்பெயரறைந்திடக்குருகுலமெனவே
யுரைசெயக்குருக்கேத்திரம்படைத்தினிதுவந்தான் (௩௩௦)

காமனேரெனக்களித்துலகாண்டுயர்கவிகை
சோமனென்னவேதுலங்கிடவயங்கியகுருவா
நாமமன்னவன்மரபினிலனுறச்சனித்தான்
வீமசேனமன்விறலுடைவிடையவனெனவே (௩௩௧)

அத்திமாநகரமுகுறவரசுசெய்வீமன்
புத்திரன்பிரதீபனும்பொறையுடையரசன்
சுத்தரெண்மறைச்சொல்வழுவாநெறித்துணையாய்ச்
சித்தசன்னெனச்சிங்கவாதனத்தமர்நாளின் (௩௩௨)

மனுவின்மைந்தனுமிக்குவாகுப்பெறுமன்னன்
றனியகற்றியமகாபிடற்கறநெறிதுலங்க
வினியசொல்லினுலிலங்குசெங்கோலினையோச்சி
வினையறுத்தயமேதமாயிரம்புரிந்தனனால் (௩௩௩)

துரகமேதமாயிரமுடித்ததிதன்சுதனோ
டரியினுதனத்தழகுறவமர்மகாபிடற்குக்
கரியையூருவோன்முதலினோர்களித்துவந்தேத்த
விரைசெய்மாமலர்த்தவனமரவையின்மேவிடவே (௩௩௪)

வேதன்வானதிமடந்தையைவியந்துறநோக்கித்
தீதினுற்றமாபாதகம்யாவையுந்தீர்க்குங்
கோதையாளிவடனக்குநேரிலையெனக்கூற
மாதுபங்கனூர்வேணியின்மருவுவாண்மகிழ்ந்தாள் (௩௩௫)

மலர்மணிம்மொழியறையமந்தாகினியெனைப்போ
னலனையுற்றவரிலையெனும்பாடவநண்ணக்
கலைமின்மங்கைதன்னுயகன்பணியினுற்கங்கை
முலையினிற்றுகிலொருவிடமோதினன்பவனன் (௩௩௬)

சரியில்வானதிமடந்தைதன்றனத்தினைவிரும்பி
யிரவியின்குலமகாபிடனிருகணுனோக்க
மரைமலர்த்தவனுணர்ந்துநீர்மண்மிசைச்சனித்தே
சுரதநூலினைவினைத்திடுவீரெனச்சொன்னான் (௩௩எ)

கந்தநன்மலர்க்கடவுளிவ்வுரையினைக்கழறச்
சிந்தைநொந்துமாபிடக்குமன்செய்தவஞ்சிதையச்
சுந்தரஞ்செறியும்பிரதீபன்றன்சுதனுய்ச்
சந்திரன்குலத்துதித்தனன்சந்தனுவாகி (௩௩அ)

தனயனுகியசந்தனுத்தரணியாண்டிடவே
வினையறும்பிரதீபன்மாவனத்திடைமேவி
யனிலமேயுணவாயருந்தவஞ்செயுநாளிற்
றுனியசற்றிடுஞ்சுரநதிதோகையாய்வந்தாள் (௩௩௯)

சீருறத்தவஞ்செய்பிரதீபன்றெக்கணத்தி
னூருவினுருப்பசியெனவொளிரவேயிருந்தன்
பாரியாமென்றன்பயோதரத்தணைதியென்றுரைப்ப
நாரிதன்னையேநோக்கிமன்னவிலனுற்றனனால் (௩௪0)

வாமவூருவினிருந்தவண்மனைவியாமென்றுந்
தோமிலாவலத்தொடையிடையிருந்தவள்சுதனுக்
காமெனச்சொலுமாரணமாதலினுனக்கு
மாமன்யானெனவுரைத்தலுமறைந்துபோயினளால் (௩௪௧)

தொடையின்வைகியசுந்தரிமறைந்துபோயிடவே
யடவியேகியவருள்செறியும்பிரதீபன்
கடகரித்திரள்குரகதங்கவினுறுமிரதம்
படிமிடைந்திடுமத்திமாபதியினிற்சேர்ந்தான் (௩௪௨)

பதியினெய்திநற்பண்புடைச்சந்தனுப்பெயராஞ்
சுதனைநோக்கியேசொல்லுவான்சுரர்நதிபடியின்
மதியெனத்திகழ்வனிதையாய்வருவணீயவளைக்
கதுமெனக்கலந்தணைத்தியென்றகன்றனன்கானின் (௩௪௩)

தந்தையிம்மொழியறைந்துகான்சாரச்சந்தனுமன்
சிந்தையின்மகிழ்வெய்திடச்சிறந்தமர்நாளின்
றந்திரத்துடன்சானவிநதியினிற்சார
விந்தையேலவேபகீரதிமேவிமுன்னின்ருள் (௩௪௪)

அன்னமென்னடையந்தரநுசுப்பிருகொங்கை
பொன்னவிர்கலசங்களொண்கிரிவந்தண்பூகங்
கன்னமுள்சிலைநுதல்விழிகணைகுமிணுசி
துன்னுமைமுகில்குழலெனக்கொண்டுதோன்றினளால் (௩௪௫)

வந்துதோன்றியமடந்தைதன்வடிவினைநோக்கிச்
சந்தனுப்பொருமதனசாயகத்தினுற்றளர்ந்தே
யிந்துவெள்கிடுவதனியேயெந்தனுருயிருஞ்
சிந்தையுந்திறைகொண்டநீதேவியாகென்ருன் (௩௪௬)

தீங்கறுங்குணச்சந்தனுச்செப்பவானதிமான்
பாங்கிலாதமாபாவம்யான்செய்கினும்பரிவே
யோங்கவென்னைநீயணைத்தியேலமர்வனஃதோவி
னீங்குவேனெனநிகழ்த்தினளஞ்சுகமெனவே (௩௪௭)

கோதையிம்மொழியறைந்திடக்குற்றமிலரசன்
பாதகங்களாங்கொலைத்தொழினீபலசெயினு
மேதமென்றுனையிகழ்கிலனிகழ்ந்திடிலேகென்
ருேதவானதியுளமகிழ்ந்தவனையுற்றணைந்தாள் (௩௪௮)

தத்தைநாணவேமொழிந்திடுஞ்சானவிதன்ெே
டத்திமாநகரடைந்துமன்னலர்மலரணையிற்
சித்தசன்னுடனிரதிமான்வெள்கிடச்சேர்ந்து
வித்தகத்துடன்சுரதநூற்கலவியைவிளைத்தான் (௩௪௯)

வேறு. சந்தனுமன்னன்றானிற்சானவிமடந்தைதோய்ந்து
மைந்தர்களேழுபேரைப்பெறப்பெறமண்ணிஞேடிச்
சிந்துவையதிரத்தாக்கிச்செல்லும்வானதியிற்போட
வெந்தசிந்தையனுயொன்றும்விளம்பிடாதிருந்தானன்றே (கூ௫0)

பின்னருங்கங்கைமாதுபெற்றிடுமைந்தன்றன்னைத்
தன்னிருகரத்திஞேந்திச்சானவிநதியிற்போடு
முன்னமன்றடுத்துமைந்தரொழுவரைக்கொன்றமூர்க்கை
யின்னமிச்சிசுவைக்கொல்லேலென்றுகண்சிவந்தானன்றே (கூ௫௧)

தனயரைக்கொன்றபாவியென்றுமன்சாற்றமங்கை
யெனைமனுவிகழ்ச்சிசெப்பேலெண்டிசைவசுக்களெல்லா
முனிவனுங்கறைந்தசாபமுடுகவென்னகட்டிற்றேன்றிப்
புனலினுண்மடிந்தவண்ணமங்கேளெனப்புகலலுற்றுள் (கூ௫௨)

சுகமுனிபிதாவின்றந்தைபிதாமகன்றெறுவின்பாலே
ருகருவோர்வருடநூறுயிரமெழிலிளமையுற்றுச்
செகதலத்தமர்வரென்பதுணர்ந்தெட்டாம்வசுத்தன்றேவி
பகரொணுப்பெருமையாவைத்தருகெனப்பதிக்குச்சொன்ஞள் (கூ௫௩)

வனிதையீதுரைப்பக்கேட்டுவசிட்டனுவினைத்தான்பற்றித்
தனைநிகரற்றவேழுவசுக்களுந்தானுமேக
முனிவனீதறிந்தேயட்டவசுக்களைமுனிந்துமண்மேற்
றுனியுறச்சனிப்பீரென்றுசபித்தனன்சுசிபோற்சீறி (கூ௫௪)

சீருறுவசிட்டன்கூறத்திகைத்தெட்டுவசுக்களஞ்சி
நேரிலாமுனியேயெம்மைக்காவெனநிறைநூல்வல்லோ
னேருறுமெழுவோர்நீயிர்பிறந்தன்றேயிறப்பீராக்கொள்
பூரியனுரியின்றிப்புவியிடையுழல்வனென்றுன் (கூ௫௫)

தவமுனிவெகுண்டுகூறுஞ்சாபத்தாலேழுபேரு
மவனியினுனக்குமக்களாகியென்வயிற்றிற்ஜேன்றிப்
புவியின்வானதியின்வீழ்க்கப்பொன்றினராவைப்பற்று
மிவனெடுங்காலமண்ணினிருப்பனென்றியம்புவாளால் (கூ௫௬)

மலரயன்சாபத்தாலேமன்னநின்றேவியானே
னலனுறுங்கங்கையாவேனுனென்சொன்மறுக்கையாலே
நிலனையாணிருபநின்னைநீங்குவன்சிறுவன்றன்னைப்
பொலனுறவளர்த்தேயீவனென்றுசேயோடும்போனுள் (கூ௫௭)

தனயனைக்கரத்திஞேந்திச்சானவிமறைதலோடுந்
துனியுறவெதும்பிநைந்துசுதனெடுந்தேவிதன்னை
நினையுமோய்ந்திருக்கும்வீழுநிருபனுகுலத்தையெய்த
வனைவருந்தழுவித்தேற்றவறிவுவந்திருந்தானம்மா (கூ௫௮)

ஈனமிலரசர்கோமானிடரினின்மூழ்கவேகிச்
சானவிதனயன்றன்னைச்சுரர்குருதன்னுல்வேத
மூனமில்புராணமெல்லாமோதுவித்தெழில்கொண்டோங்கு
மானையானன்பின்ஞேன்போலேயுறவளர்த்தாளன்றே (கூ௫௯)

அரசர்களெழுமூன்றுனதலைமுறையடங்கச்செற்ற
பரசுராமன்றன்னுலேபலபடைபயிற்றுவித்து
வரிசையார்குமரனுகவளர்த்துமந்தாகினிப்பெண்
கரைசெயாக்களிப்பிஞேடுங்கவினுறவருமந்நாளில் (கூ௬0)

சந்தனுத்தந்திருழத்தமணியத்தேரினேறி
யிந்திரனெழிலைப்போலவிலங்குவானதியைச்சேரச்
சுந்தரக்கங்கைமைந்தன்றூயவில்வளைத்தம்பாலே
சிந்துவையதிரத்தாக்குஞ்செலத்தினையடைத்தான்மன்னோ (௩௬௧)

தரையினிற்கடிதினோடுஞ்சானவிசனையம்பாலே
விரைவினிலடைத்துநின்றவீரன்வில்விநோதநோக்கி
யரசர்கோன்வியப்பினாலவ்வாடவர்திலகனாரென்
றுரைசெயும்முன்னமந்தாகினிவந்தேயோதலுற்றாள் (௩௬௨)

அத்திரமதனாலோடுமயத்தினையடைத்துநின்ற
வித்தகனிவன்யானீன்றவீரியனுன்றன்மைந்த
னத்தினபுரியையாளுமரசவுன்றேவியாகி
யித்தலத்தமர்ந்தேனென்பேர்கங்கையென்றியம்பினளால் (௩௬௩)

சந்தனுமன்னவுன்றன்றனயன்பேரறங்கண்மேவுஞ்
சிந்தையன்றூய்யதேவவிரதனென்றறியச்செப்பி
யந்தரநதிப்பெண்ணீருண்மறைதலுமரசர்கோன்றன்
மைந்தனோடேகியத்திவளநகர்வாழுநாளின் (௩௬௪)

உத்தரதேசந்தன்னிலரசரிலொப்பிலாதான்
சித்தசன்வெல்குங்காமப்பிரியன்செல்லூருவோனை
யொத்தியாகவத்தின்வெல்லுமொன்னலவசுரர்சாய
வத்திரவருடமெங்கும்பொழிந்தமர்வென்றானன்றே (௩௬௫)

அவுணரைவென்றகாமப்பிரியனையணைத்தியென்றே
யுவமையில்லவரிகூறவுருப்பசிமறுக்கச்சீறிப்
புவியின்வானதியின்மீனாய்ப்புகுந்துநீதிரிதியென்று
நவிலமாறுடையின்வந்தாள்வகுலியாய்நாரத்துற்றாள் (௩௬௬)

சுரர்பதிசாபத்தாலேதூயவானதியின்மீனா
யுருவசிதிரியுநாளினுபரிசவசுவாமன்ன
னிரதமீதேறிக்கானின்முனிவராச்சிரமத்தெய்திக்
கரிபரியிரதஞ்சூழக்கவினுறவிருக்குங்காலை (௩௬௭)

கிரிகையாந்தேவிதன்மேற்கிளர்ந்திடுங்காமத்தான்மன்
னுருகியவிதையனாகவொழுகும்வீரியஞ்சிந்தாம
லரியுறுமடலினேற்றுவரியையென்றேவிக்கியென்
றுரைசெயத்தத்தைவாயாற்கவ்வியங்கோடிற்றன்றே (௩௬௮)

வன்னிவானேகக்கண்டுவருகங்கமறைதலோடும்
பொன்னவிர்மடலைக்கங்கைப்புனலினிற்கிள்ளைபொட
வின்னனிலரிவையானவடிவொரீஇவெழுந்தமீன்றான்
மன்னன்வீரியஞ்சிந்தாமல்வாயுறவிழுங்கிற்றன்றே (௩௬௯)

உருப்பசிவடிவையோவியொளிருமீன்மடலைக்கவ்வி
விருப்பமுற்றேகுங்கிள்ளைவெருவியேவீழ்ப்பநீரின்
பரப்புவீரியங்குன்றாமற்பதறித்தான்விழுங்கலோடுங்
கருப்பமுற்றிடவேகங்கைக்கரையருகடைந்ததன்றே (௩௭௦)

கரையருகாகத்துள்ளிக்கதித்தெழும்வகுலிதன்னைப்
பரதர்தம்வலையிற்பற்றிப்பருப்பதம்போலத்தாங்கி
வரிசையிற்றமக்குக்கோனாய்மகிழுசச்சிரவாமுன்னர்த்
தரையினில்வைத்தலோடுஞ்சாலவும்வியந்தானன்றே (௩௭௧)

வரையெனக்கிடந்தமீனின்வயிற்றினைவகிர்தலோடு
மரிவையர்திலகியானசிசுவுடனரன்றன்சீற்றத்
தெரிதலாமரனன்போலவிலங்கியமகவுந்தோன்ற
விருகையாலெடுத்துநோக்கித்திமிலர்கோனின்புற்றானல் (௩எ௨)

சலசரம்வயிற்றிற்றோன்றுஞ்சரியிலாவாணும்பெண்ணும்
வலையர்கோன்மனைவிகையினளித்திடவளருநாளி
னிலவேயாள்வசுமனெய்திநிகரிலச்சேயைக்கொண்டே
நலனுறமறையோரோமம்நடத்தநற்சுதனாய்க்கொண்டான் (௩எ௩)

வசுமனன்மதலைதன்னைமச்சியவரசனாக
விசையவேமௌலிசூட்டியினிதுறத்திமிலர்கோமான்
வசையிலாச்சிறுவிதன்னைவளர்த்திடமடந்தையாக
விசையினீரோடுநாவாய்விடுத்தியென்றுரைத்தானன்றே (௩எ௪)

தந்தையாம்பரதர்கோமான்சாற்றவேநாவாய்தன்னை
யிந்துவினுதலிகோல்கொண்டுரைஞ்ஞூற்றுவரையேற்றி
நந்தொளிர்கரத்தினாலேநடத்தியேமீனநாளின்
வந்தனன்விபுதரேத்தும்பராசரமுனிவன்மாதோ (௩எ௫)

பராசரமுனிவனெய்திப்பாவைதன்னெழிலைநோக்கிச்
சரோருகமுகையோகொங்கைதரளமோதசனமல்கு
லராவினற்படமோசெவ்வாயாம்பலோவனங்கன்வாழ்வோ
விராசர்தம்பெண்ணோவென்முன்னின்றவளென்றுநைந்தான் (௩எ௬)

வலையர்கோன்மடந்தைகண்ணும்வலைதனைவளைத்துக்கொள்ளப்
புலனவளிடத்தினெய்தப்பொருமதன்றடக்கையிக்குச்
சிலையினாற்பொழியும்பூவின்சிலீமுகஞ்சிந்தைதன்னை
நலியவேமுனிவன்செய்வதறிகிலானவிலலுற்றான் (௩எஎ)

மங்கைநீயென்னைநாவாய்தன்னிலேயேற்றிமாறில்
கங்கைநீர்கடந்துபோகவிடுதியோகழறுங்கூலி
யங்கையாலளிப்பேனென்னவாயிரம்பேர்களேறு
திங்குநீமுனிவனேகனேகரிதென்றுசொன்னாள் (௩எஅ)

ஒருவனேயாயிரம்பேர்ப்பாரமுறுவன்யானென்றேயோத
விருபதிற்றன்பதாம்பேர்ப்பாரமாயிருப்பதெங்ஙன
னுரைசெய்நீயதுசெய்தாலுமோடுமம்பிக்குக்கூலி
தருதியோவென்றுமங்கைதடக்கையைக்கொட்டிநக்காள் (௩எக)

அங்கையோடங்கைதாக்கியரிவைவெண்முறுவல்செய்தே
யிங்குநீயிலம்பாடுற்றாய்வெறிகொடென்சொன்னாயென்ன
வங்கமீதிடையினேறிவருஞ்சதப்பத்துப்பேர்க்குந்
திங்களானனத்திகூலியிஃதெனச்சொரிந்தான்செம்பொன் (௩அ0)

செம்பொனைச்சொரிந்துநின்றுசிறந்திடுமுனிவன்றன்னை
யம்பியினேற்றலோடுமாயிரம்பேரிதென்னத்
தும்பவேவியந்துநின்றதுடியிடைகோல்கைக்கொண்டு
நம்பர்செஞ்சடையினண்ணுநதியின்மேனடத்தினாளால் (௩அக)

வனிதைகோல்கொண்டுநாவாய்நடத்தலுமறையையோது
முனிவன்மாலெய்தமாரன்முடுகியேகணைகவேக்
குனிசிலைநுதலினாளைக்கூடவேமனத்தினெண்ணிப்
பனியிருநாலுதிக்குமறைத்திடப்பண்ணினானல் (௩அ௨)

வேறு. விரகமுற்றிடுமுனிபனிவிளைக்கமிக்
இருவிசும்பவனிதிக்கெலாமறைப்பவவ்
வரிவைகைப்பிடித்தனுமவடன்மேனிசம்
பரசரநாறுமென்றிவைபகர்ந்தனள் (௩அ௩)

சரிரமீச்சலசரநாற்றமின்றியே
மருவுடன்மருவவாய்மலர்ந்தபோதயன்
சரியெனத்தனயனைத்தந்துகன்னியா
முருவொருவாதணைத்தருளென்றோதினள் (௩அ௪)

காசணிதனத்தினள்கழறலோடுமே
யோசனைகந்தியாயுயர்ந்துநான்மறை
பேசிடுபுதல்வனைப்பெற்றுங்கன்னியா
யாசகன்றிடுதியென்றவளைப்புல்லினன் (௩அ௫)

கரதலாமலகம்போன்ஞானங்காட்டுவான்
பரதர்கோன்மடந்தைதன்பயோதரந்தழீஇச்
சுரதநூல்விளைத்திடச்சுரர்துதிக்கவே
சரதநான்மறைதருந்தனயன்றோன்றினன் (௩அ௬)

ஆசறுமுனிவனையணைந்தநங்கைதான்
யோசனைகெந்தியாயுளமகிழ்ந்தவ
ணேசகல்புதல்வனையீன்றுங்கன்னியாய்
மாசகன்மணியெனவயங்கினளரோ (௩அ௭)

வேறு. முஞ்சிகோவணமுப்புரிநூலினல்விளங்க
மஞ்சனாகிவந்தடிபணிந்துனக்கிடர்வரினீ
நெஞ்சினினினையன்னையேநேர்வனென்றுரைத்து
விஞ்சுதந்தையோடேகினன்வியாதனும்பெயரோன் (௩அஅ)

தன்னையுற்றணைத்திடுதவன்றனயனோடேக
வின்னலின்றியேயிலங்கியயோசனைகந்தி
யன்னமாமெனவலம்பியமணியெனவழகார்
கன்னியாகியேயம்பியிற்கவினுறநின்றாள் (௩அ௯)

கங்கைமீதுநாவாயினைக்கடிதினிற்றிருப்பி
மங்கைமீடலும்வலையர்கோன்மகளொழினோக்கி
யெங்கண்மாதவத்தணங்கனையின்றுதொட்டென்றும்
வங்கநீவிடாயெனவவன்மனைவைகுநாளின் (௩௯0)

இந்துவின்குலத்திலங்கியசந்தனுவென்பான்
றந்திவென்னிடைந்தனிக்குடைநிழற்றிடத்தயங்கு
நந்துசேரும்வானதிக்கரைவருகவவ்வலைப்பெண்
கெந்தமெங்கணுங்கிளர்ந்துமன்னுசியின்மடுத்த (௩௯௧)

கெந்தமெவ்வழிகிளர்ந்ததென்றதனெறியறிந்தே
முந்திமன்னவன்றந்தியைமுடுக்கிவாளதியி
னுந்திநீரினுவாய்விடுமதின்மருங்குறவே
வந்துகண்டனன்மடந்தையைவலையர்வீதியிலே (௩௯௨)

கலனிலங்கியபுயத்தியைக்கண்டிடுமரச
னிலனில்வானிலிவ்வளைநேராரெனநினைந்தே
யலையுநெஞ்சமென்னுவியைச்சூறைகொளணங்கிவ்
வலையர்வீதியின்வருவதென்னோவெனவுளைந்தான் (௩௯௩)

கயலையுந்தியவிலோசனிகவினெலாங்கண்டு
மயன்மலிந்திடுமன்னவனிவளெவளெனவே
யயலினின்றவரம்பிநாயகன்மகளாம்வான்
புயலைநேர்கொடைப்புரவலவென்றிவைபுகன்றார் (௩௯௪)

**வேறு.** அவனியிற்பரதரிறைவனையழைத்துன்மகடனையருளெனக்கெனலு
முவமையிலணங்கையுதவிலுலவடன்மதலைக்கிவ்வுலகெலாங்கொடுத்து
மவுலியைக்கவித்தற்கிசைதியோவெனவேமறுத்தனன்வலைமகள்செய்த்குப்
புவியினைக்கொடுப்பதவமெனக்கருதிப்புரவலன்புரியிடையடைந்தான் (௩௯௫)

புரியிடையடைந்தபுரவலன்வலையன்புதல்விதன்வடிவினைநினைந்து
விரசமுற்றணைமேல்விழுந்தெழுந்தயர்ந்துமெலிகின்றவாறெலாமறிந்தே
சுரநதியருளுஞ்சுதன்றனையளித்தோன்றுனியறத்திமிலருரெய்திப்
பரதர்கோன்றனையென்பிதாவினுக்குன்றன்பாவையைத்தருதியென்றுரைத்தான்()

சுரநதிசுதனிவ்வாறுரைத்திடவேதொழுதிடுந்திமிலர்கோனுரைப்பான்
அரசனின்பிதாவுக்களிக்கிலேன்மகடான்பயந்திடுஞ்சிறுவனுக்கவனி
தருதியோவெனலுந்தந்தனனெனுஞ்சொற்சாற்றலும்பரதர்கோன்சமனி
னிருபநீகொடுத்தாயெனினுநின்மைந்தர்கொடுப்பரோவெனநிகழ்த்தினனால் ()

உரைசெயுமச்சவரசனைநோக்கியொப்பிலாச்சானவிசுதன்றான்
விரதமாதவர்போலூத்தரேதாவாய்மருவுவேனெனுமுறைவிளம்பச்
சுரரொடுமுனிவர்தோன்றியேயிவன்றான்வீடுமனெனப்பெயர்சொல்லித்
தருமலர்சொரிந்துபுகழ்ந்தனர்விசும்பிற்றேவதுந்துமிதழங்கிடவே (௩௯௮)

தேவர்கடுதிப்பமுனிவர்கண்மகிழச்சிறந்திடும்வானதிபுதல்வன்
பாவையர்மணம்யான்புணர்கிலேனெனவேபரதர்கோன்மகடனைக்கொணர்ந்து
காவலர்க்கரசனுடுபதிகுலத்துக்கவினுறுசந்தனுதனக்குத்
தேவியாயளித்தேனெனப்பகிரதிசேய்சிற்றவையுடனசர்சேர்ந்தான் (௩௯௯)

**வேறு.** ஊனமிலெழிலினுளாமோசனைகெந்திதன்னைச்
சானவியருளுமைந்தன்றந்துமுன்னிறுவலோடு
மீனமிலரசன்சேயையிச்சையாமரணமாகி
மானினைவதைத்தோன்பத்தனுகியேவாழியென்றான் (௪00)

மைந்தனுங்கங்கைசேயைவாழ்த்தினன்மறையையோது
மந்தணரோமஞ்செய்யவணங்கினுடன்னைவேட்டே
யிந்திரைசிறுவன்கேடிலிரதியும்வெள்கவேதான்
சந்தனுத்திமிலர்கோமான்றையலைத்தழுவினனால் (௪0௧)

**வேறு.** அத்திமாநகரரசன்யோசனைகெந்தியான
தத்தைதன்னிருதனமெனுந்தடாகத்தின்வாழ்ந்து
வித்தகத்துடன்மதனசாத்திரத்தினைவிளைப்பச்
சித்திராங்கதவிசித்திரவீரியர்செனித்தார் (௪0௨)

சரியிலாதசந்தனுமனையாடனைத்தழுவி
யிருவரைப்பயந்திடவவரெழிலுடன்வளர
வரிகொளாசனத்திருந்தவனுசையைநீத்து
விரியுங்கானிடைத்தவஞ்செயமேவினனன்றே (௪0௩)

மெய்த்தவஞ்செயச்சந்தனுப்பிரியவீடுமமன்
சித்திராங்கதன்சென்னியின்மௌலியைச்சேர்த்தே
யத்திமாநகராளுதிநீயெனவறைந்து
வித்தகப்பரசுராமன்பால்மேவும்வேலையிலே (௪0௪)

சித்திராங்கதப்பெயரினாற்சிறந்தகெந்தருவ
னத்திமாநகர்ச்சந்தனுத்தனயனையடைந்தே
யித்தலத்தினிலென்பெயர்விடுவிடாயென்னில்
வித்தகச்சமர்விளைத்திடுவாயெனவிளித்தான் (சு0௫)

வந்தகெந்தருவனிவைமொழிந்திடமறுவில்
சந்தனுத்தனயன்குருக்கேத்திரஞ்சார்ந்து
முந்திவெஞ்சமரிருவருமூன்றுநாட்பொரவே
மந்தரமெனச்சித்திராங்கதமனன்மடிந்தான் (சு0சு)

ஆருநேரிலாக்கெந்தருவனடர்ந்திடலுந்
தீரனாகியசித்திராங்கதன்சிதைந்திடவே
வீரனாகியவீடுமன்கேட்டுநெஞ்சுளைந்து
பாரினேரிலாவத்திமாபதியினைச்சேர்ந்தான் (சு0எ)

அத்திமாநகரடைந்துசிற்றன்னையைத்தேற்றி
வித்தகன்முடிவிசித்திரவீரியன்சிரத்தின்
வைத்துமன்னுலகாளுதியென்றுரைவழங்கச்
சித்தசன்னெனச்சிறந்தரசாளுநாட்டன்னின் (சு0அ)

இம்பரொப்பிலாக்காசிமன்பயந்திடவிலங்கு
மம்பையம்பிகையெதிரிலம்பாலிகையெனப்பே
ரும்பரும்விரும்பெழிலுடையோர்களைவேட்கச்
செம்பொனின்முடியரசர்களெண்ணிலார்சேர்ந்தார் (சு0கூ)

அங்கண்ஞாலத்திலரசர்களமருமண்டபத்திற்
கங்கைதன்சுதன்வந்திடக்கண்டவர்விருத்தர்
மங்கைமார்கண்மேன்மனம்வையேனென்றநீமருளுற்
றிங்குவந்ததென்னேயெனநகைத்திகழ்வுரைத்தார் (சுக0)

இகழ்வுரைத்திடுமன்னர்முன்னிலங்குகன்னியரை
நிகரில்சானவிசுதனெடுந்தேர்மிசையேற்றி
யிகல்செய்வீரர்களுளரெனிலெதிர்மின்களென்று
புகலமன்னவர்புணரிபோல்வளைத்தெழுந்தார்த்தார் (சுகக)

மன்னரெங்கணும்வளைப்பவீடுமன்றனுவளைத்தே
துன்னுமைமுகில்பொழிந்தெனவாசுகஞ்சொரிய
முன்னர்வந்தடர்வீரர்கண்முடிச்சிரந்துணிய
வென்னிட்டோடினர்வேலைபோற்குருதிகள்விழவே (சுகஉ)

படியின்மன்னவர்படைஞர்கண்மடிந்திடவெருவி
நொடியின்முன்னரின்வென்னிடுவவலுதற்சரிய
மிடல்கொள்வீடுமன்மின்னிடைக்கன்னியருடனீள்
கொடிகொடேரின்மேலத்தினபுரங்குறுகினனால் (சுகங)

வேறு. நத்தெனுங்கிரிபநாரியர்கடம்மொடு
மத்தினபுரிதனினம்பொற்றேர்மிசை
வித்தகவீடுமன்மேவவம்பையாந்
தத்தைகாங்கயனுடன்சாற்றுவாளரோ (சுகச)

சாலுவமனனெனைத்தாரமாகவே
ஞாலமேல்விரும்பினனவ்வேந்தன்மேன்
மாலெழுமனத்தினளென்னவானதி
பாலனீவிரும்புவோன்பாலினேகென்றான் (சுக௫)

உம்பர்கடுதிக்கும்வீடுமமன்னோதனு
மம்பைசாலுவனிடையடையவ்வகத்தன்
றம்பியாம்விசித்திரவீரியன்றனக்
கிம்பரினவட்கிளையோரைவேட்பித்தான் (௪௧௬)

அம்பையின்னேகவம்பிகையம்பாலிகை
பம்பைகள்சச்சரிபணிலம்பம்பவே
நம்பர்செஞ்சடையினினண்ணுவாள்சுதன்
றம்பியைமணந்தின்பந்தழைக்கவைகினான் (௪௧௭)

ஏருறுவிசித்திரவீரியற்கெழி
னாரியரிருவரும்பாரியாகநற்
பாரினிற்கவினுறப்பவமில்வீடுமன்
சேருறுபுராணங்கேட்டமர்தினந்தனின் (௪௧௮)

ஆலிலைவயிற்றினாளம்பையெய்தியே
சாலுவமன்னன்பாற்சார்ந்துமெய்க்குணச்
சீலநீயெனைமணஞ்செய்தியாலெனக்
கோலமார்நிருபர்கோனகைத்துக்கூறுவான் (௪௧௯)

குறைவிலாக்காங்கையன்கொண்டுபோயவன்
சிறையினிலிருத்தவேயிகழ்ச்சிசேருநீ
மறுவிலாவெனக்குயர்மனைவியாமென்கை
முறைமையோவேகெனமுடுக்கினானரோ (௪௨0)

சாலுவன்முடுக்கிடத்தையல்வீடுமன்
பாலடைந்தென்னைநீபற்றுஞ்செய்கையான்
ஞாலமேலரசர்கணத்திலாரெனைக்
கோலமார்சுத்தனேயென்றுகூறினாள் (௪௨௧)

கோதையீதுரைத்தலுங்குறைவில்வீடுமன்
மாதர்தம்மேன்மனம்வைக்கிலேனென
வோதியசபதத்தாலுன்னைவேட்பது
நீதியன்றேகெனநிகழ்த்தினானரோ (௪௨௨)

உவ்வமையில்வீடுமனுரைப்பவம்பையின்
னவனியினரசரையடைந்தெல்லீர்களும்
பவமறுகாங்கையனென்கைபற்றியே
நவையகன்மணஞ்செயநவிலுவீரென்றாள் (௪௨௩)

அரிவையீதுரைத்திடவவனியாள்கின்ற
புரவலர்கூடியேபுகன்றுவேண்டினும்
வரநதிசுதனுனைமணஞ்செயானெனிற்
றெரிவையேசமரினிற்செயிப்பமென்றனர் (௪௨௪)

வித்தகவரிவையோடிவைவிளம்பியே
சுத்தநற்பகீரதிதோன்றல்பாலடைந்
துத்தமவம்பையைமணஞ்செய்துன்னிலின்
வைத்திடுகெனக்கங்கைமைந்தன்கூறுவான் (௪௨௫)

எந்தைதான்பெட்புறுமெழில்கொண்மங்கையைத்
தந்திடுஞ்செயலினாற்றையலார்களைச்
சிந்தையாலுந்தொடேனென்றயான்செகத்
தந்தமாரம்பையையணைப்பனோவென்றான் (௪௨௬)

அம்பையையணைக்கிலாயென்னிலாகவ
மிம்பரிற்றாச்சுதியென்றுகூறியே
வெம்பியமன்னர்மேல்வெகுண்டுவீடுமன்
றம்பியவருடம்போற்கணைசொரிந்தனன் (௬௨௭)

வீடுமன்வரிசிலைவளைத்துவிட்டிடு
நீடியசாயகநிறைந்துமாகரி
கோடகம்வீரர்கண்மடியக்கொற்றவ
ரோடினரரிவைநெஞ்சுளைந்துபோயினாள் (௬௨௮)

சுத்தநற்பகிரதிதோன்றறன்னொடு
மொத்தியேபொருமன்னரோடவம்பையாந்
தத்தைபோய்ப்பரசுராமன்றன்றாள்பணிந்
துத்தமவென்னிடர்தீரென்றோதுவாள் (௬௨௯)

வீடுமனென்றனைப்பற்றிவிட்டிட
வாடவரிகழ்ந்துநச்சிலர்களாதலின்
காடுறுமாதவவென்னைக்காங்கையன்
கூடுமாறருளெனக்கூறினாளரோ (௬௩௦)

அரசர்கள்வென்னிடவலையுமம்பையின்
கரைசெயாவிடருடன்கழறக்கேட்டருள்
பரசுராமன்னதற்கிசைந்துபாரின்மேற்
புரிசையாரத்தினபுரியின்வந்தனன் (௬௩௧)

வந்தருள்குருவினைவணங்கிவீடும
னந்தமாராதனத்திருத்தியர்க்கியஞ்
சிந்தையின்மகிழ்வுறவளித்துச்சீரிலே
னெந்தமாதவஞ்செயவெய்தினாயென்றான் (௬௩௨)

தேசுலாவுறுமனனிவைகள்செப்பலு
மாசிலாவருந்தவனாசிகூறியே
வேசிலாவீடுமவென்சொற்பேணியிம்
மாசிலாவம்பையைமணஞ்செய்வாயென்றான் (௬௩௩)

குருவிவைமொழிந்திடக்கோதிறாதைபாற்
சரியிலோசனைகெந்திதன்னைச்சேர்க்கையா
லரிவையர்தங்களையணைக்கிலேனென்றே
யுரைசெய்தயானிவணகிலுறேனென்றான் (௬௩௪)

**வேறு.** கங்கைமாதருளுங்காங்கையனிவைகள்கழறிடப்பரசுராமன்றான்
மங்கையம்பையைநீயென்சொலுமறுத்துமணஞ்செயாயென்னின்மன்னவனே
பொங்குவெஞ்சமரம்மென்னுடன்பொருதியென்றுவாய்புகையெழவுரைப்பத்
திங்களையணிந்தசிவனெனும்விறல்சேர்வீடுமன்செப்பலுற்றனனால் (௬௩௫)

மறனுறுமவநீதியைமுயலிதுவேமார்க்கமென்றுரைத்திடுமூர்க்க
வறிவிலாவாசானுடனமர்பொரினுமறனெனவீடுமன்றேர்மேற்
பிறையணிசடையிற்சுரர்நதியிலகும்பினாகிபோற்சீறியேநிற்ப
மறலிபோற்றவத்தோன்வையமேல்வைகிவருடம்போல்வாளிகள்பொழிந்தான் ()

அரியெனமுனிந்தேநெடுந்தவன்விடுத்தவாசுகமெண்டிசைமறைப்பச்
சரியில்வானதிதன்றனயன்வாளிகளாலறுத்துயர்தழற்கணைவிடுப்பப்
பரசுராமன்றான்பகலவன்படையான்மாற்றிடப்படியிலிவ்வண்ண
மிருவருமிருபத்தொருதினஞ்சமர்செய்தெதிர்த்தனரியமனஞ்சிடவே (௬௩௭)

இருவிசும்பெரியவிம்பரினுயிர்களரற்றிடவெண்டிசைசுமந்த
கரியினம்வெருவக்கடல்களுஞ்சுவறக்கணைபொழிந்தெதிர்ந்திடுங்காலை
வரிசிலைவளைத்தேவீடுமன்விடுத்தவாளியால்வலனுமாளப்
பரியுறுமிரதந்துணியவில்லிறலும்பாறினன்பரசுராமன்றான் (௪௩௮)

கோடகமுறுதேர்கொடிசிலையறலுங்குருதிமெய்சொரிந்திடநிலத்தி
னோடியேதளரும்பரசுராமன்பின்னோக்கியேயுருவிலிகணையைச்
சாடியேமறங்கடளரவேயறங்கள்வளரவேசத்தியநிறுத்தும்
வீடுமனுக்குநிகரிலையெனவேவிளம்பியாச்சிரமத்தையடைந்தான் (௪௩௯)

உம்பர்கள்வெருவவுருத்திரன்போலவுருத்தெதிர்பரசுராமன்று
னிம்பரினிவுளியிரதம்வெஞ்சிலையோடிற்றிடப்பாறவங்கிடருற்
றம்பைநெஞ்சழன்றேயருந்தவம்புரியவரனுமையாளுடனெய்த
நம்பநின்சடைவாழ்நதிசுதன்றனைநான்வதைசெயும்வரநல்கென்றாள் (௪௪0)

மருடருமனத்தண்மொழியவைம்முகத்தோன்மடந்தைநீயெழில்கொள்பாஞ்சால
னருடருமகளாய்ப்பின்னரினியக்கனடவியினளிப்பமைந்தனுமாய்க்
கருடவாகனன்றன்வினோதவாசகத்தின்காங்கேயனுயிர்விடக்கணையாம்
வருடநீபொழிந்துசமரொழிந்திடுநாளிரவினின்மாளுதியென்றான் (௪௪௧)

கந்தனார்தந்தையறைந்திடமடந்தையரசரிற்கவின்கொள்பாஞ்சாலன்
றந்திடுமகளாய்ச்சனித்தபின்வனத்திற்றனயனும்படிதழல்வீழ்ந்தாள்
அந்தரநதிசேய்சரத்தினாற்பரசுராமனையமரிடைத்துரப்பச்
சிந்தையின்மகிழ்வோடவனியாண்டிளவல்சிறந்தினிதிருக்குநாட்டன்னின் (௪௪௨)

**வேறு.**

அரிவையர்திலகியம்பிகையம்பாலிகை
யிருதனமிசையணைந்தின்பமெய்திய
நிருபர்கோன்சயப்பிணிநீண்டுமாண்டிட
வெரிகனல்வளர்த்திமுன்னோனிரங்கினான் (௪௪௩)

சிற்றவைதன்னொடுமிரங்கித்தேறிய
சொற்றவன்றனயனைநோக்கிக்கூறுவா
ளிற்றவிக்குருகுலமிறுமனீமண
முற்றெழிற்சுதர்களையுதவுவாயென்றாள் (௪௪௪)

அனுசர்மாதாவிவையறையவீடுமன்
வனிதையர்தங்களைமணஞ்செய்யேனென
வுனைமகிழ்தாதைமுனுரைத்தயானினித்
துணியுறவரிவையர்தோளுறேனென்றான் (௪௪௫)

வினையறுவீடுமன்விளம்பச்சந்தனு
மனைவிநொந்திரங்கியேமறைகடந்திடுந்
தனயனைநினைத்தலுஞ்சமனினான்முக
னெனவனைமுன்னரின்வியாசனெய்தினான் (௪௪௬)

வந்திடும்வியாசனைமகிழ்ந்துநோக்கிநற்
சந்தனுமனைவியென்றனயர்மாண்டனர்
சுந்தரவீடுமன்றுறவுசேர்ந்தனன்
இந்துவின்குலமறுதருளென்றேசொல்வாள் (௪௪௭)

பாவமில்சந்தனுப்பயந்தமைந்தன்றன்
னாவியேயனையதேவியரையன்புடன்
றேவரநியாயமாய்ச்சேர்ந்துமைந்தரை
நீயளித்தருள்கெனநிகழ்த்தினாளரோ (௪௪௮)

யோசனைகந்தியாளுரைத்தலோடுமே
யேசின்மாதவனதற்கிசைந்தநெஞ்சனாய்
மாசறுசுருபமேமலிவிருத்தனு
யாசிலம்பிகைதனையணைத்தங்கேகினான் (சசக)

சந்தனுமனைவிமுன்சார்ந்துமாமுனி
யந்தமிலென்னுருக்கண்டவம்பிகை
முந்தியபயத்தின்வேற்கண்கண்மூடலா
லந்தனுஞ்சிறுவனைப்பெறுவளாமென்றான் (சரு0)

அந்தனைப்பெறுவளென்றறிஞன்கூறலுஞ்
சிந்தையினொந்துசந்தனுவின்றேவிதா
னந்தொளிர்களத்தளம்பாலிகைக்குநன்
மைந்தன்வந்திடவருண்மாதவாவென்றாள் (சருக)

அன்னைநொந்திம்மொழியறையமாமுனி
மன்னுமம்பாலிகைநோக்கிமாபயந்
துன்னமெய்வெளுத்திடுமவளைத்தோய்ந்துபின்
றன்னையீன்றவண்முனஞ்சார்ந்துசொல்லுவான் (சருஉ)

என்னுருக்கொடுமையைநோக்கியேவெழின்
மின்னிடைவெருவிமெய்வெளுத்தசெய்கையாற்
றுன்னியபாண்டுவாஞ்சுதனையீனுவா
ளென்னயோசனைகெந்தியியம்புவாளரோ (சருங)

அந்தனும்பாண்டுவுமானசேயரைத்
தந்திடிற்பயனிலைச்சமனிலாவெழின்
மைந்தனையம்பிகையுதவமன்னியென்
சிந்தையுளுறுமிடர்தீர்த்தியென்றனள் (சருச)

மாதவனன்னைசொன்மருமலேகவே
யேதமிலம்பிகையேவுலாலவ
டாதிவந்தன்புடன்றழுவிச்காமனூ
லோதியேயவன்றனையுற்றணைத்தனள் (சருரு)

நீதியொன்றியமுனியவளைநீங்கியே
நீதகலன்னைமுன்செப்புவானெனை
யேதமிலம்பிகையிகழ்ந்தங்கேவிய
தாதிநற்குமரனைத்தருவளென்றனன் (சருசு)

தாதிநற்குமரனைத்தருவளென்றுயர்
வேதியனச்சிரமத்தின்மேவவே
நீதிமன்னம்பிகைவயிற்றினீங்கியே
பூதலத்தந்தனும்புதல்வன்றோன்றினான் (சருஎ)

நீதிலம்பாலிகையென்னுந்தேன்மொழி
சூதகல்பாண்டுவாஞ்சுதனைப்பெற்றன
ளேதமிலம்பிகையில்வினைவல்செய்
தாதிபெற்றிடுமகன்சனனஞ்சாற்றுவாம் (சருஅ)

**வேறு.** தியராஞ்சோரர்சிறந்ததோரரசன்கோயிலிற்றனமெலாந்திருடி
வாயுவின்விசைபோற்பாறிடவறிந்துவளநகர்க்காவலர்தொடரத்
தூயவானவர்கடுதித்திடயோகத்தொழில்செய்மாண்டவ்வியமுனிவ
னேயமோடமராச்சிரமத்தினெய்தியேநிதியைவைத்தோடியேமறைந்தார் (சருக)

சோரர்போமடியின்சுவட்டினையறிந்தொடருவோர்கானிடையேகி
யாருநேரிலாமாண்டவ்வியனிருக்குமாச்சிரமத்தினினிதியை
வீரரானவர்களேக்கியின்டெய்துங்கள்வரெங்குளரெனவிளம்பச்
சிரமுனிவன்மௌனமாயிருப்பத்திருடனுமிவனெனப்பிணித்தார் (சகூ0)

சதுர்மறைமுனியென்றறிகிலாவயவர்களங்கொளுந்திருடனென்றிவரிப்
பதியினிடைந்தேயரசன்முன்கள்வப்பவன்றனைக்கொணர்ந்தனமெனலும்
விதிவழிதனிலாய்ந்துணர்கிலாநிருபன்வெருண்டுயர்வசியின்வையெனவே
கதுமெனத்தவனைநகரிகாவலர்கள்கழுவினில்வைத்தனர்கனன்றே (சகூச)

வசியுடலுருவவருந்துமாதவன்றனுயிர்விடாதிருந்தவாறறிந்த
வசையிலாமுனிவரனைவருமெய்தியரசநின்புகழ்க்கழிவாகச்
சசிதிகழ்சடையனிகர்தவன்றனைத்தரணியிற்கழுவினில்வைத்தாய்
நிசியுறுநிரையத்தழுந்துவாயெனலுநிருபர்கோன்வெருவியேயெழுந்தான் ()

மறையறிமுனிவர்மறுவின்மாதவனைவசியிடைவைத்தனையெனுஞ்சொல்
லறையமன்னடுங்கிக்கழுமிசையுயர்ந்தவருந்தவன்றனைத்தொழுதிரங்கிப்
பிறையணிசடையனிகர்த்திடுதவவென்பிழைபொறுத்தருளுதியெனலுங்
குறைவில்கொற்றவனீவெருவலையெனக்குவிதிச்செயலென்றுகூறினனால் (சகூக)

விதிவலியெனக்குவெருவலையரசவென்றுதன்விலாப்பக்கத்துருவும்
புதியநல்வசியினுதியிருந்திடவேபுவியிலார்கழுவினைநறுக்கிச்
சதுமறைமுனிபூங்கூடைதன்னுடலிற்றயங்கியநீள்கொம்புதாங்கக்
கதுமெனத்துணைக்கைமலர்கொய்துநிறைத்துக்கடவுளைத்தினமரிச்சித்தான் ()

மறுவிலாவுடலினுறுவசியதனாலானமாண்டவ்வியனென்று
நெறியுறுதவர்கணிகழ்த்திடுமுனிவனிகரிலாமறலிபாலேகி
யெறுழ்வலிப்புயத்தோயான்கழுமீதின்விழுந்திடவிளைத்ததீவினை
யறையெனவுரைப்பவவன்றனைநோக்கியந்தகன்மொழியலுற்றனனால் (சகூரு)

அறிஞமுற்பிறப்பினறிவிலாதஞ்சுபருவத்தினெறும்புகடன்னைச்
சிறியகோலீர்க்குநுதியினிற்கோர்த்தசெய்கையால்வந்ததென்றுரைப்ப
நெறியுறுமுனிவன்பதினறுவருடநிறைந்திடுங்காறுமண்மிசையிற்
சிறுவர்களிழைத்ததீவினையவர்தந்தந்தைதாய்க்குறுமெனச்செப்பும் (சகூகூ)

பூதலமிசையினறிவிலாச்சிறுவனுகியானிழைத்தபுன்மையதாந்
தீதினையென்னையளித்தவர்க்குறுத்தாதென்றன்மேலிழைத்ததீமையினுற்
றுதிதன்சுதனுய்ச்சனித்திடுகெனவத்தவன்சபித்திடத்தண்டதரன்பா
ரேதமில்குணத்தம்பிகைமனைச்சேடிவயற்றின்வந்திலங்கினனன்றே (சகூஎ)

அம்பிகைசுதனைத்திருதராட்டிரனென்றழைத்தவட்கிளையவண்மகனை
யிம்பரிற்சிறந்தபாண்டுவென்றியம்பியெழிலுறுதாதியாயிலங்கும்
வம்பவிழ்குழலிமதலையைவிதுரனென்றுவீடுமன்குலமைந்தர்க்
கும்பர்கண்மகிழச்சாதகஞ்சவுளமுபநயனமுநடத்தினனால் (சகூஅ)

திருதராட்டிரனைமுடியினைக்கவித்துச்சிறந்திடும்பாண்டுவாமனனைத்
தரணியைக்காக்கவிளவரசாக்கிச்சமனிலாவிதுரன்மந்திரியா
யுரைசெயமறைகளறனெலாந்தழைப்பவுலகினையாளுவித்தனனற்
பரவைசூழ்புவியின்விசும்பினின்யாருநிகரிலாப்பகீரதிசுதனே (சகூகூ)

சதுமறைவளரமறையவர்மகிழச்சமனிலம்பாலிகைபயந்த
சுதன்மதியெனவேநிகரிலாக்கவிகைதுலங்கிடவிசும்புறுவிபுதர்
பதியெனவயங்கிவிதுரன்மந்திரியாயிலங்கிநற்படியினையாள
வெதிரில்காந்தாரன்குமரியைவேட்டானெழிலுறுமம்பிகைபுதல்வன் (சஎ0)

வேறு. யாதவவீரசூரன்கன்னிகைபிரதைபென்று
மாதினைக்குந்திபோசன்மகளெனவளர்த்துமண்ணிற்
றீதறக்குந்திதேவியென்றுபேர்சிறந்தாளன்றே
மாதவனவடான்செய்தசெயலினைமறைத்துச்சொல்வான் (சஎக)

வேறு. மாதவரெண்டுருவாசன்வந்துமின்
றீதறப்பஞ்சமந்தேவர்மந்திர
மோதிவித்திடவொன்றைக்குந்தியுன்னவா
ஞதவனெய்தியேயவளைச்சேர்ந்ததும் (சஎஉ)

ஆதவன்குந்தியையணைக்கக்கன்னனென்
ரேறுதிடுஞ்சிறுவன்வந்ததையமாகவே
மாதிழிவாமெனச்சுதனைவானதி
மீதொருபேழையினமைத்துவிட்டது (சஎங)

அலரியோன்மைந்தனையளித்துக்கன்னியாய்ப்
பொலனுறவிருத்தியென்றகன்றுபோயதும்
நலனுறுமுனிகவிலாதுகுந்தியை
யிலகியபாண்டுவேட்டனனென்றோதுவான் (சஎச)

பின்னரும்பாண்டுமன்பெருமையோங்கிய
மன்னரெண்மத்திரன்பயந்தமத்திரை
யென்னுநாமப்பெணையெதிரிலந்தணர்
சொன்னநான்மறைநெறிதுலங்கவேட்டனன் (சஎரு)

விழுமியதேவகமனன்விரும்பவே
யழகுறுமிரதிபோலவனைப்புல்லிய
விழிகுலப்பாசவியீன்றமாதுமான்
விழியிழுடன்னையேவிதுரன்வேட்டனன் (சஎசு)

வேறு. தரணியிற்செங்கோலோச்சியபாண்டுசமனிலாக்குந்திமத்திரையோ
டிரணியவிரதிமிசையினிரேறியிபநிரையிவுளிகள்சூழ
வருணமார்கலன்கள்கதிரவனவிரைவழங்கமாவனத்தினிற்சென்றே
யருணமெண்குழுவையரிசரிமயிடமாவிதமெல்லவும்வதைத்தான் (சஎஎ)

விரகமுற்றடைந்தசினனவன்மனைவிதன்னுடன்சுரதநூல்விரும்பி
வரைசெறிவனத்தின்மான்கலையாகவணைந்திடமன்னர்கோனறியா
தொருகணைசிலையிற்றொடுத்துறவிடலுமுடலிடைப்பட்டுமண்வீழ்ந்த
விரலையோடிழையாமுருவினையொருவியிருவருமுனிந்திவையறைவார் (சஎஅ)

சாகரஞ்சூழ்ந்ததரணியையாளுந்தலைவநீதடஞ்செறிவனத்தி
னேகிமாமிருகவினங்களைவதைப்பதரசர்கணீதியென்றாலும்
போகவேளையிலின்றெங்களைச்செற்றபுன்மையாற்போந்தரிவையரை
மோகம்விஞ்சிடவேயணைந்திடின்முடிவாயென்றிவைமொழிந்துயிர்துறந்தார் ()

சதுமறைமுனிவன்மனைவியோடரசைச்சாபமிட்டாருயிர்துறப்ப
விதிசெயலெவர்க்கும்வெலற்சரிதென்றுமெலிந்திடும்பாண்டுமனனத்திப்
பதியினிலிரதம்பரிகரியுடனேற்படைஞரையேவியேநிறைபு
மதிநிகர்வதனக்குந்திமத்திரையோடியருமாதவஞ்செயப்போனன் (சஅ0)

இந்துவின்குலத்துப்பாண்டுமன்சென்றேயிந்திரத்துய்ம்மனசரசிற்
செந்திருவனையாரிருவர்களுடனுஞ்சேர்ந்தொருதினமிருந்தப்பான்
மந்தரவரைநேரஞ்சனகூடமலையினின்வைகிச்சின்னளிற்
சந்திரபதத்தையளவிடும்பிறங்கற்சதக்கொடுமுடியினைச்சார்ந்தான் (சஅக)

சிந்தையிற்கதமின்முனிவர்கள்வரலுந்தேவியருடன்மனனிறைஞ்சி
யெந்தமால்வரையினிருந்துநீர்வருதிரெங்ஙனமேகுதிரெனவே
கந்தமாமலரோனுலகினைக்காணக்காவலபோவமென்றறைய
வந்தமாமலையின்மனைவியருடனேயரசர்கோனயர்ந்திடுநாளின் (௪௱௨)

சதுமறைமுனிவர்சரோருகன்பதியைச்சார்வமென்றுரைத்திடப்பாண்டு
மதிவளர்சடையோனிகருமாதவத்தீர்யாங்களும்வருதுமென்றுரைப்பக்
கதமிலாத்தவத்தோர்புரவலசிறுவரிலாதவர்கதிபுகவரிதா
மதனினற்புதல்வர்தம்மையுண்டாக்கிப்பிதிர்க்கடனகற்றிவாவென்றார் (௪௱௩)

மைந்தர்களிலாதார்கதிபுகவரிதென்றறைந்துமாதவர்கடாமேக
நொந்தசிந்தையனுய்க்குந்தியைநோக்கிநுவலுவானென்னையென்மாதாத்
தந்திடுஞ்செயல்போனீயுமோர்தவனையணைத்தொருதனயனைப்பெறுகென்
றிந்துவின்குலத்தோன்மொழிந்திடமனைவியிசைகிலாதிவைவிளம்பினளால் ()

மன்னயான்கன்னியாயமர்நாளின்மாதவரெண்டுருவாசற்
கன்னம்யானுகர்வித்திடவவன்மகிழ்ந்தேயருளியமந்திரந்தன்னு
ளுன்னியதேவரெய்திநன்மகவையுதவுவாராதலினரச
வென்னையுன்சிந்தைக்குவந்ததேவதையையுள்கெனவியம்புசென்றுரைத்தாள் ()

மைந்தனைத்தரவுன்மனத்திலுக்குவந்ததேவதையுரையெனமன்ன
னந்தமாறறனையழைத்தியென்றுரைப்பவருந்தவனருளுமந்திரத்தைக்
குந்திசிந்தையினினினைக்கவேதருமதேவதைகுறுகியந்தணைப்பக்
கந்தனைநிகராயுதிட்டிரன்றன்னைப்பயந்தனள்பாண்டுமன்களிப்ப (௪௱௬)

குந்திநன்மகவைப்பயந்திடவிதனைக்கொற்றவனொருதவத்தினனைத்
தந்தையாங்கங்கைசுதன்முனேனுசன்றுயர்கடாதைதனன்னை
சிந்தைகள்களிப்பவறையெனமுனிவன்சிறந்தவத்திருபுரிசேர்ந்தே
யந்தன்முன்மொழியவனைவருமேமவளக்கருற்றமிழ்ந்திடும்வேலை (௪௱௭)

அந்தமன்விரும்பியணைத்திடக்கருப்பமாலிலையுதரத்திற்றங்கிச்
சிந்தையின்மகிழ்வோடிலங்குகாந்தாரிசிறந்திடுங்குந்திமாவனத்தின்
மைந்தனைப்பயந்தாளென்றவாசகத்தால்வயிற்றினிற்கற்கொடுமோத
நொந்திடுங்கருப்பார்மிசையினில்விழலுநோக்கினார்வீடுமற்குரைத்தார் (௪௱௮)

வீடுமன்றிருதராட்டிரன்விதுரன்முதலினோர்விதிவலிதென்றே
வாடியென்செய்வமென்னுமுன்வியாசன்வந்துபார்மிசையுறவிழுந்த
பீடுடைக்கருவைநூறுகும்பத்திற்பிரிவுசெய்தடைத்ததற்பின்னர்ச்
சேடமேபுவியிற்சிதறிலசினையைத்திரட்டியோர்கலசத்தின்வைத்தான் (௪௱௯)

மாதவன்சதகும்பத்தினிலடைக்கவளர்கருவொருதினங்கழிய
வேதமில்சிறுவனுகவிவ்வழியினீரைம்பதாகியதினத்திற்
பூதலமிசையின்புதல்வர்நூற்றுவர்கள்வயங்கநற்பொற்கலசத்தின்
கோதிலாவனிதையொருத்திதோன்றிடவேகுருட்டுமன்மொழிந்தனனன்றே ()

அந்தமன்முந்துங்குமரனுக்கிசையச்சுயோதனனெனப்பெயரறைந்து
மைந்தர்தொண்ணூற்றேடொன்பதின்மருக்குமவர்க்குறுநாமத்தைவகுத்து
விந்தையைநிகர்க்குமணங்களுடன்னைத்துச்சனையாமெனவிதித்துச்
சிந்தையின்மகிழ்வோடிருக்கநற்றவன்போய்ப்பாண்டுவுக்கிவைகள்செப்பினனால்

தீயகாந்தாரிவிளைத்திடுஞ்செயலைத்திருந்தியமுனிசொலக்கேட்டுத்
தூயநற்பாண்டுமெலிந்துதிட்டிரனுக்கனுசனுமுரத்தினேன்றென்ற
நேயமாய்வயங்குங்குந்தியைப்பவனன்றனையழையென்னமின்னினைக்க
வாயுவந்தவளையணைத்திடச்சனித்தான்வலியுடைவீமனுமதலை (௪௧௨)

சரியிலாப்பாண்டுசமனிலாவுபயதனயர்கள்வளர்ந்திடமகிழ்வா
லரிவையர்மதிக்குக்குந்தியைநோக்கியழகுறுசிறுவனைப்பெறுவான்
சுரர்பதிதனையேயழைத்தியென்றுரைப்பத்தூயவனினைக்குமுன்வலாரி
தரைமிசையடைந்தேயவடனையணைக்கத்தனஞ்சயன்சனித்தனனன்றே (சுகூங)

உத்தமப்பாண்டுவிளம்பிடக்குந்தியுயர்தவன்விளம்புமந்திரத்தை
மத்திரைக்குரைப்பமன்னன்வானவர்கள்வயித்தியர்தமையழையென்னக்
குத்திரமிலாதாளந்தமந்திரத்தாலுள்கவவ்விருவருங்குறுகி
நந்நுறுகரத்தினவடனையணைக்கநகுலசாதேவர்கள்சனித்தார் (சுகூச)

இதகல்பாண்டுசிறுவரைவரையுஞ்சிறந்திடுமந்தணர்மொழியாற்
சாதகஞ்சவுளமுடித்துபநயனஞ்செய்துசாத்திரமறையெல்லா
மோதுவித்துயருங்குந்திமத்திரையோடுவந்தர்தப்பிறங்கலுற்றமரு
மாதவர்மொழியும்புராணமெய்ப்பொருளைமகிழ்வுடன்கேட்டுணர்நாளின் (சுகூரு)

வேறு. தருமனுட்சனிவாரத்திற்சார்ந்திடக்குந்திதேவி
யருமறையவர்க்குத்தானஞ்செய்யவோராற்றின்கூலத்
துருவுடைச்சிறுவரோடுமுறைந்திடப்பாண்டுவேந்தன்
மருவமர்குழலியானமத்திரைதனிப்பக்கண்டான் (சுகூசா)

அத்திரவிழியளல்லினளகத்தாளாம்பல்வாயா
ளித்திலநகையணத்தின்கழுத்தினணிகரிலாத
வித்துருமத்தின்மெய்யண்மின்னெனுமிடையளாய
மத்திரைகவினைநோக்கிமன்னவன்விரகமுற்றான் (சுகூஎ)

விரகமுற்றெழுந்தமன்னனவிரைகொண்மத்திரையைப்பற்றிச்
சுரதநூல்விளைச்சவெண்ணித்தொடரவேநுனிகொடஞ்சி
யரிவைகோவிணைநீர்சோரவன்னம்போற்பாறியாண்டோர்
வரையருகாகப்பூங்காவனத்தினுண்மறைந்தாளன்றே (சுகூஅ)

ஓவியமுயிர்பெற்றேருங்குந்தன்மைபோலொளிகொணங்கை
யாவியும்பதைப்பப்பாறிமீறைதலுமரசர்கோமான்
றேவியைத்தொடர்ந்துமாலின்சிகியுறமாள்வதெண்ணான்
காவினின்மறைந்துநின்றகாரிகைதனைக்கண்டான் (சுகூகூ)

பங்கயத்தாளினூலின்மருங்கினிற்பகட்டின்கோடாங்
கொங்கையிற்குமுதவாயிற்குனிசிலைப்புருவந்தன்னிற்
செங்கயற்கண்ணிமாலின்சிகியுறச்செய்வதோரான்
மங்கையைப்பற்றினன்மன்மறலியுங்குறுகமாதோ (ருOO)

இக்கிரதச்சொன்மங்கையிசைகிலாதுடன்படாளை
நக்கினமாகவாடைபறித்துநற்குழலைப்பற்றிக்
குச்கிடம்பேட்டைவன்பாற்புணர்வதோர்கொள்கைபோன்று
விக்கிரமத்தின்மன்னனையைத்துயிர்விட்டானிப்பால் (ருOக)

தனயர்கள்சூழக்குந்திதானங்கள்செய்துவந்து
மனைதனின்மருணனோடுமத்திரைதன்னைக்காணு
டினியொடுசுதர்களோடுஞ்சோலையினெய்தித்தங்கை
தனியிருந்தரற்றப்பாண்டுமாண்டிடுந்தன்மைகண்டாள் (ருOஉ)

மருணன்மாண்டிடவேகுந்திவயிற்றினிலெற்றிவீழ
மிகவுமெய்ந்நடுங்கிமைந்தரைவருமரற்றியேம்பச்
சுகனிகர்முனிவரெய்தித்தூயவர்தம்மைத்தேற்றி
யிகழ்விலாப்பாண்டுமன்னையீமத்தினிடுவித்தாரால் (ருOங)

சதுமறைமொழியின்மனனைத்தழலிடைவளர்ந்தலோடுஞ்
சுதைநிகர்மொழியளாயமத்திரைசுதர்கடம்மை
மதிநிகர்வதனியானகுந்திகைக்கொடுத்துமான்றன்
பதியுடனனலின்வீழ்ந்தாள்பார்த்தவரிரங்கியேங்க (௫0௪)

அனலிடையெரிந்ததந்தைதாயினுக்கறன்றன்மைந்தன்
வினையறுமறையோர்வேதம்விளம்பிடத்திலநீர்விட்டே
துனியுறுகுந்திபாதந்தொழுதபின்னோர்கள்சூழ
வனைதவரெல்லாம்போதவத்தினபுரியிற்சேர்ந்தான் (௫0௫)

வேறு. அன்னையோடைவருமெய்தியந்தமன்
முன்னரின்வணங்கலுமுனிவர்வேந்தநின்
பின்னவன்மத்திரன்பெண்ணினுடன்
மன்னியேயணைந்துமாண்டனனென்றோதினார் (௫0௬)

பின்னவனிறந்தனனென்றபேச்சினுன்
முன்னவனிரங்கமூதாதையானவன்
றன்னிருவிழியினீர்தரையிலோடவே
வன்னியின்மெழுகெனவாடினாரரோ (௫0௭)

விதுரன்முன்னவன்மடிந்தமைவிளம்பிடச்
சதுமெனப்படிமிசைவிழுந்துகண்ணினீர்
நதியெனப்பெறுகவேநலன்கொள்குந்திதன்
சுதர்களைத்தழுவியேதுன்பமுற்றனன் (௫0௮)

வேறு. குந்தியுடனவள்சுதரைக்கண்டுநெஞ்சங்
கொதித்துவஞ்சக்காந்தாரிதழுவலோடு
மந்தன்மனைவரைக்கண்டழுதுநெஞ்ச
னணைத்திடவேயம்பிகைதானருளுமைந்த
னிந்துவண்ணனனுசன்மகிழ்சிறுவரைவ
ரின்னல்புரிசுயோதனனோடினையோரெல்லா
மந்தணரின்மிக்கதுரோணன்றன்பாலி
லாயுதங்கள்பயின்றிடவேயமைத்தானன்றே (௫0௯)

குந்திசுதருடனந்தன்மைந்தரெல்லாங்
குழுமியேயாயுதங்கள்பயிலுநாளின்
சிந்தையினிற்சினமலிகாந்தாரிமங்கை
சிறந்ததொருகலத்திலன்னநிறைப்பவீமன்
வந்திருந்தங்கருந்துகின்றநயனமில்லான்
மகிழ்சிறுவர்நூற்றுவர்தம்வலக்கையெல்லா
நொந்திடவேயிடக்கரத்திற்பற்றிச்சோற்றை
நுகர்ந்திடலுநோக்கியவருளைந்தாரன்றே (௫௧0)

பின்னருமோர்தினத்தினூற்றைவரெய்திப்
பெருந்தடநீர்குடைந்திடவேவாயுமைந்தன்
பன்னககேதனனையவனனுசர்தம்மைப்
பற்றியயப்பானலிடைப்படுக்கத்தன்மன்
பின்னவனைவைதுவிடுவிக்கவாவி
பெற்றவர்கண்மிகவெருவிமனையினெய்தி
யன்னையுடனிகழ்ந்தவெல்லாமறையக்கேட்டே
யவள்வீமன்றனைவதையுமென்றானன்றே (௫௧௧)

தாய்சினத்தினிவைமொழியச்சுயோதனன்றன்
றம்பியரோடைவருடன்சிரமஞ்செய்து
தூயமலருய்யானத்திருக்கவாங்கே
துயில்வீமன்சுந்தரத்தினரவைக்கட்ட
வாயினுமிழ்விடமுறவேகடித்தலோடும்
வளையெயிறுமுறிந்திடவங்குணர்ந்துவாயு
சேயதனின்வாலுதியைப்பற்றியெற்றச்
சிரந்துணியவுடல்சிதறிமடிந்ததன்றே (௫௧௨)

விடவரவுசிரந்துணிந்துமடியக்கண்டு
வியாளகேதனன்சினத்தினொருநாட்டோய
மடுவினிடையயத்தினுளேமறையவைந்து
வசிபதிப்பமாலரியாயதனின்வைகக்
கொடியசதப்பெயரினர்களதனைத்தப்பிக்
குப்புறவேயளிகளலையாமனிற்பக்
கடிதினுயர்வீமனயநீந்தியோங்குங்
கழுக்கடமைப்பறித்தெறிந்தான்கரையின்மாதோ (௫௧௩)

பன்னகசேதனனயத்திற்கழுவையெல்லாம்
பறித்தெறியும்பவனன்சுதன்விறலைநோக்கி
யொன்னலர்கணம்மையெல்லாம்வதைக்கநாட்டுங்
கழுக்களைநீபறித்தெறியவுய்ந்தோமென்று
சொன்னவன்றன்விடச்சோற்றையைவர்க்கீயத்
தூயவர்களுகர்வேலைநிகரின்மாய
னின்னலிலாவேதியனாய்வேண்டவன்ன
மீயவிடமறநோக்கியேகினானல் (௫௧௪)

விடமுறுசோறருந்தியைவருயிர்விடாமல்
விளங்குசெயல்கண்டுசுயோதனன்வெண்டுழங்குங்
கடிகொண்மலர்ச்சோலையினிலைவரெய்திக்
கண்டுயிலக்காலரசன்சுதனைப்பற்றி
மிடலுடனேயெடுத்தசன்றபாதாளத்தின்
விழவெறியவீமனுடல்சிதையாமுன்னம்
படமிசையினேற்றவனைப்பாதாளத்திற்
பையவிருத்தினன்பரவைமத்தார்பாசன் (௫௧௫)

வாசுகிதன்படமிசையினேற்றுவாயு
மதலையுடனேகாமற்பையவைத்தே
யேசிலிரசாயனநற்குடங்கள்பத்தந்
தீந்திடலுமவைபருகியெதிரிலாத
வாசுகமன்னருள்குமரனயுதயானைப்
பலத்தினுடனத்தினமாபுரியையெய்தி
மாசுறவாண்டிரங்குகின்றவனைமுன்னேன்
மகிழ்ந்திடவேவணங்கியிவையுரைத்தான்மாதோ (௫௧௬)

அந்தனருள்புதல்வர்செய்ததிமையெல்லா
மறையமெலிந்தனைதன்மனணக்கப்பின்னோர்
வந்தடியின்வீழ்ந்திரங்கக்கங்கைதந்த
மைந்தனயனங்களிலான்விதுரன்மாசி

லந்தணரங்கிவரடியினிறைஞ்சியோங்கு
மாசுகன்சேயரியெனவேயமருநாளிற்
சிந்துபதிக்கெழிலுறுதுச்சலையையீந்து
சிந்தைமகிழ்சுயோதனன்முன்சிறந்தானன்றே (ருசஎ)

தங்கைமணவாளன்மிசவன்பாய்ச்சேரச்
சகுனியெனுமாதுலனும்வந்துசாரக்
கங்கைதனின்மிதந்துவரும்பேழைதன்னுட்
கண்டுவளர்த்திடுஞ்சூதன்சுதனுஞ்சன்னன்
பங்கமிலாத்ரவர்களெனும்பரசுராமன்
பலபடையும்பயிற்றுவிக்கவவனையோவிச்
சிங்கமெனவந்தவனைச்சகாவாய்க்கொண்டு
சிறந்ததுரியோதனன்முன்மகிழுநாளின் (ருசஅ)

பூதலத்திலுயர்ந்திடுபாஞ்சாலராசன்
புதல்வர்பெறப்புலனடக்கித்தவஞ்செய்வேலை
மாதுபங்கனெய்தியொருசுதனையீந்தே
னென்றுமறைந்திடமன்னனசரியெய்தத்
தீதகலுமவன்றேவிசிறிதுநாளிற்சிறந்ததொருபெண்
சிசுவைப்பெறவேநோக்கிக்
கோதிலுமைநாயகன்சொற்குன்றுதென்று
குமரனெனவளர்த்தனனுங்கொற்றவேந்தன் (ருசகூ)

சாதகஞ்செய்துயர்சிகண்டியெனும்பேரோதிச்
சவுளமுபநயனமறையோர்கள்சாற்றும்
வேதமொழிவிதிப்படியின்முடித்தபின்னர்
வின்முதலாயுதங்கள்பயிற்றுவித்துவீரம்
பூதலமெண்டசாருணமன்றனையடன்னைப்
புதல்வனெனவேவளருமரிவைவேட்க
வாதரவின்முடிகவித்துப்பாரையாள்வித்
தரசனெனும்பாஞ்சாலனமருநாளின் (ருஉ0)

அந்தமிக்கபாஞ்சாலன்பெறவேயோங்கு
மரிவைதனக்கேமனைவியானமங்கை
தந்தைநகரெய்தியிடச்சிறிதுநாளின்
றுதையவன்முகநோக்கிச்சாற்றுவானீ
விந்தையெனுமொழியுடையாய்கொழுநன்றன்பான்
மேவெனலுமவணகைத்துவிறற்பாஞ்சாலன்
மைந்தனெனவளர்த்தபெண்ணுக்கென்னையீந்தாய்
மனைவாழ்க்கைநன்றெனவேமொழிந்தாண்மாதே (ருஉக)

காவிவிழிமாதிவைகள்கழறலோடுங்
கடுவெனவேமுனிந்தவளைத்தந்ததாதை
பாவமுறுபாஞ்சாலமன்னவன்றன்
பாவைதனைக்குமரனெனப்பாவித்தேயென்
னுவிகர்குமரிதனைவேட்பித்தர்னென்
றடுசினத்திணைபரியிரதஞ்சூழத்
தேவர்பதியெனத்தேரின்வயங்கித்தோன்றி
சிறந்ததுரோபதனகரைவளைத்தானன்றே (ருஉஉ)

மைந்தனெனத்தான்வளர்க்குமாதுக்கென்றன்
மகளைமணஞ்செய்வித்தமன்னன்சென்னி
சிந்துவினில்விழக்கணையாலறுப்பனென்று
சேர்ந்திடவச்சொற்கேட்டுச்சிகண்டியென்பா
டந்தையென்னால்வருந்துமதோவென்றுகானிற்
சார்ந்துபெருங்கூவலிற்றான்வீழும்போழ்தி
னந்தமிகுதூணனெனுமியக்கனெய்தி
யரிவைதனைத்தடுத்திவைகளறைந்தான்மாதோ (௫௨௧)

கோதகலுங்கொடியிடையாய்பழுவத்திந்தக்
கூவலினீவீழ்கருமங்கூறென்றோதப்
பூதலமெண்பாஞ்சாலன்மகளாமென்னைப்
புதல்வனெனத்தசாருணமன்மகளைவேட்பித்
தாதரவால்வளர்த்திடவச்செய்திகேட்டங்
கவடந்தையமர்பொரவேவந்தானந்த
வேதமறவுயிரைவிடவெண்ணினேனென்
றியம்பியிடவியக்கனிவைபகர்ந்தானன்றே (௫௨௪)

பூவினுறைதிருவெனவேவயங்குநங்காய்
புருடலிங்கங்கோடியுன்றனுருவைக்கொண்டு
பாவையெனவிவ்வனத்தினிருப்பனீபோய்ப்
பதியணுகியுனைமாதென்றெள்குமுன்றன்
றேவிதனையனுபவித்தோர்திங்கடன்னிற்
சேர்ந்தெனக்கென்னுருவைத்தருதியென்ன
வோவியங்கள்பழுதுறவேயொளிரும்வேளை
யொத்தேகிச்சிகண்டிதந்தைக்கிவைகள்சொன்னான் (௫௨௫)

தெரிவையுருவொழிந்துமகனாகிவந்த
சிகண்டிதனையமர்பொரவேசினத்துவந்த
நிருபன்முனிரிரதமொடுவிடுத்தலோடு
நிகரிலவன்றனைநோக்கிநெஞ்சினேயம்
பெருகிடநற்பாஞ்சாலன்றன்பாலெய்தி
பிரியவசனங்கள்சொலிமருகனோடும்
பொருகரிமாச்சில்லியந்தேர்விருதர்சூழப்
புரியினுளோர்மகிழ்ந்திடப்பொற்கோயில்சேர்ந்தான் (௫௨௬)

மறுவுறவேமங்கையெனைவேட்டாளென்று
மனங்கருகியுழல்கின்றமாதுகாத
னிறையவெழிலுறவொளிகொள்கொழுநன்றன்னை
நித்திலப்பக்தரின்பூவினணைமேற்சேர்ந்து
வெரிமகழுமதனசாத்திரத்தினோங்கு
வெற்பெனவேபணைத்தமுலையவன்றன்மார்பி
னுறவணைத்துமனமகிழுந்தையறன்னோ
டுற்றனனாற்சிகண்டிதந்தையுறையுமூரின் (௫௨௭)

மனைவிதனையில்வைத்தோர்திங்களேக
மனமெலிந்துசிகண்டியந்தப்பதியையோவித்
துனியுறமுன்னமர்வனத்தினேகும்போழ்திற்
றோகையெனவயங்கியிடுந்தூணன்முன்னர்த்

தனபதிவந்தவனெழில்சான்மடந்தையான
சீநூரனைக்கண்டிவ்வுருவுதவிர்ந்தானாவை
வினையகலுபாஞ்சாலமைந்தன்போரின்
வீந்திடுநாளெனவிளம்பியகன்றானென்றே (௫௨௮)

தனபதியிவ்வுரையறையக்கேட்டுநொந்த
சரியிலாவியக்கனெய்துஞ்சிகண்டிதன்னை
யுனைவிரும்புமனைவிதன்பாலிவ்வேடத்தோ
டுற்றணைதிபோதியெனவுரைத்தலோடும்
வனிதையிடப்பாகனருள்வரத்தினாலே
மங்கையுருத்தவிர்ந்தானாய்மகிழ்ந்தேயேகித்
தனையுதவுந்துரோபதனுக்கிவைகளெல்லாஞ்
சாற்றிடவேயவனுரத்திற்றழுவிக்கொண்டான் (௫௨௯)

மகன்மகளுமெழிலுறவேமகிழ்பாஞ்சாலன்
மன்னனொடுவிரோதமுறுதுரோணன்விஞ்சு
மிகல்புரிந்துதுரோபதனைப்பிணித்தென்முன்ன
ரெய்திடுவீரியருளரோவென்றுகூறப்
பகலவன்சேய்சகுனிசிந்துபதியெண்ணில்லாப்
படைஞரொடுபன்னகசேதனன்றானேகி
நிகரறவாழ்சிகண்டிதந்தைவிடுநீளம்பா
னிருபர்திரண்மடிந்திடவேபாறினாரால் (௫௩௦)

சீறியெழுதுரோபதன்றன்சிலையாற்பெய்யுஞ்
சிலீமுகத்திற்சினக்கரிமாத்தேர்கண்மாள
வீறடங்கிச்சகுனிகன்னன்சிந்துநாடன்
வியாளகேதனனிவர்கள்வெருவிமண்ணிற்
பாறிவருஞ்செயனுக்கிநேர்ந்தவாசான்
பதம்பணிந்துபாஞ்சாலனனிகமெல்லா
நூறியவன்றனைப்பிணித்துவருவனென்றே
நுவன்றுவிசயன்றேர்மேனெய்திற்சென்றான் (௫௩௧)

சுரர்பதிதன்சுதனெய்தித்துரோபதன்றன்
றுரகநிரைபோதகங்கள்சூரரெல்லாந்
தரையினுடறுணிந்துவிழச்சிரம்வானேகத்
தரங்கமுறுகுருதிநதியெனவேபாற
வெரியுமிழ்சாயகம்விடுத்தேயிரதம்பாய்மா
விணையில்சிலைதுணித்தவன்றன்புயத்தைவீக்கி
விரைவினிற்சென்றாசான்முன்வைத்தலோடும்
விசயனைத்தன்மெய்யிறுகத்தழுவினானால் (௫௩௨)

விசையனைச்சேர்வுறத்தழுவித்துதித்தபின்னர்
விழுமியநற்பாஞ்சலன்றன்னைநோக்கித்
திசையினுறுதேவர்களுமமரிலென்றன்
சிலீமுகத்துக்கஞ்சுவரென்றுரைத்துநீதான்
வசையுறவேதனஞ்சயனாற்பிணிப்புண்டாயென்
றவன்வளநாட்டிற்பாதிவலுவின்வாங்கி
யுசனிகர்துரோணனகைத்தேகென்றோத
வுளமெலிந்துதுரோபதன்மாவனத்திற்சென்றான் (௫௩௩)

கந்தமுறுங்காந்தாரத்தடைந்துமன்னன்
காலுணவாய்க்கனல்வளையத்தவஞ்செய்காலை
யிந்துசேகரன்றோன்றியரசயான்ற
னீயுநலனியம்பெனமன்னிலேகர்கோமான்
மைந்தனெனும்விசயனுக்குத்தேவியாக
வடிவுடையவொருமகளுந்துரோணனெனு
மந்தணனைவதைக்கவொருமகனுநல்சென்
றறையவரம்பெறுதியெனக்கயிலைசேர்ந்தான் (௫௯௪)

கந்தர்தங்கையிவைகழறக்கேட்டுமன்னன்
களிப்புடனேதன்னகரமெய்திப்பின்னர்ச்
சுந்தமுறத்தான்வளர்க்கும்வேள்வியின்கட்
டழலிடையின்சங்கரன்றன்னருளினாலே
செந்திருவைநிகர்த்ததுரோபதையுந்துட்டத்
துய்ம்மனெனும்பேருடையசிறுவன்றானும்
வந்திடவேமறையவர்களாசிகூறி
வானவர்கண்மலர்மழைகள்பொழிந்தாரன்றே (௫௯௫)

அரனருளால்வேள்வியுறுமழலின்வந்த
வரிவையையுஞ்சிறுவனையுமன்பினாலே
நிருபனெனும்பாஞ்சாலன்வளர்த்துநீதி
நெறிநிறையவினிதிருந்தானிப்பாலந்தப்
புரவலன்சேய்தனைவென்றதுரோபதன்றன்
புயம்பிணித்ததனஞ்செயன்றன்விறலையுன்னி
யெரிசினத்தாலவரைப்புன்ளுவத்திற்கொல்ல
வெண்ணிமறச்சகுனியுடனிவைசெய்தானால் (௫௯௬)

அரக்கினுறுமனையிடத்தூவாரணைசி
தனிலவரன்னையொடுந்தாதைசொல்லாற்
பொருக்கெனப்போய்மர்நாளினயநமில்லான்
புதல்வன்விடுமறையவன்போய்ச்செபிக்கவங்கி
பெருக்கவிதுரன்னமைத்ததறியைப்போர்த்துப்
பிலவழியிலவரையுஞ்சுமந்துவீம
னருக்கனெழுமுனமெய்தியிடும்பன்றன்னை
வதைத்தவன்றனிளையாடோளணைந்தானன்றே (௫௯௭)

வாயுசுதன்கமலவல்லிகொங்கையென்னு
மலைகுழையவணைத்திடவோராண்டிலந்த
வாயிழையாள்கடோற்கசனைப்பெறவிட்டேகி
யந்தணர்கடுயரகலப்பகனைச்செற்றுத்
தூயதுருபதனகரியெய்திப்பார்த்தன்
றுலங்கவில்லைவளைத்துயர்மீன்கணையாலெய்ய
மாயன்மகிழ்ந்தருளவிறற்பாஞ்சாலன்றன்
மகளையெழிற்பாண்டவர்கண்மணந்தாரன்றே (௫௯௮)

குந்தியுடனவர்களுங்குருடன்வைகுங்
கொடிநிறையுநகரதனிலெய்திமூத்த
தந்தையருளமரர்பதிப்பிரத்தத்தெய்தித்
தருமனுயரிராசசூயத்தைச்செய்ய

வந்தன்மகன் சூதையுறவிதுரன்றன்னு
லகைழத்துவஞ்சச்சூதாடிவெல்லவைய
ரிந்தவனத்தெய்தினர்களென்றுதூய
வியாசமுனிவியம்பிடக்காசிபன்றுன்கேட்டான் (ருகூக)

குருகுல மரபுப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-உ௲௬உ.

## ககக-வது தட்சகப் படலம்.

காருருவவாமனனுமறையோனுகிக்
கவினுறுமாவலியருண்மூவடியினீனும்
பாரினையோர்பதத்தகங்சனுள்ளிலேதான்
படிந்திடவேயளந்துதிகழொருதாள்வீசித்
தாரகணமமருமிடமயனூரெல்லாந்
தாழ்ந்திடவானண்டமுகடளவாய்நீட்டிச்
சீருறவாண்டளந்தருளுந்தேவதேவன்
திருவடியைத்துதித்திறைஞ்சவம்மின்றொண்டீர் (க)

ஏசகலும்பராசரன்றன்மதலைவிஞ்சு
மிந்துகுலத்தரசர்திறமெல்லாமோதக்
காசிபமாமுனிவியந்துகேட்டுப்பாண்டு
காளையரைநோக்கிமறையாசிகூற
மாசகலுந்தருமனந்தமுனியையன்பால்
வணங்கியபின்வியாசனடிபணிந்துநின்றே
யாசுமலிசுயோதனன்செய்வஞ்சந்தன்னு
லடருமிடரொருவும்வகையருடியென்றுன் (உ)

வேறு. தூயமாமுனிவன்பாண்டுசுதர்களின்மூத்தோன்சொல்ல
நேயமோடவைர்தங்கெணஞ்சுறுமிடரைநீக்கித்
தீயரானவர்கண்மாளத்தக்கன்செய்மகத்தைச்செற்ற
நாயகன்றன்னைக்காணினற்கணையீவனென்றுன் (௩)

நிகரிலாமுனிவன்கூறநெறியுறுதருமன்சொல்வான்
புகரிபவுரியைப்போர்த்தான்பொறையிலாத்தக்கன்செய்யு
மகமறச்சிதைத்ததெல்லாமலரயனிகர்க்குமையா
புகலுதியெனலும்வஞ்சப்புலன்களைந்திடுவோன்கூறும் (௪)

வேறு. சீருறவயங்குந்தசநலப்பிரசாபதிகளுக்கதிகதக்கனுக்குப்
பாரியாயினசுந்தரப்பிரசூதியயந்திடுபெண்கள்சோடசரி
லேருறுந்தருமதேவதைதனக்கிராறுடனென்றுகூடியநற்
காரிகையாரையுதவியக்கினிக்குக்கவினுறவொருத்தியைக்கொடுத்தான் (௫)

மின்னிடைச்சுதைதயைப்பிதுவுக்குநல்கிவிடையவன்றனக்குநற்சதியை
வன்னியிலுநெய்வழங்கியேயளிப்பமழுவலோன்வடிவுடைப்பாரி
தன்னுடன்மகிழ்ந்தாண்டமர்ந்திடுதினத்திற்சத்திரயாகத்தைமறைநூல்
மன்னுமாமுனிவருறத்தசப்பிரசாபதியர்தாநடத்தினர்மாதோ (௬)

சத்திரயாகநடத்துமவ்விடத்திற்சதுமுகன்சங்கரனதிதி
புத்திரன்புத்தேள்பொறையுடைமுனிவர்போந்தமர்ந்திருக்குமெல்லையின்வாய்
நித்திலநகையாள்சதியினைப்பயந்தநிகரிலர்த்தக்கனுண்டுறலு
மத்தியிற்றுயில்வோன்சிறுவனுமரனுமலாதவரெழுந்தடிபணிந்தார் (௭)

பிரமனைப்பரிவாற்றக்கனும்பணிந்துபிஞ்ஞகப்பிரான்றனைமுனிந்தங்
கெரியெழநோக்கியிமையவர்முனிவர்சகியம்புவான்யான்பயந்தளித்த
வரிவையைவேட்டென்மருகனுமிவன்முனெதிரெழுந்தடிமிசையிறைஞ்சான்
பிரியநல்வசனமுரைத்திலனென்றுபின்னரும்பேசலுற்றனனால் (௮)

இவனெனைப்பணியாதிருந்தனனென்னும்விரோதத்தாலிலாததிங்கியம்பே
னவனியினசுசியாகவெஞ்சுடுகாட்டலகையோடமர்வதுமன்றி
நவைமலிந்திடுமுன்மத்தருக்கினியனுதுவான்றனக்குநான்முகனுந்
தவனருளிடவென்மகளையுங்கொடுத்தேன்சூத்திரற்கறைசதுமறைபோல் (௯)

கதமுறவிவையையுரைத்திடுதக்கன்கங்கையார்வேணியன்றனக்குச்
சதுமறைமொழிசூழ்மகத்தினிற்பாகந்தவிருகவெனச்சபித்தேக
விதியுமஞ்சிடமாநந்திவெங்கனல்கண்மிடைந்திடவேள்வியின்மறையை
யுதவுமாதவரைச்சினத்திணுநோக்கியுருமெனவிவையுரைத்தனனால் (௧0)

அரனைநிந்தித்தன்றிகழ்ந்ததக்கனைத்தான்முனிந்திடாவந்தணர்நீயிர்
சுருதிநூற்கருமநடத்தியுஞ்சனனப்பரவையிற்சூழ்குவதன்றிப்
பரகதியுறவேவயங்குதத்துவத்தின்பயனிலையதறிகிலராகி
யருமறையறிந்துயாசகராகியடைகுதிரெனச்சபித்தனனால் (௧௧)

மறையவர்திரளைமுனிந்திவையுரைத்தநந்திதக்கன்சிரமாறி
வெறிமுகமுறுகவெனச்சபித்திடலும்விதியினைநிகர்த்திடும்பிருகு
கறைமிடற்றரன்றன்னடியரானவர்கள்கதமுறவேரியைப்பருகி
நிறையநீறணிந்திலிங்கமார்க்கசாத்திரத்தினெறியினிலுறுகெனச்சபித்தான் (௧௨)

பிருகுமாமுனிவனிவையுரைத்திடலுந்நகைத்தரன்பிறங்கியயாக
மருமறையதனால்முடிந்ததற்பினரினமரர்கடுதித்திடக்கயிலை
வரையிடையுறவாண்டமர்ந்திடுதினத்தின்மகத்தினைத்தக்கனுநடத்த
வரியரனிவர்களலாதுலகத்தினைவருமவ்விடத்தடைந்தடைந்தார் (௧௩)

தந்தையாகியதக்கன்மகந்தனக்குச்சரியிலாவுயர்சதிதேவி
யிந்துசேகரனையிறைஞ்சியென்கொழுநவிருவருமேகுவமெனலு
நிந்தையன்றுரைத்தோனிடத்திலெய்திலன்யானிகரிலாநீயவனூறிற்
சிந்தையிற்கலக்கமுறவுனையிகழ்வனென்றரன்பின்னருஞ்செப்பும் (௧௪)

அணங்குகேள்பத்துவிரிஞ்சர்மாமகத்தினன்றெனைத்தக்கனுந்தன்னை
வணங்கிலனெனவன்றிகழ்ந்தனன்றிருவாழ்மார்பகத்தச்சுதன்கமல
மிணங்குதாடொழுவதன்றியேபிறரையிறைஞ்சுமோவென்சிரமதனாற்
கணங்கொண்மாதவரோடவன்புரிவேள்விகாணயான்வருகிலேனென்றான் (௧௫)

அரனிவைமொழிந்துவருகிலேனெனலுமரிவைகண்சிவந்துநீர்ததும்பப்
பருவரன்மிகுத்துக்கணவனைமுனிந்துபயந்திடுந்தாதைமேற்பரிவால்
விரைவினிற்றரையினடந்திடவிடையோன்மிகநகைத்தவிருறுகலன்க
டெரிவைமெய்க்கணிந்துபயிரவர்சூழச்சிவிகைமேல்விடுத்தனனம்மா (௧௬)

சிவிகையினடைந்துபுவியினையிடந்தகிரிமெயின்மயிர்சிலிர்த்தூறநீ
ளவனியிற்குசையாய்ப்பிறந்திடுந்தலத்தினருமறைவேள்வியைநடத்து
முவமையிருக்கைதனைப்பணிந்தனையவணங்கிடவவரிகழ்ந்தொன்று
நவிலுதலிலாதாண்டிருப்பிடங்கொடாமலிருந்திடநற்சதிமுனிந்தாள் (கஎ)

அன்றியிம்மகத்தினுருத்திரபாகமளித்திடாதிருந்ததுநோக்கிக்
கன்றியசதியென்கணவனையிகழ்ந்தோன்மகளெனவெனைக்கழறுமற்
பொன்றுவன்சனனமெடுக்கினும்புராரிமனைவியாய்ப்போதுவனென்று
மன்றலங்குழலாள்யோகவக்கினியைவளர்த்துடலெரிந்திடமாண்டாள் (கஅ)

சுரராற்றிடவேயோகவக்கினியாற்சுந்தரியிறந்திடநோக்காக்
கருணையற்றிடுதக்கனைவருகதத்தாற்பயிரவர்களைந்திடவடர
வருமறைநெறியிற்செயுமகத்தனலினுருத்தியவன்விடவெழுந்த
சரியிலாரிபுக்களுருத்தெதிர்ந்திடலுஞ்சங்கரன்படைஞர்வென்னிட்டார் (ககூ)

மகமுறுமனலினெழுந்திடுரிபுக்கள்வரப்பயிரவரிடைந்திடலுஞ்
சகநிகரிலாதசதியிறந்திடுஞ்சொன்னெறியுறுநாரதன்றுர
நகமிசையிலங்குமரனுடன்விளம்பநயனம்வெங்கனலுறவாயிற்
புகையுறச்சிரசின்சடையினைப்பிடுங்கிப்பூதலத்தடித்தனன்மாதோ (உ0)

அவனிகம்பிக்கவடித்திடுசடையினுயிரங்கையுடைவீரன்
புவனமுநடுங்கமுகத்தினின்மூன்றுபொறியுகுவிழியுறத்தோன்றச்
சிவனவன்றனைத்தக்கன்மாமகத்தைச்சிதையெனச்செப்பிடமுனிந்தே
யுவரியைப்பருகியெழுந்திடுவடவையெனப்படிமிசையெதிர்ந்துருத்தான் (உக)

வடவரையசையத்திசையினின்வயங்குமதகரியினமிரிந்திடநீள்
கடலிடைமுடுகுஞ்சுடுவிடமெனவுங்ககனமீயண்டமாமுகடு
வெடிபடவதிர்த்துவிழியினில்வடவைபிறந்திடவீரபத்திரன்முன்
சடிதினிலுயர்தக்ககன்மகவிருத்துக்களின்சிரங்களைந்துகொக்கரித்தான் (உஉ)

பிருகுவின்முடிபறித்துயர்பகனேத்திரந்தனைப்பிடுங்கியேநிகரி
லிரவியின்றசனமுதிர்த்துமாமகத்தினெரியிடைத்தக்கன்வன்றலையை
விரைவினிற்றுணித்துவீழ்த்தந்தவழலின்விட்டைமூத்திரமெலாம்விடுத்துச்
சுரரொடுமுனிவர்துதிசெயக்கயிலையாளியனடிதொழுதனனால் (உங)

சிவன்விடுத்திடுமவ்வீரபத்திரனுற்றக்கன்வன்சிரமொடுமகமுந்
தவர்களஞ்சிடவேயெம்பலுற்றனவென்றவன்றமர்சதுமுகற்குரைப்ப
வுவமையில்சதியன்றிறந்திடவிலக்காதுவந்திகழ்ந்திடுதலாலுறுமப்
பவமதினிவையோவருவதென்றுரைத்துப்பங்கயன்கயிலையைச்சேர்ந்தான் (உச)

கயிலையினுலைப்பில்கனககோபுரங்கள்கவினுறநூறுயோசனையி
னுயரமாயெழுபத்தஞ்சுயோசனையினகலமாயொளிர்வடநிழற்கி
ழியலிசையுணருமியாழருந்தவனுக்கிதவுபதேசத்தையருளி
மயர்வறவுயருந்தக்கணாமூர்த்தியாமரனிடத்தயன்வந்தான் (உரு)

அயனரன்முனரினடைந்துநேரில்லாவருந்தவன்கதியினையடைய
வியல்புறவுயர்தத்துவமருளிறைவவுனையவணிகழ்ந்ததக்கன்மேற்
றயையுறக்கதத்தையொழிந்திடுகெனுஞ்சொற்சாற்றிமாவேள்வியின்சேடஞ்
செயலுறப்பெறுதியெனமதிவேணிச்சேகரன்முனிவொருவினனால் (உசா)

முனிவினையொருவுமுராரியீரிரண்டுமுகமுடையயனொடுமேகி
யனலிடைச்சிரம்வீழ்ந்தெரிந்திடவாக்கையவனிமேற்கிடந்ததக்கனைத்தான்
வினையகன்றுயவோர்வெறித்தலைபொருத்தியெழுப்பலும்விழிமுகிழ்த்துறங்கிக்
கனவுகண்டிடவாண்டெழுபவன்போலக்கவினுறவெழுந்தனன்மாதோ (உஎ)

பின்னருமவணின்மடிந்தவரெல்லாமுயிர்பெறப்பிருஞ்ஞானருளாத்
துன்னியவினைகளொருவிடுந்தக்கன்புராரியைத்தொழுதவண்டுதித்தே
யின்னலின்மகத்தைமுடித்தரிபாகங்கொடுத்திடவிந்திரையுரத்தின்
மன்னநற்றிகிரிவனைவயங்கிடமாமாயவன்றோன்றினன்மாதோ (உஅ)

திருமகள்சொழுநனடைந்திடவலாரிதிசைமுகன்சிவனிவரிறைஞ்ச
வரியரனுடனேயுன்னையென்கினரேலென்னையுமகற்றினராமென்
றுரைசெய்துன்றனைத்தான்யானெனவுணரார்சாந்தியையுறுரெனவோதப்
பரிவுடன்புராரிதுதித்திடவமலன்பயோததியமர்ந்தனனம்மா (உகூ)

சக்கரந்தரித்தோனிவையெலாமருளிச்சரியிலாப்பயோததியடையத்
தெக்கனுந்தொழுதுமகத்தினிற்சேடமளித்திடத்தேவர்கள்பணிய
முக்கணன்கயிலைவரையிடையடைந்துமுனிவர்கள்போற்றிசெய்திடவே
மைக்களமதனினுரகபூடணங்கள்வயங்கிடவமர்ந்திடுநாளின் (௩0)

சதியெனுமடந்தையிசழ்ந்ததந்தையின்முன்றன்னுடலெரிந்திடவிளத்தே
யெதிரிலாவிமவான்மனைவியாமேனைவயிற்றினிலிணையிலாவுமையாய்ச்
சதுமறையொளிரச்சனித்தவண்வளரச்சங்கரன்காதலாலெய்தி
வதுவைசெய்தெழில்சேர்வாமபாகத்தைவழங்கிடவயங்கினண்மாதோ (௩க)

தட்சகப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உஅளங.

---

## ககஉ-வது பற்குனப் படலம்.

இருகையினுழிவலம்புரியொளிரவிருகணீளிரவியும்விதுவு
மருவிடவுரத்திற்றிருவயங்கிடமாமலரயனுந்தியிற்றிகழச்
சுரர்நதிபதத்திற்றுலங்கிடவேதச்சுருதிகளுவினினமரக்
கருவரையெனநீள்பயோததியரவிற்கவினுறுபரன்றனைத்துதிப்பாம் (க)

பொறையிலாத்தக்கன்மகத்தினையழித்தசரிதையைப்புகன்றிடக்கேட்டு
நெறியுறுதருமன்மகிழ்ந்திடவியாசனீபகைகளைந்திடவேண்டின்
கறைமிடற்றிறைவன்கணைதொடுத்தருளக்கடத்திடையேகிநற்பார்த்தன்
குறைவறுந்தவத்தைச்செயவிடுகெனவேகூறியேமாதவனகன்றுன் (உ)

வேறு. எண்டவமுனிவன்கூறியேகவிந்திரன்றன்மைந்தன்
மண்டனிலறத்தின்சேயைவணங்கிமாவனத்தினேகிக்
கண்டபேரண்டனுவிகளைந்தவனில்லாள்வேண்ட
விண்டலத்தம்பையேவியவனுயிர்மேவப்போனுன் (௩)

கயிலையங்கிரியின்பக்கத்தெய்தியோர்கடியகானி
னுயர்வுறுபுயலூர்சோலையொருபெருவிரலையூன்றி
மயர்வறவங்கிதன்னைவளைத்திடவாஞ்ஞரஞ்ச
முயலகன்வெரிநினின்றுன்முன்வரத்தவஞ்செய்தானுல் (ச)

ஆசறவொருமைச்சிந்தையரசன்மாதவந்தான்செய்ய
வீசன்மாதேவிதன்னோடேயினனுய்வலைகளெங்கும்
வீசியேமிருகவேட்டைவிரும்பியசவரரார்க்கு
மோசைவானுறவேமாயவுருவுடைக்கிரியின்வந்தான் (ரு)

நாககங்கணத்தன்வெய்யநாய்சொடுவலையப்பாறுஞ்
சூகரம்விசயன்முன்னிற்றுன்றிநீயெனைக்காவென்ன
வாசவத்தரசனஞ்சேலென்றுமுன்னடவியெங்குஞ்
சாகரத்தொலிபோலார்த்துச்சவரர்கோனெய்திஞனல் (௬)

கொடியனுயெதிர்ந்துவந்தவெயினர்கோன்குரோட்டந்தன்னை
விடுதிநீதவனேயென்னவிடாதுயர்விசயன்வில்லாற்
கடவுவெங்கணைகளெல்லாங்கடியுடைமலர்களாகி
வடிவுடைச்சவரர்கோமான்முடிமிசைவயங்கிற்றன்றே (௭)

சவரனெய்பணந்தன்மேலழுந்திடத்தானெய்வாளி
யுவமையின்மலர்களாகியவன்முடியுறலும்பார்த்தன்
பவனன்மாவருணனங்கிபங்கயன்விபுதர்கோமான்
சிவனிவரீயும்வெற்றிப்படைவிட்சிதைத்தான்வேடன் (௮)

கோடிவெம்படைகளெல்லாமெயினர்கோனறுத்துக்கோதி
லாடவர்திலகன்வில்விஞணினையறுக்கலோடுஞ்
சேடன்வெங்கதமேபோலச்சீறிவெஞ்சிலையிஞலே
சாடினன்விசயன்வெய்யசவரர்கோன்முடியின்மீதே (௯)

தும்பையின்மலர்கள்சிந்தத்துளும்பவானதியிற்றுய
மம்பிறைசரியக்கொன்றையலரெலாஞ்சிதறிவீழ
நம்பனன்முடியின்மீதிஞர்கோமான்றன்மைந்த
னும்பர்கள்வெருவவோங்கியடித்தனனுயர்வில்லாலே (௧௦)

ஒல்லையிற்கிரீடிசென்றங்குரத்துடனடித்தலோடும்
வில்லினைப்பறித்துவேடன்வீசிடவிசயன்கையால்
மல்லுறக்கட்டமண்மேல்விழுந்திருவருந்தான்வானிற்
செல்லுறுமுருமுமஞ்சப்புடைத்தனர்தெழித்துவைதே (௧௧)

மந்தரவரைகள்போலவிருவருமற்போர்செய்யக்
கந்தனையருளுந்துய்யகங்கைவேணியன்றன்காலா
லுந்திடவிசயன்வானினுயரவேயுமைமாதுள்ள
நைந்தரன்றன்னைவேண்டநற்கரத்தேந்திஞனல் (௧௨)

கரத்தினில்விசயன்றன்னையேந்தியகாலகாலன்
சிரத்தினிற்றிங்கள்கங்கைசிறந்தகோடீரந்தாழ
வுரத்திடைவயங்குகின்றவுரகபூடணங்களோங்கப்
புரத்தினையெரித்தகோமான்விடையின்மேற்பொலிந்தானன்றே (௧௩)

அங்கியுமழுவுமானுமங்கையினிலகத்தோளிற்
கங்கணம்வயங்கத்தோடுகவினுறக்காதிஞேங்கச்
சிங்கலின்மங்கைவாமந்திகழ்வுறத்தேவரோடு
மங்குல்வாகனன்முன்போற்றமகிழ்ந்தரன்றுேன்றிஞனல் (௧௪)

விடையினிற்கங்கைதங்கும்வேணியான்றுேன்றலோடுங்
கடலிடையமிர்தங்கண்டுகளிப்பவர்போலச்சிந்தை
யுடலொடுமுருகக்கண்ணீருரத்தினிற்புரளவாடி
வடிவுடைவிசயனெய்திவணங்கியேபோற்றிஞனல் (௧௫)

இந்துவேணியனேபோற்றியிடபவாகனனேபோற்றி
நந்திநாயகனேபோற்றிநடம்புரிதலைவாபோற்றி
சிந்துநேர்காரியுண்டதிரிபுராந்தகனேபோற்றி
யந்தகாந்தகனேபோற்றியரகராபோற்றியென்றுன் (௧௬)

வாசவன்மதலைநாலுமறைகொடுதுதித்தலோடு
மீசனுண்மகிழ்ந்துபாசுபதாத்திரமினிதினீந்து
நேசமோடிருகணோக்கிநிருபனீபோதியென்றே
யேசில்வானவர்கள்சூழவிலங்குமாகயிலைபுக்கான் (௧௭)

ஏதமிலரன்றான்பாசுபதாத்திரமினிதினீய
நீதகன்றிலங்குகின்றசிறுவனைமகிழ்வானோக்கி
மாதலியிரதங்கொண்டுவருவனீயவன்றன்னோடு
போதுபொன்னகரினென்றேபுரந்தரன்புகன்றுபோனான் (௧௮)

நேயம்விஞ்சிடவேயிவ்வாறுரைத்துயர்வலாரிநீங்க
வேயெனுமுன்னரோங்குமெழின்வரைக்காணினேகித்
தூயமாதேவதாரமாரமாச்சோலையெய்திச்
சாயகஞ்சாய்வுளேகித்தனஞ்சயனிற்குங்காலை (௧௯)

மகபதியருளினாலேமாதலிவையங்கொண்டு
நிகரிலாவிசயன்முன்னர்நிறுவத்தாளங்குட்டத்தைத்
திகழிரதத்தினான்றச்சிறந்தசாரதிகோல்கொண்டே
ககனமேல்விசையினோட்டக்கணையில்கோணிமிர்த்துநின்றான் (௨௦)

காலினங்குட்டந்தன்னைக்கடிதினோடிரதத்தூன்றிக்
கோலுறுகோவைநோக்கிக்கொற்றவனிற்கக்கண்டே
மாலுமுன்விறலுக்காற்றாளென்றுமாதலிதான்கூறச்
சீலமார்விசயன்பாகசாதனனகரிற்சென்றான் (௨௧)

வாசவன்மலர்ப்பாதத்தின்வணங்கியேகுந்திமைந்த
னேசிலிந்திராணிதாளினிறைஞ்சியின்புறுதலோடுந்
தேசுறுமமரர்கோமான்சிறுவனைமகிழ்ந்துபுல்லி
மாசுறுமசுரர்தம்மைவதைத்தென்றனிடர்தீரென்றான் (௨௨)

அதிதிதன்குமரன்கூறவருச்சுனன்விரைவினெய்தி
யெதிரானவர்முக்கோடியெண்பதாயிரம்பேர்தம்மைக்
கதுமெனக்கனல்கொள்பாசுபதாத்திரங்கையின்வாங்கி
மதிகொண்மாதலிதேர்தூண்டவதைசெய்துமீண்டான்மாதோ (௨௩)

தானவர்தம்மைச்செற்றுச்சார்ந்திடுதனயன்றன்னை
வானவரிறைவன்சிந்தைமகிழ்வுடன்மௌலிசூட்டி
யீனமின்மணிசொள்சிங்காதனத்திடையிருத்தலோடு
மூனமினிருத்தஞ்செய்யவுருப்பசிதோன்றினாளால் (௨௪)

காலணிஞெகிழியோசைகலின்கலின்கலினென்றார்ப்ப
நூலிடைமருங்கிற்காஞ்சிநுண்டுளைமணிகண்மின்ன
வேல்விழியிலகத்தூயமதிமுகம்விளங்கிக்காட்ட
மாலருந்தவர்க்குமெய்தநடித்தனண்மயூரம்போல (௨௫)

தூயமின்னிருத்தஞ்செய்யச்சுரர்பதிசுதன்றானோக்கி
யாயுவின்றந்தையைத்தன்னழகினான்மயல்செய்வஞ்ச
நாயகியிவளோவென்றுநகைத்தலுநடித்தமாது
நேயம்விஞ்சிடவேமையணிறைந்திடநின்றாளன்றே (௨௬)

மயலுறுமாதுதன்னைவலாரியுன்மனைக்கேகென்றே
யியல்புறுவிசயகோயிலெய்துவாயென்றுகூறி
யுயருருப்பசியைவீமற்கிளையவுத்தமன்றன்பாலிற்
செல்லுறப்போதியென்றுசிறந்தசாரணசொல்லென்றான் (௨௭)

சாரணன்மொழியக்கேட்டுத்தத்தையைப்பழிக்குஞ்சொல்லாள்
பூரணகும்பநாணப்பொற்பமர்பயோதரத்தாள்
காரண்குழலாடேயசலமுறக்கவின்கொண்மெய்யாள்
வாரணமனையவீமனநுசன்பால்வந்தாளன்றே (௨௮)

ஓவியப்பாவைமெய்யிலுயிருறநடந்ததென்னத்
தூவியோதிமமுநாணத்துலங்குபொற்கலன்கண்மின்னக்
காவிசேர்விழியாளுள்ளங்காமத்தியுறுகலாற்று
ளாவிமுன்றூதாயேகவருச்சுனன்பாலிற்சென்றாள் (௨௯)

வாசன்முன்றூதரேலமணியுறுசிலம்பினெய்து
மோசைதானெய்தினாமென்றுரைத்திடவுருப்பசித்தே
ளாசைமீதூரச்செல்லவருச்சுனனெழுந்துநின்று
தேசுறுமணங்களையிறைஞ்சியேசெப்பலுற்றான் (௩௦)

பொன்னகரதனின்வைகுமடந்தையர்தன்னிற்பொற்பார்
மின்னெனுமிடையினாளோவிழுமியபாதமோவ
வன்னைநீயென்பாலெய்துங்கருமமேதுரைதியென்று
சொன்னவன்றன்னைநோக்கித்துனியுறச்சபித்தாளன்றே (௩௧)

கயனிகர்விழியாணாணிக்கவிழ்ந்துறுவதனியாக
வயனுறுமடந்தைநல்லாரருச்சுனாகேட்டியுன்றன்
மயலுறவந்தமாதின்வருத்தநீயகற்றியுற்றே
யியல்புறவணைத்திடாமலென்சொனாய்மன்னாவென்றாள் (௩௨)

தேயுநுண்ணிடையார்கூறச்செவியிணைக்கரத்தாற்பொத்தித்
தூயமாவிசயனென்றன்றுலங்குமாமரபின்வந்த
வாயுவைத்தந்தான்றேவியாகியாயிரக்கண்ணானை
நேயமோடணைத்தாளிம்மாதெனக்கன்னைநிகராமென்றான் (௩௩)

மதியுடைமன்னன்கூறமாயவன்றொடையின்வந்தாள்
பொதுமடந்தையர்க்குமுண்டோபுணர்ச்சியினீதியென்று
சுதைதருமொழியாளென்றன்றுனியுறவணைத்தியென்றே
யிதவுரைபலவுமோதவிசைந்திலனிணையிலாதான் (௩௪)

நாடியேயுன்பாலெய்தநறுமலரணையினென்னைக்
கூடியேயணைந்திடாதகொடுமையாலாண்பெணல்லாப்
பேடிநீயாதியென்றேபிறங்கியசினத்தளாகி
யேடவிழ்தொடையினானைச்சபித்தவளேகினாளால் (௩௫)

சசிநிகர்வதனியானவுருப்பசிதளர்ந்துசென்று
சுசியுறுவிரகமோவவணையெனத்தொடுத்தலோடு
மிசையின்மன்னவனைநோக்கிப்பேடிநீயாதியென்றே
விசையொடுபெயர்ந்ததன்மைவிண்ணவர்தலைவன்கேட்டான் (௩௬)

மகபதிவிசயன்றன்னையழைத்துமாமுனிவரோடு
செகதலம்விண்ணோடெட்டுத்திசையினுமிவனைப்போலச்
சிகியுறுகாமநோயைச்செயிப்பவரியாவரென்று
புகலுமினென்றுகூறிப்புதல்வனைப்போற்றினானால் (௩௭)

உருப்பசிதன்னைநோக்கியும்பர்கோனறைவான்றுய்ய
பொருப்பிணைபுயத்தனானபுதல்வனைப்பேடியாக
வருப்பநுண்ணிடையாள்சீறவடுக்குமோவென்னவாரும்
விருப்புறுபுருடனாகவிளங்குதிவிசயவென்றான் (௩௮)

அருந்தவர்மகிழப்பேடியுருவினையகலும்பார்த்தன்
வருந்தியாம்பன்னீராண்டுவனத்துறைந்திடுமிவ்வேடங்
கரந்துறைகாலமெய்திக்கழிந்திடவருடியென்னப்
பெருந்தடவிழியினுணிபெறுதியாலென்றுசொன்னாள் (௩௯)

நீண்டகல்விழியாள்கூறமகிழ்ந்திடுநிசரில்பார்த்தன்
பாண்டுமன்மலர்ப்பாதத்திற்பணிந்திடச்சுதன்மேலன்பு
பூண்டுறவணைத்துநம்மைப்புத்திரராகப்பெற்று
வேண்டியதளிக்குந்தெய்வப்பதத்தினில்வீடுபெற்றேன் (௪0)

மங்குலைநிகர்த்துத்தானம்வழங்கியதருமராசன்
செங்கவின்கோல்கொடோச்சிச்சிறந்தநால்வருநீர்திக்கெட்
டெங்கும்வென்றிராசசூயயாகத்தையியற்றவேமுச்
சங்குவின்மதலையெய்தும்பதியினைச்சேர்ந்தேனென்றான் (௪௧)

தாதையிவ்வாறுகூறத்தனஞ்செயன்மகிழ்ந்துநோக்கித்
தீதறுமையகேளுேன்முன்னவன்சிறுவன்வஞ்சச்
சூதினில்வளநாடெல்லாங்கவர்ந்துபாஞ்சாலன்றூய
கோதையின்குழலைப்பற்றியுரிந்தனன்கூறையென்றான் (௪௨)

அருந்ததிக்கற்பாளாயமருகிதன்மருங்கினுடை
யுரிந்தனன்முன்னேன்சேயென்றுரைத்தசொற்பாண்டுமன்று
ளரிந்திடக்கண்ணீர்சோரவரவுயர்வேந்தன்சுற்ற
மெரிந்திடவிறப்பனென்னவியம்பிநொந்திருந்தானன்றே (௪௩)

தந்தைவெந்துயரமாற்றியவன்விடைதரவேபார்த்த
னிந்திரனுடனேயோராண்டிருக்கவேயிணையிலாத
வந்தமாரறன்சேய்தூயவனுசனைப்பிரிகையாலே
சிந்தைநொந்திருக்கும்வேலைபராசரன்சிறுவன்வந்தான் (௪௪)

சுகனுடைத்தாதையெய்தத்தொழுதிடுந்தருமராசன்
மிகமெலிந்திருந்ததன்மைநோக்கியேவேதங்கண்டோ
னிகரிலாப்புராணமெல்லாநிகழ்த்திவெந்துயரநீக்கி
யிகழ்விலாவிசயனின்முனெய்துவனென்றுபோனான் (௪௫)

பற்குனப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உ௧௧அ.

## ௧௧௩-வது அளகாபுரிப் படலம்.

கறையினிற்காலைக்குந்திக்கரத்தினின்கோலினாலே
யுறிதனிற்பாண்டந்தன்னைப்பொத்திடவொழுகுகின்ற
நிறைமதிநிலவைநேருந்ததிநிலத்துறுதவண்ண
மறையறைவாயாலேற்றமாயனைவணக்கஞ்செய்வாம் (௧)

விதியினைநிகர்த்தவேதவியாசன்முனேகலோடுஞ்
சதுமறையவர்களுன்னத்தருமன்முனிருக்குநாளின்
மதிமுகம்வயங்குகின்றதுரோபதைவாயுசேயோ
டுததியினொலிபோலோடுநதியிடையுற்றாரன்றே (௨)

ஓடுகிலாலந்தன்னுளொளிர்சுகந்தியநற்பூவை
யேடவிழ்குழலாளுக்கியிம்மலரைம்பான்மீந்தற்
சூடினரன்றோபாரிற்றுலங்கியமாதரென்று
வாடியசெயலைநோக்கிவாயுவின்மதலைசொல்வான் (௩)

அறனிகருற்றவைம்பாலாயிழாயளகைச்செப்பி
வெறிகொண்மாமலரைக்கொண்டுமீண்டுநின்னாகமீதி
னிறைவுறச்சூட்டுவேனென்றுறைந்துநீள்பாதவங்கள்
பறியவேபிறங்கல்விண்டுபடியினிறுதிரச்சென்றான் (௪)

மஞ்சுயர்விலங்கன்மீதின்மரந்துகளாகவீமன்
யெஞ்சலிலுவணன்போன்றுநெறியிடையெய்தும்வேலை
யஞ்சனைசிறுவன்றுய்யகவுசலையருளவந்த
மஞ்சனையுள்கிவாழைவனத்திடையேத்துவானால் (௫)

அலரியோன்குலத்திற்றோன்றுமயன்சுதன்குமராவென்னுஞ்
சலமுறவெதிர்ந்துபோர்செய்தாடகைகாலாவென்னுங்
கலரவிந்திடவேவேள்விகாத்தருளிராமாவென்னுந்
தலனுறுகருங்கனாரியாக்கியதாளாவென்னும் (௬)

கறையடியுரியைப்போர்த்தான்கடுஞ்சிலையிறுத்தாயென்னுஞ்
சிறகறையளிமென்கூந்தற்சீதையைவேட்டாயென்னு
மறுவிலாப்பரசுராமன்வரிவில்வாங்கழகாவென்னுங்
குறைவிலாப்புளினர்கோமான்குகன்சகாவானாயென்னும் (௭)

பரதனுக்கெழிலான்மிக்கபாதுகமீந்தாயென்னும்
வருதிரைக்கடல்போலார்த்தவிராதனைவதைத்தாயென்னும்
விரதமார்சரபங்கற்குமிளிர்பதமளித்தாயென்னுந்
தரையினிற்கரன்றன்பின்னோருடன்விழத்தடிந்தாயென்னும் (௮)

எருவைமன்னவனுக்குன்றன்பதத்தினையீந்தாயென்னும்
வரைநிகர்கவந்தன்மாளவாளினிற்றுணித்தாயென்னும்
பரிவுடன்சவரிநல்கும்பலம்விருப்புற்றாயென்னு
மிரவிசேய்மகிழச்சாலமேழிறவெய்தாயென்னும் (௯)

மிடலுடைவாலிமார்புபிளந்தருள்வீராவென்னுஞ்
சுடர்முடியிரவிசேய்க்குச்சூட்டியமுராரீயென்னுங்
கொடியவாளரக்கன்பின்னோன்குரைகடல்கடந்துநின்றா
ளடையவேயிலங்கைச்செல்வமளித்தருளரசாவென்னும் (௧௦)

வாரிவெந்திடவேவெய்யவாளிகள்விடுத்தாயென்னு
நீரிறைவணங்கியேத்தவருள்செய்தநிமலாவென்னுந்
தேரிறத்தசக்கிரீபன்சிரமுடியறவேநோக்கிப்
போர்பொரவருதிநாளையென்றருள்புனிதாவென்னும் (௧௧)

கும்பகன்னன்றன்சென்னிகுரைகடலிட்டாயென்னும்
வெம்பியவதிகாயன்றன்சிரமறவாளிவிட்டே
யிம்பரினதிகனாயவிந்திரசெயித்தைச்செற்ற
தம்பியையேமத்தோடுந்தழுவியதலைவாவென்னும் (௧௨)

கடிகையேழரையின்மூலபலத்தினைக்களைந்தாயென்னு
நெடியமோதரன்றன்சென்னிநிலத்திடைப்படுத்தாயென்னுங்
கொடியவாளரக்கன்கம்பத்தறுத்துக்கோகனகனம்பாற்
கடுவைநேரவன்றன்மார்பைப்பிளந்துயிர்களைந்தாயென்னும் (௧௩)

சுடர்முடிவீடணற்குச்சூட்டியசோதியென்னுஞ்
சடுவமர்களனெண்கண்ணனைத்துகாகுத்தாவென்னுந்
திடமுடைத்தசரதன்பாற்றியகைகேசிசெய்த
கொடியவல்வினைதீர்ந்துய்யவரங்கொண்டகோவேயென்னும் (௧௪)

வானரத்தானைசூழவயங்குபுட்பகத்தின்மீதின்
மீனகேதனனைமானுமிலக்குவவீரனெய்த
வானவர்போற்றவேதன்வாமவூருவினிற்றுய்ய
சானகிவயங்குஞ்சோதித்தசரதராமாவென்னும் (௧௫)

நெறியினற்புதங்கடேவிக்குரைத்தநின்மலனேயென்னும்
பொறையுறுபரத்துவாசன்வைகிடம்போந்தாயென்று
மறைநெறிபரதனெய்திவணங்கிடவணைத்தாயென்று
மறனுறுமயோத்திதன்னுளடைந்தருளழகாவென்னும் (௧௬)

சுடரொளிமணிகடேங்கடுலங்குமண்டபத்தினுப்பண்
வடிவுடையரசர்போற்றமடங்கலாதனத்தின்மீதிற்
புடவியினெழுந்தசீதையுடனிருந்தருளிப்பொற்பார்
முடியினைவதிட்டன்சூட்டமகிழ்ந்தருண்முதல்வாவென்னும் (௧௭)

மதியிலன்வலனென்றில்லாமற்கடமானவென்னைத்
துதிசெய்துதன்றடக்கையாரத்தழுவியுமென்றோண்மேற்
புதிதலர்கமலமன்னதன்பதம்பொருந்தவைத்த
நெறுவெனநினையுஞ்சோருமேம்பலுற்றெழுந்துநிற்கும் (௧௮)

பூவைமையுததிகாவிபுயன்மரகதமுநாண்மெய்த்
தேவனிவ்வவனியெங்குந்திரிந்திடுசுவடுகாணு
மாவலிற்புடவியெங்குமடைகுவோனமலன்பாத
மேவியதிவடமென்றேவியந்துசைதொழுதானன்றே (௧௯)

சீதையுங்கூடவெங்குந்திரிந்தவன்கமலமன்ன
பாதமார்தூளியீதென்றிருக்கணீர்படியினுருய்ப்
போதவப்பொடியையள்ளிப்பூசிமெய்புளகமாக
வேதமில்குணத்தோன்வாலைநீட்டியேயிறைஞ்சினால் (௨௦)

இந்திரநீலமொத்தேயிலங்குகந்தரத்தின்மீது
செந்துகிர்வனப்பாய்மல்கச்சேண்சிலைவயங்கிக்காட்ட
வந்தெழுந்தனபோற்றோன்றுமலர்மகள்காந்தன்றன்னைச்
சிந்தையினினையுநையுங்களிக்குமூர்ச்சிக்குந்தேறும் (௨௧)

**வேறு.**

இவ்வழியிராகவனெழிலைநோக்கியே
யவ்வியமவித்தவஞ்சனைதன்செம்மருன்
குவ்வுறப்படிந்துநீள்கூலநீட்டிய
நவ்விசேர்பழுவத்தின்வீமனண்ணினான் (௨௨)

தாரமார்கிரிதரைதயங்குந்தன்மைபோ
னேரிலாமாருதிவயங்கநீதிநூற்
சோர்விலாவாசுகன்சூனுவாகிய
தீரன்மாறனயனைநோக்கிச்செப்புவான் (௨௩)

நீநெறியடைத்திவணீட்டும்வாலினை
நானெய்தினேகவாங்கென்னவேநகைத்
தீனமிலரசயானெடுக்கவாற்றகில்
லேனுன்வலத்தெடுத்தேகென்றனரோ (௨௪)

அஞ்சனைசிறுவனீதறையவாசுகன்
மஞ்சனீமுதியமர்க்கடகின்வாலினைப்
பஞ்செனப்பறக்கவுந்துவதுபாரெனு
விஞ்சியவிடதுகால்விசித்துதைத்தனன் (உரு)

உதைத்தகாலொருகவேயோங்குசாலம்போற்
பதைத்திலாவலத்தினைப்பார்த்துவாயுசேய்
கொதித்துவாமகரங்கொடுபெயர்க்கவுங்
கதிந்தவாலசைகிலகண்டுசிறினன் (உசா)

ஒருகையினெடுக்கிலாதுளைந்துசீறியே
யிருகரவலங்கொடுகடிதெடுக்கவு
மொருசிறிதசைகிலாவுரனைக்கண்டிவ
னரியலவரியயனரனலயாரென்றான் (உஎ)

கையினெழுபிறங்கலைக்களையும்யானிவ்வான்
மயிர்துனியசைத்திடும்வலனிலேனிவன்
புயல்வணன்புகல்வேபுணரிதாண்டிப்போ
யியல்புறுஞ்சனகிபாலேகுந்தூதனோ (உஅ)

அக்கனைநிலத்துரைத்தரக்கர்தானையை
யிக்கெனத்துணித்துவீழ்த்திலங்கையெல்லவு
முக்கிரத்தழலினையூட்டிநீண்டுயர்
சக்கரனடியின்வீழ்த்தவத்தனோவிவன் (உகூ)

சரியிறான்முகன்படைதசக்கிரீபன்சே
யிரவிடைவிடப்படுமெவருமுய்ந்திட
விரைவினின்மருந்துறும்விலங்கலேந்தியே
பொருகளத்துதவிடும்புனிதனோவிவன் (கூ0)

என்றிவைபலமொழிந்தியாவனீயென
வன்றிறல்வீமனாண்டுரைப்பமாருதி
யன்றுவாலியைத்தெறுமையன்றூதனா
னென்றலுங்குந்திசேயிறைஞ்சியேத்தினான் (கூக)

வாயுசேயானெனவணங்கும்வீமனைத்
தூயமைதிலிதுனிதுணித்ததூதுவ
னேயமோடணைத்தபின்னனுசனீசினச்
சீயமார்பழுவத்திற்செல்வதென்னென்றான் (கூஉ)

ஆகந்திகழளியொடுமனுசன்கூறமன்
னகந்திசழருவிபாய்நதியினெய்திய
சுகந்தியமலரினைத்தூயளாகிய
சகந்திகழ்துரோபதன்றனயள்கண்டனள் (கூகூ)

தளவலர்நகையளிம்மலரைத்தாவென
வளியொடுமறைந்திடவளைக்கைக்கேசயான்
கிளையுயர்பிறங்கலிற்கிளைக்குங்கானிடைத்
தெளிவுறுமறிஞயான்சென்றதென்றனன் (கூச)

அனுசனீதறையவேயனுமன்கூறுவான்
றனபதிபதியெய்திச்சமர்செய்தேவர
மனவரிதென்னினுமலையவந்திடுஞ்
சினமுறுமியவரைச்செயித்தியாலென்றான் (கூரு)

பின்னருமும்மொடுபெருத்தவெஞ்சம
ரின்னல்செய்சுயோதனனியற்றுநாட்டனிற்
கொன்னுறுவிசையன்றேர்க்கொடியின்வைகியா
ஞென்னலர்மடியவாக்குவனென்றோதினுன் (௩௬)

வேறு. தெளிவுறவனுமனிவ்வாறுரைத்துநீசேறியென்ன
வளகையின்வீமனெய்தியமரினுக்கறைதான்கூவி
வளனுறுமணிமானேச்செற்றிபக்கரைமடியநூறிக்
கிளர்வரைமீதிறேஞ்குங்கேசரியென்னவார்த்தான் (௩௭)

தனபதிநகரின்வீமன்சமனிலாச்சமரஞ்செய்ய
மனமெலிதருமன்முன்னேமலரினுலெய்துந்தன்மை
துனியுறவிரித்தவைம்பாற்றேகைதானியம்பலோடு
நினைவதன்முன்னம்வந்தானிகரிலாக்கடோற்கசன்றன் (௩௮)

பாரினில்வயங்குந்தன்மன்பருதிவானெழுவபோலச்
சீருறுகடோற்கசன்றன்னுடனுயர்தேரினேறி
நேரிலாவளகைமேவுமளவினினெடும்போர்செய்யு
மாருதியுடனேசீறிமலேயப்பிங்கலன்றன்வந்தான் (௩௯)

சிந்தையிற்கதத்திறேடுஞ்சேர்ந்திடுங்குபேரன்றுய்ய
வந்தமாரறன்செய்தன்னைநோக்கியேயளப்பிலாத
புந்தியின்மகிழ்ச்சியோடும்போந்திடுங்கருமங்கேட்டுக்
கந்தமார்பூவைக்கொய்துகையினிற்கொடுத்தேகென்றன் (௪௦)

தருமனேடிலங்குகின்றதனயனைத்தழுவிவீம
னொருநொடியிடுவமுன்னமுறைந்தமாசோலையெய்தி
யரிவையர்திலகியானதுரோபதையளகமீதின்
மருவமர்சுகந்தியத்தின்மலரினைச்சூட்டினுனல் (௪௧)

சுகந்தியமலரைவீமன்சூட்டலுமகிழுநங்கை
முகந்திகழ்மூரற்பூத்திமுத்தினினவிரைக்காட்டச்
சுகந்தினம்புகுந்துபார்ப்புத்தொடர்ந்திடக்கொஞ்சுங்காவி
னகந்துகள்செய்யுங்காலின்சுதனெடுதிரியுநாளின் (௪௨)

மத்தமாதங்கம்போன்றவாயுசேய்துரோபதன்றன்
புத்திரியுடனேர்காவிற்போதமந்தாரவாச
முத்தரமாலினுலேயுற்றிடவியந்துநங்கை
யெத்தவஞ்செய்தாரிந்தவெறிமலரணிவரென்றுள் (௪௩)

வேறு. தாதுராகஞ்செறிசலதரக்குழற்
கோதையாளிவ்வுரைகூறவாயுசேய்
மாதராயளகையினெய்திவாசமார்
போதையான்றருகுவனென்றுபோயினுன் (௪௪)

தேவதாரக்குரவங்கஞ்செல்லுறுங்
கோவிதாரங்கிளேகொங்கிறேங்கியே
வாவுதாரமெயின்வானரம்மலி
காவிதாரமுறுங்கயங்களோவினுன் (௪௫)

மரைகரிகிரியரிமயிடங்கட்கமா
னிரலைசார்த்துலமாவிதமெண்கோடர்
விரிவுறுகடறுகள்வேய்கடுன்னிய
வரைபலகடந்தனன்வாயுவெள்கவே (௪௬)

சரியில்பிங்கலன்பதிசார்ந்துவாயுசேய்
விரிவுறுபொழிலினைக்காக்கும்வீரர்க
டரையினிளிரியவேசமர்செய்தேவெறி
புரையுமந்தாரத்தின்பூவைக்கொய்தனன் (சஎ)

பாரிடையோங்குமந்தாரப்பூப்பறித்
தேருறுமளகையையிமைப்பினீங்கியே
நேரிலாசுகன்சுதனெறியினெய்திநற்
சூர்கிர்துரோபதைகுழலிற்சூட்டினன் (சஅ)

வேறு. கொந்தமந்தாரப்பூவைக்கோதைதன்குழன்மேற்சூட்டி
யந்தமாரறன்சேயோடுமனிலன்சேயமரும்வேலை
யிந்திரன்விடைதானீயவிரதமேலமரர்வாழ்த்த
வந்தவாள்விசயன்றன்மன்மலரடிவணங்கினானால் (சகூ)

வந்தடிவணங்கிநின்றமகபதிசிறுவன்றன்னை
யந்தமாரறன்சேயன்பாலணைத்துளமகிழ்ந்துநோக்கிக்
கந்தனைங்கரன்றன்னோடேகயிலையினிலங்கிவாழு
மிந்துசேகரனைக்கண்டவெழிலெலாமியம்புகென்றான் (ருo)

சரியிலாத்தருமன்கூறத்தனஞ்சயன்மொழியலுற்றா
னரனொருசவரனாகியளப்பிலாவெயினர்சூழக்
கிரியினைத்தொடர்ந்தென்னோடுகிளர்ந்துபோர்பொருதுதோன்றி
யிருவினையகலப்பாசுபதாத்திரமீந்தானென்றான் (ருக)

கந்தனார்தந்தைவெய்யகணைகொடுத்தேகலோடு
மிந்திரனசரினெய்தியெதிர்ந்ததானவரைக்கொன்று
குந்திதன்கொண்கன்பாதங்குறுகினான்வணங்கியீண்டு
வந்தனனென்னத்தன்மன்மகிழ்ந்தணைத்தமருநாளின் (ருஉ)

அளகாபுரிப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உகூஎo.

---

## ககச-வது சிந்துபதி சிரபங்கப் படலம்.

பகலவன்குலத்திற்றோன்றிப்பரதனுக்கரசையீந்து
குகனொடுங்கங்கைநீங்கிக்கொடியசூர்ப்பநகைமூக்கு
நகிலொடுமிளையோனீக்கநலனிலாக்கரனைச்செற்றே
யிகலிராவணனைக்கொன்றவிராமனைவணக்கஞ்செய்வாம் (க)

மாதவனருந்துசூதக்கனியைவாள்வீமன்கொய்ய
வேதமாமுனிவந்தெய்திச்சபிப்பனென்றஞ்சும்வேலை
மாதவனெய்தியுங்கண்மனத்துறுமியல்பையெல்லா
மோதுதிரென்னமெய்மையுதிட்டிரனுரைக்கலுற்றான் (உ)

சத்தியமாதாஞானம்பிதாத்தன்மம்பிராதாநீதி
மெத்தியதயையாந்தோழன்விழுமியசாந்தந்தேவி
யுத்தமக்கமைநன்மைந்தனெனச்சென்றுதருமனோதச்
சுத்தமாங்கனிமீதேறவாயுசேய்சொல்லலுற்றான் (௩)

பரதாரமெனக்குமாதாப்பரர்பொருள்பாரினோடு
சரிஞானத்துதயமானசற்குணவுயிர்களெல்லா
மரிதாமென்னுயிர்க்குநேராமென்றரிமைந்தன்கூறப்
பரிதாமாங்கனிமீதேறப்பற்குனன்பகரலுற்றான் (௪)

வேதசாத்திரங்களோதவிரும்பியமறையோர்போன்றுங்
கோதிலாப்பசும்புற்காணுங்கோவினம்போன்றுங்கொண்கன்
போதவேமகிழுநாரிபோன்றும்யான்சமரிற்போவன்
மாதவவென்னமாழைக்கனியெழமாமன்சொல்வான் (௫)

உயிர்தனின்மானந்தன்னினதிகமிங்கேதென்றுன்னிற்
புயலுறுமின்னின்யாக்கைபொடிபடவாவிபோகு
நயனமெட்டுடையோன்பொன்றுநாளினுமானம்பொன்றா
தியல்புடையரியேயென்னக்கனியெழவிளையோன்சொல்வான் (௬)

தேவிசேயிளமைசெல்வந்திரமறத்தினமுங்கால
னாவியைக்கவரச்சேர்வனையமிலழியாவீட்டின்
மேவநல்லறமேயுற்றதுணையெனக்கனிமீதேற
மாவடுநயனமானுந்துரோபதையறைவாண்மாதோ (௭)

சுந்தரவடிவுமிக்கதூயவேணிகர்ப்பராகிற்
றந்தைதன்பிராதாமைந்தனென்னினுந்தையலார்க
ணிந்தையென்றிகழார்போகநிரப்பிடநினைவரென்னக்
கந்தமார்கனிகொம்பேறாக்கருமத்தாற்கண்ணன்சொல்வான் (௮)

அரிவைநீமெய்கூறென்னவணங்கினாள்பகருவாளென்
னிருநகின்மிசையிற்றோயும்பதியைவரெனினும்பார்த்தற்
சரியுளாரிலாமையாலேதவிர்ந்தனளாசையென்ன
விரைவின்மாங்கனிகொம்பெய்தவிமலன்போய்த்துவரைபுக்கான் (௯)

சகுனிதன்மருகன்றுய்யதவரெனுந்துருவாசற்கே
யிகழ்விலாயிரத்தின்வர்க்கப்பதார்த்தமோடன்னமெல்லா
நிகரில்பொற்கலத்தினேரினெய்யொடுநிறைப்பவன்பு
மிகுமுனியருந்தலோடுவியாளகேதனன்றான்சொல்வான் (௧௰)

இரணியக்கலத்தில்யான்றானளித்திடுமடிசிலெல்லாந்
தருமனுண்டளியானாகிற்சபித்தியென்றுரைத்துவேண்ட
வருமறையவன்றானீதேசெய்வனென்றறைந்துபாரின்
விரைவினிற்குந்திமைந்தர்மேவியவனத்திற்சேர்ந்தான் (௧௧)

நெறியுறுமந்தணாளர்நீதிசேர்குந்திமைந்தர்
குறைவறவமுதுசெய்தபின்னரிற்குவலையத்தின்
மறுவில்பாஞ்சாலன்பாவையருந்தவேவயங்குபாண்டம்
வெறுமையாயிருக்கும்வேலைவிழுமியதவத்தோன்வந்தான் (௧௨)

தீய்மையிலைவர்முந்திச்சென்றடிவணங்கலோடுந்
தூயனாமுனிவனோக்கித்துலங்குபொற்கலத்தின்மிக்க
வாயிரம்வருக்கமானபதார்த்தமோடன்னமெல்லா
நேயமோடளியாயாகிற்சபிப்பன்யானென்றுநின்றான் (௧௩)

ஏருறுதவத்தோனிவ்வாறுரைத்திடமுனிவனேகி
நீரினிலாடிவாவென்றறன்சுதனிகழ்ந்தவெல்லாம்
பாரினோடயத்தனெய்திப்படிந்திடநெறியோன்போனான்
சீருறுமைவரஞ்சிச்சீதராயாத்திரையென்றார் (௧௪)

வீரர்களினைக்குமுன்னம்விமலனாண்டெய்தியேசா
னேரிலாப்பாண்டட்தன்னநிறைத்துயர்காரைச்சாகஞ்
சீருறமிஞ்சிமேதித்ததியிவைசிறப்பவூறு
வேரிலைக்கலத்தினெய்துமுனிவனுக்கிட்டித்தானால் (௧௫)

தூயபொற்கலனேருணவிலையென்றுந்தருவாசன்று
னாயிரம்பதார்த்தமிஞ்சிகாரையோடளாயாமென்று
நேயமோடருந்திச்சிந்தைமகிழ்வொடுநெறியிற்போக
மாயவன்பதியினெய்தமன்னவனிருக்குநாளின் (௧௬)

அத்தினபுரியையாளுமரசன்றன்னனுசன்றீய
மைத்துனன்மாமன்கன்னன்மறமுறுமிவர்களோடுங்
குத்திரமதியினாலேசூந்திதன்புதல்வர்தம்மை
வத்திரப்பெருமையாலாண்டமர்செய்துவதைக்கவெண்ணி (௧௭)

கரியினம்வேட்டையாடக்கானிடைச்செல்வார்போலச்
சரியிலாப்பாண்டுமைந்தர்சார்விடத்தெழில்வாவிக்கண்
ணரிமலர்ச்சோலைதன்னுளரசர்கண்மிடையப்பொன்னின்
புரியுரமன்னனாவினிரையெலாங்கொண்டுபோந்தார் (௧௮)

அத்தினபுரியையாள்வோனானிரைகவர்ந்தசெய்கை
மத்தவெண்களிற்றினேறுமன்னனுக்காயர்கூறச்
சித்திரசேனன்றன்னைச்செருவுறப்பொருதேயந்தன்
புத்திரன்புயத்தைவீக்கிப்போதெனப்புகன்றானன்றே (௧௯)

தீமையில்வலாரிகூறச்சித்திரசேனனெய்தி
யேயெனுமுன்னமாவினிரையெலாமெதிர்ந்துமீட்டு
மாயவெம்படையினாலேமன்னரைமயக்கியந்தன்
சேயிருபுயத்தைவீக்கிச்சேணிடைச்சென்றானன்றே (௨0)

அத்தினாபுரத்தையாளுமரசன்றன்புயத்தைவீக்கிச்
சித்திரசேனன்சேணிற்சேர்ந்திடுஞ்செய்கையெல்லா
முத்தமத்தருமன்பாலினுரைத்திருகண்ணீர்சோரப்
பத்தியினிறைஞ்சிப்பானுமதிபதைத்தழுதாளன்றே (௨௧)

அரவுயர்வேந்தன்றேவியறைந்திடக்கேட்டதன்மன்
விரைவினிலவனைமீட்கவீமநீபோதியென்ன
வெரியுறுநயனனாகிமறுப்பவிந்திரன்றன்மைந்தன்
சரியில்காண்டீபமேந்திச்சமர்செயச்சேர்ந்தானன்றே (௨௨)

சித்திரசேனன்றன்னைச்செருவிடைவிசயன்வென்று
கைத்தலமவனாற்கட்டுண்கண்ணிலான்புதல்வன்றன்னை
வித்தகத்தருமன்முன்னர்விடுத்தலும்விடுதியென்னச்
சுத்தவான்வடமீனன்னதுரோபதைவந்துசொல்வாள் (௨௩)

என்னையன்றிகழ்வுசெய்தவேழைநீயெதிர்த்துப்போர்செய்
யொன்னலன்றனாற்கட்டுண்டின்னமுமொருகோலோச்சி
மன்னவனாகிப்பாரையாண்டுநீமதியிலாத
கன்னனோடிருத்தியோவென்றிவையெலாங்கழறிநக்காள் (௨௪)

நாரியர்திலகமான துரோபதைநகைக்கநாணிப்
பாரினைநோக்கிநின்றபன்னகத்துவசன்றோளின்
வாரினைவிசயனீக்கமறனறநெறியையோம்பி
யேருறுந்தருமனோக்கியுன்னகர்க்கேகென்றானால் (௨௫)

அறனருள்மைந்தனேசென்றறையப்பாஞ்சாலிநங்கை
யுறநகைசெய்தாளென்றேயுளங்கனன்றேகுகின்ற
வறிவிலியுடனேயவர்தேவியாமணங்கைப்பற்றிச்
சிறையிடைத்தருவனென்றுசெயித்திரதன்றான்சொன்னான் (௨௬)

மைத்துனன்மொழியலோடுமகிழ்ந்திடுமனத்தனான
வத்தினபுரியையாள்வோனவடனைப்பற்றியென்முன்
வைத்தியேனலனென்றோதமறனுறுசிந்துநாட
னுத்தமத்தருமராசனுறையுமாவனத்தைச்சேர்ந்தான் (௨௭)

பூரியசிந்துநாடன்புடைவருங்கயவராலே
பாரினெண்டவத்தோர்வைகும்பதியினையழித்தலோடு
மேருறுமைவர்சீறியேகலுமெழிற்பாஞ்சால
வீரியன்மகளைப்பற்றிவெய்யவன்றேர்மேன்மீண்டான் (௨௮)

மறுவில்பாஞ்சாலன்பெற்றமங்கையைவையத்தேற்றி
யறிவிலாச்சிந்துநாடனகன்றனனென்றேபாறி
மறையவர்புகலவேகும்வாயுசேயவனைப்பற்றி
யெறுழ்வலிக்கரத்தினாலேபுடைத்தனனிரத்தங்கக்க (௨௯)

புரத்தினையெரித்தோன்போலப்புகையுயிர்த்தனிலன்மைந்தன்
கரத்தினாலூரத்தின்மோதிக்கயவன்றோள்கயிற்றால்வீக்கிச்
சிரத்தினிற்சிகையையைந்தாய்ச்சிரைத்தொருநொடிப்பின்முன்னம்
விரித்திடுங்குழலாளோடுமேவினன்விறலின்மிக்கான் (௩0)

சிரமிசைச்சிகையைந்தெய்துஞ்சீரிலாவரசன்றன்னைத்
தருமன்முன்காட்டவேதன்றங்கைதன்கொழுநனான
நிருபனைவிடுதியென்றுநிகழ்த்துதலுமனிலன்மைந்த
னுரமிசைமோதிப்போதியென்னவேயோட்டினானால் (௩௧)

வெருவியேபாறுஞ்சிந்துநாடன்மெய்த்தவந்தான்செய்ய
வரனவணெய்திக்கொன்றைமாலையோடயத்தண்டீந்தே
யொருதினத்தைவர்தம்மைச்செயஞ்செயென்றோதிப்போக
வரவுயர்மன்பாலெய்தியிவையெலாமறைந்தானன்றே (௩௨)

மைத்துனன்றன்னைவீமன்வசையுறச்செய்ததெல்லா
முத்தமக்கங்கைமைந்தன்முதலினோர்க்குரைத்துவெய்ய
குத்திரமனத்தனானகாளமாமுனியைக்கூவிக்
கைத்தலங்குவித்துநின்றேகண்ணிலான்மதலைசொல்வான் (௩௩)

துய்யவகொடியவோமந்தொடங்கிநீமுடித்துக்கானி
னைவரைவதைத்தியென்னவதற்கிசைந்தவன்றானேகி
வெய்யவனாபிசாரம்விளைத்திடச்சூலமேநதுங்
கையுடன்பூதமந்தக்கனலிடையெழுந்ததன்றே (௩௪)

எரியுறுநயனமூன்றுமிருபிறையெயிறுந்தோன்றக்
கரனுறுசூலமேந்திக்கனலிடையெழுந்தபூதம்
விரைவினினுனக்குயான்செய்கருமநீவிளம்புகென்னத்
தருமனோடைவர்தம்மைவதைத்திவண்சார்தியென்றான் (௩௫)

இன்னல்கொண்முனிவனுண்டீதியம்பிடவுயிரினோடு
மன்னவரைவர்தம்மைமண்மிசைச்கண்டிலேனு
னுன்னைநான்வதைப்பனென்றேயுரைத்துயருததிநாப்பண்
வன்னிபோலெழுந்துபூதம்வனத்திடைச்சேரும்வேலை (௩௬)

இந்திரைகொழுநன்றூயவியல்புறுமறனைக்கூவிப்
புந்தியின்முனிவனோமக்கனலிடையெழுந்தபூதம்
வந்துபாண்டவர்கடம்மைவதைசெயாவண்ணநீயே
முந்தியேகாத்தியென்றுமொழிந்தனன்வினைகடீர்ப்பான் (௩௭)

அரியிவையருளக்கேட்டவறனவண்விரைவினெய்தி
யிரலையினுருவமாகியிருபிறப்பாளர்வேள்விக்
குரியபிண்டத்தைவாயிற்கவ்வியேயோடலோடுந்
தருமனோடைவர்சீறித்தொடர்ந்தனர்தரணிமீதே (௩௮)

கடிதினிரலைநூறுகாவதங்கழிந்துபோயோர்
வடவிருக்கத்தின்கீழ்மறைதலும்பாண்டுமைந்த
ரடவியின்வெம்மையாலுமலரியோன்வெயிலினாலு
முடலுளங்கனன்றேயந்தமரத்திடையுற்றாரன்றே (௩௯)

தூயநீர்தருதிரென்றேயறனருள்சுதன்முன்சொல்ல
வேயெனுமுன்னநால்வர்க்கிளையவன்கானினேக
மீயுயரறனங்கேயோர்பொய்கைநீர்விடமதாக்க
வாயவையறிகிலான்மற்றவ்வயமுண்டுமாண்டான் (௪0)

மத்திரைக்கிளையமைந்தன்வருகிலானென்றுபாண்டு
புத்திரர்மூன்றுபேரும்போயயமுண்டுமாண்டார்
வித்தகவறன்றன்சேயினுயிரினைவாங்கிவிஞ்சுங்
கைத்தலத்தமைத்துமேனிகரந்தவணிற்கும்வேலை (௪௧)

நீளியசூலமேந்திநிகரிலாப்பூதமெய்தித்
தாளுயர்கமலம்பூத்ததடத்தினும்வடத்தின்கீழு
மீளிபோன்மாண்டபாண்டுபுதல்வரைவிழித்துநோக்கிக்
காளமாமுனியைநுங்கிக்கனலிடைப்புகுந்ததம்மா (௪௨)

படியினின்மாண்டுவீழ்ந்தபாண்டவர்தம்மைநோக்கிக்
கடிதினிற்பூதமெய்திக்காளமாமுனியைநுங்க
நடுவன்றன்சுதனுக்காவிநல்கிடவெழுந்துதன்மன்
கடிதினீருக்கேகுங்கனிட்டரைத்தேடினால் (௪௩)

படியினிற்கண்ணீர்சோரப்பருவரலுற்றதன்மன்
கடிதினிற்கானினேகிக்கடிமலர்த்தரங்கவாவி
விடசலம்பருகிமாண்டவேந்தரைக்கண்டுவிம்மி
யிடருழந்தரற்றினாலியாவருமிணையிலாதான் (௪௪)

படியினின்மடிந்துவீழ்ந்தபவமிலாவரசரெல்லாம்
விடசலமுண்டுமாண்டாரென்பதையறிந்துவீரன்
கொடியவந்நீரையள்ளிக்குடிக்குமுன்றடுத்துநின்றே
கடிதினின்மறையோனாகியறனிவைகழறலுற்றான் (௪௫)

வாவியென்காவன்மன்னயான்சொலும்வசனந்தன்னை
நீவிளங்கிடவேயாய்ந்துநிகழ்த்தியிந்நீரையுண்டுன்
னாவியைவிடுதியென்றேயறைந்திடவருடியென்று
பாவமில்லரசன்சொல்லவறனிவைபகரலுற்றான் (௪௬)

அருமறைப்படியேதுய்யவறநெறியடங்கக்கூறத்
தருமனுண்டிசையவெல்லாப்பொருளொலாஞ்சாற்றலோடு
மரசவிந்நீரையுண்டுமாண்டவுன்னனுசர்தம்மி
லொருவனுக்குயிர்தந்தேனுனெழுப்புகென்றுரைசெய்தானல் (சஎ)

சுத்தநான்மறையோன்சொல்லத்தூயமாதருமனேகி
யுத்தமமாவலோனையெழுப்பவேயுவந்துநோக்கி
வித்தகவீமன்றன்னைவிசயனையெழுப்பிடாமன்
மத்திரைதனயன்றன்னையெழுப்பியவாறேதென்றான் (சஅ)

குந்திதன்சிறுவனுகியானுளேன்கோதிலாத
வெந்தைதன்னுடனேவானினேகியசிற்றவ்வைக்கு
மைந்தனுநகுலன்றன்னையெழுப்பினன்மாசிலாத
வந்தணவெனவேதன்மனறைந்திடவறனுஞ்சொல்வான் (சகூ)

நீதியினல்வேதத்தினெறியுறுவாய்மைதன்னிற்
பூதலத்தியாருமொவ்வாப்புகழுடையரசவுன்றன்
னேதமிலிளையோரானமூவரையெழுப்புகென்றே
யோதமன்மலர்க்கைநீண்டவெழுந்தனருவகையோடும் (ருO)

தம்பியர்நால்வரோடுந்தருமனுண்டுவந்துநிற்ப
வும்பரின்றன்றன்சிந்தையுவந்துதன்னுருவங்காட்ட
வம்பவிழ்தாரோரெய்திவணங்கலுமவரைநோக்கி
யிம்பரினுமக்கீண்டுற்றவிடர்சொலக்கேளுமென்றான் (ருக)

கடுவரவுயர்த்தோன்கூறக்காளமாமுனிவனென்னுங்
கொடியவனுபிசாரமுடித்திடக்கொண்டன்மீதி
னிடியெனவதிர்த்துச்சூலமேந்தியக்கனலுளெய்து
நெடியபூதத்தையும்மைவதைக்கவேநிகழ்த்திவிட்டான் (ருஉ)

கரியினைவதைத்தகோமானெனக்கிவைகழறலோடு
மிரலையாயாகசாலைப்பிண்டம்யானகவ்வியேகத்
தரையினினீவிரெய்தித்தொடர்ந்திடச்சரியிலாத
விரிவுறவடத்தினீழன்மேவியேகரந்தேன்கேண்மின் (ருங)

அடவியினேகியுன்றனனுசர்களுல்வர்யான்செய்
விடசலம்பருகிவீழ்ந்தார்விழுமியமனநின்றுவி
கடிதினிற்கரத்தின்வாங்கிவடத்தின்யான்கரந்துநிற்கக்
கொடியவெம்பூதம்வெய்யகூற்றெனவெதிர்த்துவந்த (ருச)

மாண்டிடுமுங்கடன்னைநோக்கியேமறங்கொள்பூத
மீண்டுபோய்முனிவன்றன்னைவிழுங்கவேயிடர்கடந்தீர்
பாண்டுவின்குமரரோடும்பவமிலாவிராடனூரி
னீண்டுநீர்கரந்தோராண்டுமிருந்திரென்றேகினுனல் (ருரு)

சிந்துபதி சிரபங்கப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கூOஉரு.

## ககரு-வது பாண்டவர் துசேருரதவாசப் படலம்.

உருவெனவிளங்கித்தோன்றியுருவிலியாகிப்பூவின்
வருதிருவுக்குக்கொண்கனாகிநான்மறைகளெல்லாந்
தெரிகிலதாகிமாயையியற்றியசெங்கண்மாலை
மருவுறுபிறவியோவவாழ்த்தியேயுய்திநெஞ்சே (க)

அந்தமாரறனீதெல்லாமறைந்திடக்கேட்டவைவ
ரிந்திரைசொழுநன்றீமையகற்றியவியல்பினாலே
சிந்தையின்மகிழ்ந்துதூசுவளர்ந்திடச்சிறந்தானோடு
முந்தியேகரந்துசெல்லுமுயற்சிசெய்திருந்தாரன்றே (உ)

விடசலம்பருகியைவர்வீந்தனரென்றுகூறி
யடைகிர்நம்பதியையென்றேயந்தணர்தம்மையேவிக்
கடியவெங்கானமோவிக்கதலிவண்சமுருகன்னன்
மிடையவேவளங்கொண்டோங்கும்விராடமாபுரத்தைச்சேர்ந்தார் (ங)

தருமன்மாமறையோனாகிமடையனாய்ச்சமீரணன்சேய்
மருவொழிவிசயன்பேடியாகிமாநகுலன்பின்னோ
னிருவருமபரியுங்கோவுமியற்றுவாராகித்தூய
வரிவைதான்வனைதல்செய்யுமணங்குமாயடைந்தாரன்றே (ச)

அறுவரும்வடிவுவேறுயடைந்திடவிராடராச
னெறியுறுமறையோன்றன்னைநீயென்பாலிருத்தியென்றே
மறுவிலாமடையனுக்குமாவலோன்றனக்குமண்ணிற்
கறவையாமேய்ப்போனுக்குமவர்தொழிற்கற்பித்தானால் (ரு)

விளையறும்பேடிதன்னைவேந்தன்முன்பெற்றமங்கை
நுனியறுமுத்தரைக்குத்தோழியாயிருத்தியென்று
வனைதல்செய்மடந்தைதன்னைமன்னவன்றன்றேவிக்கே
யினியவண்கோலஞ்செய்திண்டிருத்தியென்றேவினானால் (சா)

சுந்தரவிராடராசன்றேவியாஞ்சுதக்கணைக்கே
யந்தமார்வனைதல்செய்யுமணங்குவாணிபக்கரைவர்
வந்தெனையடைவரென்னைமதிக்கிலாதடர்வார்தம்மை
முந்தியேவதைப்பரென்றுமொழிந்தவளிருக்குநாளின் (எ)

ஏசிலாவிராடராசன்றேவிதன்னிளையோனான
கிசகன்வனைதல்செய்யுங்கிளிமொழியழகுநோக்கி
யாசைகொண்டனன்யானென்றேயடர்ந்திடநடுங்கியோடித்
தேசுறுசுதக்கணைக்காண்டிவையெலாஞ்செப்பினாளால் (அ)

மின்னிடைவிதலையெய்திவிளம்பிடவெருவலென்னா
வன்னமென்னடையாளாடசுதக்கணையறைதலோடுந்
துன்னியதுனிகண்மிக்கதுரோபதையமரும்போழ்தின்
முன்னவண்முன்னரெய்திக்கீசகன்மொழியலுற்றான் (கூ)

ஓவியமுயிர்பெற்றன்னவுருவத்தாள்வனைதல்செய்யுங்
காவிசேர்விழியாளென்னைக்கலவிசெய்தணையாளாகி
லாவிபோமவளையென்முன்விடுத்தியென்றறையலோடுந்
தூவியோதிமம்போல்வைகுஞ்சுதக்கணையிசைந்தாளன்றே (க0)

சுந்தரவடிவின்மிக்கசுதக்கணைவனைதல்செய்யு
மிந்துவின்வதனத்தாளையெழிலுறுகீசகன்முன்
சந்துநீகொடுத்துமீடியெனவவள்சாற்றலோடுஞ்
சிந்தையில்வெருவிச்சென்றாடதிலாவடமீன்போல்வாள் (கக)

விரைவினினெய்திநீசக்கீசகன்முன்னர்மேவி
யரிவைதண்கலவையீந்துமீளுமுன்னறனிலாதான்
விரிகுழலணங்கினாளைத்தொடர்ந்திடவிண்ணினோங்கு
மிரவியைத்தொழுதுநீயேகாவெனவிளம்பினாளால் (கஉ)

தியக்கமுற்றோடுகின்றமின்னிவைசெப்பலோடு
மியக்கனையிரவியேவவவனெழுந்திம்பரெய்தி
மயக்கமுற்றடருவான்றன்மார்பிடையிடிபோன்மோதிக்
கயற்கணிதுனியைநீக்கிக்ககனமீதடைந்தானன்றே (கங)

மன்னவன்விராடன்முன்னரெய்தியுன்மைத்துனன்றா
னின்னலாமுறைகள்செய்தேயென்னைவந்தடர்த்தானென்று
சொன்னமின்றனக்குத்தீயோன்சொல்லியவசனங்கேளா
னென்னலுமடையன்பாலினெய்தியீதியம்பினாளால் (கச)

தழலெனவடருங்கற்பாள்சாற்றலுமெழில்கொள்வீம
னழலுறுமனத்தனாகியரிவைநீயவன்பாற்சென்று
பொழிலிடையடைதியென்றுபுகலுதிமயலினாலே
யுழலுநெஞ்சினனைக்கொல்வனியானெனவுரைத்தானன்றே (கரு)

துனியறவீமனிவ்வாறுரைத்திடத்துயரையோவி
வனைதல்செய்வனிதையெய்திப்பசலையாய்மயல்கொள்வானை
நனிமலர்ப்பொழிலின்யானேநண்ணுவனீயுமெய்தென்
றனநடையணங்குகூறமகிழ்ந்தவணடைவனென்றான் (கசா)

கீசகனுடனிவ்வாறுகிளத்தியேவடமீன்போல்வா
ளேசிலாமடையன்றன்னோடியம்பலுமுனிந்துவீமன்
வாசமார்பொழிலினாப்பண்மண்டபமிசையின்வைக
நாசமாநீசனந்தநள்ளிருளிடையின்வந்தான் (கஎ)

தூயமாமண்டபத்திற்றுயில்கொள்வான்போலுற்றானை
யாயிழையென்றுகையாலணைத்தின்பமறையலுற்ற
தீயனைமுடுகிவீமன்சினத்தவன்சிரத்தின்மோதி
யேயெனுமுன்னமாங்கேவதைசெய்தேயேகினானால் (கஅ)

மடிந்திடுங்கீசகன்றன்னனுசராமறவரெய்திக்
கடந்தருகரியையேயுங்கயவனைக்கனலினிட்டே
மடந்தையர்திலதமன்னவனிதையையனலுட்போடத்
தொடர்ந்தவர்தம்மைவீமனியக்கனாய்த்துணித்துவீழ்த்தான் (ககூ)

வனைதல்செய்வனிதையாடன்மயறனாற்கீசகன்றா
னினியதன்னனுசரோடுமியக்கனாலிறந்தானென்றே
துனியுறுவிராடனோடுஞ்சுதக்கணையிடரின்வீழ
மனமகிழ்ந்தைவரோடுமடந்தைதானிருக்குநாளின் (உ0)

படவரவுயர்த்தகோமான்பாண்டவர்பன்னீராண்டு
கடியவெங்கானினெய்திக்கரந்துறையோராண்டுள்ளே
புடவியிலவரைக்கண்டுவெளிப்படுத்திடப்போந்தூத
ரடையவேயவனியெங்குமடர்ந்திடவேவினானால் (உக)

கொடியமன்கூறத்தூதர்குவலயமெங்குந்தேடி
வடிவுடையவரைக்காணார்மன்னர்மன்னவன்முனெய்தி
யடவியின்வரையிருட்டினளப்பிலாப்புரியிற்காணேம்
விடசலமைவருண்டுமடிந்ததேமெய்மையென்றார் (௨௨)

தூதுவர்மொழியக்கேட்டுச்சுயோதனன்மகிழ்ந்தலோடு
மேதமில்கங்கைசெம்மலியம்புவான்பாண்டுமைந்தர்
மாதவனருளில்வாழ்வோர்மடிந்திடார்சூதிற்றோற்றே
யோதியபதின்மூவாண்டுமொருவிடவருவரென்றான் (௨௩)

கங்கைதன்மைந்தன்கூறக்கண்ணிலானருளுஞ்செம்ம
லங்கண்மால்சகாயரானவைவர்கள்விடநீருண்டு
மங்கிலாரென்னிலன்னாருறையுமாபதியைநீயே
திங்களின்மரபின்வந்தாய்செப்புதிதெரியவென்றான் (௨௪)

அரவுயர்வேந்தன்கூறவருள்செறிகங்கைமைந்தன்
றருமன்வாழ்வளநாடெல்லாந்தருமமெய்நீதியோங்க
வரிவையர்கற்புண்டாகியாநிரைபல்கியாரு
மிருநிதியுறவேபைங்கூழெங்கணுமிலங்குமென்றான் (௨௫)

ஏசறுகங்கைமைந்தனியம்பலுஞ்சுயோதனன்றான்
மாசறுதூதர்தம்மைநோக்கியேவாரிசூழுங்
காசினிமுழுதுந்தேடித்திரிந்தீர்கவின்கொண்டோங்குந்
தேசுறுநாடேதென்றுதெரிவுறச்செப்புமென்றான் (௨௬)

அரசனீதுரைத்தலோடுந்தூதுவரறைவராற்றின்
கரைசெறிபொழினீள்கன்னல்கதலிபூங்கமுகுசெந்நெல்
விரைசெறிந்திலங்குகின்றவிராடன்மாவளநாடென்றே
யுரைசெய்தோரற்புதங்கேண்மன்னவென்றோதுவாரால் (௨௭)

மாசகல்வனைதன்மின்னாண்மீதுறுமயலினாலே
கீசகனனுசரோடுங்கிளர்ந்துறுமியக்கனாலே
நாசமுற்றனனென்றந்தநன்னகர்நடுங்குமென்றே
யாசகறூதர்கூறவரவுயர்துவசன்சொல்வான் (௨௮)

கீசகன்றன்னைச்செற்றான்கேசரிநிகராம்வீமன்
மாசகல்வனைதன்மின்னாடுரோபதன்மகளேயாகு
மேசகனகரந்தன்னினால்வருமிருப்பரென்றே
யாசுறுமனத்தனாகிச்சுயோதனனறையலுற்றான் (௨௯)

விறல்செறிமல்லர்தம்மைவிராடன்மாபுரியினேவிற்
றிறலுடையவன்றன்மல்லர்திறலினைச்செற்றபோது
குறைவிலாவீமனாங்கேயிருந்திடினிவரைக்கொல்வ
னறிவதற்கிதுவேநல்லகருமமென்றறைந்தான்பின்னர் (௩௦)

ஆயிரமல்லர்தம்மையழைத்தவர்க்காடைநல்கித்
தூயமாவிராடனூரிற்றொலைவிலாமல்லர்தம்மை
யேயெனுமுன்னமெய்திவதைத்திடுமென்றலோடு
மீயுயர்வரையுங்கானும்விரைவினிற்கடந்துபோனார் (௩௧)

கடிதினினெய்திமல்லர்விராடனைக்கண்டவ்வூரின்
மிடலுடைமல்லர்தம்மோடமர்செய்துவீட்டவீமன்
மடையனாண்டவரையெல்லாம்வதைத்தொருமலனைவிட்டா
னிடையனாங்கவன்றன்சென்னிபின்னுறத்திருப்பிவிட்டான் (௩௨)

கடிதினினவன்றானெய்திக்கண்ணிலான்மைந்தனோடு
மிடலுடைமல்லரவ்வூர்மல்லரைவீட்டலோடு
மடையனாண்டவரையெல்லாம்வதைசெய்தேயென்னைவிட்டா
னிடையனென்வதனம்பின்னேயுறத்திருப்பினனீதென்றான் (௩௩)

என்றிவைமல்லன்கூறவெதிரிலாச்சுயோதனன்றான்
கன்றியமனத்தனாகிக்கடுந்திரட்பகைஞர்பாரிற்
பொன்றினதில்லையென்னாப்புகன்றவன்விராடனாட்டிற்
றென்றிசையேகிச்சிந்துநாடநீசெருச்செய்யென்றான் (௩௪)

சிந்துவுக்கிறைவன்றேரினேறித்தென்றிசையினேகி
யந்தெதிர்பொருதுசீறும்விராடனைவரிவிற்கோலி
யுந்திடுபகழிதன்னாலொண்சிலையிரதம்பாரிற்
சிந்திடவறுத்துத்தோளைப்பிணித்தனன்சேனையார்ப்ப (௩௫)

விறலுறுஞ்சிந்துநாடன்விராடனைப்பிணித்தலோடு
மறலிபோற்சீறிவீமன்மைத்துனன்றன்னைப்பற்றித்
திறலுடைக்கரத்தினாலேசிரத்தினைத்திருகுமுன்ன
மறன்மகன்விலக்கலோடுமாருயிருய்ந்துபோனான் (௩௬)

சிந்துவுக்கிறைவனோடுவிராடனைத்தேரினேற்றி
யந்தமாரறன்சேய்வீமனருச்சுனற்கிளையவீரர்
தந்திவெம்பரிமாச்சேனைதரணியினிறைந்துசூழச்
சிந்தையின்மகிழ்வினோடுந்தேரிடைச்செல்லும்வேலை (௩௭)

அத்தினபுரியையாள்வோனாநிரைகவர்ந்துகொண்டே
வுத்தரதிசையினெய்தவுத்தரன்முனிவினோடும்
வித்தகவிசையனேயவீரர்கடம்மையெல்லாங்
கைத்தலக்கணையினாலேவதைசெய்வன்காண்டியென்றான் (௩௮)

வசையிலாவிராடராசன்மகனிவைகூறலோடு
மசைவில்கற்புடையளாயதுரோபதையவனைநோக்கி
விசையனுக்குவமைநீயோமின்மினிவெள்ளியாமோ
சசிகுலவலனைத்தூக்காதெள்கல்சாற்றுதியோவென்றாள் (௩௯)

வீடுமன்விதுரன்கன்னன்வேதியனவன்றன்மைந்தன்
கோடுகண்முழக்கிவெய்யகொடுஞ்சரம்பொழியும்போழ்தி
னீடியபகழிதூவிநீயெதிர்நிற்கலாற்றாய்
பேடிதேரூரில்வெல்வையென்றிவைபேசினாளால் (௪0)

வித்தகவைவர்தேவியானமின்கூறலோடு
முத்தரன்றங்கையானவுத்தரைதன்னைநோக்கி
யத்தினபுரியையாளுமரசனையமரின்வெல்லச்
சித்திரமணித்தேர்பேடியூர்கெனச்செப்புகென்றான் (௪௧)

சீருறுமுன்னோன்கூறச்சிறந்தவுத்தரைதானேகி
யேருறும்பேடிதன்னையிருகையாற்றழுவிநோக்கி
நேரிலொன்னலரைவெல்லநீயெந்தைசுதனுக்கின்று
தேரினையூர்தியென்னவிசைந்தவன்சென்றானன்றே (௪௨)

ஓதுதற்கரியபொற்றேருத்தரைதோழியூர
வேதமில்விராடன்சேய்தானேகியேசுயோதனன்றன்
போதகமிவுளிவீரர்புணரிபோலார்ப்பக்கண்டு
பீதியோடோடலோடும்பேடிகைபிடித்துச்சொல்வான் (௪௩)

செருவலவொருமைச்சிந்தைசேர்க்கலாய்ப்படியிற்பாற
னிருபருக்கடுக்குமோதானீயின்றுவெருவலென்று
வரனெடுநெடித்தாள்சோயிலணுகியாயுதங்களெல்லாம்
விரைவினிற்காட்டலோடுமுத்தரன்விளம்பலுற்றான் (௪௪)

பாரியகதையும்வில்லும்படைகளுமாரதென்ன
வேருறுபாண்டுமைந்தரெடுக்குமாயுதங்களென்றான்
நேரிலாக்குந்திமைந்தரெங்குளார்நிகழ்த்தியென்று
வீரவுத்தரன்றான்கூறவிசையனுங்கறையலுற்றான் (௪௫)

மறையவன்றருமன்வீமன்மடையன்மாவலவனீதி
யறிவுறுநகுலனயனாகியசாதேவன்றான்
மறுவிலாவுந்தைதன்பால்வயங்கினர்வளைதல்செய்வா
னெறியுறுபாஞ்சாலன்றன்மகளெனநிகழ்த்தினானால் (௪௬)

பீடுடைவிசையன்கூறவுத்தரன்பேசுவானெண்
ணாடவர்திலகனானவருச்சுனனெங்கேயென்னப்
பேடியாம்யானேபார்த்தனென்றுபேர்பத்தும்பேச
வாடுறுமாலையோடும்வயங்கினன்கிரீடியம்மா (௪௭)

வித்தகவிசையனாகிவிளங்கினின்றானைநோக்கி
யுத்தரன்பணிதலோடுமுவந்தெடுத்தணைத்துக்கொண்டு
சத்துருவெனவேயெய்துநிருபரைச்சமரின்வெல்லச்
சித்திரமணித்தேரூர்திநீயெனச்செப்பினானால் (௪௮)

உத்தரன்றேரையூரவுத்தமவிசயனேகிக்
கைத்தலத்துயர்காண்டீபங்கடிதினில்வளையவாங்கி
யத்திரமாரிபெய்தேயாநிரையெல்லாமீட்டாண்
டெத்திசைதோறுமொன்றாரிரிந்திடக்கணைபெய்தார்த்தன் (௪௯)

மறையவனவன்றன்மைந்தன்வானதிபுதல்வன்கன்ன
னிறுதியின்மழையையேலவெய்தவரார்ப்பப்பார்த்தான்
மறுவிலாவாளியெய்துமாற்றியேயவர்கள்கையி
னுறுசிலைகொடிதேரெல்லாமறுத்திடவோடினாரால் (௫௦)

அரவுயர்வேந்தனெய்தியடுகணைசொரியப்பார்த்த
னொருகணையதனான்மாற்றியுரத்தொருவாளியேவ
வெருவியேகுருதிவாயின்வீழ்ந்திடகிருபரோடு
மரிவரக்கண்டதோல்போலவனியினோடினாரால் (௫௧)

வானதிபுதல்வன்கன்னன்மறையவனிவுளித்தாமா
னானமேமலியுந்துச்சாதனனுயர்சுயோதனன்றா
னீனமேமலியப்பாறவெழில்கொண்மாவிசயன்பாரி
னாநிரையடையமீட்டானமரர்கடுதிப்பவம்மா (௫௨)

ஏதமில்விராடன்சேயோடிந்திரன்செம்மல்சொல்வான்
மாதுதானலாதபேடியாகியேவருவன்போரின்
வேதியன்முதலோர்தம்மைவென்றுநீநிரைமீட்டாயென்
றோதவேதூதர்தம்மையுந்தைபால்விடுத்தியென்றான் (௫௩)

ஈதுறவுரைத்துப்பேடியாகியேயிரதமூரத்
தீதுறுசுயோதனன்றான்சேனையோடிமைப்பின்முன்னம்
பீதியோடோடயானேவென்றனனென்றுபேசித்
தாதைபால்விடுத்தான்றூதர்தம்மையுத்தரன்றான்மன்னோ (௫௪)

வீடுமன்முதலினோரைவென்றுன்சேய்மீண்டானென்றே
பீடுடைவிராடன்முன்னரெய்தியதூதர்பேச
நாடுடையரசர்கோமானலனுறுமகிழ்வோடெய்தி
நீடியகோடிகள்வானினிறையுமாநகரிற்சென்றான் (ருரு)

இரவிசேய்முதலினோரையிமைப்பின்முன்வென்றுன்மைந்த
னிரையினைமீட்டானென்றுதூதுவர்கிழத்தலோடுங்
கரைசெயற்கரியதாயகளிப்புடன்மறையோன்றன்னோ
டொருவிசைசூதிற்றேற்றமன்னவனுரைக்கலுற்றான் (ருசு)

வீடுமன்முதலினோரைவென்றவென்சுதன்போலிச்சூ
தாடியேவெல்வனென்னவரவுயர்வேந்தன்பாற
நீடியபகழிதூவிநின்மகன்செயிக்கமாட்டான்
பேடியேவென்றானென்றுபேசினன்மறையோன்மாதோ (ருஎ)

வேதியனுரைத்தலோடுமெலிவுடனென்றன்மைந்த
னுதவனெனவேயேகியரசரையமரின்வெல்லத்
தீதுறுபேடிவென்றானென்றனையென்றுசீறி
யேதமில்பலகைதன்னிலெறிந்தனன்கவற்றைமன்னன் (ருஅ)

பற்றியேயெறியத்துய்யபலகையிற்றைத்துமீதி
னுற்றிடுகவறுசென்றேயொளிதிகழ்வேதியன்றன்
னெற்றியிற்றாக்கலோடுநிறைந்திடுகுருதிசோர
விற்றொழில்விராடனோந்தேயினியனவிளம்பும்வேலை (ருகூ)

உவமையிலிரதமீதினுத்தரன்பேடியோடு
நவமணிவயங்கும்வீதிநண்ணியேமாதர்வாழ்த்தப்
பவமறுதந்தைபாதம்பணிதலுமைந்தன்றன்னைத்
தவமுறுமன்னனன்பாற்றழுவியேமகிழ்ந்தானன்றே (கூ0)

வேறு. தாதையோடொளிர்மணிக்கோயில்சார்ந்தவன்
றீதுறுசுயோதனன்சேனையார்ப்பவே
பீதியாலோடினன்பேடியாகிய
வேதமார்விசயனேசெருவென்றானென்றான் (கூக)

வேறு. மறையவன்மடையன்கோலமாவலன்கோவலன்றான்
பொறையுறுபாண்டுபெற்றபுதல்வர்நால்வருமேகண்டாய்
மறுவிலாவனைதல்செய்யுமடைந்தைதானோரோவென்னி
லறிவுறுபாஞ்சாலன்றனருளியவரிவையென்றான் (கூ௨)

விற்றொழில்விசயன்றன்னோடிவர்களுமேவியேதா
னுற்றனரிவணினென்றேயுவகையார்மைந்தன்கூறக்
குற்றமில்விராடராசன்மகிழ்வொடுங்கோதிலாத
நற்றவத்தருமராசன்முன்னரினண்ணினானல் (கூ௩)

வேறு. மைந்தனோடெய்தியேவிராடமன்னவ
னந்தமாரறன்சுதனடிபணிந்தெழுநிற்
செந்திருவனையவுத்தரையைச்சீருறு
மிந்திரன்மதலைக்கின்றீவனென்றனன் (கூச)

தீதிலாவிராடர்கோன்செப்பலோடுமே
நீதிசேர்பற்குனனீயுன்கோதையை
யாதவன்மருகனுக்கீதியென்றுதா
னோதியேயவனருளுதகமேற்றனன் (கூரு)

அரிவையையரிமருமகனுக்கன்புறத்
தருதியென்றுயருமாவிசயன்சாற்றலு
மிருவினைதுணியக்சாமத்தினெய்திலாப்
பெருமையனிவனெனத்தருமன்பேசுவான் (௬௬)

நீதியுந்தருமமுநெறியுமாண்மையு
மாதவர்வியந்திடுமாதர்சுற்றமு
மேதமிலெம்பியாம்விசயற்கெய்துமென்
றோதியேமகிழ்ந்துயர்தருமனுற்றனன் (௬௭)

பாண்டவர் துசேருரதவாசப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௦௬௨.

## ௧௧௬-வது உத்தியோகப் படலம்.

தந்தைதாய்மனையுளாடவையரென்றுறுஞ்
சிந்தையாம்பவமெனுஞ்சிந்துநீந்தொணு
வுந்திடும்பிறப்பிறப்பொழியவேண்டுமே
லிந்திரைகொழுநனையேத்திவாழ்மினே (௧)

சூரர்களைவருஞ்சூதிற்றோற்றபின்
னீரறுவருடமாவனத்தினெய்தியே
வீரியவிராடனூர்மேவியேகரந்
தோரொருவருடம்வெந்துயரந்தள்ளியே (௨)

கரந்துறைகாலமொன்றேகவேகவின்
பொருந்தியமெய்யினர்புகலுமாரணந்
திருந்தியமறையவர்திரளினோர்க்கெலாம்
விருந்தினராகியேவெளிசெய்தாரரோ (௩)

மாதவவிராடமாபுரத்தின்வைகியே
வேதனையொருவியேவெளிசெய்தோமென
யாதவன்றனக்குநீரியம்புவீரெனத்
தூதரையேவினான்றூயதன்மனே (௪)

வாயுவின்விசையெனவழிக்கொடேகுவ
ரேயெனுமுன்னரிற்றுவரையெய்தியே
மாயவனடிமிசைவணங்கியைவராந்
தூயவர்செயலெல்லாஞ்சொல்லினாரரோ (௫)

மன்னவரைவரும்மறுவிலாதுயர்
மின்னிடையாளொடும்வெளிசெய்தாரெனச்
சொன்னதூதுவர்க்கெலாஞ்சுவர்ன்னமீந்தனன்
பன்னகப்பாயலிற்பள்ளியோவினான் (௬)

மாதவரெண்சுபத்திரையென்னுமங்கையோ
டாதவனெனவயங்கபிமன்றன்னோடு
மீதுயர்தேர்மிசைவிளங்கத்தோன்றியே
சீதரன்விராடமாநகரிற்சேர்ந்தனன் (௭)

மாயவன்றேர்மிசைவரலும்பாண்டவ
ரேயெனுமுன்னரினெய்தியின்புறத்
தூயவனடிமிசைவணங்கச்சோதியோ
னேயமோடணைத்தனனிகரிலவரை (அ)

துடியிடைத்துரோபதைதூயகண்ணிலீர்
படிமிசைநிறைந்திடப்பணியயாதவன்
கடிமலர்க்குழலியைக்கையினாலணைத்
திடரறவினியசொல்லியம்பினனரோ (கூ)

வீரியவபிமன்வந்தடியின்வீழ்தலு
மேருறுமைவர்மெய்யிறுகப்புல்லினர்
சீருறுதுரோபதன்மகடன்சேயரோ
டாரமார்பொளியுறவணுகினனரோ (க0)

இன்னலில்விராடனூரிலங்கவைவர்கண்
மின்னிடையாளொடும்வெளிசெய்தாரெனப்
பன்னகப்பாவையும்பாண்டிநாடியுந்
துன்னியமகிழ்வொடுஞ்சுதரொடெய்தினர் (கக)

தென்னவன்சீருறுசோழன்சேரனு
மன்னவன்கேகையன்முதலினோர்கண்மாத்
துன்னியவிரதமேற்றுலங்கித்தோன்றியே
யின்னலின்விராடன்மாநகரினெய்தினர் (கஉ)

அத்தினபுரியின்மன்னயநமெங்கணு
நித்திலமனையிலோதனநிறைத்திட
மத்திரன்மன்னவன்வழிநின்றேயவை
மெய்த்தருமன்றொடுவிளம்பியேகினன் (கஙு)

நத்தொடுதிகிரிகைதிசமூநாரணன்
மைத்துனன்மாரொடுமகிழ்வேதிசை
யத்தியைநிகர்த்திடுமபிமனேரிலா
வுத்தரைதன்னையேயுவந்துவேட்டனன் (கச)

துன்னுமிந்நலனுறத்துலங்குமைவரா
மன்னவர்தங்களைமாயனோக்கியே
பன்னகத்துவசன்பாற்பாரைவேண்டியே
யின்னலிலொருவனையேவுமென்றனன் (கரு)

மாதவன்மொழிந்திடவுதிட்டிரமனன்
றீதுறுசுயோதனனருகுசென்றுயர்
நீதியின்வருமரசளித்தியென்றுநீ
யோதுதியெனவுலூகனையங்கேவினன் (கசு)

வேறு. அரவுயர்வேந்தன்றன்பாலேகுமந்தணனையூங்கார்
தருமனீயென்பாலெய்தவரவிடுகென்றுசாற்றித்
திருமகள்கணவன்றேரிலேறியேதேவரேத்த
விரைசெறிபொழில்கள்சூழுந்துவரையின்மேவினானால் (கஎ)

துவரையின்மாயோனெய்தத்தூயவேதியன்றுனேகி
நவையுறுசுயோதனன்பானண்ணியேதருமன்பாதி
யவனியையீதியென்னவவன்மறுத்திடலுமீண்டு
பவமறுமறையோன்பாண்டுமதலைக்குப்பகர்ந்தானன்றே (கஅ)

நியவனுரைத்ததெல்லாஞ்சென்றுநீமறையோய்தூய
மாயனுக்குரைத்தியென்னவறனருண்மைந்தன்கூற
வாயர்நாயகன்முனெய்தியசேதனச்சுயோதனன்ற
னீய்கிலேனவனியென்றனென்றுவேதியனுஞ்சொன்னான் (கக)

அந்தணனுரைப்பக்கேட்டேயருள்செறிமறையோயேகி
யிந்திரன்சுதனையென்பால்வரவிடுகென்றேயேவி
யந்தமாயிரண்டுபீடமடிமுடியருகினுக்கிச்
சுந்தரன்றுயில்வான்போலத்தூயமெல்லணையிற்சேர்ந்தான் (உ0)

திருமகள்கொழுநன்றுய்யசேக்கையிற்றுயில்கொள்வேலை
யரியையாகவந்துக்காக்குந்துணைகொள்வானுகியாங்கே
விரைவினிற்சுயோதனன்றன்மேவியேயுலகமுண்ட
பெரியவன்முடியின்பக்கப்பீடமேலிருக்கும்வேலை (உக)

கடிதினின்மறையோனெய்திக்கவினுறுந்தருமனேடும்
படியினையளந்தோன்றன்பாற்பார்த்தனைவரவிடென்றன்
கொடுமையிலரசவென்றுகூறலும்விசயனெய்தி
வடிவுடைமாயன்பாதமருங்கினர்பீடத்தற்றன் (உஉ)

இயல்புறுவிசயனெய்தலோடுமவ்விறைவனுங்கே
துயிலுணர்பவன்போன்முன்னந்தூயவன்றனைநோக்கிக்
கயவனையதன்பின்னுகக்கண்டுமெய்யமுந்தப்புல்லிப்
புயல்வணனிருவோரீங்குபோந்தமைபுகலுமென்றன் (உங)

முற்குணன்மொழிதலோடுமுன்னர்யான்வந்தேனென்று
நற்குணனெனக்குநீயேசமரிடைத்துணையாகென்னப்
பற்குனன்முன்னரென்னைக்கண்டனைபரமவென்ன
நற்குணன்கயவன்றனைநோக்கியேநவிலலுற்றன் (உச)

முன்னநீயெய்தினுலுமுகிலினையூர்திமைந்தன்
றன்னையான்முன்னர்நோக்கிப்பின்னுனைக்கண்டேன்றழ்வில்
மன்னயான்முன்கண்டார்தம்வசத்தனுயடைவேனென்று
சொன்னவன்சுதர்கடம்மைச்சுயோதனன்றனக்காண்டிந்தான் (உரு)

இந்துசேகரனைநோக்கியான்றவமுயன்றுபெற்ற
மைந்தரோடக்குரோணிமறுவிலாச்சேனையெல்லாந்
தந்தனனுனக்கென்றேதச்சக்கரமெடுப்பாயல்லை
நந்தொளிர்கரத்தாயென்றுநவின்றவனேகினுனல் (உசு)

அரவுயர்வேந்தனேகவருச்சுனனேடுமையன்
விரைவினிலிரதமேறிவிராடமாபுரியினெய்தத்
தருமனேடைவரெய்தியிறைஞ்சலுந்தழுவியன்பா
னிருபர்கணிறைந்துசூழநேமியோனமருநாளின் (உஎ)

சோமனேர்கவிகையோங்கச்சுயோதனன்பதியினெய்தி
மாமன்வானதிதன்மைந்தன்மைத்துனன்கன்னனேடே
காமனுர்தந்தைகாமன்காளைதன்வசத்தனுக
நேமிமால்கரத்தெடாமனிறுத்தினனென்றுசொன்னான் (உஅ)

அக்கிரமத்தால்வாழுமரவுயர்வேந்தன்கூற
விக்கிரமத்தான்மிக்கவீடுமன்விளம்பலுற்ற
னுக்கிரமெய்ப்போர்தன்னினுதிட்டிரனிடைந்தான்மாயன்
சக்கரமெடுத்ததிண்ணஞ்சமரிடைக்காண்டியென்றன் (உகூ)

அஞ்சனவண்ணனாழியெடுத்திடினமரினாற்றாய்
வஞ்சகச்சூதின்வென்றமண்ணினையருடியென்றே
செஞ்சொலாற்கங்கைமைந்தன்செப்பமன்சீறியேகச்
சஞ்சயன்றனக்குத்தீயவந்தமன்சாற்றலுற்றான் (௫௰)

விரைவினிற்சிவிகையேறிவிராடன்மாபுரியினெய்தித்
தருமனைநண்ணிநீயேசமர்பொரநினைந்தாயாகிற்
குருவொடுதந்தைசேயையிளைஞரைக்கொன்றேயாளு
மரசினினவதீர்த்தங்களாடுதனன்றென்பாயால் (௫௧)

நீதிசெய்தருமராசநினக்கடாச்சமரஞ்செய்தா
லேதமார்நிரையந்தன்னுளெய்துவாயிவையைத்தள்ளி
மாதவம்புரியென்றான்றன்றந்தைசொல்வழங்கினானென்
றோதியேசமர்மூளாமலொழித்துநீவருதியென்றான் (௫௨)

அரவுயர்வேந்தன்றாதையருளவேசஞ்சயன்றான்
றெரிமணிச்சிவிகைமீதிற்றிசைமுகனென்னவேகி
விரைசெறிபொழில்களோங்கும்விராடன்மாபுரியினெய்தித்
தருமன்முனெய்தலோடுமவனிவனடியிற்றாழ்ந்தான் (௫௩)

தருமனைநோக்கிநேரில்சஞ்சயன்மொழிவானுந்தை
யுரையினைக்கேட்டிதூயவுறுதவத்தொருவனாகி
யருவினைதுடைத்தநீதானமர்பொரநினைதியாகிற்
குருவதைமுதலாய்வெய்யகொடுமைகள்சூழுமென்றான் (௫௪)

இன்னலார்சுயோதனன்றானென்றுமென்வசனங்கேளா
னென்மகனீயேயான்முன்னவின்றவையெல்லாங்கேட்டாய்
துன்னியவினைகடீரத்தூய்தவம்புரிதியென்று
மன்னவவுன்றன்றாதைவழங்கியசொல்லீதென்றான் (௫௫)

சஞ்சயன்மொழியைக்கேட்டுத்தருமன்வெண்முறுவல்செய்தே
விஞ்சியசமரபூமிமிடைந்துறுபோர்செய்யாம
லஞ்சினவரசரேழாநீகோத்தினடைவரென்று
செஞ்சொனான்மறைகளோதும்பொருளினைத்தெரித்தியென்றான் (௫௬)

ஆதலின்மறைகளோதுமருந்தவகேட்டிவஞ்சச்
சூதினில்வென்றமன்னன்றுவாதெசத்துடனோராண்டுஞ்
சேதமார்வனத்தினேகிக்கரந்திவணெய்தினோர்க்கெம்
பாதிநாடீயானாகிலமர்செய்யப்பணித்தியென்றான் (௫௭)

இயல்புறுதருமனிவ்வாறுரைத்திடச்சஞ்சயன்றான்
செயலுறுசிவிகையேறிச்சென்றிபநகரிற்சேர்ந்து
நயனமில்வேந்தனோடேயிவையெலாநவிலலோடுந்
துயருறுமனத்தனாகியிருந்தனன்றூய்மையில்லான் (௫௮)

சஞ்சயனுரைத்தவாறுந்தானதற்கிசைத்ததெல்லா
மஞ்சனவண்ணமாலுக்கறைந்தனன்றருமராசன்
கஞ்சனைக்களைந்தோனுங்கள்கருத்தினைத்தெரியக்கூறு
மெஞ்சன்மன்னவரேயென்னவறன்சுதனியம்புகின்றான் (௫௯)

மாதவகேட்டிவெம்போர்மலையும்போதிளைஞர்தம்மை
தாதையைக்குருவையொப்பில்பிதாமகன்றன்னைச்செற்றே
யேதம்வந்தடையாவண்ணமிரவிசேய்ச்சகாயன்முன்னா
தூதுநீபோகவேண்டுஞ்சுருதிநாயகனேயென்றான் (௬௰)

அறன்மகன்கூறலோடுமடுசினத்துடனேநோக்கி
விறலுடைவீமன்றுய்யவிசயன்மாநகுலன்வேத
நெறியுறுமிவர்கள்மூவர்நேமியாய்நின்றுதேகிற்
சிறுமையாய்முடியுமென்றேபின்னருஞ்செப்பலுற்றார் (சக)

மறனுறுஞ்சூதினாலேமண்கவர்ந்ததுவுமன்றி
யறனுறுதுரோபதன்றானருளியவணங்கினாளை
நிறைமலர்க்குழலைப்பற்றிநெடுந்துகிலுரிவித்தான்பா
விறைவநீயிரந்தமண்ணாண்டிருப்பதோவீரமென்றார் (சஉ)

ஒன்னலனாகிவாழுமுரககேதனனைச்செற்று
மின்னிடையணங்கினாடன்விரிகுழன்முடிக்கவோங்கு
யின்னிலத்தமரின்வென்றேயேகவெண்குடைக்கீழாளா
மன்னவனுடனேயாங்கள்பிறப்பதென்மாலேயென்றார் (சங)

மிகமுனிந்துழன்றுவீமன்விசயன்மாவலன்கூற
நிகரிலாமாயோனோக்கிநீதிசேர்தருமன்சொல்லை
யிகழ்கிலீர்தருமம்வென்றியீந்திடுமென்றுசொல்லி
நகுலன்பின்னவனைநோக்கிநவிலுநின்கருத்தையென்றான் (சச)

மாதவன்மொழியக்கேட்டுமத்திரைக்கிளையமைந்த
னோதுவானையநீதானுரககேதனன்பாலின்று
தூதுதானேகிலென்வாழ்சுயோதனன்மடியவெம்போர்
காதநீநினைந்தாலென்னுன்கருத்தையாரறிவரென்றான் (சரு)

குரகதவலவன்பின்னோன்கூறிடவவனைநோக்கி
முருகவிழ்தொடையாய்நீயுன்முன்னவர்போற்சொலாதே
விரகிவணுரைத்ததெல்லாம்விளம்பௌத்தனித்துக்கூற
நிருகன்றன்வெஞ்சாபந்தீர்த்தநிமலனோடுரைப்பானன்றே (சசு)

அவனியின்பாரநீக்கவரசனாய்நிலத்திற்றோன்றிப்
பவர்களானவரையெல்லாம்படிமிசைவதைத்துவீழ்க்க
வுவமையிலரியேயெம்மையுரககேதனன்றன்னோடே
நவையுறுவிரோதஞ்செய்யுமாயம்யானறிவனென்றான் (சஎ)

சீருறுசாதேவன்றான்செப்பியவிரகுகேளா
வாரியனவனைநோக்கியறைகுவானவனிதன்னிற்
பாரம்யானகற்றுவண்ணமுபாயநீபகர்தியென்னச்
சீரியநகுலன்பின்னோன்றொழுதிவைசெப்பலுற்றான் (சஅ)

வரிசிலைவிசயன்றன்னைவதைத்துயர்மங்கைசென்னிச்
சரியமைக்குழலைநீக்கிக்காலினிற்றளையைப்பூட்டி
யிரவிசேயராசையாள்வித்துயானுனைப்பிணிப்பனாகிற்
றரையினின்வதைசெய்வோரைத்தடுக்கலாமென்றுசொன்னான் (சகூ)

மத்திரைக்கிளையமைந்தன்மொழிந்திடமாயனோக்கி
யித்தனைவகைசெய்தாலுமென்னைநீபிணிப்பதெங்ங
னுத்தமாவுரைத்தியென்னவுனக்குநானடியனாகிப்
பத்திசெய்மதியினாலேபற்றுவனுன்னையென்றான் (ருo)

குரகதவல்வன்பின்னோன்கூறலுமனந்தரூப
மரகதவடிவாய்நிற்கவனத்தினாநிரையிற்போங்கன்
றொருகுதிகொண்டுதாயையுணர்ந்துறவடைந்தசீர்போற்
பரகதியருளும்பாதத்திணையினைப்பற்றினானால் (ருக)

தூயவன்மனத்திருலேசோதிதன்ருளைப்பற்ற
மாயனுண்மகிழ்ந்துநீயோர்வரத்தினைவேண்டுகென்ன
வாயுதக்குருவின்சேயாலேவகரைவதைசெய்யாம
னீயருள்செய்தியென்னநெடியவன்பெறுதியென்ருன் (ருஉ)

மைத்துனன்றன்னைமாயன்மகிழ்வொடுந்தழுவித்துய்ய
மெய்த்தருமன்றன்முன்னரிருவருமேவலோடு
மத்தியினமர்வோன்றியவரவுயர்த்தவன்பாற்சேர
லுத்தமமென்றுசொன்னுனுயர்சகாதேவன்மன்னே (ருங)

பின்னவன்கூறலோடும்பிறங்கியநெறியின்மிக்க
மன்னவனெழிலிபோன்றமாயவன்றன்னைநோக்கிப்
பன்னகத்துவசன்றன்னைப்பாதிநாடிரந்துகேட்டி
யன்னவன்மறுக்கிலைந்தூர்கொடேனெனிலமர்வேண்டென்ருன் (ருச)

தூயமாறருமனிவ்வாறுரைத்திடத்துயரமுற்றே
வேயுறுதோளிருடன்விழியினீரகற்றிமாய
னீயினியிரங்கவேண்டாநின்குழல்முடிப்பிப்பேனென்
றேயெனுமுன்னரத்திப்பதியினினெய்திருறல் (ருரு)

நிகரின்மாவெய்துந்தன்மைநிகழ்ந்ததுஞ்சுயோதனன்ருன்
பகலவன்குமரன்றூயபகிரதிமைந்தன்சிந்தை
மிகமகிழ்விதுரன்சூழவெதிர்கொளமேவலோடுஞ்
சகுனிதானிடைவந்தெய்தித்தடுத்திவைசாற்றலுற்ருன் (ருசா)

அரவுயர்வேந்தாகேட்டியச்சுதனிவனென்றெண்ணிப்
பரிவுடனெதிர்சென்ருலிப்பாருறுநிருபரெல்லாந்
தருமனுணையினீண்டெய்துந்தூதுவன்றனக்குநீதான்
வெருவினையென்றுசொல்வரென்றவன்விலக்கிருறல் (ருஎ)

மதியிலாச்சகுனிகூறமருளுறவிருத்தலோடும்
விதுரன்மாமறையோன்றூயவீடுமன்கிருதவன்மா
வெதிருறவிவர்களெய்தியிறைஞ்சலுமெழில்கொண்மாயன்
சதுமறையவர்கள்போற்றத்தமனியத்தேர்மேல்வந்தான் (ருஅ)

மாதவர்மகிழ்ந்துசூழமறையவரின்புற்றேக
வேதமில்லரசரெல்லாமிருமருங்கிலங்கியெய்த
மோதுதுந்துமிகணந்துமுழங்கிடமுரசமார்ப்ப
வேதனைத்தந்தோனத்திப்பதியினைமேவிருறல் (ருகூ)

காண்டிபங்கையினேந்துங்காளைதன்சகாயன்வந்தா
னீண்டபார்வான்பாதத்தினளந்தருண்மலன்வந்தான்
பூண்டவன்புழைக்கைமாமுன்னழைத்திடப்போந்தான்வந்தான்
பாண்டவர்தூதன்வந்தானென்றனபைம்பொற்சின்னம் (சூ0)

அதிரதக்குழாங்கள்சூழவமரர்கண்மலர்கடூவ
விதியினைநிகர்த்ததூயவேதியராசிகூறப்
புதிதலர்கமலம்பூத்தபுயலெனப்பொற்றேர்மீதின்
விதுரன்றன்கோயில்சேர்ந்தான்விழுமியகதியையீவான் (சூக)

மறப்பிலெட்டெழுத்துநாவின்வைகுமாமுனிவர்கூட்ட
முறப்பலவேந்தர்சூழவுலகளந்தவன்ருனெய்தப்
பிறப்பினையழித்தேயார்க்கும்பேர்க்கொணுவீட்டினெய்த
விறப்பினைப்பிரித்தேயோடியிறைஞ்சினுன்விதுரனம்மா (சூஉ)

பூதலத்தரசர்தம்மைவிடைகொடுத்தரிபொற்றேரின்
மீதினின்றிழிந்துகோயின்மேவலும்விதுரனெய்தி
யாதவன்னவிரேபோலுமாதனத்திருத்தித்தூய
பாதநீர்தெளித்துட்கொண்டான்சென்னியிற்பவந்தீர (௬௩)

மஞ்சனமாடிமாழைத்துகிலொளிமருங்கிற்சாற்றி
யஞ்சனவண்ணன்றூயவறுசுவையடிசிலுண்டு
விஞ்சியகலவைபூசிவிளங்கியதெரியல்சூடிச்
செஞ்சொலால்விதுரனேத்தத்திகழ்ந்தினிதிருந்தானன்றே (௬௪)

குடதிசையிரவியேகிக்குணதிசைதோன்றலோடும்
படியிணையளந்தமாயோனருக்கியமளித்துப்பார்மேன்
மிடைகரிபரிகடுன்னவிளங்கியதேர்மேலேறிக்
கொடியபன்னகம்வாணெங்குங்கொடியன்பாற்சேரும்வேலை (௬௫)

ஏறுகளடர்த்தோனெய்திவிதுரனில்லிருந்தானென்று
சீறியமனத்தனாகிச்சுயோதனன்செம்பொனாரம்
வீறியமணித்தூணெண்ணிலவிளங்குமண்டபத்தின்மீதின்
மாறின்மன்னவர்கள்சூழவலாரிபோலிருந்தான்மன்னோ (௬௬)

இரவிசேய்பூரிபூரிச்சிராவெழில்விவுளித்தாமாச்
சரியிலாமறையோன்றீயசகுனிசாளவிதன்மைந்த
னாரனூறுசோமதத்தன்பகதத்தனொப்பில்சிந்து
நிருபனோடரசர்சூழவிருந்தனனேரிலாதான் (௬௭)

முடிகதிரொளிபோற்றோன்றமுடங்குளைப்பீடமீதிற்
குடைசசியெனவேயோங்கவயங்கியகுருநாடாள்வா
னிடையனென்னுழையின்வந்தாலெதிரெழுந்திறைஞ்சக்கண்டாற்
படியுறநாடுமாற்றிப்பருந்தளையிடுவனென்றான் (௬௮)

அரவுயர்வேந்தனிவ்வாறுரைத்தவணிருக்கும்வேலை
திருமகள்கொழுநனெய்தச்சிந்துவுக்கிறைவன்றூய
விரவிசேய்சகுனியல்லாரெழுந்துநின்றிறைஞ்சமாழைச்
சரியிலாப்பீடமீதிருனிந்தனன்சார்ங்கபாணி (௬௯)

எதுகுலமன்னனெய்தியிருத்தலுமெரியுநெஞ்சன்
மதிகுலமன்னனானவாளரவுயர்த்தகோவென்
பதியிடையடைந்துமின்றென்பான்மணிக்கோயின்மேவாய்
விதுரனில்லிருந்ததன்மைவிளம்புதிதெரியவென்றான் (௭௦)

தீதுறுசுயோதனன்றான்செப்பியவுரைகள்கேளா
மாதவன்மொழிவான்றன்மன்னரவிடவுன்பால்வந்த
தூதனாயுன்னில்லன்னமருந்திநான்வெறுக்கைதூய்தோ
வாதலால்விதுரனில்லினமர்ந்தனனென்றுசொன்னான் (௭௧)

யாதவனிவ்வாறோதவனலுறுநெஞ்சனாகிக்
கோதுறுகுணத்தனாயசுயோதனன்கூறலுற்றா
னேதமார்விராடன்றன்பாலிழிதொழில்செய்யுமைவர்
தூதனாய்வந்ததன்மைசொல்லுதிதெரியவென்றான் (௭௨)

பன்னகத்துவசனிவ்வாறுரைத்திடப்பரமன்சொல்வா
னுன்னுடன்சூதிற்றோற்றேயுரைத்திடுபதிமூவாண்டு
துன்னியவனத்தினெய்திவருந்தியுங்கரந்துதூய
மன்னவர்வெளிசெய்தார்க்குவழங்குநீயவனியென்றான் (௭௩)

யாதவனுரைப்பக்கேட்டேயறனருண்மைந்தனன்று
சூதினிற்றோற்றநாட்டைவிரகினிலளிக்கச்சொன்னு
லீதலுக்கிசையேனென்னவியாதவனவர்தந்நாட்டிற்
பாதிதானீதியென்னமறுத்தனன்பவங்கொணெஞ்சன் (எச)

மதிகுலத்தைவர்நாட்டிற்பாதிதான்வழங்கேனென்ன
வெதுகுலத்திறைவனைந்தூரீதியென்றிரந்துவேண்ட
வுததியின்விடமேபோலவுரககேதனனுஞ்சீறித்
ததிகளவாடுவாயான்றருகிலனென்றுசொன்னன் (எரு)

அந்தமன்சிறுவனேதுங்கொடேனெனவரியிப்பாரை
யிந்துநன்னுதலியானசிற்றவ்வைசுதனுக்கீந்த
சந்தனுத்தனயனுன்றன்குலத்துளனன்றேதாழ்வி
லுந்தைதன்னிளையோன்மைந்தர்க்குரியநாடீதியென்றான் (எசு)

சுந்தரனிவ்வாறோதச்சுயோதனனகைத்துச்சொல்வான்
றந்தையரைவர்தாயுமொருத்தியேதாமெல்லோருஞ்
செந்துவர்வாயாளாயதுரோபதைதன்னைச்சேரு
மந்தமிலிகழ்விஞரோவொருகுலத்தரசரென்றாய் (எஎ)

குயின்மொழிமடந்தைசுற்றுங்கூறையையவையின்வாங்க
வியல்பறநாணமேகவிருந்துகண்டவருக்காகித்
தயிர்களவினிலுண்பாயுன்சதுரிஞலைந்தூர்கேட்டாய்
மயிர்நுதிமண்ணுமீயேன்மறுத்துரைசெய்யேலென்றான் (எஅ)

மெய்யறுகுணத்தனனவியாளகேதனன்றான்சொல்ல
மையறுமலரின்மீதின்மங்கைநாயகனுஞ்சொல்வான்
பொய்யறுகுந்திதேவிபுதல்வரோடமர்நீசெய்யக்
கையறையென்றலோடுங்கனன்றுதூணறைந்துசொல்வான் (எகூ)

எதுகுலவழியிற்றோன்றியிடையர்தம்மில்லினெய்பால்
ததிகளவினிலேயுண்டுதாம்பினலடிபட்டோடு
மதியிலியுன்னையோராய்மீசறுபிறப்பாமென்னைப்
பதிதனீகைபோடென்றுபகர்ந்தனையென்றுநக்கான் (அ0)

தியவனிவைகளெல்லாஞ்சினத்துடன்செப்பலோடு
மாயவன்முறுவல்செய்துமணிமுடிதுளக்கிவானின்
றூயவான்முகிலேபோலக்கலன்மெயிற்றுலங்கவேகி
மீயுயர்துவசத்தேர்மேல்விதுரன்றன்கோயில்புக்கான் (அக)

எதுகுலத்திறைவனேகவெரியுறுநயனனாகிக்
கதமுறுமனத்தன்காந்திக்கண்ணிலிமதலைசொல்வான்
பதிதனுமிடையன்றன்னைப்பரமனுமென்றுபோற்றி
விதுரனல்விருந்துசெய்தானென்றுரைவிளம்பலுற்றான் (அஉ)

ஒருவனுக்குயிரீவார்போலுருகியேயவனைவிட்டே
யிருநிதியதிகமாகவீந்தவன்றன்னைப்பற்றும்
வரைவிலாமகடான்பெற்றமதலையாமென்றெல்லோருந்
தெரியவேவிதுரன்செய்தசெய்கைநன்றென்றுநக்கான் (அங)

வல்லியமெனவேசீறிமதியிலானுரைப்பக்கேளாச்
சொல்லியநாவைவாளாற்றுணித்துநின்சிரம்பார்வீழக்
கொல்லுவன்முன்னேன்சேயாய்ப்பிழைத்தனையென்றுகூறி
வில்லினைமுறித்துவீழ்த்துவிதுரன்போய்க்கோயில்புக்கான் (அச)

ஏதமில்விதுரன்வில்லைமுறித்துத்தன்மனையினெய்தப்
பூதலத்தரசர்புன்மைபுகலலாகாதென்றேகச்
சூதுறுமனத்தனெண்ணிச்சூரருள்ளமரும்பொய்யா
மாதனமியற்றிமாலைப்பிணித்திடவழைமினென்றான் (அரு)

தூதுவரெய்தியேசுயோதனனழைத்தானென்ன
மாதவனகைத்தாண்டெய்திவயமருளமரும்பொய்யா
மாதனமிசையினேறியடியுறவுறுத்தித்தாளான்
மீதுயரண்டமெல்லாம்விளங்கிடநிமிர்ந்தானன்றே (அசு)

முடிபுயம்விழிகயேமுகமெலாமனந்தமாகிக்
கடிமலரிமையோர்தூவக்ககனவான்முகடுமுட்டி
நெடியவனாகிநின்றுநிலவரையதனில்வைகுங்
கொடியவர்தம்மையெல்லாமடியினூன்மிதித்துக்கொன்றான் (அஎ)

வரையிடையடித்துந்தூயவுகிரினால்வகிர்ந்துங்காலாற்
றரையிடையரைத்துங்கையாற்பிசைந்துமச்சழக்கர்தம்மைத்
திரையுறுகடலுள்வீழ்த்துந்தீயிடைமடுத்துச்செற்று
வொருநொடியிடுவமுன்னமுலகெலாமளந்துகொண்டான் (அஅ)

ஆடகமலர்கவேயமரர்கண்முனியேலென்ன
வீடுமன்முதலினோர்கள்வெருவிநான்மறைகொடேத்த
நீடியமுகடுமுட்டநிமிர்ந்தவனஞ்சலில்லா
மூடனைநோக்கித்தூயமுறுவலோடியம்பலுற்றான் (அகூ)

அரவுயர்துவசநின்னோடனுசரைவதைப்பனென்று
விரைசெறிதொடைசேர்வீமன்விளம்பியசபதத்தால்யான்
றரையினில்வதைத்திடாமற்றவிர்ந்தனனென்றுசாற்றி
நிருபர்களிறைஞ்சநீண்டவடியினையடக்கிநின்றான் (கூ0)

உரககேதனனையோவியுயர்மறையோன்சேய்தன்னை
யிரவியைப்பரிவேடந்தான்வளைத்தமைபார்த்தியென்னத்
தரையிடைவிடுத்தேயாழிதனையெடுத்தீகுவானற்றன்
னிருகையும்பிடித்துச்சேனுபதியெனவிராதேயென்றான் (கூக)

அந்தணன்சிறுவன்றன்னையிரவியைநோக்கென்றாழி
தந்திடுமுன்னஞ்சேனைகாவனீதவிர்கென்றேகிக்
குந்திமுன்பயந்தகன்னன்கவசகுண்டலத்தைக்கோதி
லிந்திரன்கவரமாயமியற்றினானெழிலிவண்ணன் (கூஉ)

இரவிசேயுன்றன்மைந்தனென்பதுகுந்தியென்னுந்
தெரிவைதானுணர்ந்துகூறச்செங்கதிரவன்றன்சேயை
யரவினைப்பின்னும்வில்லாற்றொடுத்தருச்சுனனைக்கொல்லா
விரதமாதாத்தான்வேண்டவிராடன்மாநகரிற்சென்றான் (கூங)

கரியினைவதைத்தோனெய்தக்கண்டைவரிறைஞ்சலோடு
மரவுயர்வேந்தன்றன்பாலணுகியைந்தூர்தான்கேட்ப
வொருமயிர்நுனிதானூன்றுமவனியுமுதவேனென்று
வரைவிலானுரைத்துச்செய்தவஞ்சமுமொழிந்தான்மாயன் (கூச)

மயிர்நுனியூன்றுமண்ணுங்கொடேனென்றமன்னன்போரி
னுயிர்விடச்செருச்செய்தோங்குமொருகுடைக்கீழின்வைகி
யியல்புறுமவனியாளவியற்றுவனென்றேயைவர்
துயரறவுரைத்தலோடுந்தொழுதனர்பாண்டுமைந்தர் (கூரு)

வேறு. தீதறுமவருடன்போர்செயக்குருக்கேத்திரத்தின்
மாதவனவரோடுமணிநெடுந்தேரினெய்தி
யேதமிலனிகமேழச்குரோணிக்குமிறைவனாகச்
சூதறுவிராடன்பெற்றசுவேதனைவிதித்தானன்றே (௯௬)

திருமகள்சொழுநனவருடன்செருப்பூமியெய்த
வுரககேதனன்றன்சேனையொன்பதுமிரண்டுங்கூடி
வருதொகையக்குரோணிக்கிறைவனாய்வானோர்போற்று
மிருநதிமைந்தன்றன்னைவிதித்தவனேகினானால் (௯௭)

அத்தினபுரியையாள்வோனமரிடைவெல்லவேண்டி
மத்திரைக்கிளையமைந்தன்றன்னைமாமுகுர்த்தங்கேட்ப
வித்தகவிரவிவில்லின்வெண்மதியுடனேகூடு
மத்தினம்பலியையூட்டின்வெல்லலாமென்றானன்றே (௯௮)

நிகரிலாநகுலன்பின்னோனிகழ்த்தியமுகுர்த்தங்கேளா
விகல்புரிசுயோதனன்றானெதிரிலாவுவாகிபெற்ற
புகழுடையவனைக்கண்டுகளப்பலிக்கிசைத்துப்போகத்
தகமையில்கொடியோன்செய்தசதிரெலாமறிந்தனன்மாயன் (௯௯)

சிறுவனுமனுசன்றானுமுட்பகையாகச்செய்தால்
விறலுடையவரையுன்னால்வெல்லலாம்வகைவேறில்லை
பொறையுடைத்தருமயானுந்தவரையிற்போவனென்றே
யறையுமாலடியைப்பற்றியைவரில்மூத்தோன்சொல்வான் (௧00)

பாலகனுணர்விலாமற்பகர்ந்திடுந்தீமைச்சொல்லை
யாலிலையமருமையவகற்றிநீயருடியென்ன
மேலவன்சகியினோடுமேவுநாட்பின்னாளாக
ஞாயமேலியற்றுவிப்பேனென்றுநாரணனுஞ்சொல்வான் (௧0௧)

பன்னகவரசன்பாவைபயந்தவன்பகைஞற்கானான்
யென்னைநீர்சமரம்வெல்லக்களப்பலியிடுமினென்ன
மன்னவர்நடுங்கியாங்கள்வனத்திடைப்போவோமென்று
சொன்னவர்தம்மைநோக்கியூலூகிசேய்சொல்லலுற்றான் (௧0௨)

அரவுயர்வேந்தன்கேட்டதினந்தனிலவனுக்கிவன்
விரைவினிலென்னைமுன்னங்களப்பலியூட்டிவென்மின்
றரணியினென்னமாயன்சதுர்த்தசித்தினத்திற்சோம
னிரவியோடுறவெட்டோயமிறையுமாமறையோரென்றான் (௧0௩)

சீதரன்மொழியக்கேட்டுச்சதுர்த்தசித்தினத்திற்றூய
வேதியர்திலநீரெங்கும்விடுத்திடவிதுத்தானெய்தி
யேதமிலிரவியோடுதருப்பணமறையோரீகை
யோதெனநீயிங்குற்றாலுவாவதாமென்றுநக்கான் (௧0௪)

சரியிலாமாயன்றன்னாற்சதுர்த்தசியுவாவதாக
வரவருண்மடந்தைமைந்தனுருப்பெலாமறுத்தங்கிய
விரைவினிற்சமரபூமியெங்கணும்வீசியேதா
நரபலியூட்டிவந்தார்நற்செயமாகவென்றே (௧0௫)

அதிரதக்குழாங்கள்சூழவைவரோடரவுயர்த்தோ
னெதிர்பொருசமரந்தன்னிலியாவருமின்றியேமன்
வதையுறுங்கொடுமைநோக்கேனென்றுமாமதியின்வண்ணன்
விதுரனுந்தானுந்தீர்த்தயாத்திரைவிரும்பிப்போனார் (௧0௬)

உத்தியோகப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௪௯௮.

# ௧௧௭-வது பாரதப் படலம்.

தூதுசென்றைந்தூர்வேண்டி விதுரன்விற்றுணியச்செய்து
கீதையுமொழிந்துவையமூர்ந்துயர்கெங்கைமைந்தன்
வேதியனங்கபூபன்மத்திரன்விடவியாள
கேதனன்மடியவைவர்க்குதவுகேசவன்றாள்வாழி (௧)

அரவருண்மடந்தைமைந்தனுருப்பெலாமறுத்துத்தன்ம
னிருநிலமிசையினெய்திக்களப்பலியூட்டினானென்
றுரைசெயநயனமில்லான்சுதனுளங்கனன்றுதேர்மேற்
கரிபரியிரதஞ்சூழக்கடிதினிற்களத்துள்வந்தான் (௨)

மன்னவர்விறலையெல்லாமதிக்கும்வானதிதன்மைந்த
னென்னையத்தரதனாகவியம்பினானென்றுசீறிக்
கன்னனிச்சமரந்தன்னிற்கங்கைதன்மதலைவீந்த
பின்னர்யான்பொருவனென்றுபேசித்தன்மனையிற்புக்கான் (௩)

அங்கமனேகலோடுமணியெலாம்வகுத்துப்பாரி
னெங்குமன்னவர்கள்சூழச்சுயோதனனிலங்கிநிற்ப
மங்குலினிடிகளஞ்சவளையொடுபேரியார்ப்ப
கங்கைதன்மைந்தனின்றான்கதிரவன்றோற்றம்போல (௪)

அரவுயர்மன்னன்சேனையார்த்தெதிர்வருதலோடு
முரசுயர்வேந்தன்பேரிமுழங்கிடத்தேரினேறிக்
கரிபரியிரதம்வீரர்கணக்கிலார்மிடைந்துசூழ
நிருபரெண்ணனுசரோடுமடைந்தனனெரிகொணெஞ்சன் (௫)

திருமகள்கொழுநனம்பொற்றேரிடைவலவனாகிப்
பரியினைநடத்தவானிலரியுறுபதாகையோங்கச்
சரியில்வெண்டரளமாலைவயங்கிடச்சார்ந்தபார்த்த
னரசர்கடிசைகடோறுமவனியினிறையக்கண்டான் (௬)

குரவரைக்கிளைஞர்தம்மைக்குருவினையனுசர்தம்மை
வரிசையார்முன்னோர்தம்மைமைந்தரைமடியநூறி
யிருநிலமாளும்வாழ்வாற்பெறும்பயனேதென்றுன்னி
வரிசிலைநிலத்தின்வீழமலர்க்கணீர்சொரியநின்றான் (௭)

மனமெலிந்தமரினிந்தமன்னவருடனேயென்ற
னினமெலாமடியநூறினென்னதாமறமென்றுன்னித்
தனைமறந்திருகணீர்பார்நிறைந்திடத்தனுவும்வீழத்
துனியுறுவிசயன்றன்னைச்சுந்தரனோக்கிச்சொல்வான் (௮)

இருநிலமிசையின்மன்னரியாரையும்வதையேனென்றே
யுருகியமனத்தனாகியுளைந்திடும்விசயாகேணீ
தரையெரியனிலம்வானஞ்சலமெலாம்யானேபோரி
னரசராயெதிர்வோன்யானேயவர்களைவதைப்போன்யானே (௯)

அவனியைநிறுவிநீவியளந்தயில்பவனும்யானே
புவனமுண்டுமிழ்ந்துகோட்டாலிடந்துபோற்றுவனும்யானே
சிவனயன்வலாரியிந்துசெங்கதிர்முனிவர்தேவர்
பவமுறுமசுரர்வெய்யநிருதர்பார்மனிதர்யானே (௧௦)

ஓதையாருவரியானேயோங்கியபிறங்கல்யானே
பாதவநிரைகள்யானேபழுவம்யான்பசுக்கள்யானே
வேதநாலுடனேயாறுசாத்திரம்யானேமிக்க
போதியான்மணம்யானுண்ணும்பொறிவரியளியும்யானே (கக)

இபமுதலுறவிகிழாயெழுந்தபல்லுயிரும்யானே
தபனனல்லொளியும்யானேசந்திரன்குளிர்ப்பும்யானே
விபவம்யான்வெறுமையானேமேகம்யானுடுவும்யானே
சுபமும்யானசுபம்யானேசுவர்க்கம்யானரகம்யானே (கஉ)

அறனியான்மறனியானேயருப்பம்யான்பெருக்கம்யானே
யுறவும்யான்பகையும்யானேயூழியான்முயற்சியானே
விறலியானிழிவுயானேவெற்றியான்றோல்வியானே
பொறையும்யான்முனிவும்யானேபுகழ்ச்சியானிகழ்ச்சியானே (கங)

உருவும்யானருவும்யானேயுறுதல்யான்பிரிதல்யானே
திருவும்யான்றவ்வையானேசெனனமயான்மரணம்யானே
யரிவையானாணும்யானேயலியும்யானொலியும்யானே
மருவும்யான்பரிசம்யானேவயங்கல்யான்முயங்கல்யானே (கச)

விடமும்யானமிர்தம்யானேவெளியும்யானிருளும்யானே
யடியும்யான்முடியும்யானேயரணும்யான்முரணும்யானே
நெடுமையான்குறளும்யானேநிழலும்யான்வெயிலும்யானே
கொடுமையான்குணமும்யானேகுறைவும்யானிறைவும்யானே (கரு)

ஆதலாலெவையுமாகியண்டமோரனந்தமென்னுட்
போதயானதனின்வைகிப்புவனமேலிடர்கள்செய்யு
மேதலார்திரள்கள்வீயயானிருந்தியற்றலாலே
காதியகளத்திற்கொல்வைகணைகளால்விசையவென்றான் (கசு)

விசயநீயானேயுன்றன்வில்லியான்விசிகம்யானே
சுசியுறுகதமும்யானேதுணியுமொன்னலரென்சேட்டை
வசையுனக்கெங்கனெய்தும்வருந்தனீயென்றுமாய
னிசைவுறவிளம்பித்தன்பேருருவம்வானிலங்கநின்றான் (கஎ)

புயல்வணன்சிரங்களெண்ணில்பொன்முடிதுலங்கக்கண்டான்
கையினுயர்திகிரிசங்குகணிப்பரும்வனப்பைக்கண்டான்
மெயினுறுகலன்கள்கோடியிரவிபோல்விளங்கக்கண்டான்
மயிர்நுனிதோறுமண்டம்வயங்கியமாட்சிகண்டான் (கஅ)

இருசுடருடுவான்மேகமெண்டிசைப்பாலர்வேலை
வரைசிவன்முனிவர்வேதனிருதர்தானவர்கள்வானோர்
தரையுறுமனிதர்பல்வேறுயிர்சராசரங்களெல்லா
மொருதனியண்டந்தோறுமுறுவனவெல்லாங்கண்டான் (கக)

அண்டங்கடோறுந்தேர்மேலரியொடுதன்னைக்கண்டான்
மண்டனில்வயங்குகின்றமன்னரோடனீகங்கண்டா
னெண்டவத்தோர்க்குமெய்தாவிறைவன்றன்னுருவங்கண்டு
விண்டனவினையென்றுன்னியிறைஞ்சியேவிளம்பலுற்றான் (உ0)

உலகினைப்படைத்துக்காத்தேயழித்தொருமுதலாயோங்கி
நிலனடைமுதல்வாபோற்றிநேமிசேர்கரத்தாய்போற்றி
யிலகியதிருவாழ்மார்பாபோற்றியென்றோர்மேல்வைகும்
வலவனேபோற்றியென்றுமகிழ்ந்தெழுந்தாடினானால் (உக)

இறைவநீயியற்றியெல்லாக்கருமமும்முடிக்குஞ்செய்கை
யறிவிலாதியானேசெய்வனென்றுயராங்காரந்தான்
குறைவிலாதெழுந்துதோன்றுங்கொடுமையையகற்றியென்
றெறுழ்வலிக்கரங்கள்கூப்பியிறைஞ்சிநின்றேத்தினானால் (௨௨)

அல்லிறவெழுந்துதோன்றுமலரிபோல்விசயன்முன்னர்ச்
செல்லெனவொளிருமேனிதிசையெலாம்விளங்கநின்றே
மல்லலைரவதைத்தசோமான்வலவனாயிரதமூர
வில்லினையெடுத்துப்பார்த்தன்விசிகமாமழைபெய்தார்த்தான் (௨௩)

இந்திரன்சிறுவன்விட்டவிசிகமெண்டிசையும்போர்ப்ப
வந்தணனவன்சேய்மந்தாகினிசுதனரசரோடுந்
துந்துமிமுழங்கநந்துகறங்கிடத்துரங்கம்பொற்றேர்
தந்திகண்மிடைந்தேதாக்கச்சாயகஞ்சொரிந்தார்த்தாரால் (௨௪)

வாயுவின்மதலையோடேவாளரவுயர்த்தோன்றுக்கி
யேயெனுமுன்னம்வில்லோடிரதமுந்துணியப்பாற
தூயமத்திரைதான்பெற்றசுதன்றனக்கிளையோனம்பாற்
றீயவெஞ்சகுனியோடத்தேர்சிலையறுத்தங்கார்த்தான் (௨௫)

ஏசிலாவபிமனோடேயிலக்கணகுமரன்றுக்கி
வாசவனிமையோரெல்லாமதித்திடச்சமரஞ்செய்தா
ராசைகடோறும்விஞ்சுமதிரதர்பொருதுமண்மேல்
நாசமுற்றிடச்செஞ்சோரிநதியெனவோடிற்றன்றே (௨௬)

மத்திரவரசன்றேர்மாமறைந்திடவரிவிலாலே
யத்திரமாரிதூவியசனியுமஞ்சவார்த்த
வுத்தரன்றன்னையங்கியுமிழ்வுறுவாளிதன்னாற்
சித்திரவதஞ்செய்தார்த்தான்சீருறுநகுலன்மாமன் (௨௭)

தூயமாவிராடன்மைந்தன்மடிந்திடச்சுவேதன்சீறிப்
பாயுமாவிரதந்தூண்டிப்பல்லவமாரிபெய்து
சீயமேபோலவெய்யசினத்தின்மத்திரர்கோன்மார்பி
னாயிரங்கடியவாளியழுத்திடப்பாறினானால் (௨௮)

வீடுமன்சகுனிதுய்யவேதியன்விடசேனன்றுன்
கோடகத்தாமாபூரிச்சிராவிவர்கொதித்துவந்து
பீடுடைச்சுவேதனம்பாற்பெறுவிறலழிந்தேயோட
வீடியபிணத்தின்குப்பைவிலங்கல்போலுயர்ந்ததன்றே (௨௯)

நிலைகுலைந்தெழில்கொள்கங்காசுதனிலத்தோடநேரின்
மலைமகள்கொழுநனீந்தவரத்தினாற்சுவேதமன்னன்
சிலைகரத்திருக்கத்தோலானென்றசரீரிசெப்ப
விலகியவிரதமீதினெதிர்த்துவந்தினையசொல்வான் (௩௦)

வானுறுகதிர்போற்றுய்யவாண்மழுக்கதைவிட்டார்த்துச்
சானவிபுதல்வன்மச்சன்றனயனைநகைத்துநோக்கி
யூனமில்சிலையின்கல்வியன்றிவேறொன்றுங்கல்லா
வீனனீயெனவேவில்லையெறிந்துவாளெடுத்துவந்தான் (௩௧)

வாளினைச்சுழற்றித்தேரினிழிந்துமாமுழையைவிட்ட
கோளரிபோலவார்த்துக்குறுகியசுவேதன்றன்னை
நீளியபகழியாலங்கதப்புயநிலத்தின்வீழ்த்தி
மீளவுமவன்றன்சென்னியறுத்துவீடுமனங்கார்த்தான் (௩௨)

சூரனுஞ்சுவேதன்சென்னிதுணித்தவீடுமனைநோக்கி
வீரியவரசரோடுஞ்சுயோதனன்மகிழமிக்க
வாரியிற்பருதிபோகிமறைதலுமன்னரெல்லா
நேரிலாப்பாடிவீடுநிறைந்திடவிருந்தாரன்றே (௩௩)

இரவிவந்துதயமாகவிரண்டதாந்தினத்திற்றன்மன்
பரியொடுதுரோபதன்றன்பயந்திடுகுமரன்றன்னைக்
கரிபரியிரதங்காலாளணிகக்காவலன்றானாக்கி
விரைவினிற்சமரபூமிமிடைந்துவந்தார்த்தாரன்றே (௩௪)

விடவரவுயர்த்தகோமான்வீடுமன்முதலாம்வீரர்
கடகரியிரதம்வீரர்கணக்கிலாருடனேதாக்க
முடியுறுசிரங்கள்வானின்முகடுறக்கவந்தமாடப்
படியினிற்குருதிவெள்ளம்பரந்திடப்பொருதாரன்றே (௩௫)

அதிரதவீரர்தாக்கியடுகணைசொரிந்துவந்தே
கதமுறுமிபமாவீழக்கடுஞ்சமர்செய்யுங்காலை
மதியொளிதிகழவெய்யோன்மறைதலுமன்னரெல்லா
முதியுள்வாங்குஞ்செய்கையொத்துத்தம்மிருக்கையுற்றார் (௩௬)

ஆன்றபேருலகுக்கெல்லாமவிரிணையருளும்வெய்யோன்
றோன்றிடத்துரகங்கைமாச்சூர்சண்மிடைந்துசூழ
மூன்றதாந்தினத்தின்வெய்யமுடங்குளைக்குற்றசீற்றம்
போன்றுமாமன்னரெல்லாம்பொறியுறுகணைபெய்தார்த்தார் (௩௭)

கங்கைமாதருளுமைந்தன்கடையுகவிறுதிகால
மங்கைபங்காளன்போலமுனிந்துமாவாளிதூவச்
சிங்ககேதனன்மாவல்லோன்சினிசுதன்றேர்விலின்றிச்
செங்கண்மால்விசயன்காணவிரிந்தனர்திசைகடோறும் (௩௮)

தாலகேதனன்றன்வில்லால்விடுத்தசாயகங்களெங்கு
மாலமாவிடமேபோலவரித்திடவரசரெல்லா
ஞாலமேன்மடியவெண்ணில்கவந்தங்கணடிக்கவோங்கும்
வேலைபோலருணநீர்பார்பரந்தவெள்ளிடையுமின்றி (௩௯)

வாரியைச்சுவறவாங்கும்வடவனலென்னவாளி
யேருறுங்கங்கைமைந்தன்பொழிந்திடவெதிர்நிலாமல்
வீரியர்மடியநோக்கிவிசயன்றான்றடுக்கநில்லா
தாரியன்முனிந்துதுய்யவாழியைச்சுழற்றிச்சென்றான் (௪0)

ஆடகன்றன்னைச்செற்றாழியைக்கரத்திலேந்தி
மோடுடைக்கனமேபோலமுடுகியேநிலத்திலெய்த
வீடுமனோக்கிச்சிந்தைவெருவநாக்குழறவந்து
வாடியமனத்தனாகிவணங்கிநின்றிவைகள்சொல்வான் (௪௧)

இரணியனவன்றன்பின்னோனிராவணன்கும்பகர்னன்
முரணுறுநரகன்கஞ்சன்முரனுறுசேதிபன்றன்
றரணியின்மடிந்துவீழத்தாக்கியசோதியென்றின்
கிரணநேராழியேந்திக்கிளர்ந்ததென்மொழிநீயென்றான் (௪௨)

மீளியாய்க்கனகன்றன்னைவதைத்திடும்விமலனேயுன்
றாளினையேத்திவாழுஞ்சமனிலாவடியார்பாதத்
தூளியாய்த்திரியுமென்மேற்சுடருறுதிகிரியேந்தி
மூளும்வெஞ்சினத்தனாகிவந்ததென்மொழிதியென்றான் (௪௩)

செருவினிற்றிகிரிமாயனெடுக்கயான்சமர்செய்வேனென்
றுரககேதனன்முன்னேதமடியனென்னுரைபொய்செய்யாக்
கரமிசையாழியேந்திக்கமலங்கொளொழிவிபோலத்
தரைமிசைநடந்துவந்ததயாபரவென்றுசொல்வான் (சச)

தீயவனுகினையதசேதிபனுயிராஞ்சோதி
மாயவுன்னடியினெய்தமற்றவன்சிரத்தைத்தள்ளுந்
தூயவிவ்வாழியென்னைத்துணித்திடவிடுதியென்றே
பொய்விலாத்துதிசெய்நாவனுரைத்தடிவணங்கினுனால் (சரு)

வீடுமன்வணங்கியேத்தவிமலன்வெண்முறுவல்செய்து
கோடகம்வயங்குந்தேரிற்குறுசலும்விசயன்மாயன்
மோடுடைத்திகிரிதொட்டதெனைமுனிந்திசழ்வாரென்றே
நீடியசரங்கள்வானினிறைந்திடத்தூவியார்த்தான் (சசு)

பரவைபெண்டிசைகளெல்லாம்பரந்திடுவாளிதன்னு
லுரககேதனன்றன்சேனைமடிந்துயர்வேந்தரெல்லா
மிரிதலுமிரவியேகிமறைந்திடவிருபாலுள்ள
வரசர்களணிகத்தோடும்பாடிவீடணுகினாரால் (சஎ)

மேலவன்குணபாற்றிக்கின்விளங்கியேயுதயஞ்செய்ய
நாலதாதினத்தின்வேந்தர்நண்ணிவெங்கணைபெய்தார்த்துச்
சூலம்வாண்முசுண்டியீட்டிதோமரங்குந்தம்வீசி
யாலமாவிடமேபோலவடல்பொருதவிந்தாரன்றே (சஅ)

குருதிமாநதிபோலோடக்கோடகம்வயங்குதேர்மேற்
பொருதும்வீரியர்சண்மாளப்புகரிபமடிந்துவீழ
விருதுறுமரசரெல்லாம்வெஞ்சமர்விளைக்கும்வேலை
பருதிபோய்மறைதலோடும்பாடிவீடணுகினாரால் (சகூ)

விஞ்சியகுணபால்வேலைவெய்யவனுதயமாக
வஞ்சதாந்தினத்திற்பேரியறைந்திடவரசரெல்லாங்
குஞ்சரங்கொடிகொடேர்கள்கோடகமடிந்துவீழ
வெஞ்சரம்பொழிந்துவானோர்வெருவிடவார்த்தாரன்றே (ருo)

சரியுரிபோர்த்தோன்போலக்கனன்றுயர்வீமன்றண்டா
னிருபர்சண்மடிந்துவீழநிலத்திடையரைத்துத்தூய
பரியினைப்பதத்தாலெற்றிப்பன்மணித்தேரைவீசி
யரவுயர்வேந்தன்பின்னோரைவரைவதைத்தேயார்த்தான் (ருக)

அனுசர்கண்மடிந்துவீழவரவுயர்துவசவேந்தன்
மனமெலிந்திரங்கிக்கங்கைமைந்தன்றன்னடியின்வீழ்ந்தே
யுனையுறுதுணையாயுள்ளோனிடர்க்கடலுறவோவென்று
துனியுறுமவனைநோக்கிப்பிதாமகன்சொல்லலுற்றான் (ருஉ)

மன்னவகேட்டிபாண்டுமைந்தர்கள்விறலையெல்லா
முன்னம்யான்மொழியக்கேளாய்மூண்டெழுசமரிலுன்றன்
பின்னவர்போலயாமுமடிவதுபின்னிகாண்டி
கன்னனுஞ்சகுனிதானுங்கழறிடமகிழ்வாயென்றான் (ருங)

உரககேதனனுக்கிவ்வாருரைத்துயர்வீடுமன்றான்
வரிசிலைவளையவாங்கிவாயுவின்மைந்தன்மீதிற்
கருமுகில்பொழிந்தாற்போலக்கடுங்கணைசொரிதலோடு
மெரிசகாசுதனுறம்பாலறுத்தனனிமைப்பின்முன்னம் (ருச)

வெந்திறற்கங்கைமைந்தன்பின்னரும்விசிகந்தூவ
விந்திரன்மைந்தன்வீமனிவுளியைநடத்தவல்லோன்
சிந்தியபகழியாலேதேருயர்துவசம்வீழ
முந்திமூதாதைவில்லுமுறிந்திடப்பாறிஞறல் (ருரு)

வரிசிலைப்பார்த்தன்வீமன்மாவலோன்சாதேவன்று
னுருமெனவதிருந்தேரினுற்றுமாவாளிபெய்ய
வரசர்கண்மடியப்பேய்களாடவேகுருதியோட
விரவிபோய்க்குடபாலேகப்பாடிவீடெய்தினரால் (ருசு)

ஆதவனுதஞ்செய்யவாறதாந்தினத்தின்வெய்ய
போர்தகமிரதமெண்ணில்புரவிகணெருங்கவீர
ரோதையாருவரிபோலவார்த்துயரும்பரிம்பர்
மாதிரமறையவில்லால்வாளிமாமழைபெய்தார்த்தார் (ருஎ)

விசயனுசுகன்றன்மைந்தன்விறல்செறிகடோற்கசன்முன்
வசுவரிபோல்வில்வாளிபொழிந்திடவயவர்மாண்டு
தசையுறுகுருதிமண்ணிற்றரங்கமார்நதிபோலோட
நிசியுறவிரவிவீழநிருபரில்லடைந்தாரன்றே (ருஅ)

இரவியுங்குணபால்வேலையிலங்கவேயேழாநாளின்
முரசொலிகறங்கப்பேரிமுழங்கிடவரசரெல்லாம்
பொருகரிபரிகள்சூழப்புணரிபோலனிகமார்ப்ப
விரைவினிற்களத்தினெய்திவெஞ்சமர்விளைத்தாரன்றே (ருகூ)

மிடலுடையரசரெண்ணில்விசிகத்தாற்பரிகள்வீழப்
புடவியிற்புகரிபங்கள்பொருப்பெனவிழவேநூறிக்
கடலெனக்குருதியோடக்கவந்தங்களாடவெய்யோன்
குடகடலடையப்பாடிவீட்டினிற்குறுகினரால் (சுO)

என்றுயர்குணபால்வேலையிலங்கிடவெட்டாநாளின்
வென்றிகொளரசரெல்லாம்வெஞ்சமர்விளைத்துவிஞ்சு
குன்றெனப்பூழ்க்கைவீழக்குரக்தமுருளவீரர்
பொன்றிடக்கணைகண்மாரிபுயலெனப்பொழிந்தாரன்றே (சுக)

அரவருண்மடந்தைமைந்தனமரினிலனந்தமான
வுருவமாய்த்தீயாய்க்காற்றுயும்பருநடுங்கமோதிக்
கரியினமிவுளியீட்டங்கனகமாத்தேரின்வீரர்
புரவலர்மடியக்காலன்போலவேயமர்செய்வேலை (சுஉ)

நகபதிபொருவுமெய்யனலாமிலாநிருதர்கோமான்
சிகிபதியெனவேவெய்யசினத்தினனலம்புதன்முன்
ககபதியுருவமாகிக்ககனமீதெழுந்துவந்தே
மகபதிசுதன்சேய்தன்னைவாளினூற்றுணித்துவீழ்த்தான் (சுங)

மாசுணமடந்தைமைந்தன்மடிதலும்வெகுண்டுமோது
மாசுகன்குமரன்றுய்யவபிமனுங்கடோற்கசன்முன்
றேசுறுவிசயனேடுஞ்சிலீமுகமாரிபெய்ய
வேசறுமிபமாமாளவிரிந்தனரரசரெல்லாம் (சுச)

கதங்கொளுநிருபர்மாளக்கவினுறுமணியினூலே
விதங்கொளுமிரதம்வீழவிலங்கல்போலிவுளிசாய
மதங்கொளுமிபங்கண்மாயமன்னவர்வெருவியோடப்
பதங்கன்வாரியினின்மூழ்கப்பாடிவீடணுகினரால் (சுரு)

பன்னகத்துவசவேந்தன்பாடிவீடணுகியாங்கே
யொன்னலர்விறலையெல்லாமுன்னியங்குவமையில்லாக்
கன்னனையழைத்துநீயுன்கணைகளாமாரிபெய்தே
யென்னிடர்களைந்தைவோர்தஞ்சிரத்தினைத்துணித்தியென்றான் (சுசு)

ஈனமுற்றிராசராசனியம்பிடக்கன்னன்சொல்வான்
சானவிதனயனென்னைச்சமரிலத்தரதனென்ற
வூனமதொழியப்புல்வாயுற்றிடக்கவ்வுவானே
ஞானமர்பொருதுவென்றுநாடுனக்களிப்பனென்றான் (சுஎ)

அங்கர்மன்கூறக்கேட்டேவறிவிலாவரவுயர்த்தோன்
வெங்கணதுனதுச்சாதனனைநீவிரைவினெய்திக்
கங்கைதன்மைந்தனோடுகன்னனென்னலரைவெல்லப்
பொங்குவெஞ்சமரினாளைப்புறக்கவ்வச்சொல்லுகென்றான் (சுஅ)

முன்னவனுரைப்பக்கேட்டுமுறைமையில்பின்னோன்சென்றே
யின்னலில்காங்கயன்றன்னிணையடியிறைஞ்சிநின்று
கன்னனோன்னலரைவெல்லநாளைப்புறக்கவ்வுவாயென்
றுன்னைமன்சொன்னானென்னப்பிதாமகனுரைக்கலுற்றான் (சுகூ)

மன்னவற்கினையோய்கேட்டிவாசவன்மைந்தனாலே
யின்னிலமதனினாளைக்கழியயானிறந்தபின்னர்க்
கன்னனோன்னலர்கண்மாளக்கடுஞ்சமர்பொருதுவென்றே
யன்னவனோடுங்கூடியாளுமினரசையென்றான் (எ0)

மறுவிலாக்கங்கைமைந்தன்கூறியவசனமெல்லா
மறனுறுசயவனேகியரவுயர்த்தோனுக்கோத'
நெறியுறுமன்னன்கன்னன்றன்னோடுநெடிதுநேர
முறுவனகருமமோதிச்சேக்கையினுறங்கினானால் (எக)

உததியினலரிதோன்றவொன்பதாந்தினத்தின்வெய்ய
வதிரதர்மிடைந்துசுற்றவறன்சுதனெய்தவானி
னதிசுதனனிகமார்ப்பநாகமார்துவசனோடுங்
கதுமெனவடர்ந்துவில்லாற்கனமெனக்கணைகள்பெய்தான் (எஉ)

சானவியருளுமைந்தன்விடுத்தசாயகங்களெல்லாம்
வானவர்பதிதன்மைந்தன்வாளியாலறுத்துமாற்றிச்
சோனைபெய்வதுபோலெங்குஞ்சுடர்முகப்பகழிதூவச்
சேனைகண்மடியவெய்யோன்மறையத்தம்மிருக்கைசேர்ந்தான் (எங)

தினகரனுதயமாகத்தசமதாந்தினத்திற்றுய்ய
கனகமாதானஞ்செய்துகருத்தினிலரியைவைத்துத்
துனிகளைந்தனங்கனம்பாற்றுவக்கிலான்றுவசமீதிற்
பனைகவினுறவேதேர்மேற்பரிதிபோனின்றான்மாதோ (எச)

முரசுயர்வேந்தன்பின்னோரனிகமுமொய்ப்பவேகி
யரவுயரரசன்சேனைதன்னுடனமர்செய்வேலை
வரிசிலைப்பார்த்தன்மந்தாகினியருண்மைந்தனோடு
சுரர்துதிசெய்யவெம்போர்தொடங்கிமாவாளிபெய்தான் (எரு)

விசயனெய்விசிகந்தன்னைவீடுமன்கணையான்மாற்றிச்
சுசியுறுவாளிமேகம்பொழிவபோற்சொரிந்துவெய்ய
வசுவரிசகாத்தன்மைந்தன்மாவலோன்வெருவியோடச்
சசியுறுசடையன்போலத்தானையைச்செற்றானன்றே (எசு)

உருத்தெழுமுருத்திரன்போலுயர்திரிபதகைபெற்ற
விருத்தனைவிசிகந்தன்னால்வீடியமனைரநோக்கி
வருத்தமோடணைவனென்றமாநாருத்தவிர்ந்துவந்த
கிருத்திமச்சிகண்டிதன்னைக்கேசவன்பொருதியென்றான் (எஎ)

மாதவனருடலோடுமறனுறுசிகண்டியெய்ய
நீதிசேர்கங்கைமைந்தனிராயுதனாகிநிற்ப
வேதமில்விசயன்வில்லாலிமைப்பின்முன்னெண்ணில்கோடி
யாதவனவிரைமானுமாசுகமழுந்தவெய்தான் (எஅ)

மாசவானருளுமைந்தன்வாளிதன்னுரங்கைகாலோ
டாகமுட்டுளையாயேகவாவிதன்னுடலையோவி
யேகுமுன்றடுத்தூத்துய்யவிரவிபோய்மகரம்பற்றப்
போகுதியென்றுள்வைத்துவீடுமன்புவியிற்சாய்ந்தான் (எகூ)

ஆதியைக்கருத்துள்வைத்தேயாசுகவணையின்மீதின்
பூதலமிசையிற்சாய்ந்தபகீரதிபுதல்வன்பாதத்
தேதமிலவரோடுஞ்சுயோதனனிரங்கிவீழத்
தீதகல்காங்கயன்றன்றேறியேசெப்பலுற்றான் (அ0)

விதியினையாவராலும்வெல்லலாம்வகைவேறில்லை
மதியிலார்போலநீயீர்வாடுமதிழுக்கென்றோதி
யெதுகுலநாதன்றன்னையிறைஞ்சியேயடியேனுக்குன்
பதமருளென்றுகையாற்றொழுதனன்பவங்கடந்தான் (அக)

உரககேதனனைநோக்கிப்பிதாமகனுரைப்பானென்றன்
சிரமிகத்தாழ்கையாலேசிறந்ததோரணையுந்தந்து
பருகநீர்தருதியென்னப்பஞ்சின்மெல்லணையுந்துய்ய
விரைசெறியமுமீயநகைத்திவைவிளம்பலுற்றான் (அஉ)

படுகளத்தியல்பலாதபஞ்சின்மெல்லணையோடிந்நீர்
மிடலுடையரசர்தல்விழுமியதன்றென்றோதி
வடிவுடைவிசயன்றன்னைவீழங்கெனவாளிமூன்று
தொடையினைநெகிழ்க்கக்கங்கைசுதன்சென்னிசுமந்ததன்றே (அ௩)

சிரசினையெடுக்கமூன்றுசிலீமுகம்விடுத்துப்பார்த்தன்
றரையினையுருவவேயோர்சாயகம்விடலுமந்தப்
புரையினுளயத்தின்றாரைபொங்கிடக்கங்கைமைந்தன்
பருகவவ்வழியினீரையடைத்தனன்பகழியொன்றால் (அச)

சாயகவணையுநீருந்தந்திடுவோனைநோக்கித்
தூயளாங்கங்கைமாதின்சுதன்மகிழ்ந்தினிமைகூறத்
தீமையில்சகாதேவன்றன்சிலையுறுசரங்களாலே
யேயெனுமுன்னங்கூடமிலங்கிடவமைத்தானன்றே (அரு)

கன்னன்வந்திறைஞ்சலோடுங்கங்கைதன்மைந்தன்சொல்வா
னின்னிலமதனின்மிக்கவதிரதனீயேயான்
பின்னைதன்மணாளன்செய்யும்போர்க்கொளுமாயத்தாலே
யுன்னையத்தரதனென்றிங்கோதினேனென்றுசொல்வான் (அசு)

பன்னகத்துவசன்றன்னைப்பகீரதிமைந்தனோக்கிக்
கன்னனையுன்றன்சேனாபதியெனப்பட்டங்கட்டி
யுன்னியகருமஞ்செய்திபோதியென்றுரைத்தலோடு
மின்னலார்மனத்தன்பாடிவீட்டினிலெய்தினானால் (அஎ)

தருமனையனுசரோடுந்தழுவியுன்றடக்கைதன்னாற்
பரகதியடையும்வண்ணம்பயந்திலமளித்தியென்றே
யுரைசெய்தங்கவரையேவியுலகளந்தவனைநோக்கிக்
கருவினிற்புகாமலென்னைக்காத்தருண்முதல்வவென்றான் (அஅ)

வீடுமனுரையைக்கேளாவெய்யவன்மகரமுற்றாற்
பீடுடைக்கதியையீவனென்றரிபேசவென்று
நீடியகடலின்மூழ்கநெடுந்தவரெய்தலோடுந்
தோடுடைக்கங்கைமைந்தன்றொல்வழிப்புராணங்கேட்டான் (அகூ)

வாரியினலரிகீழ்பால்வயங்கிடப்பதினோராநாட்
பாரினெண்டுரோணன்சேனாதிபதியெனவயங்கித்தோன்றப்
பேரிமாமுரசமார்ப்பப்பெருங்கடற்சேனைசூழ
வீரியவரசரெல்லாம்வெஞ்சமர்விளைத்தாரன்றே (கூ0)

ஆசறவிலங்குகின்றவபிமனத்திரத்தினாலே
மாசுணத்துவசன்மைந்தன்வயங்குதேரழியவோட்டி
வேசுறுமவனைப்பற்றியிருகரம்பிணித்தலோடு
மாசின்மத்திரத்தார்கோமான்வடவைபோன்முனிந்துவந்தான் (கூக)

வடிவுடையபிமன்மேலேயுந்தமத்திரத்தார்கோனைக்
கடுவிடமெனவேசீறிக்காலின்மாமதலையெய்தி
மிடலுடைவயிரத்தண்டால்விலங்கன்மேலிடிவீழ்ந்தென்ன
முடிமணிசிதறிவீழமோதியங்கார்த்தானன்றே (கூஉ)

காலின்மாமதலையெற்றுங்கதையின்மத்திரத்தார்கோமான்
கோலமார்முடியின்மிக்ககொழுமணிசிதறிவீழ
ஞாலமேல்வானினோங்குநகம்விழுந்தெனவேசாய்ந்து
சீலமார்குணத்தான்பின்னர்த்தெளிவுறப்பாறினால் (கூங)

மாயவன்மருகனென்னோடெதிர்ந்தமத்திரத்தார்கோனை
யேயெனுமுன்னம்யானேசெயிக்குமுன்னெதிர்ந்துவென்றாய்
போயதென்விறலின்றென்றுவீமற்குப்புகலும்வேலை
தூய்மையில்சுயோதனன்றன்சுதனிலனோடினால் (கூச)

கரமுறுபாசத்தோடுமிலக்கணன்கலங்கியோட
விரைவினிலிவுளித்தாமாமேவித்தன்றேரிலேற்றச்
சுரர்பதிசுதன்வில்லாலேசுடுசணைசொரிதலோடு
மரசர்கள்வெருவியோடவருக்கனாழ்கலியினாழ்ந்தான் (கூரு)

கடலிடையலரிவீழக்கட்செவியுயர்த்தகோமான்
படியினில்வயங்குகின்றபாடிவீடதனின்மேவி
மிடலுடையபிமனெய்தியிலக்கணன்றனைவீக்க
விடையினிற்றடுக்கலாதீரிற்றநும்வீரமென்றான் (கூசா)

இந்திரன்சுதன்றன்மைந்தனிலக்கணன்றனைவிக்கு
நிந்தனையொழியநாளைத்தருமனைநீங்கள்பற்றித்
தந்திடில்வென்றியாமென்றரவுயர்வேந்தன்சாற்ற
வந்தணனதனைக்கேளாவிம்மொழியறையலுற்றான் (கூஎ)

வெறிமலர்த்துளவனோடுவிசயனைச்சமரபூமி
பிறியவேயறையைக்கூவிப்போர்க்கும்வீரியருளாரேன்
மறனுறுதருமன்றன்னைப்பற்றுவனென்னும்வாய்மை
யறைதலுமந்தன்மைந்தனரசர்வல்லீரோவென்றான் (கூஅ)

**வேறு.** துரியோதனனிவைகூறிடத்துவராபதியாள்வோ
னருள்வீரருந்திரிகர்த்தருமமிர்தாசனர்க்கிறையோன்
றருசூரனையாமேயறைகூவித்தனிசெய்தே
பொருவோமிதுசரதம்மெனச்சபதம்பலபுகன்றார் (கூகூ)

அரிமைந்தருந்திரிகர்த்தருஞ்சபதம்பலவறையப்
பெரிதின்பமோடரவக்கொடிப்பெரியோனுளமகிழாத்
தரளம்முயர்சசிபோலொளிதருதாவடநல்கி
யிருள்விஞ்சிடத்தத்தம்மிடமெய்தித்துயின்றனரால் (௪00)

இரைவேலையின்மார்த்தாண்டனங்செழவீராறுதினத்திற்
றிருமாலருள்புதல்வோருடன்றிருகத்தருமேகிப்
பொரவாவிசயாவென்றறைகூவப்புயலெனவே
யரிகோல்கொளுமிரதத்தருச்சுனன்போயினனவர்மேல் (௪0௧)

அரிதன்னுடன்விசயன்பொரவறைகூறுமன்னவர்பால்
விரைவின்னுறவனிலன்மகன்விறல்விஞ்சியநகுலன்
றருமன்றெடுசகதேவன்வெம்பரிதந்திகணிறைய
வரிவெஞ்சிலைவிளைத்தாசுகமழைபோலுறப்பொழிந்தார் (௪0௨)

கறைதங்கியகிரிவன்னனெக்கன்னன்கணைபொழிய
மறைதங்கியநாவன்மழைபோல்வாளிகள்சொரிய
வெறிதங்கியதொடைமார்பினன்வீமன்முதனிருபர்
நெறிதங்கியதருமன்முனர்நில்லாதிரிந்தனரால் (௪0௩)

அரிவந்திடவெருவுங்கரியினமாமெனமரசர்
தரையின்கணினிடைந்தோடிடத்தருமன்னகைசெய்தே
வரிவெஞ்சிலைசிறுநாணொலிவானெண்டிசைமடுப்பச்
சொரியுங்கனநிகராமெனச்சுடர்வாளிகள்சொரிந்தான் (௪0௪)

சுரர்தன்பதியளவாயுயர்முரசக்கொடிதுலங்கத்
தருமன்னெழிற்றேர்மேலொளிர்தபனன்னெனத்திரிந்தே
விரைவிற்கணைசொரிந்தார்ந்திடவிறன்மன்னர்கண்மடிந்தார்
கரியிற்றனபரியற்றனகவந்தங்கடிதாட (௪0௫)

மின்னிப்பொழிமழையாமெனத்தருமன்விடுகணையாற்
பொன்னிற்பொலியிரதஞ்சிலைகவசம்பொடியாகக்
கன்னன்பரித்தாமாவுடனிருகண்ணிவிமைந்தன்
வென்னிட்டனர்மறையோன்விசையோடுகிலன்றோடை (௪0௬)

அரவத்துவசன்வேதியனருக்கன்மகன்முதலா
நிருபத்திரளிடைந்தோடிடநெறியிற்பகதத்தன்
வரையொத்தடர்கரிசுப்பிரதீபத்தினின்வந்தே
யெரியொத்திடுசுடர்வாளிகளெங்கும்பொழிந்தார்த்தான் (௪0௭)

மதமுற்றிடுகரிசுப்பிரதீபம்வரையெனமண்
புதைவுற்றிடநடந்தேவிழியொறியுற்றிடவடர
மிதிபட்டுடனெரிந்தார்பலர்விபுலைக்கணின்மிடைந்தே
யுதைபட்டிடவுருண்டார்பலருரங்கால்கரமொடிந்தே (௪0௮)

கூற்றம்மெனக்கொலைசெய்திடுங்கொடிதாகியவிபத்தை
யேற்றின்னுறுமரன்போன்முனிந்திடும்பாசுரன்மருகன்
காற்றெத்திடும்விசையாம்பதின்றோராயிரங்கரியாய்ச்
சீற்றம்முறப்பலகோடிகளுறக்குத்தினன்றிறலால் (௪0௯)

பொய்யானைகளாய்மாருதிபுதல்வனுறக்குத்த
மெய்யூறியகுருதிப்புனல்விழவுஞ்சலியாதோர்
கையாற்கொலைசெய்யுங்கரிமீதிற்பகதத்த
னையானனனெனவேமுனிந்தழல்வாளிகள்பொழிந்தான் (கக0)

நரகன்சுதன்கணையாலடர்நாகத்தொளிர்மருப்பா
லரியுற்றிடுமுலர்சாடெனவறத்தின்மகனனிகந்
தரையின்மடிந்திடும்வேலையினெதிர்த்தோர்களைத்தடிந்தே
விரைவின்னுயர்காண்டீபமன்விமலன்றெடும்வந்தான் (ககக)

சுரர்தம்பதிசுதனெய்திடச்சுடுதீயெனமுனியா
நரகன்சுதன்விடுநாரணன்படையெண்டிசைநடுங்க
வருவெம்மையையறிந்தேயரிமார்பின்னிடையேற்பத்
தரளம்மொளிர்வடமாயுரமீதிற்றயங்கியதே (ககஉ)

நரகன்சுதன்விடும்வெம்படைநாராயணன்மார்பிற்
றரளம்மொளிர்வடமாயிடத்தவத்தோர்மலர்சொரிந்தார்
பொருவெஞ்சிலைவலைத்திந்திரன்புதல்வன்கணைவிடவே
கரிபட்டிடப்பகதத்தமன்மடிந்தான்கனவரைபோல் (ககங)

வேறு. இந்திரன்சுதனம்பாலேயெதிர்லாப்பகதத்தன்முன்
றந்தியினுடனேமாளத்தபனன்போய்மறைதலோடுஞ்
சிந்தையிற்றுயரமெய்திச்சுயோதனனிருக்கைசேர
வந்தணன்றன்னைநோக்கியங்கர்கோனறையலுற்றான் (ககச)

இன்றுநீதருமன்றன்னைப்பிணிப்பனென்றியம்புஞ்சொற்கள்
குன்றிடநெஞ்சிற்பீதிகொண்டிவண்பெயர்ந்ததன்மை
நன்றெனநகைத்தலோடுநான்மறையுணருநாவோ
ரென்றியசினத்தனாகியிரவிசேய்க்குரைப்பதானன் (ககரு)

இருநிலமிசையின்வானினெண்டிசையதனின்விஞ்சுந்
தருமன்வில்விறலுக்கொத்தாருளரெனிற்சாற்றுவாய்நீ
செருவிடையவன்றன்முன்னஞ்சிறிதுபோதாற்றுகில்லா
யுரைவலனென்றுசொன்னுலுறும்பயனில்லையென்றான் (ககசு)

இருபிறப்பாளனிவ்வாறுரைத்துத்தன்னிருக்கைசேர
வரவுயர்வேந்தன்மன்னரனைவர்க்கும்விடையையீந்து
தெரிமலர்ச்சேக்கைமீதிற்றுயின்றனன்சிறப்பான்மிக்க
தருமன்றன்பாடிவீட்டிற்றுணையோடமர்ந்தானன்றே (ககஎ)

பருதிநீள்பரவைமீதின்வயங்கிடப்பதிமூன்றுநாள்
விருதுறவறையிற்கூவும்வேந்தர்மேல்விசயனேகச்
சுருதிநூல்வல்லோனேகித்தொலைவிலாவனிகஞ்சூழ
வருதுனியகலவாழிப்பேரணிவகுத்தானன்றே (ககஅ)

சமீரணன்சிறுவன்றன்னைச்சாத்தகிப்பெயரினானைக்
கமையிலாச்சுயோதனன்றன்கனிட்டர்காலிங்கரோடு
மமர்பொரவருதிரென்றேயடர்ந்தறைகூவலோடு
முமையவள்கொழுநன்போலவுருத்தவர்சென்றானன்றே (ககக)

ஆழியின்யூபந்தன்னைவகுத்தவந்தணர்தங்கோமா
னூழியினெழுந்துதோன்றுமுருத்திரமூர்த்தியொத்துப்
பாழிகொள்சிலையினாலேபல்லவமென்மேற்றூவி
வேழமாமடிந்துவீழவேந்தரைவதைத்தான்மன்னோ (கஉ0)

கறையடியிவுளிவீரர்கணக்கிலார்மடிந்துவீழப்
பிறைமுகவாளிதூவிப்பிஞ்ஞகன்போலத்தோன்று
மறையவனுடனேதாக்கிவரிசிலையறப்பாஞ்சாலன்
சிறுவன்றேரழியவோடித்தருமனைச்சேர்ந்தான்மாதோ (கஉக)

தரையினிற்பாறிவந்ததுரோபதன்றனயன்றன்னை
வெருவலையென்றுகூறிவிழுமியதருமனாங்கே
யரிதிருமருகனுனவபிமனைநோக்கிநீயே
பொருகுதிநேமிரூபப்பொறியினையழித்திண்டென்றான் (கஉஉ)

வீமன்றன்முன்னோன்கூறவவனடியிறைஞ்சிமிக்க
காமனுநாணுமெய்யிற்கவினுறுமபிமன்றேர்மேற்
சோமனைநிகர்த்தகொற்றக்கவிகைவான்றுலங்கவேதன்
மாமனைப்போலத்தோன்றிமாற்றலர்வெருவப்போனான் (கஉ௩)

சக்கரரூபம்பற்றிப்பொருகின்றதானையெல்லா
மக்கணமடிந்துவீழவதிரதர்வென்னிட்டோடத்
திக்கெலாமறையவொப்பிலிந்திரன்சிறுவன்செம்ம
லுக்கிரக்கணைகள்கோடிபொழிந்தனனுதிரமோட (கஉச)

வேதியனங்கரூபன்விறலுடைமகதன்பூரி
தீதகலிவுளித்தாமாச்செயித்திரதன்காந்தாரன்
பூதலத்திரதமாவிற்பொடிபடத்திசைகடோறும்
பீதிகொண்டோடவெய்யபிறைமுகப்பகழிபெய்தான் (கஉரு)

மாலின்மாமருகன்வாளிபொழிந்தவன்மலையும்போழ்திற்
காலின்மாமதலைவெய்யசெறுநரைக்கதையான்மோதிக்
கோலமார்தருமன்முன்னிற்குறுகியாண்டிறைஞ்சியந்தோ
பாலனைக்காலன்போன்றபகைஞர்முன்விடுத்தாயென்றான் (கஉசா)

தருமனேடிவையையோதிச்சமீரணன்சிறுவன்றண்டால்
விரைவினின்னலரைமோதிச்செலவிடவரவுயர்த்தோ
னுரையினூற்சிந்துநாடனேருநொடியிடுவமுன்ன
ரரனருள்கொன்றைமாலையனத்தினெறிந்தானம்மா (கஉஎ)

சிந்துநாடாளுமன்னன்றிரிபுராந்தகன்முன்முன்னாட்
டந்திடுங்கொன்றைமாலைதன்னினாலெறிதலோடும்
வந்தனைசெய்துவீமன்மைந்தனின்றிறந்தானென்றே
கந்தனார்தந்தைமாலைகடக்கலானிரங்கும்வேலை (கஉஅ)

விரைவினிற்பொருதிவென்றுமீண்டவாளபிமன்றுய்ய
வரனருள்கொன்றைமாலைதன்னினாலனிலன்மைந்தன்
வருகிலாதிரங்குகின்றவாறெலாமுணர்ந்துநக்கன்
றெரியலையிகழ்தல்செய்யான்செருநர்மேற்றேரைவிட்டான் (கஉகூ)

**வேறு.** சுரர்பத்திசெய்யரிமைத்துனனருளுஞ்சுதன்வில்லா
னிருபத்திரண்மடிந்தேயிடநெடுவாளிகள்பொழியக்
குருமற்றவன்றருபுத்திரன்கொடைமிக்கிடுகன்ன
னிருபத்தொருதரந்தேர்சிலையிறவோடினரிடைந்தே (கௌ0)

துரியோதனனருளுஞ்சுதனுடனேபலகுமரர்
பரிதேர்கிறையிபமெண்ணிலவரப்பற்குனன்மைந்தன்
சரமாரியிற்பொருவீரரைத்துணித்துத்தழலம்பால்
வரைபோல்விழவரவத்துவசன்மைந்தனைவதைத்தான் (கௌக)

தரைமீதினிற்றுரியோதனன்றனயன்மடிந்திடலும்
வரைபோல்விழுந்தரற்றக்கடிதெடுத்தேமனர்தேற்றிக்
கரிதேர்பரிநிறையக்கடுங்கணைமாரிகள்பொழிந்து
பொருதாருயர்விசயன்றருபுதல்வன்றனைவளைத்தே (௩௯௨)

கிருபன்விறற்கன்னன்பரித்தாமாகிரிநிகராய்ப்
பொருமத்திரன்மறையோனிவர்புத்தேளிர்களஞ்ச
விரைவிற்கணைபொழிந்தார்த்தனர்விற்றேர்கொடிதுணியத்
தருமன்சுதன்றனயன்மிகுசரந்தூவிடவிரிந்தார் (௩௯௩)

பின்னுஞ்சினமூறுமன்னர்கள்பெருந்தேர்மிசையெய்தித்
துன்றுஞ்சரஞ்சொரிந்தாரபிமன்றேர்சிலைதுணியக்
கன்னன்கணைவிடுத்தார்த்திடக்காமன்சுதனருள்சேய்
மின்னுஞ்சுடர்வாளாற்பொருவிறல்வீரரைவதைத்தான் (௩௯௪)

அரியாமெனச்சுடர்வாளினிலயந்தோலினைத்துணித்துப்
பொருவீரியன்மேற்பொன்மலர்புத்தேளிர்கள்பொழிந்தார்
விரைவோடிரதத்தேவருமறையோன்விசிகத்தான்
சுரர்போற்றிடுமாயோன்மருகன்கையினைத்துணித்தான் (௩௯௫)

கைபற்றிடக்கலங்காதுயரபிமன்களத்திடையோர்
வையந்தனிலுறுபண்டியைச்சுழற்றுவலித்தெறிய
மெய்யொன்றியவரியாழியைநீர்த்தேவரவெருவி
யுய்யும்படியினியில்லையென்றுடைந்தோடினர்கிருபர் (௩௯௬)

வெருவித்திசைதொறுமன்னவரிரிந்தோடிடவிமலன்
கரம்வைத்திடுந்திகிரிப்படையெனவேக்கனத்தி .
னுருமொத்தொலியுறவான்வருமுயர்பண்டியைமறையோ
னிருபத்திரளனைவோரொடுநெடுவாளியிற்றுணித்தான் (௩௯௭)

கரத்தால்விடுமுயர்சில்லிமண்டுகளாய்விழக்கண்டு
சிரித்தேயெழிலபிமன்கதைகொண்டேவரச்சிவன்பால்
வரத்தாற்பெறுமணித்தண்டினைமறனூர்செயித்திரத
னுரத்தால்விடவிசயன்மகன்சிரமோவியதுருண்டே (௩௯௮)

**வேறு.** சிந்துவுக்கிறைவன்றண்டாற்சீருறுவிசயன்பெற்ற
மைந்தனெஞ்சிரமண்வீழமடிதலும்வாயுசெம்ம
லந்தமார்தருமனோடுமராற்றிடவருக்கன்வானி
னிந்துவிஞ்சிடவேவீழயாவருமிருக்கைசேர்ந்தார் (௩௯௯)

விறலுறவறைகூவிக்கொண்டேகியவீரர்தம்மைப்
பிறைமுகப்பகழியாலேவதைத்திடப்பீதிகொண்டு
திறனழிந்தோடலோடுந்தேரின்மேல்விசயன்மீள
விறையவனபிமன்மாண்டானென்பதுதெரிந்தானன்றே (௪௦௦)

விறலுறுவிசயன்மைந்தன்வீந்தமைகேட்கிலாவி
பிறியவேமாள்வனென்பதறிந்தரிசுரர்பிரானுக்
கறைதலுமாயமானமகன்றனையளவினிட்டே
மறையவனாகிவீழவருமுனர்ப்பார்த்தன்கண்டான் (௪௦௧)

இந்திரன்சிறுவனேக்கியெரியினில்விழுவான்றன்னை
மைந்தன்றன்னுடனேமாளமறையவவடாதென்றோத
வந்தணனுனக்குமெய்திற்றடுப்பனென்றகன்றுபோக
விந்தைதன்மணாளனோடுமேவினன்பாடிவீட்டின் (௪௦௨)

பல்லியமுழக்கமின்றிப்பண்ணியாழொலியுமின்றிச்
சில்லுழையிவுளிகைமாத்தெருவிடைத்திரிதலின்றி
வல்லியரரற்றுமோதைமலியவேபார்த்தன்கேளா
வொல்லையினடைந்தான்முன்னோர்க்கிடரென்கொலுற்றதென்றே (கசங)

சேரினின்றிழிந்துகோயிற்சென்றிடும்விசயன்றன்னை
யாரியன்றழுவியந்தோவபிமன்விண்ணடைந்தானென்னப்
பாரினிற்புரண்டுவிம்மிப்பதைத்திரங்கிடுவான்றன்னோ
டேருறுதருமன்பின்னோருடனெய்தியிரங்கினானால் (கசச)

சுரர்பதிசிறுவனென்றன்சுதனுடன்மாள்வேனீயீண்
டெரியினையிடுதியென்னவிளையவன்வளர்த்ததீயின்
விரைவினின்விழுவான்றன்னாலனலிடைவிழாதோனெய்தி
நிருபநீயொழிதியென்றுநிகழ்த்திடத்தவிர்ந்தானன்றே (கசரு)

அரற்றிடுந்தருமன்றன்னையபிமன்றானிறந்ததன்மை
யுரைத்திநீயென்னப்பார்த்தனோதிடவுன்னையேறே
பிரித்தெனைப்பிணிக்கவிட்டசக்கரயூபம்பேதித்
துருத்திரனென்னச்சென்றானென்சொலானுன்றன்மைந்தன் (கசசு)

அந்தகனெனவேசென்றவபிமனந்தகன்றன்செம்மன்
மைந்தனைக்கொன்றுமீளவருதலும்வாயுமைந்தன்
முந்தியேசெலாமன்மிக்கமுக்கணான்மாலைபோட்ட
சிந்துமன்றண்டாலுன்றன்சிறுவனைவதைத்தானென்றான் (கசஎ)

என்றவனுரைக்கநாளையிரவிபோய்வீழுமுன்னஞ்
சென்றுயர்சிந்துமன்னன்சிரத்தினைத்துணித்திலேனேல்
வென்றிசெய்வில்லினோடும்வெங்கனலினிடையின்வீழ்ந்து
பொன்றுவனென்றேயெண்ணில்சபதங்கள்புகன்றானன்றே (கசஅ)

இந்திரன்சிறுவன்சிந்துக்கிறைவனைவதைத்திடேனேற்
செந்தழலிடையின்வீழ்வனென்றுயர்சபதஞ்செப்பக்
கந்தனார்தந்தைதன்பாற்கணையுடன்பொய்கைவேண்ட
முந்துவன்கைலைக்கென்றுமொழிந்தனன்முராரிமாதோ (கசகூ)

அரிகலுழன்மேலேறவருச்சுனன்றன்னையங்கை
விரலிடைத்தாங்கிப்புள்ளின்வேந்தன்றான்செல்லமாயோன்
சுரர்பதிசுதனைநோக்கித்தூயநல்லடிசினீதான்
விரைவினிலருந்துகென்னவிசயன்றான்விளம்பலுற்றான் (கருo)

சிவனையர்ச்சித்தலாதுசிறந்திடுமன்னந்தன்னைச்
சுவையுறவருந்தேனென்னச்சுந்தரன்முதனாட்டன்னி
லவனிவனெவனுமானவாதியானென்றுன்முன்னே
யுவமையிலுருவங்காட்டவுணர்கிலையென்றுசொல்வான் (கருக)

உன்னியதெய்வந்தன்னையுணர்வுறுமந்திரத்தா
லென்னிருகழலினர்ச்சித்தின்னமுதருந்திநீயே
பின்னையாணிணையிலாதபிரானென்பதறிதியென்றே
சொன்னமைத்துனனைநோக்கித்தொழுதிவைசெய்தானன்றே (கருஉ)

ஞமலிவாகனமாய்க்கோரவயிரவர்நடிக்கநண்ணும்
விமலனைந்தெழுத்தையுள்ளத்துள்கியேவிடமேபோல்வந்
தமலரைச்சாடிமாமன்சிதையவேமிதித்தோன்றாளின்
கமலமுங்கமலமுங்கொண்டருச்சித்தான்காமன்மைந்தன் (கருங)

அரிபதத்தரனையர்ச்சித்தவனனமருந்தமாயோன்
கருடன்மேற்கயிலைக்கெய்தக்கந்தனற்றாதைகண்டே
பரிவுறத்தழீஇக்கொண்டண்டர்துதித்திடப்பைம்பொற்பீடத்
திருவருமிருந்தார்நீலக்கிரியுந்தாரக்கிரியுமேல (சருச)

வடிவுடைவிசயன்மங்கைபங்கனைவணங்கிவானம்
படியளந்தவன்பாதத்தருச்சனைபடியச்சூட்டுங்
கடிகமழ்கமலப்பூவுந்தும்பையுங்கந்தன்றாதை
முடியினிற்கண்டுசோதிமுராரியென்றையந்தீர்ந்தான் (சருரு)

அரியினையரன்றானோக்கியெய்தியதருள்வாயென்னச்
சுரர்பதிசுதனென்றுரைத்துணித்திடவில்லுந்தூணி
சரமுடன்பொய்கைநீயேதந்தருளென்றலோடுந்
திரிபுரமெரித்ததேவன்சிரித்திவைசெப்பலுற்றான் (சருசு)

அரவுயர்துவசன்பின்னோனரிவைபாஞ்சாலியாடை
யுரியவேயுளதாய்த்தோன்றவுதவியமுகுந்தாவின்று
சரம்விலுத்தூணிபொய்கைதந்திடவறிகிலாயென்
றுரைசெய்துன்மாயந்தன்னையுணர்வதற்கெளிதோவென்றான் (சருஎ)

அரனிவைமொழிந்துதூயமடுவினிலரசாமூழ்கு
விரைவினிலென்றலோடும்விசயனீர்படிந்தங்கேற
வுரகமொன்றெழுந்துவாயாலுமிழவோர்மறையோன்றோன்றி
சரம்விலுத்தூணிபொய்கைதருவமந்திரந்தான்சொன்னான் (சருஅ)

அரவின்வாய்மறையோனெய்தியறைந்தமந்திரந்தான்கேட்டு
வரிசிலைப்பார்த்தனீலகண்டனைவணங்கிநிற்ப
வுரகபூடணனையோவியுவணன்மேல்விசயனோடுந்
திருவமர்மார்பன்றன்மணிருப்பிடஞ்சேரும்வேலை (சருகூ)

தருமனுசுகன்சேய்பெற்றதனயனையழைத்துநீபோ
யரவுயர்வேந்தன்றன்பாலபிமனைக்கொன்றான்றன்னை
யிரவிபோய்விழுமுன்னனைவதைத்திலனாயிற்றீயிற்
சுரர்பதிசுதன்றான்மாள்வனென்பதுசொலிவாவென்றான் (சசு0)

விறலுடைத்தருமன்கூறக்கடோற்கசன்விரைவினெய்தி
மறனுறுசுயோதனன்றன்மலரடிவணங்கிநின்று
திறலுடையபிமன்றன்னைச்செற்றிடுஞ்சிந்துநாட்டுக்
கிறைவனைப்பார்த்தன்கொல்லவிடுஞ்சபதங்கேளென்றான் (சசுக)

மைந்தனைவதைத்தசிந்துமன்னனைநாளைவெய்யோன்
சிந்துவின்விழுமுன்னஞ்செற்றிலனாகிற்பார்த்தன்
வெந்தழலிடையின்வீழ்வனென்றனன்வீமன்முன்னோ
னிந்தவெம்மொழியைநீபோயியம்பிவாவென்றானென்றான் (சசுஉ)

வித்தகவீமன்மைந்தன்விளம்பியவுரையைக்கேளா
வத்தினபுரியின்மன்னோடங்கர்கோனறைவானுன்றன்
மைத்துனன்றன்னையானேகாப்பன்வாள்விசயன்வாளிற்
புத்திரனுடனுங்கூடப்போதுவனெறியினென்றான் (சசுங)

அங்கர்கோனுரையைக்கேளாக்கடோற்கசனறையலுற்றான்
சிங்கலில்விசயன்முன்னர்ச்செறுத்தெதிர்பொருவாய்நீயோ
விங்குமையிமைப்பின்முன்னமெந்தைதானருளப்பெற்றா
னுங்குவன்யானேயென்றானுவன்றுறநகைத்தானன்றே (சசுச)

விருதுறக்கடோற்கசன்றான் விளம்பிடவந்தன் மைந்த
னிருதநின்னாசாரத்தானெறியலகூறேலென்னக்
குருகுலத்தரசாநின்னைப்போலவேயரக்கர்கோதி
லொருகுலத்துதித்தார்தேவியாடையையுரியாரென்றான் (௧௬௫)

நஞ்சினையனத்தினிட்டுநற்கயவயத்தினுள்ளே
விஞ்சியவசியைநட்டும்வீடமாளிகைதீவைத்தும்
வஞ்சகச்சூதையாடிவளநகர்வாங்கிக்கொள்ளா
ரஞ்சலிலரக்கரென்னாவறைந்தவனேகினான் (௧௬௬)

மாருதிமைந்தன்போனபின்னரின்மன்னர்மன்னன்
வீரியவரசர்நீவிர்விசயனைவதைக்கவேண்டாம்
பாரினிலவனேதியின்விழுந்திடப்பகுந்துகொண்டு
நேரிலாச்சிந்துநாட்டுநிருபனைக்காமினென்றான் (௧௬௭)

அரவுயர்வேந்தன்கூறவவனியினரசரெல்லா
மிரவிபோய்மறையுங்காறும்யாங்களேகாப்பமென்றார்
துருமுகனானதுன்மரிடணநாமவனுசன்றாய
வொருபகலளவுங்காப்பேனுரககேதனனேயென்றான் (௧௬௮)

நிருபர்களிவைகளெல்லாநிகழ்த்திடவிராசராசன்
றரளமாவடங்களாடைதமனியக்கலன்களெல்லா
மரசர்கள்பெறவேநல்கியங்கர்கோனுடனுந்துய்ய
விரைசெறியமளிமீதின்விளங்கியேதுயின்றானன்றே (௧௬௯)

எறுழ்வலிக்கடோற்கசன்றானேகிநற்றருமன்முன்னின்
றறனிலிக்கிவைகளெல்லாமறைந்திடவிசழ்ந்தானென்று
பறைதலும்விசயனோடும்பரமன்வந்தரன்றானீந்த
தறைதலுமறன்சேய்சிந்தையையம்போய்த்துயின்றானன்றே (௧௭௦)

சலதியினிரவிதோன்றச்சதுர்த்தசித்தினத்திற்றாய
மலருறையயனைநேராமறையவன்யூபஞ்செய்து
நிலமிசையிருபத்தைந்தாம்யோசனைநீளங்கைமா
விலகியயிவுளிவீரரிரதங்கணிறையவைத்தான் (௧௭௧)

அவனியினிருபத்தைந்தாம்யோசனைக்கப்பாலாகப்
பவமுறுசிந்துமன்னைப்படுகுழியதனின்வைத்துச்
சிவனெனும்விறல்கொண்மன்னர்திசைதொறும்வளைந்துகாப்பத்
தவமலிமறையோனின்றான்சங்குதுந்துமிகளார்ப்ப (௧௭௨)

அறனருண்மைந்தன்பேரிதழங்கவார்கலியையேய
விறலுடையரசர்சூழவெஞ்சமர்விளைக்கும்வேலை
யுறியுறுதியையுண்ணுமுத்தமன்வலவனாக
மறுவிலாப்பார்த்தன்றுய்யவையமேல்வயங்கிவந்தான் (௧௭௩)

செருவிடையெதிர்ந்தபார்த்தன்சிலையினாணெறிதலோடு
மொருபகலளவுங்காப்பன்யானெனவுரைத்துநின்ற
துருமுகனானதுன்மரிடணன்றான்றுவசத்தேர்விட்
டரசர்கணகைசெய்தார்ப்பவவனியினோடினான் (௧௭௪)

உரககேதனன்றன்பின்னோனிடைதலும்பார்த்தன்வில்லாற்
கரிபரியரசர்மாளக்கணைகளாமாரிபெய்ய
வரிசிலைவளையவாங்கிவாளிகள்சொரிந்துமாற்றிச்
சரியிலாமறையோனைந்துநாழிகைதடுத்தானன்றே (௧௭௫)

நாழிகையைந்துசெல்லநடந்தயோசனையைந்தாக
வாழியினமர்வோன்றேரையந்தணன்காணுவண்ண
மூழியின்கால்போலோட்டவுறுத்தவன்றொடர்தலுந்தண்
பாழிசால்விசயனின்சொல்பகர்ந்திடமீண்டானன்றே (௧௭௬)

வாரிதியரசன்மைந்தன்பொழிந்திடும்வாளியாலே
வீரரெண்விசயன்றுய்யமேனியிற்குருதிவீழக்
கோரவெங்கணையால்வெய்யோன்கொடிகடேரழிக்கத்தண்டா
லாரியன்சிரத்தின்மோதவவனியின்வீழ்ந்தானன்றே (௧௭௭)

தந்தையாம்வருணன்றுய்யசோதிமேற்றழும்புசெய்யின்
மைந்தநீமடிவாயென்றுவழங்கியவுரையாற்றண்டின்
முந்தியொண்முராரிமீதுமோதியேசதாயுவீய
விந்திரன்சிறுவன்சென்றுனெதிர்ந்தவர்தம்மைநூறி (௧௭௮)

சகசிரவாகுவெய்தித்தழலுறும்வாளியேவ
மிகமுனிந்தவனைவீட்டிவிசயன்மாகன்னன்மீதி
னுகவிறுதியிற்பெய்மாரியொத்தனல்வாளிதூவிப்
பகலவன்குமரன்றேரையழித்திடப்பாரிஞறல் (௧௭௯)

அதிரதர்மடிந்துவீழவயங்கரிநிரைகண்மாள
மதிதவழ்வேணியான்போன்முனிந்துவாள்விசயன்வாளி
கதுமெனச்சொரிந்தேயேகக்கதிரவனுச்சியெய்த
வெதுகுலவிறைவன்றூண்டுமிவுளிகளிளைத்தவன்றே (௧௮௦)

பரிகளினிளைப்புத்தீரப்பயத்தினையூட்டப்பார்த்தா
வுரகபூடணன்பாற்பெற்றமந்திரமுள்குவாயென்
றரியுரைத்திடலுந்தூயோனந்தமந்திரத்தையுன்ன
விருநிலத்தெழிலார்பொய்கையிமைப்பின்முனெய்திற்றன்றே (௧௮௧)

கடிகமழ்கமலப்பூவாற்கவினுறுபொய்கைதன்னிற்
குடமெடுத்தாடுங்கோமான்குரகதங்களைநீரூட்ட
வடவைபோல்வளைந்துமன்னர்வாளிகள்பொழியப்பார்த்தன்
படியின்மேற்காலாளாகிப்பகழியாலறுத்துவீழ்த்தான் (௧௮௨)

பரியினைப்பயத்தையூட்டிப்பான்மணித்தேரிற்பூட்டி
யரியொளிதிகழவெய்தவருச்சுனனிரதமேறப்
புரவலர்திசைகடோறும்பொருதொழின்மறந்துபாற
விருநிலத்தெதிரிலாமலிரண்டுயோசனைதான்சென்றான் (௧௮௩)

விரைவினின்விசயனேகும்வேலையினந்தன்மைந்தன்
குருவினைவணங்கியையாகொண்டல்வாகனன்றன்செம்ம
லரசர்கண்மடியநூறியரியெனவிரைவிற்செல்வா
னொருநொடியிடுமுன்சிந்துபதியுயிருண்பனென்றான் (௧௮௪)

நவையுறுமனத்தனாயசுயோதனனவிலலோடும்
பவ்மறுமறையோனீதான்பருவரலொழிதியென்று
தவமுறுபலத்தாலெந்தைதந்திடப்பெற்றேனீதென்
றுவமையில்கவசமீயவுயர்ந்தவன்புனைந்துமீண்டான் (௧௮௫)

பூசுரனளித்ததுய்யகவசமேற்புனைந்துகொண்டு
மாசுணமுயர்த்தகோமான்வாசவன்மைந்தன்மீதி
னாசுகமாரிதூவியார்த்திடநகைதானெய்தக்
கேசவன்றன்னைநோக்கிக்கிரீடியங்குரைக்கலுற்றான் (௧௮௬)

என்முனினமரினென்றும்யோசனைக்கெதிர்நிலாத
பன்னகதுவசனெய்திப்பகழிதானெய்யுந்தன்மை
யன்னவெந்நுற்றுன்றுதாயறையெனவரியாசான்பாற்
பொன்னெடுங்கவசம்பெற்றுப்போர்பொரத்துணிந்தானென்றுன் (கஅஎ)

யாதவனருடலோடுமெழிலுறுவிசையனந்தன்
காதலன்கவசமீதிற்கனலுறுகணையொன்றேவ
வேதியன்குமரன்றுய்யபகழியால்விலக்கலோடும்
பூதலத்தரசரெண்ணில்பகழிகள்பொழிந்துசூழ்ந்தார் (கஅஅ)

சலமுறநிருபர்பாய்மாத்தந்திதேர்நிறையச்சூழ்ந்து
வலனுறவிமையோரஞ்சவாளிகள்பொழியப்பார்த்தன்
நிலைகுலைந்தவரைத்தாங்குநெறியிலாதயரமாயோ
னுலகொடெண்டிசையுமஞ்சவூதினுன்றவளச்சங்கம் (கஅகூ)

அண்டம்விண்டனகொலென்றேயமரர்கள்வெருவியோட
வெண்டிசைக்கரிகளஞ்சவெதிருமொன்னலர்களெல்லா
மண்டனிலயர்ந்துபாறவலையினையுலகமெல்லா
முண்டவனுகாந்தகாலத்துருமெனவூதினுனல் (ககூ0)

அரிவளையூதமன்னரவனியின்வெருவியோட
நரகன்மெய்துளைத்தவெய்யகணையினைநல்கவாங்கி
யுரககேதனன்றன்மெய்யினுற்றிடுங்கவசம்பாரின்
விரைவினிற்பொடியாய்வீழவிசையனெய்தார்த்தானன்றே (ககூக)

கவசநீறுறலும்பாரிற்சுயோதனன்கலங்கியோட
வுவணன்மேலுயருங்கோமானுடனும்பர்மதலைதேர்மேற்
சிவனெனமுனிந்தேயேகச்சிறந்திடுந்தருமராச
னவனியையிடந்தானூதும்வளையினொர்ப்பரவங்கேட்டான் (ககூஉ)

பார்த்தனுக்கிடருறுமற்பாஞ்சசன்னியத்தைவேழங்
காத்தவன்முழக்கானென்னக்கலங்கியேதருமன்மூன்று
நேத்திரனிடரைத்தீர்த்தானிசரில்சங்கூதுந்தன்மை
சாத்தகியறிந்துவாவென்றேவினன்றயையான்மிக்கோன் (ககூங)

வினையகறருமன்கூறவிளங்கியவிரதமீதிற்
சினியருள்புதல்வனெய்திச்செருநர்கண்மடியநூறிக்
கனமெனக்கணைகடூவிக்கன்னனைத்துரத்திப்போரின்
முனையுமன்னவர்களெல்லாமுறிந்திடச்சென்றுனன்றே (ககூச)

பின்னருந்தருமராசன்பெருந்துனியுறவேவீமன்
றன்னைநீமாயோன்றுய்யசங்கினையூதுந்தன்மை
யின்னதென்றறிந்துவாவென்றேவிடவிரதமீதின்
மன்னவர்மடியத்தண்டான்மலைந்தவன்சென்றுன்மன்னோ (ககூரு)

வாரியைக்கிழியவோடுமரக்கலமென்னமண்ணி
னேருறுமரசரெல்லாமிரிந்திடநெடுந்தேரோட்டி
வீரியக்குருவையத்தின்விண்ணுறவெழுந்துமீண்டு
பாரின்மேலுருண்டுவீழப்பற்றியேயெறிந்துபோனுன் (ககூசா)

அரவுயர்வேந்தன்பின்னோராறைந்துநவப்போர்தம்மைத்
தரையினிற்செற்றுவீழ்த்துத்தவனன்சேயுடனேதாக்கி
யிரவிசேய்முறியப்பின்றுஞ்சுயோதனனிளையோர்நால்வர்
விரைவினிலுறும்போர்செய்யவவரையும்வீட்டியார்த்தான் (ககூஎ)

அலையுறுகடலேபோலவார்த்தவாசுகன்றன்சேனைச்
சலமுறக்கன்னன்வெய்யசரத்திற்றேரழித்துத்தன்கைச்
சிலையவன்கழுத்திற்பூட்டச்சினத்துடன்வயிரத்தண்டா
லலரிதன்சிறுவன்பாரிலயர்ந்திடவடித்துப்போனான் (௧௯௮)

மூத்தவனேவவந்தமுடங்குளைசிகராம்வீமன்
சாத்தகியுடனுங்கூடித்தமணியத்தேரினேறி
வேத்திரிந்தரசரோடவிரைவினினெய்திப்போர்செய்
பார்த்தனைத்தழுவிமாயோன்பதந்தனிற்பணிந்தானன்றே (௧௯௯)

துனியறுவாயுமைந்தன்சுடர்மணித்தண்டிற்கைமா
வினமடிந்திடவேமோதவிந்திரன்சிறுவன்வில்லாற்
கனமெனக்கணைகள்சிந்தக்காவலர்மடியும்வேலை
சினியருள்புதல்வன்பூரிச்சிராவுடன்செருச்செய்தானால் (௨௦௦)

ஆர்த்திருவோருந்தேர்களழிந்திடவாளிதூவிப்
பார்த்தவர்வெருவப்பாரினிழிந்துவாள்கரத்திற்பற்றிப்
போர்த்தொழில்புரியப்பூரிச்சிராசினம்பொங்கத்தாக்கிச்
சாத்தகியுரத்திலேறித்தலையினைத்துணிக்கும்வேலை (௨௦௧)

சீதரன்கண்டுபார்த்தாசினியருள்சுதனைக்காவென்
றோதலுமிருவர்போரினொருவன்வெங்கணைதானேவ
வீதியோவென்னப்பொங்கிநேமியைவாங்கவானோர்
நாதனற்குமரன்பூரிச்சிராக்கரநறுக்கிவீழ்த்தான் (௨௦௨)

கரம்விழக்கலக்கமெய்துங்காவலன்றன்னைத்தள்ளித்
தரைதனிற்சினிதன்மைந்தன்றன்கையிலுறுவாடன்னாற்
சிரம்விழத்துணிசெய்தார்த்தான்றேருறும்விசயன்வில்லா
லரசர்கண்மடிந்துவீழவாசுகமாரிபெய்தான் (௨௦௩)

நாழிகையிரண்டின்வெய்யோன்மறையவேகுடக்கினண்ண
ஆழியினரன்போற்சீறியும்பர்கோன்மதலைவில்லால்
வேழமாவனந்தம்வீழவிறன்மனர்மடியப்பாரி
னூழிபோலுதிரமோடவாசுகம்பொழிந்தானன்றே (௨௦௪)

அரவுயர்வேந்தன்சிந்துநிருபனையலரிநீளும்
பரவையின்மறையுங்காறுங்காத்திரேற்பார்த்தன்வெய்ய
வெரியினிலிறப்பனென்றேயிருநிலத்தரசர்க்கெல்லா
முரைசெயத்திரண்டுவாளிபொழிந்தனரும்பரஞ்ச (௨௦௫)

செருவிடையரசரெல்லாந்திரண்டிடச்சிந்துமன்னை
யிரவிபோய்விழுவமுன்னமெழிலுறுவிசயன்கொல்ல
வரிதெனவரிவெய்யோனையாழியான்மறைக்கமுன்செய்
பெருவினைவளையப்பற்றும்பெற்றிபோலடர்ந்தகங்குல் (௨௦௬)

இரவியத்தமனமாய்த்தென்றெழுகின்றவுவகையோடு
மரவுயர்வேந்தன்றன்னோடனிகங்களார்த்தலோடும்
விரைவினிலெய்திச்சிந்துமன்னவன்விசயன்றன்னைப்
பரிபவம்பேசிநக்கான்பராபரன்முறுவல்செய்தான் (௨௦௭)

தூயவனொருவன்றன்னைச்சூழ்ந்திடும்வினையப்போதின்
மாய்வனபோலமாயனாழியைவாங்கவெய்யோன்
மீயுயர்விசும்பிற்றோன்றவிசயனோர்சரத்தினாலே
தீயவச்சிந்துமன்னன்சிரத்தினைத்துணித்தானன்றே (௨௦௮)

அந்தமன்மருகன்சம்பாரடையுமுன்னறைவான்மாயன்
சிந்துமன்சிரத்தைவீழ்த்தான்சிதையவேயிவனைத்தந்த
தந்தைதான்றவஞ்செய்கின்றானவன்கையிற்றலைபோய்வீழ
வுந்தெனவிழாவண்ணமுயர்த்தினன்விசயனம்பால் (உ0கூ)

வாயுவின்கணையாற்சிந்துமன்னவன்றலையைப்பார்த்த
னோயெனுமுன்னர்த்தூயசமந்தபஞ்சகத்தினெய்துந்
தூய்மையிறவத்தோன்கையினிடச்சுதன்சிரங்கீழ்வீழ்த்துத்
தீயவன்சிதைந்துவீழ்ந்தான்செய்தவம்பழுதாகாமல் (உக0)

மறைந்திலங்கலரிகண்டான்மைத்துனன்சிரத்தைக்காணா
னிறந்தனன்றங்கைகொண்கனென்றந்தன்மைந்தனேங்க
வறந்தவறாததன்மனனிகங்கண்மகிழ்ந்தேயார்ப்பத்
துறந்தவரரிபத்தர்க்குத்துன்பம்வந்தடராதென்பார் (உகக)

பரவையினிரவிவீழப்பாம்புயர்பதாகைவேந்த
னிரவினிற்பொருவனென்றேயெழிலுறுதீபமேற்றத்
திரையுறுமுவரிமீதிற்செங்கமலங்களெல்லா
நிரையுறப்பூத்தபோலத்திசைதொறுநிறைந்தவன்றே (உகஉ)

கங்குல்வந்துறவேவெய்யகடோற்கசன்மைந்தன்வாளி
யெங்கணும்விடுத்துவீரரிபமயமெல்லாமாள
மங்குலினுருமுபோலவுரப்பியேவருகின்றானைச்
சிங்கலிலிவுளித்தாமாச்செற்றனன்பகழியொன்றால் (உகங)

மைந்தன்றான்மடியவீமன்மகன்மறையவன்சேய்மீதி
னிந்துவேணியனுமஞ்சவெதிர்ந்துதன்பகழிதூவ
வந்தணன்சிறுவன்றேர்மேலயர்ந்திடவார்த்துச்சென்றே
வந்தடரலாயுதன்பார்மடிந்திடவாளிபெய்தான் (உகச)

நிசிசரன்றன்னைச்செற்றகடோற்கசனிகரிலாத
வசுவரியாகிக்காற்றாய்மழையதாயனந்தரூபாய்க்
கசரததுரகவீரர்கணக்கிலர்தம்மைக்கையாற்
பிசையும்வள்ளுகிராலூன்றிப்பிளக்குந்தேயத்துழக்குமன்றே (உகரு)

கடகரியிவுளிவீரரனேகரைக்கடோற்கசன்றான்
வடவனலெனவேயெண்ணில்வடிவமாய்வதைக்கநோக்கி
விடவரவுயர்த்தோன்சொல்லால்வெய்யவன்சுதன்வேலேவப்
படியினில்வீமன்மைந்தன்பருப்பதம்போலமாண்டான் (உகசா)

வரையெனக்கடோற்கசன்றான்மடியவைவோரும்வீழ்ந்து
தரணியினரற்றமாயோன்றடுத்திவ்வேல்கன்னன்பார்த்த
னுரமிசைவிடாமலின்றீண்டிவனொடுமொழிந்ததன்றே
யரசர்நீரிரங்கலென்றேயறைந்திடத்தேறினாரால் (உகஎ)

கறைமிடற்றானைப்போலக்கனன்றுயர்தேரினேறி
மறையவன்வாளிதன்னால்விராடனைவதைத்துப்பின்னர்ப்
பிறையெனவரிவிற்கோலிப்பிறங்கியவாளிதூவி
விறலுடைப்பாஞ்சாலன்றன்சிரத்தினைத்துணித்துவீழ்த்தான் (உகஅ)

விருதரெண்விராடனோடுந்துரோபதன்மடிந்துவீழப்
பரிதிநீள்பரவைமீதின்வயங்கிடப்பதினைந்தாநா
ளிருதிறத்தரசரெல்லாமெதிர்ந்துறவாளிபெய்தே
பொருதனரிவுளிவீரர்புகரிபமடிந்துவீழ (உககூ)

இறுதியிற்பொழியுமேசமெனவிலால்வாளிபெய்து
கறையடியிவுளிவீரர்மடிந்திடக்கவந்தமாட
மறையவன்மறலியஞ்சவாசுகியுமிழவாழி
யுறையுமாவிடமுண்டான்போலுருத்தமர்செய்யும்வேலை (உ௨0)

ஆசுகன்மதலைதண்டாலமரிடைமகதனேறும்
பூசுரன்சிறுவன்பேரைப்பூண்டதோர்கரியைச்செற்றே
யேசகலரிமுனெய்தநீகொன்றவிபத்தின்பேரை
மாசகன்மறையோன்முன்னர்ருவன்றுவருதியென்றுன் (உ௨க)

அரியிவைகூறவீமனந்தணன்முன்னரெய்தி
விரைவினிலிவுளித்தாமாவதுமென்றுமீடலோடும்
வரிசிலைமறையோன்வாயுமைந்தன்சொற்சடமாமென்று
குருதிகள்பெருகவீரர்குழாங்களைக்கொன்றுவீழ்த்தான் (உ௨௨)

வரிசிலைமறையோன்வீமன்வாய்மையைப்பொய்யாயெண்ண
வரியரன்மைந்தன்றனையந்தணன்முன்னரெய்தித்
தரணியினிவுளித்தாமாவதமென்றுசாற்றுகென்றே
யுரைசெயச்செவியைப்பொத்தியுளங்குலைந்திவைகள்சொல்வான் (உ௨௩)

தரணியினிமித்தமாகச்சற்குருவிறக்கப்பொய்யை
யுரைசெய்சாற்பழிவந்தெய்துமுலகமுள்ளளவுமோவா
வெரியுறுநிகோதந்தன்னினெய்துவனென்றுதன்மன்
வெருவியேயுரைத்தலோடும்விமலனுண்டுரைக்கலுற்றான் (உ௨௪)

ஒருபொய்யினனந்தம்பேர்களுயிருய்யினறந்தானெய்த
வருநரகடையாரென்றேயரிசொலத்தருமனேகிக்
குருவின்முன்னிவுளித்தாமாவதமென்றுகூறக்கேட்டு
வரிசிலைவிழவேயாவிவானுறமறையோனின்றான் (உ௨௫)

சிலைநிலன்விழவேநின்றதுரோணனைத்திட்டத்துய்மன்
சலமுறக்கணையொன்றாலேதலையினைத்துணித்தலோடு
மலைவிழுந்ததுபோற்பாரின்மடிந்திடமன்னரெல்லா
நிலைகுலைந்தோடினார்கணீதிசொன்றவர்கள்போல (உ௨௬)

அறனுறுந்துரோணன்மாளவவனியினரசரெல்லா
நிறைவுறுங்கனிகண்மல்குநிவர்மரம்விழவேயோடும்
பறவையின்குழாங்களென்னத்திசைதொறும்பாறலோடு
மறுவிலாவிவுளித்தாமாவந்துவீழ்ந்தரற்றினுல் (உ௨௭)

தந்தைதன்மீதின்வீழ்ந்தேயிரங்கியதவத்தோன்றன்னை
யந்தமன்மைந்தன்றேற்றியணைத்திடவிறுதிக்காலத்
திந்துவேணியன்போன்மிக்கமுனிவோடுமிவுளித்தாமா
வுந்தினனுலகமெல்லாமுண்டவன்படையையம்மா (உ௨௮)

செருவிடையிவுளித்தாமாசீதரன்படைவிட்டார்ப்ப
வரிகரிமிசையினேறியறன்சுதன்சேனையானோர்
பரியிபமீதேறுதேபடையெலாமொழிமினென்னக்
கரிபரியிரதமோவிக்கரத்தினுயுதங்கணீத்தார் (உ௨௯)

வசுவரிசகாத்தன்மைந்தனொழியமற்றுள்ளோர்வேயி
னிசையுறவூதுவோன்றனியம்பவாயுதங்கணீக்கச்
சசிபதிவிபுதரஞ்சச்சக்கரன்படைவான்மீதின்
விசையுறவழல்கள்சிந்தவீமன்மேலெதிர்ந்ததன்றே (உ௩0)

வாயுவின்மதலைமீதேயரிபடைவருதல்கண்டு
தூயமாதருமனோடுந்துவரையாள்வோனாண்டெய்தி
நேயமோடனிலன்மைந்தன்றனைநிராயுதனாய்ச்செய்ய
மாயவன்படைதீமாறிவானுறப்போயிற்றன்றே (௨௩௧)

அரிபடைபழுதாய்ப்போகவந்தணன்சிறுவன்சீறிப்
பரவையின்விடமுண்டான்றன்படையினையெடுத்தலோடுஞ்
சுரர்முனிமுதலாமெண்ணிற்றூயமாதவர்களெய்தி
யிருபிறப்பாளர்க்கெய்தாமுனிவினையொழிதியென்றார் (௨௩௨)

தூயமாதவர்களெல்லாந்துரோணன்றன்சுதனைநோக்கி
மாயவனிற்கநீதான்வழங்குமாப்படைகளெல்லா
மோயுமென்றுரைத்தேயோவவுவரியினலறிவீழ
வேயெனாமுன்னர்மன்னர்பாடிவீடெய்தினார் (௨௩௩)

தூயமார்த்தாண்டனெய்தித்துலங்கச்சோடசநாட்டனிற்
றீயவச்சுயோதனன்வான்றினகரன்சேனையச்சேனை
நாயகனாகச்செய்துநாணிலத்தரசர்சூழ
மீயுயர்மவுலிதோன்றவெஞ்சமர்விளைக்கவந்தான் (௨௩௪)

நிருபர்கள்பொதுளிச்சூழநிகரிலாவணிகமார்ப்ப
முரசுயர்வேந்தனெய்திமுனிவர்வானவர்கணோக்க
வரவுயர்வேந்தன்முன்னரயங்கரிமடிந்துவீழப்
பொருதனன்கவந்தமாடப்புணரியிற்குருதியோட (௨௩௫)

தருமன்வெஞ்சினத்தினோடுஞ்சுயோதனன்றடந்தேர்பாரின்
விரைவினிற்றுகளாய்வீழவிசிகங்கள்விடுத்தலோடுஞ்
செருவொழிந்தோடுவோனைச்சிறந்திடுங்கதையாலெற்ற
வரவுயர்துவசவேந்தனவனியினயர்ந்துவீழ்ந்தான் (௨௩௬)

அவனியினயர்ந்துவீழ்ந்தவந்தமன்சிறுவன்றன்னைப்
பவமகல்பரிதிமைந்தன்பற்றித்தன்றேர்மேலேற்றிச்
சிவனெனமுனிந்துவெய்யசிலீமுகமாரிபெய்யக்
கவனமாவயவர்கண்மாளக்கவந்தங்கணடித்தவன்றே (௨௩௭)

சரியிலாநகுலன்பின்னோன்றன்னுடன்றாக்கலோடும்
விரைவினிரதநூறிவிளங்குமத்திரைதான்பெற்ற
விருவர்கந்தரத்திற்றுய்யசிலையினையிறுகப்பூட்டிப்
பரிபவஞ்செய்தேயோட்டிப்பரிதிதன்மைந்தனார்த்தான் (௨௩௮)

செருவினிலரசர்முன்னர்மத்திரைசிறுவர்தம்மை
வரிசிலைதன்னைப்பூட்டியோட்டவாள்விசயன்சீறி
விரைவினில்வில்லுந்தேருமழித்திடவெருவிக்கன்னன்
றரையினினோடவெய்யோன்மறையத்தம்மிருக்கைசார்ந்தார் (௨௩௯)

பரவையிற்பதங்கனெய்தியிலங்கிடப்பதினேழாநா
ளிருதிறத்தரசர்கூடியெதிர்த்தமர்செய்யும்வேலை
யரவுயர்துவசன்றன்னையலரிதன்மைந்தனோக்கி
யிருகையாற்றொழுதுநின்றேயினியசொற்கூறலுற்றான் (௨௪௦)

சூதபுத்திரனாமென்னைச்சுடர்மணிமகுடஞ்சூட்டிக்
கோதிலாவங்கநாடுகொடுத்தெனோடருந்தித்துய்ய
பூதலந்தனிலென்னாணைபொருந்திடத்துணைவனாக்கித்
தீதறச்செய்தநன்றிக்கின்றியான்றீர்ப்பனென்றான் (௨௪௧)

வித்தகவரசாகேட்டி விளங்குமென்னிரதமீதின்
மத்திரவரசனெய்திவலவனாயூருமாகி
லத்திரமழையைப்பெய்தேயருச்சுனன்றன்னைக்கொல்வே
னித்தலமிசையிலென்றங்கிரவிமாமதலைசொன்னான் (உ௪உ)

அலரிதன்மைந்தன்கூறவரவுயர்ந்துவசன்சிந்தை
நலனுறமகிழ்வினோடுமத்திரன்றன்னைநண்ணித்
தலைமிசையிருகைகூப்பித்தபனன்சேயிரதமீதின்
வலவனாயூர்தியாகின்மடிவன்வாள்விசயனென்றான் (உ௪௩)

நீதியிலரசன்கூறநிகரின்மத்திரன்றான்சீறிச்
சூதபுத்திரனுக்கென்னைத்துலங்குதேரூர்தியென்றே
யோதினைநீயல்லால்வேறொருவனின்றுரைத்தானவைச்
சேதனைசெய்வனென்றுசெருக்களமொருவிப்போனான் (உ௪௪)

மத்திரன்முனிந்துபோகவாளரவுயர்த்தோன்பின்சென்
றத்திரத்திறலினாலேயரசநின்னொப்பாரில்லை
யுத்தமத்திருமாலேபோலிரதநீயூர்தியென்றேன்
வித்தகபொறுத்தியென்னமகிழ்ந்தவன்விளம்பலுற்றான் (உ௪௫)

நீதிசேர்முகுந்தனோடுநேரெனவென்னைமன்னா
வோதியசெயலாற்பொற்றேரூர்குவனென்றுகூறி
யாதவன்குமரன்வையமமர்ந்தமத்திரனைநோக்கிப்
பூதலமுழுதும்பெற்றான்போலவேமகிழ்ந்தான்மன்னன் (உ௪௬)

இரவிசேயிரதமூருமத்திரன்றன்னையென்றன்
வரிசிலைத்திறலைக்காணமகபதிசிறுவன்மீதின்
விரைவினிற்பொற்றேர்தன்னைவிடுதியென்றுரைத்தலோடு
நிருபரெண்ணகுலன்மாமனகைத்திவைநிகழ்த்தலுற்றான் (உ௪௭)

சிவனொடுபொருதுமூன்றுகோடிதானவரைச்செற்றுப்
புவனமெண்டிசையும்வென்றபொற்புடைவிசயன்முன்ன
ரவனியிற்றனிநீசென்றேயமர்பொருங்கருமமின்றென்
றுவமையிலரசன்கூறமுனிந்தங்கனுரைப்பதானான் (உ௪௮)

மத்திரவரசயானேமுனிந்தமர்மலைந்துவில்லா
லத்திரம்பொழியநில்லாதருச்சுனன்மாளுமாறு
முத்தமத்திருமாலாழித்துவரையினோடுமாறும்
வித்தககாண்டியென்றுவிளம்பிடவவனுஞ்சொல்வான் (உ௪௯)

சித்திரசேனனுன்னைச்செயித்தரவுயர்த்தோன்றன்னை
வித்தகவிரதமீதின்வீக்கியேயேகும்வேலை
யத்திரமதனின்வானையடைத்தவன்றன்னைவென்ற
வுத்தமவிசயற்கொப்பாயல்லையென்றுரைக்கலுற்றான் (உ௫0)

அரியெதிர்நரிநேராகவடையுமாறொக்குநீதான்
சுரர்பதிசுதன்றன்னோடுந்தனிப்பொரத்துணிந்ததென்ன
யிரவிசேயிவனைக்கொல்வனென்றுவாளுருவலோடு
முரணுறுகட்கம்பற்றிமதகிரனுருத்தானன்றே (உ௫௧)

இருவரும்வாட்கையேந்தியெதிர்தலுமந்தன்மைந்தன்
விரைவினிற்றடுத்துப்பின்னர்விறல்கொண்மத்திரனைநோக்கித்
திரிபுரமெரிக்கத்தேரைச்சிவனுக்குப்பிரமனூர்ந்த
சரிதையையறையக்கோபந்தணிந்தங்கனிரதத்துற்றான் (உ௫உ)

மத்திரனிரதமூரமகிழ்ந்திடுமிரவிமைந்த
னத்திரமாரிதூவியடர்தலுந்தருமராசன்
வித்தகநிருபர்பாய்மாவிளங்கியகரிகள்சூழ
வெத்திசையோருமஞ்சவிருஞ்சமர்விளைத்தானன்றே (௨௫௩)

நிகரிலாத்தருமராசனெடியசாயகங்கடன்னாற்
சகுனிவெஞ்சிலையைநூறித்தந்தியினுயிரைச்செற்றுச்
சிகியுறுங்கணையினாலேதேரழித்துரத்தினெய்யப்
பகலவன்குமரன்பாறப்பணிலம்வாய்முழக்கியார்த்தான் (௨௫௪)

இரவிதன்சிறுவன்வேறோரிரதமேலேறிமேகஞ்
சொரிவபோற்கணைகடூவத்துரசமேற்சூரர்வீயத்
தருமன்றன்கவசம்பொற்றேர்தனுவொடுந்துகளாய்வீழ
விரைவினிற்பாறலோடுந்தொடர்ந்தனன்வெய்யோன்மைந்தன் (௨௫௫)

அறனருள்சிறுவன்பாறத்தொடர்ந்தவாதவன்றன்மைந்த
னறநெறிபொறையுமேவனமருதுசெய்யனுசர்தாமு
முறுதுணையாகவாழ்வாய்வறிஞர்போற்செருவிலோடா
திறைவனையணியினுள்ளேயிருத்தியென்றுரைத்துநக்கான் (௨௫௬)

வெந்திறற்கன்னனிவ்வாறுரைத்தவண்மீடலோடு
மந்தமார்தருமன்றுய்யவலரிதன்மைந்தனம்பால்
வந்திடுகுருதிமெய்யின்வழிந்திடக்களத்தையோவிச்
சிந்தைநைந்திருக்கைதன்னுட்டயிலத்திற்சேர்ந்தானன்றே (௨௫௭)

தூயனுந்தருமன்பாறத்தொடர்ந்திடுங்கன்னன்மீதின்
வாயுவின்மதலையெய்திவரிசிலைவளையவாங்கி
யேயெனுமுன்னம்வாளிவிடுத்திடவிரத்தவெள்ளம்
பாயவேமயங்கிவீழ்ந்தான்பருதிதன்செம்மன்மாதோ (௨௫௮)

இரவிதன்மைந்தன்றேறியிலங்கியவிரதமேறி
யரிவைபங்காளன்போலமுனிந்தடுகணைகடூவ
முரணுறுமனிலன்மைந்தன்றேர்சிலைமுறிக்கவோடப்
புரவலர்வெருவிக்காலாற்புவியிடைப்பாறினரால் (௨௫௯)

ஏசகலிரவிமைந்தனிமையவரஞ்சவெண்ணி
லாசுகமடர்ந்துதூவியருச்சுனன்மீதினெய்ய
வாசவன்குமரன்கையால்வடிக்கணைதொடாமனின்றே
கேசவவிவன்முனூற்றேனென்றிவைகிளத்தினானால் (௨௬0)

இரவிதன்மைந்தன்முன்னர்யான்செருச்செய்வதில்லை
விரைவினிலிரதந்தன்னைமீளநீவிடுதியென்றே
யுரைசெயநகைத்துமாயனும்பர்கோன்மதலையோடுந்
தருமன்முன்னெய்தநோக்கியவனிவைசாற்றலுற்றான் (௨௬௧)

சரமுறுநோவினாலேதயிலமார்தொட்டிதன்னுண்
மருவியதருமன்வந்தமகபதிமகனைநோக்கிச்
செருவினிலிரவிசேயைச்செற்றுவந்தனைகொலென்றே
யுரைசெயவில்லையென்றேதவுளைந்தவன்விளம்பலுற்றான் (௨௬௨)

கன்னனைவதைசெயாமற்கன்னல்போல்வில்லையேந்தி
மன்னவர்நகைப்பவிங்ஙன்வருகலைபோதியென்ன
வென்வில்லையெள்குவாரைத்தெறுவதென்சபதமென்று
பண்ணகமெனவேசீறிப்பார்த்தன்வெஞ்சரந்தொட்டானால் (௨௬௩)

தருமன்மேல்வாளியேவுமுன்னரிற்றடுத்துமாயோன்
குரவரைவதைசெய்தானீகொடியவென்னிரையஞ்சேர்வை
யரசவென்றுரைப்பப்பார்த்தனுவிவைத்துறப்பனென்ன
விரைகமழ்துளவத்தாரோன்விசயனுக்கிவைசொன்னுறால் (௨௬௪)

குரவரையெள்கித்தன்னையுயர்ச்சியாய்க்கூறினுனேற்
றமரையினிற்சவநேராவரென்றிடத்தருமன்றன்னை
விரைவினிற்பொய்ச்சூதாடிவிறலுடைப்பாஞ்சாலன்றன்
றெரிவையைத்தோற்றேயெய்தாப்பழிவரச்செய்தாயென்றான் (௨௬௫)

அத்தினபுரத்தையாளுமரவுயர்வேந்தன்றன்னைச்
சித்திரசேனன்வீக்கிச்சென்றருஞ்சிறையினுள்ளே
வைத்திடுமுனரினென்றுல்வனத்திடைமீட்டுவிட்டே
யித்தனையரசர்மாளவியற்றினையென்றுசொல்வான் (௨௬௬)

புந்தியில்வினையாலென்றன்புதல்வனைப்போரிலேவி
யந்தகபுரத்தினுய்த்தாயமரிலென்விறலிற்கங்கை
மைந்தனைநரகன்சேயைவருணன்றன்மகனைத்திய
சிந்துவுக்கிறைவன்றன்னைச்செற்றனீயென்செய்தாயால் (௨௬௭)

என்றிவைமுதலாவுள்ளவெள்கலைப்பார்த்தன்கூறக்
குன்றவிற்றருமனேக்கிவிசயனீகூறுமாற்ற
மென்றனுலடைந்ததாமென்றியான்வனத்துறுவேனென்று
சென்றமுன்னவன்றன்பாதத்திறைஞ்சினன்றேவர்கோன்சேய் (௨௬௮)

தருமன்றன்றுளில்வீழ்ந்தாண்டிறைஞ்சியேதனஞ்சயன்றான்
பெரியவன்சிறியேன்கூறும்பிழையினைப்பொறுத்தியென்றே
யுரைசெயமாயன்வேண்டவுதிட்டிரன்முனிவையோவிப்
பரிவினினனுசன்றன்னையணைத்திடப்பார்த்தன்சொல்வான் (௨௬௯)

செருவினிலிமைப்பின்முன்னஞ்சென்றுயர்கன்னன்றன்னை
விரைவினின்வதைத்துமீள்வன்விறலுடைத்தருமவென்றே
யுரைசெய்துமுராரியோடுமுயர்ந்திடுமிரதத்தேறி
யரியெனச்சமரபூமியணுகியேசமர்செய்வேலை (௨௭௰)

மகதராசன்சேய்தன்னைவயமுறுஞ்சோழன்செற்று
னிகழ்விலாவிவுளித்தாமாவியல்புறுதென்னன்றன்னை
மிகமுனிந்தானையோடும்வீட்டினன்வீமனெய்தித்
தகைமையில்சுயோதனன்றன்னனுசரைத்தாக்கினுறால் (௨௭௧)

உரககேதனன்றன்பின்னேனொன்பதுபேரைவீட்டி
விரிகுழலணங்கினுடையுரிந்தவெய்யவனைப்பற்றி
கரவிரறுணித்துமார்பைப்பிளந்துகந்தரத்தைநீக்கிக்
குருதியைப்பருகுமுன்மாறடுக்கக்கொப்பளித்தேயார்த்தான் (௨௭௨)

செருவிடையரசரெல்லாஞ்சினத்தமர்செய்துமாள
வரவுயர்வேந்தன்றன்பாலந்தணன்சிறுவனேகிக்
குருவின்மாமதலையான்றான்கூறியதிசழ்ந்திடாதே
தருமனுக்குறும்பாரீந்துன்றரணியையாடியென்றான் (௨௭௩)

அந்தணன்சிறுவன்கூறவரவுயர்துவசனென்றன்
மைந்தர்களனுசர்சுற்றம்வானதிபுதல்வனுசான்
சிந்துமன்பூரிபூரிச்சிராபகதத்தன்சேர
வந்தகபுரத்தராஞராரரசாள்வரென்றான் (௨௭௪)

வருவிதிவருவதல்லாலியாவையுந்தடுக்கவற்றோ
செருவிடைத்தாழலாமோவென்றுதானிசையச்செப்பி
யரவுயர்துவசன்சிறியனுசனைச்செற்றான்மீதி
னெரிசினத்துடனேவெய்யகணைசொரிந்தெய்தினானால் (உஎரு)

நகுலன்றேர்சிலையைநூறிநசமெனவெதிர்ந்துவந்த
பகலவன்குமரன்சேயைப்பகழியாற்றுணித்துவீழ்த்து
மிகமுனிந்தெய்துகின்றவிசயன்மேல்வெய்யோன்மைந்தன்
சிகியுறுகணைகளெங்குஞ்சிதறியேயடர்ந்தானன்றே (உஎசு)

வேறு. ஆதவனருட்புதல்வன்வெஞ்சிலையினிற்பொழியுமாசுகமெலாந்
தீதில்விசயன்கணையினூறியுயிர்கன்னன்வருதேருருளையிற்
போதின்முகையொப்பதொருவாளியைவிசைத்துவிடவேபுவியிடை
யேதமகலும்மிரதமேழுதகவிற்கிடையிடைந்ததுமரோ (உஎஎ)

ஏழுதகவிற்கடையிடைந்தவிரதத்தினெதிரென்றருள்சுத
னூழிதனில்விஞ்சமரனுத்துவிசயன்னவிர்மொட்டேருருளையின்
பாழியமர்கைச்சிலையினாலொளிர்கொள்பங்கயமுகக்கணைவிட
வாழியரியூர்ரதமேழுசிலையின்கிடையிடைந்தனவரோ (உஎஅ)

ஏழுசிலையின்கிடையிலங்குமிரதம்மிடையவெய்தகனை
வேழம்வதைசெய்தவிறையங்குலிசுழற்றிவிசயன்றொடைறைவா
னேழுலகமும்மருளவெய்தகிகரென்றொடுனையுஞ்சுமைகொளு
மாழியுறுதேரினிடைவானில்விடுமஙகன்விறலென்றனனரோ (உஎகூ)

அரியிவைமொழிந்திடுமுனங்கர்பதியாசுகனருட்படைவிடச்
சுரர்பதிசுதன்சிலையினப்படைகொட்டேயவைதுணிந்துவிடவு
மிரவிசுதனென்றருளும்வெம்படைதொடுக்கவிமையோர்கள்பதிசெய்
வரிசிலையின்வெங்கனலவன்படைதொடுத்ததனைமாற்றினனரோ (உஅ௦)

ஆதவனருட்சுதனயப்படைதொடுக்கவமரர்க்கிறைமக
னேதமகலும்வருணனற்படையினாலவையறுக்கவிரவி
காதலன்முனிந்தியமன்வெம்படைதொடுக்கவிசயன்கடிதினி
னேதரியவிந்திரனெடும்படையினூறியவைபூதினனரோ (உஅக)

மேலவனருட்சுதன்முனிந்தயனெடும்படைவிடுக்கவிசய
னுலுமுகன்வெம்படைதொடுத்தவையறுக்கநலன்மேவிரவிசே
யாலநுகரையனருள்வெம்படைநூறந்திடவருச்சுனன்விலாற்
காலனையுதைத்தவிறைதன்படைகொட்டேயவைகளைந்தனனரோ (உஅஉ)

கோபமுறவானலரிபெற்றருள்குமாரனுயர்கோளரவினைத்
தூபமொடுதீபமுறவேவிசயன்வன்றலைதுணித்திடெனநீள்
சாபமுறவேவிடுவபோதினிவைதப்புமுரன்மீவிடுகெனாப்
பாபமகன்மத்திரன்மொழிந்திடவுமன்னைமொழிபற்றிவிடவே (உஅங)

தூய்மையுறுமென்றருள்சுதன்சிலையினால்விடவெழுந்தவரவம்
வாயினும்விழும்விடம்வளர்ந்துவடவாவனல்கள்போல்வளையத்
தீயுலகொடெண்டிசையுமுற்றிடமுராரியொடுசேர்விசயனு
மாய்வனெனவண்டரொடுமன்னவர்நடுங்கவெதிர்வந்ததுமரோ (உஅச)

விடவரவமண்டர்கணடுங்கியிடமேவுதிறனோக்கியரிதன்
னடியினிரதப்பலகையைந்தெழுவிரற்கடையமுத்தவவரா
வடிவுடையபற்குனமன்மாமகுடம்வவ்விவடவாவனலெனக்
கடிது செலுமுடனவண்மடிந்துவிசயன்கசபதிக்கணைவிட (உஅரு)

வேறு. இரவிசெய்விடுத்தநாகமிருதுணியாகிவீழப்
பரசுடையிராமனிட்டசாபத்தாற்பரிதிசெய்க்கே
கருதியசரங்கடானுங்கையுதவாமற்போக
விரதசில்லிகள்பார்வீழமந்திரனேகினால் (உஅசு)

வலவனாய்வயங்குகின்றமத்திரவரசனேக
நிலனுறுமுருளைதன்னைநிலையுறவைத்துத்தானே
நலனுறவிரதமூர்ந்துநற்கணைதூவியார்ப்ப
மலர்சொரிந்திரவிசேயைச்சூரனென்றுரைத்தார்வானோர் (உஅஎ)

அரவிருதுணியாய்வீழவாசுசமுசவாதாகத்
தரையிற்பேருருளைவீழத்தனிநின்றதபனன்சேய்மெய்
யருவிபோற்குருதிவீழவருச்சுனன்கணைபெய்தார்ப்ப
வரையெனநிலத்துவீழ்ந்தான்விதரணகுணத்துமன்னன் (உஅஅ)

தரையினில்வரைபோல்வீழ்ந்ததபனன்சேயாவிபோமுன்
மருவமர்துளபமாயோன்மறையவனாகிவந்தே
யிருநிலத்திலகுமன்னனெழிலரிச்சந்திரன்றான்
சரியிலானுனக்கென்றேயுன்றருமத்தைத்தருதியென்றான் (உஅகூ)

அருமறையவன்றான்கூறவங்கர்கோன்மகிழ்ந்துநோக்கி
பரிவுடனுரத்திற்றைத்தபகழியைவாங்கவெய்துங்
குருதிநீர்கரத்தால்வாங்கிக்கொடுத்தனன்றருமமென்னக்
கருடவாகனனாயேற்றான்கமலனோடிமையோர்போற்ற (உகூ0)

சங்குசக்கரவாள்சார்ங்கந்தண்டமர்கரங்களோங்க
மங்குலிற்பங்கயங்கண்மலர்ந்ததோர்காட்சிகாட்ட
செங்கண்மாயவன்றான்றோன்றத்தினகரன்புதல்வனாய
வங்கர்கோனெழுந்தாடிப்பாடினனடியின்வீழ்ந்தே (உகூக)

எரியினிற்புனலிற்கானினிலங்கியபிறங்கறன்னின்
மருவியேயனேககாலம்வருந்தினோர்க்ககப்படாதாய்
செருவிடைவிழுந்தென்னாவியானிடைச்சேருமுன்னம்
கருமுகிலெனவேநின்றகண்ணனேபோற்றியென்றான் (உகூஉ)

பரிவுடன்றுதிசெய்வோனைப்பரமனீவரம்வேண்டென்ன
விருநிதிமறையோர்க்கீந்தேனிளமையென்றேவிக்கீந்தே
னரசனுக்குயிரையீந்தேனந்தகாலத்தினுன்னைக்
கருமுகிலெனவேகண்டேன்கடுவினைகாணேனென்றான் (உகூங)

தரைகணீருறவேயிவ்வாறுரைத்திடுந்தபனன்சேயை
யரிமகிழ்ந்துன்றன்சிந்தைக்கன்புறும்வரங்கேளென்ன
விருநிலத்திரந்தோர்க்கெல்லாமீயவுமிலனானென்றே
யொருவரைக்கேளாவண்ணஞ்சனனந்தோறுதவுகென்றான் (உகூச)

இரவிசேயிவ்வாறோதவிறைவனவ்வரந்தந்தேனென்
றருளவேயலரிசேயோனன்னைதான்களத்தினெய்திப்
பரிவுடன்முலைப்பாலீந்தபின்னரென்றாவிபாற
வரமருளென்னமாயோனளித்தவண்மறைந்தானன்றே (உகூரு)

அரிவரமளித்தேயேகவன்புடன்றொழுதேயேத்து
மிரவிசேய்முன்னினெய்தியிரங்கியேகுந்திதேவி
அரசர்கணிறைந்துகாணமுலையிற்பாலருளியேங்கத்
தருமனோடனுசரெல்லாமிரங்கினார்தமயனென்றே (உகூசு)

அரவுயர்துவசனெய்தியரற்றலுமங்கபூபன்
பருவரலொழிதியென்றுபகர்ந்தவன்றன்னையேவி
யரியினைமனத்துள்வைத்தேயாவியைவிடுத்தலோடு
மிரவிபோய்மறையவெல்லாவரசருமிருக்கைசேர்ந்தார் (௨௯௭)

அத்தியினலரிதோன்றவமரினிற்பதினெட்டாநாண்
மத்திரவரசன்சேனாபதியெனவயங்கவந்தன்
புத்திரனரசரோடும்போதலுந்தருமராசன்
வித்தகவனுசரோடுமேவிவெஞ்சமர்செய்தானால் (௨௯௮)

மத்திரைக்கிளையமைந்தன்மறமிகுஞ்சகுனிதன்னை
யத்திரமதனால்வீட்டியார்த்தனன்வீமன்போரிற்
சித்திரகாயமென்னச்சென்றந்தன்சிறுவர்தம்முட்
குத்திரமனத்துமுன்னோனொழியப்பின்னவரைக்கொன்றான் (௨௯௯)

முரசுறுதுவசனெய்திமுகிலெனக்கணைகடூவி
யரசர்கண்மடிந்துவீழவவனியிற்குருதிவெள்ளங்
கரைசெறிநதிபோலோடக்கவின்கொண்மத்திரத்தார்கோன்றன்
சிரசினைத்துணித்துவீழ்த்தான்சுயோதனன்றிடுக்கமெய்த (௩௦௦)

அந்தமன்சிறுவரெல்லாவரசருமடிந்துவீழச்
சிந்தைநைந்திரதந்தன்னைச்செருக்களத்திருத்திக்கானின்
முந்தியோர்மடுவின்மூழ்கிமுகிலினையூர்திசொன்ன
மந்திரமனத்துள்வைத்தான்மடிந்தவருய்யும்வண்ணம் (௩௦௧)

விரைமலர்ப்பொய்கைதன்னின்வியாளகேதனன்றான்மூழ்கச்
சரியிலாவிவுளித்தாமாச்சமருறும்புடவிதன்னி
னுரககேதனனைக்காணாதுளைந்தந்தமடுவினெய்தி
யரசநீயெழுதியின்றேயவரைக்கொல்வனென்றான் (௩௦௨)

அந்தணன்சிறுவன்பின்னுமரசகேளயத்தின்மூழ்கி
மந்திரநினைந்தான்மாண்டார்வருவதுமெய்மையன்று
குந்திமைந்தரையானின்றேகொல்வனென்றுரைத்துவாயின்
வந்தனசபதமெல்லாமொழிந்தனன்வன்மைமிக்கோன் (௩௦௩)

அந்தணன்சிறுவன்சொல்லையவமதித்தரவுயர்த்தோன்
மந்திரமொருமைச்சிந்தையாகிவாவியினுள்வைக
விந்தநற்கயத்துண்மன்னனில்லையென்றிவுளித்தாமா
சந்தனுச்சுதன்சேய்சேரும்பதியினைச்சாரும்வேலை (௩௦௪)

பாரினொன்னலரையெல்லாம்வதைத்துயர்பவனன்மைந்தன்
போரினிற்கண்ணில்வேந்தன்புத்திரன்றன்னைக்காணா
தாரியனுடனேகூறுமளவினிற்கிராதர்சொல்லா
னீருறுபொய்கைதன்னினிருபர்களுடனேசேர்ந்தான் (௩௦௫)

மந்திரமுள்கல்செய்யக்கயமுறுமடுவின்மூழ்க
மந்தமன்சிறுவன்றன்னையாசுகன்சிறுவனெண்ணி
னிந்தைகளுரைத்துக்கையினிகரிலாக்கதையையேந்திக்
கந்தக்கல்லார்வாவிகலக்குவனென்றுபுக்கான் (௩௦௬)

ஆசுகன்மதலையிவ்வாறறைந்துநீர்கலக்கவெய்த
மாசுறுமனத்தனுன்னுமந்திரமறந்துதண்டோ
டேசகல்கயத்தினின்றுமெழுந்துநற்கரையினெய்திப்
பூசலைவிரும்பியாரேபொருதுவரென்னொடென்றான் (௩௦௭)

துயரியுறவறைந்துநின்றசுயோதனன்றன்னைநோக்கி
யினநிரைகாத்தசோதியியம்புவானரசவுன்ற
னனுசர்களடையச்செற்றவாசுகன்மதலையோடே
சினமுறப்பொருதியென்றுசெப்பிடவிசைந்தானன்றே (௩0௮)

தருமனவ்வெல்லைதன்னிற்சுயோதனன்றன்னைநோக்கி
யிருவர்செய்வினையினாலேயரசர்களிறந்துபோனார்
செருவினியொருவிப்பின்னோர்சேவிக்கவாழ்தியென்றே
யுரைசெயமறுக்கலோடுஞ்சமந்தபஞ்சகத்தையுற்றார் (௩0௯)

மந்திரைக்கிளையமைந்தன்மணிக்கதைவாங்கியீய
வத்தினபுரத்தையாளுமரசர்கோன்செல்லக்குந்தி
புத்திரருடனேமாயோன்பொலிவுறுமிரதமீதி
லுத்தமத்தவத்தோர்வைகுஞ்சமந்தபஞ்சகத்தையுற்றார் (௩௧0)

எதுகுலத்திறைவன்றன்மனனுசர்களிலங்குமத்திப்
பதியுறுமன்னனோடுஞ்சமந்தபஞ்சகஞ்சேர்வேலை
நதியினுளயத்தையாடிநற்பதியெல்லாஞ்சேர்ந்து
மதிவணன்விதுரனோடும்வந்தமைசாற்றலுற்றான் (௩௧௧)

பாரதப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௫0௧.

# ௧௧௮-வது பலபத்திரராமன் றீர்த்த யாத்திரைப் படலம்.

பகீரதிசுதன்மேற்றிகிரியையெடுத்தும்பகதத்தனெறிபடையேற்று
நிகரிலாச்சதாயுவிடுகதைவிலக்கிநேமிகொண்டிரவியைமறைத்தே
யிகல்புரிகருனன்றொடுபணிபழுதாயேகவேயிரதத்தட்டழுத்தி
மகபதிசிறுவற்குதவிசெய்திருமாலடியிணைவணங்குவாய்மனனே (௧)

குருகுலத்தரசரிருதிறத்தவருங்கொடியவெஞ்சமர்விளைத்திடவே
பரிநலக்கரிகள்புரவலர்மடிதல்பார்க்கிலனென்றுபால்வண்ணன்
வரிசிலைகடிதின்முறித்திடும்விதுரன்றன்னொடுமாநதியாடத்
தரையினிற்கிரியினகரியினடரும்பழுவங்கடம்மையுங்கடந்தான் (௨)

தூயதாஞ்சரசுவதிவிந்துசாரஞ்சுதரிசனம்விசாலந்தான்
றீமையில்பிரமதீர்த்தமோடுயர்ந்தசக்கரயமுனைசீர்க்கங்கை
நேயமோடிவையாநதிகளிற்படிந்துநெறியுறுநைமிசாரணியத்
தாயுமாமறைசேரருந்தவரடியிற்பணிந்திடவாசிகளறைந்தார் (௩)

வேதரெண்வியாசனடியனுய்விளங்கும்புராணங்கண்முனிவர்கட்கோதி
யாதனமிசையினெழுந்திராதமர்ந்தசூதனையலாயுதன்முனிந்து
மாதவர்வெருவத்தருப்பையாயுதமாயெறிந்துமற்றவன்றனைவதைத்தே
போதனேர்தவர்கள்வருந்தலாலவன்றன்புதல்வன்சாத்திரஞ்சொலப்படைத்தான்

நய்மிசாரணியத்தருந்தவரெல்லாநடுங்கவேவற்கலாவசுர
னியமனும்வெருவவிந்துவானிறையுநதியினின்வேள்வியிற்சுரையோ
டயமுறுதசைசிப்பிரசரங்குருதியிறைத்துவந்தயிலொடுமெதிர்ப்ப
வியல்புறுமிராமனவன்றனையலத்தால்வதைத்திடவிமையவர்துதித்தார் (௫)

மாதவர்மகிழவற்கலாசுரனைவதைத்தவனொருவியேயேகி
நீதிமேவிலங்குங்கவுசிகமடைந்தரிகரிலாச்சரயுவிற்படிந்தே
தீதினையகற்றச்சிறந்திடும்பிரயாகைக்குவந்தெய்திப்பார்திசமூம்
போதனெண்புலகனடியினிற்பணிந்துமுனிவர்கடுதித்திடப்போனான் (௬)

சந்திரவுருவன்றரணியின்வயங்குங்கோமதிகண்டகைதவர்சண்
முந்திடுஞ்சோணாநதியிவைதன்னின்வதிந்தவண்முனிவர்களேத்த
விந்திரவரையினிலங்கியவிராமனிணையடியிறைஞ்சியேயோவி
விந்தமார்கோதாவிரிபம்பைவிமாநதியினின்விரும்பியாடினனால் (௭)

தீவினையகற்றும்பருப்பதச்சிவனைவணங்கியேதிராவிடநாட்டில்
வேயொடுகதலிசண்பசம்பூகம்விழுமியவழைபுன்னையாரந்
தூயநற்கோங்கோடிவையெலாந்துலங்கச்சுனையுணீர்சிலம்பியேயோட
நேயமோடரிகள்கனியெலாமுதிர்க்குஞ்சரில்வேங்கடமலையடைந்தான் (௮)

அருவினையகற்றவயங்குமாகாயகங்கைநீராடியேயனந்தம்
பருவரலொழிக்கும்பாபநாசத்திற்படிந்துயர்குமாரதாரையிற்போய்ப்
பொருமியேபெருகும்பயத்தினுண்மூழ்கிப்பொழிலினிற்கிஞ்சுகங்கொஞ்சக்
குருகினமிலங்கக்குயிலினங்கூவவயங்குகோனேரியிற்குடைந்தான் (௯)

தினகரனேகர்வயங்கியதெனவேசிறந்திடுமணிகளாளைசெய்
கனககோபுரங்கடுலங்குமண்டபங்கள்கவினுறுகமலஞ்சேர்முகில்போ
லனகனற்புதன்மாலசஞ்சலனலர்மேன்மங்கைநாயகனழகாருஞ்
சனகிதன்கொழுநனுயர்ந்தவேங்கடவன்றாளிணைவணங்கியேகினனால் (௧௦)

மங்குலார்சிகரம்வயங்குமாகாஞ்சிநகரினிலுமையெனுமடவா
ளங்கையாற்றழுவக்குழைந்தவர்தம்மைவணங்கியத்திகிரியின்மேவிப்
பங்கயன்மகிழவேள்வியின்வனசமலர்ந்தொளிர்பயோதரமேயச்
சங்குசக்கரங்கைவயங்கியவரதன்றாளினிலிறைஞ்சியேகினனால் (௧௧)

அரிமலர்ப்பொழிலின்மிழற்றுமஞ்சுகங்களனமயில்குயிலினமடையத்
திரையுறச்சிலம்பிப்பெருகுகாவேரிசிறந்திருமருங்கினும்வயங்க
விரவிதன்குலவிக்குவாகுவின்றவத்தினிருனிலத்தெய்தியேயரவின்
கருமுகிலெனவேவிழிதுயிலரங்கன்கழலிணைவணங்கியேகினனால் (௧௨)

விரைவினிடபவரையினின்மேவிவிளங்கியமாலிருஞ்சோலை
யரியினைவணங்கிமதுரையினடைந்தேயரன்றனையிறைஞ்சிச்சென்றப்பால்
வருணனங்குறவேதருப்பையிற்றவஞ்செய்வரிசிலையிராமனைவணங்கி
யிருவினையகற்றவிலங்குசேதுவினையெய்திநீர்படிந்தனனலத்தோன் (௧௩)

சேதுவின்மறையோர்க்கயுதகோதானஞ்சிறந்திடவளித்தவந்தேகித்
தீதறவிளங்குந்தண்பொருநையினைச்சேர்ந்தந்நதியினீராடி
யேதமின்மலையப்பருப்பதத்தெய்தியிலங்கியகுலாசலவிடத்தி
னோதையார்கடலையொருகையால்வாங்கியுண்டமாமுனிவனைக்கண்டான் (௧௪)

தீதறவயங்குந்திராவிடமுனியையிறைஞ்சிடச்சிறந்தவனாசி
யோதவாண்டகன்றுகன்னியாகுமரியுற்றதினுவகையிற்படிந்தே
யாதியாயனந்தசயனத்திற்றுயில்கொளரியினைவணங்கியேயப்பாற்
பாதவமெழிலியுறவளர்ந்தோங்கும்பாற்குனவரையினைச்சேர்ந்தான் (௧௫)

கோதில்கேரளதேசத்தினையொருவிக்கோகனங்குறுகியேயோவிச்
சூதமேநிறைந்துவயங்குசூற்பகாரத்தெய்திநீர்த்துறைதொறுமுழக்கு
மேதியோடெதிர்ந்துவராலெதிர்பாயவிளங்கியதிருவிந்தைமேவித்
தாதவிழ்மலரான்மலிந்திடும்பொழில்சூழ்தண்டகாவனத்திடைச்சார்ந்தான் (௧௬)

தூயமாநதியுந்தலங்களியபதியுஞ்சொல்லுதற்கரியபன்னுடு
நேயமார்விதுரன்றன்னுடுமெய்க்கிளரிலாவலாயுதவிராம
ஞயுநாள்மறையோரமர்த்துயாழ்பிரகாசத்தயமூழ்கியெவராங்கள்
பாயவேவயங்குருஞ்சமந்தபஞ்சகத்திற்பரிவுடனெய்தினலங்கறே (கஎ)

பலபத்திரராமன்றீர்த்தயாத்திரைப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௯௫௰௬.

# ௧0௬-வது துரியோதனன் வதைப் படலம்.

தூயதண்மடுவிற்றீயவன்பதித்தசமூழ்கினிலரியெனத்தோன்றிச்
சாயினைப்பிளந்துதுலைகடைமாதிச்சராசந்தஞ்சமரிடையிட்டுக்
காயுமாத்தாமாவரிப்படைபொடிக்கக்கதைபறித்தெறிந்துசாந்தாரி
சேயிறக்கவானிற்றட்டியேவீமற்குதவிசெய்தேவனைத்துதிப்பாம் (க)

இருநிலத்திலங்குநதிகளிற்படிந்தேயிராமனும்விதுரனுமெய்த
வரவுயர்துவசன்றருமனேடனுசரனைவருமடிமிசையிறைஞ்ச
மருவமர்துளவோன்மகிவணன்றன்னைவணங்கலும்வரிசிலைமுறித்தோன்
பரிவுடனயனம்புனல்கொளப்படியையளந்தவன்றனைப்பணிந்தனனுல் (உ)

எதுகுலத்திறைவன்முன்னவனுடனேயியம்புவானிருதிறத்தரச
ருதநிபோன்மலைந்தேயொன்பதிற்றிரட்டிநாளினில்லிவர்களேயொழிய
வதிரதர்முதலாயனைவருமடிந்தாரரவுயர்துவசன்வெஞ்சினத்தான்
மதிகுலத்துதித்தவாயுவின்மகனேடமர்பொரவந்தனனென்முன் (௩)

சதுமுகன்பிதாவிம்மொழியெலாமறையத்தாலகேதனனுடன்விதுரன்
விதிவலியெவர்க்கும்விலக்கரிதென்றுவிளம்பியேவியாளகேதனனை
யெதிரமரொழிந்துதருமனுக்குரியவியல்புறுநாடளித்தத்திப்
பதியினையாளென்றுரைத்திடமறுத்துப்பவனன்சேயுடன்பொரமூண்டான் (ச)

வேறு. இருவருங்கதைகரமிலங்கிடவெரியுறங்கதமுறவெழுந்
தரியிரண்டமர்பொருசபண்பெனவவனியின்கணிடம்வலம்
வருவர்சாரிகைமாறிமீளுவர்வடவைபோலெதிர்நோக்கியே
யுருமுபோலடியறையவோடுவருவரிபோலவதிர்ப்பரால் (௫)

மிகமுனிந்துயர்வரையின்மீதிடிவிழுவபோலவடிப்பரா
னருவரார்ப்பர்கள்கதைசுழற்றுவர்நயனம்வாரியின்வடவைபோற்
சிகையுறக்கடிதெதிர்வர்நோக்குவர்சேருவாலிசுக்கிரீபர்போற்
பகையுறக்கடிதெதிர்வரொட்டுவரெறிவர்பற்றுவர்கதையரோ (௬)

அரவுயர்த்தவனெரிசினத்துடனுலமுண்டவனென்னவே
யுரன்மிகுத்தடர்வீமன்மார்பிடையுருமுபோலவடித்தனன்
விரைவினப்பொழுதரியின்மைத்துனன்வியாளகேதனனுரமிசை
வரையினிற்சனிவிடிவிழுந்தெனவயிரவண்கதைமோதினுன் (எ)

எண்ணில்சாரிகையிடம்வலத்திலுமிருகரக்கதைசுழலவே
மண்ணின்மீதுமுனிந்துதாக்குமடங்கல்போலெதிர்வேலையின்
விண்ணுளோர்களுமஞ்சவீமனுரத்தினுஞ்சிரமீதினுங்
கண்ணின்மன்னருள்செய்சினத்தொடுகடிதடித்தனனுரனெடே (அ)

அந்தன்மைந்தனடிக்கவேயுயராசுகன்மான்றிக்குறுந்
தந்திபோலமுனிந்துவந்தெதிர்தண்டுகைபிடைசுழலவே
மந்தரத்திடிவிழுவபோலவன்மார்பின்மீதுறுவெங்கனல்
சிந்தவந்தகனுமெனப்புடைத்தார்த்தனன்றிசையொலியுற (௯)

அனிலன்மைந்தனடிக்கவுந்தளராதுகண்ணிலியருள்சுதன்
முனிவொடும்படிமிசையின்முந்திமுராரிமைத்துனன்விலாவின்மேன்
மனமெரிந்துயர்வரையின்மேலொருமலைவிழுந்திடவந்துறுந்
தொனியுறக்கதைகொடுபுடைப்பவிழுந்தனன்பவனன்சுதன் (௰)

வாயுசேயவனடிவிழுந்திடமண்ணின்மீதிடைவிழுந்தெழுந்
தேயெனுமுனரெய்தியேயுயர்தண்டுகொண்டெரிசினமுடன்
தீயமென்னவடர்ந்துதீயவன்முடியுறுஞ்சிரமிசையனல்
பாயவேபுடைத்தார்த்தனன்படவரவுயர்த்தவனஞ்சவே (௧௧)

ஆர்த்துமோதியவாசுகன்மகனனைவீரனைமுனிவொடும்
பார்த்துமற்றவன்விலாவின்மேற்படவரவுயர்த்தவன்மோதலும்
வேர்த்தமெய்யொடும்வீமன்வீழ்தலும்வெருவிநால்வரும்விமலனுந்
தீர்த்தன்வாண்முகநோக்கியேதுனியுறலுமாலிவைசெப்புவான் (௧௨)

பாரின்மிக்கதுரோபதன்றருபாவைகண்ணிலிமைந்தனை
யூருவின்கதையுற்றுமாளுதியென்றுகூறியவுரையினு
லேரின்விஞ்சியதருமனீகுறிசெய்தியென்றலுமிசைகிலா
னூரியன்றொடைமீதுதட்டலுமங்ஙன்வீமனறிந்தனன் (௧௩)

ஏரின்வீறுதுரோபதன்மகளிட்டசாபமறிந்தவன்
பாரின்மீதுதெளிந்துவீமனெழுந்துபாரியகதையினல்
வாரிபோலவதிர்த்துவானவர்வெருவவந்தமன்மகனிடை
யூருமீதுபுடைத்தலும்படிமிசையுருண்டனனுலைவொடே (௧௪)

**வேறு.** வீரரெண்வீமனெய்திவிசையினுன்மோதுந்தண்டா
லூருவிண்டுளைந்துவீழவுரககேதனன்முன்பின்னும்
பாரிடைச்சமர்செய்வான்போலெழுமுனர்ப்பவனன்மைந்தன்
போரினம்பொருதியோவென்றுதைத்தனன்மகுடம்போக (௧௫)

கோலமன்னவர்களெல்லாந்தொழுங்குருகுலத்தார்கோவை
ஞாலமேல்வணங்காதான்றன்மகுடந்தான்வீழக்
காலின்மாமதலைகாலாலுதைத்தலுங்கனன்றுபொங்கிப்
பால்வணனெதிர்த்தலோடுந்தடுத்துயர்பரமன்சொல்வான் (௧௬)

அடிசிலின்விடத்தையிட்டுமயத்தினுட்கழுவைநட்டும்
படியுறுமரக்காமில்லிற்பவனன்றன்சகாவைவைத்துங்
கொடியவெஞ்சூதினுடுகொண்டுகொன்றுரத்திமாதி
னுடைதுகிலுரிந்துஞ்செய்தலுள்கலைபோலுமென்றான் (௧௭)

அன்றியுமவனிப்பாரமகற்றுதற்கியாந்தாம்வந்தோம்
வென்றிசெய்தவருஞ்சின்னுடனின்மண்ணின்வீவர்நீதான்
கன்றியகருமமேதென்றுரைத்துக்காசினியின்மீது
பொன்றிடுவான்றன்முன்னர்வரவவன்புகலுற்றான் (௧௮)

ஆரியநீதானுதியென்றெனுவென்றனெஞ்சிற்
பூரியமதியைத்தந்துபோரில்யாவரையும்வீட்டிப்
பாரினிற்பாரநீக்கியென்னையும்பவனன்சேயா
லூருவிற்றட்டிச்சுட்டிவதைத்தனையுரவோயென்றான் (௧௯)

என்னைநீபொறியாய்வைத்தேயியற்றியெலாரையுஞ்செற்று
யுன்னிலென்பேரிற்பாவமொழிப்பதுன்பரமேயன்றே
பின்னைதன்மனுளாவென்றுபேசியேதருமவென்ற
னன்னையைப்பிதாவைக்காவென்றறைந்துநீபோதியென்றான் (௨௰)

எதுகுலமன்னன்றன்னையிறைஞ்சியேயேகென்றோதி
மதிவணன்றன்னைக்கையாற்றொழுதயான்வைதசொல்லை
விதுரநீபொறுத்தியென்றுவிளம்பவின்முறித்தோனோடுஞ்
சதுமறைமுனிவர்பாலிற்றாலகேதனனுஞ்சென்றான் (௨௧)

திருவமர்மார்பனைவர்தம்மொடுஞ்சேனையோடு
மரவுயர்வேந்தன்வைகுமிருக்கையின்னணுகியாங்கே
வரிசிலைத்துருபதன்றன்மகளுடைமைந்தரோடும்
புரவலரடையவைத்துப்பூதத்தைக்காவென்றானால் (௨௨)

பதியினைப்பூதங்காக்கப்பணித்தரியனுசனோடு
மதிகுலத்தைவரோடும்வாட்களுளோடுமேகிச்
சதுமறைமுனிவர்வைகாச்சிரமத்தைச்சாரும்வேலை
யுததியினலரிவீழவுலகெலாமிருண்டதன்றே (௨௩)

அரவுயர்துவசன்றன்னையந்தமன்சேரிருக்கைநாட
வரிசிலைமறையோன்மைந்தன்காண்கிலான்மனமுள்வாடிச்
செருவினிலரசன்மாண்டசெய்கையைக்கேட்டாண்டெய்தி
யுரககேதனன்றன்முன்னரிரங்கியீதுரைத்தானன்றே (௨௪)

மாயவன்விரகிற்சேனாபதியெனையாக்காமன்னா
நீயினியருளிலைவர்நெடுந்தலைகொணர்வனென்னத்
தீயவன்சேறியென்றுசெப்பிடச்செல்லும்வேலைத்
தூயனுங்கிருபனெய்தித்தடுத்திவைசொல்லலுற்றான் (௨௫)

குந்திதன்மைந்தர்தம்மையின்றுநீகொல்லிலந்தன்
மைந்தனின்றுயிர்வந்துய்ந்தேமண்ணினியாள்வானல்லன்
றந்திகோடிறுத்தான்றன்மைதன்னைநீதவிர்க்கிலாற்று
யிந்தவல்லிருளிற்சேறல்பவமுறுமென்றுசொன்னான் (௨௬)

கொடுமையில்கிருபனிங்ஙன்கூறிடவிவுளித்தாமாப்
படியிற்பார்தவத்தின்கீழேயிருந்திடப்பகையாங்கூகை
கடிதினிற்காகந்தன்னைவதைத்துறுங்கங்குறன்னி
லடர்பொரவிதியாமென்றேயனிகத்தோடெய்தினானால் (௨௭)

தீதகலிவுளித்தாமாசேனையோடெதிர்த்தலோடும்
பூதம்வந்தனிகமெல்லாம்புடைத்துறவதைத்துக்கையான்
மோதியேபரித்தாமாவைமுடித்தலைமுறிக்கவுள்ளி
வேதியன்கொலைக்காகானென்றுரைத்தடித்தோட்டிவிட்ட (௨௮)

செருவிடைப்பூதந்தன்னைச்சேறியென்றடித்தேயோட்ட
வரிசிலையிவுளித்தாமன்மனத்திடைவெந்தீமூள
வரியினைவளர்த்துத்துய்யவரன்வரத்தவஞ்செய்காலை
யெருதினிலிறைவனெய்தியென்னுனக்கீவதென்றான் (௨௯)

அரனிவைமொழியக்கேட்டேயந்தணன்சிறுவன்சொல்வான்
செருவிடையைவர்தம்மைச்செற்றிடும்படைதாவென்ன
வெருதுறுமிறைவனின்றிவ்விரவினிலெதிர்த்தார்தங்கள்
சிரமறுத்திடுதியென்னச்சிறந்திடும்வாளையீந்தான் (௩௰)

வரத்திறற்பெற்றவனையேந்தியேமறையோன்மைந்த
னுரத்துடனுறவேபூதமுற்றெதிர்ந்தடரும்வேலை
கரத்தினிற்படையினாலேசுந்தரந்துணித்தேயெய்திப்
புரத்தினிலனிகமெல்லாம்பொருக்கெனவதைத்துவீழ்த்தான் (௬௧)

உரககேதனனுமன்னனுறங்குமெல்லணையின்மீதின்
வரிசிலைத்திட்டத்துய்ம்மன்மகிழ்வொடுந்துயிலநோக்கி
யெரிசினத்திவுளித்தாமாவெறும்வலிவாளினாலே
சிரமறுத்தவனைவீட்டிச்சிகண்டியைவதைத்தான்மாதோ (௬௨)

உயர்மறையோன்சேய்வாளாலுத்தமோசாவினோடுஞ்
செயலுறவயங்குதாரமனுமனைவதைத்துச்சென்றே
முயலகன்வெரிநின்முன்போன்முனிந்தனிகத்தைவீட்டி
யியல்புறும்வளவன்றன்னையிமைப்பின்முன்வதைத்துவீழ்த்தான் (௬௩)

துலங்குபாஞ்சாலிபெற்றசுதர்குந்திமைந்தரென்றே
யிலங்கியவாளாலெற்றியவர்சிரங்கையினேந்தி
வலங்கொளுமிவுளித்தாமாவன்னியங்கரின்வைத்துக்
கலன்கண்மெய்யிலங்கச்சென்றான்காலெனக்காலினாலே (௬௪)

விரைவினிலிவுளித்தாமாமேவியேபடியின்வீழ்ந்த
வுரககேதனன்றன்முன்னருற்றுயர்குந்திமைந்தர்
சிரமிவைகாண்டியென்றுசெப்பிடவரசனோக்கி
யரிவைபாஞ்சாலிமைந்தர்தலையிவையந்தோவென்றான் (௬௫)

மன்மதன்றந்தைதன்னைமானிடனாகவெண்ணுந்
துன்மதியானவென்னாற்றொலைவிலாவரசர்மாய்ந்தா
ருன்மதியாலேயென்றன்குலத்தினுக்குரித்தாய்நின்ற
நன்மதியினரைக்கொன்றிப்பழியென்மேனட்டாயென்றான் (௬௬)

சிறுவரைச்செற்றென்மீதிற்பழிவரச்செருச்செய்தோங்கு
மறையவன்குமரநீயுன்னிருக்கையைமன்னுகென்ன
வறிவறவென்செய்தோமென்றருந்துயர்மனத்தனாகிக்
குறைவிலாப்பரத்துவாசனிருப்பிடங்குறுகிச்சேர்ந்தான் (௬௭)

அந்தணன்சிறுவன்போனபின்னரினந்தன்செம்மல்
குந்திதன்மைந்தர்பெற்றகுமரர்களிறந்தாரென்று
சிந்தைநைந்தழன்றுவாதபித்தசேற்றுமங்கோவித்தே
யந்தகபுரத்தினாவியடைந்திடமாய்ந்தானன்றே (௬௮)

துரியோதனன்வதைப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௫௬௪.

---

## ௧௨௦-வது பரீட்சித்து சநநப் படலம்.

---

விரகினிலிரவிற்றுரோபதன்சுதரோடைவர்தஞ்சிறுவரைவீட்டிக்
குரகதத்தாமாவிசையன்மேற்கோலெய்தபாண்டவமென்றுகூறியசொற்
பரிகரித்தபிமன்பாரிதன்னுதரக்கருவினைப்படிமிசைக்கிடத்திக்
கருகியகருநற்குமரனாயெழவேமிதித்தமால்கழலிணைதொழுவாம் (௧)

திருமகள்கொழுநன்மைத்துனருடனேசிறந்தபாஞ்சாலியுமெய்தி
யருமறைமுனிவராச்சிரமத்தினையடைந்தவண்டுயின்றெழும்வேலை
யிரவிவந்துதயமாகவேகடிதினெய்தியதூதுவனிரவின்
விரைவின்வந்திவுளித்தாமன்யாவரையும்வீட்டினனென்றுரைபகர்ந்தான் (உ)

அந்தணன்சிறுவன்கங்குலினடரவனைவருமாண்டனரென்னச்
சிந்தைநொந்திரங்கிக்குந்திதன்மைந்தர்சிறந்தபாஞ்சாலியோடரற்றி
யிந்திரைகொழுநன்றன்னுடனிமைப்பினிரதமீதேறியேயெய்தி
மைந்தர்கள்வளவன்றுரோபதன்சிறுவர்மடிந்திடுங்கொடுமைகண்டுளைந்தார் (௩)

துடியெனுமிடையாடுரோபதையரற்றித்துணியுறப்பவளவாய்துடிப்ப
வடிவுடைச்சுதரையென்றன்முன்னவரைவல்லிருளிடையினின்வந்து
கொடுமைசெய்தடர்ந்துகொன்றிடுமிவுளித்தாமன்றன்சென்னியைக்குவ்விற்
பொடியுறமிதியேனெனிலனன்மூழ்கிப்பொன்றுவனென்றுரைபுகன்றாள் (௪)

அரிவைபாஞ்சாலிமுனிவுடனிவ்வாறறைந்திடவருச்சுனன்வெகுண்டு
திருமகள்கொழுநன்றேரினைக்கடாவச்சென்றுயர்பரத்துவாசன்றன்
பரிவுடனமருமாச்சிரமத்தினெய்தலுமுனிவர்கள்பலரும்
விரைவினினெய்தியிருவர்க்குமாசிவிளம்பிடமாயவனறைவான் (௫)

தரையினிற்குருக்கேத்திரந்தனிற்பதினெண்ணாளுயர்சமருறப்பொருதே
யரவுயர்துவசன்வீமனுன்மடியவந்தணன்சிறுவன்வந்தெய்தி
விரைவினிற்குந்திமைந்தர்களருளும்வீரரோடரசரைவதைக்க
வரிவைபாஞ்சாலிமுனிவுடனறைந்தமொழியெலாமருளினனமலன் (௬)

முனிவர்களிவுளித்தாமனைநோக்கிமுனிவினுறைனிலாக்கொடிய
வினைலநீசெய்தாயெனக்கடுவிடம்போலிரதமீதேறியேவெதிரச்
சினமுடன்விசையனடுகணைசொரியவிலக்கிமாமறையவன்சிறுவ
னினைவதன்முனரினபாண்டவமென்றேநிகழ்த்திநான்முகன்படைவிடுத்தான் (௭)

மறையவன்சிறுவன்மலரயன்படையைவிடுத்தலுமகபதியருளுஞ்
சிறுவனுன்முகன்றன்படையினைவிடுப்பத்தேவர்கடிசைதோறுமிரிய
விறுதியினெழுந்தகனலெனவிரண்டுபடையும்வந்தெதிர்ந்திடவிமையோ
ருறியினிற்றதியுண்ணிறையநீயுலகமுயவருள்செய்கெனவுரைத்தார் (௮)

எத்திசையினும்போயனல்பரந்திடவேயிருவர்வெஞ்சமரொழிந்திடுமென்
றத்தியிற்றுயில்வோனயன்படையுபசங்காரவத்திரத்தினுலகற்றும்
வித்தகவிசயவெனவருச்சுனன்றன்விடுத்திடுமெண்கணன்படையை
மெய்த்தவர்மகிழவொருகணையதனுல்விலக்கினன்வெம்மைதீர்ந்திடவே (௯)

மைத்துனன்விடுத்தவயன்படைவெம்மைமாறியேமீடலுமாயோ
னத்திரித்தாமாநீவிடுபடையையகற்றுதியெனவவன்பிரமன்
மெய்த்தவப்படையைவிலக்குதற்குபசங்காரம்யானறிகிலனெனலு
முத்தரைவயிற்றுக்கருவிதற்கிலக்கென்றேதியேநகைத்தனன்முராரி (௧௦)

பின்னரும்விசயனமரினைத்தொடங்கிப்பெருங்கதமுறப்பரித்தாமா
வென்னுறப்பகழியுரத்தினிற்கடவிவில்லிறவிரதத்தையழித்தே
பன்னகப்பகழிதனைவிடுத்தவன்றன்புயத்தினைப்பிணித்துப்பார்மிசையி
னின்னலுற்றவன்றனடந்திடவிரதத்தேறினன்மாயவன்மகிழ (௧௧)

விரைவினிற்றருமன்முன்னரிற்குறுகிவிசயமுன்னிழிகெனவிளம்பி
யரிபினரிழியவயத்தொடும்பொற்றேரெரிந்திடவருச்சுனன்வியந்தீ
துரையெனவுரவோர்விடுந்தெய்வப்பகழியுறுமனலென்கரத்தாழி
யிரதமேற்கடாவாதின்றுகைக்கொண்டுநிலத்துறவெரிந்ததென்றனனால் (௧௨)

அரியிவையருளவருச்சுனன்பணிந்தேயமரினுன்கரப்படைபோல
மருவலர்தமையான்வதைத்தலாலென்றன்விறலினுலேவரவுற்ற
விருவினைகளைந்துன்பதத்தினின்யாங்களிடாறவெய்துதற்கருள்வாய்
துரையினில்வயங்குமரசர்போலெளிதாய்நின்றருடலைவனேயென்முன் (௧௩)

வடிவுடைவிசயன்மொழிந்திடமகிழ்ந்தமாதவன்மறையவன்சுதனை
யடுதியென்றறன்சேய்தனக்குரைத்திடலுமாசுகன்சிறுவனுண்டெழுந்து
கடுவிடமெனவேவதைத்திடவாலுங்கற்புடைத்துரோபதைகருணை
மிடையவேதடுத்தாசாரியன்மதலையிவனெனவிளம்பலுற்றனளால் (௧௪)

என்னிளஞ்சிறுவருடன்சகோதரரைவதைத்திடுமிவன்றனைச்செற்று
லன்னவருயிர்வந்தெழுவரோவிவன்றனன்னையுமென்றனைப்போல
வின்னலுற்றிரங்கிவருவதென்னிவனைவிடுத்திடுமெனவுதிட்டிரனு
மன்னதேநலனென்றறைந்திடவிசயனவனுரத்தறைந்துபோகென்முன் (௧௫)

பாலகர்தமைவெங்காலனைப்போலப்படுத்திடும்பாவிநீகுருவாஞ்
சீலமாமறையோன்புதல்வனுகையினுற்செற்றிடாதகற்றினமேகென்
முலமார்மிடற்ரேறுடன்பொருமரசன்விடுத்திடவவன்விறலழிந்து
தாலமேற்செல்லத்துரோபதைமுகுந்தன்முளின்வீழ்ந்தேத்திடும்வேலை (௧௬)

குண்டலமிலங்கமதிமுகம்வயங்கக்குஞ்சியின்மணிமுடியொளிரத்
தண்டுகைதயங்கச்சதுர்ப்புயந்திகழத்தாமரைத்தாள்களுந்துலங்க
முண்டகன்படையாலபிமனற்பாரியுதரத்திற்கருவெரிமுடுக
வண்டர்நாயகஞேரங்குட்டவுருவாயவனுரத்திருந்துகாத்தனனுல் (௧௭)

சுத்தநான்மறையோன்சுதன்விடுங்கமலன்படையொருநொடிப்பின்முன்றுலங்கு
முத்தரைவயிற்றிற்கருவினைநிலத்தினிடுதலுமொளிர்கலத்தமைத்து
வித்தகவரிமுன்விராடர்கோன்றனையண்மேவியென்கணவனுமடிந்தா
னித்தலமிசையின்கருப்பமும்விழுந்ததெரியினினிறப்பன்யானென்முள் (௧௮)

சருநிலன்விழவேயுத்தரையாற்றக்கண்டைவர்கண்ணினீர்கலுழ
வரிமலர்ப்பாதத்திடைவிழுந்திரங்கவச்சுதனவர்களையணைத்து
வெருவன்மின்றரையின்விழுந்திவிக்கருப்பமெல்லியர்மேன்மனம்வையாப்
பெரியவர்கழலான்மிதித்திடிற்பிறங்குங்குமரனுய்ப்பிறப்பனென்றுரைத்தான் ()

இந்திரைகொழுநனியம்பிடத்தருமனிந்திரியத்தினையடக்குஞ்
சிந்தையரெவரென்றியம்பிடமாயோனினைந்திடச்சேர்ந்தமாதவரைச்
சுந்தரமிகுத்தவரிவையரெனினும்விரும்பிடாத்தூயரிக்கருப்ப
மைந்தனுயெழவேகழலினுன்மிதிமினென்றுமாதவன்விளம்பினனுல் (௨0)

அரியிவையறையவருந்தவத்தினர்களணங்கனுர்மேன்மனம்வையா
திருநிலமிசையிந்திரியத்தையடக்கவெங்களாலரிதெனவியம்ப
வருதுனியுறத்தக்கலங்கிடுமைவர்தம்மைநீர்வருந்தன்மினென்னுத்
திருமகள்கொழுநனவர்கடாமகிழமுனிவர்முன்செப்பலுற்றனனுல் (௨௧)

சுந்தரமிகுத்தவரிவையர்பலர்தோட்டோய்ந்தனனென்னினுமுலப்பின்
மைந்தர்கடமையேதந்தயானெனினுமாதர்மேன்மனம்வையாதுயர்ந்த
சிந்தையன்யானிந்திரியத்தையடக்கித்திருந்தியபிரமசாரியும்யா
னிந்தநன்மொழிமெய்யென்பதிங்குணர்வீரென்றுமால்கருவினைமிதித்தான் (௨௨)

சருமுகின்மிசையேவனசமாமலர்கண்மலர்ந்ததோர்காட்சியைக்காட்டு
முருவினன்சிறந்தநானங்குங்குமங்கத்தூரிமெய்கமழவேயுயர்ந்த
விரவியைநிகர்த்தமுடிசிரமிலங்கவிருநிலன்கலனூறுங்கருவைத்
திருவடியதனின்மிதித்தலும்வயங்குங்குமரனுயெழுந்தனன்றிகழ (௨௩)

அரிதிருவடியின்மிதித்திடுங்கருப்பமழகியகுமரனாயெழவே
சுரர்கடுந்துமிபண்முழங்கவொண்மலர்கள்சொரிந்தனர்முனிவர்கள்போற்றத்
தருமனோடனுசர்துரோபதையுடனேதாளினிலிறைஞ்சியேயேத்தப்
பரமன்வாளபிமன்புதல்வனுக்கிசையப்பரிச்சித்துநாமத்தைப்பணித்தான் (உச)

அத்தியிற்றுயில்வோனடியினிற்சனித்தகுமாரனையபிமன்வந்தனன்போற்
சுத்தனுந்தருமனனுசரோடிரத்திற்றழுவிடத்துரோபதையணைத்தா
ளுத்தரைமுலைப்பாலொழுகிடவுலப்பிலுவகைதன்னெஞ்சினிலுறவே
சித்தசனெனவங்கிலங்கியசுதனைச்சேர்த்தணைத்துச்சியைமோந்தாள் (உரு)

உத்தரைவயிற்றின்விழுந்திடுஞ்சருப்பமுருவாநற்குமரனாயெழவே
சுத்தமாதவர்கடுதித்திடமிதித்தசோதிதன்றாளினிறைஞ்சி
யத்தினபுரியாளரசரிற்சிறந்தபாண்டுவின்மனைவியாமணங்கு
பத்தியினிருகண்புனலுறவுரோமம்பொடிப்பவேபகரலுற்றனளால் (உசு)

அன்னையாகியதேவகிமினுளிடத்தினன்பினிற்றசமடங்காகி
யென்னுடைச்சுதர்மேலன்புவைத்தரவத்துவசனாலிறந்திடாவண்ண
மொன்னலன்பதித்தகழலினிலளியாயுயர்ந்தனைவிடவனமுதவ
மன்னவேயெதியாயிரந்துநஞ்சினைத்தான்மாற்றியேயருள்புரிந்தனையால் (உஎ)

அவையினிரற்றுந்துரோபதைமருங்கினம்பரமருவணங்காத்தாய்
சிவனெனுமுனிவாலெழுந்துருவாசன்சபித்திடாதெய்தியேசிறந்த
சுவையுறுகனியோடனங்கடந்தன்னிற்றுலங்கிடவருந்துவித்தனையாற்
றவனுகர்கனிகொம்பிடையமர்ந்திடவேசார்ந்தைவருயிரினைத்தந்தாய் (உஅ)

காளமாமுனிவன்கனலிடைவகுக்கக்காலனும்வெருவவந்தனற்கண்
மூனுமாபூசங்கரத்தினாலைவர்முடிந்திடாவகைசெய்தங்கறனா
னீனுமாவனத்திற்கிருபைசெய்தனையானெறியறுசிந்துமன்மடியக்
கோனுலாங்ககனத்திரவிநற்பிரபைகுன்றிடநேமியான்மறைத்தாய் (உகூ)

இரவிதன்புதல்வன்விடுத்திடுமரவத்திறந்திடாவண்ணநீயிரதந்
தரையினிலழுந்தப்பதத்தினாலூன்றிச்சதமகன்றனயனைக்காத்தா
யரவுயர்துவசன்மடிந்திடக்குறங்கினடித்துவீமன்னுயிர்தந்தாய்
குருமகன்விடுத்தபடையினால்விதுவின்குலமறாதருள்புரிந்தனையால் (௩0)

கருவதாய்விழுந்தகருப்பநற்குமரனாகநின்கழலினான்மிதித்தாய்
சருகுகாலுணவாய்த்தவஞ்செய்வோர்சிந்தைக்ககப்படாத்தத்துவமூர்த்தி
மருகனீயெனவேமதித்திடுமெனைநீவணங்கிடவாசிகள்பகர்ந்தேன்
கரியுரிபுனைந்தோன்கபாலமன்றொழித்தகபடநாடகநமவென்றாள் (௩க)

ஆயரில்லுறியிற்கடநவநீதமருந்தவேயசோதைதன்கரத்தாற்
றூயபொற்றூசுமருங்கிடைதுலங்கத்தொடர்ந்துனைப்பிடித்தடித்திழுத்து
நேயமோடுரலிற்பிணித்திடநயனநீர்ததும்பிடமையுங்கரையத்
தாய்முனிற்றேம்பியழுததேனுலகம்படைத்தளித்தழித்தருடலைவா (௩உ)

அரியரிநமவேயச்சுதானந்தகோவிந்தநமநமவடியேன்
மருகனேநமவேமலர்மகட்கினியமகுணனுமாதவநமவே
சுரர்பதிசுதன்றேர்ச்சூதனேநமவேமற்றவன்றோழனேநமவே
யருவினையகலவெனக்குநின்பதத்தையருளுவாய்நமநமவென்றாள் (௩௩)

குந்திவந்திறைஞ்சித்துதித்திடமலராள்கொழுநனுந்திருவுளமுவந்து
முந்தியமுறுவலொடுமுகமலர்ந்தேமுடியுடைத்தருமனோடைவர்
மைந்தராயெழவேநலனுறுமவணீமற்றுனக்கரியதேதெனவே
யிந்தநல்லுரையாலவளுளமுருகவினிதுறப்பகர்ந்தனனம்மா (௩ச)

பாமனற்பாண்டுமைந்தர்களுடனும்பவமறுதுரோபதையெய்தி
யரவுயர்துவசன்மடிந்திடுமவணினடைந்திடவவன்றனையந்தன்
சரியிலாப்பானுமதிமுதலானதேவியர்சார்தலுந்தருமன்
பெரியவத்தாதையடியினினிறைஞ்சியிரங்கினன்பெருந்துனியுறவே (௩௫)

அந்தன்வெந்துயராலனுசன்றன்மகனோடாற்றியபின்னர்க்காந்தாரி
குந்திதன்சுதனையனைத்திரங்குதலுங்கோதிலாத்துரோபதனருண்மின்
ளந்தசபுரத்தினுயிருறமடிந்தவரவுயர்துவசன்றன்முனரிற்
சிந்தையினுவந்துவிரித்திடுங்குழலைச்சிறந்திடமுடித்துநின்றனளால் (௩௬)

விரித்திடுங்குழலைமுடித்தபாஞ்சாலிவிமலனைமகிழ்வுடனிறைஞ்சிக்
கருத்தினிலுனையேயிருத்துவார்வினையைக்களைந்துநற்கதியருண்முதல்வா
நருத்தருயவையுட்சுயோதனனனுசனுரிந்திடுந்துகில்வளர்ந்திடவே
யுரைத்தியான்மொழியுஞ்சபதத்தைமுடித்தவுலப்பிலாய்போற்றியென்றனளால்

பரிவுடன்முராரிசனைத்துதிசெய்துதுரோபதைபணிந்தவண்மகிழ
வரவுயர்துவசனெடுங்கனலிடையேயளப்பிலாமனைவியர்மடியச்
செருவினிலிறந்தாரனைவர்க்குமுரித்தாந்தேவியருடனனலுறவே
சரவணைமிசையின்வணங்கியகங்கைதனயன்பாலைவருஞ்சார்ந்தார் (௩௮)

சரசயனத்தின்வயங்கியகங்கைதனயன்மாதவன்றனைநோக்கிப்
பரமநின்மனைவியாநிலமடந்தைபரித்திடும்பாரநீயொழித்துன்
றிருவுளநினைவின்படிபெலாமுடித்தசீகரதேவநாயகனே
யரியரியடியேனந்தகாலத்தினணுகினையென்றிவையறைவான் (௩௯)

அரவுயர்துவசன்முனரியான்றிருமாலாழியையெடுத்திடவமரிற்
பொருதுவனெனுஞ்சொற்பழுதுறவண்ணம்பொற்கலையவிழவுத்தரியந்
தரையினில்விழநற்றரளமாவடங்களலைந்திடத்திகிரிகைவயங்க
வருகவினயனமகல்சலாமனதுமறக்கலாவெனத்தொழுதனனால் (௪0)

சுரர்பதிசுதனென்னுடனமர்பொரவேதுலங்குதேர்த்தட்டினின்வயங்கப்
பரியினைப்பிணித்துநுகத்தினைப்பூட்டிப்பாசமுட்கோல்கரமிலங்கச்
சரியொடுதுரகநரர்மிடைந்திடவேகளத்தெழுதூளிமெய்நிறையத்
திருமுகம்வெயர்ப்பவிரதமூரெழிலென்னெஞ்சிடைத்திருந்தியதென்றான் (௪௧)

திருமகண்மகுணநமசகமடந்தைகொழுநனுந்தேவனேநமவுன்
னிருபதநினைப்பாருலப்பிலாப்பவங்களிறப்பிறப்பகற்றுவாய்நமவே
யரியரிநமவேயெனவுரைத்திருகணமலன்றன்னழகெலாநோக்கிச்
சுரர்நதிபுதல்வன்றனுவினைத்துறந்துதுலங்குமாதவன்பதத்துற்றான் (௪௨)

கருமுகிலெனவேயரியினைக்கண்ணுற்கண்டுயிர்துறந்தவீடுமன்றான்
சுரருயர்விமானமேற்றியேமலர்கள்சொரிந்திடத்துந்துமிமுழங்க
விரவிமண்டலத்தினடுவுறுநெறியினிருமருங்கினும்விளக்கெடுப்ப
பரமன்றன்பதியிற்பத்தர்களெதிரேவரப்பரனடியினிற்சேர்ந்தான் (௪௩)

சந்தனுமன்சேய்மடிந்திடக்குந்திதனயர்கள்கண்புடைத்திரங்கி
மந்திரவிதியாலழலிடைவளர்த்திமடிந்தமந்தாகினிமகனோ
டந்தமன்மைந்தரனைவர்க்குங்கிளைக்குமறன்சுதன்தவுமியனுரையாற்
றந்திடுநூலிற்கங்கையினுதகக்கிரியையைத்தாழ்வின்றிமுடித்தான் (௪௪)

தவுமியனடத்துஞ்சடங்கினினுதகக்கிரியையைமுடித்திடுந்தருமன்
பவமறுமனுசர்புடைவரவயங்குந்துரோபதைமகிழ்ந்திடப்படிமே
லுவமையிலிரதத்தத்திமாநகரினுற்றுயர்மடங்கலாசனத்திற்
புவியினையளந்தோனிருகையால்வாங்கிப்பொன்முடிகவிக்கவீற்றிருந்தான் (௪௫)

தவமுயர்சுருமனுசரோடிறைஞ்சத்தரணியையாளெனவிருத்தி
நவையறுசினிதன்சுதனுடன்றேர்மேனராதியர்புடைசூழ
வவனியின்சுமையையகற்றியமுராரியமரர்கண்மலர்பொழிந்தேத்தத்
துவரையையடைந்தேதந்தையைப்பணிந்துதூயமாதாவினைத்தொழுதான் (சசு)

முன்னவனிருதாட்பணிந்தெழுமுராரியடிமிசைமுண்டகமடந்தை
மின்னெனவயங்குஞ்சத்தியபாமைமுதலியதேவியரடையப்
பின்னைதன்னுடனேவயங்கிடச்சுதர்கள்பெரிதுவந்திறைஞ்சிடமுராரி
கன்னலொண்மொழியார்மனைவியர்களிப்பக்கவினுறவீற்றிருந்தனனால் (சஎ)

பரிட்சித்து சநநப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௬௧௧.

## கஉக-வது மிதுலைப் படலம்.

இரவிதன்குலத்திற்பிறந்துதாடகையைமடித்தெதிர்சுவாகுவையெற்றிச்
சரியிலாச்சனகன்மகடனைமணந்துசரத்தினால்விராதனைவீட்டி
கரன்முதன்மூவர்கவந்தனிந்திரன்சேய்கந்தசனிவர்களைவதைத்துத்
திருவுடனயோத்திவயங்கிடமீண்டதெசரதவிராமனைத்துதிப்பாம் (க)

சுதைதருமொழியினிமியின்மாகுலத்திற்றோன்றியமதிகுலதிலக
னதியினுள்வயங்கும்பகிரதிபோலநலமுறுமரசருளிலங்கு
மிதுலையின்வெகுலாசுவனெனுமன்னன்வேதமெய்ப்பொருளினையுணர்ந்தே
யெதுகுலமுதல்வனிறைவனென்றறிந்தாண்டிராப்பகலவன்புகழுறைவோன் (உ)

**வேறு.** நயனநீர்மல்கநிற்குநாரணநமவென்றோதும்
புயல்வணுபோற்றியென்னும்பொன்மதிற்றுவரைநோக்கி
யியல்புறக்கரங்கள்கூப்புமென்புடனுருகுநையு
மயலொன்றுமறியானடியரியரியரியென்பானால் (௩)

பரிதிபோலொளிருமன்னன்பரமனைத்துதித்துநாளும்
விரதனுபமருங்கின்றமிதுலையின்மறையோன்மைந்தன்
சுருதிதேவன்னேரில்லாச்சோதியாமுராரியென்று
கருதியேகலைகளுன்குங்கண்ணனைமறவாநாவான் (௪)

சதுமறைச்சுருதிதேவன்சனகன்றன்குலத்தின்வந்த
மதியுறுமரசனோடுமாயனைத்துதிக்குநாளின்
றதிகளவாடுமையன்றன்பதமவர்க்குநல்க
மிதுலையினெய்துவானுய்விழுமியவிரதத்துற்றோன் (௫)

மாதவர்நிறைந்துசூழமன்னவர்மருங்குசுற்ற
யாதவன்வந்தானென்றேயெழிலுறுசின்னமூத
மீதுயரமரரேத்திவிளங்கியமலர்கடுவேச்
சிதரன்சேனையார்ப்பத்தேர்மிசைச்சென்றான்மாதோ (௬)

தூயவனிரதத்தேறித்துலங்கியகுருநாட்டிற்சென்
றேயெனுமுன்னந்துய்யவிடங்கர்நாடதனையோவித்
தீமையில்விராடனாடுஞ்சிறந்திடுங்குந்திநாடு
மாயவஞ்செருவிக்கோதில்கேகயநாட்டின்வந்தான் (எ)

கேகயமொருவித்தூயகௌசலைநாடுகிட்டிக்
கோகிலநிறைந்நுகூவச்சொழுமுகிலணவுங்காவும்
பூகமுங்கழையுஞ்செந்நெற்பொலிவுறுமிதுலைதன்னி
ளுகமேனுகர்போற்றநடித்தவனேகினுனல் (அ)

அத்திரிவாமதேவனருணிறைகண்ணுவன்முன்
வைத்திடுநாவனுசிவயங்கியமரீசிச்க்க
னுத்தமவீணையேந்துமுயர்முனிமுதல்வராய
வித்தகத்தவர்களெல்லாம்விமலனேடைடைந்தாரன்றே (கூ)

இரதமீதமலனெண்ணின்முனிவர்களிலங்கிச்சூழச்
சுருதிதேவன்றன்பாலுந்தூயமாமிதுலைதன்னிற்
பருதிபோலொளிருமன்னன்பாலுமீருருவமாகித்
துரிதமாவினைகண்மாளச்சுரர்மலர்பொழியச்சென்றுன் (௧௦)

அரசர்கோன்மிதுலைவேந்தனகத்தினுமறையோன்முன்னு
மிருவகையாகவெண்ணின்முனிவரோடேககாலத்
தொருமுதலிருவராகியுன்னுமுன்னடைதலோடும்
புரவலன்மகிழ்ந்துவந்துபுயல்வணனடியின்வீழ்ந்தான் (கக)

மிதுலைமன்விமலன்றளினிறைஞ்சியேவிழுமிதான
புதுமணித்தவிசின்மீதினிருத்திப்பொற்பாதந்தன்னைக்
கதுமெனவிளக்கிநீரைக்கம்மிசைதெளித்துட்கொண்டு
சதுமறைமுனிவர்க்கெல்லாந்தமனியப்பீடமிட்டான் (கஉ)

அறுசுவையடிசின்மாயனுடனருந்தவர்களெல்லா
நிறைவுறவருந்தலோடுநிகரிலாக்கலவைதுய்ய
நறுமலரளித்துநின்றுநடித்தனனுவமையில்லா
விறையவனென்னிலெய்தியிலங்கினுனென்றுமன்னே (௧௩)

என்புளமுருகிக்கண்ணீர்நிலத்துறவெழுந்தேயாடு
மன்பனைமகிழ்விேனுக்கியரசநிற்களவிலாத
வென்பதமளித்தேனென்னச்சரண்மிசையிறைஞ்சித்துள்ளித்
துன்பமோவியமனுடித்துதிசெய்துதொழுதுநின்றுன் (கச)

**வேறு.** மிதுலைமன்மனையின்விருந்தனமருந்திவிமலனீண்டிருக்கவேவேறு
ரெதுகுலவிறைவனுகியதானுயிந்தமாமுனிவருமாகிச்
சதுமறைநெறிசேர்சுருதிதேவன்முன்சார்தலுமவனெழுந்தாடித்
துதிசெய்துபிறிந்ததன்னுடையில்லிற்றூயவன்றன்னெடுஞ்சென்றுன் (கரு)

அரிவரப்பிறிந்தமனையினிற்கொடுசென்றன்புடனுதனமாகப்
பிரியணையிட்டேமிகமகிழ்ந்தருளிப்பின்னைதன்னுயகனிருப்ப
விருவினையகற்றுமுனிவர்கட்கெல்லாமிலங்கியதருப்பையைக்கிள்ளித்
தரையிடையிட்டேயமர்திரென்றுரைப்பத்தவர்வியந்தினிதுடனிருந்தார் (கசு)

கதலியின்பழத்தைநுகர்மினென்றளித்துக்கமண்டலத்தயத்தைமுன்வைக்க
வெதுகுலவிறைவன்முனிவர்களுடனேயினிதுடனுகர்ந்துநீர்பருகச்
சதுமறையறைவோன்றுளசியினிதழைத்தந்திடச்சென்னியிற்சூட்டி
விதியினையருள்வோன்சுருதிதேவனுக்கென்வீட்டினைத்தந்தனனென்றுன் (கஎ)

ஏககாலத்திற்சுருதிதேவனுக்கும்மெழிலுறுமிதுலைவேந்தனுக்கு
நாகணையமர்வோனிருவர்தம்மனையினன்னணித்தன்பதங்கொடுத்திருந்திப்
பூகமார்புரியினிருவகையாகமுனிவருந்தானுமாய்ப்புறப்பட்
டேகையங்குறவேயொருவகையுருவாயேகவானும்பர்கடுதித்தார் (கஅ)

இருவகையாகிமுனிவர்கணிருபரிலங்கியதேரிவர்ந்தாறு
யரசர்கோனில்லினந்தணன்மனையினடைந்தந்தநகரினையொருவி
யொருவகையானவடிவமாய்க்கலந்தேயுவரிசூழ்துவரையிற்சேர
மருவமர்துளவோன்மாயைவல்லவராரென்றுவானவர்மலர்பொழிந்தார் (கக)

சுருதிதேவனுக்குமிதிலைவேந்தனுக்குந்தூயதன்பதத்தினையளித்துப்
பரிதிமண்டலத்தினுறைந்திடும்பரமன்பரவைசூழ்துவரையினெய்தி
விரதமாதவர்க்குவிடைகொடுத்தருளிவிதர்ப்பர்கோன்மகளுடன்மேவிச்
சரதமார்புராணந்தவருளமகிழ்ந்துசாற்றிடவினிதிருந்தனறால் (உ0)

மிதிலைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௬௬௧.

---

## க௨௨-வது குசேலப் படலம்.

மனைவியேவலால்வறுமையின்வந்தநற்குசேலன்
வினையெலாமறமெய்தழீஇமெல்லணையிருத்திப்
புனையுமாடையிற்றருப்பணம்புசித்தவன்மனைக்கே
வினியமாசெல்வமளித்தருளிறையையேத்துவம்யாம் (க)

நெறியையுற்றிடுங்குசேலனுமறையவனிலத்தின்
வறுமையெய்திடவிருத்தனுய்மருவுவான்மனையி
னுறையுங்கற்புடையருந்ததியொத்தமாமடந்தை
யறம்வளர்த்தவணல்குரவளக்கரினுழந்தாள் (உ)

இழுக்கில்செய்சையளிருண்டமேகத்துறுமின்போன்
மெழுக்கினிற்பெரிதுரிந்துபொன்சிறிதுறவிளங்கு
மழுக்கில்கந்தரத்தமர்ந்திடுமங்கலநாணுள்
புழுக்கிலாதுமாசறும்பழவாடையைப்புனைவாள் (௩)

கரங்களிற்பிறர்மனைதொறுநெற்குற்றக்காலின்
குரங்கினிற்சகனம்மென்கைகொப்பளங்காய்ப்பத்
திரங்குதொக்கினையெடுத்தென்புதோன்றிடத்தேயு
மருங்குபோலவேமெய்யெலாமெலிந்திடுமடந்தை (௪)

புற்றினுற்றிடுமரவின்வாயுறுமெலிபோல
வுற்றநல்குரவிற்சிந்தையொடுங்கியேயுலர்வா
ணிற்றலும்பிறர்மனைதொறுமேவியேநெல்லைக்
குற்றுகூலியின்றவிட்டினைக்கொழுநனுக்கிடுவாள் (௫)

வறுமையாகியவளக்கரினமிழ்ந்திடுமடந்தை
யறிவுவிஞ்சியகொழுநனையன்பினுனோக்கி
யுறியுறுந்தயிருண்டவன்சகாவெனமுன்னுண்
மறைகளோதினவண்மைமீமறந்தனையென்றுள் (௬)

தவர்களெண்ணுசாந்தீபனிசதுமறையருளாத்
துவரைமன்னனுன்றோழனேயோதினையன்றே
யவனியின்னவனரசியல்செல்வத்தையடையப்
பவமுறும்மிலம்பாடுமக்குற்றதேன்பகர்தீர் (௭)

குருந்திருச்சியர்கலைகொடுவயங்குகோவுடனே
திருந்துநான்மறையோதியேசகாவெனச்சிறந்தாய்
வருந்தவேண்டுவதில்லைநீமாதவனிடத்திற்
பொருந்தினான்றன்வறுமையைப்போக்குவனென்றாள் (௮)

மனைவியீதெலாமறைந்திடமறையறிகுசேலன்
வினையகன்றிடத்துவரையின்வேந்தனுக்கியானிங்
கினியதாகவேயென்கொடுசெல்வனென்றியம்ப
நனிதவத்தவடருப்பணநல்கியேகென்றாள் (௯)

அரிவைநல்கியதருப்பணந்தனைத்தையலனேகந்
தெரியவேபலமாலைபோனான்றசீரையிலே
பரிவுடன்முடிந்தேயொருசோலினைப்பற்றித்
தரையினூன்றியேதவறியகால்கொடுநடந்தான் (௧௦)

நாரியால்வளைதனுவெனநரைதருமேனி
பாரின்மூப்புறவளைந்துமுந்நூலாரம்பற்றா
வீரைந்தோடுதொண்ணூறாறுபருவம்வந்தெய்தக்
கீரையின்சிறுவிதையெனக்கண்முகங்கிடந்தே (௧௧)

தோலுமார்புறநூலுமெய்துலங்கிடத்தூய
நாலுமாமறைகழறிடுநாவினனடந்தே
ஞாலமேற்படர்நாளொளிர்நகர்தொறும்வைகி
வேலைசூடுவராபதிமேவினன்குசேலன் (௧௨)

துவரையெய்தியேதொல்வினையுதறுவான்போல
நவையறுங்குணன்மூப்பினான்மெய்யெலாநடுங்க
வவையுளெய்திடவவனியையிடர்தவன்கண்டே
யுவகைவிஞ்சிடவெதிர்த்துரமுறத்தழுவினனால் (௧௩)

மாதவன்வியந்தென்னுயிர்த்தோழன்வந்தனனென்
றாதரத்துடனணைத்துத்தன்கோயிலிற்கொடுபோ
யேதமற்றபொன்னாசனத்திடையினிருத்திச்
சீதரன்மகிழ்ந்திடுதலுந்தேவியர்பணிந்தார் (௧௪)

வேடனைத்தருமின்னனாள்வீசனம்வீசச்
சூடகக்கையிற்றுலங்கிடச்சத்தியபாமை
யாடகத்துறுங்கவரியைக்கரத்தினாலசைப்பப்
பீடுடைக்குசேலத்தவன்பெரிதுவந்தனனால் (௧௫)

சகியனாகியகுசேலனைச்சக்கரனோக்கி
நிகரினான்மறையிருவருநிகழ்த்திடுநாளிற்
றகைமையுற்றசாந்தீபனிமனைக்குநாங்காட்டம்
பகலிடைத்தரவெய்தினம்பழுவத்தினன்று (௧௬)

தரையின்விஞ்சியபழுவத்திற்றளர்ந்திருவோருஞ்
சிரமிடைந்திடவிரகினைச்சுமந்துயாஞ்செல்ல
விரவியுங்கடன்மறைந்திடவிடித்துவான்பொழிய
வெருவிநின்றதுமறிதியோவென்றுரைவிளம்பும் (௧௭)

வெருவியாமொருமரத்திடைநிற்கவெவ்வரவம்
வருதல்கண்டவனஞ்சிவான்மழைதனிலோடித்
தரையினூர்புகுமுன்னர்ச்சாந்திபனியெய்தி
யிரவினம்பயந்தவிர்த்தமையறிதியோவென்றான் (சஅ)

மனையினம்மொடுசென்றுசாந்திபனிமறையா
னனையுமாடையைநீக்கிநற்றுகிலினைக்கொடுத்தே
யினியவன்னமாண்டிருவர்க்குமளித்தமையெல்லா
நினைதியோவென்றுபின்னருநிகழ்த்தலுற்றனனால் (சகூ)

சரியிலென்னுயிர்சகாயவுன்றேவிசற்குணத்தாள்
பரிவினாலெனக்கினியதுதந்ததென்பஃதென்
றுரைசெய்மாயன்முன்னுன்மறையோன்வெள்கவவன்ற
னரையினுடையின்றருப்பணங்கண்டரியவிழ்த்தான் (உ0)

பாவமற்றவனுடையினவிழ்த்திடுபரம
னாவலிற்றருப்பணத்தினின்மூவிரலள்ளித்
தேவர்தம்பதிமுதலியதிடுக்கமுற்றிடவே
நாவிலிட்டிரதம்முறநலனொடுநுகர்ந்தான் (உக)

பின்னருங்கரவிரலிடையள்ளலும்பிடியா
வன்னமென்னடையுருப்பிணிமாயனோடறைவாள்
முன்னநீநுகர்தருப்பணமுடிவிலாதளித்த
தின்னநீநுகர்ந்தாலிரணத்தனுமென்றாள் (உஉ)

விரைவினிந்திரைகரம்பிடித்தகற்றிடவிமலன்
பரிவொடுங்குசேலன்றனைநோக்கியுன்பாரி
சரியிலுத்தமிதனியளாய்த்தளர்ந்துநித்தலுமுன்
வரவுநோக்கியேவாடுமுன்னேகெனவறைந்தான் (உங)

வடிவுடைத்திருமனுரன்மற்றவன்றனைத்தழுவிக்
கடிதுசெல்கெனக்கடுவினைதருமருநிதியை
நெடியவன்கொடாதேகெனநிகழ்த்தினனென்றே
முடிவிலாநலனுறமுந்தியேகினன்மறையோன் (உச)

மறையவன்கடிதேகித்தான்வைகுமூரதனி
னுறையுமுன்னரீனுலகமேழுண்டவனருளா
னிறையுஞ்செல்வமுநித்திலமனைகளுந்தோன்றி
மறுவிலாமனையாண்மலராளருவானாள் (உரு)

பழுவமெங்கணுநாடுகளாகியேபழனங்
கழையுஞ்செந்நெலும்பூகமுங்கவினுறநிறைய
வழைவருக்கைமாமாதவிசெண்பகம்பொழிலா
ரெழிலினோடுமாநதியிடைவரெங்குநிறைந்தார் (உசு)

மறையினாலுயர்குசேலமண்டலமெனத்தோன்றி
நிறையுமாநிரையெண்ணிலநெடும்பொற்றேர்களிமா
வறையும்பேரியோடளப்பிலாவீரர்கண்மிடைந்தே
யிறைவன்றன்னையாண்டெதிர்கொளவடைந்தனரெங்கும் (உஎ)

மறையவன்னெதிர்மாமணித்தேர்நிரைமன்னர்
நிறையுமாகரிநெருக்கமுநோக்கியேவெருவி
யிறைவன்யாரெனநினையுமுன்னிரதமுங்கொணர்ந்தே
குறைவின்மாதவவேறெனக்கரங்கள்கூப்பினரால் (உஅ)

விரைவினின்னிரதத்திடையேறவேவிளங்கு
மரிவைமார்கள்பல்லாண்டுகளறைந்திடச்சவிகை
சரியிலாநலச்சாமரைதயங்கிடத்தரள
நிரைகொடாவடங்கலன்மெயினிறைந்திடக்கண்டான் (உகூ)

சரிகண்மாவணிகனகப்பொற்றேரிதேதெனவே
நரைகண்மல்கிடநடுங்குந்தன்மேனியைநோக்க
வுருவமாரனும்வெள்கிடும்வாமமெய்யோங்க
வரியளித்திடவந்தமையாமெனவறிந்தான் (௩0)

மாதவன்னருடன்னினல்வர்தவாமெனவே
வேதியன்றெரிந்திடவேந்தர்கைகூப்ப
மோதுபேரிகைசங்கொடுதுந்துமிமுழங்க
வேதமற்றமாநகரிடையெய்தினனன்றே (௩க)

சுத்தநன்பொனாற்றுலங்கியகோபுரவணிக
ணித்திலங்களானிறைந்திடுமாளிகைநிரைகள்
சித்திரங்களார்மண்டபஞ்சிறந்தவேதிகைகள்
பத்திசெய்திடும்வீதிகள்பலவெலாங்கண்டான் (௩உ)

அரசர்கைதொழவந்தணராசிகள்கூற
முரசுசங்குகாகளஞ்சினமெங்கணுமுழங்க
வரிசையாகியதீவிகைமாதராரேந்த
நிரைசெய்மாமணிக்கோயிலினிகரிலானடைந்தான் (௩௩)

ஞாலமேன்மதனுமெனக்குசேலனுநண்ணக்
காலிநூபுரஞ்சிலம்பிடக்கலன்மெயினிலங்கக்
கோலமாமலர்வைகியகொம்பெனவயங்கிச்
சீலமாகியதேவிவந்தடியினிற்பணிந்தாள் (௩௪)

துலங்குதேவிவந்தடிதொழத்தூயநற்குசேல
னிலங்குமாசனத்தெழிலுறுமனைவியோடிருந்து
நலங்கொளின்னமுதருந்தியேநானமெய்பூசி
யலங்கல்சூட்டியேயமளியினின்பமுற்றமர்ந்தான் (௩௫)

மனைவிதன்னொடுமாரனுமிரதியும்போல
வினைகள்வென்றிடுங்குசேலன்வீற்றிருந்திடத்தேவி
துனிகொணல்குரவொழிந்ததேதுலங்கியசெல்வங்
கனவுதான்கொலோசுவர்க்கமோகழறெனச்சொல்வாள் (௩௬)

அருப்பநுண்ணிடையணங்கனையன்றுநீயளித்த
தருப்பணந்தனைச்சங்கொடுசக்கரந்தரித்தோன்
விருப்பமுற்றுளேவிழுங்கிடும்பலத்தினன்மேவுந்
திருப்பொலிந்திடுஞ்செல்வமீதுணரெனவுரைத்தான் (௩எ)

தூயனாகியகொழுநனீதறைந்திடத்துலங்கும்
வேய்கொடோளினள்வியந்துதன்கணவன்றன்னுடனே
நேயமாகியேநிறைந்திடும்பெருஞ்செல்வத்தெய்தி
யாயர்பாடியின்வளர்ந்தவன்றனைத்துதித்தமர்ந்தார் (௩அ)

குசேலப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௬௬க.

# கஉக-வது வைதீகப் படலம்.

ஒருதனித்தேரின்விசயன்வைதிகனோடுறவெலாமுலகமுங்கடந்தாண்
டிருவரைநிறுத்திவிரசையுங்கடந்தேயெழில்கொள்பேரொளியிடத்தெய்தித்
தரையினிற்றான்செய்விரகெலாநடித்துமறையவன்றனயரைக்கொணர்ந்து
விரைவினிற்கடிகையேழகல்வதன்முனளித்தருள்விமலனைத்தொழுவாம் (க)

துவரையின்வயங்குந்தூயயாதவர்கோன்றுலங்கியவேள்வியைவளர்ப்பா
னுவமையிலிணையாமதகரிக்கழுத்திறைளிர்பொனின்கலப்பையார்நுகத்தி
னவனியினிலங்கப்பூட்டியேவயிரக்கொழுமடுத்ததினிலந்திருத்தி
நவமணியிலங்கவமைத்தசாலையின்கண்ணண்ணினனனுருப்பிணியுடனே (உ)

மாயவன்றுவராபதியினின்வயங்குமகத்தினைவளர்த்திடமகிழ்ந்து
தீமையிலரசர்திரளொடும்பிபமாச்சிறந்தநிண்டோர்களுமிடைய
நேயமோடிரதமிசையினிற்றருமனெறியுறுமனுசரோடெய்தத்
தூயமாதவர்கண்மகிழ்வொடுந்துவரைச்சோதிசெய்மகத்தினுக்கடைந்தார் (ங)

ஆடகன்றன்னைவதைத்திடுமமலனருந்தவர்தங்களினன்பாற்
சோடசவிருத்துக்கலையுறவரித்துமகத்தினைத்தொடங்குமவ்வேலை
வாடியோர்மறையோனிரங்கிடவவன்றன்மனைவிதான்பெறப்பெறவிலங்கும்
பீடுடைச்சிறுவர்மூவர்களுடலோடந்தரமாயையாற்பெயர்ந்தார் (ச)

சதுமறையறைவோன்றனயர்கண்மூவர்பெயர்ந்திடத்தளர்பவன்மனையா
ளுதரமார்கருப்பநிறைந்திடமறையோனுலகளந்தவனுடனுரைப்பான்
கதுமெனச்சிறுவர்மறைந்தபோலிந்தக்கருப்பமார்மதலைபோகுவமுன்
பதனமாய்க்காவாயெனினுயிர்துறப்பனென்றிடப்பார்த்தனீதறைவான்

மறையறைபவவுன்மனைவிதான்மதலைபெறுந்தருவாயிடைவந்தே
யறைகுதிவிரைவிற்காப்பனென்றியம்பவந்தணனேகித்தன்னில்லாள்
பெறவிடருறும்போதுரைத்திடவிசயன்பிஞ்ஞகன்பகழியாற்காப்பச்
சிறுவனுய்ச்சனித்தானிலத்திடைவிழுமுன்னுடலொடுஞ்சேணிடைப்பெயர்ந்தான்

மறையவன்சிறுவன்பெயர்ந்திடவிரங்கிமகபதிமைந்தனைநோக்கி
விறலுடையவன்போற்காப்பனென்றுரைத்துவிற்கரத்தேந்திநீநின்று
யறிவிலியெனவங்கிகழ்ச்சிகளுரைத்தேயந்தணன்வந்தரிமுன்னர்
முறையிடவெருவன்மதலையர்தம்மைத்தருகுவனென்றரிமொழிந்தான் (எ)

சுருதிநாயகனம்மறையவனருளுஞ்சுதர்களைக்கொணர்வனென்றுரைத்து
விரதமாதவரைவேள்விமுன்னிருத்திரெனுமொழிவிளம்பியேவயங்கு
மிரதமீதமர்ந்துவிசயன்வைதிகனோடேழுலகியாவையுமொருவிப்
பரிதிதான்கடவாதுயர்ந்திடுதிகிரிப்பருவரைதன்னையுங்கடந்தான் (அ)

மாயவன்விரைவினுலகெலாங்கடந்துவையமேகாதெனநோக்கி
நேயமோடடைந்தவிசயன்வைதிகனையிரதமீதவணுறநிறுவி
மீயுயர்முகட்டினண்டத்தைக்கழிந்துவிரசைமாநதியெதிருறவே
வேயெனுமளவிற்பெயர்ந்துபேரொளியினெய்தினன்கருமுகிலெனவே (கூ)

அமானவனலங்குமலங்கன்மார்புறவேபிப்பிலத்தடியினில்வயங்கி
யமானையோர்களையால்வதைத்தவனடியராகிமண்விட்டுவிண்ணொருவிச்
சமானமில்விரசைகடந்துவந்தோர்கள்சதுர்ப்புயஞ்சங்குசக்கரமு
முமாபதியிடரைத்தவிர்த்தவன்போலவுருக்கொளத்தழீஇக்கொளக்கண்டான் (க0)

பூருவதிசையின்வாயில்காவலர்சண்டப்பிரசண்டரும்பொலியச்
சீருறவியமத்திசையினின்வரைபோற்பத்திராசுபத்திரர்திகழ
நேரின்மெய்ச்செயனும்விசையனுங்குடக்குத்திசையினிற்கதைகொடுநிற்க
வேருறுந்தாதாவுடன்விதாதாவுத்தரதிசையிலங்கிடக்கண்டான். (கக)

குமுதனற்குமுதாக்கிடன்சுடற்கதைகைக்கொண்டபுண்டரீகன்வாமனன்சீர்
சமனின்மெய்ச்சங்குகருணனற்றவஞ்செய்சருவனேத்திரனெறிபொருந்துஞ்
சுமுகன்மாதவர்களெண்ணுசுப்பிரதிட்டிதனெடுமிவரெண்மர்துலங்கிக்
கமையுறநாலுவாயில்காப்பவர்க்குந்தாதரராய்த்திரிவனகண்டான் (கஉ)

உரகபூடணங்கள்வயங்கிடக்கனகபூதரமொத்துமெய்யொளிர
விருகரங்குவித்தஞ்சிறைவிரிந்துயரக்ககபதியிலங்கிடக்கண்டே
தரளமாவடங்களலைந்திடக்கிரீடந்தயங்கிடப்பசும்பொனூர்மணிக்கோ
லொருகையினுறவேதிசைதொறுஞ்சேனைபதிதிரிந்துவந்திடக்கண்டான் (கங)

விமலையேருறுமுற்கருடணிஞானைவிழுமியகிரியைமெய்யோகை
சமனிலாவமலைபிறகுவியெழில்கொள்சத்தியம்வயங்குமீசானை
சுமைகொள்பூங்குழலார்துவரிதழ்வாயார்துடியெனுமிடையினரிலங்குங்
கமலைநேரிவர்களெண்மர்வெங்கவரிகவினுறக்கரங்களாலசைப்ப (கச)

ஆயிரமலிந்தகோடியாதவர்களவிரெனவொளிகொள்வைகுந்தத்
தாயிரம்பணங்கள்விளங்கிடவனந்தன்கவித்திடவவனுடன்மிசையி
னாயிரம்முடிகளொருமுடியாகப்புயங்களாயிரம்புயநாலா
யாயிரம்பதமீரடியெனவிருந்தவாயிரம்பெயரனைக்கண்டான் (கரு)

மழைமுகிலளகமதிநிகர்வதனம்வளைநிகர்கந்தரமுயர்ந்த
கழைநிகர்வயங்குந்தோளிணைகமலமுகைநிகர்பயோதரமிடைநூ
லெழிலுறக்கலன்களிலங்குமாமடவாரெண்மர்களிருமருங்கிருப்ப
வழகினுக்கழகாயமர்ந்தவச்சுதனையன்புடன்யாதவன்கண்டான் (கசு)

அந்தமுமடியுமளப்பரிதாயவசஞ்சலவாதிதன்னடிமேற்
றந்தியைவதைத்தவிறைதனைத்தானேதொழுதலுந்தத்துவமூர்த்தி
யந்தணன்சிறுவர்தமையுனக்களிப்பனவனியிற்றசவவதார
மிந்துவின்வதனத்தெண்மர்தேவியர்கண்மகிழ்ந்திடக்காட்டுதியென்றான் (கஎ)

மாலிவைமொழியமகிழ்ந்துதேவகிதன்மைந்தன்மாமலருளோன்மறையி
னூலினைப்பறித்துமதுகயிடவர்களெனுடிப்பினுள்வேலையினெய்த
கோலமார்கமலன்குலைந்துமெய்யயரச்சுறைவிலாவுவரியினிலங்குஞ்
சேல்வடிவுறவாண்டெழுந்தவர்தம்மைவதைத்ததுஞ்சிறந்திடநடித்தான் (கஅ)

வாசுகியுடலைப்பிடித்துவாரியின்கண்வரைசுழன்றிடச்சுரரிசிப்பக்
காசினிமுதுகுநெளித்திடக்கமடவுருவமாய்த்தாங்கியுங்கடைந்து
மீசன்வெவ்விடத்தையருந்திடவமிர்தையிமையவர்க்கரிவையாயளித்து
மாசிலாத்துளபந்திருமணியுரத்தினமுகுறவணிந்தததுநடித்தான் (ககூ)

கொடியவாடகன்றன்பின்னவனகன்றகுவ்வினைத்தாவெனவடர்ப்ப
வடவரைநிகரும்வராகமாயெழுந்துமற்றவன்றனைவதைத்ததுவுங்
கடலிடையமிழும்புடவியையெயிற்றலிடர்த்ததுங்காசினிமானைத்
தொடையிடையிருத்திமறுவறுபுராணமொழிந்ததுஞ்சுந்தரனடித்தான் (உ0)

உரனுறுமறையோனிரணியநமவென்றோதெனச்சிறுவனுட்குலைந்தே
யரியரியரியென்றறைந்திடுமவன்றனைரவினலெரியினற்கரியாற்
பரவையான்மடியாதிலங்கிடவவுணன்பரனிலையென்றுதூணறைய
வரையினைப்பொருவுமடங்கலாயவன்றன்னுரத்தினைவகிர்ந்ததுநடித்தான் (உக)

காசிபன்றனயனாகியொண்குறளாம்வடிவனாய்க்கடிதினினெய்தி
யேசகலவுணன்றன்னைமூவடிமண்ணீகெனவவனளித்ததுவு
மாசிலாப்பதத்தாலவனியோரடியுமண்டமோரடியதாயளப்ப
வாசமார்மலரோன்விளக்கியசானீர்கங்கையாய்வருவதுநடித்தான் (உஉ)

ஏருறவயங்குமிரேணுகைமடந்தைகொழுநனையிருஞ்சுடர்வாளாற்
பாரினின்வதைத்தவரசனாயிரங்கைதுணித்துமப்படியினின்மூவேழ்
நேரிலாநிருபர்குலத்தினைவதைத்துநிறைந்திடுங்குருதியின்மூழ்கிச்
சீருறும்பிதாவுக்கெழிலுடனுதகக்கிரியைசெய்திறலனாய்நடித்தான் (உ௩)

இரவிதன்குலத்தினிராமனாய்நிருதிதனையனோடிறக்கவீட்டியதும்
பரிவுடன்சனகிதனைமணந்ததுவும்பழுவத்தின்விராதனைச்செற்றுக்
கரனுடனனுசருழையெனவருவோன்சயந்தனிந்திரன்சுதன்மாள
வரையொடுமரனையெடுத்தவன்கிளையோடவனையும்வதைத்ததுநடித்தான் (உ௪)

தேவகியுதரக்கருப்பமாயெழுதிங்கடானமர்ந்துமாயையினாற்
பாவமின்மடந்தையுரோகணிவயிற்றிற்பாய்ந்தவள்பயந்திடுஞ்சுதனாய்ச்
சேவலோனெனவேசினத்தலப்படையாற்றீயவர்திரளினைமடித்து
நாவலோர்புகழத்திசைதொறுநதிநீராடியபலிராமனாய்நடித்தான் (உ௫)

மதுரையிற்பிறந்துநந்தன்மாமனையின்வளர்ந்துபேய்த்தாயினைவதைத்துக்
கதமுறுசகடன்காலியன்கன்றன்பகன்றன்னுயிர்களைந்ததுவுந்
ததியிழுதுடனெய்களவினிலருந்தித்தாயுரலிற்றனைப்பிணிப்ப
விதமுறவிரண்டாமருதிறத்தவழ்ந்தவித்தகச்செயலையுநடித்தான் (உ௬)

விரைவினிலயன்வந்தொளித்திடுஞ்சிறுவர்விதமுறுபலவிளங்கன்றுந்
தரையினுளவாய்நிறைத்ததுமழையாற்றளர்ந்திடுமாயர்தந்திரளை
வரையினைக்கரத்தாலெடுத்தவர்மடியாவகையுறக்காத்ததுமடுவி
னரவினற்சிரமேற்சிலம்புகள்சிலம்பவழகுறநடித்ததுநடித்தான் (உ௭)

கருந்தடவிழியார்துகிலெலாம்விரைவிற்கரத்தினால்வாரியேபாறிக்
குருந்தின்மேல்வயங்கிநகைத்திடுமழகுங்குழலினையூதியேமடவார்
வருந்திடக்கரந்துந்தோன்றியும்வசந்தமாடியுங்குரவைகைகோர்த்தும்
பொருந்திடப்படியினிலங்கியநிருத்தப்பொற்புமங்கெழிலுறநடித்தான் (உ௮)

மதுரையினடைந்துவரிசிலைமுறித்துமதமுறுகரிவதைத்ததுவு
மதிரதர்மடியமுறிவிலாலடித்தங்கடர்ந்திடுமல்லரைச்செற்றுக்
கதமுறவுயர்ந்தவஞ்சகக்கஞ்சன்மடிந்திடக்கருமுகில்போலப்
பதமவனுரத்தினிலங்கிடமிதித்துநின்றதும்பரமன்முன்னடித்தான் (உ௯)

செருவினிலரசர்திரளிரிந்தோடச்சிலீமுகமழையினைப்பெய்து
விரைவினிலிரதமிசையுருப்பிணியோடேகியேவிளங்கியதுவரா
புரியிடைமணந்துமீரெண்ணாயிரத்துநூற்றுடனெழுவர்தோள்புணர்ந்து
நரகனைவதைத்தும்பவுண்டரன்சிரத்தையறுத்ததுநலனுறநடித்தான் (௩0)

அரனருள்வரத்தாலுயர்ந்திடும்வாணனாயிரங்கைதுணித்ததுவும்
வரையெனவயங்குஞ்சேதிபமறவோன்சாலுவன்றந்தவக்கிரமன்
செருவினிலுருளச்சிரந்துணித்ததுவுஞ்சீரிலாச்சுயோதனன்றன்பாற்
றருமனேவியதூதாகியேயையந்தூரிரந்திடுஞ்சதுரையுநடித்தான் (௩௧)

அரவுயர்துவசனுடனெழிற்றருமனமர்பொரவியற்றிவீடுமன்மேற்
கரமுறுதிகிரிவயங்கிடவெடுத்துக்கனவளைமுழக்கிநேமியினா
லிரவியைமறைத்தேயரவுகவ்விடாமலிரதத்தட்டவணியினழுத்தி
யுரககேதனன்றான்மடிந்திடக்கரத்தாலூருவினடித்ததுநடித்தான் (௩உ)

இந்திரன்சிறுவனுடனமர்பொருதேயெதிரிலாவயன்படைவாங்கி
யந்தணன்சிறுவனபாண்டவமெனவேவிடுத்திடவபிமன்றன்றேவி
சிந்தையிற்கலங்கவிழுந்திடுகருப்பஞ்சிறந்திடவடிவுடையவனாய்
மைந்தனையெழவங்கழகியகழலால்வயங்கிடமிதித்துநடித்தான் (௬௩)

சிறுவனையிழந்தமறையவனிறங்கிச்சிறந்திடும்யாகசாலையின்வாய்
முறையிடக்கடிதினோக்கிவானண்டமுடிவினிலிரதமேற்றேவர்க்
கிறைசுதனுடனும்வயங்கும்வைதிகனையிருத்தியேவெழில்கொள்வைகுந்தத்
துறையுமாதவன்றன்முன்னரிற்றான்வந்துற்றதுமுவப்புறநடித்தான் (௬௪)

பின்னரும்பின்னர்வரும்பரியுருவாய்ப்பிறங்கியயாதவனடிப்ப
மின்னெனவயங்குமனைவியருடன்றான்விமலனுண்மிகமகிழ்ந்தருளி
யின்னலின்மறையோன்சுதரிவரென்றங்கீதலுமிறைவனையிறைஞ்சி
யன்னவரொடுமாலுலகிடையிழிந்தேயந்தணன்சிறுவரையளித்தான் (௬௫)

காமனைப்பயந்தகருமுகில்வடிவன்கவினுறுமுருப்பிணியுடன்
கோமதிநதியினடைந்தொளிதிகழவயிரதங்குடைந்தாடி
மாமலரிமையோர்பொழிந்திடவிலங்குமனைவியோடிரதமீவயங்கப்
பூமனன்புராரிபுரந்தரன்போற்றப்பொலிவுறுவணங்களிற்சென்றான் (௬௬)

துந்துமிமுரசந்துடிகைசங்கிடக்கைதூயகாகளஞ்சினமுழங்கத்
தந்திதேர்துரகநிறைந்திடவரசர்தானையோடெங்கனுமார்ப்பச்
சுந்தரன்பவளக்கொடியுடன்றுலங்குந்தூயநீலக்கிரிபோல
விந்திரையுடனேரிரதமேல்வயங்கியெழிலுறுங்கோயிலிற்சேர்ந்தான் (௬௭)

தந்தைதாய்முன்னோனவர்தம்மடியிற்றாழ்ந்தெழுஞ்சக்கரத்திருமா
லிந்திரையுடனேவயங்குமீரெண்ணாயிரத்துநூற்றெண்மராவிலங்குங்
கந்தமாரளகத்தியர்தொழுதேத்தவரிவையர்கானங்கள்பாட
நந்தொளிர்கரத்தார்பணவதாளங்கண்முழங்கிடநடிக்கவேமகிழ்ந்தான் (௬௮)

அருந்தவர்துதிப்பமறையவராசியறைந்திடவரசர்கள்போற்றக்
கருந்தடவிழியார்சோபனமுரைப்பக்கவரிகளசைத்திடநீலப்
பெருந்தடவரையிற்றிகழ்கதிரொளிபோற்பிறங்கியமுடியொளிவயங்க
வரந்தருமுதல்வன்மலர்மகளுடனும்வானவர்வாழ்த்தவீற்றிருந்தான் (௬௯)

வைதீகப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௭௦௮.

## க௨௪-வது உபதேசப் படலம்.

அணுவெனச்சிறுத்துமேருவாயுயர்ந்துமாணொடுபெண்ணலியலனாய்ப்
பிணியுறவடர்ந்துமருந்ததாய்த்தவிர்த்தும்பிஞ்ஞகனயனுந்தானாயு
மணிபலவருணமிலங்கிடக்கோர்த்துச்சிதறுமாறெனவயங்கண்டந்
தணியவேபடைத்துந்துடைத்துமாமாயமிழைத்தமாலடியர்தாள்பணிவாம் (௧)

மருளில்வைதீகன்மைந்தரானவரைவைகுந்தத்தெய்தியேகொணர்ந்து
மருமறைநெறியான்மகத்தினைமுடித்துமவவிரதங்குடைந்தாடித்
தெரிவையர்பதினாறாயிரத்தொருநூற்றெண்மருஞ்சிறந்தருகிருப்பப்
பரவைசூழ்வரைப்பதியினின்விமலன்பவமறவீற்றிருந்தனனால் (௨)

அவனியின்பாரமகன்றிடவரசரசுரராக்கதர்களைவதைத்துத்
தவமுறுந்தருமனறுசரானிருபர்குலமறச்சாரதியாகி
யிவுளிபூணிரதம்விசயனுக்கூர்ந்தவியாதவனெனுகுலத்துதித்தோர்
துவரையினிறையவிவர்களைவதைக்குஞ்சூழ்ச்சியையுன்னினன்மாதோ (௩)

எதுகுலத்துதித்தோரனைவருமிமையோராகியசெயலினுல்யானே
கதுமெனவதைத்தேனெனிலிவரழியாக்கதியினையடைந்துயர்காமன்
பதியெலாம்வெளியாமிவர்களைத்தெறுக்கும்பகைகுரும்படிமிசையிலையால்
விதநிகர்முனிவர்விளம்புசாபத்தால்வீட்டுவனெனநினைத்தனனால் (௪)

எதுகுலத்தரசர்குலமடிந்திடமாலியற்றவொண்டவர்களைநினைப்ப
விதிநிகர்வசிட்டன்கவுசிகன்பிருகுவிழுமியகாசிபனினையில்
சதுமறையுணருந்தண்ணுவன்வாமதேவனத்திரிநருவாக
னெதிரிலங்கிராவொடொளிர்கொள்புண்டரீகவாச்சிராமத்தெய்தும்வேலை (௫)

அரிதிருக்குமரரெழில்கொள்சாம்பனையோர்கருப்பமாரிவையாய்வகுத்து
விரைவினினவனினடைந்துமாதவர்முன்விளம்புவாரிந்தமெல்லியருன்
றரையினிற்பெறுவதிலங்கியவாணோதையலோசாற்றுமென்றுரைப்ப
யிருடிகண்முனிந்துன்குலத்தினையறுக்குமபத்தடியாமெனவிசைத்தார் (௬)

மாதவர்முனிந்திதுரைத்திடச்சாம்பன்வயிற்றினோயத்தடியெழலும்
பீதியுற்றவர்கடுவரையினடைந்துபிறங்கியவுக்கிரசேனற்
கோதிடவவனவ்விருப்புலக்கையினைபராவியப்பொடியொடுநுதியைச்
சித்ரன்றனக்குமிசழ்த்திடவலையொள்சிந்துவினமுவத்துள்விடுத்தான் (௭)

உததியின்விடுத்தவயப்பொடியெவையுமுயர்ந்தவாட்கோரையேயாகி
விதமுறக்கரையினிலங்கிடவராவிமிகுநுதிதனைவிழுங்கியமீன்
சதுமுகனிழைத்தநெறியினோர்கிராதன்றடக்கையினகப்படவவனுங்
கதுமெனவவற்றின்வயிற்றினைப்பிளந்துகண்டனன்சிற்றிரும்பதனை (௮)

கண்டிடுஞ்சிறியவயத்தினைக்கிராதன்கணைநுதிக்குப்பியாயமைத்து
மண்டனில்வனத்திற்றிரிந்தனனிப்பான்மறுவிலாவுயர்வசுதேவ
னெண்டவர்பணியுமியாழ்முனிதுவரைக்செய்தியானடனேகநாளிருப்ப
முண்டகத்தயனைநிகர்தவத்தவனையிறைஞ்சியேமொழியலுற்றனனால் (௯)

முன்னமோர்சாபவினையினுலினையின்முனிவநீயொருநகர்தன்னின்
மன்னியேபினரோர்தினமவணிராமல்வழிக்கொள்வாயெனச்சொல்வரிவணி
னின்னலில்யாழ்கையிலங்குவாயடைந்துமனேகநாளிருந்தனையானீ
துன்னவுந்தெரியவரியதாலிதனையோதெனமாதவனுரைப்பான் (௧௦)

உத்தமகுணத்தாலுயர்ந்தவுத்தானபாதன்மாமரபிடையுதித்தோன்
வித்தகமலிதக்ககன்சிருட்டியினைவிரும்பித்தான்மகிழ்வொடும்பயந்த
புத்திரர்தமையானவனியிற்றணியாவவாவினைப்பொருந்திடாவண்ணந்
தத்துவமறிவித்திடவவருணர்ந்துசாந்தராய்க்கதியினையடைந்தார் (௧௧)

அவனியின்சிருட்டியிழைத்திடப்பயந்ததனயர்போய்ப்பரகதியடைய
வுவமையிலரசனுளைந்துபின்னருந்தானுதவியசிறுவர்கடமையும்
பவமறவுயரும்பதத்தினினடையப்பழுதிலாஞானத்தையருளித்
தவர்மகிழ்ந்திடநான்றக்கமனற்குத்தத்துவமுணர்த்திடச்சென்றேன் (௧௨)

வினையறவுயரும்பதத்தினின்மேவவிளங்கியதத்துவங்கேளென்
றினியவாசகம்யானியம்பிடமுனிந்துதக்ககனிவ்வுலகத்தின்
மனிதர்களுளராஞ்சிருட்டியைவிரும்பிமகிழ்வொடுந்தவத்தினாற்பயந்த
தனயர்களரசாணலனைநீதவிர்த்தாயென்றுபின்சாற்றலுற்றனனால் (௧௩)

நிருபராயுலகாண்டிலப்பிலாச்சிறுவர்பிறந்திடப்பயந்துவாழ்பவரைத்
தரையிடையுறமற்கதிர்க்குறவிடுத்தாரபாலிர்சார்ந்திடுகரி
ணொருதினமலாதுமறுதினமிருந்தாலுன்வயிறுடைதுதியென்றவ்
வரசர்கோன்முனிவாலறைந்தசாபத்தாலவனிவானெங்கணுந்திரிவேன் (கச)

சரியிலாநிருபனறைந்தசாபத்தாற்றளர்ந்தயான்சார்ந்திடுகரி
ணொருதினமிருந்துமறுதினமிராமலுழலுவேனுலகெலாமளந்த
வரிதிருப்பதியினடைகுவோர்தமைவெஞ்சாபமோடருவினையெவையு
மிரவிகாணிமம்போலொருவிடுமதனுலிவணிருந்தனனெனவறைந்தான் (கரு)

சுத்தவிவ்வவனிச்சுமடெலாமகலக்குரசேனனருண்மனவுன்
புத்திரனுகியவதரித்தருள்வோன்புவனமோடயன்றனைப்படைத்த
வத்தன்வாழ்பதியீதாதலின்வினையாஞ்சாபமோவிடவிவணமர்ந்தேன்
வித்தகவெனமாதவன்விளம்பிடலும்விழுமியவரசனீதறைவான் (கசு)

உத்தமமிகுதேவகியெனுமின்னுருதவியவிவன்றனையயன்ற
னத்தனென்றுணராவறிவிலேனவன்றனமர்தரும்பதியினிலடையத்
தத்துவப்பொருளையுரையெனமுனிவன்சரியிலாமிதிலையினிமிக்கும்
வித்தகவிடபன்மதலையாமொழிந்தவேதநூல்கேளெனப்பகர்வான் (கஎ)

மிதிலையினிமியாமரசனேர்மகத்தைவிளைத்திடும்பிடந்தனிவிடபன்
சுதர்கவியரியந்திரிக்கனென்னசமன்றூயனும்பிப்பலாயனன்வெஞ்
சுதமசல்கறைபாசனனவிர்புத்தன்கவினுறுதுரமிளன்றூய
மதியுறுவிகோத்திரனிவர்நவப்போர்திகம்பரராகிவந்தனரால் (கஅ)

இடபனற்சிறுவர்யோகிகளாகியிலங்கியவள்ளியர்நவப்பே
ரடைதலுங்கிமிமன்னிறைஞ்சியாதனமிட்டருச்சியந்தொடுத்தபின்னறைவான்
படியினிற்பிறவாதுயர்கெடப்படையப்பரமமெய்ஞ்ஞானத்தையெனக்கு
விடையவனெனவேவிளக்கியதவத்தீர்விளம்புமீரெனவவரறைவார் (ககூ)

வேதசாத்திரத்தால்விளங்கியமகத்தைவிளைத்திடன்மந்திரவுலோப
நீதியாங்கிரியாலோபமாதானவுலோபமீதுறிற்கெடுங்கிறையப்
பூதலமிசையினியற்றுவாருளரேனிலையிலாச்சுவர்க்கத்திற்புகுவ
ராதலாலழியாப்பதம்பெறமுயல்வாரரிசரணடைவரென்றறைவார் (உ0)

மனதுடன்வாக்குச்சரீரமிந்திரியமறுவிலாப்புத்தியாங்காரந்
தனைநிசரிவாதவரியிடத்திவைகள்சம்மதமாகிடப்பற்றித்
தினமுமொப்பிலாதவவன்றனைத்திருவாராதனஞ்செய்தவணியற்றும்
புனிதமாகதைகேட்டுயருவோரவன்றன்பதத்துனிற்பொருந்துவரன்றே (உக)

இதரதேவதைமேன்மனத்தினையுறுத்தாதெழிலுறுமச்சுதனியற்றுங்
கதையினைக்கேட்டுநகையுறவழுதுகளிப்புடனடித்தலகெங்கு
முத்தியைக்கடைந்தோனுளனெனத்துதிக்கும்பரமபாகவதர்களுறுமப்
பதிபவித்திரமாமவர்களைப்பணிவார்பரகதியடைவரென்றறைவார் (உஉ)

உலகினையெல்லாம்படைத்தளித்ததற்பினொடுக்குவதம்மவன்மாய்கை
சலவிபியெனவங்கழிந்திடும்பிறப்பைத்தரித்தவிந்திரியங்களெல்லா
நிலம்விசும்பதனினிலையில்காமத்தையினைத்துழல்வதுமவன்மாயை
நலனுறுமவரிம்மாயையையொருவநற்குருதனையடைந்துயர்வார் (உங)

வேதபாரகனுப்பொறையுடையவனுய்விழுமியமறைகள்சாத்திரங்க
ளோதிநற்பரனையறிபவனுகியுண்மையையுணர்த்துமாசான்றன்
பாதமேற்பணிந்தங்கவன்மகிழ்ந்திடத்தான்பணியினைச்செய்பவன்முனே
நிதறவுபதேசஞ்செயும்பொருளைத்திடமதாய்மனத்துறப்பற்றி (உச)

ஞாரியமடயவரிற்பெரியவர்தமைச்சென்றிறைஞ்சிடவுறலுறச்சமனுயர்ந்
தரையினிலவன்றமர்சாவாசத்தாழ்ந்துர்ப்பர்சமர்சருக்புரிந்தாண்
மறைசெயும்வருணத்தருமத்தைக்கடந்திடுபொளியுமிகலைவண்ணமேற்
சரருஙறந்திடுஞ்சொர்க்கத்தினைவிரும்பாதிலகுவார்சோதியையடைவார் (உரு)

சீருறுகிரேதாயுகத்தனிலுளவருணைமுமிலைச்செயுமாமும்
பாரினிலிலையவ்வுகத்தனின்னயைந்தம்பரன்கவேதத்துருவாகி
பெருறுங்கரமுமிலக்கிடமந்தறிசமதத்துராவிருலிழைந்த
தார்வயங்கிடுமேமவரியுமிழ்ந்த்சடைசிரமுறத்திகழ்த்துவதால் (உசா)

மாதவர்நிறைந்துவயங்கியதிரேதாயுகத்தனின்வருணைநான்குளதாய்
வேதநூனெறியின்யாகமுமலியுமவ்வுகத்தனிலுருவம்விமலச்
சோதிசெத்துரத்தூருவமாயமர்வன்றுவாபரவுகத்தனிலரக்து
மாதிசாமமாருய்வயங்குயமெருகுமரிச்சனைமலிந்திடுமன்றே (உஎ)

கலியுகமதனிற்கிட்டினைமூலக்கலியுறுசோதிசங்கீத
நலனுறற்பிரீதியாயமர்ந்திடுவனலெல்லாந்தணிவறகண்ணைப்
பொலனுறப்பெருகுந்தண்பொருநைங்காவிரிகற்பயசுழிபொருநைத்
தமிழிசைச்சனிப்பார்பரமபாகவதரென்றுபின்சாற்றலுற்றனனால் (உஅ)

சரியிலாதிலங்கும்பரமபாகவதர்சனித்திடுங்கலியுகந்தன்னைச்
சுரரொடுமுனிவர்விரும்புவரெனவுஞ்சொற்றனயயோகியாகியமனனுக்
குரைசெய்துங்கவன்றனிறைந்திடவகன்றுரநாசனைத்துந்தமவரசா
திருமகள்கணவனடியினைத்துதித்துச்சேருதிகதியெனப்பகர்ந்தான் (உகூ)

சூரர்முனியிவைகளுரைத்தகன்றிடலுஞ்சூரசேனன்சுதனனை
நிருபனும்பரனைத்துதித்தமர்நாளினிசரிலாத்துவரைமாநகரி
னரயன்றனிவரமரர்களவலாரியடைந்தரியடியினின்வணங்கிப்
பரமநீபூமிப்பாரமோவிடவந்தனையெனப்பங்கயன்பகர்வான் (ஙo)

விரசைமாநதியையிகழ்ந்துபோரொளியாம்விழுமியவைகுந்தத்துறைவாய்
பரவைநுண்மணலினதிகமாய்ப்பல்கிப்பரந்திடுமண்டமுன்னுரோம
நிரைதொறுமமரத்திகழுவாயவனிச்சுமட்டினைநீக்கினையிவணின்
வருடநூற்றிருபத்தஞ்சுறவளர்ந்துவயங்கினையென்றுபின்னறைவான் (ஙக)

உததிசூழவனிச்சுமையினையெல்லாமொழித்தனைமுனிவர்சாபத்தா
லெதுகுலமுடியுமிறைவவைகுந்தத்தெய்துவாயென்றயனியம்பத்
ததியனைத்திடுவோன்றமனியப்பொருப்பார்தரையினிற்பாரசேடத்தைக்
கதுமெனவகற்றிவருவனென்றவற்குவிடைகொடுத்தமர்ந்திடுங்காலை (ஙஉ)

துவரையம்பதியிற்குறைக்கொளியிரத்தவருடம்வெள்ளிடியெலாந்தூவத்
திவமதிலுடுக்கள்விழுந்திடத்தூளியெழுந்திடச்செகமெலாநடுங்க
நவையுறவிகலன்முறையிடத்தூமகேதுவானண்ணிடக்கூகை
கவலையுற்றிடக்கூவெனப்பரிவேடங்கதிரவன்றனைவளைத்தனவால் (ஙங)

புருடர்கட்கிடக்கண்டுடித்திடவலக்கண்பொலன்கொண்மங்கையர்க்கவண்டுடிப்ப
விருடரவுறுமித்துன்னிமித்தங்களெய்தலுமுத்தவனிகரில்
கருடவாகனனையிறைஞ்சியிந்நகரிற்கயினுறுமரசர்கண்மடியு
மருடனைக்கொடுத்துப்பரமநீயுயரும்வைகுந்தத்தடைதிகொலென்றான் (ஙச)

உத்தவனிவைகள்மொழிந்திடநகைத்தேயுலோகநாயகனிவையுரைப்பா
னத்தியிற்றுவரைப்பதியெழுநாளினமிழ்ந்திடநிறைந்திடுமரசர்
வித்தகத்தவர்களறைந்தசாபத்தால்வீடுவர்நீயிவணிராமற்
சுத்தமாதவர்வாழ்வதரிகாச்சிரமத்தடைகுதிபோவெனச்சொன்னான் (ஙரு)

பின்னைதன்மகுணனாகியேவயங்கும்பிரானிவைகூறவுத்தவன்ற
னுன்னைவிட்டடியேனொருவிலனெனவாண்மிலகிடந்துண்டவன்மொழிவா
னென்னைநீயுலகமெங்கணுமுளனென்றேத்திநீள்வதிரிகாச்சிரம
மன்னியவிடத்தினமர்ந்துபின்கதியின்வருகுதியெனவவனறைவான் (௩௬)

ஏதமிலியமமெத்தனைநியமமெத்தனைசற்குணமேது
நீதியாய்வயங்குந்தவமெதுசவுசமெதுநிகரில்பொறையேது
பாதகமகற்றுந்தவமெதுதியாகமெதுதனமெதுபலமேது
வேதமார்வேள்வியெதுமறைநெறியார்விழுமியதக்கணையேது (௩௭)

தயிரியமெதுநற்சவுரியமேதுசத்தியமேதுண்மையேதா
மியல்புறுமிலாபமெதுவித்தையேதுநலனுதுவிபவங்களேது
மயர்வறவயங்குந்திருவெதுவண்மைவளார்விதானங்களேது
துயருறுமிலச்சையெதுசுகமேதுதுரிதமாய்வருதுக்கமேது (௩௮)

உறவெதுசுவர்க்கமெரிநரகெய்தாதுயர்ந்திடுமனையெதுநெறிசே
ரறிவெதுவழியில்லாதனவேதுநல்லறிவிலானெவனெவன்மூர்க்கன்
வறியவனெவன்சம்பன்னனார்வயங்கும்பண்டிதனெவன்மருளகற்றி
யறிவுறுமீசனெவனெவனீசனியம்பெனவரியருள்செய்வான் (௩௯)

சத்தியம்பரர்சொத்துறத்தலின்னுவைத்தவிருகல்பிறர்மனையடையாச்
சுத்தமெய்மறையையறிகுதனிலமைதுலங்கிடும்பொறுமைதுன்பங்க
ளொத்தனைவரினும்வெருவுதலொழிதல்சஞ்சலம்விடையமற்றிருத்தல்
குத்திரவிடமம்விலக்குதலவச்சொல்குறைப்பதிதியமம்பன்னிரண்டே (௪௦)

தவஞ்செவமோமஞ்சவுசநற்சிரத்தைதானமாசாரியசேவை
பவந்தனையொருவுந்தீர்த்தயாத்திரையொண்பரமனாமுராரிதன்பத்தி
யவந்தனையகற்றும்பரவுபகாரமறிஞருளமகிழ்ந்திருத்தல்
கவந்தனைக்களைந்தோனருச்சனையிவைதான்றுவாதசங்கலக்கமினியமம் (௪௧)

பரமனாமெனதுபதத்தினிற்கருத்தைப்பற்றுவித்தமர்தல்சற்குணமாஞ்
சரீரவிந்திரியமொடுக்குதறவமாஞ்சவுசமேகருமத்தையொழித
திருநிலத்திடுக்கண்கமிப்பதுபொறையாமிருடருகாமத்தையொழித்த
லரியமாதவமாந்தியாகமில்வாழ்க்கையகற்றுசந்நியாசமேயாகும் (௪௨)

தருமமேதனமாந்தயங்கியபிராணாயாமமேசரியிலாப்பரமாம்
விரிவுறுமவிதோய்வேள்வியேயாகியவரிவிளம்புதக்கணைதான்
மருளகல்குருவாய்மலருஞானோபதேசமாம்வருதயிரியமாம்
விரகமோடிரதமொருவுதல்கலரைவெறுத்தலேசவுரியமாகும் (௪௩)

ஆற்றுஞ்சமமேயவமில்சத்தியமாமறையுநல்வசனமேயுண்மை
தோற்றுமாமிலாமுராரியாமெனையேதுதித்திடும்பத்தியாம்வித்தை
சாற்றிடிற்பரமாதுமாவினையறிதல்சரியிலாவிபவமாவனதா
னேற்றமாகியவைகுந்தத்தினிலங்குமீசரணிணையடிசேர்தல் (௪௪)

ஆசையிற்றிடுதறிருவெனலாகுமளித்திடுதானமேதென்னிற்
றேசுறநிலத்திற்பலபிராணியையுந்தெண்டியாதொழிதலாமிலச்சை
மாசுறுகருமந்தனின்மனமொழிதன்மறுவிலாச்சுகமின்பதுன்பம்
பாசமற்றிடவேகடக்குகைதுக்கம்பலமுறுகாமநத்திடுதல் (௪௫)

உறவுசற்குருவாஞ்சுவர்க்கமாவனதானுயர்ந்தசாத்திககுணமலிதன்
மறலிதன்னுலகினிரையமாவதுதாமதகுணம்வளர்தலொண்மனையே
யறிவுறுகருத்தார்சரீரநல்லளியாவச்சுதனாமெனையடைதல்
வெறியுறுநெறியாவதுமனமெங்கும்விரிந்துகுத்திரதெய்வத்தமர்தல் (௪௬)

அருளிலாதவனிக்கிரியநுக்கிரகஞ்செயுகலையறிவிலாதவனு
மருடருமதிசமூர்ச்சனுங்காரம்வைராக்கியசமர்த்தனென்றமர்வோன்
திருவருள்வழியன்சேர்த்திடும்பொருளிற்சிதைவையிற்பிரித்தியில்லவனை
யிருத்திப்புருசம்பன்னருமவனையியல்புருசற்குணமுடையோன் (சஎ)

சரியில்பண்டிதனில்வாழ்க்கையிற்பாசத்தவிர்ந்துநற்கதியினையறிவோ
னிருநிலமக்களிற்சுஞனவனைவிலடையறப்பற்றுதறவிர்ந்தோன்
மருடருநீசன்சகலபாவத்தின்மருவுவோனிவையெலாஞான
வுருவமாயமருந்தவயுணர்கெனவேயுலகளந்தவன்பினரறைவான் (சஅ)

இருநிலமதனிலியற்றுமில்வாழ்க்கையுததியைக்கடந்திடவிலங்கி
யருதருநாவாயாமனிதர்தஞ்சனனமன்னியவ்வோடத்தைவிடுப்பான்
சரியில்சற்குருவாஞ்சார்ந்திடாநெறியைத்தருமனுகூலமாம்பவனன்
பரமனுகியயானிவையறிந்துய்யாப்பாவியர்தம்மைத்தாங்கெடுப்பார் (சகூ)

நட்டமாவினின்வாய்நலங்கயமுறவேபிணித்திடுருசுத்திரக்கயிறு
மட்டினையறியாததிகமாய்மெட்டினவமெனமனத்துடையுணர்ந்தே
விட்டுமெட்டிடுநல்விரகினைச்சிவன்விடையத்தின்சருத்தினைவிட்டே
யட்டைபோலவைபற்றுவமுனர்த்திருப்பியென்னிடத்தமைப்பதேயறிவாம் (ருo)

ஊரியிவைபெலவுமறைந்திடக்கேட்டவறிஞருமுத்தவன்பகர்வா
னிருநிலமிசையிற்கருமகாண்டத்தையீரிருமறைகளுமொழிய
நரராதுநலனென்றதினுரைப்படியேயியற்றுவதெவையெனநவிலத்
திருமகள்கொழுநனரும்பியமுறுவறெறியவேசெப்பலுற்றனனால் (ருக)

வருபிணியகலுமவுடதநுகராதமுமிளமதலைதன்வாயி
னிரதமுற்றிடநற்குளமிடுவதுபோலீரிருமறைகளுமியம்புங்
கருமகாண்டத்திற்சுவர்க்கமெய்திடவுங்காதலர்தமைப்பயந்திடவு
மிருநிதிவரவுமிவையினையியற்றியிதரதேவதைகளையடைவார் (ருஉ)

அருமறையெவையுங்கருமகாண்டத்தையறைந்தபின்னரணுந்தத்தின்
பரமனுகியயானழிந்திடாதுயரும்பதத்திடையமர்ந்தருளுவது
மிருநிலமிசையினிதரதேவதைகளெண்ணிலவிறப்பதென்பதுவு
மருளகன்றிடவேமொழியவுமுணராமனிதராசையின்வசமாவார் (ருங)

இலவலர்மலரைக்காத்திடுஞ்சுகம்போற்கருமகாண்டத்தையிச்சித்துப்
பொலனுறுசுவர்க்கத்தரம்பையர்நகிலிற்போகந்துய்த்திடுகுவமென்று
தலமிசைச்சனிக்கினுயர்குலமதனிற்சார்குவமென்றணியாயப்
பலமுறப்பசுவைவதைத்துக்குத்திரதேவதையெனும்படுகுழிப்படுவார் (ருச)

ஆதியோனிவையையறையநின்கதியையடைகுவதெங்ஙனமருளொன்
றோதுமுத்தவனுக்கிணையின்மாதவன்றானருளுவானுலகினிலுயர்ந்த
வேதநூற்கருமம்விடிற்பவமுறுமென்பத்தியுற்றிடவவைவிட்டா
லேதம்வந்தடையாக்கதியினையடைவதல்லதுபிறப்பிறப்பிலையால் (ருரு)

எரியினைவிரும்பிவிழுந்தவிட்டிலுமிலங்கியபிடியினைநத்தித்
தரையினூழ்குழியிற்படியும்வெங்கயமுந்தாமரைமலர்மதுநுகர
விரைவினின்விரசியிரவுறவவைதான்முகிழ்த்திடவிலங்கொணுவரியும்
பருவரலுறுமப்பவத்தினையுருமற்பாவையர்கலவியைவிடுதி (ருகா)

வலையினிற்பிணிப்புண்பேட்டுடன்பார்ப்புமடியுமென்றவனுறத்திரிந்து
கொலைஞன்வெங்கரத்திலகப்படுபுறவுங்கொடுமையார்தூண்டிலினிரையை
நலனெனவிழுங்குஞ்சலசரந்தானுமழிவபோனரியர்கலவி
தலமிசைவிரும்பியுழன்றிடாதுயருங்கதியினைச்சார்ந்திடவியற்றும் (ருஎ)

பாடலைவிரும்பிக்கொலைஞர்கள்கரத்திற்பழுவத்தினகப்படுமுழைபோற்
சேடுறுவகையினிதரதேவதைநூல்வழிப்படக்கேட்டிடாதொளிகொள்
பீடுடைப்பரத்தையடைந்திடும்படிநீபிழையில்சாத்திகபுராணத்தி
னீடியபொருளைவிருப்பமாய்க்கேட்டுநெறியுறுமவருடனமர்தி (௫௮)

பிரசரமிகுத்தங்கிழந்திடுமதிபோற்பிழையுருதேயுறுந்தனத்தை
யருமறையவர்கைக்கொடுத்திடுகிருமிதனைக்கரத்தமைத்திருங்குளவி
யுருவினைப்பார்த்தவ்வடிவுறுஞ்செயல்போலுலப்பிலாவரியெனுமென்னைப்
பரிவினுன்மனத்தினிடையெழுந்திடநீபற்றியென்வடிவினையடைதி (௫௯)

வரைமரமெனவும்பரவுபகாரமியற்றுதிவயங்கியதரைபோற்
றருமமெய்யுறநற்கமையுறுபுவனமெங்கணுஞ்சார்ந்தநின்குணத்தை
மருவியுமொருவும்வாதமாமெனச்சேர்மருளுறுவோர்தமையொழித்து
நுரையகல்சலம்போற்றெளிந்தரியாமென்கதையினையுவன்றுகேட்டுய்தி (௬௦)

யாவர்கடமக்குமகப்படாக்ககனமெனப்பவத்தடைகிலாதமர்தி
யாவலினுலகத்தனைத்தையுநுகர்ந்தகொலைதனக்ககப்படாதுயரும்
பாவகனெனவில்வாழ்க்கையின்விழுந்தும்பவித்திரனாகவென்னுடைம
நாவினின்மறவாதறைகுதிமலைப்பாம்பெனநறும்போசனநுகர்தி (௬௧)

தரையினிற்சலத்தைச்சகசிரகிரணந்தன்னினால்வாங்கியேமீள
வருடகாலத்திற்கனந்தனிற்கருப்பம்வளர்ந்திடப்பெய்திடுவிக்கு
மிரவிபோற்றனத்தைநலனுறத்தேடியிலங்கியமறையவர்தமக்கு
விரைவினிலளியோடருளுதிபனிபோல்வெளிசெயாதேவனத்துறுதி (௬௨)

நதியயம்வரவேபெருத்திடாததுதானண்ணிடாமற்சிறுத்திடாத
வுததிபோற்சுகதுக்கங்களையொழிதியுனாகமார்தண்டுலந்தன்னைக்
கதுமெனக்கரத்தின்வளைபுடைத்ததனிற்குத்திடுங்கன்னியைப்போல
மதியிலாதவர்தன்றொடர்ச்சியைவிடுத்துமாயனாமெனைநினைந்துய்தி (௬௩)

மழலையோவிலாதமதலையர்தமைத்தாய்வைதிடினுமிகழ்ந்திடாத
வெழிலெனநிலத்தினளப்பிலாவிடர்வந்தெய்தினுமிறைவனாமென்னை
விழைவுறத்தொழுதுவிரும்புதியிலக்கின்விசிகத்தைவிடுவதுபோல
வழகுறுமெனதுதிருவடிமிசையினழுந்துறமனத்தினையிடுதி (௬௪)

கலைவளர்ந்தழியத்தான்குறைவிலாதகவினுறுசோமனைப்போல
நிலையிலாவாக்கையழிந்திடுஞ்சீவனித்தியமெனவறிந்திடுதி
யிலகியவுனதைவாயினாலசனால்வரைந்துபின்விழுங்கிடுமெழில்போ
லுலகெலாம்படைத்தங்களியுடனளித்தேயொழிப்பவன்யானெனவுணர்தி (௬௫)

ஆயிரம்வராகன்றினந்தொறுமுதவுமழகியவிடனடைந்திடாம
னேயுறவிரவிற்றுயிலினைத்துறந்தங்கவன்வருநெறியினைநோக்கிந்
தியவையிவையென்றிகழ்ந்துதன்கருத்துச்சீதரனாயவென்கழன்மேற்
பாயவென்பதத்தினமர்ந்தபிங்களையாங்கணிகைபோற்பற்றெலாம்விடுதி (௬௬)

ஏதமற்றிடவிங்குனக்கியான்பகர்ந்தவிருபத்தோடஞ்செனுமிவையைப்
போதகமருளுங்குருவெனவேதன்புந்தியாலோர்வதுதூய்தா
மாதியாமெனைத்தானவைகளுக்குறுமக்கருமத்தாலறிந்துயர்பதத்தின்
மீதுபோயினராலஃதுணர்ந்தறிவாம்விளக்கினினுய்தியென்றறைவான் (௬௭)

அரியெனுமெனைத்தானறிந்திடாதவத்தாலழிவிலாக்கதிதமக்குறுமென்
றிருளுறுமனத்தால்வேதசாத்திரங்களியற்றுவராமையாவினுக்குத்
தரையினிற்பசும்புல்லளிப்பதுஞ்சற்பாத்திரமலார்க்கீந்ததானமுந்தீ
யுரையிடுவிபசாரிக்கிடுமனமுமழிவபோலிடரினினுளைப்பார் (௬௮)

ஆசலிற்சாமமனைத்தையுமியிடுமென்னடியிணையடைதுநியெனமா
லோதவுத்தவன்முனிமறந்தியெக்குணங்களுறுவருன்பர்க்காதனை
யாதிக்பகர்தியெனமொழிந்திடலுமகிலலோகங்களுமப்படைத்த
நாதனென்னடியாரடைந்துலகத்தைநவின்றிடக்கேட்டியென்றுரைப்பான் ()

பொறையுறப்பாரிருவிலாதமர்தல்பொறியினைடக்குரியங்க
ளெறியுறவடர்த்தற்குருவையுற்றிருத்தனிசத்தினைமொழிதல்சுத்த
முறுநிலாம்புத்தியடைதல்சாத்திகமாயுரைத்தல்சாமதுனையொழித்த
லறுநெறத்தலையயோடிலங்கப்பொய்ச்சான்றுதவிருதல்பசியினையகற்றல் (௭௰)

சுகமொடுதுக்கமதுசமனெனவமர்தல்சோம்பறவிருக்குதல்சருவ
மசலவங்கடர்த்தலைச்சதாசாரமியற்றுதலறபவாசாரம்
புகலவிழுங்கிமுதன்ஞானமெய்பொருந்தல்புகழுறத்திடவிரதங்கள்
மிகவுமேமுனைதல்பரவுபகாரம்விளங்கிடத்தினமொழுகடத்தல் (௭௧)

நேயம்விஞ்சிடுதவிகதைகேட்டனிசமில்சாத்திகக்கல்விநிறைத்து
ஆயசூற்றிடவேதிரவியநாசைநரத்துதலெங்கணுமுமாறு
மாயருமெனைத்தானறிகுதல்சருவசுகியனெனவயங்குதன்மனத்திற்
றீமையற்றிடவேயிறைவனுமென்னைத்தியானமெப்பொழுதினுஞ்செய்தல் (௭௨)

தரையினின்வருபாவிருவிபற்றுஞ்சகலமாகியகருமத்தின்
மருவுபலொழிதலிறைவருளியவென்மலர்ச்சரணரெனைவடைக
லுரைசெய்சற்குணங்களிவைகண்முப்பதுமென்னடியர்கட்குறுமெனவுரைத்துத்
திருமகள்கணவனிசரிலுத்தவற்குப்பின்னருஞ்செப்பலுற்றனனால் (௭௩)

பரமனெனுமெனைத்தானறிந்திலராகிப்படியின்மேலியற்றிடுமியோகந்
தருமதானஞ்சண்மகஞ்சயம்வாவிதடாகநற்கூவலீதெல்லா
மருளுறச்செயினுமவைகளொன்பதத்தினைடைந்திடுநலத்தினைச்சொடாது
சுரருலகியங்குஞ்சுவர்க்கமீதெய்தித்துலங்கியேபின்னருஞ்சனிப்பார் (௭௪)

தருமமெய்யுறுமென்னடியரானவர்க்குத்தயங்கியசாதிநாலென்னும்
வருணமும்வேண்டாமிழிகுலரெனினுமவர்கள்வானவர்க்குமேலாகிச்
சரியிலென்பதத்தின்வயங்குவரிதற்குச்சான்றுசாம்புவனுயர்சடாயு
பரிதிசேயனுமனிருதரிலிலங்கைப்பதியுறுவீடணனன்றே (௭௫)

மருளுறுமசுரர்மரபினிற்பிரசலாதன்மாவலியுயர்வாணன்
கிரிமிசையுயருங்கிராதரிற்குகன்பூதலங்களிற்கிளர்ந்துயிர்வதைக்குங்
கருணையில்கண்டாகருணன்பாவையரிற்கவினுறுகோபிகர்மகஞ்செய்
தருளுறுமறையோர்மனைவியர்சவரியிவரமரர்க்குமேலானார் (௭௬)

ஆதலினிசரிலரசனீயிதனையறிந்தெலாக்கருமமுமகற்றிச்
சோதியாமெனைத்தான்றுதித்துயர்பதத்திற்றுலங்குவாயெனவவன்றொழுது
வேதசாத்திரநற்பொருளெனப்பலரும்விநம்விதமாகவேயுரைப்ப
தேதெனமொழியவியாதவர்பெருமானுத்தவற்கிவைபகர்ந்தனனால் (௭௭)

மருளகலயனுக்கியான்முனுளறைந்தமறையினையவன்பலர்களுக்கு
முரைசெயவவர்தம்பிரகிருதியினுயர்பொருள்விபரீதமாகத்
தரையினிற்பெருக்கியிராசதத்துடனுந்தாமதஞ்சேர்ந்திடக்கெடுவர்
பரகதியடைவோர்சாத்திகந்தன்னால்வேதநற்பயனறிந்துயர்வர் (௭௮)

சரியில்சாத்திகநற்குணத்தினையடைந்துசரதநான்மறையினினமரும்
பொருளினையுணர்ந்தென்னடியரானவரைப்புராரிபங்கயன்பொறியிவர்மேற்
பரிவினின்மிகுத்தபதின்மடங்காகுநலனுறப்பற்றியங்கணைத்துத்
திருமகள்மகிழவவரையென்னிடத்திற்சேர்ப்பனென்றிவைபகர்ந்தனனால் (௭௯)

பரமபாகவதராகுமென்னடியார்பாதமார்தூளியாலியானுந்
திருமகளுடனுமென்வயிற்சேர்ந்துசிறந்திடுமண்டங்கடமையும்
பிரமனுநநுகிப்பப்பவித்திரமாக்கிக்கொளுவனென்றுயரரிபேசக்
கரமதாற்றொழுதுநிகரிலுத்தவன்றான்றுதிசெய்துகழறலுற்றனல் (அ0)

கருதவுமரிதாகியவிறையாகுங்கருமுகின்மேனியவுன்னை
விரதமாயமர்ந்துவயங்கிடத்தியானஞ்செயுநலன்விளம்பெனமொழிய
நிருதர்வேரறுத்துச்சுரர்கள்கோணிடரைநீக்கினேனவன்றனைநோக்கிச்
சரதமாயுனக்குத்தெரியயானிவணிற்சாற்றுவன்கேளெனப்பகர்வான் (அக)

அருவினையகற்றுந்திருப்பதியதனிலாசனமீதிடையமர்ந்து
சரியிலாதுழலும்பிராணவாயுவைநிக்கிரகஞ்செய்யத்தலைகீழா
யிருதயத்திலங்குங்கமலமக்காலானிவந்திதழெட்டதாய்மலர
விரவியப்பொகுட்டின்மருவன்மீச்சோமன்மற்றவன்றன்மீதெரியே (அஉ)

இருதயகமலப்பொகுட்டின்மீதிரவியவன்றன்மேலிந்துமற்றவன்மேற்
சரியில்பாவகன்றனுப்பணிற்றிருக்கைநாலுடன்சங்குசக்கரமுந்
திருமகளுடனேவயங்கிடக்கலன்கடிகழ்ந்திடச்சேர்ந்திடுமியானும்
பரனைநற்றியானமியற்றுவோருயர்ந்தபதத்தினையடைவரென்றறைவான் (அங)

வேறு.

ஓங்கியமூலாதாரமாகியெங்கு
மொளிரிதயகமலத்தினுயருமென்னைப்
பாங்காகத்தியானமதுசெய்வார்தம்மைப்
பரசெதியினடையாமல்விகற்பமாய்த்
தீங்குசெயுமிருபத்துமூன்றுசித்தி
திகழ்வனபோலடர்ந்துவருமவைகளெல்லா
நீங்கிடவாங்கியற்றவல்லார்கதியிற்சேர்வா
ரென்றருளவுத்தவன்றானிகழ்த்தலுற்றான் (அச)

அருவினைகளொருவவுனைத்தியானஞ்செய்ய
வதற்கடைவாயடர்ந்துவருஞ்சித்திதனை
விரிவுறவிண்டருளுதியென்றறையத்தூய
விமலனவன்றனைநோக்கிமொழியலுற்றானே
சரியிலாதவணிமாவுயர்மகிமாநேரில்லகிமா
தயங்கியகரிமாதாழ்விலாத
பெருமையுறீசத்துவமொண்வசித்தவஞ்சொல்
பிராத்திபிராகாமியமோடிவையெண்சித்தி (அரு)

இதுவலால்யோகிகட்குமுயற்சியாலங்
கியற்றினவையனுகமித்துவஞ்சொற்குன்றுப்
புதுமையுறுமனோஜெபநற்காமரூவம்
புகலரியபரகாயப்பிரவேசம்வான்
பதியினவர்புகழ்ந்திடுசங்கற்பநேரில்
சுவச்சந்தவிருத்தியாக்கினைபாரும்பர்
சிதைவிலாக்கிரீடானுதெரிசனஞ்சீர்
சிறந்திடும்பிரதிகேதாகெதியுமாமே (அசு)

அன்றியுமேதூரசிரவணத்தினோடிறைஞ்சி
னவைகளதுவல்லார்க்கிருத்திமத்தி
னென்றியதுதிரிகாலக்கினத்துவம்பாருவமை
யிலாத்துவந்துவநேரிலாதங்கோங்கி

வென்றிபுனையும்பராசயம்வான்மீறி
விளங்கியவக்கினியாதித்தம்பமெங்கு
நின்றுலவும்பிரிதிணையில்பரசித்தாகி
யவிக்கினதையிவையஞ்சுநெடிதாமாதோ (௮௭)

சிறுமட்டமசித்தியுடனேகூடும்
யோகிகள்செய்தசசித்தியிதுவுமன்றி
நேரில்குத்திரசித்தியஞ்சுஞ்சாரி
நிறைந்திடுமாஞ்சித்தியிருபத்துமூன்றும்
பாரினிவைசெய்குணங்கள்பசரிலண்டம்
படியெல்லாந்திரிந்திடுவாரினிமைசற்றோர்
வாரியுறும்புவியின்மகாமூர்த்தியாகி
வாழ்குவரான்மகிமாவெனுஞ்சித்திசேர்ந்தார் (௮௮)

புவனமுதலண்டமெலாமணுரூபமாகிப்
போதுவார்லலகிமாவெனுஞ்சித்திகற்றோ
ருவமையில்லாவானந்தமாகியெங்கு
முறைவார்கரிமாவெனுஞ்சித்திசார்ந்தோ
ரவனிவிண்ணினுறைபவர்கணிணைவையெல்லா
மறிவர்களீசத்துவமாஞ்சித்திசேர்ந்தோர்
சுவைகளுறுபதார்த்தம்வருவிப்பார்நேரில்
வசித்துவமாஞ்சித்திதனிற்றுலங்குவாரே (௮௯)

பாரினுறுவார்மனதிந்திரியங்கூடப்
பதினொன்றுமுணர்ந்திடுவர்பிராத்திசித்தி
சேருபவர்செனங்கள்பகர்மொழியுநோக்கிச்
செயலுமறிவார்பிராகாமியமாஞ்சித்தி
சாருமவரிவையட்டசித்திசெய்யுஞ்
சதிர்பினருமுயோகிகள்செய்சித்திபத்தின்
வேர்வுபசிதாகமிலாதமர்வர்நேரி
னூறுமித்துவசித்திவிளங்குவார்கள் (௯௦)

மனதுசெலுமிடமதனிற்றுரும்போவார்
வயங்குமனோசெவசித்தியடைந்துளோர்க
ணிணையுமுருவினைக்கொண்டுகடிதிற்செல்வர்
நிறைகாமரூபசித்தியுணர்ந்துளோர்க
டனுவைவிட்டுப்பரருடலிற்புகுவர்நேரில்
பரகாயபிரவேசசித்திசார்வர்
தினமுமவர்வேண்டியதங்கொருங்குசேருஞ்
சிறப்புடையசங்கற்பசித்திசேர்வார் (௯௧)

பாரினிடையிச்சையாமரணமாவர்
பழுதிலாச்சுவச்சந்தவிருத்திகற்றோர்
தாரணியினினைகருமமெவருந்தள்ளார்
சரியிலாக்கினையென்னுஞ்சித்திசெய்வார்
நேரில்வானவர்மகளீர்மகுணரோடு
நிறைத்திடுநற்கலவிதனையினிதிற்காண்பார்
கோரமுறுபோகத்திற்சித்தியானகிரீடானு
தரிசனத்தின்கொள்கைவல்லார் (௯௨)

அண்டமெலாந்திரிந்திடினுந்தகைவாரில்லை
யப்பிரதிச்செதிர்கதியையடைந்தோரை
மண்டணிலும்வான்மிசையுமுறைவோர்சொல்லி
னேசைசெவிதனினேர்ப்பர்மருளற்றோங்கு
மெண்டவர்கள்வியப்புறவேவயங்குகின்ற
தூரசிரவணசித்தியியற்றினோர்க
டெண்டிரைகொளுததியுறுந்துவரைவாழு
முத்தவவிச்சித்திபத்துமென்றுசெப்பும் (கூங)

குத்திரமாகியசித்தியைந்தின்மிக்க
குவலயத்திற்சுழிசாலநிகழ்காலம்மென்
றத்தியிடையெழுந்துவிழவருங்காலங்க
ளறிந்திடுவார்திரிகாலக்கினத்துவத்தே
மெத்திடுவார்வெம்மைதுக்கஞ்சீதளத்தின்
மெலியாதுபொறுப்பார்துவந்துவத்தின்
சித்திதனையுணர்ந்திடுவாரெவருந்தோற்கச்
செய்வர்பராசெயமாக்குஞ்சித்திவல்லார் (கூச)

தரையினெரித்தம்பமுயர்வாயுத்தம்பத்
தனையுணரேவாக்கினியாதிக்கம்பத்தை
விரைவினிற்சாதித்துவலார்பிறர்கணெஞ்சைப்
பிணித்துத்தம்வசமாக்கும்பெற்றிசெய்வர்
சரியிலாதேயுயரும்பரசித்தியாகி
யவிக்கினத்தையெனுஞ்சித்திதன்னைச்சார்வார்
மருளொழியுமுத்தவகுத்திரமாஞ்சித்தி
யிவையைந்துமெனத்திருமாலறைவான்மாதோ (கூரு)

**வேறு.** பாரினின்வயங்கவிதயபங்கயத்திற்பாவகனுப்பணினிலங்கு
நேரிலாவெனைத்தானினைந்துயர்தியானநிறைந்திடச்செய்திநீயதற்குச்
சோரராயெழுமிச்சித்திகளாயவிருபத்துமூன்றையுந்துறந்து
சீருறவழியாக்கதியினையடைதிசிறந்திடுமரசவென்றறைவான் (கூசா)

கயவரையடைவோருயர்கதியடையாரென்பதுகாண்டிநீவானி
னியல்புறுமடவார்தனிலெழிலுடைத்தாயிலங்கியவுருப்பசிமீதின்
மயலினலிணையில்புரூரவாக்கபாலமெடுத்துமானமுமிலாதுழன்று
துயருறுமவன்முன்காமயாகத்தைத்தொடங்கியங்கவளொடுஞ்சேர்ந்தான் (கூஎ)

துன்னியவினையாற்காமநோயடரச்சோதியையறிந்திடாதவனை
மன்னிவான்மிசையிற்றவர்களோடிணங்கிமருளறஞானம்வந்துதவ
வின்னிலமிசையினிழிந்துமாதவத்தையியற்றியென்பதத்தினையடைந்தான்
மன்னவவதனாலதிருரோடியைநதுமறவரையொருவெனவறைவான் (கூஅ)

**வேறு.** நித்தியமுத்தனாகிநிகரிலாப்பரமனாகும்
வித்தகனியானிவ்வண்டத்துயிர்தொறும்பரந்துமேவி
யெத்தனுவினினுஞ்சேருஞ்சீவன்வேறியான்வேறாகிப்
பத்திசெய்யடியாருக்கென்பதத்தினையளிப்பனென்றே (கூகூ)

உயிருமப்பரனும்பேதமுடலுஞ்சீவனுந்தான்பேதம்
பெயர்வுறச்சீவனுக்குப்பிராணனெவ்வுயிர்க்கும்பேத
மயர்வுறுக்கைக்குமற்றைக்குரம்பைக்கும்பேதமொக்கு
மியல்புறீசற்கும்பேதமிவையஞ்சபேதமையா (ச00)

சுதந்தரப்பரமனுமேனியான்சீவத்தொகுதியெல்லாம்
விரந்தருசூரம்பையின்கண்ணூழ்வினையுடனுமேவு
மிதந்தருமீசனேடிவ்வுயிரெலாமேகமென்ன
வதந்திரமதனைச்சொல்வார்பிரமையினமூழ்த்தியம்மா (௧0௧)

ஈசனுமுயிருமேகமென்பர்காமாலையாலே
மாசுறுநயனர்வெள்ளைவளைமஞ்சணிறமாமென்று
பேசுறுபிரமைபோலப்புரட்டன்றிமெய்மையாகா
வாசிலென்பதத்தினெய்துஞ்சீவன்வேறியான்வேறாமே (௧0௨)

மாயனாகியயான்மாயமியற்றலான்மனதினென்மே
னேயமின்மாந்தர்சீவன்பரனெனநிகழ்த்துவார்மெய்த்
தூயனாகியவென்பத்தர்தொடருமிம்மருளையெல்லாங்
காய்குவருயிர்வேறியான்வேறெனுமறைச்சொற்கள்கண்டே (௧0௩)

ஊழ்வினையுறுதலாலேயிழிகுலத்துதித்துநன்னூற்
கேள்வியுமிலராய்வஞ்சங்கிளர்ந்திடுகொலைஞரேனும்
வேள்விநாயகனுமென்பேர்விளம்பிடும்பத்தராகிற்
றாழ்விலாதுயர்வார்பாவந்தழலினிந்தனம்போற்றீய (௧0௪)

அரியதாமென்பேருண்ணுதருந்தவஞ்செய்வார்போலக்
கரியவாமலகம்வெள்ளைச்சாரைகானவுடதங்கள்
பரிவொடுமருந்தியோகம்பற்றுவரரியரியென்று
மருவுநீர்போலமாசற்றென்பதத்தடையார்மாதோ (௧0௫)

**வேறு.** பரனுடைமையாகியசீவன்றனைத்தான்களவுசெய்யப்பாவதனம்
மிருதலையிட்டெழுமதில்சூழாக்கையனுமிருஞ்சிறையிலிருத்தியொவ்வாக்
கருமறையவைபுறங்காப்பக்கடக்கவொண்ணுக்காவறனைக்கடியத்தூய
குருவைமுனிட்டுரியவன்பாற்றிருடுபொருள்கொடுக்கிலென்றுஞ்சிறையிற்சேரார்

சீவனெனுமாக்கையர்பவக்கடலிற்குரம்பையெனும்வங்கஞ்சேர்ந்து
சாவலிற்றன்கூட்டுபொருளறியுமைவர்சூழமனக்கால்கொண்டேக
மேவுபரனாகியமீகாமனுடன்றேடுமிருபொருளும்விட்டுக்
காவதிலாதலினடைவாரீதிவுக்குறினழியாச்செல்வம்வாய்க்கும் (௧0௭)

சீவனெனும்பிணியாளர்க்கரிநாமமருந்தைமனஞ்சேர்த்தாதாகி
னோவுகெடுமவுடதத்தைநுகராமல்விபரிதமாம்பலவுந்தின்று
ணவிவிடுவனபோலவயலிதரதேவதையையடையுமாகிற்
பாவமுறவெரிநிரையத்தழுந்துவராலுத்தவயான்பகர்வன்மெய்மை (௧0௮)

துயிலின்வருகனவெலவுங்கண்டனபோற்சொல்லிடினுமெய்மையாகாச்
செயலெனநாரணனுமெனசீரறியார்மற்றோரிறைதெரிந்தோமென்கை
புயலினெழுந்தடித்தவிர்போற்பொருளாகாதறிவறவேசெனனத்தாழ்வ
ரியல்புறுமென்னடியர்பிறப்பிறப்பொருவவென்பதத்தினிலங்கிவாழ்வார் (௧0௯)

கழிபிறப்பின்வாசனையிற்கலராகிச்சனித்தானைக்கடந்துவேத
வழியொழுகாதவரெனினுமாலாகுமென்னடியார்வசத்தராகி
னழலுறவேவருணமிலாவாடகமேருவினவிர்போலாள்பொன்று
பழவினைகழலப்பரமபாகவதராகியென்றன்பதத்திற்சேர்வார் (௧௧0)

இருபுயத்திலென்னிருகைத்திகிரிவளைக்குறியெழுதியளிகமீதுக்
குரியதிருமிருத்திகையைநாசிமுதற்சொந்தமொளிரச்சாத்திக்
குருவெனவந்தியானறையுமுபதேசக்கொழுகொம்பைப்பற்றுவார்கள்
சுரரிறைஞ்சும்பவித்திரராய்த்துலங்குவரென்பதத்தினிற்றம்மரபோர்சூழ (௧௧௧)

**வேறு.** சதுமறைநெறியின்கருமமேமலியுஞ்சற்பிராமணர்கடாமெனினும்
விதியினையுதவுமெனையடையாரேற்சுணங்கனுச்கெரித்தறன்விடுத்த
பதகரைநிகர்ப்பார்சுவாவினுச்சட்டபாவியரெனினுமென்பத்தர்க்
கிதவராயொழுகினவர்களேவிமையோர்துதித்திடுமிருபிறப்பாளர் (கக௨)

பிரகிருதியினினுறுமகத்துவமற்றதினெழுபிறிகிலாங்காரஞ்
சரியிலாதவணிற்றயங்கியேயமர்ந்தபஞ்சதன்மாத்திரைதன்னின்
மருவுதாமதத்தினிலங்குமாகாசமற்றதிற்பரிசமீன்பவனன்
னுருவினைத்தருமற்றதனினக்கினிதானுதித்திடுமதுரசங்கொடுக்கும் (ககங)

இரசமீதுதிக்கும்மயமதிற்கந்தமெழுமதினவனிவந்திலங்குந்
தரையினில்விதையாமதினுறுமடிசிலதின்வயங்கிடுமெழிற்சார
மரனுறுமிருதியுகத்தினிற்றலைகீழாகியேயிவையெலாமடங்கிப்
பிரகிருதியினிலடங்குமாற்சீவன்பிரானெனுமென்னிடத்தமரும் (ககச)

ஆதலிற்குரம்பையழித்திடச்சீவனடைந்துமென்னிடத்தின்வேறுகு
நீதியீததனலிதரதேவதையைநிந்திக்கத்துதித்திடவேண்டாஞ்
சோதியாகியயானருளியதியானந்துலங்கவென்பதமுறுகெனமா
லோதவுத்தவனுன்னடியினிற்பூசைசெயுந்திறனுரையெனமொழிவான் (ககரு)

எவைகளுமொடுங்கவழிவிலாதிருக்குமெனைநலனுறுமடியார்க
ளவனியிற்றிருவாராதனஞ்செயுங்கிரமம்யானறைந்திடக்கேட்டி
யுவமையற்றுயரும்வைதிகமிசிரந்தாந்திரிகம்மெனவுணர்ந்தோர்
நவிலுமிம்மூன்றுமறையவரோதிநவையறப்பூசனைசெயலாம் (ககசு)

அன்றியுங்காயத்திரிதனக்குரியோர்தாமுமிம்மூன்றையுமறிந்து
மன்றல்சேர்மலராலரிச்சனைசெயலாமந்திரமிலாதசூத்திரர்தா
மென்றனையிறைஞ்சியிணையில்பூசனையையியற்றலாந்தாந்திரிகத்தா
னன்றியைமறவாதிலங்குமுத்தவகேளெனப்பினுநாரணனருள்வான் (ககஎ)

அரியெனுமியான்றனமர்ந்திடுந்தலங்களாறுளவதற்குயருலகிற்
சரியிலாதிலங்கும்பிரதிமைதிகழுந்தண்டிலஞ்சித்திரமனலோ
னிரவிசாத்திகத்தாலெழிலுறுமறையோரிதயமீதிவைகளாறுகும்
பரிவினுலிவைபூசனைசெயுநலனைப்பகர்ந்திடக்கேட்டியென்றறைவான் (ககஅ)

இரவியாமெனக்குநிகரில்பாயசமுமிழுதுடனிலங்கிடப்படைக்கச்
சரியிலக்கினிக்குமிவையினைக்கொடுத்தேசாத்திகமறையவர்தமக்குப்
பரிவொடுபதார்த்தமறுசுவையடிசில்பழுதறநுகர்ந்திடவளிக்க
விருதயமிசையினெழுதுதண்டிலத்தினிலங்குவேற்கிவைமனத்தீய (ககக)

பிரதிமையெட்டுவகையுளசிலைபாதவமுயர்பீதசமிலங்க
வரையுமோவியந்தான்பிராமணர்க்குவைசீர்வயங்கியவிரத்தினமரைத்துத்
திரண்மலையசமீதெட்டுமென்மூர்த்திதிகழ்ந்திடுந்திருப்பிரதமையின்
மருவுவோன்றமக்கிங்கெதிர்முகமாகிவடக்குறக்கிளக்குறவமா (க௨0)

சுத்தமெய்திடநல்லயத்தினிற்படிந்துசோத்திரம்வடமுகந்துலங்க
நித்தியகருமமுடிந்ததற்பினரினிகரிலாவாதனத்தமர்ந்தே
யத்தியினமரென்மந்திரத்தங்கநியாசமுங்கரநியாசமுமொண்
பத்தியினடைதியிடையினினென்றும்பவமறவெழுந்திராதமர் (க௨க)

மந்திரமதிற்சீவாத்துமாபரமாத்துமனிடத்தமைந்திடவைத்தே
யந்தமுற்றிடநற்பிராணவாயுவினுலாக்கையையுலர்த்தியக்கினியில்
வெந்திடவெரித்தங்கமிர்தமந்திரத்தால்விளங்கிடசனைத்தெழிலுருவம்
வந்திடவகுத்தவுடலினிற்சீவன்வயங்கிடமீளவும்விடுக்க (க௨௨)

அனந்தரஞ்சுசியாமலரினுற்றளவிலயத்தினிலருச்சனைசெய்து
மனந்தனின்மகிழ்வாற்சோடசவுபசாரமுங்கொடுத்திலகுதுவத்திரங்கள்
புனைந்துநற்கலன்களணிந்துசந்தனமும்பொருந்திடத்தாமமுஞ்சாத்தி
யனந்ததிகிரதங்குளகல்பாயசமுமமுதுறக்களிப்புடன்படைக்க (௧௨௩)

வெறிசமழ்ந்திடவேவயங்குகற்பூரம்விளங்கிடைக்காயிலையமுக
நெறியுறப்படைத்துமகிழ்வொடுபிரதக்கணமுறநிலத்திடைவணங்கிப்
பிறவியாங்கடலினடைந்திடாதெடுத்துன்னடியினிற்பிணையெனவேண்டி
மறையவர்தமக்குநலப்பிரசாதம்மகிழ்வொடுமருந்திடவளிக்க (௧௨௪)

சரியிலாவரியாமெனைச்செவித்ததற்பின்றன்னிருசயத்தினின்யான்முன்
மருவவேவிடுத்துப்பிரதிமைதனையோர்வயங்கிடப்பெட்டியினமைத்துப்
பரிவுடன்பவங்களறப்பிரசாதமருந்தியபின்னரிற்பழிப்பி
றிருவினின்மகுணனெனவென்சரிதைதினந்தினங்கேட்பரென்னடியார் (௧௨௫)

தரையினிவ்வகையினெனையரிச்சிப்போர்சரியிலாவென்பதந்தன்னின்
மருவுவரெனவேமொழிந்தமாலறைவான்மண்மிசைத்திறமுறவென்னை
யருமறைநெறியாற்பதிட்டையைநிறைத்தங்கழகியகோபுரமெயில்கள்
சரியின்மண்டபங்களமைத்துநற்பூகந்தயங்கியகிராமங்களளிப்பார் (௧௨௬)

நிருத்தநாரியர்கள்பணவதாளங்களிறைந்திடப்பல்லியமெவையு
மருத்தியான்மலியவமைத்துயர்கீதமடைந்திடச்செய்குவர்ஞானக்
கருத்தரானவராய்க்குறைகொள்கோயிலுகள்கவினுறக்கட்டுவோரவர்க்குத்
திருத்தமாய்ச்செய்யென்றுரைப்பவர்கண்டுமகிழுவருயர்கதிசேர்வார் (௧௨௭)

சற்குணத்தினர்முன்னமைத்திடுங்கோயிறனையழிப்பவரதிற்றனங்க
ணற்கிராமங்கள்கவர்ந்துபூசையினைக்குறைத்தவரவர்க்கிவைநவிலுந்
துற்குணரிதனைக்கண்டுகண்களிக்குந்துருத்தரிந்நால்வருநரகி
னற்கனோடமுதகிரணன்வாழ்தினமுமடைந்துபின்கிருமியாய்ச்சனிப்பார் (௧௨௮)

ஆதலினறிஞவுனக்குயான்சரதமடைந்திடுந்தத்துவமளியா
லோதினனிதனைவழாதெனைத்தியானமுவப்பினுற்செய்துபூசித்துச்
சூதசன்றிடுநற்குணத்தினராயிற்சூத்திரருடனரிவையர்க்கும்
போதகமுரைத்தியுயர்குலரெனினும்புன்மையராயிடிற்றவிர்தி (௧௨௯)

சதுமறைநெறியிற்றவரிலுத்தவநீசனவுபகாரமாயேகி
வதிரிகாச்சிரமத்தமர்ந்தெனைநினைந்துமாதவமியற்றியபினரென்
கதியினிலுறுதியெனவவனிறைஞ்சிக்கண்ணினீர்விழவலம்வந்து
விதியினையருள்வோனடியினிற்சிரத்தையுறுத்தியேவிடைகொண்டுபோனான் (௧௩0)

மரவுரியுடுத்துச்செவ்வடமெடுத்துவதிரிகாச்சிரமத்தின்வைகி
யருளுறுமுனிவர்மகிழ்ந்திடத்தன்பாலடைந்திடுஞ்சற்குணத்தவர்க்கு
மருளகன்றிடவேயிதவுபதேசமகிழ்வொடுமருளியங்கவரை
யரிபதத்தடைவித்தறிவுறவனேகந்தினமவணிருந்தனனம்மா (௧௩௧)

திருமகள்கொழுநனவணியினியற்றுஞ்செயலெலாமுணர்ந்துதன்னிதய
முருகநற்கணினீர்விழவமுநகைக்குமோடியேநடத்திடும்பாடு
மிருகரங்குவிக்குந்துதித்திடுநிற்குமிருக்குமானந்தம்வந்தெய்தச்
சரியிலுத்தவன்முன்றவத்தினோர்மகிழத்தத்துவமூர்த்தியைச்சார்ந்தான் (௧௩௨)

உபதேசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௮௪0.

# ௧௨௫-வது ஸ்ரீவைகுண்டப் படலம்.

மூலமென் றழைத்தகயத்தின்முந்தி நீள்வனியையிடக்கக்
கோலமாய்வயங்கியிரணியனைறைந்தவெழுவினிற்கோளரியாகி
வேலைமச்சமிற்றுவிழுசனுமதனைவிரைவினிற்கமடமாயெழுந்தே
யாலமாவிடத்தையருந்தினோனிடரையடர்த்தவனடியடைந்துய்வாம் (௧)

எதுகுலத்திறையுத்தவன்றனக்கன்பாலிதவுபதேசத்தையருளி
வதரி யாச்சிரமத்தடைகுதியெனவேவிடுத்தபின்வங்கம்வந்துலாவு
முததிசூடுவரைநகரினூற்பாதமுறுதலாலேலபிரபாசப்
பதியினிலடைந்துபவமறத்தானம்பலகொடுத்திடுவமென்றுரைத்தான் (௨)

அரியிவைமொழியக்கேட்டிடுமரசருஞ்செறியுக்கிரசேனன்
சரியிறேவகிமின்சூரசேனன்சேய்தன்னுடன்றுவரையினமரக்
கரிபரியிரதமடைநதிடப்பிரபாசப்பதியினிற்கடிதேகி
மருளறமறையோர்க்கெண்ணிலாத்தானம்வழங்கியேயுபவசித்தனரால் (௩)

விதியினையருள்வோனுடன்பலதானமளித்தவர்விழுமியதாமப்
பதியினுபவாசத்தினையியற்றிமறுதினம்பாரணையருந்தி
யெதுகுலத்திறைவனிழைத்தமாயையினாலெல்லருமதிமயக்குற்று
மதுவினைப்பருகிக்கெருவிதராகிமதருறமிகநகைத்தனரால் (௪)

சாத்தகிவதனநோக்கிநற்கிருதவன்மமன்சாலவுநகைக்க
நேத்திரஞ்சிவந்தங்கவனிவனைநீநிந்தித்தமுறுவலேதென்ன
வாத்திடும்பூரிச்சிரவின்வாளதனாலன்றமர்க்களத்தினின்மடிநவ
பார்த்தன்மற்றவனைத்துணித்திடப்பிழைத்தாயென்றுபல்லிழிவுகள்பகர்ந்தான் ()

தீயெனவிழிகள்சிவந்திடக்கிருதவன்மமனிவைகள்செப்பிடலு
மாயவனனுசனவன்றனைநோக்கிமதியிலாய்நீசுயோதனனா
நாயகன்படவுன்னுடல்கொடுபிழைத்தாய்நாய்நலனுன்னினுமென்னப்
பேயினர்போலவனைவரும்பிதற்றிப்பெருஞ்சமர்விளைத்தனரன்றே (௬)

ஒருவர்கட்கொருவர்விபரீதமாகவிழிவுகள்பலபலவுரைத்தங்
கரிதருகுமரராளப்பிலாதவருமரசருஞ்சிறுவருமடர்ந்தே
யெரிசினமுறவெங்கரிபரியிரதமெதிர்ந்திடக்கணைமழைசொரிந்து
குருதிகள்பெருகக்குறைத்தலைநடிப்பக்குன்றுபோற்பிணமுறமடிந்தார் (௭)

வேலயில்முசுண்டியெழுமழுச்சூலமிளிர்கதையிவையெலாம்விடுத்துக்
காலமாமுகில்போற்கணையெலாம்பொழிந்துகரிபரிக்குலமறவதைத்தே
யாலமாவிடமேநிகர்த்தெதிரரசரவனியின்மடிந்திடக்குருதி
வேலையின்விழவவ்வுவரிநீரனைத்துமருணமாய்மிடைந்தெதிர்ந்தனரால் (௮)

சிறுவரைத்தாதைவதைத்திடத்தனயர்சிறந்ததந்தையர்களைச்செற்றார்
விறலுறுமனுசர்தமக்குமுன்னவரைவீட்டினர்கனிட்டரைச்செற்றார்
கறைநிறைந்திடவேதடிந்தனர்தலைவன்றனையவன்கீழினர்களேந்தா
னிறுதியுற்றிடுநாளடைந்திடச்செய்யுங்கருமமற்றிறந்தனரம்மா (௯)

பரிகரியிரதக்குழுவறவடித்துப்படியினிற்பதாதியராகி
வரிசிலைவிசிகமயிலெழுமுசுண்டிமழுவுடன்படையெலாமாளக்
கரமுறப்புடைத்துப்பொருபவர்முனிவர்கழறியசாபத்தாலயத்தைத்
துருவிடும்பொடிவாட்கோரையாய்க்கடலிற்றுலங்கிடவதுபறித்தடர்ந்தார் (௧௦)

கோதைவாளொடும்பறித்தெறிந்தறையக்குருதிநீர்பெருகிடச்சிரங்கள்
பாரின்மீதுருளமடித்திடக்கண்டுபங்கயச்செல்வியின்மருக
னொருநுமிராமனுடன்விலக்கிடவேயிவர்கண்மேலவரெதிர்த்திடர
நேரிலாக்கோதையதனிலுலவசர்நீறுசெய்தனனுரோசவணிசெய் (கக)

எதுகுலத்தரசரொருவருமிராமவிறந்திடக்கோதையால்வதைத்துக்
கதுமெனவறிவுநிறையயோகத்தாற்கவினுறுமனந்தனேயாகிச்
சதுமுகன்முனிவர்துதிக்கவைகுந்தந்தனிலவன்சார்ந்திடத்திருவின்
பதிமகிழ்ந்தவனிப்பாரமோவியதென்றெருபொதிற்பாதவஞ்சேர்ந்தான் (கஉ)

மங்குன்மீதெழுந்தவிளங்கதிரெனமாமணியுறுமவுலியும்வயங்கச்
செங்கையின்வளையுந்திகிரியுந்திகழச்சிறந்துநற்கலன்களுந்தயங்கப்
பங்கயத்திருவுமுரத்தினிலிலங்கப்பசும்பொனிறுடையுமொளிரக்
கங்கயன்றுதித்தபதத்தினூபுரங்கள்கவினுறக்கலவைகள்கமழ (கங)

தாமரைமலர்கண்மலிந்தநீமுதந்தயங்கியபோற்றிருமேனி
காமருற்றிடவச்சிரமணிக்கடையங்காமிசைக்கவினுறத்திருமால்
வாமவூருவினிற்றெக்கணபாதம்வயங்கிடப்பிப்பலநிழற்கீழ்ச்
சோமனுண்வதனத்தெழுமிளமுறுவறுலங்கவீற்றிருந்திடும்வேலை (கச)

புகழுடையரிதன்னடியிணையவன்செய்மாயத்தாற்கசமெனப்போந்து
நிகரின்மாதவர்களறைந்தசாபத்தானிறையவவ்வுலக்கையையராவ
மிருமிரும்பதனைமுனையதாயொளிகொள்விசிகத்தைக்கிராதன்விட்டிடலுங்
ககனமன்றளந்தகழலினங்குட்டத்தழுந்துறத்தைத்ததக்கணேயே (கரு)

பறவையென்றுணர்ந்துவுயர்ந்திடுஞ்சிலையாற்பகழியையெய்திடுங்கிராத
னிறைவனென்றறிந்துவணங்கியுன்றனக்கின்றிடர்செயுமேழையேன்றன்னை
மறுவின்மாதவனீவதைத்தியென்றுரைப்பமகிழ்ந்தரிநீதனுவுடனே
யுறுசுவர்க்கத்தென்றுரைத்திடவிமானத்தவனமர்ந்தும்பரினுற்றான் (கசு)

தரையினிற்பாவமலிந்திடுகிராதன்சரீரமோடுயர்சுவர்க்கத்து
மருவிடவருள்செய்யரியணிதுளபமணநெறியறிந்துதாருகன்றன்
பரியுறுமிரதமிலங்கிடக்கொணர்ந்துபடிமிசைபணியவத்தேரை
விரைவினிற்ககனத்துயர்த்தியங்கதின்மேன்மேவினன்மேனியுந்திகழ (கஎ)

செயலுறுமுகில்போற்றிகழ்திருமேனியுடனிரதத்தினிற்சேர்ந்த
வியல்புளவரிதன்பிதாவுடனனைக்குமேவிநீதாருகவிவணி
னுயரெதுகுலத்தோர்மனர்சினமுறவேயொல்லையின்மடிந்ததுநானுங்
கயிலையைநிகர்முன்னவனும்வைகுந்தத்தடைந்ததுங்கழறுதியென்றான் (கஅ)

கடலினீர்துவரைதனையழிப்பதன்முன்கடிதினினவணுறைந்தவரை
விடமுறுமதுரைநகரினின்விடுத்தநகநிருத்தன்மதலையைவிளங்கு
முடியிணைக்கவித்தியெனவவண்டையும்விசயனுக்கிவைமொழியென்று
படியிணையளந்தபராபரமூர்த்திபரிவினுற்பகர்ந்தனனம்மா (ககூ)

தனைநிகரிலாதவிறையிவையருளத்தாருகனிடருறவிறைஞ்சி
யுனையியான்பிரிந்தீண்டிரேனெனத்திருமாலியானெங்குமுளனெனவுன்னிப்
பினரினென்பதத்தையடைகுதியிவைபோய்ப்பேசுதியெனவவன்றெழுது
துனியுறுநயனமயநிறைந்திடவேதுவரையினேகினனன்றே (உ0)

தாருகன்றனக்குவிடைகொடுத்தருளிச்சங்கொடுசக்கரந்தரித்த
வாரியனிரதமிசையினின்வயங்கவமரர்கண்மலர்மழைபொழிய
நீரணிசடையோன்வலாரியெண்கண்ணனிகரிலாமுனிவர்கடுதிப்பக்
காரிடையொளிர்மின்னெனக்கடிதேகிக்ககனமோடண்டத்தைக்கழிந்தான் (உக)

முரசுகாகளங்கடிமிலை துந்துமிகண்முழங்கிடநாதகீதங்கள்
பிரசமென்மொழியார்பகர்ந்திடத்தீபம்பிணங்கிடத்தூபமுநிறைய
விரசைமாநதியைக்கடந்துபேரொளியாய்விளங்கியவைகுந்தத்தெய்திக்
கரைசெயாக்களிப்பின்பரமபாகவதர்கைதொழவீற்றிருந்தனனால் (உஉ)

அவனியிற்பாரமகற்றியதிருமாலழகியசரீரமோடிலங்கி
யுவமையில்சனந்தன்முதலினோர்துதிப்பவொளிதிகழுயர்பதத்தெய்தத்
துவரையிற்கடிதினடைந்ததாருகன்முன்சூரசேனன்சுதனுகிப்
பவமறுமன்னன்மனைவியோடிரங்கப்பணிந்துநின்றிவைபகர்ந்தனனால் (உங)

எதுகுலத்தரசர்மதுவினைப்பருகியெதிர்ந்துபோர்செய்திறந்ததுவுஞ்
சதுமுகன்முதையலாயுதனுடனுந்தயங்கியேயுயரும்வைகுந்தப்
பதியமர்ந்ததுவும்பகர்ந்திடக்கேட்டுப்பருவரலுறும்வசுதேவன்
கதுமெனமனைவியுடன்விழுந்தரற்றிக்கவினுறும்பதியையோவினரால் (உச)

திருமகள்கொழுநனருளியமொழியைச்சிறந்திடுந்தாருகனுரைப்பச்
சுரர்பதிமதலையிரங்கிமெய்யுளைந்துதுயருறுமுக்கிரசேன
னிருபரெண்ணிலாதவரிவையர்குழுக்கணிகரிலாவனிருத்தன்மகனுஞ்
சரியில்வச்சிரனீங்கிவருடனொருவச்சாகரநகர்பரவியதால் (உரு)

உததிநீர்துவரைதனையழித்திடவுமுக்கிரசேனமன்முதலோர்
மதுவினைப்பருகிக்கதமுறப்பொருதுமாண்டவர்தங்கள்பாலெய்தக்
கதுமெனவிறந்தோர்மனைவியர்பலருங்கனலிடையவரொடுமெரிந்தார்
விதியினையருளும்விமலனைப்பயந்தவேந்தனுமனைவியுமிரங்க (உசா)

தவமுறும்விதர்ப்பன்பயந்திடவெவருஞ்சரியிலாவுருப்பிணிமடந்தை
யுவமையில்பதினாறாயிரத்தொருநூற்றெழெனுந்தோகையருடனே
யவனியன்றளர்ந்தவரிதனைநினைந்தங்கனலிடைவிழவொருவடிவாய்க்
கவினுறுகரநாலிலங்கவைகுந்தத்தடைந்துமாலுரத்தினிற்கலந்தார் (உஎ)

அனந்தனுய்வயங்கும்பதத்திடையடைந்தவலாயுதனடியினையன்பான்
மனந்தனிலினைந்தங்கிரேவதிமுதலாமனைவியரெரியிடைவிழுந்தே
சனந்தனுஞ்சனகாதிபனும்வாழ்பதியிறசார்ந்தனருக்கிரசேனன்
கனந்தனைநிகர்த்தவரியினைநினைந்தாண்டுயரும்யோகத்தினிற்கழிந்தான் (உஅ)

அரியினைநினைந்தங்குயரும்யோகத்தாலவனடியடைந்திடமரித்த
தருமமெய்யுறநீடரணியையாண்டசரியிலாவுக்கிரசேன
னிருபனுடைவன்றன்மனைவியர்பலருநிறைந்தெரிகனலிடைவிழுந்து
சுரருலகத்தினடைந்தனர்சுவர்க்கத்தமர்ந்தவர்தோத்திரஞ்செய்ய (உகூ)

சுரர்முனியறைந்தயானயோகத்தாற்றுலங்கியசூரசேனன்சேய்
மருளகன்றிடுதேவகியுரோகணியோடியாக்கைமண்மிசையிறந்திடத்தன்
றிருமகனெனவேவயங்கியவரிதன்பதத்தினிற்சேர்ந்திடவிசய
னெரியிடையவரையிடுதலுமடிந்தோர்மனைவியரவரொடுமெரிந்தார் (௩0)

**வேறு.** நந்தனுமசோதையெனுந்தவத்தினருநற்சுதனுகித்தம்மில்லின்
வந்துபேயுயிரைநகில்கொள்பாலுடனும்வாங்கிவெங்குவலயாபீடத்
தந்தியைக்களைந்துமருளுறுகஞ்சன்றனைவதைத்துயர்ந்தசக்கரனைச்
சிந்தைசெய்தியோகமுறவுடற்றரையினிறந்திடக்கதியினைச்சேர்ந்தார் (௩க)

**வேறு.** பாரினின்மடிந்தோர்தனக்குயர்விசயன்பயந்திலநெறியினாலளித்துத்
தாருகனுடனேயரியமர்ந்திருந்தசரியில்பிப்பிலத்தடியெய்தி
யாரியனவண்வீற்றிருந்திடுங்குறிகண்டளப்பிலாவிடரொடுநயன
நீர்சொரிந்திடவாண்டிறைஞ்சியவிசயனுளைந்துளைந்திவையிகழ்த்தினனால் (௩உ)

மடுவுறுவசியின்வாயுசேய்மடியாதளியெனவயங்கியுந்தியோ
ளிடுவிடவனத்தையாம்புசித்திறவாதெதியெனவிரந்திடவடைந்துங்
கொடியனும்மகதன்மடிந்திடவுகிராற்கோரையைக்கீறியங்கிடந்துந்
துடியிடையுடையத்துரோபதைமருங்கிற்றுகில்வளர்ந்திடும்படிகாத்தாய் (௬௩)

கொடியமாமுனிவன்விடுத்திடும்பூதங்குறுகியேவெமைவதையாமல்
விடசெலம்வருத்துவிலக்கிடநடுவன்றனையவண்விரைவினின்விடுத்தா
யிடருறுமெமக்காவிழியெனநினையாதினையிலாத்தூதுவனுகி
யடலரவுயர்த்தோனிடத்தினிற்சென்றைந்தூரினையன்றுவேண்டினையால் (௬௪)

ஆதியாயனந்தவண்டமுன்னிடத்தினமைக்குநீயடையலரவியச்
சூதனுயெனக்கன்றிரதமூர்ந்துயருஞ்சாரதிசுதன்றன்மேன்முனிந்தே
யாதவனிகராந்திகிரியையெடுத்தாயறனிலாப்பகதத்தன்விடுக்கத்
தீதுறவடரும்படையினைத்தடுத்துச்சதாயுவின்சிரசினைச்சிதைத்தாய் (௬௫)

நிகரில்காண்டீபத்துடனியானன்றுநெருப்பிடைவிழுந்திடாவண்ணந்
திகிரியினிரவிதனைமறைத்தறனில்செயித்திரதனைச்சிதைப்பித்தாய்
பகலவன்குமரன்பணியினுன்மடியாதிரதநல்லுருளையைப்படிக்கீழ்ப்
புகவெழிலடியாலழுத்தியங்கவனைப்போரினில்வதைத்திடச்செய்தாய் (௬௬)

பாரினினின்றசுயோதனன்மடியப்பவனன்சேயுய்ந்திடும்படிநின்
னூருவிற்கரத்தையடித்துலகெல்லாமுதவினைகுரகதத்தாமா
வேரியங்கமலன்படைதொடுத்தெதிர்ந்தங்கபாண்டவமென்றுவிட்டிடயாந்
தாரணிமிசையினிறந்திடாதொளிக்கக்களைகணுயிடரினைத்தவிர்த்தாய் (௬௭)

அத்திரக்குருவின்மகன்விடவெழுந்தவயன்படையவனியிற்கிடத்து
முத்தரையுதரக்கருப்பநற்குமரனுகவேயொளிகொளுன்பதத்தான்
மெய்த்தவர்மகிழமிதித்துநீயெங்கண்மரபினைவிளக்கியசோதி
யத்தவுன்னடியேமுனைப்பிரிந்திவணினடையலமென்றரற்றினனால் (௬௮)

அவனியிற்பரமன்மிதித்திடுமடியின்குறிதொறுமார்வமுற்றிறைஞ்சித்
துவரையினமர்ந்தவிருத்தநாரியர்கடுலங்கியதாதியருடனு
முவமையில்விசயன்மதுரையிற்புகுதவொல்லையினேகலுங்கிராதர்
பவமுறவடர்ந்தேயரிவையர்திரளைப்பற்றியேவரையினிற்சேர்ந்தார் (௬௯)

வசையுறக்கிராதரரிவையர்திரளைவவ்விடமறுவில்காண்டீபம்
விசயனுக்கவணின்வளைத்தெயும்வலனற்றிடவவன்மெலிந்தநிருத்தன்
சுசியுறப்பயந்தசுதனெடுமேகித்துலங்கியமதுரையினெய்திச்
சசிதரனிடரைத்தவிர்த்திடும்பரமன்ருளினைநினைந்திரங்கினனால் (௭௦)

எதுகுலமரபின்வயங்கனிருத்தன்பயந்திடவிலங்கும்வச்சிரனை
மதிலுயர்ந்திடவேவயங்கியவட்டமாமதுரையாண்மன்னவனுக்கி
விதிநிகர்மறையோர்நிகரிலாச்சுருதிவிளம்பிடமவுலியைச்சூட்டி
யுததியினனந்தன்மிசையமரரிதன்னுளத்துறவமர்ந்தனன்விசயன் (௭௧)

ஸ்ரீவைகுண்டப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௮௮௧.

## ௧௨௯-வது மார்க்கண்டேயப் படலம்.

மாசிலயோத்திமதுராபுரிமாயா
காசியுயர்காஞ்சிகவின்சேரவந்திகா
வேசில்கடற்றுவரையோடிவ்வெழுநகரி
னுசகன்முத்தியருளச்சுதன்பதம்பணிவாம் (௧)

**வேறு,** அவனியின்பாரமகற்றியேயரிதற்சோதியையடைந்தனனென்றே
தவர்வியப்புறநற்சுகமுனியுரைப்பத்தனஞ்செயனருள்சுதன்குமரன்
பவமறவுரோமம்பொடிப்பவானந்தப்பயமிருவிழியினிற்பொழியச்
செவியிடையமுதமடுத்தெனக்கேட்டுமகிழ்வுடன்செப்பலுற்றனனால் (௨)

அண்டமெண்ணிலாதவுதரத்தினடக்குமற்புதமாயனென்றறைந்தா
யெண்டவவவன்றன்வயிற்றிடைப்புகுந்தேயுணர்ந்தவராரெனவிசைப்ப
முண்டகனிகராமுனிவன்மார்க்கண்டன்முகுந்தன்றன்னகட்டிடையெய்திக்
கண்டனன்புவனமெவைகளுமதனைக்கழறுவன்கேளெனவறைவான் (௩)

மாணவனாகியிலங்குமார்க்கண்டன்வயங்கினன்முஞ்சியும்வயங்க
வேணியைத்தரித்துச்சீரையைப்புனைந்துவிழுமியசெவ்வடந்திசழப்
பாணியிற்குசைநற்கமண்டலஞ்சேரப்பழுதகலுறையுரியொளிர
வாணியாயுயரச்சுதனவணடையவருந்தவம்புரிந்தனனம்மா (௪)

இத்தலமிசையினிலங்கியவிமவானெனும்வரையெழில்சொளவதனுக்
குத்தரதீரந்தனிலயமிகுத்தபுட்கரத்திரைநதியோங்குஞ்
சித்திரசாலையெனப்பெயர்படைத்துச்சிறந்திடுமாச்சிரமத்தி
னத்தியிற்றுயில்வோன்வரத்தவம்புரிந்தானறுமன்வந்திரங்கழிய (௫)

அரியமாதவமார்க்கண்டனளப்பில்காலங்களகன்றிடச்செய்வான்
சுரர்பதிவிடுக்கவருமதன்வசந்தன்றூயகெந்தருவர்களரம்பை
யுருவசிமுதலோரடைந்துதஞ்செயல்கள்விரித்திடவுயர்தவமழிக்க
வெருவியங்கவன்றன்றவத்தினாற்பாறிமெய்சுடவலரிபாலடைந்தார் (௬)

அரிதிருப்பெயரையொருமைநெஞ்சிடையினமூத்தியவறிஞமார்க்கண்டன்
சுரர்பதிநடுங்கத்தவஞ்செயும்வேலைதுலங்குமெய்சுவேதமாமரனுஞ்
சருமுகிலெனவேதிகழுநாரணனுங்கவினுறுமானவராகி
யிருவருமவன்முன்னிலங்கிநின்றிடலுமிறைஞ்சியேநடித்தனன்றுதித்து (௭)

இதயமீதமரிந்திரிபமுநீயேயெனிலெனக்கடமையுண்டாயிங்
குதவிநலன்மேருதுதிப்பனுனையென்றிறைஞ்சியவுத்தமன்றன்னைத்
திதிதருசுதரைவதைத்தருளியநற்சீதரன்கேள்வரமெனவே
சதுமுகனமரும்பதமழிந்திடுநாட்டயாவாய்க்காத்திரியென்முன் (௮)

உயருமார்க்கண்டமுனியிவைபகரவுலகெலாமளந்தருள்பரம
னயனகரழியப்பிரளயங்கோர்க்குமவணியயத்தினிலையுந்
துயரொழித்திடுவமெனமொழியருளித்தூயமாலரனொடுமேக
நியமமொன்றிடவச்சோதியைமனத்துணினைத்தவணமர்ந்திடுந்தினத்தின் (௯)

பிரமகற்பந்தானிறைந்திடவடையுமிறுதிக்காலந்தனிற்பிறையைத்
தரியரனுதலின்விழியழலெரிப்பச்சண்டவாசுகனறைந்திடவே
கரிகரநிசராந்தாரைகண்மலியக்கடிதெழுமேகங்கள்பொழிய
வருபிரளயந்தானண்டமும்விரியவளைந்தெங்கணுமலையுறவே (௧௰)

விரைசெறிகமலனகரழிந்திடவேமேவியபிரளயத்தெழுந்த
திரையறைந்திடலுமிதந்துமங்கமிழ்ந்திச்செலத்தினினுரைந்துசோடி
வருடமோவிலக்கமொன்றுறமாண்டுமறுவின்மார்க்கண்டயனளப்பில்
பருவரலுறுவோனவணிலோருருபெரும்பூகவப்பாதவங்கண்டான் (௧௧)

வரையெனவுயருந்திரையுறுமயர்த்தினடுவிலோர்வடமரங்கண்டு
பரவுவெள்ளத்தினமிழ்ந்தெழுந்தலைந்துபருவாலுற்றிடுமுனிவன்
விரைவினின்விதியாலலைந்தநற்சோளிமிசையினினேறியோரிலைமேற்
கருமுகிலெனநற்கலன்களுமிலங்கக்கவினுறுகுழவியைக்கண்டான் (௧௨)

சரிகுழலிலகச்சுட்டிமுண்டகத்திற்றுலங்கிடத்தோள்வளைதிகழ
விருவிழியொளிரவளைகரந்துயங்கவிரணியநாண்மருங்குறவே
யுரன்மிசைக்கலன்கள்வயங்கிடச்சிலம்பினவ்வுறவொருதிருவடியின்
பெருவிரல்வாயினுறவிருகையினாற்பிடித்தமர்குழவியைக்கண்டான் (௧௩)

வாசமெய்யுறநல்லிழைகள்சுந்தரத்தின்வயங்கிடுங்குழவிசண்டிவனே
யீசனென்றளப்பின்மகிழ்வொடுமவனையெய்திடச்செலுமுனிதனைத்தன்
னாசிவாயுவினால்வாங்கிடமசகநிகர்த்தவணண்ணியுட்புகுந்து
பூசுரனிறையின்வயிற்றிடையீரேழ்புவனமுமடைந்திடக்கண்டான் (௧௪)

இரவிசந்திரனேழ்கடல்வரையயனோடீசனிந்திரனெழின்முனிவர்
சுரரிராக்கதர்களசுரர்கண்மனிதர்துலங்கியதெய்வநாரியர்க
ளரவினமுதலாவமர்ந்திடும்பதினாலுலகமுமண்டிடநோக்கிச்
சரியின்மாதவன்றானமருமாச்சிரமங்கண்டவன்சார்ந்தமர்ந்தனனால் (௧௫)

அரிதிருவயிற்றிற்பிரமகற்பந்தானிறைந்திடப்பிரளயமடைய
விரைவினம்முனியையுயர்ந்தபூகவத்தின்விளங்கியகுழவிதானுமிழத்
திரையிடைவிழுந்துநிகரிலாத்தவன்றான்றியங்கியவடமரந்தனையுங்
கருமுகினிறமாஞ்சிசுவையும்வளைந்தபிரளயந்தனையுங்கண்டிலனால் (௧௬)

வடமொழிகுழவிபிரளயந்தனையுங்காண்கிலாமார்க்கண்டன்வியந்து
படியளந்திடந்துநுகர்ந்துமிழ்ந்திலங்கும்பரமனைத்துதித்துநின்றேத்திக்
கடிதினின்முனிற்றானமர்ந்தவாச்சிரமங்கவினுறச்சேர்ந்தனனென்றே
யடைவுடனபிமன்குமாரனுக்குரைத்தானருள்செறிசுகமுனியம்மா (௧௭)

மார்க்கண்டப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௮௧௬௮.

## ௧௨௭-வது விருகாசூரப் படலம்.

ஒருதனிமுதல்வனிருசுடராகியுயர்ந்திடுமூர்த்திகண்மூன்றா
யருமறைநான்காயைந்துபூதமுமாயாறுசாத்திரங்களாயேழு
பரவையாயெட்டுப்பருப்பதமாகிப்பவமிலாநவக்கிரகத்தின்
சுருபமாய்நிலத்திற்றசவவதாரமாகியசோதியைப்பணிவாம் (௧)

அலையுறவெழுந்தபிரளயமதனிலலைந்தமார்க்கண்டன்றனையோ
ரிலகியவடத்தினிலையின்மேற்சிசுவாய்விழுங்கியங்கெழுந்திடவுமிழ்ந்த
மலர்மகள்கொழுநன்செயலினையறையுஞ்சுகமுனியடியினினிறைஞ்சி
நலனுறுமபிமன்றருமெழிற்புதல்வனயனநீர்பொழியவேநவில்வான் (௨)

அரனிருசரணையடைந்தவன்பெயரையறைந்திடுமாந்தர்கள்பலருஞ்
சரியிலாவிபவஞ்சார்வனவேதுசக்கரந்தரித்தவன்பத்த
ரிருநிதியறவேவறிஞராய்த்திரிவதேதிவையுபயமுந்தெரிய
மருளகன்முநிவபகரெனவபிமன்மதலைகேட்டிடச்சுகன்மொழிவான் (௩)

எருதினிலுறுவோனற்பசந்துட்டனிருநிலத்திற்றவஞ்செய்யுந்
துரிதர்களெனினுமவர்முனரெய்தித்தொலைவிலாச்செல்வமீந்திடுவன்
வருவிபவத்தாற்கருவிதராகிமறுவுறுபவங்கள்வந்தடைய
நிரையமுற்றதனைநீந்தியுஞ்சனனவுவரியைநீந்திலாதுழல்வர் (௪)

திருமகள்கொழுநன்கயவர்கள்கருத்திற்சேர்கிலானுலப்பிலாவருட
மிருநிலமிசையின்மருளொழிந்திடவேதவஞ்செய்வார்முன்னரினெய்திப்
பரகதியருள்வன்பவமுறுவிபவம்பத்தருக்களிக்கிலானவரும்
வருநிதியகலவறுமையாநயனுஞ்சனத்தினுற்சனனத்தின்மயங்கார் (௫)

ஆதலினரசவறிகயவருக்கேயரியவனிணையிலாவிடையின்
மீதுறுமரன்றன்விடமனுமசுரன்விளம்பியவரத்தினையருளிப்
பூதலமிசையின்வெருவியெண்டிக்கும்புணரிசூழ்தீவெலாந்திரிந்தே
மாதவன்செயலாலவன்மடிந்திடவேவயங்கினான்கேளெனமொழிவான் (௬)

**வேறு.**

அறிவிலாவிருகாசுரனாரண
னிறையுந்நாரதனைக்கண்டுநேரிலா
விறைவர்மூவரின்யாவர்சின்னாளினி
னுறுவர்மாதவஞ்செய்வனென்றோதினான் (௭)

கோரனாம்விருகாசுரன்கூறவே
சீரினாலுயர்நாரதன்செப்புவா
னாரணனுனக்கெட்டலனான்முகன்
வாரலன்னரன்வந்திடுவானென்றான் (௮)

தூயமாமுநியிவ்வுரைசொல்லவே
தீயனாம்விருகாசுரன்சீயமும்
பாயும்வெம்புலியும்படர்கானகத்
தேயெனுமுனரிற்கடிதெய்தினான் (௯)

அஞ்செழுத்தையழுத்தியநெஞ்சினான்
விஞ்சுதீயினின்மெய்யின்றசையினைச்
சஞ்சலம்மறத்தானரிந்தோமஞ்செய்
தஞ்சலன்றியருந்தவஞ்செய்தனன் (௧௦)

எரியினிற்றசையாவுமறிந்திடும்
மருளனேழுதினந்தனின்வாமத்தின்
னரிவையுற்றவன்வந்திலனென்றுதன்
சிரமறுத்தனல்சேர்த்திடவெண்ணினான் (௧௧)

கடியவன்கதிர்வாளினிற்கந்தரந்
திடமுடன்னரிந்தேயனல்சேர்க்குமுன்
னிடபவாகனனெண்ணரும்பூதங்கண்
மிடையவெய்திவிலக்கினனுமரோ (௧௨)

சிரமறுத்தனல்சேர்க்குமுன்னேதடுத்
தரனெருத்தினமர்ந்துமுன்றோன்றலும்
பரிவுடன்னசுரன்பணிந்தாடியே
புரமெரித்தபுனிதவென்றேத்தினான் (௧௩)

அரகராவெனவாடியவன்பனைச்
சுரர்கமுன்னத்துலங்கிடத்தோன்றிய
வுரகபூடணனோக்கியுவந்தியான்
றருவனவ்வரஞ்சாற்றுகென்றோதினான் (கச)

அரனுரைத்திடவாடுமவுணர்கோன்
பரிவுடன்பணிந்தேபகர்வானென்றன்
கரமமைத்திடயாவர்கம்மாயினுந்
தரையினிற்பொடியாம்வரந்தாவென்றான் (கரு)

கடியனிவ்வுரைகூறவுன்கையுறிற்
படியின்வானின்பதியமர்வோர்சிரம்
பொடிபடும்வரமீந்தனன்போவென
விடபமீதினினிதுறைந்தானரோ (கசு)

அரனுரைக்கவவுணன்றன்கையினை
வரமளித்தருண்மங்கைபங்கினன்றன்
சிரமமைத்தவன்செப்புமச்சோதனை
யுரன்மதித்திடுவேனெனவுன்னினான் (கஎ)

கடியவன்வரச்சோதனைசாணவே
விடையின்மேவும்விமலன்றன்கம்மிசை
நெடியதன்கரம்வைத்திடநீட்டுமுன்
படியினோடினனாற்பரமேசுரன் (கஅ)

பூதலந்தனினோடும்புராரியை
வாதைசெய்யவரங்கொண்டதீயவன்
றீதின்மாதவர்சிந்தைகலங்கியே
பீதியுற்றிடப்பின்றொடர்ந்தானரோ (ககூ)

படியினாழ்கடலோடெழுதீவினு
மிடையுமால்வரைமீதுவிண்மீதினுங்
கடிதினோடினவீசுரன்கம்மிசை
விடமன்றன்கரம்வைத்திடமேவினான் (உ0)

தேவர்தம்பதிதிக்கினுள்ளோர்நகர்
பூவின்வாழும்புனிதன்னுறைவிடம்
மேவுமீசன்வெருவிடவேவிடன்
றாபனற்கணசுரன்றொடர்ந்தனன் (உக)

மலருளோன்முனிவோர்திரள்வானவர்
கலனலிந்தடருங்கருமம்மறும்
பலனறிந்திலர்நின்றுபதைத்தனர்
மெலிவுடன்னரனோடினன்விண்ணெலாம் (உஉ)

நெறியறுத்திடுநீசவவுணர்கோன்
றிறன்மிகுத்துத்தொடர்ந்துபின்செல்லவே
கறைமிடற்றரன்செய்வகைகாண்கிலான்
மறுவில்காரணவைகுந்தமெய்தினான் (உங)

சிரமிசைக்கரஞ்சேர்த்திடத்தியவன்
வரமெலிந்திடுமங்கைபங்காளனு
மரனரந்தையொருவிடவச்சுதன்
திருவுளந்தனிற்சிந்தைசெய்தானரோ (உச)

அரியரன்னரந்தைக்கடனீந்தநற்
பிரமசாரிப்பெருந்தவனாகியே
சிரமிசைச்சிகைநாலத்திகழ்முந்நூ
லுரமிசையுழைத்தோலுடனொங்கவே (உரு)

தூயமுஞ்சிமெகலைபீனந்துலங்கவே
யாயுநான்மறைநாவின்னடையவே
பேயினம்முறுபித்தன்பின்னேகியந்
தீயனுமவுணேசன்முன்சென்றனன் (உசு)

நீலகண்டனைப்பின்றொடர்ந்தேகிறை
யாலமென்னவடரவுணேசனை
சீலமன்னுரைசெப்பித்தடுத்தசன்
ஞாலமீதினிறைஞ்சிநவிலுவான் (உஎ)

அரியயோகியர்தம்மினதிவுளீர்
சிரமிசைச்சடையெங்குஞ்செறிந்துளீர்
சரிரம்வெண்பொடியாலொளிர்தாங்குவீர்
கரம்முறுஞ்செவத்தின்வடக்காட்சியீர் (உஅ)

தூரமாநெறியெய்தித்துலங்குவீர்
பாரசாரியநெஞ்சிற்பதித்துளீர்
வாருமெய்யிளைப்பாரும்வருத்தங்க
டீரவிங்கிருமென்றுபின்செப்புவான் (உகூ)

தென்றன்மேவச்செறிவெறிப்போதுக
டுன்றுகாவிதிற்றூய்புனலுட்சென்று
நின்றுநீர்நிறைநீர்பருகும்மெயி
ஞென்றுவெம்மையொழியவென்றோதுவான் (௩0)

மாயனிங்கிவைகூறமருளுறுந்
தீயனெஞ்சினுவகைசெறிந்திட
தூயவாவிவணேர்கருமஞ்சொல்வே
னீயறிந்தருளென்றுநிகழ்த்துவான் (௩க)

அரனென்கையுறினார்சிரமாயினு
மெரியுமென்றசொல்சோதனைசெய்யவென்
கரமவன்சிரம்வைக்கக்கருதியே
விரைவினெய்தினனென்றுவிளம்பினான் (௩௨)

தீயவன்னிவைசெப்பமுறுவல்செய்
மாயவனரன்றக்கன்மகந்தனிற்
றூயதேவியிறக்கத்துயரோடே
பேய்கள்சூழப்பித்தாயினனென்றனன் (௩௩)

தேவியானவடெக்கன்மகந்தனி
ளுவிநீக்கவருந்துயரெய்தியே
சேவினேறித்திரிந்துழல்வோன்சொன்மெய்
மேவுமோவெனப்பின்னும்விளம்புவான் (௩௪)

அரனறைந்தசொல்லேபழுதாயிடின்
னிருவருமவனெவ்விடத்தெய்தினுங்
காமுறப்பற்றிக்கட்டுவமுன்கையிற்
சிரமமைத்திவண்சோதனைசெய்யென்றான் (௩ரு)

அரியறைந்தசொற்கேட்டவவுணர்கோன்
பிரமையுற்றுப்பிறங்குகரத்தைதத்தன்
சிரமணைமக்கக்கபாலஞ்கிதைந்தக
றரையினிற்பொடிசாரமடிந்தனன் (௩௬)

தலையிற்றன்கரம்வைக்கத்தகர்ந்திடுங்
கலனிறக்கவுளங்களித்தெய்திய
மலருளோன்முனிவோர்திரள்வானவர்
பலருமாதவன்றளிற்பணிந்தனர் (௩௭)

அந்தரத்தினிற்றுந்தூமியார்த்திட
நந்தொலித்திடநாரியராடியே
கந்தரத்தர்கடுந்துயர்நீக்கிய
சுந்தராவெனப்பொன்மலர்தூவினர் (௩௮)

சிரசிற்றன்கரஞ்சேர்த்திடவெய்திய
மருளன்மாளமகிழுமாபதி
யரிபதத்திடையன்பினிறைஞ்சியே
சுருதியாற்பலதோத்திரஞ்செய்தனன் (௨௯)

யானளித்தவரத்தினினென்னையே
யானிசெய்யவடரவுணன்சிர
மீனமாயெரியும்வகைசெய்திடு
மானவாதிருமார்பநமவென்றன் (௩0)

அரன்மகிழ்ந்துநுதித்திடவேயரி
திருவுளமுவந்தேயிவைசெப்புவான்
மருளனுணவசுரனுக்கிவ்வர
மருடலேயவமென்றறைந்தானரோ (௪௧)

அற்பசந்துட்டனுயினுநீயவத்
துற்குணத்தவர்முன்னரிற்றேன்றலை
நற்குணத்தவர்நாயகவேகெனு
முற்குணத்துமுராரிமொழிந்தனன் (௪௨)

கயிலையாளியுயர்கமலாசனன்
புயலையூர்திபுத்தேளிர்முனிவர்க
ளியல்புறுமிவர்தங்களையேகெனு
வுயருமாதவன்றன்பதத்துற்றனன் (௪௩)

ஆதலாலரனற்பசந்துட்டனுய்ப்
பூதலத்தினினீயும்பொருட்செல்வ
மேதமெய்தவளித்திடுமெம்பிரான்
பாதம்பற்றினர்பாவத்திற்பற்றிலார் (௪௪)

செல்வம்பாவத்தைச்சேர்த்திடஞானம்போ
யல்லலெய்தவரிவையர்தோளினைப்
புல்லுவார்களறிஞர்புலன்பொறி
வெல்வர்மன்னவவென்றனன்மெய்ச்சுகன் (௪௫)

விருகாசூரப்படலம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் - ௬௧௪௬.

## ௧௨௮-வது பிருகுப் படலம்.

அரசனாயறுதிங்களலரிசேயிடத்தமர்செவ்வாயன்றுய்ய
விரசைமாநதியுடையோனன்புதன்மேல்வைத்தநலவீமற்காகித்
கரைசெய்வாவியாழத்திற்கழுமீதினளியானோன்வெள்ளிமானும்
வரிசெய்வளையசனியஞ்சவிசயற்காய்முழக்கினனைவணக்கஞ்செய்வாம் (௧)

வேறு. சுகமுனியடியினிறைஞ்சிவாளபிமன்சுதனிவைபகருவான்றுய்ய
நிகரிலாமுராரிபுராரிதன்றனியைநீக்கியதெல்லவுமறைந்தாய்
ககபதித்துவசனிறையெனவுணராதிசரதேவதைகழல்பணிந்து
மகிழ்வுறுமனிதருறுமருளதனைப்புகலெனமாதவன்மொழிவான் (௨)

அரிதனையறியிலவனியிற்சனங்கள்சனனமுமரணமுமகலப்
பரகதியடைந்தாலுலகிலையெனவப்பரமனாகியதனையொளிப்பச்
சுரரொடுமுனிவர்மிகமதிகலங்கித்துலங்கியவிறையவனென்றே
பிருகுவைவிடுத்தசரிதைகேளெனவேபிறங்கியமுனியிவையுரைப்பான் (௩)

பவமறுசரசுவதிநதிக்கரையிற்பழுதகன்றிடப்புலன்சயித்துத்
தவமுயன்முனிவரிறையெவனெனுமதுணர்கிலார்தம்மிற்சம்மதித்தே
யுவமையற்றுயர்சாத்திகவிராசததாமதமெனுமுக்குணமுறுவோர்
சிவனொடுதிருமாலயனிவர்களிற்சாத்திககுணனிறையெனத்தெளிந்தார் (௪)

முக்குணமதனின்முதற்குணமெவனோமூவர்தங்கருமஞ்சோதிக்கத்
தக்கவனெவனென்றியம்பிடும்வேலைசரியிலாப்பிருகுமாமுனிவ
ணக்கணாரணனான்முகனிவர்களிற்சாத்திககுணநலவிறைதெரியப்
புக்கவர்பதியினமர்ந்தவர்செயலைப்புகலுவனென்றுபோயினனால் (௫)

வேறு. தந்தையாகுஞ்சதுமுகன்பாலினில்
வந்துவந்தனைசெய்திலதாய்மனர்
சிந்தையிற்கடுங்கோவந்திரண்டவன்
மைந்தனாகையினச்சினமாய்த்தனன் (௬)

அயனிராசதநோக்குமறிஞனற்
கயிலையங்கிரியிற்கடிதெய்தியே
சயிலவில்லிதன்மெய்யைத்தழீஇக்கொள
முயலகன்பகைஞன்முனிந்தானரோ (௭)

காலகாலனென்காலினிறைஞ்சிடாச்
சீலமில்லவனோவெனைத்தீண்டுவன்
கோலமில்லவனைக்கொல்வனென்றுதன்
சூலமேந்தித்துரத்தினானரோ (௮)

முயலகன்வெரிநுற்றவன்முத்தலை
யயிலையேந்தியடர்ந்திடநோக்கியே
தயையுறுமிமவான்றருதையலாள்
மயர்வறத்தடுத்தேகதமாய்த்தனள் (௯)

காமனைக்கடிகாளகண்டனுறுந்
தாமதக்குணநோக்கித்தவத்தினோன்
நீமைவேரறச்சேடனின்மீதமர்
மாமன்வாழும்பயோததிமன்னினான் (௧௦)

வித்தகப்பணிமீதின்விளங்கிய
வுத்தமன்றன்னுரத்தினுதைத்தலு
மத்தனச்சுதன்மேல்விழுவன்புளம்
வைத்தபோலமனமகிழ்ந்தானரோ (௧௧)

உரத்தின்மீதினுதைத்தவன்பாதத்தை
யருத்தியாய்மலரின்னருச்சித்தயஞ்
சிரத்தின்மீதிற்றெளித்தெனக்கெய்தியே
பொருத்தினாய்முற்குணம்புனிதாவென்றான் (௧௨)

இனையவின்சொலியம்புமுராரியை
முனிவையோவுமுனிவனிறைஞ்சியே
யனகமுற்குணவச்சுதவற்புத
கனகனந்தகவென்றுகழறுவான் (௧௩)

வேலையின்னமிர்தம்மருந்தாதுவெவ்
வாலமேறுகரற்பகர்ளென்னவுன்
கோலநன்கறியார்குத்திரத்தெய்வ
ஞாலமீதடைவார்நரகெய்துவார் (௧௪)

திருவினாயகசிற்குணசீதர
மருளகற்றிடுமாதவவாமன
கரியவாகருணாகரகாகுத்த
புருடவுத்தமபோற்றியென்றனரோ (௧௫)

ஆதியேநமவச்சுதனேபரஞ்
சோதியேநமதூயசுரர்நதிப்
பாதனேநமபங்கயமங்கைதன்
னாதனேநமவென்றுநவின்றனன் (௧௬)

நயனமானந்தநாரமலிந்திட
வயனையாவரியேயச்சுதானந்த
சயனவென்றவன்றாளினிறைஞ்சியே
வியல்புறும்முனிவோரவையெய்தினான் (௧௭)

இறையையோர்ந்துதவஞ்செய்யவெண்ணிய
மறுவின்மாதவர்தம்மைவணங்கியே
கறைமிடற்றவனுங்கமலாசனத்
திறையுமெண்கணனுஞ்செய்ததோதினான் (௧௮)

அயனிராசதமும்மரன்றாமதச்
செயலுமோதிச்சிறந்திடுசாத்திக
மருவுமாமகுணன்னிறையென்பதும்
பிருகுமாமுனிபேசினானரோ (௧௯)

பிருகுமாமுனிபேசுநல்வாய்மையை
மருளகற்றிடுமாதவர்கேட்டுள
முருகியொப்பிலவுத்தமனாகிய
பரமனேயிறையென்றுறப்பற்றினார் (௨௦)

துவாதசாக்கரத்தோடுறுதுன்பநோ
யவாவகற்றுமட்டாக்கரநெஞ்சினிற்
றிவாவிராவுறச்சேரப்பதத்தினிற்
றுவாணடக்கியகோன்பதஞ்சேர்ந்தனர் (௨௧)

அரியுயர்ந்தவிறையென்பதாமெனு
முரைபகர்ந்திடலோகத்தனைவரு
மருளகன்றிடமால்விரதஞ்செய்தே
நிரையசென்மக்கடலினைநீந்தினார் (உஉ)

நரரடங்களினமின்னார்தன
மருளடங்கமனத்திடைவைத்தலுஞ்
சுரரடங்கத்துதிக்கவியமனு
ருரன்மடங்கக்கதியிடையுற்றனர் (உ௩)

தரையின்வாணரர்சக்கரன்றன்பதி
மருவச்சாதகர்வாடியங்கோடவே
யிரவிகாதலனேங்கியிவையெல்லா
முரைசெய்தானயற்குள்ளநடுங்கவே (உ௪)

நடுவன்கூறுசொனான்முகன்கேட்டுநல்
விடையினேறியவித்தகனோடுமே
புடவிபின்பயமார்புணரிக்கணி
னிடரறுக்கும்பரனையிறைஞ்சினன் (உ௫)

முனிவர்நீயிறையென்றுமொழிந்திட
வனைவரும்முனைப்பற்றியளப்பிலாச்
சனனமாயசலதியையோவியே
யனகவுன்பதத்தேயடைவாரென்றான் (உ௬)

இரவிமைந்தன்பதமழிந்தேங்கினன்
றரையில்வாழுஞ்சனங்களுமற்றிடுந்
திருவினாயகஞ்செய்தவண்டமும்
விரைவிற்பாழுறுமென்றுவிளம்பினன் (உ௭)

மைந்தனனமலரயன்கூறலு
மிந்துசேகரவீசனைநோக்கியே
வெந்தலோகமுமோனைநூலெழ
வந்தமாயறைகென்றரிகூறுவான் (உ௮)

உரைசெய்மோகனநூலினுக்கொக்கவே
தரையினீயுறவான்றனசெய்குண
நரருமனடுவனுமின்புற
நிரையம்வீறிடநீகவிலென்றனன் (உ௯)

உவமையில்லரியோதப்புராரியுங்
கவுதமன்முதலாய்க்கடுஞ்சொல்லுறுந்
தவர்கடம்முடன்றுமதநூலினை
யவனிதன்னின்மலியவறைந்தனர் (௩0)

ஆதலின்னரன்றுனறைநூலினுற்
சீதரனிறையென்பதுந்தேர்கிலாப்
பூதலந்தனின்யாவரும்போகமே
யாதரித்ததற்காந்தெய்வம்பேணுவார் (௩௧)

செக்கிலாட்டுதிலந்தன்னினோரெள்ளுக்
கக்குபிண்டியிற்காண்குவபோலவே
மிக்கமோகனநூலினைவிட்டரி
பக்கமாகுவர்பாரிடையற்பமே (௩உ)

நாகமேனடித்தானடிநண்ணலார்
தோகைமாதர்கள்சுந்தரநோக்கியே
மோகபோகமுயன்றுபலதெய்வ
மோகைகூர்வரென்றேசுகனோதினன் (௩௩)

பிருகுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௩௭௩.

## ௧௨௯-வது பரிட்சித்துமோட்சப் படலம்.

திகிரியினாற்செருநர்ச்செற்றுமுரகனையரியினுழத்
திகிரியாலணையைக்கட்டியிகலரக்கரைச்செயித்துத்
திகிரியொருகரத்தேந்தித்திரளாவாயரைக்காத்துத்
திகிரியெழுபண்ணுறவூதியதேவனடிபணிவாம் (௧)

**வேறு.** மோகனநூலையரன்விதித்திடுஞ்சொன்மொழிந்திடுமுநிவனையிறைஞ்சி
மாகவான்புதல்வன்சுதனலக்குமரன்மலர்மகனுயகன்புவியிற்
சாகரமருவுந்துவரையினெய்தித்தருமமில்கயவரையரித்தே
யோகமாமுநிவரறைந்தசாபத்தாலொழிந்ததென்பகரெனவுரைப்பான் (௨)

முனிவர்சாபத்தாலெதுகுலமுடியமுராரியுமேகினனென்முற்
றனைநிகரிலாதவிறைவனென்றவனைச்சாற்றுமாறெங்ஙனென்றுரைப்ப
வினையறுமுனிவனவன்றனைநோக்கிவிளம்புவானென்பிலாக்கிருமி
யனலினைநுகரினவன்றனைச்சாபமடையுமென்றிவையறைந்தனனால் (௩)

திருமகள்கொழுநனடியவர்தமையுந்தியவெஞ்சாபமும்பவமு
மருவிடாதொருவுமனுநெறிகேட்டிவானினுமண்ணினுமிருப்ப
தொருதினமிருந்தான்மறுதினமிராமனுற்றசாபத்தினாலுழலுஞ்
சுரர்முனிதுவரைப்பதியிலவ்வினையாந்துனியறவனேகநாளமர்ந்தான் (௪)

அயனருள்படையைக்குரகதத்தாமனபாண்டவமென்றுவிட்டிடவே
தயையுடைத்தருமன்குலத்தினுரையுந்தான்றடிந்ததென்றுரைப்பவருளரோ
கயவனுய்மறையோன்றனைக்கொலுங்கண்டாகருணனைக்சுடுவினையகல
வுயர்பதத்துற்றுனெனிலிறைதனைவெஞ்சாபமும்பவங்களுமுறுமோ (௫)

இருளகன்முனிவரறைந்தசாபத்தாலெதுகுலமுடிந்ததென்றியம்பி
மருளகன்றிடநல்விதவுபதேசமருளியேவங்கம்வந்துலாவும்
பரவைசூழ்துவரைப்பதியினையகன்றுபழுதகல்வதரியினெய்திச்
சரியிலுத்தவவங்கிருத்தியென்றுரைத்தோன்முனுநிற்றகைபவருளரோ (௬)

ஆதலினரசவவனடியவரையடைந்திடாச்சாபமும்பவமும்
வேதநாயகனும்விமலனுக்குறுமோவெனமுனிவிளம்பிடமகிழ்ந்து
பூதலமிசையின்மனிதனுவெழுந்தபுனிதன்றன்குரம்பையினேடும்
வேதமற்றிலங்கும்பதியினினெய்தலாகுமோவெனவவனறைவான் (௭)

மருளுறுமவர்போன்மொழிந்திடுமரசமாதவன்றனையெயுங்கிராதன்
சரீரமோடியருஞ்சுவர்க்கமெய்திடவேசாற்றினேன்முனுநுகிலனே
விரதமோடெழுந்தபுரவிகள்வயங்குங்கதியிடையிலங்கவேயருள்செய்
யரிதிருமேனியுடன்பதியடைவதரிதுகொலென்றுபின்னறைவான் (௮)

அவனியிற்பாரமகற்றிடவிரும்பியரசர்தங்குலத்திடையெழுந்து
பலமுறவடருநிருதர்தானவர்கள்பழுதுறுநிருபரைவதைத்தே
யுவமையிறருமனிலைஞராற்கிளையோடுரககேதனன்மடிந்திடவுந்
தவர்கள்சாபத்தாலெதுகுலமறவுமியற்றினனென்றுசாற்றினனால் (௯)

சுசமுனியிவையையுரைத்திடவிறைஞ்சித்துலங்கியவபிமனற்சுதன்முன்
மிகமகிழ்ந்தயனீவிளம்புபாகவதப்பொருளெனும்விழுமியவமுதைப்
பகலவனவிராலகன்றிடுமிருள்போற்பவமறச்செவியினாற்பருக
நிகரிலாவரியென்னிருவிழிகளிப்பநிறைந்தெங்குமிலங்கினனென்றான் (௪௦)

அரிதிருவுருவமகிலம்வானெங்குமவிருறநிறைந்தனவெனவே
சரியிலாநிருபனுரைத்திடக்கேட்டுத்தத்துவஞானத்தைவிரித்துப்
பரிவினலருளிக்கதியுறுகெனவேபசர்ந்திடுசுசமுனியடியி
னரசர்கோன்வணங்கவருந்தவருடனுமவனகன்றிடவிவணிருந்தான் (௪௧)

உரைசெயும்பிராணவபானசமானவுதானவியானனென்றறையுஞ்
சரீரமுற்றிடுங்காலந்தையுமடக்கித்தவரெணுஞ்சுகனருள்யோக
மருவவெட்டெழுத்தைமனத்திடையமுத்திமருளுறுமாச்சைமன்னிறப்ப
வரியுயர்பதத்தைப்பரமபாகவதரெதிர்கொளவபிமன்சேயடைந்தான் (௪௨)

திருவினயகன்றன்பதத்திடைவயங்கச்சேர்ந்திடுமுத்தரைசிறுவன்
றரையிடையிறப்பவரற்றியசெனமேசயன்மறையறநெறிதன்னு
லெரியிடையிடவேயவன்றனுக்கையிலையெடுத்துவந்திமத்திற்சேர்க்க
விரைவினுயர்தக்ககனடைந்திறந்தோன்மேனியைவிழியினுலெரித்தான் (௪௩)

கதுமெனவடர்தக்ககனிருவிழியாற்கவினுறுமபிமன்சேய்தனக்குச்
சுதனெனவுயருங்குரம்பைவெந்திடவேசூழ்ந்திடுமழலினுலெரிக்துப்
பதிதனிலுறுவோர்வெருவிடவகன்றபினற்செனமேசெயன்பழுதில்
சதுமறைநெறியாலிறந்ததாதைக்குச்சலந்திலம்விடுத்தனன்மாதோ (௪௪)

பரிட்சித்துமோட்சப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் -௬௧௧௦.

## ௧௬௦-வது செனமேசயப் படலம்.

அரியுருவாயாடகன்றனகலமார்பம்வகிர்ந்துயர்த
வரியுரத்தினுசுகம்விட்டரவுயர்த்தோனடுவகியின்
னரியுறுவாயைவருமிர்காத்திடவேயமர்ந்துபண
வரியணையிற்றுயில்கொளரியம்புயத்தாளிணைபணிவாம் (௧)

வேறு. இறந்திடுந்தாதைக்கியல்பினுற்பிண்டமளித்தவனெண்ணின்மாதான
மறந்தவறுதமறையவர்க்கருளியருமறைநெறியெலாந்தழைப்பத்
துறந்தவர்மகிழக்கலியினைத்துரத்தித்துலங்குசெங்கோலினையோச்சிச்
சிறந்திடுஞ்சிங்காதனத்தினிற்செனமேசயன்வயங்கினதினந்தன்னின் (௨)

தனுவிலங்கியதோரெயினனவ்வவையிற்சார்ந்துமன்னவன்றனையிறைஞ்சி
வனமதினுரைத்தற்சரியதோர்கருமங்கண்டனன்யானெனமறுவி
தினகரனெனவேவயங்கியவரசன்செப்புதியவையெனப்பகர
வினையுறமிருசங்கினக்கொலைசெய்யும்வேடனீதறையலுற்றனனால் (௩)

நிகரிலாச்சகடத்தினகன்றுயர்வடத்தின்மிசையினினேறியாணிறையுஞ்
சசமகப்படவெங்கனியவைவிளம்பிக்கவட்டின்மீதமரும்வேலையிலே
புகலுதற்கரியவடிவுடையவரேனூர்பூசுரனெறியுறவருவோன்
பகலவன்வெயிலால்வதனம்வேர்த்திடவப்பழுவத்தினுனிழலடைந்தான் (ச)

வடநிழலடைந்தமறையவன்பாலின்வயங்கியதக்ககன்மறைநூ
லுடையுமந்தணனுமுருவினைக்கொண்டேயடைந்துநீயெய்தியசருமங்
கடிமலரயனைநிகர்த்திடும்பெரியோய்கழறெனவபிமனற்சுதனை
விடமுமிழரவங்கடித்திடவதனைமீட்கவந்தனனெனமொழிந்தான் (ரு)

தூயமாமறையோனிவையுரைத்திடலுந்துலங்கியதக்ககன்கடிக்கி
னீயவன்விடத்தைத்தடுத்திடவலையோநிகழ்த்தெனமறையவனகைத்தே
யாயிரம்பணமாரனந்தனுஞ்சினத்துக்கடிக்கிடினகற்றுவனெனவெந்
தீயுறும்விழிகள்சிவந்துதன்னுருக்கொடுயர்ந்தவண்செப்பலுற்றனனால் (சா)

அறிவிலந்தணயான்றக்ககனென்றன்விடத்தினையகற்றுதியோவென்
றெறுழ்வலிக்கலுழன்வெருவிடவெயிற்றிலங்குமவ்வடத்தினைக்கவ்வக்
கறைமிடற்றரனாலெரிந்திடும்புரம்போற்கடிதினக்கோளிநீறாக
நெறியுறுமறையோன்செலத்தினைத்தெளிக்கநிறைந்தவப்பூகவந்தழைத்த (எ)

திரிபுரமெனவேயெரிந்திடுங்கோளிசெலமுறத்தழைத்துநின்றிடலு
மருமறையவனையிறைஞ்சினான்முகனுமுனைக்குநேரலனெனவறைந்து
சரியிலாங்கிரன்மகன்சொலைப்பழுதாக்கலையெனநலனுரைசாற்றி
யிரவிபோலொளிருமணிகளன்றுதவியேகெனவவனுமீண்டனனால் (அ)

அந்தணனுடனேவிடங்கொடக்ககன்றனறைந்திடுமொழியெலாங்கேட்டு
வெந்தவவ்வடத்தோடியானும்நீறாகிமீளவுமதினுடனுறவே
வந்தனனதனுயிர்தரவந்தமறையவன்மீண்டிடவியற்றி
யுந்தையைவதைத்தானெனுமுனஞ்சௌமேசயன்கனன்றிவையுரைத்தனனால் (கூ)

தவன்மொழியினிற்றான்கடிக்குமதன்றித்தன்விடமீட்கவந்தவனுக்
குவமையின்மணிகளுமிழ்ந்தவைகரத்தினுதவியாங்கவன்றனைப்போக்கிப்
பவமுறவடர்த்தென்பிதாவினையெரித்துப்பழுதுறுதக்ககனுடனீள்
புவிமுதலுளமாசுணவினமடையப்பொன்றிடவியற்றுவனென்றான் (க0)

அருமறைமுநிவர்தமையவன்வரித்தாண்டரசர்கோன்சர்ப்பயாகத்தைத்
தரையினினியற்றியவிசினாகுதிகடயங்கிடச்செய்திடநடுங்கி
விரைவினிற்கீழுலகினுட்புவியுண்மிடைந்திடுவெவ்விடமலியு
மரவினமடையவந்துமாமகத்தின்குண்டத்தினனலிடையெரிந்த (கக)

சிட்டனுமரசன்வகுத்திடுமகத்திற்சினமுறுமரவினமடியத்
துட்டரானவர்கள்கிளையொடுமடியுமியல்புபோற்சுடிகையோடெரிய
வட்டமாநாகமிசையினாகுதிகளடர்ந்தவர்மேனிகள்வெதும்பச்
சுட்டிசித்திடலும்விதலையுற்றரற்றிச்சுரர்பதிக்கபயமிட்டனவால் (கஉ)

அரவினவிறையாமட்டமாநாகமபயமிட்டரற்றிடக்கேட்டுச்
சுரர்பதியுமையான்காப்பனீரஞ்சலெனவுமாகுதிகள்சுட்டிடலும்
வெருவியிந்திரனோடாதனந்தனையும்விலங்கொணாவகைசுற்றிக்கிடப்ப
வருமறைமுனிவரஃதெலாமுணர்ந்தாண்டரசனுக்குரைத்தனரம்மா (கங)

எந்தைதன்னுடலையெரித்ததக்ககனோடனைவருமெரியின்வீழாமன்
முந்தியேதடுத்தசுரர்பதியுடனும்வரும்படிமுடுகுவீரெனலு
மிந்திரன்முதலாவரவுகளெல்லாமெழுந்திவணடையவென்றிகழ்வில்
மந்திரமின்றுமுனிவராகுதிகள்வழங்கிடவானவர்நடுங்க (கச)

சிட்டராமுனிவர்வழங்குமாகுதிகள்சென்றிமையோர்கடம்பதியைக்
கிட்டியங்கவனோடரிகொளாதனத்தைக்கிளப்பிவெவ்விடத்திணையுமிழு
மட்டமாநாகமரற்றிடவெடுத்தேயந்தரத்கழலிடைவீழும்
விட்டிலாமெனவம்மகத்துயரழலைச்சேர்ந்திடவிடுத்திடும்வேலை (கரு)

சதுமுகனவையின்முனமொருதினத்திற்சார்ந்ததக்ககன்றனைநோக்கி
யுததியிற்றுயிலும்பரனருள்குமரனுனக்குமுன்கிளைஞர்கடமக்குஞ்
சதிருறுசெனமேசயனெனுமரசன்சர்ப்பயாகத்தினைவிளைப்பச்
கதுமெனவந்தவ்வனலிடைமடியுங்காலமுற்றிடுமெனப்பகர்வான் (கசா)

அரசனங்கியற்றுஞ்சர்ப்பயாகத்தினனலிடைமடிந்திடாவகையீண்
டுரைசெய்வனதனைக்கேட்டியென்றயன்றன்மொழிகுவானுவமையின்முனிவன்
றருமமெய்ந்நெறியினுயர்சரற்காருதாரம்வேட்டவடனயணைக்கின்
மருளறுமெனவேதவிர்ந்துயர்விரதத்திவர்தவமருவுமந்நாளின் (கள)

பிறிதிணையிலாமனுயர்சரற்காருமரபினிற்பிதுக்களெல்லவரும்
பொறையுறுதவத்துப்பவித்திரனாகும்புண்ணியன்வைகுகானகத்தின்
மறுவிலாவவன்றன்மனைவியைவேட்டுமைந்தரைப்பயந்திடாவிடராற்
குறைவறவகல்பாழ்ங்கூவலினறுகிற்கொடியினைப்பற்றிநின்றனரால் (கஅ)

பாவமற்றிடவேயுயர்சரற்காருபழுவத்திற்றிரிகுவானகலுங்
கூவலினறுகிற்கொடியினைப்பற்றிக்குலைந்தழுபவர்களைநோக்கி
யாவர்நீரெனலும்யாங்கடாம்பிதுக்களெம்மரபினிற்சரற்காரு
பாவையைவேட்டங்கறனுறுசுதரைப்பயந்திடாதரற்றுவமென்றார் (ககூ)

இனலுறவவர்தாமியம்பிடத்தவத்தோன்யான்சரற்காருவென்றுரைப்ப
வினையறுபிதுக்களியாமுயும்படிக்குநீயினியரிவையைவேட்டுத்
தனயரையளித்தியெனவவர்வேண்டத்தன்பெயராகியேவயங்கும்
வனிதையானழைத்தவிடத்தினின்வந்தால்வதுவைசெய்குவனெனவகன்றான் (உ0)

ஆதலிற்றவத்தோன்பெயருறுமணங்குன்புத்திரியவளிணையில்லா
மாதவனழைத்தவிடத்தினிற்குறுகின்வதுவைசெய்குவனவன்றன்னு
லேதமற்றிலங்கப்பயந்திடுஞ்சுதனிவ்வினையினைக்களைவனென்றயனங்
கோதலுமகிழ்தக்ககன்மகளுடனுமுவமையில்முனியிடத்துற்றான் (உக)

சரியிலாத்தவத்தோன்மணந்திடாவகையாற்றக்ககன்மகடனைச்சுமந்து
பரவுகானகத்திற்றிரிந்திடுந்தினத்தின்பழுதகல்பிதுக்கள்வேண்டுகையா
லொருவருமிலாதவனத்திடையடைந்தங்குயர்தவத்திற்சரற்காரு
தெரிவைநீவருதியெனக்கரம்பிடிப்பச்சேர்ந்தவள்வணங்கிநின்றனளால் (உஉ)

சரியிலாவணங்கென்பெயர்சரற்காருசார்ந்தனனென்றிறைஞ்சிடலு
மருமறைமுனிவனவடனைமணந்தங்கருளியவத்திகன்றன்னைப்
பருவரலுறுதக்ககனினைத்திடநற்பங்கயன்றனைநிகரவன்றான்
விரைவினிற்செனமேசயன்முனரெய்திவிழுமியவாசிகளறைந்தான் (உங)

சுருதிநாவினனுய்த்துலங்குமத்திகன்றன்றாயனுயுயர்மனைநோக்கித்
தருதியான்வேண்டும்வரமெனவரசன்சதுமுகன்றனைநிகர்த்திடுவா
யுரைசெய்நீயவையையுதவுவனெனலுமுவமையிலட்டமாநாகஞ்
சுராபதியுடனிவ்வெரியிடையிறவாதருளுதிசுந்தரவென்றான் (உச)

சரியின்மாதவத்தோனிவையுரைத்திடலுந்தக்ககனுடன்விசும்பெழுந்த
மரவுகணமரர்க்கிறையிவர்மகத்தினழலிடையிறந்திடாதருளப்
பரிவினனிருபன்றனக்குநல்லுரைகள்பகர்ந்தவன்பழுவத்தினேக
வருமறைமுனிவர்நடத்திடுமகத்தையொழித்துயரரசன்வீற்றிருந்தான் (உரு)

சுரர்பதியெனவே துலங்கியசெனமேசயனெனுந்தூயவன்முனரி
னருமறைபுகலும்பராசரன்குமரனடைந்திடவவனடியிறைஞ்சித்
திருவினாயகன்றனவனியின்பாரந்தீர்ப்பதற்கெய்தியசரிந்துங்
குருகுலத்தவர்செய்யமர்விலக்காதகொடுவினையுனக்குறுமென்றன் (௨௬)

மதிகுலவரசனிவைமொழிந்திடலுமறுவிலாவியாசனீதறைவான்
விதிவலியெவர்க்கும்விலக்கரிததனால்வேந்தவுன்றனக்குமிவ்விடத்தி
னதன்மமுற்றிடவேவரும்பிரமகத்தியகற்றுதியெனமொழிந்தகல
விதனமுற்றரசனியற்கையைத்தவிர்ந்துவெருவிமன்வேள்விசெய்தனனால் (௨௭)

அருமறைமுனிவர்மருங்குறமகத்தைநடத்திடுமரசர்கோனனலோன்
மருவுமந்திரத்தைசெவித்தவனவணின்வரித்தவந்தணர்தமிலொருவ
னிருவிழிகுமிட்டிச்சோருறுமவன்றனெழுந்திடத்தானெறிதருப்பை
விரைவினினுரத்தினழலுறுமயிலாய்விழுந்திடமரித்தனன்மாதோ (௨௮)

துயிறுறந்திடவேயெறிந்திடுந்தருப்பைதுலங்கியவயிலதாயுருவ
வுயர்மறையறைவோன்மரித்திடநோக்கியுளைந்தமன்விதிவழியதனைக்
கயிலையினுறுமவ்விடையவனெனினுங்கடந்திடவரிதுயானறியா
வியல்புறுமுனியையிகழ்ந்தனனென்றிவ்வினையெதிற்றீருமென்றிசைத்தான் (௨௯)

நிருபர்கோன்விழியாலடைபிரமகத்திநீங்குமாறேதெனவுளைந்து
பருவரலுறும்வேலையினிடைவியாசன்வருதலுமவன்றனைப்பணிந்தே
யருள்செறியயனைநிகர்த்திடுதவயானறிவறப்பகர்ந்தசொற்பொறுத்திவ்
விருபிறப்பாளன்வதையொழிந்திடுமாறியம்பெனமுனிவனீதறைவான் (௩0)

அரசவுன்குலத்தோர்சரிதையாகியபாரதத்தினையடைவுடன்கேட்கிற்
றுரிதமாயிவணினடர்பிரமகத்திதொலையுமென்றறைந்திடநிருபன்
சரியிலாக்கதையைமொழிந்தருளெனவேசாற்றிடவயங்கியவியாசன்
பரிவுடன்வைசம்பாயனைப்பகரென்றுரைத்துயர்பழுவத்தினடைந்தான் (௩௧)

உவமையில்வியாசனிவையெலாமருளியுயர்ந்திடும்பழுவத்தையடையத்
தவர்களெண்வைசம்பாயனையரசனிறைஞ்சியிச்சரிதைசாற்றெனலும்
பவமகற்றியபாரதத்தினையாதிபருவமேமுதன்மனாவிந்தம்
புவியையாடருமனனுசரோடடைந்ததிறுதியாய்முனிபுகன்றனனால் (௩௨)

பழுதகல்வைசம்பாயனுமுனிவன்பாரதமறைந்திடவிதுவின்
வழிவருநிருபன்மகிழ்வுடன்கேட்டுமருளுறவடர்பிரமகத்தி
யழியவேதுதித்துப்பரமனிப்பாரினமர்ந்திடுதசவவதார
விழுமியசரிதையியல்பினைவிரித்துக்கூறெனமாதவன்விளம்பும் (௩௩)

விரைபுரைமலரோன்முதலதாயெவர்க்கும்வெளிப்படாமூர்த்தியாய்விளங்கும்
பரமனேனார்கயத்தின்கராவினாலலைந்தபகடுயர்மூலமென்றழைக்கு
முரைமுனரவணினுதவியவிடங்கரதுதனைத்துணித்துயர்கதியை
யிருளறுகரிதன்னுருவமாயிலங்கவிடுத்தனனிமையவர்போற்ற (௩௪)

**வேறு.** ஆலமெனும்வாளவுணராலயன்மெலிந்து
கோலமுறுவேதமுமிழந்துகுலைவெய்த
வேலையினெழுந்துமதுகையிடவரும்வீடச்
சேலெனவடைந்தருள்செய்தான்முனிவரேத்த (௩௫)

மாமலையைவாருதியுளேநிறுவிவானோர்
காமருறுவாசுகிபிணித்திருகரத்தாற்
றாமிசையவாங்கியிடுநாட்டரணிதாழா
தாமையெனமேவுமிறையாயமுதளித்தான் (௩௬)

வானவரிடர்க்கடல்கடந்துமகிழ்வெய்த
வினைமுறுபொற்சணனுரென்புகளொடித்தே
யூனுமுயிருங்குலையவேசமர்செய்தோங்கு
மேனமெனவையகமிடந்தருளினுனல் (௩௭)

ஆயுமறைநன்மதலையண்டமுலகியாவு
மாயனுளனென்னமதியாதெழுவின்மோதுந்
தீயவனுரம்பிளவுசெய்துநனிசீறி
மீயுயர்மடங்கலெனமேவியருள்செய்தான் (௩௮)

ஏமமலிவாளவுணனீயுமடிமூன்றிற்
றீமையறவோரடிசொடேசெகமளந்து
பூமனுலகோரடிபொலிந்திடவுயர்ந்த
வாமனனுருக்கொடுவயங்கியிடர்தீர்த்தான் (௩௯)

அரசரிருபத்திரொருகாலறவறைந்து
கரையிலுவரிப்பெருமைபோலவிசைகாட்டுந்
திரைசெய்குருதிப்புனலின்மூழ்கினிகர்தேவன்
பரசுபொலிபாணியெனவேபடியின்வந்தான் (௪௦)

மன்னனசன்மைந்தன்மகனுகிமலர்மேவு
மின்னினைமணந்தருளிமீளநகர்மேவி
யன்னவளொடுங்கொடியகானகமடைந்தே
யின்னல்செயிராவணனைவீட்டினனிலங்க (௪௧)

**வேறு,** துருவனுக்குயர்ந்தபதத்தினைக்கொடுத்துச்சோதிவேனன்புயத்தெழுந்த
பிருதுவாயவனிவிரைதரவியற்றிப்பிறங்கலையொதுக்கியேசமனுய்த்
தரையினைத்திருத்தியிடவனுய்ச்சனித்துச்சதுமறைநெறியநாட்டித்தே
யரிதினவிரதமுருக்குமாங்கதற்குமம்பரீடனுக்கும்வீடளித்தான் (௪௨)

**வேறு.** பூவினினுறைவோன்றந்தைபூமியின்பாரநீக்கத்
தேவகிவயிற்றிற்ரேன்றச்சிறந்திடும்வசுதேவன்முன்
பாவியாங்கஞ்சன்முனிறுட்பகரசரீரிசொல்லா
லாவியைச்செகுப்பனென்னுவாயர்கோன்மனையினெய்தி (௪௩)

இந்திரைகொழுநன்றன்னையிருகையானிலத்தின்வைத்து
நந்தொளிர்கரத்தசோதைநல்லிருளதனிற்பெற்ற
வந்தரிதன்னைக்கையாலேந்தியேவரசன்மீண்டு
சிந்தையினிடருற்றெய்தித்தேவகிகையினீந்தான் (௪௪)

தூயவந்தரியாமங்கையழுதிடத்துலங்குகின்ற
வாயவருங்கைபெற்றுண்மகளெனவுரைத்தலோடுந்
தீயவனணுகிப்பாரினடிக்குமுன்னுரத்திற்சீறி
மாயையாமங்கைகாலாலுதைத்துவானேகிச்சொல்வாள் (௪௫)

கஞ்சவுன்னுயிரைக்கொல்லக்கடலினிற்றுயிலையோவி
யஞ்சனவண்ணன்மண்ணினவதரித்தனனென்றேவான்
விஞ்சுமம்பிகைதான்கூறிமறைதலும்வெகுண்டுசீறி
வஞ்சகனியற்றுமாயமன்னகேளொன்றுசொல்வான் (௪௬)

**வேறு.** அந்தமிகுநந்தன்விழைவெய்தவருமாயன்
வந்துநனிபாறயிர்நெய்வாரியெனவீசிச்
சிந்தைகளிகூறவெழில்சேரும்வடிவாய
மைந்தனெழில்கண்டுயரசோதைமகிழுளின் (௪௭)

ஆயர்பதிமேவியவசோதைமெலிவெய்த
மாயமுயல்சஞ்சன்விடுவஞ்சனையில்வந்த
பேயின்முலையுண்டுயிர்பிறித்தருள்செய்தானற்
றூய்மையுறுமாதவர்துதிக்கவருசோதி (௪௮)

மகுடமணிமின்னவுயர்கஞ்சன்விடுமாயச்
சகடுருவமானநிருதன்னுடறகர்ந்தே
துகடறவுதைத்துமகிழ்சோதிசெயும்வீரப்
புகடரணிவிஞ்சியசெயல்புகலலாமோ (௪௯)

காலெனவளைந்துககனத்துறவெழுந்தே
யாலமெனவானுயருவானவணரற்றி
நீலவரைபோலுடனிலத்துறவுதைத்தான்
பாலனெனமெய்யொளிகொள்சோதிபரமேட்டி (௫௦)

மிடைந்துமணியாரமவிர்மேனியுறுசாய்கை
படிந்திவர்பளிங்குநிழல்பற்றுவமெனத்தா
னடைந்துகையின்வந்திலையென்றுநலசோதை
யுடன்றொடரவிம்மியழுதோடுமிறைமன்றே (௫௧)

குக்குடமெய்யானகொடியோன்குருதிவாயிற்
கக்கவுயிர்தெற்கணுறுகாலனிடையொல்லைப்
புக்கிடவெடுத்தொருகையாற்றலைபுடைத்து
விக்கிரமம்விஞ்சநகைசெய்தலன்விளங்க (௫௨)

சதங்கைமணிநூபுரமிழற்றவருதாள்கள்
விதம்பெறநடித்தருளியன்னையிடும்வெண்ணெ
யிதம்பெறநுகர்ந்திரதவாயுளொழுநன்னீர்
ததும்பவொளிர்சோதிபினர்ச்செய்தறிதியென்றான் (௫௩)

கண்ணனெனவேயுரைசெய்தோழர்களிகூற
நண்ணிமனைதோறுமுறிதாவிநலன்மிக்க
மண்ணினுடன்விண்ணினையுமுண்டவயிறார
வெண்ணெயைநுகர்ந்தருளினான்விமலன்மன்றே (௫௪

முத்தினவிர்சுட்டிபிறைநெற்றியினின்முந்தி
மத்தினணியுந்தயிர்நெய்வாரியெனவோட
வொத்தியுயர்தாழியையுடைத்தனைதன்முன்ன
ரெத்திநகைசெய்தனனிலங்கியுறுமெம்மான் (௫௫)

வேறு. குதிதாண்டியோடிமனைமேவுகொண்டறிருமேனிகண்டுகுளிரத்
ததிபாண்டன்முந்தியெதிரேதகைந்துதருமுத்தியின்றுதருவா
யுதவாதிருக்கினுனைநானசோதைகரமீதினுய்ப்பனெனவன்
றிதமோடுதாழியெழுநாலகங்களுயவீடளித்திலகினான் (௫௬)

வேறு. பரிதியொளிபோலுறுசிலம்பினொலிபம்பச்
சுருதிமொழிதேடரியதாளிணைதுலங்க
மருதுகளிரண்டுமிறவேதவழுவண்மை
கருதுமவர்நற்கதிகலந்துறுதவத்தோர் (௫௭)

கருமையுறுமேனிதரளத்தினவிர்காட்ட
மருவியுயர்கிண்கிணிமருங்கிடைதயங்க
வுரலுருளவேழுறுவலோடுதவழ்சோதி
யரவணையின்மீதுதுயிலாதியவனையா (௫௮

பெற்றநிறைவீதியுறுபேதையர்கள்கையின்
பொற்றளிரையொத்தெழில்கொள்பூவலைகள்பார்மே
லிற்றுகவுடைத்தவரியற்றுசிறுசோறுஞ்
சிற்றிலுமழித்துநகைசெய்தனனிலங்க (௫௯)

**வேறு.** சென்றேவதைத்துவருவாயெனுஞ்சொல்சினமிக்ககஞ்சன்மொழியக்
கன்றாகிவந்துதிரிவான்மடிந்துவிழவேகரத்தினிவறிக்
குன்றுதுயர்ந்தவிளவொடுமெண்ணில்கனிவீழவீசுகுழக
னன்றுனைமூலமெனவந்தவாதியுயராலிலைக்குளமர்வான் (௬0)

கொள்ளாதவஞ்சமவைசெய்தகஞ்சன்விடவங்கடைந்தகொடியோன்
றுள்ளாவிளங்கன்றுடனேதொடர்ந்துவிளையாடுசோதிதனைவா
யுள்ளேவிழுங்கவனலாகமீளவுமிழ்போதின்மாயவுருவாம்
புள்வாய்பிளந்துவதைசெய்தசோதிபுவனங்கொளண்டமமர்வான் (௬௧)

பொற்பாயவாவினிரைதுன்றுமாயர்புதல்வோரனேகர்புகுத
வெற்பானமேனியுயர்வானிறேயவிரிவாய்விழுங்கநிவருஞ்
சற்பாசுரன்றனுடல்விண்டுபோகவவன்வாய்பிளந்தசதுரன்
கற்பாவையாகியெழுவேமிதித்தகடல்வண்ணனானபரமன் (௬௨)

யமுனாநதிக்குண்மணலேகுவால்செய்திடமானசோலைதனிலே
தமரானவாயர்தமையோரனேகர்சமையோதனங்கள்கறிகாய்
சமனாகவங்கைதனிலேயமைத்ததயிரோடருந்துநனியை
யிமையோர்துதிப்பவவர்வாய்திணித்துவிளையாடினானெம்மிறைவன் (௬௩)

இனிதாகிவேலையிடையேதுயின்றவிறைபாரின்ஞானமிலனோ
வெனவேநினைந்தவயனாயர்கன்றினிறையோடும்மேகவெழில்சேர்
மனைதோறுமேவிநிறையாவைநத்திவருகன்றுமைந்தர்திரளோ
ரனைவோருமாகியொருகாலமாகவமர்வானுமாதிமுதலே (௬௪)

பலவாகியேகவுருவாயெழுந்தவுயிர்தோறுநின்றபரம
னிலையாண்மைகண்டவயனாயர்கன்றினிரையோடிழிந்துநெடியோய்
சிலையாழிதண்டுவளைவாடயங்குதிருமார்பவென்றுசிறியேன்
றொலையாதிழைத்தபிழைநீபொறுத்தியெனநின்றசோதியவனே (௬௫)

**வேறு.** ஏனநண்ணுமிராவணனேவலாற்
கானினண்ணுங்கடியமாரீசனு
மானையன்றுவதைத்திடுவான்பின்னோன்
றேனுகன்றனைச்செற்றனன்சேர்ந்தரோ (௬௬)

**வேறு.** திரைவீசுபாணிநிறையாறுதனுட்டிரளாகமாதர்துதிசெய்
துரவோயளித்தியுயிரென்றுகூறவுயர்வானமீதினுறைவோர்
தருவேயலர்ந்தமலர்தூவமாழையுறுதண்டைதாளினொளிர
வரவானகாளிபடமேனடித்தவவனாழிமேவுமிறைவன் (௬௭)

அனலாயெழுந்துநலிபோதினாயரவர்மாதர்சண்டுவெருவப்
புனன்மேவுகொண்டலெனுமேனியண்ணல்விழிநீர்புதைக்கவெரிபோ
மெனவோடுமாவிதடுமாறவோடியிருகண்கண்மூடவெதிரக்
கனலேநுகர்ந்தகரியோனிலங்குகமலாசனப்பெண்மகுணன் (௬௮)

**வேறு.** பொலன்கழற்றெரித்தேவென்றபொற்புயத்
திலங்குநாஞ்சிலிறையைக்கொண்டேகிய
பெலம்பன்மாண்டிடமோதுவித்தான்பின்னை
கலன்கண்மன்னுங்குயங்கலந்தானரோ (௬௯)

நாரமூழ்கியநாரதன்மன்னனாய்ப்
பாரையாண்டுசிறுவருண்டாய்ப்பகை
வீரராலிகல்வென்னிடக்காட்டினா
னாரியன்கழற்பூட்டியனாகுமுன் (எ0)

வேறு. இரைந்தேகுநாரமெதிரோடிமண்டயமுனாநதிக்குளியல்பாய்க்
கரைந்தேகுதாதினுடனேடுதுற்றகழுநீர்நிறைந்துகடல்போல்
விரைந்தேயெழுந்தபுனலாடுமாதர்மிகநாணவாடைகொடுநீள்
குருந்தேறிநின்றுநகைசெய்தசோதிமலர்மேவுமங்கைகொழுநன் (எக)

கமைசேருமாதர்திரணக்கிளத்தர்கனகக்கலிங்கமுதவென்
றிமையோர்துதிக்குமிறையோடுகூறவிருகைகொடேதொழுமெனத்
தமர்நாணொழிந்துதொழுமாதருக்கன்றணிகூறைதந்தருளினா
னுமைமாதுநாதர்கையினேர்கபாலமொழிவித்தவாதிமுதல்வன் (எஉ)

இடைமாதரெந்தமரபேயழித்தவிவனைப்பிணிப்பமெனநீள்
படியார்குருந்தின்மிசையேறிநின்றுபரமன்கைபற்றியிழியுந்
துடிபோன்மருங்குமடமாதரார்கடொழுமெம்மைமாயவெனவே
முடிமாதர்பாதவிணைதோறும்வைத்துநகைசெய்தனன்முடிவிலான் (எங)

வேறு. நந்தன்மைந்தனுக்கன்னங்கொண்டேநடந்
தந்தணாளர்கடேவியராங்கெய்த
வந்துகொண்கன்றடுக்கவோர்மாதராள்
சிந்தைமாலடிசேரக்கதிபுக்காள் (எச)

வேறு. ஆவுக்கிரங்குமவரீயுமன்னமமலனருந்தியுறவெங்
கோவத்தினோடுமகவான்விடுக்கவருகொண்டன்மொண்டுபொழியக்
கூவிக்குலைந்துதிரளாயர்கன்றினொடுகோவுமுய்யவருளிக்
கோவர்த்தனத்தண்வரைகொண்டுமாரிதடைசெய்தனன்கலைகொள்வான் (எரு)

அருணனெழுந்துவருமுன்னர்நந்தன்யமுனைக்குண்மூழ்குமளவின்
முரணுந்துமாழியரசன்முனிந்துதன்மாளிகைக்கண்முடுகக்
கிரணங்கொளாழிவளைகைகொடேநற்கெருடன்றன்மீதினெறிபோய்
வருணன்பணிந்துதருதாதையோடுநகர்வந்தனன்மறுவிலான் (எசு)

ஆயோர்கண்மாதரனைவோருமேகியளவில்லமாலினைய
வோயாதுபாயுமுளைசித்ரகாயமுரகங்கள்கோவோடுறநற்
காயாவின்மிக்ககவினோடலர்ந்தகமலங்கொண்மேனிதிகழ
வேயூதினானெண்மலர்தூவிவிண்ணினுறைவோர்கண்மேவிமகிழ (எஎ)

வேறு. நந்தன்மைந்தன்குழலிசைநண்ணவே
முந்தியேகளிமொய்குழன்மாதினை
வந்தங்கன்னைதடுத்திடமாய்ந்துயர்
சிந்தையந்தியளாய்க்கதிசேர்ந்தனள் (எஅ)

தூயமாதர்தருவல்புரிந்துற
மாயமாகிமறைந்தொருமாதின்மே
னேயமாகுவபோனெறிவிட்டகன்
றாயரேறுபினும்மவர்முன்னின்றான் (எகூ)

கடமடுத்தவெண்கோட்டுக்களிற்றினை
யுடனெடுத்திமையோர்மலருந்திடக்
குடமெடுத்துநடித்தனன்கோபர்முன்
கடலிடைத்துயில்கொள்ளுங்கரியவன் (அ0)

அரவினன்மணிநீலமோடாரமும்
விரவுநல்லணிமார்பின்விளங்கிட
மருவுமாதர்மகிழ்ந்துகைபற்றநற்
குரவைகோர்த்தனன்கோவிந்தன்முனரோ (அக)

எண்டவத்தினரெங்கணுந்துள்ளவே
பண்டர்மாதர்களானந்தமாயுற
வண்டுதுன்னியமாலையலைந்தெழச்
செண்டுகைக்கொடுதேவனிலங்கினன் (அஉ)

ஒசிந்தநுண்ணிடைமேற்கலிங்கம்முற
வசைந்துமென்னடையாயர்தம்மாதரா
ரிசைந்தநற்பனிநீர்கொணர்ந்தேத்தநல்
வசந்தமாடினன்மாதவன்முனரோ (அஙு)

வேறு. வனமேவரர்க்குமகிழோதனங்களணியாடைமாலைபலவு
மினமாயெழுந்தபொதுவோர்கள்கூடியிடுவேலைநந்தன்வெருவ
முனிவோடுவாயினிடையேவிழுங்கிமுடுகிக்கனன்றவரவின்
றுனியானசாபமவைதீரமெய்யினடிவைத்தனன்றுணையிலான் (அச)

அப்பிற்பிறங்குமலையென்னமேருவரையென்னவாலவிடமே
யொப்பென்னமூழ்ந்துமிடவங்களேழுமடியக்கரத்தினுதறித்
தப்பின்றிமெய்கொடருமங்கணீதியுயர்கும்பகன்றனயளா
நப்பின்னைதன்னையிமையோர்துதிப்பநலமாய்மணந்தனனரோ (அரு)

வேறு. தூவியன்னங்கடுன்னியசோலைவா
யாவொடாயரரந்தையுற்றேயழப்
பாவகாரியக்கஞ்சன்பணித்திடு
மாவின்வாய்பிளந்தானுயர்மாதவன் (அசா)

உக்கிரத்துறுகஞ்சனுரையினு
லக்குரூரமன்னுயர்கடம்பதி
புக்கபோதுபமேதசம்புகன்றனன்
சக்கரக்கைத்தயாபரனுனமால் (அஎ)

மருதுருட்டியதாளினன்மாநதிப்
பொருமுனீரக்குரூரமன்போயதிற்
சிரமமிழ்ந்துறமூழ்கிடத்தேவன்வாழ்
பரமனற்பதங்காட்டினன்பண்புற (அஅ)

சதுரன்முமறைக்கண்ணினன்சாமளா
மெதிரிலாமெய்யனேமூலகாள்பவ
னதிருமும்மதவானைநிரம்பிய
மதுரைமாநகரெய்திவயங்கினன் (அகூ)

தூசின்மையகல்விப்பவன்றற்குண
வாசகத்தினின்மற்றவனிற்றிரு
நாசமாகவதைத்துநல்லாடையை
யீசன்சுற்றிமற்றோர்கட்குமீந்தனன் (கூ0)

ஆலமாகியகஞ்சனணிநகர்
பாலினூர்வண்ணரசினுெய்தியே
மாலைசாற்றினன்வைகுந்தமேறிட
நீலமேனிநெடியவனீந்தனன் (கூக)

இகழ்ந்துபோசனையிக்குவிலோனெனப்
புகழ்ந்துமாதவன்றுளிணைபோற்றியே
மகிழ்ந்துகூனியுதவியமாசுணச்
சுகந்தமெய்யினணிந்தனன்சுந்தரன் (௯௨)

ஊனிவந்தவுருவமில்கூனியைத்
தாணிவர்ந்துதடக்கைகளாரவே
கூனிமிர்ந்தெழில்கொள்ளத்தழுவினான்
வானிவர்ந்தளந்தேயருண்மாதவன் (௯௩)

சாபமெய்தியதாதையைச்செற்றவன்
சாபமெய்திமுறித்தனன்றுழ்விலாக்
கோபநாதன்முதற்குணனிந்திர
கோபநேரதரத்திருக்கொண்கனே (௯௪)

போதகந்தெரியாதபுரவலன்
போதகந்தனைப்பொன்றப்புடைத்தனன்
போதகந்தொறும்வெண்ணெயுண்டேநலப்
போதகந்திகழ்பொற்கொடிமார்புளான் (௯௫)

சாணூரக்கடுமுட்டிகர்தம்முயிர்
சேணெருக்கிவதைத்தனன்செம்பொனூர்
தூணெருக்கியெழுந்தவுணன்சுடர்ப்
பூணெருக்குரங்கீண்டருள்புண்ணியன் (௯௬)

வேறு. மதுரையெய்திவரைவில்லிறுத்துமகமேருவேயிவர்செய்மும்மதத்
தெதிர்மலைந்தகரிகோடிறப்படியினெதிருமல்லரிருவருமுருண்
டுதிரவேதலைகளுடல்சிதைந்துதிரமோடவென்புதுகளுறவெழுந்
ததிரதாதிமுதலோர்மடிந்துவிழவையன்வெஞ்சமர்விளைத்தனன் (௯௭)

தங்கமன்னியபசும்பொனூலவிர்கொடரளமாளிகையின்மீதுயர்
சிங்கம்விஞ்சவுயராதனத்தின்மிசையேறியெண்டிசைகடிகழவே
யிங்குவந்தகணனெங்குமாகியுளனேதுமாயமிதையெனவயர்ந்
தங்கணூந்துயிர்கரைந்தகஞ்சன்மனமஞ்சமாயனவனெய்தினான் (௯௮)

கண்ணடங்கவிடமேதுடிக்கமதுராபுரிக்குளமர்காவலன்
விண்ணிடங்கொளநிவர்ந்தமாடமிசைமேவியேயுடல்வெதும்பியே
யுண்ணடுங்கவமர்கஞ்சனூருதனிநேரிமைப்பின்முனமுற்றனன்
மண்ணிடந்துபினுமுண்டுமிழ்ந்தளவுகொண்டுநின்றருளுமாயவன் (௯௯)

வந்தநீலநிறவண்ணமாயவனைவஞ்சநீவருகையேதென
வெந்தையோடெனதுதாயையுஞ்சிறையிருத்துமாதுலனுநீயெனச்
சிந்தைவேவவிருகண்கனற்கொளுவவிதிரும்வாளொடுசெருத்தெழ
முந்தியேமுடிபிடித்துமற்றவனைமோதினனுயருமாதியோன் (௧௦௦)

கழலவாரமணிகழலநீள்விழிகள்கழலவாகுபுரிகழலவாள்
சுழலவேகுழைகள்சுழலவாகமடிசுழலமாமுடிசுழற்றியே
கழுகுகூளிகொடுமுடுவல்சூழவெழுகுருதிவாயொழுகுகலனுயி
ரழியமார்பினிடையழகுகொண்டமுகில்போலவச்சுதன்மிதித்தனன் (௧௦௧)

சிந்துமாமனுடல்பொடியதாகவவன்மார்பினின்றதிருமார்பனை
யந்தமாமுனிவரயனொடிந்திரனுமந்தரத்துமலர்சொரியவே
தந்தையானவசுதேவனுமனைவிதன்னொடும்மதலைதன்வயின்
வந்துமார்புறவணைக்கவன்னைமுலையுண்டனன்னுயருமாதவன் (௧௦௨)

கஞ்சனன்னைமகிழ்தாதைமற்றவர்கிளைக்குழாமவர்களிப்புற
மஞ்சனென்னவவண்வந்தமாயவனைமார்புறத்தழுவிமன்னவர்
செஞ்சொலின்னிரமுரைப்பவெஞ்செயிரகற்றுபோசனருள்சேயதாய்
வஞ்சமில்லவனைமுடிமிலைச்சியருள்செய்தனனுயருமாதவன் (௧௦௩)

வளமலிந்தவசுதேவனுந்தனதுமார்புறத்தழுவிமைந்தனுங்
களவின்வெண்ணெய்நுகர்கண்ணனுக்கவிர்கொள்கமலமாமலரின்முனிநிக
ரளவிலந்தணர்கள்வாசுதேவனெனநாமமோதியவன்றன்வளர்த்
துளமகிழ்ந்தெழின்முந்நூலணிந்திடவுவந்தனனெவருமொப்பிலான் (௧௦௪)

மதுரைமேவிமகிழ்மாயவன்முனம்வளர்ந்தவாயர்பதிதனைமறந்
துதவுநான்மறைகள்பலபுராணமுபதேசமீந்தருளுமுயர்தவர்க்
கிதமதாகவமர்குருவினுக்குமுபகாரமாகவெறிகடலின்வீழ்
மதலையோர்கடமைமுன்கொணர்ந்தருளினானுவப்பினொடுமாதவன் (௧௦௫)

கஞ்சனன்மனையின்மன்னுதேவியர்கடந்தையாகியுயர்காவலன்
விஞ்சுமாமவுலிமகதராசனுடனேவிளைந்ததுவிளம்பிட
வஞ்சமார்மருகனார்மடிந்ததனினெஞ்சுநொந்தெழுமறத்தினா
னிஞ்சிசூழ்வரையின்கண்வந்திடவெதிர்ந்தனனெதிரிலாவரி (௧௦௬)

இரண்டுபத்தினொடுமூன்றினக்குரோணியனிகமோடெதிருமகதனார்
திரண்டநற்பரிகடேர்களானைகள்சிதைந்துபோகவுயிரேபிழைத்
தரண்டுபத்தொடெழுபோருமிப்படியலைந்துபாறிடவளக்கர்போற்
புரண்டுசெங்குருதியோடவேயமரின்வென்றனன்புனிதமாயவன் (௧௦௭)

மகதராசனுடையக்கனன்றுமதியாதகாலையவன்வந்துதா
னகுதியோவெனையும்யாதவாவெனமொழிந்துநஞ்செனமுடுக்குமத்
தகுதியாலுவரியிறையளித்தநகர்தன்னின்மாசதுரங்கமும்
புகுதவேதனியெதிர்ந்தனன்கமலமங்கைமார்பிடைபொருந்தினான் (௧௦௮)

வந்தகாலையவன்மாரதங்கள்கரிமாவும்வீரருமடிந்திடச்
சிந்தியேயவன்முனோடிமால்வரைமுழைக்குட்சேரநகைசெய்தவ
னெந்தவாண்மைபடவிடையர்தங்கள்குலமெய்தினாயெதிர்நிலாயென
வந்தமாமலையினூடுதேடுமவன்முன்னிலாதவணடங்கினான் (௧௦௯)

வானுளோர்கண்முசுகுந்தனின்னைமதியாதெழுப்புமவனாருயி
ரானியாகுமெனவறையமால்வடிவினந்தமாபிலனுளமர்துயில்
வானையேகடிதினண்ணமாமுனிவினோடுகாலையவ்வஞ்சகன்
றனராவெனவழன்றுமோதிமடிவெய்தவேநகைசெய்தானரோ (௧௧௦)

துயிலகன்றமுசுகுந்தன்முன்னர்வளைதூயவாளிகதைசுடர்வில்வா
ளியல்பமைந்தகரநாலுமிர்திரையிலங்குமார்பமும்வயங்கிடச்
செயிரகன்றொளிர்கவுத்துவம்மணிசிறப்பமாமவுலிதிகழ்வுற
வயினதேவனடிபரவவேயொளிகொள்மாயவன்னணுகிநின்றனன் (௧௧௧)

வணங்கியாடுமுசுகுந்தனுக்கினியவாய்மைகூறிவரம்யானுனக்
கிணைந்ததேதருவனென்னலும்மிறைவவீடளித்தனமெனாதுநீ
சுணங்கனானவடியேனைவன்பிறவிதுய்க்கவெண்ணுவதடாதெனப்
பிணங்குமானவனையன்பினோடுமுயர்பிரமர்தாதையிவைபேசினான் (௧௧௨)

வதிரிகாச்சிரமமேவியந்தணர்கள்சனனமாயடைதிமேவிநா
னிதமதானவுயர்பதமுமீகுவனிருத்தியென்றரியியம்பவே
முதிருஞான்முடனெடியவாவரிமுராரிநீலமுகின்மேனிய
வெதிரில்சீதரவெனாமொழிந்துமுசுகுந்தனுமவணினெய்தினான் (௧௧௩)

கண்ணனோடைவிறலுடையசாலையவன்முடுகுமாறதுகருத்தெனு
நண்ணியேமகதராசன்மாநிலநடுங்கவந்தவன்முனுகியே
வண்ணமேசவரிவரையினேறுதலும்வன்னியிட்டனன்மலையின்வா
ழெண்ணிலார்புளிஞர்மடியமாநகைகொடேகினனிறைவனெதிரற (கக௪)

ஏகுநாரணமுராரிமால்பரமனீசன்மாதவனியாதவன்
மாகவானுறையுநகரின்வண்மைபெறவருணர்தந்ததுவராபதி
சாகரத்தினிவர்பன்னிரண்டகலநீளயோசனைகொடரணியின்
போகபூமியைநிகர்த்தநற்புரிபொருந்தினனமரர்புகழவே (கக௫)

மாமணித்திரள்வயங்குகோபுரம்வயங்குவேதிகைகண்மண்டபம்
வீமணத்தகுழலார்களெண்ணிலர்கண்மேவுமாளிகைகள்வில்லிட
நாமணத்தமறையந்தணாளர்கணலங்கொண்மாமுனிவர்நணுகமெய்ச்
சாமளத்தரியுறைந்தபொற்றுவரைசாற்றுவார்விபுதர்மகிழ்வுடன் (கக௬)

தும்பிவெம்பரிகடேர்கடுன்னவவிர்தோமரங்கள்கதைசுரிகைவா
ளம்புறைந்தசிலையாயுதத்தினர்களாழிபோணிறையவந்தரத்
தும்பருந்துமலர்மலியவேதிமிலையுறுமிமும்முரசொலித்திடச்
செம்பொனாருமணிமாடவீதிகள்சிறந்தபொற்றுவரைமாநகர் (கக௭)

அந்தநன்னகரடைந்துதூவியுறுமன்னமன்னவுயர்தேவகி
தந்தைசென்னியினுயர்ந்தபொன்முடிதயங்கநான்மறைதழைத்திட
விந்தைமல்கிடவையானனன்முனிவர்விபுதர்பூமழைவிடுக்கநற்
குந்திமைந்தருயவந்தவெந்தையரவிந்தைகொண்கனினிதுற்றனன் (கக௮)

இரேவதன்மகளொடேகியிங்கிவடன்றுயகனெவணியம்பெனச்
சரோருகன்னைதுகுலத்துளானெனவிழிந்துநற்றுவரைசாரவே
யராவுருத்தவிருவோனிரேவதிகழுத்தினிட்டலமிசித்தவண்
விராவிடக்கடியலங்கல்சூடுமணமேவியங்கினிதிருந்தனன் (கக௯)

**வேறு.** இரேவதியுடனேதாலகேதனனின்பமெய்தச்
சராசந்தனுருக்குமன்பொற்சாலுவன்சேதிராச
னராமுனோர்கருப்பைபோலப்பாறிடவமரின்வென்று
முராரிசீர்விதர்ப்பன்பெற்றமுண்டகமின்னைவேட்டான் (க௨0)

அன்றியுமெண்கின்வேந்தன்பயந்திடுமன்னமன்னுண்
மன்றலரளகபாரச்சத்தியவாமைவானி
னென்றருள்புதல்விவிந்தைபத்திரையெதிரொன்றுரை
வென்றிடுங்கவுசலன்றன்மகளொடும்வேட்டானன்றே (க௨க)

**வேறு.** சரியிலவான்வயங்குஞ்சலசரமதனைத்தனுவுமிழ்சரத்தினலறுத்து
மருவமரளகவிலக்கணையென்னுமடந்தையைப்புணர்ந்தபின்னரசன்
சிரசினைத்துணித்தங்கவணிடுசிறையைத்தீர்ந்திடுமரசர்கள்பயந்த
தெரிவையர்பதினாறுயிரத்தொருநூற்றுவரையும்வதுவைசெயதனனால் (க௨௨)

உரனுறுநரகன்கவர்ந்திடுகவிகையொளிகொளுங்குண்டலமுதலாய்ச்
சுரர்பதிநகரினடைந்தவன்கரத்திற்றுலங்கிடக்கொடுத்திருந்ததற்பின்
மருவறவயங்கும்பாரிசாதகத்தைவண்மையார்கலுழன்மேல்வைத்துச்
சரியிலாதிலங்குஞ்சத்தியவாமைமுன்றிலிற்றயங்கிடப்பதித்தான் (க௨௩)

சரியிலந்தணனைவதைத்துமுன்படைத்துச்சார்ந்தகண்டாகருணன்முன்
விரைவினினுசனுடன்கதியடையவருளியேவிடையவன்வரத்தா
லரியுருத்தரிக்கும்பவுண்டரன்சிரமுமறவருகாசிமன்றலையு
முருளவேதுணித்துச்சுதக்கணன்விடுத்தகிருத்தியோடவனையுமுதிர்த்தான் (க௨௪)

அரிவையர்திலகவுருப்பிணிமுதலோரளித்திடுஞ்சுதரெலாம்வயங்கி
நிருகன்வெஞ்சாபமகற்றியேவாணன்புயங்களைநேமியாற்றுணித்து
வரைநிகர்மகதன்வலனறச்சாயைவகிர்ந்துவீமன்றனால்வதைப்பித்
தரனருள்வரத்தாலுயர்ந்தெதிர்ந்தடர்ந்தவங்கிசடிபிகரைச்செற்றான் (௧௨௫)

தருமன்வேள்வியினிலக்கிரபூசைதடுத்திடுஞ்சேதிபராசன்
சிரசினைத்துணித்துச்சாலுவன்றலையைச்சினத்துடனறுத்துஞ்சேலை
யரவுயர்துவசனனுசனங்குரியவழைத்திடுந்துரோபதைமருங்கின்
மருவியவாடைவளர்ந்திடவருளித்தந்தவக்கிரனையும்வதைத்தான் (௧௨௬)

அரவுயர்துவசனியற்றும்வஞ்சனையாலரசினையிழந்துமாவனத்தின்
மருவுபாண்டவர்தம்மிடரினையொழித்துமற்றவருரையினாற்கண்ணில்
புரவலன்சுதன்பாற்போந்துநாடிரந்துலைவனாய்ப்புரந்தரன்சுதனுக்
கிரதமூர்ந்தவன்றான்களித்திடக்கீதையியம்பியுமுருவுகாட்டினனால் (௧௨௭)

திரிபதைசுதன்மேற்றிகிரியையெடுத்துத்தியானும்பகதத்தன்விடுக்க
வருபடையதனையுரனிளித்திலத்தின்வலமதாய்வயங்கிடவேற்றுச்
சரியிலாச்சதாயுதலைசிதைந்திடவேவயன்கதைதன்னெழிற்சிரத்தி
னுருமெனவுறவங்கியற்றிவெண்சங்கமூதினானென்னலர்மடிய (௧௨௮)

சுரர்பதிசுதனங்கியின்விழுந்திடாமற்சுடர்விடுதிகிரியையேவி
யிரவியைமறைத்துச்செயித்திரதன்றன்றலையிறும்படியவணியற்றிப்
பரிதிதன்குமரன்றொடுத்திடுமுரகம்பழுதுறப்படியிடைத்தாழ
விரதசில்லியினையழுத்தியங்கவன்றானிறந்திடும்வகையெலாமிழைத்தான் (௧௨௯)

உரகேதனனைச்சமீரணன்புதல்வன்வதைக்கத்தன்னூருவிற்புடைத்துக்
குரகதத்தாமாவபாண்டவமெனவேகூறியசொற்பழுதாகத்
தரையினிற்படியுங்கருவினுன்றந்தைசனித்திடமிதித்துயர்குசேலன்
றருதருப்பணத்தைநுகர்ந்தவன்றனக்குச்சரியிலாவிபவமுங்கொடுத்தான் (௧௩௦)

சதுமறைநெறியாலினையில்வைதிகன்றனயரைவைகுந்தத்தெய்திக்
கதுமெனக்கொணர்ந்துமுனிவர்சாபத்தாற்கடலிடையெழுந்தகோரையினா
லெதுகுலமடியும்வகையினையியற்றியெதிரிறன்மீதெயுங்கிராதன்
சதமகனகரிற்சரீரமோடெய்திவயங்கிடச்சாற்றினன்மன்னோ (௧௩௧)

தாருகன்கொணர்ந்தவிரதமேல்வயங்கித்தன்சரீரத்துடனெய்தி
வேரியங்கமலன்முதலினோர்துதிப்பவிரசைமாநதியினையொருவிப்
பேரொளியாகியுயரும்வைகுந்தப்பதியினெம்பிரானமர்ந்தனனென்
றார்வமோடுரைப்பவரசனுண்மகிழ்ந்தங்கிறைஞ்சிடமுனிவனுமகன்றான் (௧௩௨)

பாரதமுதலாவரிகதையெவையும்பகர்ந்திடுமுனிவனேகியபின்
மாரதர்வணங்கவுலகினையாண்டுமகம்பலசெய்துமாதானம்
வாரிதன்கரத்தினுகர்ந்திடுமுனிநேர்மறையவர்க்கருளிநல்விசயன்
சாரதியானவிறையினைமறவாதெழிற்செனமேசயனமர்ந்தான் (௧௩௩)

அரிதிருக்கதையாமமிர்தினைச்செவியிற்பருகிநல்லானந்தமுறநீ
டரையினிற்செங்கோலோச்சிநற்செனமேசயன்றவர்மகிழ்ந்திடவாண்டு
சுரர்துதித்திடவவ்வரசினைத்துறந்துதுலங்கியமுனிவர்கள்வியப்ப
மிருகமார்வனத்தினடைந்துசெய்தவத்தான்விமலன்றன்கதியினையடைந்தான் ( )

செனமேசயப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௧௨௪.

# கஙக-வது கர்க்கிப் படலம்.

ஆழிசொடுத்தம்புயமின்னிருந்தனளொன்றரியறைய
வாழிகடந்திலங்கைகநகரரசனுயிர்களைந்தபின்ன
ராழியினுலலரியவிரகற்றியகிபழுதுறவே
யாழிநிலத்தழுத்திவிசயற்கருண்மாலடிபணிவாம் (க)

வேறு. உவமையில்செனமேசயனேங்கியே
யவனியாண்டபினரசாளுவர்
பவமில்சூதபகர்ந்திடுநீயெனச்
சவுனகன்மொழியவவன்சாற்றுவான் (உ)

அரந்தையற்றுலகாள்செனமேசயன்
புரந்தபூமிபுரஞ்செயனென்பவன்
றிருந்தவாண்டுதிகழ்பவன்மந்திரி
மருந்தைநேர்வராகச்சுதனுமரோ (ங)

தூயவராகச்சுதன்றருசூநுவாந்
தியனுஞ்சுகனல்லறஞ்சேர்கிலான்
சாய்விலாதபுரஞ்செயன்றன்சிர
மேயெனுமுன்னறுக்கியெறிந்தனன் (ச)

விருத்தனுயபுரஞ்செயவேந்தனைத்
துருத்தனுய்வதைசெய்யுஞ்சுகன்சுதன்
பிரத்தியோதனனுகும்பெயரினே
னருத்தியாயரசாண்டனனுமரோ (ரு)

வேறு. அறனிலாப்பிரத்தியோதனன்சுதனுமவமுறுவிசாகயூபன்றன்
மறனுறுமவன்சேய்நந்திவர்த்தனமன்வருடமுந்நூற்றுமுப்பதின்மேற்
பறையுமெண்வருடம்படியினையாண்டானவன்மகனேசிசுநாபன்
றிறலுறுமவன்றன்செம்மலோர்காகபருணனுய்த்திகழ்வுறுவோனே (சா)

கவினுறுகாகபருணன்கான்முளையேகாட்சியார்கேமவன்னன்ற
னவையகலவன்சேய்கேத்திரசனன்மற்றவன்சுதனல்விதிசார
னவமறுமவன்றனருளியபுதல்வனரதசத்துருவவன்செம்மல்
பவமறுபீதனவன்பயந்திடுவோன்பழுதிலாவஞ்சயனுமே (எ)

அஞ்செயன்புதல்வன்நதிவர்த்தனனுமவன்சுதன்மகாநந்தியானேன்
விஞ்சிடுமிவர்கள்வருடமுந்நூற்றேடறுபதும்விபுலையைப்புரந்தார்
வஞ்சமில்லவன்றன்மனைவிசூத்திரிதான்பயந்திடவயங்கியசிறுவ
னஞ்சினைநிகராய்வளர்ந்திடும்பதுமாபதியெனுநாமத்தையுடையோன் (அ)

அந்தமில்பதுமாபதியருள்புதல்வனயுதவானையினடலுடைய
நந்தனும்பெயரோனிமமுதற்சேதுபரியந்தநலனுறுநிருபர்
மைந்தரோடவரைவதைத்தந்தவரசர்மரபினைவேரொடுமறுத்தே
யந்தகனெனவேவருடநானூற்றேடொருபத்தேழுறநிலனுண்டான் (கூ)

அருளுறுசெனமேசெயன்றவஞ்செய்யவடவியினடைந்தபின்முதலாய்
வருடமாயிரத்தோடொருசதத்தொருபத்தஞ்சினின்மரித்தனனந்தன்
றரிதனுமவன்சேய்சுமாலிவற்சரந்தொண்ணூறுடன்றசமுறவாண்டா
னரகமாரவன்றன்பயந்திடவுயர்ந்தோனவநந்தனவன்சுதனவன் (௰)

நலவனுயுலகினலனெலாமறவேநலிந்தவன்மரித்திடவவன்றன்
குலமறவுயருமவுலியர்மரபின்குவவுத்தோட்சந்திரகுலத்தி
னிலனெலாம்புரந்தானவன்சுதன்வாரிசிராவணன்பயந்திடநிவரும்
பொலனுறுமசோகவருத்தனனவன்றன்புதல்வனுய்வயங்கினன்சுயேசா (கக)

சரியிலாச்சுயேசாபுதல்வன்சங்கதன்மற்றவன்சுதன்சாலிசூகனனே
யிருநிலமதனினவன்பயந்திடவேயிலங்கினசததனுவாமன்
றருமமாரவன்றன்றனயனும்பிரகத்திரதனீங்கிவர்தரையாண்டார்
வருடநூற்றுடனெண்ணுண்டுறமருவார்திறையிடுமாமழையேவளர (கஉ)

அருளுறுபிரகத்திரதன்றன்புதல்வனச்கினிமித்திரனவன்சேய்
துரிதமுற்றிடுசுச்சேட்டன்மற்றவன்றன்சுதன்வரமித்திரனுரும்
பரிவுடனவன்முன்பயந்தவனிசரிறபத்திரகன்னவன்சிறுவன்
சரியிலாவளிந்தனவன்பெறுகுமரன்சற்குணச்சோடனுநாமன் (கங)

சோடனற்புதல்வன்றுலங்கியதேவபூமியிங்கிவர்சுக்முறவே
யாடகந்திரளவவனியைப்புரந்தவருடமோர்நூறதாமவன்முன்
வீடமற்றவன்றன்மரபுமற்றிடவேவிளங்கியகாணவாயனர்கண்
மோடுறுநிலனுண்டனர்கள்வற்சரமுந்நூற்றுடன்முப்பதினஞ்சே (கச)

காணவாயனரிற்காண்டுவைவதைத்துக்கடியசொல்விடணனுந்தெலுங்கன்
பாணியாரயிலாற்றிசையினைவென்றுபடியினையாண்டவன்பிராதா
வேணியார்சிவன்போலவிளங்குகிட்டிணன்முன்மேதினிமுற்றவும்புரந்தான்
முனுவாமவன்சேய்சரியில்சீசரதகருடணனுமந்தலைத்தரித்தோன் (கரு)

சரியில்சீசரதகருணனற்புதல்வன்றருமமார்பவுரனுமரசன்
மருளகலவன்சேய்மறுவிலாலம்போதரனவன்மகன்சிமிலகனு
விரைசெறியலங்கலவன்சுதன்மேகச்சுவாதிமற்றவனருள்விடலை
யருளினுலுயருமண்டமானனலிலருட்டகன்மற்றவனசிறுவன் (கசு)

அருட்டகன்மகன்சேயாலையனவன்முனருளியசிறுவனுந்திலசன்
பிரட்டகலவன்முனருளியமதலைபிறங்கியபுரீடதன்கலரை
யுருட்டியவயிலையுடையமற்றவன்முனுதவுவோனற்சுதரிசனன்
புரட்டியொன்னலரைவதைக்குமற்றவன்றன்புதல்வனுஞ்சகோரநாமத்தன் (கஎ)

அருள்செறிச்சகோரனருளியசிறுவன்வடமனனவனபுதல்வன்முன்
விரைசெறிதொடையல்விளங்கியவில்வச்சுவாதியாமவன்றருவிடலை
மருளகன்றிடுநற்சோமதியவன்சேய்மறுவிலாதுயர்சுதக்கந்தன்
சரியிலாவவன்றன்றனயனும்விசயனவன்சுதன்சந்திரபீசன் (கஅ)

இருநிலத்திலங்குஞ்சந்திரபீசனருள்சுதன்சுலோபதியிவன்றன்
மரபுளோர்தரையாள்வருடநானூற்றெண்பத்தாறகன்றவன்மரித்தான்
சரியிலாவவன்றன்குலமிறந்திடவாவீரர்தந்தலைமுறையேழும்
பரிகரிநரர்கண்மிடைந்திடவகன்றபடியினையாண்டனரன்றே (ககூ)

மற்றவர்மடிந்தபினரிற்சேத்தவர்கடசதலைமுறைமனையாண்டே
யிற்றிடத்தருமமிறுத்தசண்ணுவர்களெண்ணிருதலைமுறைபுரந்தே
யற்றிடயவனர்தலைமுறையிருநான்கவனியைக்காத்திறந்திடவே
யுற்றபப்பரர்கள்சதுர்த்தசராள்வர்களுலகினையறநெறிகெடவே (உ௦)

அருளில்பப்பரர்களிறந்திடச்சகுண்டரறுவரோடெழுவருமாள்வர்
தருமமில்லவர்களிறந்தபின்றசமாஞநர்வர்நாசமாகுவர்கண்
மருளராமிவராயிரத்துத்தொண்ணூற்றிரெண்பதுவருடமாண்டிறப்பர்
முருடுறுமவுநர்வருடமுந்நூறுமுடுகியாளுயர்பதிமொருருவர் (உக)

மவுநர்கண்மடியச்சிலைசலைப்பெயரோன்மண்ணினையாளமற்றவன்சேய்
பவமுறுபூதனந்திடன்செம்மல்பழுதுறுதவங்கிரனவன்றன்
றவமுறப்பயந்தசுதன்பசுநந்தனவன்மகனும்பிரவீமன்
னவையுறுமிவர்கண்மடிந்திடவாழ்வார்நலனில்வாலிகர்பதின்மூவர் (உஉ)

வாலிகர்மடியவயங்குபுட்டியமித்திரன்மனனாகுவனவன்சேய்
சிலமில்தசமித்திரனுலகாண்டுகழியவேயந்தகர்செறிந்து
ஞாலமாளுவர்களதற்பினர்தெலுங்கரேழுவர்நற்பாரையாளுவர்க
ளாலமேநிகராயடர்ந்திடுவேசரர்பதிகளானவரரசாள்வார் (உ௩)

அருளில்வேசரர்பதியகளாண்டதற்பின்னறனிலாநயிடர்களாள்வர்
தரையினினவர்தங்குலமிறந்திடவேதாருறுவிச்சுவமூர்த்தி
யரசனாகுவன்மற்றவன்சுதன்பவரோவருணன்மற்றவன்பெரும்புதல்வ
னிருநிலத்திலங்கும்புளிந்தன்மற்றவன்சேயெதுவெனும்பெயரினையுடையோன் ()

எதுமனன்சுதனுஞ்சுகனவன்பயந்தோனெதிரிலாவீரியவான்று
னுததிசூழுலகாண்டிறந்தவன்மரபுசழிந்தபின்னுலப்பிலாச்சவுர
ரதன்மமாயரசாளுவரவர்குலந்தானற்றிடவந்தரர்புரப்பர்
மதியிலாவவர்கண்மரித்தபின்மருளாரவந்தியர்மண்ணையாளுவரோ (உ௫)

அறனிலாதுயருமவந்தியர்மரபுகழிந்திடவானிவர்வீரர்
மறனுறுமவர்கண்மடியச்சூத்திரர்தம்மரபினோர்மாண்டிறந்திடவே
திறலுறற்புதர்கள்செகமெலாமாள்வரவர்குலந்தேயந்ததற்பினரிற்
றறுகண்மாளுவர்கடரணியாண்டிறப்பத்தருமமமிலேச்சராளுவர்கள் (உ௬)

தருமமின்மிலேச்சர்மரபினோரனேகர்தரையினையாளுவர்தம்மிற்
றுரிதம்வந்துறவேயமரிடையனேகர்மடிந்திடச்சூத்திரர்முதலாய்
வருணமற்றுயருஞ்சங்கரசாதிமறுவிலாவனுமிகராள்வ
ரருமறைபுராணசாத்திரமெவையுமருமறைநெறியகன்றிடவே (உ௭)

வருணமுமிலாமன்மறைநெறிப்படியேமணஞ்செயுங்கருமமுமகல
வரிவையர்பலரையணைத்திடவதுவுமறனெனச்சம்மதமாகிப்
பருவமோரெட்டிற்சிசுவைமங்கையர்கள்பயந்திடப்படியிடைநரர்க்குப்
புருடவாயுசுசொல்வருடமுப்பதுமாய்த்தும்பைபோற்குறுகும்பூமரங்கள் (உ௮)

தருமமெய்பொறைசற்குணமருளீகைதவந்தெய்வம்பேணுதலெல்லா
மிருநிலத்தகலக்கதம்வதைமுயற்சியிகழ்ச்சிபொய்வஞ்சனையதன்ம
மருளிவைமலியமலர்மகள்வாணியகன்றிடமதியிலாக்கயவர்
திரளுவரியினுமதிகமாய்ப்புவிமான்றிடுக்கிடமிடைகுவரன்றே (உ௯)

அம்புவியிடரையகற்றிடவருள்செய்தவந்திதேசத்தினின்வயங்குஞ்
சம்பளக்கிராமத்துயர்பிராமணரிற்சற்குணவிண்டுயர்சித்துக்
கின்பமார்சுதனாயெழுந்துகர்க்கியின்மேனிலங்குதன்கையுறுவாளா
லும்பர்கண்மகிழவுவரிசூழுலகினுறுகலர்திரள்களைவதைப்பன் (௩0)

பரிகுரமதனாற்பரவைசூழுலகின்பவமுறுகயவர்களெல்லாந்
தருமமோங்கிடவேதரையினிற்றுகளாய்விழுந்திடத்தயங்கியேதிகழ.
திருவினாயகன்மெய்ப்பரிமளமதனாற்சேடித்தமனிதர்களெல்லாந்
தருமமோங்கிடவேகலியுகமொருவசற்குணமாகுவரன்றே (௩௧)

சரியிலாக்கிரேதாயுகம்வரவதற்குச்சற்குணநரர்களாய்நிறைய
விரவிதன்குலத்துக்குயர்மனுமருவுமிலகுதன்மரபினுக்கிசைய
மருளகன்றிடுசந்தனுப்பிராதாவாய்வயங்குதேவாலியென்பவனும்
புரவலராயவ்வுகத்தினுக்கமர்வோர்முராரியைப்போற்றிசெய்குவரால் (௩௨)

சுரரொடுவலாரிவிடையனெண்கண்ணன்றுறந்தவர்துதித்துநின்முடி
விரைசெறிதருவின்மலர்பொழிந்திடுவர்விசும்புறுமுருப்பசிமுதலா
மரிவையர்நடிப்பவளேசின்னமறையவந்தரதுந்துமிமுழங்கப்
பரிவெரிங்வயங்குமுராரிதன்பரமபதத்திடைவயங்குவனன்றே (௩௩)

அநந்தனற்சநகாதிபர்க்கருள்செய்யவவர்கள்சாங்கியாயனர்க்கறையச்
சினந்தவிரவர்நற்பராசரர்க்குரைப்பச்சிறந்திடுமயித்திரேயர்க்குக்
கனந்தருதவஞ்சேர்சத்திதன்குமான்கழறிடவவன்விதுரனுக்கு
மனந்தனின்ஞானமுறப்பகர்ந்திடவேமருளறவோங்குபாகவதம் (௩௪)

நிகரில்வாளபிமன்சுதனெழுதினத்தினிவரரிபதந்தனிலுறவே
சுகமுனியருளத்துலங்குபாகவதப்பொருளதாஞ்சுதைநலனுறவே
பகர்கதையிதுவென்றுரைத்திடுஞ்சூதன்றனையெங்கள்பவமுன்றன்சொல்லாற்
றகரநற்பதஞ்சேர்ந்துயர்ந்தனமெனவேசவுனகரொடுந்தவருரைப்பார் (௩௫)

**வேறு.** ஆசகல்சுகனங்கோதவபிமனற்சுதன்றுன்கேட்டு
மாசகல்வாசுதேவன்சரிதையைவரைந்துசீராய்ப்
பேசுவோரர்கற்போர்கேட்போர்பெருமிதமெய்திப்பின்னர்க்
கேசவனடியாராகிக்கிளர்பதத்தணுகுவாரே (௩௬)

கர்க்கிப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௪௬0.

## கரு௨-வது வைநதேயப் படலம்.

அத்தினபுரியையவரா ளவேவலவனுகி
யுத்தியையணிந்தோன்கையிற்கழுனையயகற்றிப்பாலா
ரத்தியினமர்ந்துவெய்யகராவிஞலலேந்துகூவு
மத்தியினிடரைத்தீர்த்தவத்தனேயடைதிநெஞ்சே (க)

நத்தொடுதிகிரியேந்துநாரணன்வயங்கிவாழு
முத்தமம்விளையுபூமிநைமிசாரணியத்தோங்குஞ்
சத்திரயாகமீராருண்டுறமறைகள்சாற்றுஞ்
சுத்தமெய்த்தவர்கள்சூதன்சுதன்றனேநோக்கிச்சொல்வார் (௨)

விரதமாதவரின்மிக்கவியாசன்றன்னருளினுலே
சரதநான்மறையின்சொல்லேச்சார்ந்திடுபுராணமெல்லாங்
கரதலாமலகம்போலக்கழறிடுமறிஞமாயோன்
பரிதனுற்சொல்லுநல்லசரிதையைப்பகர்தியென்றான் (௩)

பாரிடைமனிதருய்யப்பங்கயன்மகிழ்ச்சிகூரச்
சீருடைவயினதேயன்செப்பிடச்சிறந்தசொல்லாற்
காருடபுராணந்தன்னேக்கடியவெவ்வினைகளெல்லாம்
வேரொடுமடியவையாவிளம்பெனச்சூதன்சொல்வான் (௪)

சரியின்மாதவத்தீர்நேரில்சாத்திகபுராணமாக
வருமறையுருவமானககபதியருளிச்செய்த
பரமனற்சரிதைதன்னேப்பகரெனப்பணித்தீர்யான்செப்
பரியமாதவத்தின்செய்கையாமெனப்பேசலுற்றான் (௫)

துனியினையொருவித்துய்யசோதியையுளத்தில்வைத்துத்
தினகரனெனவேபாரிற்சிறந்தசெங்கோலேயோச்சிக்
கனகமாதானஞ்செய்தேகனலிஞகுதிகள்பெய்து
சனகர்கோனியற்றும்வேள்விதனிற்சுகன்றந்தைவந்தான் (௬)

சிரத்தையார்சனகராசன்செய்திடும்வேள்விநோக்க
விரத்தியார்வியாசனெய்திவியந்துளமகிழ்ந்துஞானக்
கருத்தனுய்வாசமிக்ககமலமாமங்கைசேரு
முரத்தனுமொருத்தன்றன்னேயுளத்தமைத்திருக்கும்வேலே (௭)

சவுனகன்வாமதேவன்சதானிகன்கும்பயோனி
சவுதமன்வசிட்டன்வீணைமுநிகவுசிகன்சாபாலி
யவமிலத்திரிவான்மீகியங்கிராநாகதந்தன்
பவமில்சாங்கிலியன்மார்க்கண்டயனெடும்பலரும்வந்தார் (௮)

அத்திரிமுதலாயுள்ளவருந்தவரெல்லாமெய்தி
யுத்தமவரியைநெஞ்சினுருத்தியேயோகஞ்செய்யுஞ்
சத்தியவதிதன்மைந்தன்றுண்மிசையிறைஞ்சலோடும்
பத்திசெய்திருத்திரென்றேயினியசொற்பகர்ந்தானன்றே (௯)

முனிவருக்கினியசொல்லேமொழிந்திடுசுகனற்றந்தை
யனைவருமேககாலத்தடைந்ததேனதுவுமின்றி
மனதிஞேர்கருமமுன்னிவந்ததிங்கறையுமென்றே
துனியகல்வியாசன்கூறவிருடிகள்சொல்லலுற்றார் (௧௦)

சதுர்மறைக்கடலைநீந்தித்தத்துவஞானங்கண்டே
சுதைசுரர்க்களித்தோன்றன்னைச்சோதியென்றறியும்வண்ண
மிதவுபதேசஞ்செய்தாயெமக்கின்பமுறவேபுள்ளின்
பதியறைசரிதைதன்னைப்பறையெனப்பகர்ந்தாரன்றே (கக)

மாதவரிவைகள்கூறமறைகரைகண்டவள்ள
லோதுவான்றக்கன்வேள்விதனிலுயர்முனிவரெல்லாம்
போதகத்திடர்தீர்த்தானைப்புயத்தினிற்பரிப்போனெய்த
வாதரவுடனேசாமகீதங்களறையும்வேலை (கஉ)

வேறு. ஏழொடேழுறுமுலகமெங்கணுமிருசிறைவிரித்தறையுமூந்தியே
யூழியின்னடர்காலின்மும்மடியுந்தவும்பர்களுந்துமாமலர்
சூழவெண்டிசைவாசம்வீசிடவேதுலங்கியதும்புராதியர்
யாழ்களோதிடவீணைகந்தருவோரிசைத்திடும்பிசைகள்விஞ்சவே (கங)

சாமகோடமெண்டிசைபரந்திடவேதயங்கியதபனன்மேருவின்
வாமமல்கிடவைகுமாறெனமணிவயங்கியமகுடமாண்புற
வேமரூபமிலங்கவக்கிரதுண்டநல்லொளியெங்குமூந்திட
வீமனும்வனமாலைமுத்தினமாலைமாமணிமார்பின்விஞ்சவே (கச)

வரையெனத்திரள்பீனவம்புசமீதுமாலிருவூருவின்குறி
தெரியவிந்துவின்வகிர்நிகர்த்திடுதந்தநல்லவிர்திக்கினூற்றிட
வுரமதின்னுபவீதம்வாசுகியாகவோங்கிருபதுமரு
மிரவியின்னவிர்பரவுகுண்டலமாகியேகுழைதனினிலங்கவே (கரு)

பொலனுறுஞ்சிரமீதுசங்கனிலங்கவொண்குளிகன்புயந்தனின்
வலயமாகவனந்தன்வாமநற்கடகமாகிவயங்கநேரிலா
நலனுறுங்கடிசூத்திரம்மெனவோங்குதக்ககனண்ணமாழையின்
கலனெனக்கடிவிடமிடைந்தகார்க்கோடகன்கவினெடுமார்புற (கசா)

வருணமல்கியவுரகபந்தனமணிகளொங்கும்வயங்கவொப்பிலா
வருணவம்பரமீதுகாஞ்சியின்வயிரமாரவினங்களாரவே
தருணமல்கியதாளினூபுரத்தரிசுவாணிடிபோன்முழங்கிட
விருணவிந்திடுகதிரவன்னெனவயினதேயனங்கெய்தினனரோ (கஎ)

பூகம்வானரமெண்குமுற்றவுமுருள்தசரதன்மைந்தன்மேற்
றோகைபாகர்தம்வரையெடுத்தவன்சுதன்முனிந்துவில்வளையவிட்டிடு
நாகபாசமன்றேடநண்ணினேனரர்தனந்தரையாசைநாரியர்
போதபாசம்விட்டகலமற்றவர்புனிதராகவேபுவியினெய்தினன் (கஅ)

சுரர்தருத்தருமலர்சொரிந்திடத்தும்புராதியர்பாடியாடவே
யருமறைத்தவருளமகிழ்ந்துசென்றடியிறைஞ்சிடவச்சுதன்றனை
தரமிகுத்திடுபுயத்தடத்தினிலொளிரவேபரித்தருளுமுத்தமன்
சரியிறக்கனல்வேள்வியின்மறைதங்குமுத்தரவேதிசார்ந்தனன் (ககூ)

வேறு. மெய்த்தவர்சூழத்தக்கன்செய்திடும்வேள்வியின்க
ணுத்தரவேதிமுன்னருதயமாங்கதிரவன்போல்
வித்தகவிகங்கராசன்விண்ணவர்நடிப்பவெய்தச்
சுத்தமாதவர்பணிந்துதொழுதிவைதுதிக்கலுற்றார் (உ0)

இருதயமிருக்கேயாகவிருசிறைசாமமாகப்
பிரணவஞ்சிரசேயாகப்பிறங்கியநான்குதோளுஞ்
சரியினல்வேதமாகத்தருப்பையேயுரோமமாக
விருவிழியிலங்குகாயத்திரியதாமுருவவென்றார் (உக)

உதரம்வேதாந்தமாகயூபமேயெயிறதாக
வதரநாத்திரிவேதங்களாகவங்குலிகளெல்லாஞ்
சதுர்மறைலிபியதாகச்சாமகானங்களேரின்
மதியெனநாலாம்வேதமருங்கினம்பரமாய்ச்சேர்ப்பாய் (௨௨)

சர்ப்பமேயணியதாகத்தயங்கியவிறைக்கரத்தா
யற்புதவனந்தசத்தியமர்புயக்காசிபன்றன்
புத்திரவட்டதிக்கிறபுயங்சபூடணசாத்திக
வுத்தமவிகங்கராசபோற்றியென்றுரைத்தாரன்றே (௨௩)

அருந்தவர்மகிழ்ந்துபோற்றியடியினிலிறைஞ்சநோக்கித்
திருந்தியமறையையோதுங்காசிபமுனிவன்செம்மல்
கரந்தைவேணியனையொப்பீர்கழறிடுமுமக்கியாளேர்
வரந்தருவேனலென்னமாதவர்விளம்பலுற்றார் (௨௪)

ஆருநேரொப்பிலாதவச்சுதன்சரிதைதன்னைப்
பாரிஞமுய்யும்வண்ணம்பகரெனவிகங்கராசன்
சாருடபுராணந்தன்னைக்கழறியேவிசும்பினேக
வேருறுபிரமன்றக்கன்மகந்தனினேகினுனல் (௨௫)

அயனவணெய்தலோடுமருந்தவரிறைஞ்சித்துய்ய
வயினதேவன்றனிந்தமகந்தனினெய்திமாயோன்
செயலுறுசரிதைதன்னைச்செப்பியேயேகினனென்
றுயருமெண்கணனுக்கந்தக்காதையையுரைத்தாரன்றே (௨௬)

பவமறவிகங்கராசன்பகர்ந்தகாருடபுராணந்
தவர்விளம்பிடவேகேட்டுச்சதுர்முகன்மகிழ்ந்திக்காதை
யுவமையில்வேதாந்தத்தினுபநிடப்பொருளாய்ப்புள்ளின்
றுவசநற்பதியையீயுமென்றுபின்சொல்லலுற்றான் (௨௭)

சிவனுயர்சாபந்தன்னைத்தீர்த்தசீதரனுக்கென்றுந்
துவசவாகனனுமாகித்துலங்கியவிகங்கராச
னுவமையிலால்வேதத்தினுருவமாயொப்பிலாமா
தவன்வடிவாகுமென்னத்தவரிவைசாற்றலுற்றார் (௨௮)

ஈசற்குமீசனுகுமெம்பிரான்சத்தியாக
மாசகலால்வேதத்தின்வடிவமாம்புள்ளின்வேந்தன்
காசிபன்சிறுவனுனகாரணங்கழறுகென்ன
வாசநாண்மலரோனந்தமாதவர்க்குரைக்கலுற்றான் (௨௯)

அரிதரையதனின்வெய்யகயவரையரிக்கவேண்டு
முருவனுயெழுந்தபோலவுவணனுங்காசிபன்றன்
பெருமகனுகிவந்துபிறந்தனனவன்றான்செய்த
சரிதைநான்மறையின்ஞானசாரமென்றுரைத்துப்போனன் (௩௦)

மலரயன்மகிழதக்கன்மகந்தனின்வயினதேய
னலனுறநவின்றகாதைநாகதந்தன்றான்கேட்க
விலகியமுனிவர்க்கொப்பில்வியாசனன்றியம்புஞ்சொல்விற்
றொலைவிலாப்பொருளைக்கேண்மினென்றுரைசெய்வான்சூதன் (௩௧)

அருவமாயுருவமாகியளப்பிலாவண்டந்தம்மைச்
சீரரோமத்திற்றாங்குந்தலைவன்றன்மாயையாலே
வருபிரகிருதியின்கண்மானுறவதிஞங்காரந்
தெரியவேயதனிற்பயத்திக்கூழுகுணங்கடாமே (௩௨)

அந்தமுக்குணத்திற்றாமதத்திலாகாயம்விஞ்சி
வந்திடவதனில்வாயுவயங்கியேயனலோன்றன்னைத்
தந்திடவதனினீரஞ்சனித்திடவதனிற்பூமி
மூந்திடப்பொறிகளைந்துமுளைத்திடத்தசமாமன்றே (௩௩)

இருமையாமிராசதத்தின்ஞானவிந்திரியமைந்துங்
கருமவிந்திரியமைந்துங்கருதிடுமனமுந்தோன்றச்
சரியில்சாத்திகமிதற்குத்தந்திடுதசமாமென்றே
வுரைசெயவுரனேயுற்றங்குறுமதிதெய்வந்தன்னை (௩௪)

பூதமும்பொறிகளைந்தும்புகலுமிந்திரியம்பத்து
மோதிடுமனமுமாயமுயர்பிருகிரதிதானு
மேதுவின்மானுங்காரஞ்சீவனோடிருபத்தைந்தாய்
வாதுசெய்தத்துவத்தான்மாலண்டம்படைப்பன்மாதோ (௩௫)

புயலெனவயங்குமேனிப்புனிதன்றன்றொப்புளோங்கிச்
செயலுறுகமலந்தன்னிற்றிகழ்ந்திடுமண்டத்தோடு
மயனையங்குதவவேதானவனண்டர்நரர்களெண்ணில்
வியனுறுதிகிரிக்கோடுத்தாபரம்விதித்தானன்றே (௩௬)

வடவரைநடுவதாகவயங்கியவேழுதீவுங்
கடலதினிடையேதோன்றக்காசினியதனைமுற்றுங்
திடமுறுநேமியோங்கச்சிறந்திடுமண்டப்பித்தி
மிடையப்பஞ்சாசற்கோடியெனநிலன்விரிந்ததன்றே (௩௭)

**வேறு.** மானசோத்திரத்தின்வரையினிரவிவையமோடிடவதினச்சின்
மேனுனிசுவணப்பொருப்பினுச்சியின்மேல்விளங்கிடவாயுபாசத்தாற்
றானதுபிணித்துத்துலங்கியநூருவன்சதிரினாற்சோதிசக்கரத்தை
வானவர்மகிழக்கரத்தினாற்றிரிப்பவடவரைசுற்றவோர்தினமாம் (௩௮)

பரமன்றன்னவிராயிலங்கியசிஞ்சுமாரப்பிரசாபதிபைம்பொன்
கிரிமசைச்சிரங்கீழாகவேயுயரக்கிளர்ந்திடுமிரவியேமுதலாஞ்
சுரருடுவினங்கண்முனிவர்களெழுவர்நூருவனோடனைவருந்துலங்கச்
சரியிருதாவிதாதாவெனுந்தேவிருவருந்தயங்குவாரன்றே (௩௯)

அதலமொண்விதலசுதலமொப்பிலாதராதலமகாதலமகன்ற
விதமுறுவிரசாதலமகாபுகழால்விளங்குபாதாளமோடேழுந்
சுதைதருகடலார்புவிபுவலோகஞ்சுவர்க்கலோகமகாலோக
மிதமுறுசனலோகந்தவவுலகஞ்சத்தியலோகமோடேழே (௪0)

செயலுறிவ்வகையாற்சதுர்த்தெசபுவனஞ்சிறந்திடுமண்டமாயிரமாம்
புயமுடையனந்தன்கடுகுபோலேகசிரத்தினிற்பொருந்திடப்பரிப்பன்
வியலுறுமண்டந்தனையயங்கனல்கால்விசும்பெலாந்தசதசமடங்காய்
மயர்வறவளைக்கும்பிரகிருதியிலிவ்வண்டம்போலனந்தம்வகிடுமால் (௪௧)

பிரகிருதியினிலனந்தவண்டங்கள்பிறங்கிடவரியதற்குரனாய்
மருவுவனதனுக்கப்புறம்விரசைமாநதிவயங்கிடுமீப்போ
யிரவியரனந்தமெழுந்தனரெனவேயிலங்கியவைகுண்டமதனிற்
றிருவுடன்றிகிரிவலம்புரிதிகழச்சீதரன்சிறந்துவீற்றிருப்பன் (௪௨)

அரியரனெனவேதெளிந்திடவரைந்துமண்டத்தின்செயலெல்லாமொழிந்த
சரியிலாவியாசன்றனையடியிறைஞ்சிச்சதிருநாகதந்தன்றான்
மறைமலரயனைநிகர்த்திடுமுனியேமாநதிப்பெருமையுமதனிற்
பரவியேபடிவார்கதிபெறுவனவும்பகரெனத்தவன்பகர்ந்திடுவான் (௪௩)

சதுர்மறைதனிலுமுயர்ந்திடுமட்டாக்கரமதாஞ்சகலதேவதைக்கும்
விதிதருபுருடோத்தமவிறையதிகம்விபுலையிற்பலபலபெயரா
நதியினிற்பகிரதிநலன்விருந்தாவனத்தினினந்தகோபன்றன்
சுதன்விளையாட்டின்யமுனைமாநதியின்றுறைகளுநன்னதமெனச்சொல்வான் (௪௪)

மாதவன்விளையாட்டுறவிலங்கியமாயமுனையிற்காளிந்திமடுநற்
பாதவமடர்கோவத்தனகிரிகோகிருசங்கோபாலம்புண்டரீக
மாதவர்துதிகோதனம்பிரயங்கோமதிபுராணம்வற்சபாலம்
போதிலங்கியவித்துறையுளிற்படிவார்பவமறப்புனிதராயுயர்வார் (௪௫)

எதிரிலிந்நதிகள்பலவினுமதிசயிணையிலாக்கற்புடையாடன்
பதியினைநெடுநாட்பிரிந்தவன்வரவேபணைக்கையாற்றழுவுபான்மையைப்போற்
சதுமுகன்பிதாவாமரங்கநாதன்வாழ்தமனியவிமானத்தைச்சூழ்ந்து
கதுமெனவுபயபக்கமும்வளைகாவேரியாம்புண்ணியநதியே (௪௬)

முத்தியைக்கருதிமுனிவர்களிமையோர்முராரிவாழ்சிரங்கநகரின்
பத்தியுற்றுயர்தாபரங்களாய்ச்சனித்துப்பரனைநெஞ்சிருத்துவரன்றே
வித்தகவியாசன்மொழிந்திடக்கேட்டுவிழுமியநாகதந்தன்றன்
சத்தியவதிதன்புதல்வனையன்பாலிறைஞ்சியேசாற்றலுற்றனனால் (௪௭)

அரிதிருவரங்கனாகியேவிமானத்தமர்ந்துகாவேரியினுப்பண்
வருசெயலதனைவிரித்துரையெனவேவயினதேவன்றவர்க்கருள்செய்
சரியிலாச்சரிதைதனையுணர்ந்திடுநாரதற்கரன்சாற்றியபொருளை
யருமறைபுணருநாகதந்தத்தகேளெனவறையலுற்றனனால் (௪௮)

சுரர்முனியுமையாள்கொழுநனைத்தொழுதுதூயவைகுண்டத்தினமரும்
பரன்வசுந்தரையிற்பரவுகாவேரிகாப்பணிற்பையராவணைமே
லிரவியினவிர்போல்வயங்கியவிமானத்திலங்கியசெயலினையருளென்
றுரைசெயவுரசபூடணன்மகிழ்ந்தேயுயர்தவகேளெனவுரைப்பான் (௪௯)

ஆதியாம்பரமனளினநாபியினினண்டமீரேழ்பொழிலுடனே
வேதனுற்பவமாய்வெருவிநாற்றிசையும்விழிக்கவேயானனநாலாய்த்
தீதறவியற்றுஞ்செயலறியாமற்றிகைத்திடவவன்றுணர்த்துலங்கு
மோதிமவுருவாயுலகளந்தவன்றுறுதயமாயிவையுரைத்தனனால் (௫0)

அரியெனும்பரமனுனையென்றனுபியினிலம்போருகத்தளித்தேன்
பிரமனென்றுனக்குப்பெயரினையறைந்தேனென்றலும்பிதாமகன்றொழுது
கருணையங்கடனீவிதித்திடுமெனக்குக்காணவுபாயமேதெனவே
விரிவுறுசிருட்டிவரப்பிரணவத்தைவிளம்பெனப்பறந்துபோயினதால் (௫௧)

அரியனவுருவாய்ப்பிரணவம்விளம்பென்றறைந்தவண்பறந்துபோய்மறையப்
பிரமனுமகிழ்ந்துபிரணவந்தனையுள்ளமைவுறப்பேணியவ்விடத்தி
னுரைசெயற்கரியவுலப்பிலாக்காலமொழியவேதவஞ்செயச்சிருட்டி
வரமிமையவர்கணரர்பசுப்பறவைவரைகடாபரமெலாம்வகுத்தான் (௫௨)

பரவையேழுடனேசதிர்த்தசபுவனத்தனைத்தையும்படைத்திடும்பிரமன்
மருவுமிராசதத்தாலிறைவனனெனத்தன்மனத்தினுங்காரம்வந்துதிப்ப
வரியயன்மதமதகற்றிடவிரோதமியற்றவேயவ்வமலன்றன்
னிருசெவிதனினார்மலமதின்மதுகயிடவரங்கெய்தினரன்றே (௫௩)

அரியிருசெவியினெழுந்திடுமதுகயிடவர்களண்டம்விண்டிடவே
வுருமெனவதிர்த்தார்த்தொருநொடியிடுமுன்னுகாந்தவெவ்வடவைபோலுற்றுப்
பிரமனையடர்த்துமறைகளைப்பறித்துப்பெயர்ந்துநீராழியிற்புகுத
வெருவிநெஞ்சலைந்துமலதிருங்காரம்பழுதுறவிதியலைந்தனனால் (௫௪)

மனதிஹங்காரமடிந்திடப்பிரமன்வறியனாய்ஞானம்வந்துறவே
யனவுருவமைந்தவரிதனையளித்தபிதாவென்பதறிதிலனாகிக்
கனவனமுடையோனுதரநாபியினிற்கமலநாளந்தனிலிறங்கி
யினனுறுவதின்முள்ளுடறகையறுக்கவிழிந்திராங்கினன்பலகாலம் (௫௫)

எண்ணருங்காலமிழிந்துமுள்ளறுக்கவிரங்கியகமலத்தினடியைக்
கண்ணிணையிருநாலுறவிழித்திடலுங்காண்கிலனாய்மதிகலங்கி
யுண்ணடுக்குறவேடீளவுநளினத்துச்சியினேறிமூர்ச்சித்து
நண்ணியென்னிடரைக்களைபவராரென்றிரளயநாப்பணின்விழுந்தான் (௫௬)

களைகணையெனைக்காத்திடுமவரெவரென்றரற்றியேகயந்தனின்மூழ்கி
யுளையுமெண்கணன்முன்சலசரவுருவாயுனக்கியான்பிதாவென்றுமுராரி
கிளர்சினமதாகயிடவரைவதைத்துக்கிரீடசேயூரங்களொளிர
வளமலிந்திடவேயுயரயக்கிரீவனாகியேமறையவர்க்கறைந்தான் (௫௭)

சரியிலாவயனுக்கிருக்குடனெலவுஞ்சாற்றியவயக்கிரீவன்றான்
கருடவாகனனாய்ச்சுதன்முனர்த்தோன்றிக்கழறுவானென்னுடவுரையின்
வருசதுமறையைநிவருமந்தணர்கள்படிக்கலாமற்றிவையறியா
திருநிலத்துழலும்பிராமணர்மகாபாதகரெனப்பின்னருமிசைப்பான் (௫௮)

அருமறையறைந்துமதினுறும்பொருளையறிகிலாவந்தணன்வனத்தின்
மிருகமொத்திடுவன்வேதநான்கினையும்விளம்பிடுஞ்சருத்திலானெனினும்
பரவையுட்டுலங்கும்புருடனாகியவென்பத்திசேர்புத்தியையுள்ளா
னிருநிலம்விசும்பினுமுறுமவர்க்கதிகனென்றருள்செய்தவன்மறைந்தான் (௫௯)

சுத்தசாத்திகனாமிறையிவையுரைத்துமறைந்திடத்தொழுதிடும்பிரமன்
சத்தியவுலகத்தமர்ந்தவனெனையுந்தன்பதத்தேடிடுமெனத்தன்
புத்தியுணுணர்ந்துதுவாதசாக்கரத்துப்புனிதனைக்கருத்தமைத்துப்பா
லத்தியினணுகியுலப்பிலாக்காலமருந்தவஞ்செய்தனனம்மா (௬௰)

அரிவரவநேகவுகங்கழிந்திடவேயருந்தவஞ்செயுமயனைச்சென்ற
பரவையுட்பரமன்கமடமாமுருவாயிலங்கிடநோக்கியேபணிந்து
சரியிலாவிறைவவெனதுளங்களிப்பத்தற்சொருபந்தனைக்காட்டென்
றுரைசெயவிமலனவன்றனைநோக்கியுளமகிழுறவிவையுரைப்பன் (௬௧)

இருநிலமதனிற்கயவரையரிக்கயானெமூர்ந்திடப்பலவிதமா
முருவமாங்கெவரும்வெளியுறக்காண்பாரெழில்சொள்வைகுண்டத்தினமருஞ்
சரியிலாவெனதுதற்சொரூபத்தைச்சதுமுகநின்னுடனரனுஞ்
சுரருயர்வலாரியிவர்களுங்காண்டற்கரியதென்றேயிவைசொல்வான் (௬௨)

சலசரநோக்கச்சரியிலாக்கமடந்தியானிக்கச்சுருந்தமெய்ப்பரிச
நலனுறவிவையின்சிசுக்கடான்வளருநன்குபோலனனமீனு
யிலகியிங்குயர்ந்தகமடமாய்வயங்கியானுனையளியினுற்காத்தேன்
மலர்மிசையவிர்கொள்பிதாமகவெனவேமாதவன்பின்னருமொழிவான் (௬௩)

சீலமார்புருடோத்தமனெனும்யானீசிறந்திடவெனதுதற்சுரூபக்
கோலமார்விமானமுடன்வெளியுறவேகோகனகந்தனினமர்வாய்
மூலமந்திரம்வேதத்தினுக்கதிகமோட்சகாரணமென்றன்மனது
சாலவுமுவப்பவட்டவக்கரத்தாற்றவமுயல்வாயெனவகன்றான் (௬௪)

கூருமவுருவமுராரியிவ்வசனங்கூறியேமறைதலும்பிரம
னாரணனுவப்பவட்டவக்கரத்தைநலனுறக்கருத்திடையிருத்தி
பாரினிற்பரவும்பயோததிமருங்கிறபவமறவைம்புலனடக்கிச்
சீருறுந்தெய்வவருடமாயிரமுங்கழிந்திடத்தவஞ்செயுந்தினத்தின் (௬௫)

விரசைமாநதியின்மீயுயர்பரமபதத்தினும்விமானமேல்விளங்கிச்
சிரசின்மீக்கிரீடந்திகழமார்பகத்திற்றிருவுபவீதமுஞ்சிறப்ப
விரைசெயுங்கமலத்தடியினூபுரங்கள்விளங்கப்பீதாம்பரவுடைநாண்
பரிசமார்மருங்குவயங்கவேயனந்தனணையதாய்ப்பணங்கொடுகவிப்ப (௬௬)

கனமிசைநளினக்காடுபூத்தெனவேசண்கைவாயுந்திகாவிலகத்
தினகரனவிர்போற்றிகழ்மணிவலயஞ்சிறந்தவாமக்கரநீட்டி
கனகமார்முடியார்சிரசணையெனவேகவின்றுறுவலக்கரமமைத்தே
யனகனாரணன்மாலச்சுதனனந்தசாயியாமரங்கன்வந்தனனால் (௬௭)

சுரர்மலர்பொழியத்துந்துமிமுழங்கச்சுனந்தனந்தனுயர்சனந்தன்
சரியிலொண்சனகன்யாழுறுமுனிவன்சசிபதியுமாபதியெனுநா
லிருமருங்குறச்சாமரைதினகரனுமிந்துவும்வீசிடச்சேடன்
றராவெண்கவிகைகவித்திடத்தூபங்கமழத்திபிகைகளுந்தயங்கப் (௬௮)

பிரணவவுருவாய்விளங்கியவிமானம்பிறங்கவந்தரிகரிமுகனு
மருவிடச்சிகரந்தனினுயரமரர்வயங்கிடமகுடத்தின்மறைக
ளுருவமாயொளிரப்பதந்தனின்வேள்வியூருவினிட்டியீங்கொளிரக்
கருடனற்சிரசிற்கொடுவரவரங்கன்கண்விழித்துறங்கிவந்தனனால் (௬௯)

எண்ணரும்பிரமரிறைஞ்சிநத்திடுவாராதனஞ்செயவரங்கேசன்
கண்ணிணைகளிப்பவிமானமேல்வரலுங்கமலனானந்தநீர்விழியி
னண்ணவேநடித்துச்சதுமறைப்பொருளார்நாவினாற்றுதித்திசைபாடி
மண்ணணங்கொளிகொண்ணளினமின்வருடுமலரடிவணங்கியீதறைவான் (௭௦)

சிரசுநற்சுவர்க்கஞ்சோத்திரந்திக்குத்தினகரன்சந்திரனயந
மிருதயங்காமநாபியாகாசமிலங்கியபாதமேபூமி
வருணன்மேட்டிரம்பூமகள்வசுந்தரைமின்மனைவியர்மறைகளுன்வாக்குப்
பரவுவெங்குரோதமுருத்திரனாகப்பள்ளிகொள்பரமவென்றான் (௭௧)

அயனிவைதுதிக்கவழகியமணவாளப்பெருமாளுடனழகார்
புயலெனவிமானந்தனினரவணைகொள்புனிதன்புத்திரன்றனைநோக்கி
யயமுதாசனன்பவனன்விசும்புடனாங்காரமானகல்பிரகிருதி
யியல்புறுமிவையேயிலங்கிடுமேழாவரணமாயமர்வனென்றிசைப்பான் (௭௨)

சரியிலாப்பரமபதத்தினின்வயங்குந்தத்துவமூர்த்தியும்யானே
யருவினையகலவரிச்சியாமவதாரத்தினுக்கியான்பிரதானம்
பரவையுட்டிரைபோற்றிலதயிலம்போற்பரவுவனண்டங்களனைத்துந்
திருவவதாரமனந்தசற்பகங்கடொறுஞ்செனித்திடுவனென்றிகையின் (௭௩)

சனனமாவனவென்னிடத்தினுமேசந்தனையன்மித்திரன்சகோதரன்வெஞ்
சினமலிபகைஞனெனநிலன்றோன்றிச்சிட்டரைக்காத்துத்தீயவர்தம்
மினரொடுமடியவதைப்பனென்சரிதையியம்பியேயபத்தரீடேற
வினையறத்தவஞ்செய்துயர்ந்திடுகமலவிளம்புவன்கேளெனவறைவான் (௭௪)

இரவிமண்டலத்தும்பயோததியிடத்துமிந்திரன்குபேந்திரனாயு
மருவுமென்செயலாவெதிரதரமருவென்றினக்குப்பெயர்வகுத்தேன்
றரையினினரங்கம்வேங்கடமுட்டஞ்சாளக்கிராமம்புட்கரம்வான்
சுரர்துதிவதரிநைமிசாரணியஞ்சிங்காத்திரியிவையெட்டுஞ்சுவயம் (௭௫)

உவமையிலயனீமகஞ்செயுமறுவிலுத்தரவேதியினாப்பண்
டவர்வியப்புறவேவரதனாயெழுவன்றருமதேவதைபணிந்திடவே
பவமறவிடப்பருபதத்தழகார்பரமனாயிலகுவனனந்த
நவையறப்பதிட்டைசெயவவண்பதுமநாபனாய்வயங்குவனானே (௭௬)

நிலமகடவத்திற்றிருக்கணபுரந்தினெடியவனாகிவீற்றிருப்ப
னலனுறுமறைகள்பதிட்டைசெய்திடநாராயணபுரந்தனிலமர்வன்
வலனுறும்வலாரியுடனுதாசனனும்வணங்கிடவருணமாவரையி
னிலகுவன்சிபிமன்னிறைஞ்சிடநந்திபுரவிண்ணகரதனினெழுவன் (௭௭)

வருணன்வந்தனையாற்றிருக்கணமங்கைநகரிடைவயங்குவன்மரீசி
பரனெனவெனதுசரணடைந்திடவேயமருவன்மந்தரத்தலத்தின்
விரணமற்றுயர்காவேரிசெய்தவத்தால்விளங்குவன்சேரையம்பதியாந்
தருணமார்திருவோடிலங்குவனறையூர்தனிற்சதாசிபணிந்திடவே (௭௮)

சுரரொடுமவுணர்தொழுதலாற்கும்பகோணத்திற்றுலங்குவன்கயிலை
யரனெடுந்தவத்தாற்குசலமாவரையினமருவனகத்தியன்பணியச்
சரியிலாதுயருந்தாம்பிரபரணிநதியுறுந்தலத்தினிற்சாரவன்
பரவைசெய்திறைஞ்சிப்பதிட்டைசெய்கும்பத்துவாரந்தனினெழுவன் (௭௯)

இந்திரத்துய்மனிறைஞ்சிடத்திருமெய்யந்தனினிலங்குவனிணையி
லந்தரம்பணியவிட்டுமாநதிதீரந்தனின்மருவனனலோன்
வந்தனைசெய்யத்துவாரகைமேவும்பதஞ்சலிசெய்யுமாதவத்தா
லிந்துவேணியன்கூத்தாடுசித்திரகூடந்தனினிலங்குவனன்றே (௮௦)

விச்சுவக்கருமாச்செய்யுமாதவத்தால்விளங்குவன்விண்ணகரத்தி
னச்சுதனென்னுமெனையிறைஞ்சிடவேயமருவன்கொங்குதேசத்திற்
பச்சிலையுறுபாதவநிறைபாண்டுசயிலமாதலந்தனிற்படியி
னிச்சயமாகிவயங்குவன்சாளக்கிராமமாய்மனைதொறுநிறைந்தே (௮௧)

இறைவனாகியயானிலங்கியவிமானந்தனக்கிரண்டியோசனையெலவு
மறுவிலாமோட்சத்தலமதாம்யான்முன்மருவியசோவினுமிலாது
நெறியையீசாளக்கிராமநற்சிலையுநீங்கியதேசஞ்சண்டாள
ருறுபுலச்சேரிதனைநிகர்த்திடுமென்றுயரரிபின்னருமுரைப்பான் (௮௨)

சிகரமண்டபங்கள்சிறந்திடும்விமானச்சீரங்கப்பதியிடைச்சேரும்
விகனமசண்டாளர்கிரீகட்குமுதலாய்வீடுபெற்றுயர்குவர்மறையான்
மகமெணில்கோடிசெய்தவப்பலமாதானநற்பலமிவையெல்லா
நிகரில்காவேரிபடிவர்நற்பலத்திற்சகசிரத்தினொன்றுநேர்நிலாது (௮௩)

பரமனாமெனையாராதனஞ்செய்யுங்கிரியையைப்பார்த்திடினியமஞ்
சரியிலாநியமம்முறவிழுமியதாந்துவாதசாக்கரங்கொடுசலத்தால்
விரையுறைமலராலருக்கியமளித்துவிளங்குசோடசவுபசாரம்
பரிவுடனியற்றிப்பவத்தினையறுக்கும்பத்தரென்பதியிடையமர்வார் (௮௪)

இருநிலமதனிற்பாஞ்சராத்திரபூசனையெனக்கிட்டமென்னடியார்
கிரியையீனத்தோடுயர்ந்தமந்திரலோபம்பவக்கீழ்மைகளவையு
மருவினோரெனினுமுவருறவொருக்கால்வைக்கும்வெள்ளாவிமாசறுக்கச்
சரியிலாதிலங்கம்பரமெனவவர்க்கோர்சனனங்காட்டிப்பதந்தருவன் (௮௫)

பரமனாகியவெற்குவப்பதாம்பஞ்சராத்திரநூலையென்பதியாய்ச்
சரியிலாதிலங்கும்விமானரங்கத்தைத்தவர்மகிழ்துவாதசாக்கரத்தைப்
பரவுமென்னடியாரிழிகுலரெனினுமவர்களைப்பழித்தவர்மறையோர்
மரபவமந்திடினும்புலையரேயவர்நாத்துணித்திடின்மறைகள்சம்மதமாம் (௮௬)

இவையெலாமருள்செய்தெண்ணரும்பிரமரிறைஞ்சிடுமென்றனையுன்றன்
பவமறத்திருவாராதனஞ்செய்யென்றளியுறப்பகர்ந்தரங்கேசன்
மவுனனாயிலங்கமலரயன்மகிழ்வால்வணங்கியொண்மணியுறுவிமானந்
தவர்துதித்திடத்தன்சிரசின்மீப்பரிந்துச்சத்தியவுலகத்தைச்சார்ந்தான் (௮௭)

வேதநன்மொழியால்விழுமிதாயுயர்விச்சுவாருமாகதித்திடவே
யேதமற்றிலங்கேழாவரணத்துளிரவிநீடுலாந்தனிலங்கு
மாதம்வான்மதிசெய்வுறுதுவாதசியின்வயங்கியரோகணிமருவ
வாதியாய்விமானத்தமரரியணையிற்சத்தியவுலகத்திளமாந்தான் (அஅ)

அத்தநாட்டுவசரோசணமாகியழகியவோணமேமுகிவாய்
வித்தகவிமானத்தமராங்கேசன்வீதியெங்கணுமெழுந்தருளி
சுத்தமாதவர்கடுதித்திடப்பிரமன்றுலங்குவானதிப்பயந்தன்ஞு
ணித்தியத்திருவாதனநடத்திநெறியுறவமர்திளமதனின் (அகூ)

இரவிதன்சுதனுயிலங்கியவைவச்சுதமனுநீதியிம்பரிற்றுன்
மருவவேயுலகாணலனொலாமுணர்ந்துமலரயன்றன்பதியதனின்
விரைவினிற்கொணர்ந்துவிழுமியோய்விமானத்கமலனைப்பணியெனவிளம்ப
விருதனுங்களிப்பவிமலனைவணங்கியிணையிலானயோத்தியையடைந்தான் (கூ0)

இரவிதன்சுதனுகியமனுநிகரின்மைந்தனுமிக்குவாகுடனே
யரிமணிவிமானத்தயனுறுபதியினமர்ந்திடுமழகெலாமறையப்
பரிவுடனவனும்யானுமவ்விமானப்பரமனையிறைஞ்சவேயருளொன்
றுரைசெயவவனையிருதனுசேஞெச்கியுயருமார்த்தாண்டன்சேயுரைப்பான் (கூக)

கமலன்வாழ்பதியைக்காண்குவதரிதுகண்டதுண்டாயினும்விமானத்
தமலனையிறைஞ்சவருந்தவர்சமக்குமரிதெனமனுவிளம்பிடவே
யிமகரனெனவேயளியுறவயங்குமிக்குவாகுத்துயரெய்திக்
கமையுறுவதிட்டன்கழலிடைப்பணிந்துகரங்குவித்திவைமொழிந்தனனால் (கூஉ)

அயனுறுபதியையடைகுவதரிதேயாயினுமவணமர்விமானத்
துயரரியினையாணிம்பரின்வணங்குமுபாயமேதருளெனவுரைப்ப
தயையுடைவசிட்டனவன்றனைநோக்கிச்சரியிலாவிராமன்வித்தாரச்
செயல்சதகோடிவிரிவதாமதனோர்கதைகேளென்றுசெப்புவனால் (கூங)

இயல்புறுமிராமன்சரிதையிற்பரமபதந்தனிலிலங்கியமுராரி
செயனுறுநிலத்திற்பரவுகாவேரிவளைந்திடச்சிறந்திடுவிமானத்
துயர்வுறவணங்கியயனிராவரவேயயன்பதமுற்றண்டமொழியின்
புயனிகரெனுமெய்ப்புனிதன்வைகுந்தம்பகுதுவ்வென்றுசாற்றிடுமால் (கூச)

ஆதலினயன்வாழ்பதியினின்விமானத்தமரரங்கேசனிந்நிலத்திற்
றீதறவருவன்வரத்தவஞ்செய்யத்திறலுனக்கன்றிவேறிலையா
லீதுநிச்சயமேயெனுமொழியியம்பியியல்புறுவசிட்டமாமுனிவன்
வேதன்மந்திரத்தையிதுவுபதேசமாகவேவிளம்பினனன்றே (கூரு)

பாவமில்வசிட்டனிவைபகர்ந்திடவேபழுதகன்மனுப்பயந்தெடுத்த
காவலன்விமானத்திலங்கரங்கேசன்கடிதினினெய்திடக்கவினார்
தேவியுந்தானும்வனத்திடையெய்தித்திசைமுகன்மந்திரத்தியான
நாவிடையமரச்சுரரொடுவலாரிநடுங்கிடக்கடுந்தவஞ்செய்தான் (கூகூ)

தீமைவேரறவேவிமானமீதிலங்குஞ்சீதரன்வரமனுப்பயந்த
கோமனத்தெழுமைம்பொறியினையடக்கிக்குறைவறவருந்தவஞ்செயவே
காமனுண்ணடுங்கியுருப்பசியரம்பைகவினுறுதிலோத்தமைகாமன்
சோமனல்வசந்தனிவரைமுற்பவம்போற்சூழுமென்றேவினன்மாதோ (கூஎ)

சுரரிறைவிடுக்கவுருப்பசிமுதலாய்த்துலங்குமங்கையர்சுருளளகத்
தரியினமுரலப்பரிபுரமரற்றவம்பரமருங்கிடையசைய
கரவளையொலிப்பத்தரளமாவடங்கள்கலசநேர்தனமிசைப்புரள
விருவிழிகுழைபையிடரிடவனம்போனடந்துவந்தெங்கணும்வளைந்தார் (கூஅ)

வரைமரமுனிவர்மதிமயங்கிடவேமங்கையரான்மதன்சிலையால்
விரைபுகரமலரின்சிலீமுகந்தொடுக்கமெல்லெனவசந்தனும்வரவே
சரியிலாமனுவின்றனயன்வந்தெதிரேகயையுடனிருத்திரென்றுரைத்து
விரகவேதனையிலழுந்திலான்பலமூலங்கடந்தருந்துமினென்றான் ()

மாதவம்பெருகமனன்விரதத்தின்வலியிணையறுத்துநீரிருமென்
றாதரவுடனேயருக்கியமளித்தேபலங்கிழங்கருந்துமென்றறையப்
பீதியுமகிழ்வுஞ்சிமித்தலும்பிறங்காச்சிரியமும்பிறங்கிடக்காம
னோதிமநடையாருடன்மனுத்தனயன்றனைப்பணிந்திவையுரைத்தனரால் (௧00)

ஆரனைமுனிவாற்செயித்தனனிணையிலரசவுன்சாந்தியினாலே
விரகமுமொருவியெமையெலாம்வென்றாயென்றவர்வெருகியேயேகிச்
சுரரிறைதனக்கிச்செயலெலாம்விரிப்பத்துயரமுங்குரோதமும்விளைய
வரைநிகராயிராவதத்தின்மீதிலங்கிவச்சிராயுதங்கொடுவந்தான் (௧0௧)

இருநிலமதனிமையவர்நடுங்கத்தவஞ்செயுமிக்குவாகுவின்மே
லரனெனமுனிவோடிலங்கும்வச்சிரத்தையமரர்கணாயகன்சடாவச்
சரியிலாவரசன்றிகிரியைநினைக்கச்சக்கராயுதம்வரவெருவிக்
கரியுடன்விழுந்துகடிதினிற்பாறிக்கமலனேடிவையெலாம்பகர்ந்தான் (௧0௨)

இரவிதன்சிறுவன்புதல்வன்மாதவத்தையிந்திரனியம்பிடக்கேட்டே
மரைமலருறுவோன்விமானமேலிலங்குமரியிணையருச்சனைசெய்ய
வரியமாதவஞ்செய்மனன்செயலறிந்தேயருந்துயரெய்திமூர்ச்சிக்க
விரைவினிறைவிண்ணுறுமசரீரியாகியேயிவைவிளம்பினனால் (௧0௩)

திசைமுகவெனையுன்றிவாவினிற்றிருவாராதனஞ்செய்தனையதனால்
வசையிலாவயோத்திநகரினிற்சதுருயுகமிருந்ததற்பினர்மலரி
னிசையுறுமணிசேர்ந்திலங்குகாவேரித்தலத்திடைமருவியிவ்விடத்தி
னிசியுறுமிரவாம்போதுவந்தடைவனியெனைமனனுக்கியென்றான் (௧0௪)

அரியவையருளவயன்றுயரொருவியம்பொனின்விமானமீதமரும்
பரமனைக்கருடன்சிரசினின்வயங்கப்பரித்திடத்தவஞ்செயுமனன்முன்
விரைவினடைந்துபணிமிசையிலங்கும்விமலனையருச்சியென்றுரைசெய்
திருகையின்விமானத்தொளிருமாதவனையிக்குவாகுக்கரத்தீந்தான் (௧0௫)

அரியுடன்விமானமளித்தயன்மறையவரசனுண்மகிழ்ந்தெழுந்தாடி
விரைவினிற்றனதுசிரமிசைவிமானம்விளங்கவானரிவையர்நடிப்ப
மருமலர்மாரிபொழிந்திடப்பேரிவாரியின்மும்மடிமுழங்கச்
சரையுமாநதிசேரயோத்திமாநகரிற்றவரெலாம்வியப்புறச்சார்ந்தான் (௧0௬)

சரியில்காவேரிநதியிருமருங்குஞ்சார்ந்திடச்சரியில்சீரங்கப்
புரியடைந்துயருஞ்சிகரக்கோபுரங்கள்பொருந்தவேழாவரணத்து
ளரவணைமிசையினகல்விமானத்தினச்சுதன்வயங்கிடவிறைஞ்சித்
தெரிவையர்நிருத்தங்கீதமுந்திகழச்சிறந்தவாராதனஞ்செய்தான் (௧0௭)

மீனமாதத்திற்சனியுரோகணியின்விளங்குகம்பத்தினிற்றுவசந்
தானுறத்திருநாணடத்தியேமனுவின்றனயன்றான்மகிழ்ந்திடவவன்றன்
சூனுவின்வழியிற்றுலங்கியவசமன்சுதன்றசரதனெனுமரசர்
வானவர்மகிழவயங்குபுத்திரயாகந்தனைவளர்த்தனன்மாதோ (௧0௮)

தயரதனிடத்துமகந்தனிற்சோளகுலம்வருதருமவன்மாத்தா
னியல்புறவடைந்தேயிணையிலாவிமானத்திலங்கியபரமனையிறைஞ்சி
செயலுறுமனன்றான்மருவுதேசத்திற்றிருவரங்கேசனுய்வரவே
மயர்வறத்தவஞ்செய்குவனெனமதியோன்மருவுபுட்கரணியின்வந்தான் (௧0௯)

இமகரனுறுபுட்காணியின்மருவுமெதிரிலாமுனிவரையிறைஞ்சிக்
கமையுடையரசன்கழறுவானயோத்திகவிஞறவிளங்கரங்கேச
லமரர்கடுதிப்பவிவணின்வந்தடையவருந்தவம்புரிவோனெனவே
சமனின்மாதவர்களவன்றனைநோக்கிச்சாற்றுவமுளதெனமொழிவார் (கக0)

சுரர்பயமுறவேமுனிவரைத்துறந்துதுன்மதிவியாக்கிராசுரன்முன்
மருவிடுநீலிவனத்திடையடையவவன்றனைக்கருடவாகனனாய்
வருமிறைதிகிரிப்படைகொடுவதைத்துமறுவிலாத்தார்ப்பியன்வைசுருஞ்
சரியிலாச்சிரமத்திலங்கவேயவன்முன்பணிந்தனம்யாஞ்செய்மாதவத்தால் (ககக)

முத்தியையளிக்குமுதல்வனைத்தொழுதுமுகுந்தவுன்றனையருச்சித்துப்
பத்திசெய்தடியோங்கதிபெறமதிதோய்பயமுறுபுட்கரணியின்கண்
ணத்தநீயமரவருளுவாயெனவேயரிதிருவாய்மலர்ந்தருளிச்
சுத்தமாதவர்நும்மிடத்தின்யான்வருநாட்சொல்குவன்கேண்மினென்றறைவான்

இரவிதன்மரபினிராகவனாகியெழுமியானிராவணன்சிரங்கள்
கரமொடுதுணித்துவதைத்துமற்றவன்றன்கனிட்டனுக்குயர்ந்திடும்விமான
மருவிடுமெனையேயளித்திடுமவன்முன்மறுவிலாதுமதிடம்வைகச்
சரியில்காவேரிவளையவத்தலத்திற்சார்குவனென்றரிமறைந்தான் (ககங)

ஆதலினரசவரியிவணடைவனருந்தவஞ்செய்குவாயலையம்
மாதவனருளாலவன்விமானத்தின்வருவனீசிகரகோபுரங்கள்
போதனுமகிழவமைக்குதியெனவேபுகலவப்புரவலன்மகிழ்ந்து
வீதிமண்டபங்கோபுரமதிலேழாவரணமும்விதித்தமர்நாளின் (ககச)

சுரரிடர்கெடவேதசரதராசன்சுதனெனவரியிராகவனாய்ச்
சரியிலாமிதிலைச்சனகியைமணந்துதபோதனர்வைகுகானேகிப்
பரிவுடனிலங்கையிராவணன்கிளையோடவன்றனைவதைத்துமீண்டயோத்திப்
புரியிடைமகுடம்புனைந்தரசாண்டேயுயர்ந்ததன்பதத்திற்போநாளில் (ககரு)

சரையுமாநதியினமர்நரரரிகளெவைகளுஞ்சத்தியவுலக
மருவவேகருடவாகனனாகியங்குவோன்வீடணன்றனை
விரைமலரதனலருச்சிநீயென்றுவிமானமேல்விடலனையளிப்பக்
கரைசெயற்கரியகளிப்பினலவன்முன்கனகமார்விமானங்கைக்கொண்டான் (ககசா)

அரனெடுகயிலைமலையினையேந்துவீடணன்முன்னவன்றனினு
முரணுறவுமையாள்பதியுறைந்திடுமிவ்வண்டம்போலுலப்பிலாவண்டஞ்
சரிரரோமத்தினுனிதொறுந்தாங்குஞ்சக்கரன்மருவியவிமானஞ்
சிரசின்மீதொளிரச்சுரர்மலர்பொழியத்தென்றிசைவீடணனடைந்தான் (ககஎ)

தருமலர்மாரிபொழிந்திடப்பேரிசாகரந்தன்னினுமுழங்கப்
பரனமர்விமானங்கொடுநெறிவருவோன்பரிதிவானுப்பணிநிலங்க
விரைவினிற்படிபுட்கரணிசேர்தலத்தினிலங்கிடவிமானத்தையிருத்தி
யருமறைமொழியாலுயர்ந்துமாத்தியானவருக்கியமளித்திடும்வேலை (ககஅ)

இரவிதன்னவிர்ப்போல்விளங்கியவிமானத்திணையிலாப்பரமன்வந்திலங்க
வருமறைமுனிவர்தருமவன்மாவோடகமகிழ்ந்தாடியேவணங்கிச்
சரிரரோமங்கள்சிலிர்ப்பவானந்தவருவிநீர்நயனங்கடரவே
பரவைசூழிலங்கைப்பதியமரரக்கன்பிரான்றனைப்பணிந்தனன்மாதோ (கககூ)

மறையறைமுனிவர்தருமவன்மாவோடிறைஞ்சிடமகிழ்ந்தவீடணன்முன்
வெறியுறுமலரால்விமானமீதொளிரும்விமலனையருச்சனைசெய்ய
நிறைதவமதனாற்சரியில்காவேரிவந்திடுமலையிருமருங்கு
முறவயம்படிவார்பவங்களையகற்றியுயர்கதிதரப்பெருகியதால் (கஉ0)

அலைகொள்காவேரிநதியிருமருங்குமடைந்திடநோக்கியவரக்க
னலனுறுமரசனுடன்றவர்தமக்குநவிலுவான்மீனமாதத்தி
னிலகுரோகணியின்றிவறக்குயர்திருநாளிலங்கையினடத்திடச்செல்வேன்
மலருறுமயனைநிகருமாதவத்திரெனவவர்வணங்கியீதறைவார் (கஉக)

பரமபாகவதனைதருளாலேபவமகன்றுயர்கதிபெறவே
திருமகள்கொழுநனுவப்பதாந்துவசாரோகணஞ்சிறந்திடுந்திருநாட்
சரியிலித்தலத்தின்மறைப்பொருளுலவுசாத்திரநூல்கொடுநடத்தி
யருளெனமகிழ்வோடிலங்கையாள்பெருமானங்குராரப்பணஞ்செய்தானறிவால்

வனசமாமலரின்மடந்தைதன்மருணன்வயங்கிடமீனமாதத்தின்
சனியுரோகணியிற்றயங்கியதுவசாரோகணஞ்சிறந்திடத்தவத்தோ
ரினமனமகிழவிரதவுற்சவமும்மிலங்கிடயாவையுமுடித்தே
யனகன்வாழ்விமானங்கொடுநிகரிலாதவிலங்கையினடைந்திடநினைந்தான் (கஉங)

விரைவினிலிலங்கைநகர்தனின்மேவுவீடணன்விமானத்தைப்பரிவா
னிருகரத்தெடுக்கவசைகிலதாகியிருமைசானிலத்தின்வேரோட
வரைநிகர்புயங்கிழ்மடுத்தெடுத்திடவும்வருகிலதாகிமண்வீழ்ந்து
வெருவிமூர்ச்சித்துத்தெளிந்தரற்றுதலும்விமலன்வாய்மலர்ந்திவையுரைப்பான் ()

அருளுடனிசரிலரியமாதவஞ்செய்யறிஞனும்வீடணுசேட்டி
கிருதர்வாழ்பதியினமர்கிலேனிவணினிறைந்தபூங்காவினினீழற்
றருமவன்மாவோடிணையிலாமுனிவரிறைஞ்சயான்சார்ந்திடவதற்குப்
பரவுகாவேரியரியமாதவஞ்செய்துயர்ந்தமைபகர்வனென்றுரைவான் (கஉரு)

விந்தமால்வரையின்மருங்கினினுயரும்விலங்கன்மேன்மேதினிநதிகள்
சுந்தரமிகுத்தவரிவையராகித்துலங்கியேயமர்ந்திடுகினத்தின்
கெந்தருவரில்விச்சுவாவசுப்பெயரோன்கிளரொளிப்பதுமநாபனைத்தான்
வந்தனைசெயத்தெற்கடைகுவோனிவரைவணங்கியேயேகினன்மாதோ (கஉசு)

தெரிவையராகியிலங்கிடுநதிகளனைவருஞ்சிறந்தசந்தருவன்
றரையினிற்பணியுநலனெனக்குனக்கென்றுரைத்தவர்தமில்விரோதங்கள்
பெருகவேயமரப்பதுமநாபனைத்தானிறைஞ்சிவிச்சுவாவசுப்பெயரோன்
வருபவனிவரைவணங்கமற்றவனைநோக்கியேமாதர்களறைவார் (கஉஎ)

இயல்பினுலிவணிற்பணிந்தகந்தருவயாவரையிறைஞ்சினையெனவே
மயினிகர்மடவீரும்முள்ளிதிகர்க்கியான்வணங்கினனெனவொருவ
வுயரியளியான்யானெனவுரைபகரியிலைத்தவர்தாமெலாமொழியக்
கயலுறுகங்கைகாவேரியீங்கிருவர்கடுஞ்சினத்துடன்விரோதித்தார் (கஉஅ)

சுரர்நதியதிகியெனவவடனினுந்துலங்குகாவேரியானெனவவ்
விருவரும்விரோதித்தயன்பதத்திறைஞ்சியெய்தியவாறெலாமியம்ப
மறைமலருறுவோன்மாறிருவடியின்வயங்கினள்கங்கையாதலினுற்
பெரியவளெனவேபிறங்குகாவேரிபெருந்துயரோடும்வெள்கினளால் (கஉகூ)

சுரர்நதிக்கதிகமாகவேயுன்னித்தூயநான்முகன்வரத்தவஞ்செய்
திரையுறவருகாவேரியின்முனரிற்றிசைமுகன்றோன்றிவானதிக்குச்
சரியுறும்வரம்யான்றருகுவனவளிற்பெரியளாந்தவமுனக்கரிதென்
றுரைசெயச்சேரைப்பதியினின்யான்றன்முன்னரினுறத்தவஞ்செய்தாள் (கஙo)

தரையினினனேகவுகங்கழிந்திடவேதவஞ்செய்காவேரிதன்முனரிற்
பரமனுகியயான்கருடவாகனனுய்ப்பணிலமுந்திகிரியுமேந்தித்
திருவுரத்துறவேயெழுந்துநின்றுப்பண்சிறந்திடுவிமானமீதியான்றுன்
மருவுநாளளவுஞ்சுரர்நதிக்கதிகமாகுதியெனவரங்கொடுத்தேன் (கஙக)

ஆதலிற்றிருக்காவேரிதன்னாப்பணமர்வனீயேச்ருதியெனலு
மாதுயருடனும்வருந்திவீடணன்றன்மாயவுன்னடியிணையொருவே
னேதமற்றிடவேயிவனின்வைகுவனென்றியம்பிடவிறைவனீயிருக்கிற்
றீதுறுநிருதரடர்வரேகெனவேசிந்தைநொந்தவனிவைசெப்பும் (௧௩௨)

ஆயுசுவிபவமனைத்தையுமிராமனளித்தனன்முத்தியையருள்வாய்
நீயெனவிமானத்தொடுமுனையெனக்குக்கொடுத்தனனிசரிலாதிறைவ
தியனாநிருதசௌனமுமகலச்சிறந்தவுன்பதத்தினினுறவைத்
தூயமாநியமஞ்செயுமவையெவையுமறையெனச்சுந்தரன்மொழிவான் (௧௩௩)

நித்தியகருமமெவையுமென்பிரீதியாகவேநியமமுநடத்திப்
பத்தியுற்றிடவேநிலனையாள்வஃதுவும்பழுதிலானாகினையெனுநற்
புத்தியையடைந்துமனதினாங்காரம்போக்கியேபொறைமிகுத்தவனாய்ச்
சுத்தனாமெனையுன்னுளத்தினினைத்துத்தொழுகுதியென்றுபின்சொல்வான் ()

அறிஞனாமுனைநானளியினானோக்கியரவின்மேற்றென்றிசைமுகமா
யுறுகுவன்கமலனவாந்திரவயந்தானுலாவுபோதுன்னுடன்யானு
மறுவிலாவிமானத்துடனயனகரின்வைகிமற்றவன்பதமழியி
னிறைவுறுபரமபதத்தினேகுவனீயஞ்சலேகெனநிகழ்த்தினனால் (௧௩௫)

அரியிவையருளிமவுனனாய்வயங்கவறிஞன்மாலிணையடியிறைஞ்சி
யிருவிழியமாநதியெனப்புரளவரங்கன்வாழ்நகரியையொருவி
வருதுயருடன்றென்றிசைதனிற்போவோன்குடதிசையடிக்கழறிருப்பிச்
சிரசினால்வணங்கியிலங்கைமாநகரிசேர்ந்தரிதாள்சிந்தித்திருந்தான் (௧௩௬)

துயருறவரியைக்கருத்திடையமைத்துத்தூயவீடணனகன்றிடவே
செயலுறுவிமானத்தரவணையமருந்திருவரங்கேசனையன்டா
லியல்புறுமுனிவர்தருமவன்மாவோடிறைஞ்சியாராதனைசெய்து
மயர்வறவமர்ந்தாரென்றுமைமருண்ணன்மறுவினாரதமுனிக்குரைத்தான் (௧௩௭)

கந்தர்நற்றந்தையிவைசழறிடலுங்களிப்புறுநாரதமுனிவன்
விந்தைசேர்திருமால்விமானமீதமருஞ்செயலெலாம்விரித்துரைபுனித
விந்துபுட்கரணிப்பெருமையுமதுசூழ்ந்திலங்கியதீர்த்தமுந்தெரிய
வந்தகாந்தசனேயருளெனமொழியவரணியாழ்தவர்க்கிவையறைவான் (௧௩௮)

காசிபமுனிவன்கழறுசாபத்தாற்கவினுறுதேசசுநீங்க
மாசகன்றிடமாதவன்றனக்குரித்தார்மறுவிலட்டாக்கரமதனா
லேசறவுயருமவிரெலாமலியவிந்துநீராடியதலந்தா
னாசறுபயஞ்சூழ்ந்தவன்பெயரதனாற்சோமபுட்கரணியாயினதால் (௧௩௯)

இரவிதன்னளவாய்வயங்குபுன்னாகமதுதனைநோக்கினோரிலங்க
வருபவமொருவுந்திருவுறும்பரிசமகிழ்வொடாலிங்கனஞ்செய்யிற்
சரியின்மெஞ்ஞானந்தருநிழலமர்ந்துசக்கரன்பெயரையுள்கிடிற்று
னருமறைவேள்விப்பலமதாம்பிண்டமளித்திடின்னேகமட்சயமாம் (௧௪0)

தேவன்சந்திரனாமுனிவியாசனுமாய்த்தீர்த்தகாவலர்கடாங்குமுதன்
பாவமில்காலன்வயங்குபுட்கரன்சொற்பழுதிலாப்புட்கராக்கனுமாய்த்
திவமேநிகராகியவதிதெய்வந்திகழ்பரவாசுதேவனுமாம்
பூவலர்மதிபுட்கரத்தினீராடித்திலமளித்தார்பவம்போமால் (௧௪௧)

சரியில்வாமனனையிகழபசாரந்தகர்ந்திடத்தவஞ்செய்பார்க்கவன்றன்
மருவியநிலத்தின்வலவதீர்த்தத்துக்குறுதெய்வமிருடிமற்றவனே
துரிதமங்ககற்றுங்காவலன்குமுதன்றூயவனாமதிதெய்வ
முறைசெயிற்சீனிவாசனவ்வயத்தினுறுமவர்பிராமணத்தொலைபோம் (௧௪௨)

மோகனநூலைவகுத்திடும்பவங்கண்முரிந்திடவரனெனும்யான்று
னுகர்கள்வியப்பத்தவஞ்செயுஞ்சம்புதீர்த்தத்துக்குறுந்தெய்வநானே
யோகைகூறிருடியவிர்ப்புக்குத்தீர்த்தகாவலனுயர்ந்திடுசுநந்தன்
சாகரத்தமரச்சுதனதிதெய்வஞ்சார்ந்தயமூழ்குவோர்மருட்போம் (௧௪௩)

அகலிகைகுயத்திலணைந்திடும்பவங்களகன்றிடவமரர்கட்கிறைவன்
புகலுதற்கரியதவஞ்செயும்வசந்ததீர்த்தத்துக்குறுதெய்வம்புலனுர்
மகபதியிருடிகவுதமன்தீர்த்தகாவலனநந்தன்மாதெய்வம்
மகியுயர்சுநந்தனதினயம்படியிற்பிறர்மனையுறும்பவமகலும் (௧௪௪)

குகனயில்பெறவேதவஞ்செயும்பலாசதீர்த்தத்துக்குறுதெய்வங்குமர
னிகரிலாவிருடியவிர்புக்குத்தீர்த்தக்காவலனெடியபத்திரன்றன்
சசபதிபுயத்தினிலங்குகோவிந்தன்கழறிடினதிகதேவதைதா
னிகழ்விலித்தீர்த்தம்படிந்துகோதானமீகுவார்மகாபவமிறுமால் (௧௪௫)

கார்த்திகையாருங்கனலினையணைந்துகந்தனைப்பெறும்பவந்தொலைய
நாத்தனிற்பரனைநினைந்துமாதவஞ்செய்நாகதீர்த்தந்தனிலமையுந்
தீர்த்தகாவலன்சுபத்திரன்முனிமரீசிககவாகனன்றெய்வம்
பூத்திருப்பதியேயதிதெய்வந்துப்புப்புனல்படிந்திடுவோர்பவம்போம் (௧௪௬)

வகுளதீர்த்தத்துக்குறுந்தெய்வம்வலாரிமகபதிபுரோகிதனிருடி
சிகரநேருஞ்சடகோபனுந்தூயதீர்த்தகாவலனதிதெய்வ
நிகரின்மாதவனந்நீரினிற்படிந்துநெறியுறவம்பரமளிப்பார்
பகர்வதற்கரியவரிவையர்வதைகோவதைமுதற்பவமெலாம்பாறும் (௧௪௭)

சனகன்வேள்வியினைநடத்தியகதம்பதீர்த்தத்திற்சார்வுறுந்தெய்வம்
வனசமாமலரோனிருடியேசனகன்வயினதேயன்னயங்காப்போன்
கனகனந்தகவுத்தமனதிதெய்வங்களங்கமில்லாதவத்தோயந்
தனினுறப்படிந்தேயனமளித்திடுவோர்தாஞ்செயுமவமெலாந்தகரும் (௧௪௮)

ஆம்பிரதீர்த்தந்தனக்குயிரிருடிவசிட்டன்வானலரியோன்றெய்வஞ்
சோம்பினைத்துரத்துந்தீர்த்தகாவலன்மெய்துலங்குஞ்சேனாபதிநிகரில்
பாம்பினிடித்தவிருடிகேசனன்மாதெய்வமப்பயந்தனிற்படிவார்
தாம்பிதாமாதாத்துரோகமிற்றிடவேசரியில்பூதானங்கள்கொடுப்பார் (௧௪௯)

இந்துபுட்கரணிமுதனவதீர்த்தமிலங்கிடப்படிகுவார்பிரமன்
சந்திரனலரியிராமன்வீடணன்முக்கணன்றவநாரதனிவரைப்
புந்தியினமைத்துத்தருப்பணங்கொடுத்துப்புயங்கமீதமர்ந்திடும்விமானச்
சுந்தரன்பிரீதியாகவேதானங்கொடுத்தவர்சூழ்வர்நற்கதியின் (௧௫௦)

தூயவொண்டீர்த்தத்துறைவயங்கிடவேதுலங்கியசோமபுட்கரணி
நேயமாய்ப்படியப்பரிசிக்கப்பானநிறைத்திடச்சிரசின்மேற்றெளிக்க
வாயினாற்புகலச்செவியினாற்கேட்கமனத்தினாலுன்னிடக்காணத்
தியவெந்நரகினுறும்பவமனைத்துஞ்சிதறவேநரர்கதிபெறுவார் (௧௫௧)

வீமனுக்குறுமேகாதெசிபதனின்விழுமியதாநவதீர்த்த
மாமனைநினைத்துப்படிந்தவர்பத்துத்தலைமுறைவயங்குவர்கதியின்
றீமைவேரறுத்துத்துவாதசிதனினிவ்வொன்பதுதீர்த்தத்தினமிழ்ந்திப்
பூமனன்பிதாவைவணங்குவோர்மூவேழ்தலைமுறைபொலிவர்மால்பதத்தின் ()

சோமபுட்கரணித்தலத்திடைப்பிண்டந்துலங்கிடப்பிதுக்களுக்களிக்கிற்
றீமைவேரறவேசெயுங்கயாச்சிராத்தஞ்சமனதாஞ்சிறந்தகோக்கிராசத்
தூய்மனத்துடனீந்திடினெழுமூன்றுதலைமுறையவரொடுந்துலங்க
வாமையாய்வரைதாங்கச்சுதன்பதத்தினமரர்கள்வியப்புறவமர்வார் (௧௫௩)

நதியினுட்கங்கைமுராரிதன்பத்தர்தனிலரனாகியநான்சொற்
சதுமறையதனிற்பிரணவந்தெய்வந்தனிலரியதிகமாஞ்செயல்போல்
விதிநுதிசெயவேவிளங்குகாவேரிநாப்பணின்விமானமீதமரப்
பதியுறுமரங்கநிகர்நகர்பதினாலுலகத்துமிலையெனப்பகர்வார் (கருச)

அரவினினிலங்குந்திருவரங்கேசரமர்ந்திடும்பதியிடையடைவார்
தரையினின்மரணாந்தப்பிராச்சித்தந்தனையிச்சித்திடவேண்டார்
நரர்சதமுறவேதிருவரங்கப்பேர்நவின்றிடினுங்கதிபெறுவர்
பரவைசூழெழுதீவினினுறுமவருநினைக்கினும்பவமகன்றுயர்வார் (கருரு)

துயரறச்சனனமறவிறப்பறவான்சுவர்க்கமுநிரையமுமொருவப்
புயலெனவிமானத்தரவணைமிசையிற்பொலனுறுமரங்கநற்பெயரை
யியல்புறத்துதிநதுக்களித்துநின்றுடியிறைஞ்சிடவறிகிலாமூர்க்கக்
கயவர்கணுகருமனத்தினைவிலக்கிக்கடியநாய்க்கிடுவதுநலனே (கருசு)

சதுமறையுணர்ந்துபரமபாகவதச்சற்பிராமணருறுமனையி
னதியினியுயர்காவேரியினயத்தைநலனுறக்குடும்பத்தினமைத்து
மதியுறுஞானத்துடனொருநரந்தான்வழங்கினராயினுமவர்தான்
விதமுறுதெசதானப்பலந்தனினும்விழுமிதாம்பலனுறவுயர்வார் (கருஎ)

இந்துபுட்கரணியயத்தினிற்படிந்தேகாதெசிதனிற்றுயிலுறந்து
விந்தைநாயகனையிறைஞ்சிநற்கானம்விளம்புவார்பரமபாகவத
ரந்தகன்றிட்டிக்ககப்படார்நிரையமகலமெஞ்ஞானத்தையடைவர்
சிந்தையினரங்கமெனநினைப்பவருந்திகழுவர்முற்பவந்தீய (கருஅ)

தூயசீரங்கயாத்திரைவிரும்பித்துயர்கெடநெறிவருபவர்க்கு
நேயமோடன்னமளித்திடுபவருநீரினைக்கொடுத்திராவைகப்
பாயிருளொருவப்பானுமண்டலத்தைப்பேதித்துப்பழவினையொருவ
வாயிரநாமத்தையன்மாபதத்தினடைகுவர்தமர்க்கடல்சூழ (கருகூ)

ஏகராத்திரிசேர்ந்தரங்கன்வாழ்பதியினிருந்தவர்பவமெலாமிறுமா
ருகர்தம்பதவியழியுமென்றுன்னிநாரணனமர்பதிபெறவே
சீகரமெறிகாவேரிசூழ்ந்திலகுந்திருநகர்தனிலுறுநரராய்ச்
சாகரமணைசெய்பரமனைவணங்கிச்சனித்திடுந்தவத்தைநத்துவரால் (கசுo)

ஓதுதற்கரியவொளிகொள்வைகுந்தத்துயரிறையெளியவன்போலப்
பூதலத்திலங்குஞ்சோமபுட்கரணித்தலத்தினின்விமானத்திற்பொருந்தி
மாதவர்வணங்கவயங்கினனெனவேமகிழ்ந்தரனாரதற்குரைத்த
தீதெனவியாசனறைந்துபின்னிவணினியம்பியதுணர்கெனவிசைப்பான் (கசுக)

பிறிதிணையிலாதபராசரமுனிவன்பிருத்தியசத்தியன்சுபோதன
னெறியுறவயங்கும்பகீரதிமருங்கினெடுந்தவஞ்செய்திடத்தேவர்க்
கிறையவன்விடுப்பவருமரம்பையராலியற்றிடுமருந்தவங்குலைய
வுறுதுயருடனவ்விடத்தினையகன்றேயொப்பில்சீரங்கத்தினுற்றார் (கசுஉ)

இருவருமதிபுட்கரணியிற்படிந்தேயிலங்கியவிமானத்தினுயரும்
பரமனைவணங்கித்துதித்துநின்றுடிப்பழவினைபற்றறவிரிய
வருவிகள்பரவவகன்றகாவேரிநதியிடையருந்தவஞ்செய்ய
விரைவின்வந்தவணின்விழுமிதாந்தியானருடராயிருந்திடும்வேலை (கசுங)

குடகமால்வரையினிறைந்திடுகொண்மூப்பொழிந்திடக்குதித்துவந்துயர்சக்
கடகமாதத்திற்கடலெனவதிர்த்துக்கரைமருங்குற்றபாதவங்க
ளடியுடன்விழவேயறைந்துசிற்றூரினகமமர்முகடெலாம்வாரிப்
படிகிழிந்திடவேயயந்தொள்காவேரிபரந்தனளரங்கம்வான்றுவ (ககச)

நகனுறையசோகமலருறுதூளிநலனுறுங்குங்குமமார
நிகரிலப்போதினுறுமணியளகநிறைந்திடுதாமரைவதனந்
திகழ்வுறத்தோன்றுமணற்குவையுரத்தங்குரிப்பதாகியநகில்சிறந்த
துகிர்வளக்குமுதமதாமாய்வயங்குந்தோகைபோற்காவேரியடைந்த (௧௬௫)

நிறைமகரந்தமதுவினைநுகர்ந்துநிகரில்சைவலமாம்பச்சை
யுறுகலையகற்றியுவப்பொடுவிடனையணைத்திடுமொண்கொடிபோல
வெறியுறுமலராமரத்தினைத்திரைக்கைவிளங்கவாலிங்கனஞ்செய்து
பறவைகள்கலவிதன்னிலெண்குரல்கள்பரப்பவேகாவிரிபரந்த (௧௬௬)

**வேறு.** சேலெலாநயனமாகச்சிற்சிலசரங்களெல்லா
மேலுறுபுளகரோமமாகவேவிளங்குபூவான்
மாலினைப்பூசைசெய்யமறைபறைந்துறுவர்போலக்
கோலமார்போதிரோடுங்குரைத்தகாவேறியெய்தி (௧௬௭)

நத்தினம்பரவவோங்குந்தரங்கமெம்மருங்குநண்ண
நித்திலமெழுவபோலநிறைந்தசீகரங்கள்வீசிச்
சத்தியன்சுபோதன்வைகுந்தலத்தினிற்றவர்தம்பக்கம்
வைத்திடுங்கமண்டலங்கொண்டேகியேவருகாவேரி (௧௬௮)

செல்லெனவதிர்த்துப்போதுசிதறிடப்பொழிலைவீழ்த்தே
யல்லலிறவத்தோர்வைத்தகமண்டலமகற்றிப்பாற
வெல்லையின்முனிவனுற்காவேரியையிலங்குசையா
வொல்லையினமைத்துட்கொள்ளச்சத்தியனுண்ணும்போழ்தின் (௧௬௯)

அரவினின்விமானத்தோங்குமச்சுதன்விசும்பின்மீது
வருமசரீரியாகிமறுவின்மாதவத்தாய்கேட்டி
சுரர்நதிக்கதிசமாகித்துலங்குகாவேரிதன்னைப்
பருகுதறவிர்தியீதுநலனெனப்பகர்ந்தானன்றே (௧௭0)

வானசரீரியிச்சொல்வழங்கிடச்சத்தியன்றா
னுகர்நதியொப்பில்லாவயமெனநவிலுநீயுன்
மேனியென்முனரிற்காணவிளங்குவையாகினிந்நீர்ப்
பானம்யானொழிவனையவென்றிவைபகர்ந்தானட்மா (௧௭௧)

தவர்வியப்புறவேயிச்சொற்சாற்றியசத்தியன்முன்
னுவணன்வாகனனேயாகியுரத்தலர்மலர்மானோங்கக்
கவினுறுதிகிரிசங்குகதைவில்வாள்கரத்தினேந்திப்
புவியிடையமரர்பொற்பூப்பொழிந்திடப்பரமன்வந்தான் (௧௭௨)

சுரர்மலர்பொழியத்தோன்றுஞ்சோதியையிறைஞ்சியாடி
யிருவிழிகளிப்பநோக்கியேத்துசத்தியனையன்பாற்
பரமனுன்முத்தியீவேன்யானிந்தப்பதியினீதா
னரியமாதவஞ்செய்தென்னையடைதியென்றகன்றுபோனான் (௧௭௩)

முத்தியையளிக்குமையன்மொழிந்தவண்மறைதவோடுஞ்
சத்தியன்மகிழ்வினுற்காவேரியின்மருங்குசார்ந்து
சுத்தசாத்திகத்தையீயுந்துவாசெசாக்கிரத்தையுள்கி
மெத்தவஞ்செய்துமாயோன்வீடுபெற்றுய்ந்தானன்றே (௧௭௪)

முத்திசத்தியன்றான்பெற்றசெயலெலாமொழிந்துநேரில்
சத்தியவதிதன்மைந்தன்சரியிலாச்சனற்குமாரச்
சுத்தமாதவத்தோனிந்துசோயும்புட்சரணிதன்னிற்
சித்தசன்றந்தையெய்தச்செய்தவங்கேளென்றோதும் (௧௭௫)

சதுமுகன்றந்தையெய்தச்சனற்குமாரன்முனெய்தி
மதியுறுபுட்கரத்தின்வாயுவேயுணவதாக
வெதியருமகிழவேபஞ்சாக்கினிநாப்பணெய்தி
யதிதிசேயும்பரோடுமஞ்சிடத்தவஞ்செய்தானுல் (சஎசு)

ஊசலின்பிறப்பிறப்பங்கொழித்திடச்சனற்குமார
ஞசுகனுணவதாகவருந்தவஞ்செய்யும்போழ்தின்
வாசவன்வசந்தன்காமன்வானமங்கையரோடெய்தி
வீசியதவஞ்செய்பஞ்சாக்கினியின்மெய்வெருதுமொந்தார் (சஎஎ)

அறிவுறுசனற்குமாரனைம்பொறியகத்தடக்கி
நெறியுறத்தவஞ்செய்பஞ்சாக்கினியின்முன்னிற்கலாற்றுன்
வெறியுறுதருமன்பாறிவிதியினுக்கறையவன்றன்
பொறியுறுமுகத்தினுக்கிவையெலாம்புகன்றன்மாதோ (கஎஅ)

இந்திரன்பதவியோடேயென்பதமழியும்வண்ணஞ்
சிந்தையினுன்னைவைத்துச்சிகிச்சாவுணவேயாகச்
சந்திரப்பொய்கைதன்னிற்றவஞ்செய்தானசனற்குமாரன்
சுந்தரவுணர்தியென்றுவயன்பகர்ந்திடமால்சொல்வான் (கஎகூ)

வேறு. அனைவரும்வெருவவருந்தவஞ்செய்யுமறிஞனுஞ்சனற்குமாரன்ற
னினைவினுக்கினிதாமுருவமாயவன்முன்னிற்பனென்றயன்றனக்கருளித்
தனைநிகரிலாதவிறைவிமானத்திற்சர்ப்பமெல்லணையினையசன்றே
வினையெலாமகலவயங்கொள்சந்திரபுட்கரணியின்மேவினன்மாதோ (கஅ0)

தோத்திரம்பாடிவயங்கிடக்கடிசூத்திரமெழின்மருங்கிடைதுலங்க
நேத்திரங்கருணைநிறைந்திடச்சிரசின்சிகைவெரினீண்டிடக்குழையின்
காத்திரமணிக்குண்டலமலைந்திடவேகரவிரற்பவுத்திரமொளிர
நாத்திருமறைநூலெழமுந்நூலுரத்தினிலங்கவேநாரணன்வந்தான் (சஅக)

ககபதிசேனைபதியகிபதிவாள்கதைவளைதிகிரிவில்லிவைதா
னிகரிலாவேதமொழிபிருத்தியராய்நிறைந்திருமருங்கினுஞ்சூழ
மசபதியிமையோர்மலரயன்மகிழமறையினைவிளங்கவேயறைந்து
சுசியுறத்தவஞ்செய்சனற்குமாரன்முற்சேர்ந்தனன்றினகரனெனவே (சஅஉ)

பிருத்தியர்சூழமறையறைபவனுய்ப்பெயர்ந்திடுமுபாத்தியானவனைத்
திருத்தமாதவனுய்த்திசழ்சனற்குமாரன்வணங்கியேசெம்பொனுதனத்தி
னிருத்தியாச்சரியமெழவிருகழலிலங்கிடநோக்கிமெஞ்ஞானக்
கருத்தினுலவன்றன்செயலினைச்சிறிதுங்கருதவுமரியதாய்மொழிவான் (கஅஙு)

மறையறைபவனுய்ப்பிருத்தியர்சூழவருமுனையுருவினின்மதனென்
றறையலாமிருக்குமுதற்பகர்செயலாலயனெனமொழியலாமவிராற்
கறையடியிடரைக்களைந்தமாலென்றுகழறலாமிவர்களிலெவனென்
றறிந்திலேனுனைநானண்டமுற்றினுக்குமற்புதவென்றிவையறைவான் (கஅச)

நீயமர்நகரமெதுகுலமேதுநிகரிலாக்கோத்திரமெதுநற்
றுயெவடந்தையெவனுனக்குயருந்தலைவனார்நீமறைதரவே
நேயமாயிவைசொற்பிருத்தியரிவரார்நிகழ்த்துகென்றிறைஞ்சியேயியம்ப
மாயவன்முறுவலரும்பிடவவன்றன்மகிழ்ச்சிகூர்ந்திடவிவைபகர்வான் (கஅரு)

உறையவோர்நகருமேவியானெனக்குமுளன்குலங்கோத்திரமிலையாற்
சிறுவனென்றெனையேயுவந்திடன்னையும்பிதாவையுந்தெரிகிலேன்சிறந்த
விறவனையெனக்கெவ்விடத்தினுங்காணேனென்னுடன்வருமவரெவரென்
றறிகிலேனிவருநெறியினையடைந்தாரதிஞகேளிவையெனவறைவான் (கஅசு)

அரியமாதவரினதிகமாயமர்ந்தியானறைபொருளினையறியென்
றுரைசெய்வான்கருமமெதுநலவசனமெதுவிழியெதுநலமென்றாய்
வருவனவெதுசொல்லேகுவதொதாரமெதுவெதுவயங்களுதாரந்
தரணியிற்சனனமெதுபிறவாமலிருப்பதேதெனுமுரைபகர்ந்தான் (கஅள)

சதுமறையெவையுமறையுமத்தியானபுருடனிங்கிவையெலாஞ்சாற்ற
விதியினைநிகர்க்குஞ்சனற்குமாரன்றான்விளம்புவானசையாமகன்ற
வுத்தியின்றுவத்திரையமாமலையின்விடையமாஞ்சுழியிடையுழன்று
விதனமோகங்களெனுமகங்காரங்காமமோடார்க்கமேவமெலிந்தேன் (கஅஅ)

பல்பிறப்பாகியனேகயோனியிலுமுழன்றவென்சிந்தையிற்படியுந்
தொல்வினைப்பவத்தாலதுவிதுவெனுஞ்சந்தேகமாந்துனிர்கொள்பாதவத்தை
நல்லமாமறையைநவிலுநின்வாக்காந்தரிகையானறுக்கிடவிவணிற்
சொல்லும்வேதாந்தப்பொருளினையியம்பென்றுரைத்திடச்சோதியீதறைவான் ()

கருமமேதருமம்வசனஞ்சத்தியநற்கண்விசும்பலரியொன்றறியே
யுரைசெயும்லகுவேசாந்தியாதாரமுயர்ந்தெங்குமுறையிறைசெயலே
சரியிலாவனாதாரம்பரப்பிரமஞ்சனனமுஞ்சலனமுமிலாது
பரணியற்றுவதேயெனவிவைமொழியச்சனற்குமரனிவைபகர்வான் (கக0)

இரவியாவதுவுந்தருமமாவதுவுமியாதெனவுபாத்தியீதறைவான்
சரியில்மெஞ்ஞானந்தபனனேயாகுந்தருமமாவனமறைப்படியே
பரவுகாமியங்கள்பிணியறவுலோபம்பற்றறச்சுத்தனாயுயர்ந்து
திருமகள்கணவப்பிரதியாயாகஞ்சிறந்திடத்தந்திடுந்திறமே (ககக)

சீவனில்லாதவுடற்சவமியாதுஞ்சேட்டிக்குமுயற்சியில்லதுபோல்
வீவில்பரமான்மாவமர்விலாவண்டம்விளங்குதலிலாதுபாழாகும்
பாவகனிரவிசமீரணன்முதலாமெவைகளும்பாணியற்றிடவே
தாவியெவ்விடத்துந்தயங்குவாரெவையும்படைத்தளித்தழிப்பவன்றனே (ககஉ)

இவையெலாமுரைத்துச்சனற்குமாரன்றன்மகிழ்ந்திடவியம்புவானெங்கு
முவமையில்பரனையறிந்திடவரிதேயுணர்ந்திடுமுபாயம்வேதாந்த
நிவருநற்பொருளைப்பத்திமெஞ்ஞானநிறைந்திடக்காண்டியேபரம
னுவகையோடுன்னுள்வயங்குவானெனவேபிருத்தியரோடவண்மறைந்தான் ()

கருத்தினிற்றிமிரமொருவமெஞ்ஞானக்கதிரினைக்காட்டியவறிஞன்
பிருத்தியருடனேமறைதலுமருவிபெருகிடுநயனநீரிழியா
வொருத்தனுமிவனென்றவனமர்தலத்தினுற்றடியிறைஞ்சிடுமவன்றன்
வருத்தமற்றிடவெண்கணன்வரமனதின்மகிழ்வுறவணங்கியீதறைவான் (ககச)

வேதம்வல்லவனாய்ப்பிருத்தியர்சூழவிளங்கியென்முன்னரினடைந்து
பாதகமொருவச்சரியில்மெஞ்ஞானம்பகர்ந்தவன்யாவனென்றறியே
னோதவன்செயலையெனவுரைத்திடவேயொப்பிலாவரங்கத்தின்விமான
நாதனீவணங்கவடைந்தவனுணர்கென்றிணையிலாநான்முகனவில்வான் (ககரு)

வளைகதைதிகிரிவாடனுச்சேடன்வயினதேயன்மறைஞானங்
கிளர்வுறுசேனைக்கதிபதிமுதலோராகியேயமர்பிருத்தியர்க
ளளிசெறிந்திடவுன்முனரடைந்தவனேயைமுகனியானரிவறிய
துளவணிபரமன்றிருமகள்விரும்புஞ்சோதியாமென்றிவைசொல்வான் (ககசா)

மறையுறுவகையாஞ்சாத்திரமெவையும்வல்லவனாயினும்பரனை
யறியுமெஞ்ஞானமிலாதவன்முற்கத்தடிபடுமத்தனேயாகும்
நெறியறுமவனாயீனசாதியரினீசனாயிடினுமால்பத்தி
யுறுமவன்பதினாலுலகினுள்ளோவர்க்குமுயர்ந்தவனுணர்தியென்றுரைப்பான் ()

சருகினைப்புசித்துவரையினிலுலப்பில்வருடநற்றவஞ்செய்வார்பலமு
நரசரிநாமமிலங்குபுட்கரணிதன்னிடநாவினுமுளத்தின்
மருவவேகடிகையறைவுறுமளவுமகிழ்வினோடமருவர்நலத்தை
யுரைசெயினிவற்றிற்சகசிரத்தொருகூறுறுமெனவுரைத்தயனகன்றான் (கசுஅ)

அயனிவைமொழிந்தங்ககலவேபிணையில்சனற்குமாரன்பரனருளு
மியல்புசான்ஞானமிலங்குதத்துவத்தையிருதயத்திருத்தியேமதித்தோ
யயமுறுதலத்தின்மனதுநின்மலமாயருந்தவஞ்செய்துவைகுந்தத்
துயர்பரன்சரணையடைந்தனனெனவேயுரைத்துமாமுனிபினர்மொழிவான் ()

**வேறு.**

கோலமயிடம்முழுவைகோளரிதுரங்கந்
தோலுருகுவாலிபமுவப்பிலவைசூழத்
தாலம்வெதிர்கள்ளியுயர்சாலமிவைமல்கு
நீலிவனமென்பததின்யாருநெறிசெல்லார் (உ00)

அந்தவனம்வைகுமதிபாவியருளில்லான்
சந்ததமஞ்ஞானமிசையேமனதுசாரு
மந்தகனெனச்சிரமுறித்தெவர்சொம்மெல்லாஞ்
சிந்தைமகிழ்வோடுகொடுவந்துபசிதீர்ப்பான் (உ0க)

நெறியுறுகுணத்துநெறியின்கணின்வதைத்த
மறையவர்களெண்ணிலர்கண்மாதர்களநேகர்
முறைமையிலனின்றுழிமுயன்றபொருளட்டுச்
சிறுவரொடிலாண்மகிழவேயமர்தினத்தின் (உ0உ)

**வேறு.**

கவுதமியமுனைகங்கைகண்டகைவேணிதிய
பவமகன்றிடவேபாறும்பம்பையேமுதலதான
நவையறுநதியிற்றோயம்படிந்துநான்மறையையோதுந்
தவர்மகிழ்மறையோனீலிவனந்தனிற்சார்ந்தானன்றே (உ0௩)

சாத்திரமறையோனீலிவனத்திடைச்சாரக்கண்டே
காத்திரகாயதோடுங்கயவனுங்கள்வனெய்தி
னேத்திரஞ்சிவப்பக்கையாலவன்றனைநெருக்கத்தூயோன்
வேத்துமெய்நடுங்கியேநாக்குளறிடவிளம்பலுற்றான் (உ0௪)

மாசுறவிழையுநைந்தகலைமருங்கிற்கண்டாயோர்
காசுமென்கையினில்லைக்கடுஞ்சினத்துடனேயென்னை
நாசஞ்செய்ததனாலெந்தநலனுனக்கெய்துமென்ன
நீசனவ்வுரையைக்கேட்டுநகையுறநிகழ்த்தலுற்றான் (உ0ரு)

நெடியவனாகியுன்றன்குரம்பையைவளர்த்தநீதா
னுடைமையில்லாதுவந்ததென்னெவனுறைவதாகக்
கடிதினிவணீவந்தாய்கழறெனமொழியத்தூயோ
னுடறடுமாறநெஞ்சமுளைந்திவையுரைப்பதானான் (உ0சு)

உத்தரதிசையிற்கங்கையமுனைகண்டகையொப்பில்லா
நத்தினம்பரவுகோதாவரியியல்வேணிஞர
மெத்தியபம்பையீதிற்றோய்ந்துயர்விமானத்தோங்கு
மத்தினஞ்சூழ்காவேரிபடிந்திடவடைந்தேனென்றான் (உ0எ)

தூயவன்கழறலோடுந்துன்மதிக்கயவன்சொல்வான்
பாயயமலியுமிந்நதியினிற்படியினெய்துஞ்
சாய்விலாநலனேதந்தவியல்பெலாஞ்சாற்றுகென்ன
வாயுமாமறையோனெஞ்சமஞ்சியேயறையலுற்றான் (உ0அ)

கறவையாவதைசஞ்ஞரிவதைநெஞ்சிற்களங்கமில்லா
மறையவன்வதைமற்றுள்ளபவமெலாம்வளர்தலின்றி
யிறவித்துநதியிற்றோய்வாரிலங்குயர்சதியினென்றே
நெறியுறுமறைவலாளனிசழ்த்திடக்கேட்டானன்றே (௨௦௯)

நவையறுமறையோன்மெய்யைப்பரிசித்தநலத்தினாலுங்
கவின்றுறவிமானத்தோங்குங்கருமுகிலென்றமாற்றஞ்
செவியினையுறுத்தலானுந்தியவன்செய்தவெண்ணில்
பவமறவவனற்றுளிற்படிந்திவைபகரலுற்றான் (௨௧௦)

ஆருநேரொப்பிலாதவந்தணவடியேனிந்தப்
பாரினிற்றொலைவிலாதமறையவர்பசுவின்கூட்ட
நாரியரனேகரோடுவதைத்தயானரகெய்தாமற்
சீருறுநதியிற்சேரவருளெனச்செப்பினனால் (௨௧௧)

கயவனெஞ்சிரக்கத்தோடுமினியவைகழறலோடுஞ்
செயலுறுமறையோன்சிந்தைத்துயரறத்தெளிந்துநோக்கி
கயலுறுந்திருக்காவேரிபடிந்திடிற்கடியனாகு
மியமனூரதனிற்பூதாதெய்துவைகதியினென்றான் (௨௧௨)

தரையினிற்செய்தபாவஞ்சகலமுமிணையிலாத
வரியினைச்சூழ்காவேரியடைந்திடினகலுமென்றங்
குரைசெய்தமறையோன்றன்னையுவப்பொடுசென்னிமீதி
னிருகரங்குவித்தேயையவேகுதியென்றானன்றே (௨௧௩)

வதைசெயக்கரத்தாற்பற்றுமறவனெஞ்சிரக்கமெய்தி
யிதவசனங்கள்பேசியென்னத்தொழுவத்தூயோன்
கதுமெனச்சென்றுபின்னர்க்கடுகியேபாரினேரில்
சதுமுகன்றந்தைவாழுமரங்கமாபதியைச்சார்ந்தான் (௨௧௪)

மறையவனேகலோடுமற்றவன்வசனத்தாலே
யறிவுறமனைவிமைந்தரெனும்பரிவகற்றிச்சீயங்
கறையடியுழுவையெண்குசலந்தடர்கானமேவி
வெறிமலர்ச்சோலைசூழ்காவேரியின்மேவும்போதில் (௨௧௫)

வரையெனத்திரண்டதோளார்வலனுறுமயிலையேந்தி
யுருமெனவதிர்த்துச்சூழ்ந்தவுக்கிரக்காலதூதர்
திரையுறவருகாவேரிநதியிடைச்சேர்வான்றன்னை
யெரியெழவிழித்துப்பாசம்பிணித்தடித்திழுக்கும்வேலை (௨௧௬)

சடியசாதகர்தான்பற்றக்கலக்கமுற்றரற்றுகின்ற
கொடியன்வாய்ச்சத்தங்கேளாக்கேசரன்குமதனென்போர்
படிவிசும்பளந்தோன்பாதம்பணிந்தமர்சேனைநாத
னடியவர்நொடிப்பில்காலதூதரையடர்த்தாரன்றே (௨௧௭)

கதையினுங்கரத்தினாலும்புடைத்தடர்த்துயர்கால்வீசு
முதையுறக்குருதிசோரவோடுசாதகர்கடம்மைக்
கதுமெனக்குமுதன்சென்றுகலங்கலீர்நின்மினந்த
நதியிடைவருவோன்றன்னைநலிவதென்னெவர்நீரென்றான் (௨௧௮)

அரிநகர்காவலாளரடைந்திவைமொழிதலோடுங்
குருதிவாயொழுகவோடுங்கொடியசாதகர்கணின்றே
யிரவிதன்சிறுவன்றூதரியாங்களிவ்வுலகத்துள்ள
நரர்தமைபற்றியெங்கணாதன்முன்விடுப்பமென்றார் (௨௧௯)

தூயவர்தம்மைப்பற்றத் துணைவர்போலணுகிநேரில்
வீயுறுபொழில்கள்சூழும்விழுமியநெறியினுய்ப்பத்
தீயவர்தம்மைப்பற்றச்செருநர்போற்கோரரூபாய்க்
காயெரியயமுட்டைக்குமயனத்தினிழுப்பங்கட்டி (உஉ0)

தரையினிற்சீவனெல்லாந்தருமனுமெங்கணுதன்
மருவுலோகத்தினெய்திமற்றவர்கருமத்தாலே
நிரையமுஞ்சுவர்க்கந்தானுநிறைந்திடவமர்வர்யாங்கள்
வெருவவேபுடைத்தநீரார்விளம்பெனவறைந்தாரன்றே (உஉக)

சாதகரிவைகள்கூறச்சரியிலாச்சேனைநாதன்
பாதலூழியங்கள்செய்வோமியாமிந்தப்பதியினெய்தத்
தீதறவருவோன்றன்னைச்சினமுறப்பற்றக்கண்டே
மோதினமும்மையென்றுமொழிந்திடவவர்கள்சொல்வார் (உஉஉ)

நட்டருக்கதிகனானசோரனந்தணரையட்ட
கட்டனுமிவனைப்பற்றிக்கடியவெந்நிரயந்தன்னில்
விட்டிடப்பிடித்தவெம்மைப்புடைப்பதென்விளம்புமென்னச்
சிட்டனுஞ்சேனைநாதனடியவர்செப்பலுற்றார் (உஉஙு)

எல்லையில்வதைகள்செய்தேயிழிவினையடைந்தாரேனு
மல்லிமாமலர்மாநாதனமரரங்கத்தைச்சூழச்
செல்லுறுபொழில்சேரேகயோசனைநிலத்தைச்சேரி
னெல்லையில்பவங்களோடவுயர்குவரென்றாரன்றே (உஉச)

மாதவனடியரீதுநிகழ்த்திடமறலிதூதர்
சீதரனகரைச்சேர்வார்திவினைதீருமாகிற்
பாதவங்கொடிபுற்பூண்டுபவங்களாலன்றோவிந்தப்
பூதலத்தெழுவதென்றுபுகன்றிடக்குமுதன்சொல்வான் (உஉரு)

அரவணைமிசையினையனமுதுசெய்பதார்த்தமாக
விரைபுரைதெரியலாகவிளங்குகாவணங்களாக
நிரைகளுக்குணவதாகநிறைமரங்கொடிபுல்லாகிச்
சுரர்தமக்கிச்சையாலேதோன்றுவரென்றுசொல்வான் (உஉசூ)

இந்துபுட்கரணித்தீர்த்தத்திலங்கியநகரைச்சூழ
வந்தமார்நிலத்திலேகயோசனையளவதாக
விந்திரன்முதலினோர்களெம்மனுமதியில்லாது
வந்திடவரிதுசென்மினென்னமற்றவர்கள்போனார் (உஉஎ)

சந்திரப்பொய்கைசார்க்குந்தலைவர்கடண்டான்மோதி
யுந்திடக்குருதிவாயிலொழுகிடவிரைவிற்பாறி
யந்தகன்முனரிற்சென்றாரற்றியேவணங்கலோடுஞ்
சிந்தையிற்கனன்றுவானினிரவிசேய்சீறினுனல் (உஉஅ)

சீறியவிரவிமைந்தன்றிருவரங்கத்தைச்சூழு
மாறில்காவேரிதன்னின்வருபவன்றன்னைப்பற்ற
வூறியகதத்தாற்சேனாபதியடியார்களுற்றே
நூறினரென்பதாகவறிந்தனன்ஞானநோக்கால் (உஉகூ)

அரவணைமிசையினேரில்விமானத்தினமர்ந்துதோன்றுந்
திருவரங்கேசன்றன்னைத்தியானத்தாலிருகைகூப்பி
யிருகணீர்சுலுழநாவாற்றுதித்திடுமிரவிமைந்தன்
குருதிவாயொழுகநின்றதூதர்க்குக்கூறலுற்றான் (உங0)

சுரையினைப்பருகிநேரில்சுருதிவல்லாரைச்செற்றுப்
பாரிலைவிரும்பும்பஞ்சபாதகரானோரேனுந்
திருமகள்கணவன்வாழுந்திருப்பதிதன்னைச்சேரி
னிரவிகாணிமம்போற்பாவமிறக்கதியிலங்குவாரால் (உகூக)

ஆதலாலருப்பமாகவகன்றிடுபவங்களெல்லா
மாதவனகரைச்சேரவருபவன்றன்னைப்பற்றி
யோதுதற்கரியமாலினடியவருதையானோர்ந்து
பீதியுற்றடைந்திர்கேண்மினென்றிவைபேசலுற்றான் (உகூஉ)

அரிதிருநகரிற்செல்லாதொழிமின்களடைந்தீராகின்
மருவுமென்பதத்துக்காணிவந்திடுமாலினன்பர்
பரவியும்முடலினென்புபறிபடப்புடைப்பரீது
திரமெனப்பரிதிமைந்தன்றூதர்க்குச்செப்பினானால் (உகூங)

மறலிதன்றூதர்பாறவதைசெய்தமறங்களெல்லா
மிறமெயினடுக்கந்தீரவிணையில்சாவேரிதன்னி
னுறுபவன்றன்னையஞ்சேலென்றுரைசெய்தசேனை
யிறையவனடியார்நேரிலரங்கத்தினெய்தினாரால் (உகூச)

சாதகர்பிணித்தபாசந்துணிந்திடத்தயங்கினானைத்
நீக்கல்தழுதனோடுங்கேசரனெய்திச்சேனை
நாதன்முன்விடுப்பவன்றான்வணங்கலுநகைசெய்தேதன்
றூதர்களுடனேவைகித்திரிகுதியென்றுசொன்னான் (உகூரு)

சேனைநாதன்முன்செப்பத்தினம்பவஞ்செய்தேநீலிக்
கானிடையமருங்கள்வன்கடியவெவ்வினைகடீர
வானவர்மகிழுமாலினடியனாயினனென்றோதி
யானனமிலங்கப்பின்னும்வியாசனீதறையலுற்றான் (உகூசா)

**வேறு.** காவிரியமர்தேசத்தினைப்புரக்குங்காவலன்சோமுகனென்போன்
சேவலோனெனவேசினமிகுகுரூரன்சினேகம்வைத்திடவுயரறனில்
பாவமார்மனத்தோன்மந்திரிகதத்தாற்பழுதிலாவந்தணன்மடியக்
கோவெனவரற்றியிருபிறப்பாளர்குவிதராவரசனுக்குரைப்பார் (உகூஎ)

மன்னநின்கொடியமந்திரிகதத்தான்மடிந்தனன்சற்பிராமணனிவ்
வின்னல்பாரிடவேயிவன்றனையடுத்தியடாதிவனென்சொலைமறுத்தாற்
றுன்னிடும்பவங்களெனவுரைத்திடலுந்துன்மதியவன்றன்மேற்பரிவு
மன்னவனவரைச்சினத்தடர்ந்திடலுமருளடைந்தகன்றனர்மறையோர் (உகூஅ)

முறைமையிலரசன்மறையவரறைந்தமொழியினைமறுத்தலுமறனார்
மறைநெறியகலத்திருமகள்விலகவருடம்பன்னிரண்டுறவானி
னுறுகணநிறைந்துமுலோபியர்கரத்தினிதியெனவுலகினிற்பொழித
லறவுயிரனைத்துமலைந்திடத்திருக்காவேரிநீர்வரவுமற்றனவால் (உகூகூ)

பாதகங்கொடிபுற்பாசடைபடியிற்பாவகனெரித்தபோற்கரியப்
பூதலம்வெடிப்பப்பறவைகள்மிருகம்பொருப்பொடும்பொடியதாயுதிர
மாதவர்திகைப்பவகன்றகாவேரியுறுபுனலூற்றுநீரறவே
யாதவனுகாந்தத்தரனுதல்விழிபோற்றிசைதொறுமனலினைவிரித்தான் (உச0)

களமறக்கனலைக்கதிரவன்பரப்பக்காசினியுயிரெலாமடிய
வினலுறவுயிரோடிருந்தவர்திருக்காவேரியையிறைஞ்சியேயிரங்கப்
புனிதராயரங்கப்பதியினைக்காக்கும்புகழுடைக்கேசரன்குமுத
னினமொடுமடைந்துவருந்தனீரெனவேயியம்பிமற்றீதுசெய்தனரால் (உசக)

ககனமீதெழுந்தகனமெலாங்சரத்தாற்பிசைந்துவெங்கதைகொடுபுடைப்பச்
செகமெலாம்புனல்கள்புரளவேதிருக்காவேரியிற்சலங்கொழித்திடலு
மகியெனச்சினங்கொளறனில்சோமுகனுலடர்ந்திடுபிரமகத்தியினுற்
சிகியெனவெழுந்தவரிவையாமலகைசெலமெலாம்பருகியதன்றே (உசஉ)

பிரமகத்தியினுற்பிறந்திடுபெண்பேய்பெருகுகாவேரியினயத்தைப்
பருகலுங்குமுதன்கேசரனிவர்கள்பரவிவெங்கதையினுற்புடைப்ப
வெருவியவலகைகொடிப்பினிற்பாறிவிழுந்திடவவனியிற்சனங்க
ளருவினையறத்தாம்வயங்கினரெனவேமொழிந்துபின்வியாசனீதறைவான் ( )

அத்தியின்வயங்குமமரர்கட்கிறைவன்சகாவெனவமருங்கந்தருவன்
சித்திரசேனன்றமரொடும்விசும்பிற்செலவவன்சாயைதென்னரங்கத்
துத்தமவிமானத்துறுதலுங்குமுதனொருகரத்தவன்றனைப்பற்றிக்
குத்திவானெறியப்பிலசத்தீவினிற்றன்வலனெலாங்குறைந்திடவிழுந்தான் (உசச)

வேறு. வித்தகக்குமுதன்கைகொடெறிந்திடுவிசையினுப்பி
னத்தியைக்கடந்துநீண்டபிலகத்தினலரிவீழ்ந்த
சித்திரசேனன்மேவும்பதமிறத்திகைத்தவன்றன்
மித்திரர்விபுதர்கோனுக்கிவையெலாவிளம்பினரால் (உசரு)

வலனுறுசகாவாயோங்குஞ்சித்திரசேனன்வாரி
யலையெனவலைந்துவிண்ணின்பதமறவலரிவீழ்ந்த
நலனிலாவுரையைக்கேட்டுநாட்டமாயிரமும்வெந்தீ
யுலவவேசீறியேவாலும்பன்மீதேறினுனல் (உசசு)

கயிலையங்கிரிமேற்றேன்றுங்கனமெனக்கவரிவீச
முயலகன்வெரிகின்றான்போன்முனிந்துவெண்களிற்றிலேறிச்
சயிலபிச்சங்கள்வீழத்தடிந்தவச்சிராயுதந்தன்
கையினுறவலாரிதோன்றக்கடலெனவிபுதர்சூழ்ந்தார் (உசஎ)

விடையர்கந்தருவருவர்சித்தர்சாரணர்துவட்டாவெய்யோன்
கடலரசியமன்வாயுகனலவனிருதிபொன்மன்
மிடையுமாகரிதேராளிவிலங்குயர்ககமீதேறி
வடவனலெனவேசீறிவலாரியோடெதிர்ந்தார்ன்றே (உசஅ)

இருகரைபுரளவீசுமலைகொள்காவேரியெய்தி
அரவணைமிசையிற்றேன்றும்மரங்கன்வாழ்புரியைச்சூழ்ந்தே
யுருமுறுகனங்களோங்கியுதிரமாவருடம்பெய்ய
வரியெரிசொறியவெண்ணிலாசுகந்தூவியார்த்தார் (உசகூ)

வாசவனேவலாலேமலையெலாமலையச்சண்ட
வாசுகனறைதலோடுமரங்கமாநகரைக்காக்குந்
தேசுறுகுமுதனுட்டந்தீயுறவுயிர்ப்பின்காலை
வீசவாண்டெதிருங்காற்றைவிழுங்கியதிமைப்பினம்மா (உருo)

கடையுகவாயுமானக்கதித்தறைகாலைநாசி
நடுவெழுபவனன்றன்னுலழித்திருநாட்டவெந்தீ
முடுகவேயெதிர்ந்துநின்றகுமுதனைமுனிந்துநோக்கி
விடையர்கந்தருவர்சித்தர்விபுதர்களடர்ந்தேயார்த்தார் (உருக)

வேலையில்குந்தம்பிண்டிபாலங்கடண்டுவீசி
யாலமாவிடமேபோலவடுகணைசொரிந்தங்கார்த்துக்
காலன்காலியமன்பொன்மன்கதிரவர்சூழக்கண்டே
கோலமார்குமுதன்மால்பூதத்தொடுங்குவிதனுனல் (உருஉ)

எரியெரிபிறவேகாலுங்காலறவென்றென்றுந்தா
னரியுறநடுவனுனாடுவுறவமரரீச
ரிரியவேகுமுதன்றண்டாலெற்றிடவிரத்தவெள்ளம்
பரவைபோன்முடுகியட்டதிசையிலும்பரந்ததம்மா (உ௫௩)

அரிவரமுடுகிப்பாறுநரியெனவமரரோடக்
கரமுறுகதையினலேகலக்கியகுமுதன்மீதி
னெரியுறுநயனனகியிந்திரன்குலிசந்தன்னை
விரைவினின்வாங்கிவிட்டுவிண்டுளங்கிடவேயார்த்தான் (உ௫௪)

அட்டமாதிசைகளெல்லாமழலுறவமரர்கோமான்
விட்டவச்சிராயுதத்தைவிபுதர்கணடுங்கவார்த்துக்
கிட்டியகுமுதன்கையாறபற்றியேகிளர்ந்தங்கோடை
கட்டியகரிமருப்பிற்புடைத்தனன்கலங்கியோட (உ௫௫)

சரிவெரிநற்றகோமான்றன்வெரிக்குமுதன்காணப்
பரிபவஞ்சும்மையாகப்பயமொடும்பாறலோடும்
விரைவின்மற்றிவன்றன்கூடிவெருவலேயென்றுகூறிச்
சரியிலாக்குலிசந்தன்னையீந்திடத்தளர்ந்துபோனன் (உ௫௬)

பரிபவமுதுகைபற்றிப்பயமுனேநெறியைக்காட்ட
வெருவியவமரரோடும்விபுதர்கோனகரினெய்திச்
சிரசினைவளைத்துநாணுந்திடுக்கமும்மலிகின்றன்முன்
பிரமன்பினுகனேடெய்தப்பணிந்தவன்பேசலுற்றான் (உ௫௭)

என்னுயிர்த்துணைவனுனசித்திரசேனனேரார்
பொன்னிசூழரங்கந்தன்னிற்பொலிவுறுவிமானச்சாயை
மன்னவேவருகின்றானவன்கையாற்குமுதன்வீச
வன்னவன்பிலகத்தீவினரற்றியேவிழுந்தானன்றே (உ௫௮)

தளர்ந்தவன்விழுந்ததன்மைமற்றவன்றமர்கள்சாற்றக்
கிளர்ந்தியானமரரோடுமரங்கமாநகரைக்கிட்டி
வளைந்திடக்குமுதன்கையால்வலனெலாமகலயானு
முளைந்திவணுற்றேனென்றேயுரைத்தவன்வெள்கினின்றன் (உ௫௯)

இவையிவையுரைத்துவெள்குமிந்திரன்றன்னைநோக்கி
யவமுறுமிராசதந்தரனடர்ந்திடவதனையெல்லாந்
தவமுனரநேககாலந்தனரவென்முன்னிற்சார்ந்தா
னுவமையில்விமானத்தோங்குமொளிகொளுமரங்கத்தெம்மான் (உ௬௦)

பிரணவவிமானத்தோடுபிறங்கியவரங்கத்தெம்மா
னிருசரணரிச்சித்தேயாணிக்குவாகுத்தான்வேண்டக்
கருணையங்கடலையீயக்களித்தவனயோத்தியென்னுந்
தரணியிற்பூசைசெய்தான்றவம்பலகாலஞ்செய்தே (உ௬௧)

சரையுமாநதியினேங்குமரங்கமாநகரிற்சாரு
மாவணைப்பெருமான்றன்னையரக்கர்வேரறுத்தசோதி
பரிவின்வீடணனுக்கீயவவன்பரன்றனைக்கம்வைத்து
வருபவன்சோமன்பொய்கைத்தலத்திடைவைகினுல் (உ௬௨)

இந்துபுட்கரணிதன்னிலங்கியமுனிவரெல்லாம்
வந்தனைசெய்கையாலும்வரங்கொள்காவேரிசெய்த
முந்தியதவத்தினாலுமுகுந்தனங்குற்றதன்மை
சிந்தையினினையாதேநீசெருச்செயச்சினத்துச்சென்றாய் (உ௬௩)

ஒருவனாய்விமானத்தோங்குமொப்பிலாவரங்கத்தெம்மான்
சீரகோமக்கோடாருஞ்சார்ந்திடுமயனைகவண்டம்
பரவிம்மவன்றன்னைக்கும்பதியினைக்காக்கும்வீரர்
பெருமையையுணராதேநீசெருச்செய்துபிழைக்கச்செய்தாய் (௨௬௪)

மாயவனகரைக்காக்கும்வலனுடைப்புயங்களோங்குந்
தூயவர்சினத்தாலண்டந்துடைத்திடுமாற்றல்சான்றோ
ராயவருன்றனோடுமடர்வரேனிமிடமன்னற்
றீயெழுவடிவருமேமலரியிருற்றெழுதுவிட்டார் (௨௬௫)

**வேறு.** ஆகலினமரர்க்கிறைவராசதத்தாமதகுணமடர்ந்திடுகையினாற்
பேதைமையுறவேயிறைவனையறியுஞானநீபிரிந்தனையெனவே
யோதுதல்பழுதானுமையவள்கொழுநன்றன்னுடன்யானுமொப்பிலாதம்
மாதவன்மயக்கத்தின்மருளுறுவமெனுமுரைவழங்கினன்மாதோ (௨௬௬)

அயனிவைமொழியவமரர்கோன்வணங்கியச்சுதன்பதியென்பதறியா
தியல்புறச்செருச்செய்திடவிடையுழன்றேனென்சகாவானகந்தருவன்
றுயரொழிந்தவன்றன்பதத்தினிற்றுலங்குமுபாயஞ்சொல்லுதியெனவே
தயையுடைப்பிரமனவன்றனைநோக்கிச்சாற்றுவன்கேளெனவறைவான் (௨௬௭)

குருபிதாமாதாச்சேட்டனிங்கிவர்கள்கோலமார்சாயையைக்கடக்கிற்
றரணியினிவர்தாமிருந்தவாதனத்திற்சார்ந்திடினிரையமெய்துவர்க
ளரியடியவர்கள்சாயையைத்தாவிற்பிராயச்சித்தமில்லையாங்கவர்கள்
கிருமியாப்பிறப்பர்முடவனாய்க்கரங்காலழுகுவரதன்மழுங்கிளைக்க (௨௬௮)

ஆதலினரங்கனமர்ந்திடுவிமானச்சாயையையெள்குமக்கிரம
மோதவேபதமுமிழந்துயர்வலனுமற்றுநின்மூடனாய்மனத்திற்
பீதியுற்றிடுகந்தருவன்செய்துன்பம்பிரிந்துதான்றுலங்கிடவேண்டின்
மாதவன்சரணமருச்சனைசெயவேவகுத்தியென்றுரைத்தயன்போனான் (௨௬௯)

அயனிவையுரைத்தேசத்தியவுலகமடைந்திடவமரர்கோன்சகாவாய்த்
துயர்கொள்சித்திரசேனன்மருங்கமர்ந்துதூயனாகியவரங்கேச
னியல்புறவமரும்விமானச்சாயையைநீயெள்கியபாவமிங்கிறவே
புயல்வணவரியின்பெயரினைமறவாதருச்சனைசெய்யென்றுபோனான் (௨௭௦)

வாசவனிவையைமொழிந்துபோயினபின்மலர்மகள்மகுணனைமனத்தே
யாசறவழுத்தியருமறையறியுமந்தணர்தம்முடனேகி
மாசகன்றிடவேசுத்தமாநதிகடோறும்படிந்தேமறுவிலாத
காசிபன்றனைக்கண்டிறைஞ்சிடவவனுங்கருணையோடிவைகழறினனால் (௨௭௧)

நீயரியமரும்விமானச்சாயையினையிகழ்ந்திடுநிடேதமாங்கிறவே
மாயனைமனத்தினழுத்தியேசிரத்தால்வணங்கிநைவேத்தியம்புசித்துத்
தூயபுட்பத்தாலருச்சனைசெய்துதுலங்கிடக்கானநீசெய்யிற்
றீயவையெலவும்வீயவுன்பதத்திற்சேருதியெனவறைந்தனனால் (௨௭௨)

அரியுனதிடத்துமெனதிடந்தனினுமமர்ந்தண்டகோடிசீவனினும்
பரவுவனவனையருச்சியென்றுரைப்பப்பணிந்தந்தமுனிவனையொருவி
விரைவிற்சந்திரபுட்கரணியினெய்திவிழுமியநீரிடைப்படிந்து
கருமுகிலெனவேயரவணைமிசையிற்கண்டுயிலரங்கனைத்தொழுதான் (௨௭௩)

நயனம்வாயுரங்கொப்பூழ்கரம்பாதம்நளினமாமலரெனவவையோர்
புயலெனவயங்கவரவணைத்துயில்கொள்புனிதனைக்கண்டுகண்களித்தே
வியல்புறுஞ்சட்சமிடபங்காந்தாரமிலங்குமத்தியமம்பஞ்சமநற்
பெயர்கொடைவதமன்னிடாதமிவ்வகையேழ்கானமும்பிறங்கப்பாடினனால் ( )

சகமிருகங்களைரர்கள்வானுறைவோர்மயங்கிடக்கற்புற்பாதவங்கள்
சகலமுமுருகவேழ்வகைப்பண்ணிற்சத்தகானஞ்செயமகிழ்ந்தே
புகரிபவிடரைக்களைந்தவன்கருணைபொழியக்கந்தருவனைநோக்கி
நிகரிலையுனக்குன்பதமளித்தனனீயேகெனநிகழ்த்தினன்மாதோ (௨௭௫)

சித்ரசன்பிதாவீதருளியேகெனவேசித்திரசேனனங்களித்தே
யத்தனைவணங்கியுமேராமம்மெய்பொடிப்பவாடியேயலங்கிரதனுமாய்
நித்திலவிமானத்தமர்ந்துதன்பதத்தினின்மலசித்தனுயடைந்து
மித்திரனுனவிந்திரனுடன்மகிழ்ந்தானென்றுபின்வியாசனீதறைவான் (௨௭௬)

தீர்த்தயாத்திரையைவிரும்பியேபரத்துவாசமாமுனிசிறப்புறநீர்
கோத்தகாவேரிநதியிடைப்படிந்துகொடுமலர்நாகமங்கோங்க
வாய்த்திடுமணங்கொளிந்துபுட்கரணிச்சலத்திடையமர்ந்துவாளரவின்
றீர்த்தனைவணங்கிமுனிவர்களுடனேதிகழுவான்மீகியைப்பணிந்தான் (௨௭௭)

தவமலிபரத்துவாசமாமுனிவன்சரியில்வான்மீகியைநோக்கி
யுவமையிலரங்கன்பதியிற்சந்திரபுட்கரணியோடொப்பிலாத்தீர்த்தம்
பவநரர்க்ககற்றிப்பரகதியளிக்கும்பண்பினைப்பகருதியெனவே
கவுசலைகுமரன்சரிதையையருளுந்தவனிவைகழறலுற்றனனால் (௨௭௮)

ஏதமற்றிடுமச்சுவத்ததீர்த்தத்தினெண்ணிலாவிருடிகளமர்வர்
மாதவியெனப்பேர்மனத்திடுதவத்தார்மலர்மகண்மகுணன்பேரனைத்து
மோதியோதனங்காய்கனியிவைபுசியாவுத்தமிகுரோதமில்கமையாள்
சீதமாயெழுமச்சலத்தினுளுலப்பில்காலநற்றவஞ்செயுநாளில் (௨௭௯)

சாதகரந்தத்தவஞ்செயுநிலத்திற்றைபலைப்பின்னுறப்பிணித்து
யேதமுற்றவடானடந்திடும்பதங்களொரியமுள்ளிடையழுந்தத்
தீதுறுமுடுவல்கடித்திடவறுத்தவாலுவாயிடைத்திணிக்கப்
பீதியுற்றெனைக்காப்பவரிலையந்தோவெனவரற்றெலிபிறந்தனவால் (௨௮0)

வெஞ்சினப்புலிவாயகப்படுகுரங்கமெனமெலிந்தரற்றிடுமவளை
யஞ்சனீயெனவேயுரைத்தமாதவிதானுதவன்சிறுவன்றூதுவரை
யிஞ்சொலுமிலாதிரெவர்கணீரெனவேயியம்பிடயாங்கடென்றிசைக்கு
விஞ்சியமறலிவிடுக்குமேவலர்களென்றிவைவிளம்பலுற்றனரால் (௨௮௧)

இட்டாயுறுவநலனுறுமவருக்கிழிவுறுமதன்மருக்கியாங்க
டிட்டராயவைவமிவளிருநிலத்திற்றொலைவிலாப்பவஞ்செயுமூர்க்கை
சிட்டரைநலியும்பதகியானவளைக்குரூரராய்ச்சேர்ந்திருகரத்தைக்
கட்டியேகதறவடித்தனமெனவேகழறமாதவியிவையுரைப்பாள் (௨௮௨)

தொலைவிலாப்பவத்தைநிலத்திடைச்செய்துதுயருறுமூர்க்கையாமிவடா
னலனுறவியான்முன்செய்திடுதவத்தோர்நாட்பலன்கொடுத்தனனெனவே
கலகமங்கியற்றுங்காலதூதுவருமிட்டராய்க்கட்டியபாச
மலரிகாணிமம்போலகலவேயெரியுமயமுளுங்குளிர்ந்தனவம்மா (௨௮௩)

நெறியெலாம்பொழிலாய்த்தென்றல்வீசிடவேநிகரிலாவுருபியுமாகி
மறலிமுன்னரிற்போயடைதலுமவன்முன்மனச்சினமொருவியேநோக்கி
யறனறநிலத்தினனேகபாவங்கள்செனனங்தோறுன்றிடச்செய்தும்
பொறைகொண்மாதவியைக்காணநீநலனைச்செய்ததுகேளெனப்புகல்வான் (௨௮௪)

நீயவணடைந்ததந்தமாயிவாறுற்றசென்மந்தனினிலத்திற்
றூயநல்லழகுதுலங்கவேசியுமாய்ச்சொன்னவாபரணங்கடிகழ
வாயினின்றிடுநீபரமபாகவதர்க்கில்லிடையிடம்வழங்குகையா
னேயகற்றியமாதவிதனைக்கண்டுநுறுக்கினைபவமெனநுவல்வான் (௨௮௫)

மாதவியுனக்கோர்நாட்டவமளிக்கமரணமுஞ்செனனமுமொருவச்
சோதிசெய்பிரமனுலகினிவ்வண்டமுடையுநாளளவுநீதுலங்கி
யாதியாம்பரமன்பதத்தடையென்றவனறைந்திடவவளகன்றே
யேதமற்றொளிர்பொன்விமானமீதமர்ந்தேசத்தியவுலகத்தெய்தினளால் (உஅசு)

பூதலத்திறந்தமறலிதூதுவராற்புகலொணாநிர்ப்பந்தத்தடைந்தே
யேதமுற்றரற்றுமங்கைநற்சதியினேறவோர்நாட்டவங்கொடுத்த
மாதவிமுனிவர்மகிழ்ந்திடமலரோன்வழுத்தவிவ்வண்டத்தையொருவிச்
சோதிசெய்பரமன்பதத்தினுற்றனளாலென்றுவான்மீகிபின்சொல்வான் (உஅஎ)

கண்டுமாமுனிவனிசரில்காவேரியயத்தினிற்படிந்தொளிர்கனத்தின்
முண்டசமலர்ந்ததெனவரவணைதுயில்கொளுமுகுந்தனைப்பணிந்து
வண்டடர்பொழிலின்மரகதவுருவாமொருவனுமதிவதனத்தின்
வெண்டையங்கணியுமுலாவிடவைவர்கிளர்ந்துசேவித்திடக்கண்டான் (உஅஅ)

மரகதமலையும்பவளநற்கொம்பும்வயங்கியமாமையமான
வரிவைதன்னுடனேயுலாவியபுருடனரவணைத்துயில்வன்றானோ
தெரிகிலேனிவனையெனநினைத்திடமற்றவனுநீயுள்கியசெயலன்
றுரைசெயவுரோமம்புளகமுற்றிடவேகண்டுமாமுனியிவையோதும் (உஅகூ)

அற்புதமானவணங்கினுளுடனேயையெலாம்வயங்கிடுநீதான்
சற்பமெல்லணையிற்றுயில்பவன்றானோசாற்றுதியெனவவனியானே
கற்பகமெனவேதடக்கைகளொளிரக்கண்விளித்துறங்குவேன்கமலப்
பொற்பினளிவள்பஞ்சாயுதரிவர்களறிதியென்றேபுகன்றனனால் (உகூ0)

இவையினையுரைத்துமலர்மகளுடனேயிலங்கியமலரெலாங்கொய்து
நவமொழியயக்காவேரியிற்புகுந்துசலவிளையாட்டினைவிளைத்தே
யுவமையற்றுயரச்சுவத்ததீர்த்தத்தினுலாவிப்பஞ்சாயுதருடனே
குவிமுலையணங்குந்தானுமவ்விடத்திற்குலாவியேமறைந்தனன்மாதோ (உகூக)

சனகநற்கொழுந்துகவினுறுகாயாமலருடன்கலந்தனவெனவு
மனகன்மாமலராளுடன்றிரிந்தவணின்மறைந்திடவயர்ந்திடுமுனிவன்
றினகரனவிரைக்காண்கிலாநளினச்செய்கைபோல்யாக்கையுமெலிந்து
நனிதுனியுறவேயனேகவாயிரவற்சரமரற்றினனுளைந்தே (உகூஉ)

சித்தமெய்நடுங்கியுழலுமாமுனிகண்டரியசரீரியாய்ச்செப்பு
முத்தமோத்தமமச்சுவத்ததீர்த்தந்தானிதிற்படிந்துயர்ந்தேகோதானஞ்
சுத்தவோதனந்தானந்திலதானஞ்செயிற்பவமெல்லவுந்தொலையுங்
குத்திரமடரும்பிரமகத்தியும்போமென்றுதான்பின்னருங்கூறும் (உகூங)

ஒருதினமுபவாசஞ்செய்யிற்பவம்போமொப்பிலாப்பதத்தினைப்பெறலா
மிருபதோடரைந்தொருதிருதிவசத்தனமருந்தாதிருந்தரியை
விரையுறுமலரினருச்சனைசெய்தானீயுமவ்விரதத்தைவிளைத்துப்
பரிவுடன்முராரிபரகதியடைதிசுருதிசம்மதமாமொழியெனப்பகர்ந்தனன்மாதோ

அரியசரீரியாகியிவ்வுரையையறைந்திடக்கண்டுமாமுனிவ
னிருகையாற்றொழுதச்சுவத்ததீர்த்தத்திற்படிந்திந்தவிரதத்தைவிளைத்துப்
பரிவுடன்முராரிபதமருச்சித்துப்பழுதொரீஇமுனிவர்கள்வியப்ப
வருவினையகலவரிபதத்தடைந்தானென்றுவான்மீகிபின்னறைவான் (உகூரு)

காசிபராசன்சிறுவனுஞ்சுகீர்த்திகசதுரகத்துடன்பதாதி
மாசுறவியாதியடைந்திடச்செய்வதறிகிலான்றீர்த்தயாத்திரையா
யோசனைபலவுமிகந்துவேதியர்வாழ்திராவிடதேசத்தையுற்று
மாசறவகுளதீர்த்தத்தினெய்திவணங்கினன்காசிபமுனியை (உகூசு)

பரிவுடன்வணங்குமரசனைநோக்கிப்பழுதகல்காசிபமுனிவ
னிருபனீயாரென்றுரைத்திடவவனுநிகரிலாக்காசிமன்சுதன்யான்
கரிபரிபதாதிமுதலதாவெனையுஞ்சுடியநோயடர்ந்திடச்செயலற்
றுரனறவுனதுசரணடைந்தனனுய்வகையருளெனவுரைப்பான் (௨௯௭)

அரிதனையாராதனைசெயின்வியாதியகன்றிடுமெனவவனறைவான்
விரியுநான்மறைக்குவிளக்கலாவிறையைவிடயமிந்திரியத்தைவிழுங்கப்
பரவியபசுத்துளமிழ்ந்திடுமியான்றன்பற்றுவதெங்ஙனம்பகரென்
றுரைசெயுமனனையளியுடனோக்கியொப்பிலாமுனியிவைமொழிவான் (௨௯௮)

அருமறைதனக்குமியோகியர்தமக்குமகப்படாவிறைவனுகிலுந்தனைச்
சரணடைந்தவரையளியுடன்காக்கத்தயாபரசுரூபனேயாகி
யிருநிலமிசையிற்றிருவவதாரஞ்செய்தனனதுமேயன்றிப்
பரவுமாயிரம்பேர்தமினுந்தன்றுமம்பக்தவசலனெனத்தரித்தான் (௨௯௯)

ஆதலினரசவருச்சியவதாரத்தினிற்சுவயமாமவனை
நீதிருவொன்றிடவேயருச்சனைசெய்யென்றுரைத்திடநிருபனுமகிழ்ந்து
மாதவன்பதத்தின்மலரயங்கொடுபூசனைசெயமற்றவனுடனும்
வேதனைநிகர்க்குமுனிவனுஞ்சம்புதீர்த்தத்தின்விரைவினிலடைந்தான் (௩௦௦)

காசிபமுனிவனரசனைநோக்கிக்கழறுவான்விருத்திராசுரனை
வாசவன்வதைக்கவந்ததோர்பிரமகத்திமற்றவனையடர
வாசுறுமவன்றன்பகிரதிசரசுவதியகலமுனையிற்படிந்து
மாசகன்றிடாதிச்சம்புதீர்த்தத்தினமிழ்ந்திடப்பவமெலாமாய்ந்த (௩௦௧)

சப்புதீர்த்தத்திற்பவமெலாமகலத்தயங்கினன்புரந்தரனென்றே
நம்பனைநிகர்க்குமுனிநவின்றிடலுநன்றெனவரசர்கோன்மகிழ்ந்து
தம்பிமாபதாதிதமருடன்றானுந்துலங்குமத்தீர்த்தத்திற்படிந்தே
வும்பர்வியப்பவடருநோய்பவத்தோடறவுயர்ந்தேவினங்கினனால் (௩௦௨)

பவமொடுவியாதியறப்பரிதியைப்போலிலங்கியபடியையாணிருப
னுவமையில்முனியோடாம்பிரதீர்த்தத்துற்றவன்படிந்துசோமனைப்போலப்
புவியிடைவயங்கவந்தமாதலத்திற்பொலனுறுமிருகங்களெல்லாந்
தவமலிந்திடுகாசிபன்றனையிறைஞ்சிப்பார்க்கவன்சாற்றலுற்றனனால் (௩௦௩)

அயனிகர்முனிவர்வியந்தமர்தலத்தினற்புதங்கேளெனவறைவான்
றயையுடையவனும்புட்கரமறையோன்றரணியிற்றுலங்குமாநதியிற்
பயமுறவாடிப்பழுதிலாப்பிரமதீர்த்தத்திற்படிந்திடவிரும்பி
யுயர்வரையுறுங்கானெறியிடைக்காலினுரமுறவெய்தும்வேலையின்வாய் (௩௦௪)

விழிகனலுறவேவியாக்கிரமுகமாய்விரிவுறும்வாயையாவென்றே
யெழுநிகர்புயத்தோடிடியெனவுறப்பியெழுந்தொருபசாசுவந்தெதிர்த்துப்
பழுதகல்மறையோன்றனைப்பிடித்திடவேபயத்தினையகற்றிவேதியன்றன்
விழுமியமனத்தன்முகுந்தனையமைத்துவிடுகெனவலகைகைவிட்ட (௩௦௫)

இருகையும்விடுத்தபசாசினைநோக்கியிருபிறப்பாளனீதறைவான்
றரையினமர்நதிகளெங்கணும்படிந்துசகலபாவங்களுமொழித்து
வருமெனைவதைத்தாணிரையம்வந்தெதிருமென்றுநின்மனத்திடைநினையாய்
திரிதமாயெழவேதாளமாகையினுலெனவந்தவலகைதான்சொல்லும் (௩௦௬)

என்னைஇக்குரூரமாகவேசிருட்டித்தியற்றியவிறைவனுக்கல்லா
லுன்னையான்வதைத்தபவமெனக்குறுதென்றுரைத்திடமறையவன்மொழிவான்
றன்னைநேரிலாதபராபரன்சாக்கிப்பூதமாய்ப்பாவதன்மத்தின்
மன்னிடான்சீவன்றனக்குறுஞ்செய்தகன்மத்தின்வருத்தமென்றனனால் (௩௦௭)

மறையவனி வையையுரைத்திடவலகைமற்றவன்றன்னையேநோக்கி
யிறையவனியற்றலிலாசீவன்றனதையுஞ்சேட்டிக்கவறியா
முறைமையாற்பரனேகன்மமங்கியற்றியதிறமுந்தியேபுசிப்பன்
மறைகளுமெங்குமுளன்பரமேட்டியெனமொழிந்தனவெனவகுத்த. 308

அலகையீதுரைப்பவந்தணனுரைப்பானச்சுதனனந்தரூபனுமா
யுலகினைப்படைத்துவளர்த்தபின்றடைத்தேயொருவனாய்மறைக்குமேற்
பலவுமாயெழுந்தசீவனுக்குயர்ந்தபரனுமாய்ப்பாவதன்மத்தி
னிலையினுக்கென்றுமகப்படானவன்றனிட்கன்மனகையினாலே. 309

இறைவனிற்சகுணனேகன்மமங்கியற்றியதிற்பலசீவனுக்கிவன்
குறைவிலானேயனாதிதனாயிருப்பனிவ்வையைநான்மறைகளுங்கூறு
மறனுறுகுமரவழிவமாமெழுந்துமருளுறுமலகைடாகையினாற்
பறைகுவாய்வேதப்பறிவிலாப்பொருளையெனவந்தக்கூளிதான்பகரும் 310

இருபிறப்பாளனாகியும்பிரமஞானத்தினேதுமொன்றறியாய்
குருவுபதேசமுனக்கிலையிறைவன்குவலயமெங்கணுநிறைந்தே
பரவுவன்கன்மப்பலனையும்புசிப்பன்பாபதன்மங்களாச்சீவன்
மருவிடாதெனவேயலகையங்குரைப்பமறையவனகைத்திவைமொழிவான். 311

தன்மயமாகியுலகெலாம்படைத்ததயாபரன்சகலசீவனினு
நின்மலனாகியமர்ந்துகன்மத்தைநிறைந்திடுசீவனுக்குற்ற
புன்மையிற்பொருந்தான்சீவன்வேறாகத்தானும்வேறாகியேபொலிவன்
கொன்மலிகுணத்தலவனெனமறையோன்கூறியேபின்னருமொழிவான். 312

மருளுறுமலகையானவுன்னுடனேமறைப்பொருள்கூறினுங்கேளா
யிருவருமெய்தியிலங்குமாப்பிரமதீர்த்தத்தினிருடிகண்முனிவரி
னுரைசெயநீதோற்றலுனையான்வதைப்பனீவெல்லினென்னையுண்குதியென்
றரனுறுமறையோன்மொழிந்திடவலகைநன்றெனவகனெனும்போன. 313

இருவரும்பொருந்தியெழில்கொளாம்பிரமதீர்த்தத்தின்முனிவரையிறைஞ்சி
வருநெறியதனில்விரோதமாம்பொருளைவகுத்துரைத்திடவவர்கேட்டே
யருளுறுமறையோனறைந்திடுவசனமாமென்பர்சிலர்சிலரலகை
யுரைசெய்தமொழியோன்றெனவவர்க்கங்குற்றவயிரியங்கள். 314

இருவகையாகிமுனிவர்களெல்லாம்விரோதமாயியப்பிடும்வேலை
கருமுகிலெனவுங்கவினொளிந்திரநீலக்கிரியென்னவுங்காயா
விரைமலரெனவுமைவணாகிவிழியதரங்கரம்பாத
மரைமலரெனவேமகரகுண்டலங்களலையவோர்புருடன்வந்தனனால். 315

கனகநற்கொம்பின்கனம்பிறைசாபங்கணைகுமிழாம்பனுளிகப்பொன்
வனவளைகாம்புவரைசொடககதலிவனடபுடனமர்ந்திடுநள்ளி
சினைவராற்றராசுகூருநளினஞ்சிறந்திடக்கலன்கணெய்திசழச்
சனகிபோன்றொருத்திவிரைகமழ்ந்திடவேசதங்கைநூபுரங்கொஞ்சவந்தாள். ()

எதிர்பிறிதிலாதவிராகவக்குரிசிலிலங்குசீதரங்கனியுடனும்
பதம்வயங்கிடவேநடந்திடுமெழில்போற்பனசமார்பொழிலிடையடைந்தே
விதமலர்பறித்துவிரோதமாய்மொழியுமுனிவர்முன்மேவிடவவர்கள்
கதுமெனவெழுந்திங்கிவர்களற்புதராரென்றுகண்களித்தெதிர்கொண்டார். 317

தவர்மகிழ்ந்தளித்தருட்பையாசனத்திற்றையலுந்தானுமாண்டமர்ந்தே
யுவமையிலவர்நீரும்முனின்விரோதவசனத்தையுரைத்திடுமெனவே
பவமறுமறையோன்மொழிந்ததுமலகைபகர்ந்திடுபொருளையுங்கூறி
யிவையினாலிவணிற்குரோதம்வந்தெழுந்ததெனவரிநகைத்திவையியம்பும். 318

இறையவன்யானேயுலகெலாம்படைத்தேயழித்தளித்திடுபவன்யானே
திறலுறுமனந்தகோடிசீவனையுஞ்சிருட்டிக்கும்பரம்பொருளியானே
நிறைகொள்சன்மத்தின்பலத்தினைச்சீவன்புசித்திடவதனைநீங்குவன்யான்
மின்றயைவல்லவர்க்குமிராசததாமதத்தான்மருளுறவிடுப்பவன்யானே. 319

அண்டகோடிகட்குமனந்தசீவனுக்குமகமதாப்புறமதாயமர்ந்து
மூண்டிலையெனவேதிரிகுவன்சீவனுள்ளிருந்துமகப்படேன்யான்
மூண்டகன்புராரியிவருமென்மாயைகடக்கிலர்முத்தியைக்கொடுப்பன்
றெண்டரானவருக்கவருமென்பதத்தைத்தொழுதிடத்துலங்குவன்யானே. 320

சீவனேபரனென்றுரைக்குவதவச்சொல்லென்பதுஞ்செய்தகன்மத்தால்
மேவிடும்பவமுமெனையணுகாமற்சீவன்மேலடைவதும்விரித்தே
யோவுதலிலாமன்மொழிந்தனனுமக்கென்றுரைத்துப்புட்கரமறையவனும்
டாவமாரலகையானவன்றானும்பரகதியுறவருள்செய்தான். 321

அலகையானவனுமந்தணன்றானுங்கதிபெறவருளியவைய
னிலகியபதத்தினிறைஞ்சியேமுனிவதேத்திடத்தேவியுந்தானு
நிலமிசையமர்வான்போலிவணின்றேகிமிடமாத்திரையின்முன்மறைந்தா
னலனுறத்தவஞ்செய்காசிபவெனவேநவின்றனன்பாற்கவன்மாதோ. 322

வைநதேயப்படலம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - 4483.

# ஸ்ரீ மகா பாகவதம்

730

